# வாழிய செந்தமிழ்

இரா. கோதண்டராமன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# வாழிய செந்தமிழ்

முனைவர் இரா. கோதண்டராமன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
II Main Road, C.P.T. Campus, Taramani, Chennai - 600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Vāl̠iya centamil̠ |
| Author | : | Dr. R. Kothandaraman<br>Tholkappiyar Centre for Fundamental Research<br>Ashok Nagar, Pondicherry-605 008 |
| Publisher & Copyright | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.P.T. Campus<br>Chennai - 600 113<br>Ph: 044-22542992 |
| Publication No. | : | 571 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2007 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing Type Used | : | 10 points |
| No. of Pages | : | xxvi + 470 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 140/-<br>(Rupees One hundred and forty only) |
| Printing | : | A.V. Prints<br>332, T.T.K.Road, Royapettah<br>Chennai - 600 014 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# முகவுரை

வழக்கும் செய்யுளும் ஆய்ந்து, மொழிமரபு காத்து, புதுமைக்கும் வழியமைப்பது **தொல்காப்பியம்**. தமிழுக்குக் கிடைத்துள்ள தொன்மையான இலக்கணமாகிய **தொல்காப்பியம்** பண்புடையார் தொடர்பு போல நாள்தோறும் பொலிவும் பொருளும் தருகிறது.

இன்றைய இலக்கண ஆய்வு, இக்கால மொழியியல் கருத்துக்களையும் முற்கால மரபுச் சிந்தனைகளையும் அடித்தளமாகக் கொண்டுள்ளது. இதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது **வாழிய செந்தமிழ்** எனும் இந்நூல். இருபத்திரண்டு கட்டுரைகளின் தொகுப்பு நூலான இத் தமிழிலக்கண ஆய்வு நூலை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடுவதில் மகிழ்வெய்துகிறது.

ஆய்வில் மரபும் புதுமையும் கொண்டு முனைவர் இரா. கோதண்டராமன் அவர்கள் இலக்கண, இலக்கிய, மொழி ஆய்வுக் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளமை பாராட்டிற் குரியதாகும். ஏற்கெனவே இவரால் எழுதப் பெற்ற **தமிழெனப்படுவது** என்ற இலக்கண ஆய்வு நூலை இந்நிறுவனம் வெளியிட்டுள்ளது.

வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மொழியில் புதியன புகுதலும் பழையன கழிதலும் நிகழும்தான். இந்நிலையில், தமிழில் புதிய வடிவங்கள் பயன்பாட்டிற்கு வந்துள்ளமையைத் தகுந்த சான்றுகளுடன் இந்நூற் கட்டுரைகள் விளக்குகின்றன. வினாக்கள், வினைமுற்றுகள், பெயரெச்ச வினை எச்சங்கள், எழுவாய், பயனிலைகளின் வரவுகள் போன்ற இலக்கணக் கூறுகள் விரிவாகவும், தொடர்புடைய பிறமொழிகளோடு ஒப்பிட்டும் விளக்கப் பெற்றுள்ளன.

தமிழில் சிறந்த இலக்கண ஆய்வுகள் அருகிவரும் நிலையில் இத்தமிழிலக்கண ஆய்வு நூல் வெளியிடப்பெறுவது தமிழாராய்ச்சிக்கு உறுதுணை பயக்கும் என்பது திண்ணம்.

**மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** தொடர்ந்து இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வழிநடத்தி வருகிறார்கள். இந்நிறுவனத் தலைவராக **மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை நெறிப்படுத்திவரும் பாங்கினைத் தமிழகம் என்றென்றும் நன்றியுடன் போற்றும்.

இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை அரசுச்செயலாளர் திரு. து. இராசேந்திரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூல் வெளிவர அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்களும், மெய்ப்புத்திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதனும், கணியச்சிட்ட திருமதி ந. லட்சுமியும், அச்சிட்டுத் தந்த ஏ.வி. பிரிண்ட்ஸ் அச்சகத்தாரும் பாராட்டிற்குரியவர்கள்.

சென்னை
*16-4-2007*

இயக்குநர்

# பொருளடக்கம்

# முன்னுரை

1. *வாழிய செந்தமிழ்* என்ற இந்த ஆய்வுத் தொகுப்பில் தமிழ் மொழியின் அமைப்பியல்புகள் தொடர்பான இருபத்திரண்டு ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. *தமிழெனப்படுவது* என்ற எனது முதல் ஆய்வுத் தொகுப்பின் தொடர்ச்சியாகவே இந்தத் தொகுப்பும் அமைகின்றது. இந்தத் தொகுப்பிலும் மரபிலக்கணம், மொழியியல் ஆகியவற்றைப் பின்புலமாகக் கொண்ட ஆய்வுகளே மேற்கொள்ளப்பட்டுள்ளன. *தமிழெனப்படுவது, வாழிய செந்தமிழ்* இரண்டிலும் நிகழ்த்தப் பெற்றுள்ள ஆய்வுகள் அடிப்படை ஆய்வுகளின் தன்மையின வாகும். இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள பல ஆய்வுகள் தமிழ்த் தொடரனியலைச் சார்ந்தவையாகும்.

2. *தமிழெனப்படுவது, வாழிய செந்தமிழ்* இரண்டிலும் நிகழ்த்தப்பெற்றுள்ள ஆய்வுகள் மொழியியல் மற்றும் தமிழியல் துறைகளில் உயராய்வில் ஈடுபட்டுள்ளவர்களுக்குக் கருவி நூல் களாக அமையும். தமிழியற் பாடத்திட்டத்திலும் மொழியியல் பாடத்திட்டத்திலும் போர்க்கால அடிப்படையில் மேற்கொள்ளப்பட வேண்டிய அடிப்படை மாற்றங்களுக்கும் இத்தகைய ஆய்வுகள் சிறந்த வழித்துணையாக அமையும். ஆனால் இந்த இரண்டு துறைகளும் தங்களுடைய பாடத்திட்டங்களில் எந்த அடிப்படை மாற்றங்களையும் ஏற்றுச் செயல்படுத்தக்கூடிய நிலையில் இருப்பதாகத் தோன்றவில்லை. மாற்றங்களில் நாட்டமும் புதுமைகளை ஏற்பதற்கான அறிவார்ந்த துணிவும் செயல்திறனும் தொலைநோக்கும் உள்ளவர்களால் மட்டுமே மொழிக் கல்வியிலும் இலக்கியக் கல்வியிலும் பிற துறைகளைப் போல் புதிய வழித் தடங்களை வகுக்க முடியும்.

3. பல்கலைக்கழக மற்றும் பட்டமேற்படிப்புத் தமிழ்த் துறைகள் தங்களைத் தமிழியல் துறைகளாக மாற்றிக்கொண்டு வருகின்றன. இது வரவேற்கத்தக்க நல்ல முயற்சிதான். ஆனால் இந்தப் பெயர் மாற்றத்தால் கிடைத்த பலன்கள் என்ன? அறிவியல், தொழில்நுட்பம், மருத்துவம், மேலாண்மை முதலான பல துறைகளில் கடந்த சில ஆண்டுகளாக மேற்கொள்ளப்பட்டு

வரும் புதிய கல்விக் கொள்கைகள், புதிய பாடத்திட்டங்கள் எதுவுமே தமிழியல் துறையில் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்த வில்லை. மொழியியற் கல்வியைப் பொறுத்த வரையிலுங்கூட ஏறக்குறைய இதே நிலைதான். இளங்கலையிலும் முதுகலையிலும் கற்பிப்போருக்கு அழுத்தமான மொழியியற் புலமையில்லை; இதேபோல் மொழியியல் கற்போருக்கும் பழந்தமிழ் மொழி யறிவையும் இலக்கணவியல் இலக்கியவியல் ஆகியவற்றின் கோட்பாடு சார்ந்த அறிவையும் பெற வாய்ப்பில்லை. தமிழியல் துறையில் தமிழைத்தவிர வேறு எந்த மொழியையும் கற்க வாய்ப்பில்லாத ஒரு பாடத்திட்டம் கண்ணும் கருத்துமாகப் போற்றப்பட்டு வருகிறது. இந்தத் துறையில் ஆய்வுகள் என்ற பெயரில் இலக்கிய மதிப்பீடுகள் செய்யப்படுகின்றனவே தவிர இலக்கியவியல் ஆய்வுகளுக்கு இடமில்லை. மறுபுறம், மொழியியல் துறையில் மொழி தொடர்பான ஆய்வுகள் நிகழ்ந்தாலும் அவை எந்த அளவுக்கு மொழியியற் கல்வியில் புதுமையாக்கங்களை ஏற்படுத்தி இருக்கின்றன என்பது விடைகாண முடியாத கேள்வியாகும்.

4. சங்க இலக்கியம் என்பது மொழியியல், இலக்கியவியல் சார்ந்த ஒரு பழந்தமிழ்ப் பெட்டகம். சங்க இலக்கியத்தைப் புரிந்துகொள்ளத் தொல்காப்பியப் பொருளதிகாரமும் சங்கத் தமிழை அறிந்துகொள்ளத் தொல்காப்பிய எழுத்தும் சொல்லும் ஓரளவுக்குத் துணைபுரிகின்றன. ஆனால் தொல்காப்பியர் இலக்கியவியலையும் மொழியியல் சார்ந்த இலக்கணவியலையும் தன்னுடைய ஆய்வுகளின் கருப்பொருளாகக் கொண்டதைப்போல் எத்தனை ஆய்வாளர்கள் இன்று நம்மிடையே இருக்கிறார்கள்? பழந்தமிழின் மொழியமைப்பினைப் புரிந்துகொள்ளாமல் பழந்தமிழ் இலக்கியங்களை விளங்கிக்கொள்ள முடியாது. *நீ நீங்கக் கருதியாய்க்கு* (கலி. 136. 15) என்ற பெயர்த் தொடருக்கும் *நீங்கக் கருதிய உனக்கு* என்ற பெயர்த் தொடருக்கும் உள்ள அமைப்பியல் தொடர்பை விளக்கும் மொழியியற்புலமை ஒரு தமிழாசிரியனுக்கு வேண்டியதில்லையா? இன்றைய தமிழ்க் கல்விக்கான பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தில் இலக்கியத்தில் பதிவாகியுள்ள மொழியமைப்பை அறிந்துகொள்வதற்கான வாய்ப்பு முற்றிலுமாக இல்லை. மொழியில் நிகழ்ந்துள்ள பல பிறழாய்வுகள், அவை மொழியமைப்பில் நிகழ்த்திய பல மாற்றங்கள் இவற்றையெல்லாம் மொழித்துறைகள் கற்பிக்காத நிலையில் மாணவர்களுக்கு மொழியின் அமைப்பியல் பரிமாணங் களை அறிந்துகொள்ளவும் புரிந்துகொள்ளவும் வாய்ப்பில்லை.

மொழிக்கல்வி என்பது இலக்கியக்கல்வி மட்டுமன்று; மரபு இலக்கணங்கள் மட்டுமே மொழியின் உள்கட்டமைப்புகளைப் புரிந்துகொள்ள வகைசெய்யாது. மரபிலக்கணங்கள் வண்ணனை ஆய்வுகளோடு தங்கள் கோட்பாட்டு எல்லையை வகுத்துக் கொண்டு அதற்கப்பால் செல்வதில்லை. எனவே மொழித்துறை எனப்படும் இலக்கியத்துறையானது மொழி, இலக்கியம் இரண்டையும் சம அளவில் கற்பிக்கும் வகையில் தனது பாடத் திட்டத்தை வகுத்துக்கொள்ள வேண்டும்.

5. இலக்கியக் கல்வி என்பது இலக்கியங்களைக் கற்பதும் மதிப்பீடு செய்வதும் மட்டுமல்ல. இலக்கிய மதிப்பீடு என்பது இலக்கியத் திறனாய்வாளனின் பணியாகும். மொழியை மதிப்பீடு செய்வது எப்படி மொழியியல் ஆய்வாளனின் பணியில்லையோ அப்படித்தான் இலக்கியத்தை மதிப்பீடு செய்வதும் இலக்கிய ஆய்வாளனின் பணியன்று. ஆனால் தமிழியல் துறை எனப்படும் இலக்கியத் துறைகளில் இலக்கிய ஆய்வுகளுக்கு மாறாக இலக்கிய மதிப்பீடுகளே இலக்கிய ஆய்வுகளாகக் கொள்ளப்பட்டுள்ளன. இதற்கு என்ன காரணம்? மொழியும் மொழியியலும் எப்படி ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களோ அப்படியே இலக்கியம் என்பதும் இலக்கியவியல் என்பதும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களாகும். ஆனால் இன்றைக்கு நடைமுறையில் இலக்கியக் கல்வி என்ற நாணயத்தில் இலக்கியம் இருக்கின்றதே தவிர அதன் வடிவ உள்ளடக்கங்களை ஆராயக்கூடிய இலக்கியவியல் என்ற இன்னொரு பக்கம் வெற்றிடமாகவே இருந்து வருகின்றது. இந்த வெற்றிடம் நிரப்பப்படாமைக்குக் காரணம் மொழியியல் வளர்ந்து மொழியாய்வுக்குத் துணை நிற்பதைப்போல் இலக்கியவியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு இலக்கியக் கல்விக்கு இலக்கியவியல் துணையாக நிற்கவில்லை. ஆக, அறிந்த முகங்களில் அறியாத முகங்களாகவே இலக்கியக் கல்வியானது தேய்புரிப் பழங்கயிறாக உள்ளது.

6. தமிழியலுக்கு அண்டைவீடுதான் மொழியியல். பக்கத்து நிலத்துக்காரன் புதியமுறைகளை மேற்கொண்டு வேளாண்மையின் பெரும்பயனை அறுவடை செய்வதைப்போல் தமிழியல்துறை புதிய அணுகுமுறைகளை ஏன் தனது கல்வித் திட்டத்தில் மேற் கொள்ள முனையவில்லை? புதிய கோட்பாடுகள் மொழியியலில் அவ்வப்போது அறிமுகம் ஆவதுபோல் தமிழியலில் இலக்கியவியற் கோட்பாடுகள் ஏன் அறிமுகமாவதில்லை? புதிய அணுகுமுறைகள் எங்கிருந்து வந்தாலும் அவற்றை உரியமுறையில் ஏற்றுக்கொள்ளத் தயங்குவது அறிவுடைமையாகாது. இத்தகைய தயக்கம்தான்

தமிழியல் துறையின் பலவீனமாகும். இதற்கெல்லாம் காரணம் அடிப்படை ஆய்வுகளில் (Fundamental Researches) நாம் கவனம் செலுத்தாமையேயாகும். தமிழ் சார்ந்த மொழியியல் துறைக்கும் இது பொருந்தும். ஆயினும் மொழியியலில் அடிப்படை ஆய்வுகள் இங்கு மேற்கொள்ளப்படவில்லை என்றாலும் உலகின் எந்தப் பகுதியிலாவது இத்தகைய ஆய்வுகள் நடந்துகொண்டுதான் இருக்கின்றன. இலக்கியக் கல்வியைப் பொறுத்தவரை நிலைமை வேறு. தொல்காப்பியர் வகுத்தளித்த இலக்கியவியற் கோட்பாடு களைத் தொடர்ந்து இந்தத் துறையில் அடிப்படை ஆய்வுகளை மேற்கொள்ள நாம் தவறிவிட்டோம். இந்தப் பாதையில் தமிழியல் துறைகள் எனப்படும் தமிழ்த்துறைகள் இன்னும் ஓரடிகூட எடுத்துவைக்கவில்லை என்பதே உண்மை. பக்கத்து நிலத்துக் காரனின் அணுகுமுறைகளில் தனக்கு நாட்டமின்மையே இதற்குக் காரணமாகும்.

7. தமிழியல் என்பது மொழியும் இலக்கியமும் இணைந்த ஒரு களமாகும். மொழி என்பது இலக்கணம் உள்ளிட்ட மொழியியலையும் இலக்கியம் என்பது யாப்பியல் உள்ளிட்ட இலக்கியவியலையும் சார்ந்தவையாகும். ஆனால் இன்றைய தமிழியல் துறைகளில் மொழியியல் தொடர்பான தமிழும் இல்லை; இலக்கியவியல் தொடர்பான இலக்கியமும் இல்லை. மரபிலக்கணத்தையும் இலக்கியத்தையும் மட்டுமே படிப்பதற்குத் தமிழியல் துறை வேண்டியதில்லை. தமிழ்த்துறையே போதும். ஒரு காலத்தில் தமிழ்த்துறைகள் நிகழ்த்திய சாதனைகள் பலவாகும். ஆனால் நிலைமை இன்று முற்றிலும் மாறிவிட்டது. கல்வியில் உலகளாவிய நோக்கு இன்று முதன்மையாகிவிட்டது. எனவே இன்றைய நிலையில் நம்மை ஓரெல்லைக்குமேல் வழிநடத்த இயலாத தமிழ்த்துறை வேண்டுமா அல்லது நம்மைப் பல நிலைகளில் முன்னெடுத்துச் செல்லும் தமிழியல் துறை வேண்டுமா என்பதே நாம் எழுப்பும் அடிப்படைக் கேள்வி. தமிழியல்துறை வேண்டுமென்றால் அடிப்படை ஆய்வுகளில் நாம் உடனடியாகக் கவனம் செலுத்தியாக வேண்டும். மொழியிலும் இலக்கியத்திலும் இத்தகைய ஆய்வுகள் மேற்கொள்ளப்படாத நிலையில் தமிழியல்துறை பழைய தமிழ்த்துறையாகவே இருந்து விடலாம். அடிப்படை ஆய்வுகளை மேற்கொள்வதைப் பொறுத்தே மொழிக்கல்வியும் இலக்கியக் கல்வியும் மேம்பட்டுச் சிறக்கும். அடிப்படை ஆய்வுகள் மூலம் கிடைக்கும் அறிவுச் செல்வம் தான் தமிழியல் துறையை உலக அளவில் முன்னெடுத்துச் செல்லும். இது தமிழ் சார்ந்த மொழியியலுக்கும் பொருந்தும்.

8. அடிப்படை ஆய்வு என்றால் என்ன? அறிவின் புதிய பரிமாணங்களைக் கண்டறியும் கோட்பாட்டு முயற்சியே அடிப்படை ஆய்வாகும். இலக்கியம், மொழி ஆகியவற்றின் உள்கட்டமைப்பு களைக் கண்டறியாமலும் அவற்றில் நிகழும் வடிவ உள்ளடக்கம் தொடர்பான மாற்றங்களை அறிந்துகொள்ளாமலும் மேற் கொள்ளப்படும் எந்த ஆய்வும் அடிப்படை ஆய்வாகாது. புதுமை யாக்கங்களும் (Innovations) விரிவாக்கங்களும் (Extensions) அறிவின் பரப்பையும் ஆழத்தையும் மிகுதிப்படுத்துவனவாகும். புதுமையாக்கம் என்பது ஒரு மாற்றத்தின் வெளிப்பாடாகும். ஒவ்வொரு மாற்றத்துக்கும் ஓர் உந்துதல் உண்டு. இத்தகைய உந்துதல்களையும் அவற்றின் பண்புகளையும் கட்டமைப்பில் அவை நிகழ்த்தும் மாற்றங்களையும் கண்டறிவது அடிப்படை ஆய்வுகளேயாகும். அடிப்படை ஆய்வுகளின்றி அறிவின் பரிமாணங்களை அறிந்துகொள்ளமுடியாது. இதனை எப்படி விளங்கிக் கொள்வது? தமிழில் *பாடிற்று* வாய்பாட்டு இறந்த காலப்பொதுவினைமுற்றுக்கள் கிளைமொழிகளில் நிகழ்த்திய வினையமைப்பு மாற்றங்களையும் பொருண்மை மாற்றங் களையும் விளக்குவதன் வாயிலாக மொழியைப் பொறுத்தவரை அடிப்படை ஆய்வு எத்தகையது என்பதை அறிந்துகொள்ளலாம்.

9. மொழியமைப்பில் புதுமையாக்கமும் விரிவாக்கமும் மொழியை உயிர்த்துடிப்பு மிக்கதாக இயங்கச் செய்யும் கருவிகளும் உத்திகளும் ஆகும். இதேபோல் மொழியமைப்பில் நிகழும் செயன்மைத் திரிபுகளும் (Functional Divergences) மொழியின் வளர்ச்சிப் போக்கைக் கண்டறியத் துணைபுரியும் கருவிகளாக அமைகின்றன. பழந்தமிழில் *செய்தைக்க* வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி அருகிய வழக்கினவாகும். இந்த வினைகள் *செய்து+ஐக்க* என்ற அமைப்பினவாகும். *செய்வாயாக* என்ற வாய்பாட்டுப் பொருண்மையதாகிய இந்த வினையமைப்புகளில் நிகழும் *ஐக்க* என்பது *ஐக்கு+அ* என்ற அமைப்பினதாகும் (இலங்கைத் தமிழில் காணப்படும் *எடுக்கேக்க/வெட்டேக்க/விரட்டேக்க* (சக்கரவர்த்தி. 2000: 110/111/150) முதலான *செய்யேக்க* (<*செய்+ஐக்கு-அ) வாய்பாட்டு வினைகளில் *ஐக்க* என்பது *ஏக்க* எனத் திரிந்து வழங்குகிறது. இந்த அமைப்பில் *ஐக்கு* என்னும் வடிவம் வினையடியையடுத்து நிகழ்கின்றது. *செய்யேக்க* வினைகள் *செய்கையில்/செய்யும்போது* என்னும் பொருண்மையதாகும். *ஐக்கு* என்பது *ஐ* என்னும் வினையடியாகத் தோன்றிய செய்கு வாய்பாட்டு வினைப்பகுதியாகும். இது *கொடு* என்னும் வினை யடியாகத் தோன்றிய *கொடுக்கு* என்னும் செய்கு வாய்பாட்டு

வினைப்பகுதியோடு ஒப்புநோக்கத்தக்கதாகும். இதன் நிகழ்ச்சியைக் *கொடுக்குவர்* (புறம். 182.5) என்ற வினையமைப்பில் காணலாம். இருப்பு மற்றும் ஆக்கப்பொருண்மையை உணர்த்தும் *ஐ* என்னும் தொல் வினையும் அதனடியாகத் தோன்றிய *ஐக்கு* என்ற வினைப்பகுதியும் இக்காலத் தமிழில் வழக்கற்றுப்போயின. பழந்தமிழில்கூட தொன்மொழியின் எச்சங்களாகவே இவற்றின் நிகழ்ச்சி காணப்படுகிறது. *ஐ* என்பதன் நெடில் வினையடி *ஆய் என்பதாகும். *ஐ* (=அய்), *ஆய்* இவற்றினடியாகத் தோன்றியவையே தெலுங்கில் நிகழும் *அகு* என்னும் செய்கு வாய்பாட்டுக் குறில் வினைப்பகுதியும் தமிழில் நிகழும் *ஆகு* என்னும் செய்கு வாய்பாட்டு நெடிற் பகுதியும். இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள *மள்ளர் கையதை கூர்வாள், வாழிய செந்தமிழ்* ஆகிய ஆய்வுரைகளில் இந்த வினைகளைப் பற்றிப் பேசப்பட்டுள்ளது. *ஐக்கு* என்பதன் இன்னொரு செய்கு வாய்பாட்டு வடிவம் *ஐகு* என்பதாகும். *கண்டைகா* (கண்டு+ஐகா) (கலி. 105.44) என்ற வினையமைப்பில் இதன் நிகழ்ச்சியைக் காணலாம். *ஐகு* என்பதன் திரிபாகிய *இகு* என்றொரு வினையும் *சென்றிக* (< சென்று+இக) (நற். 321.8) என்ற வினையமைப்பில் நிகழ்கிறது. இந்தக் குறிப்புகளினின்றும் நாம் கருத்தில் கொள்ளவேண்டியவை *ஐக்கு* என்பதன் திரிபாகிய *இக்கு, ஐகு* என்பதன் திரிபாகிய *இகு* ஆகிய இரண்டுமாகும். இதேபோல் *பாடிற்று* வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினைகளில் நிகழும் *இற்று* என்பதும் அதன் திரிபுகளாகிய *இச்சு, இட்டு, இத்து* ஆகியவையும் கருத்தில் கொள்ள வேண்டியவையாகும். தமிழ் வினையமைப்புகளின் நுண்ணிய பொருண்மை நிகழ்ச்சிக்கு *இக்கு, இகு, இற்று, இச்சு, இட்டு, இத்து* ஆகியவற்றின் பங்களிப்பு கவனமாக ஆராயத்தக்கதாகும். முதலில் *இற்று, இச்சு, இட்டு, இத்து* ஆகியவற்றில் நிகழ்ந்த பொருண்மைத் திரிபுகளையும் அவற்றின் விளைவாகத் தோன்றி நிகழ்ந்த வினையமைப்புகளையும் ஆராயலாம்.

10. தமிழ் வினைத்திரிபுகள் இரு வகையினவாகும். அவை *பாடிற்று* வாய்பாட்டு வகையினவென்றும் *செய்து* வாய்பாட்டு வகையினவென்றும் குறிக்கப்படும். *செய்து* வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியமைந்த பல நுண்பொருள் வினைகளுக்கான அடித்தளமும் உந்துதலும் *பாடிற்று* வாய்பாட்டு வினைகளின் வாயிலாக அமைந்தவையாகும். *பாடிற்று* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகள் பேச்சு வழக்கில் *பாடிச்சு* எனத் திரிந்து நிகழ்கின்றன. இந்த வினைகள் தமிழகத்தின் வடமாவட்டங்களில் *பாடிச்சி* வாய்பாட்டினவாகவும் திரிந்து *பாடி+ச்சி* எனப்

பிறழாய்வு செய்யப்பட்டது. *பாடிச்சு* வாய்பாட்டு வினை யமைப்பில் நிகழும் *-ச்சு* என்னும் வடிவம் செய்து வாய்பாட்டு வினைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டு, *செய்துச்சு* வாய்பாட்டு வினைகள் தமிழகத்தின் தென்மாவட்டங்களில் நிகழலாயின. வட மாவட்டங்களில் இவை *செய்திச்சி* வாய்பாட்டினவாகத் திரிந்தன. பழந்தமிழில் *பாடிற்று* வாய்பாட்டு இறந்தகாலப் பொது வினைமுற்றுக்களும் இவ்வாறு திரிந்து *பாடிச்சு* வாய்பாட்டு வினைகள் *பாடி+ச்சு* என்று பிறழாய்வு செய்யப்பட்டு விரி வாக்கத்தின் மூலம் *செய்திச்சு/செய்துச்சு* வாய்பாட்டு வினைகள் நிகழ்ந்திருக்க வாய்ப்புள்ளது. இக்காலப் பேச்சுத் தமிழில் *பாடிச்சு, செய்துச்சு* வினைகள் *பாடிச்சி, செய்திச்சி* எனத் திரிந்து அவை முறையே *பாடிசி, செய்திசி* என மெலிவுற்றன. பழந்தமிழிலும் *பாடிச்சு, செய்துச்சு* வாய்பாட்டு வினைகள் மெலிவுற்று *பாடிசு, செய்திசு* வாய்பாட்டினவாக வழங்கியிருக்க வேண்டும். இவற்றின் அடியாகத் தோன்றியவையே பழந்தமிழில் பயின்று வழங்கும் *பாடிசின், செய்திசின்* வாய்பாட்டுப் பொது வினைகளாகும். தொல்காப்பியர் (சொல்.சேனா. 274) இவற்றை *சின்* ஈற்றுவினைகளாகக் கருதினாலும் வண்ணனை ஆய்வில் இவை *பாடு+இசின், செய்து+இசின்* வாய்பாட்டு அமைப்பினவாகவே கருதப்படும். இந்த வினைகளின் அடியாகத் தோன்றியமைந்த சிறப்பு வினைகளையும் பழந்தமிழில் காணலாம். எ-டு. *முந்திசினோர்* (பதி. 69.17), *கண்டிசினோர்* (ஐங். 85.5), *பயந்திசினோர்* (புறம். 137.15).

11. *பாடிற்று* வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் குமரி மாவட்டத் தமிழில் *பாடிவிட்டு, பாடிக்கொண்டு* வாய்பாட்டு வினைகளின் பொருண்மையை உணர்த்துகின்றன. எடுத்துக் காட்டாக, *பாடிற்று வந்தான்* என்ற வாக்கியத்தில் *பாடிற்று* என்பது *பாடிக்கொண்டு* அல்லது *பாடிவிட்டு* என்ற வினையின் தற்சுட்டு (Reflexive) அல்லது விடுவினைப் (Completive) பொருண்மையை உணர்த்தும். ஆனால் *பாடிற்று* வினையின் அடியாகத் தோன்றிய *பாடிற்றான்* என்ற வினைமுற்று குமரித் தமிழில் *பாடிவிட்டான்* என்ற வினையின் பொருண்மையின தாகவே வழங்குகிறது. *பாடிற்று* வாய்பாட்டு வினைகள் இயைபு விகுதிகளை (Agreement Markers) ஏற்று நிகழும் போக்கு குமரித் தமிழிலும் பரவலாக இலங்கைத் தமிழிலும் காணப்படுகிறது. எ-டு. *சொல்லிற்றேன்* (=சொல்லிவிட்டேன்) (குமரித்தமிழ்). *முதல்லயே சொல்லிற்றன்* (=சொல்லிவிட்டேன்) (சக்கரவர்த்தி 2000:85) *பாடிற்றேன், பாடிற்றான்* போன்ற வினைமுற்றுக்கள்

*பாடினேன், பாடினான்* போன்ற வினைமுற்றுக்களின் பொருண்மையோடு பொருந்துவதில்லை. *பாடிற்று* வாய்பாட்டுப் பொதுவினைகள் *பாடி+ற்று* என்று பிறழாய்வு செய்யப்பட்டு அந்த அமைப்பில் நிகழும் *-ற்று* என்னும் வடிவம் செய்து வாய்பாட்டு வினைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டுச் *செய்துற்று* வாய்பாட்டு வினைகளும் அவற்றின் அடியாகச் *செய்துற்றேன்* (=செய்துவிட்டேன்), *செய்துற்றான்* (=செய்துவிட்டான்) முதலான வாய்பாட்டு வினைகளும் குமரித் தமிழில் நிகழும் நிலை காணப்படுகிறது. *வந்துற்றுப் போனான்* என்ற குமரி வழக்கில் *வந்துற்று* என்பது *வந்துவிட்டு* என்ற வினையின் பொருண்மையை உணர்த்தும். *செய்துற்று* வாய்பாட்டு வினைகள் தற்சுட்டுப் பொருண்மையையும் குமரித் தமிழில் உணர்த்தி நிற்கும். எ-டு. *எடுத்துற்று வா* (=எடுத்துக்கொண்டு வா). *பாடிற்று, செய்துற்று* வாய்பாட்டு வினைகளைக் கூட்டு வினைகள் என மயங்கி அவற்றின் வினைப்பகுதிகள் *பாடிறு, செய்துறு* வாய்பாட்டினவாக இனங்காணப்பட்டன. *பெற்று* என்ற வினையின் பகுதி *பெறு* என அமைவதைக் கருத்தில் கொண்டு *பாடிற்று* என்பதில் நிகழும் *இற்று* என்பதையும் *இறு* என்னும் வினையடியாகத் தோன்றிய வடிவம் என்று பிறழாய்வு செய்யப் பட்டது. *பாடிறு, செய்துறு* வாய்பாட்டு வினைப் பகுதிகள் எழுதுகையில் *பாடிரு, செய்துரு* என்ற வாய்பாட்டினவாக மிகைத்திருத்தம் (Hyper Correction) செய்யப்பட்டன.

12. *பாடிற்று* வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் *பாடிட்டு* வாய்பாட்டினவாகத் திரிந்து வழங்கும் நிலை பொதுப் பேச்சுத் தமிழில் காணப்படுகிறது. *பாடிட்டு வந்தான்* என்பதில் நிகழும் *பாடிட்டு* என்பது *பாடிவிட்டு* என்ற வினையின் பொருண்மையதாகும். ஆனால் *பாடிட்டு* என்பதற்கும் *பாடி விட்டு* என்பதற்கும் பொருண்மைத் தொடர்பைத் தவிர அமைப்பியல் தொடர்பு ஏதும்இல்லை. அதாவது *பாடிட்டு* என்பதைப் *பாடிவிட்டு* என்பதன் திரிபாகக் கருதமுடியாது. *பாடிட்டு* வாய்பாட்டு வினைகளும் இயைபு விகுதிகளை ஏற்றுச் சிறப்பு வினைமுற்றுக்களாக நிகழ்கின்றன. எ-டு. *பாடிட்டான்* (=பாடிவிட்டான்). *பாடிட்டு* வாய்பாட்டு வினைகள் *பாடி+ட்டு* எனப் பிறழாய்வு செய்யப்பட்டு அதில் நிகழும் *-ட்டு* என்னும் வடிவம் செய்து வாய்பாட்டு வினைகளுக்கும் விரிவுபடுத்தப் பட்டுச் *செய்துட்டு* வாய்பாட்டு வினைகளும், அவற்றினடியாகச் சிறப்பு வினை முற்றுக்களும் பொதுப்பேச்சுத் தமிழில் தோன்றி நிகழும் நிலை காணப்படுகின்றது. எ-டு. *வந்துட்டுப்போனான்*

(=வந்து விட்டுப் போனான்), *வந்துட்டான்* (=வந்துவிட்டான்). *பாடிற்று, செய்துற்று* வாய்பாட்டு வினைகளைப் போலவே *பாடிட்டு, செய்துட்டு* வாய்பாட்டு வினைகளும் கூட்டு வினைகளாகப் பிறழ உணரப்பட்டு அவற்றின் வினைப்பகுதிகள் *பாடிடு, செய்திடு* என இனங்காணப்பட்டன. பேச்சு வழக்கில் *சொல்லிறிச்சு* (=சொல்லி விட்டது), *வந்துறிச்சு* ~ *வந்திருச்சு* (=வந்துவிட்டது), *சொல்லிடிச்சு, வந்திடிச்சு* என்ற இறந்தகால ஒன்றன்பால் வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படுகின்றது. *பாடிச்சு, செய்திச்சு* வாய்பாட்டு வினைகளில் காணப்படும் *-ச்சு* என்னும் வடிவம் *சொல்லிறு/செய்திறு, சொல்லிடு/செய்திடு* ஆகிய வாய்பாட்டு வினைப்பகுதிகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டு மேலே குறிக்கப் பெற்ற இறந்தகால ஒன்றன்பால் வினைமுற்று வடிவங்கள் பேச்சுத் தமிழில் நிகழலாயின.

13. *பாடிற்று* வாய்பாட்டு வினைகளின் திரிபாகிய *பாடிட்டு* வாய்பாட்டு வினைகள் மலயாளத்தில் வேறுவகையாகச் செயல்படுகின்றன. தமிழிற்போலவே பாடிட்டு வாய்பாட்டு வினைகளின் உந்துதலால் செய்திட்டு வாய்பாட்டு வினைகள் மலயாளத்திலும் தோன்றி நிகழ்கின்றன. மலயாளத்தில் இந்த வினைகள் *உண்டு, இல்ல* ஆகிய குறிப்பு வினைமுற்றுக்களின் முன் நிகழ்கின்றன. எ-டு. *பாடிட்டுண்டு / செய்திட்டுண்டு* (=பாடியதுண்டு/செய்ததுண்டு), *பாடிட்டில்ல/செய்திட்டில்ல* (=பாடியதில்லை/செய்ததில்லை). *நீ பாடிட்டுண்டு/செய்திட்டுண்டு* என உடன்பாட்டு வாக்கியமாக நிகழ்கையில் இவை *நீ பாடியிருக்கிறாய்/செய்திருக்கிறாய்* என்ற தமிழ் வாக்கியங்களின் பொருண்மையோடும் பொருந்தும். இந்த வினைகள் மூவிடத்துக்கும் உரிய பயனிலையாகச் செயல்படும் பொது வினைமுற்றுக்களாகும். மலயாளத்தில் இந்த வினைகள் *பாடிடு, செய்திடு* வாய்பாட்டு வினைப்பகுதிகளின்மீது தோன்றியவை எனப் பிறழ உணரப்படவில்லை. தமிழில் பிறழ உணரப்பட்டதற்குக் காரணம் *பாடிட்டு, செய்திட்டு* வாய்பாட்டு வினைகள் முக்கால வினைத்திரிபுகளுக்கும் இசைவாக அமைந்ததுதான். இதன் விளைவாக, *தொட்டு* என்னும் இறந்தகால வினையின் வினையடியானது *தொடு* எனக் கொள்ளப்படுவதைப் போல் *பாடிட்டு, செய்திட்டு* வினைகளில் நிகழும் *இட்டு* என்பதும் *இடு* என்ற வினையடியாகத் தோன்றியதெனப் பிறழ உணரப்பட்டு, *பாடிடு, செய்திடு* வாய்பாட்டுக் கூட்டு வினைப்பகுதிகள் வழக்கில் ஏற்றுக்கொள்ளவும் பட்டுவிட்டன. செந்தமிழ் வழக்கில் நிகழும் *பாடிவிடு, செய்துவிடு* வாய்பாட்டு வினைகளும் பேச்சு வழக்கில்

காணப்படும். *பாடிடு, செய்திடு* வினைகளும் ஒரே பொருண்மையனவாயினும் இவற்றுக்கிடையில் அமைப்பியல் தொடர்பு ஏதுமில்லை. எனவே *பாடிவிடு, செய்துவிடு* வினைகளினின்றும் *பாடிடு, செய்திடு* வினைகள் பேச்சு வழக்கில் திரிந்தமைந்தன எனக் கொள்ள முடியாது.

14. பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் இக்காலச் செந்தமிழிலும் *செய்திடு* வாய்பாட்டுப் பகுதியினடியாகத் தோன்றிய வினையமைப்புகள் காணப்படுகின்றன. ஆனால் இந்த மொழி வழக்கில் *செய்திட்டான்* என்ற வினைமுற்றுக்கும் *செய்தான்* என்ற வினைமுற்றுக்கும் பொருள் வேறுபாடு எதுவுமில்லை. பின்வரும் இலக்கிய எடுத்துக்காட்டுக்கள் இதனைத் தெளிவுபடுத்தும்.

*1 பிடிபிளந் திட்ட நாரில் வெண்கோடு (நற். 107.2)*

*2 பரந்திட்டு நின்ற படுகடல் (நாலாயிரம். 81)*

*3 சென்றிடு வீர்எட்டுத் திக்கும் (தமிழ்த்தாய்-சுப்ரமணிய பாரதி)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பிளந்திட்ட, பரந்திட்டு, சென்றிடுவீர்* ஆகியவற்றின் பொருண்மை முறையே *பிளந்த, பரந்து, செல்வீர்* ஆகியவற்றின் பொருண்மையோடு பொருந்துவதாகும். *பாடிற்று* வாய்பாட்டுப் பொதுவினைகள் *பாடிட்டு* வாய்பாட்டினவாகத் திரிந்து இலக்கிய வழக்கில் இவை *பாடி* என்னும் வாய்பாட்டு எச்ச வினைகளின் பொருண்மையையே உணர்த்தலாயின. பாடிட்டு வாய்பாட்டு வினைகள் பேச்சுத் தமிழிற் போலவே பிறழாய்வு செய்யப்பட்டு இலக்கிய வழக்கிலும் *செய்திட்டு* வாய்பாட்டு வினைகள் தோன்றி நிகழலாயின. இவ்வாறு அமைந்த *பாடிட்டு, செய்திட்டு* வினைகளின் பகுதிகள் *பாடிடு, செய்திடு* வாய்பாட்டினவாகச் செந்தமிழ் வழக்கிலும் பிறழ உணரப்பட்டன. ஆனால் செந்தமிழ் வழக்கில் *செய்திட்டு* வாய்பாட்டு வினைகள் *செய்து* வாய்பாட்டு வினைகளுடன் பொருந்துவது ஓர் எதிர்பாராத நிகழ்ச்சியாகும். தொடக்கத்தில் செய்திட்டு வாய்பாட்டு வினைகள் இலக்கிய வழக்காக ஏற்றுக்கொள்ளப்பட்ட கிளைமொழியிலும் *செய்துவிட்டு* வாய்பாட்டு வினைகளின் பொருண்மையனவாகவே நிகழ்ந்திருக்க வேண்டும். செந்தமிழாக இனங்காணப்பட்ட கிளை மொழிக்குக் காலப்போக்கில் தாய் மொழியாளர்கள் இல்லாமையால் இந்த உண்மை மறக்கப்பட்டிருக்க வேண்டும். இலக்கியம் சார்ந்த செந்தமிழ் வழக்கில் நிகழும் *செய்திடு* வாய்பாட்டு வினைகளைச் செய்துவிடு வாய்பாட்டு வினைகளோடு அமைப்பியல் அடிப்படையில் தொடர்புபடுத்த முடியாது.

15. *பாடிற்று, பாடிட்டு, பாடிச்சு* வாய்பாட்டு வினைகளின் தாக்கத்தால் அவற்றுக்கு இணையாகப் பேச்சுத் தமிழில் *செய்துற்று, செய்துட்டு, செய்துச்சு* ஆகிய வாய்பாட்டு வினைகளும் தோன்றி நிகழ்வதுபற்றி மேலே குறிப்பிடப்பட்டது. *பாடிற்று, பாடிட்டு, பாடிச்சு* வினைகள் முறையே *பாடி+ற்று, பாடி+ட்டு, பாடி+ச்சு* என்று பிறழாய்வு செய்யப்பட்டு அவற்றில் நிகழும் *-ற்று, -ட்டு, -ச்சு* ஆகிய வடிவங்கள் செய்து வாய்பாட்டு வினைகளையடுத்தும் விரிவுபடுத்தப்பட்டுச் *செய்துற்று, செய்துட்டு, செய்துச்சு* வாய்பாட்டு வினைகள் தோன்றி நிகழ்வது பற்றியும் மேலே பேசப் பட்டது. பேச்சுத் தமிழில் *செய்திற்று, செய்திட்டு, செய்திச்சு* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படுகின்றது. *செய்து+இற்று, செய்து+இட்டு, செய்து+இச்சு* என்ற அமைப்பின வாகிய இவற்றில் நிகழும் *-இற்று, -இட்டு, -இச்சு* ஆகிய வடிவங்கள் முறையே *-ற்று, -ட்டு, -ச்சு* ஆகியவற்றோடு உறழ்ந்து நிகழும் மாற்றுருபுகளாகக் கொள்ளத்தக்கனவாகும். இந்தக் கூற்று, பழந்தமிழில் நிகழும் *செய்து+இட்டு* வாய்பாட்டு அமைப்பினவாகிய செய்திட்டு வாய்பாட்டு வினைகளுக்கும் பொருந்தும்.

16. *பாடிற்று* வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் இலங்கைக் கிளைமொழியொன்றில் *பாடித்து* வாய்பாட்டினவாகத் திரிந்து *பாடிவிட்டு* அல்லது *பாடிக்கொண்டு* வாய்பாட்டு வினை களின் பொருண்மையுடன் பொருந்துவனவாக நிகழ்கின்றன. சக்கரவர்த்தியின் (2002) *யுத்தத்தின் இரண்டாம் பாகம்* என்ற சிறுகதைத் தொகுப்பில் இவற்றின் நிகழ்வுகளைக் காணலாம். *பாடித்து* வாய்பாட்டு வினைகள் *பாடிட்டு* வினைகளைப் போலவே *பாடி+த்து* எனப் பிறழாய்வு செய்யப்பட்டுச் *செய்து* வாய்பாட்டு வினைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டுச் *செய்துத்து* வாய்பாட்டு வினைகள் இலங்கைக் கிளைமொழியில் தோற்றம் கொண்டன. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

4 **நான் புள்ளைய தூக்கித்து (=தூக்கிக் கொண்டு) வாறன்** *(பக். 27)*

5 **கடய மூடித்து (=மூடிவிட்டு/மூடிக்கொண்டு) கெதிய்யா ஊட்டபோய்ச் சேருபாப்பம்** *(பக். 37)*

6 **நடக்கத் தொடங்கித்தன் (=தொடங்கிவிட்டேன்)** *(பக்.109)*

7 **அவரப் பொடியனுகள் புடிச்சித்துப் (=பிடித்துக்கொண்டு) போரானுகள்** *(பக். 25)*

8 **கேட்டுத்து (=கேட்டுவிட்டு/கேட்டுக்கொண்டு) வந்து எல்லாரையும் கொல்லட்டும்** *(பக். 32)*

*9 பால நீ குடிச்சித்து (=குடித்துவிட்டு) படுத்துறங்காயோ (பக். 165)*

*10 அவர பொடியனுகள் புடிச்சித்து (=பிடித்துக்கொண்டு) வந்தித்தானுகளாம் (=வந்துவிட்டானுகளாம்) (பக். 29)*

*பாடிற்று, பாடிட்டு* ஆகிய வாய்பாட்டு வினைகளும் *செய்துற்று, செய்துட்டு* வாய்பாட்டு வினைகளும் *பாடிறு/பாடிடு, செய்துறு/செய்துடு* வாய்பாட்டு வினைப்பகுதிகளின் மீது தோன்றியன வாகப் பிறழ உணரப்பட்டதைப்போல் *பாடித்து, செய்துத்து* வாய்பாட்டு வினைகளின் வினைப்பகுதிகள் *பாடிது, செய்திது* எனப் பிறழ உணரப்படவில்லை. காரணம் *தொடு, பெறு* ஆகியவற்றைப் போல் தனிக்குறில் சார்ந்த துகரவீற்று முற்று வினைகளின் நிகழ்ச்சி தமிழில் இன்மையேயாகும்.

17. பேச்சுத் தமிழில் *பாடிப்பான்* (=பாடிக் கொள்வான்), *செய்துப்பேன்* (=செய்துகொள்வேன்), *பாடிக்கும்* (=பாடிக் கொள்ளும்), *செய்துக்கும்* (=செய்துகொள்ளும்) முதலிய வாய்பாட்டுத் தற்சுட்டு (Reflexive) எதிர்கால வினைகளின் நிகழ்ச்சி சில கிளைமொழிகளில் குறிப்பாக, பார்ப்பனக் கிளை மொழியில் காணப்படுகிறது. எ-டு. *பேசிப்பாங்க* (=பேசிக் கொள்வார்கள்), *எடுத்துப்பியா* (=எடுத்துக்கொள்வாயா), *திரும்பிக்கும்* (=திரும்பிக்கொள்ளும்), *படுத்துக்கும்* (=படுத்துக் கொள்ளும்), இவற்றுள் *பாடிக்கும், செய்துக்கும்* வாய்பாட்டு ஒன்றன்பால் தற்சுட்டு வினைகள் வேறொரு வினைத்திரிபுப் பிரிவுக்கு உரியனவாகத் தோன்றுகின்றன. இவற்றின் வினைப்பகுதி *பாடிக்கு* (<பாடு+இக்கு), *செய்துக்கு* (<செய்து+க்கு) என இனங் காணத்தக்கனவாகும். *பாடிக்கினான்* (=பாடிக்கொண்டான்), *பாடிக்கிறான்* (=பாடிக்கொள்கிறான்), *பாடிக்குவான்* (=பாடிக் கொள்வான்) என்ற வினைத்திரிபு மரபுக்கு உரியவை *பாடிக்கும்* வாய்பாட்டு வினைகள். இது *செய்துக்கும்* வாய்பாட்டு வினை களுக்குப் பொருந்தும். ஆனால் பாடிப்பான், செய்துப்பான் வாய்பாட்டுத் தற்சுட்டு வினைகள் இந்த வினைத்திரிபு மரபுக்கு உரியவையல்ல. இவை **பாடிற்றான்/*செய்திற்றான், *பாடிற்கிறான்/*செய்திற்கிறான், *பாடிற்பான்/*செய்துற்பான்* என்ற வினைத் திரிபு மரபுக்குரியவையாகும். *பேசிப்பாங்க, எடுத்துப்பாங்க* ஆகிய வாய்பாட்டுத்தற்சுட்டு வினைகள் இந்த வினைத்திரிபு மரபைச் சார்ந்த தற்சுட்டு வினைகளின் நிகழ்ச்சி செவ்வியல் தமிழில் காணப்படவில்லை. இந்த வினைத்திரிபு மரபு *விற்றான், விற்கிறான், விற்பான்* என்ற வினைத்திரிபு மரபின் பிரதிபலிப் பாகும். *விற்பான்* என்பது பேச்சுத் தமிழில் *விப்பான்* என்று

அமைவதுபோல் *பாடிற்பான், செய்துற்பான்* வாய்பாட்டுத் தற்சுட்டு வினைகள் பேச்சுத் தமிழில் குறிப்பாகப் பார்ப்பனத் தமிழில் *பாடிப்பான், செய்துப்பான்* வாய்பாட்டினவாகத் திரிந்து வழங்குகின்றன. ஆனால் *பாடிப்பான், செய்துப்பான்* வாய்பாட்டு வினைகளுக்கு எதிரான இறந்தகால நிகழ்கால வினைகளின் நிகழ்ச்சி பேச்சுத் தமிழிலும் காணப்படவில்லை. ஏதேனும் கிளைமொழியொன்றில் இவை நிகழக்கூடும். தமிழ்க் கிளைமொழி தொடர்பான முனைப்பான ஆய்வுகளின் வாயிலாக இது வெளிப்பட வாய்ப்புள்ளது.

18. இனி *இக்கு, இகு* ஆகிய தொல்வினைகள் தமிழ் வினைகளில் நிகழ்த்திய புதுமையாக்கங்களைக் காணலாம். மதுரை - செக்கானூரணித் தமிழில் *பாடிக்கிருந்தான்* (=பாடிக் கொண்டிருந்தான்), *பாடிக்கிருக்கான்* (=பாடிக்கொண்டிருக்கிறான்), *பாடிக்கிருப்பான்* (=பாடிக்கொண்டிருப்பான்) ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகிறது. நகைச்சுவை நடிகர் வடிவேலு (2000) எழுதி ஆனந்தவிகடன் வெளியீடாக வந்த தன் வரலாற்று நூலில் இத்தகைய வினைகளின் நிகழ்ச்சியைக் காணலாம். இந்த வினைகள் *பாடிக்கு+இருந்தான்/இருக்கான்/ இருப்பான்* என்ற அமைப்பின்வாகும். இந்த அமைப்பில் நிகழும் *பாடிக்கு* (=பாடிக்கொண்டு) வாய்பாட்டு வினைகள் *பாடு+இக்கு* என்ற அமைப்பினவாகும். இதில் நிகழும் *இக்கு* என்பது *தொகு, புகு* வினையடிகளின்மீது தோன்றிய *தொக்கு, புக்கு* என்ற வினைகளைப் போல் *இகு* என்ற வினையடியின்மீது தோன்றிய தாகும். *பாடிக்கு* வாய்பாட்டு வினைகள் *பாடி+க்கு* எனப் பிறழாய்வு செய்யப்பட்டு இதில் நிகழும் *-க்கு* என்னும் பகுதி செய்து வாய்பாட்டு வினைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டுச் *செய்துக்கு* வாய்பாட்டு வினைகள் தோன்றி நிகழலாயின. எ-டு. *வந்துக் கிருந்தான்* (=வந்துகொண்டிருந்தான்), *வந்துக்கிருக்கான்* (=வந்து கொண்டிருக்கிறான்), *வந்துக்கிருப்பான்* (=வந்துகொண்டிருப்பான்).

19. பேச்சுத் தமிழின் இன்னொரு கிளைமொழியில் *பாடிக்கினு* (=பாடிக்கொண்டு), *பாடிக்கினிருந்தான்* (=பாடிக் கொண்டிருந்தான்), *பாடிக்கினிருக்கான்* (=பாடிக்கொண்டிருக் கிறான்), *பாடிக்கினிருப்பான்* (=பாடிக்கொண்டிருப்பான்) ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. இவற்றில் நிகழும் *பாடிக்கினு* என்பது *பாடிக்கு+இனு* என்ற அமைப்பின தாகும். இந்த அமைப்பில் நிகழும் *இனு* என்பது இறந்தகால இடைநிலையாகும். *பாடிக்கு* (=பாடிக்கொள்) என்பது *பாடு+ இக்கு* என்ற அமைப்பினதாகிய கூட்டு வினைப்பகுதியாகும். தற்சுட்டுப் பொருண்மையை உணர்த்தும் *இக்கு* என்பது *கொள்* என்னும் பொருண்மையை உணர்த்தும் வினையடியாகும்.

இதனைப் *பாடிக்கிருந்தான்* (<பாடிக்கு+இருந்தான்) (=பாடிக் கொண்டிருந்தான்) என்ற செக்கானூரரணித் தமிழில் நிகழும் *இக்கு* என்பதனோடு தொடர்புபடுத்த முடியாது. ஏனெனில் செக்கானூரரணி வழக்கில் *இக்கு* (=கொண்டு) என்பது *இகு* என்னும் வினையடியின் மீது தோன்றியதாகும். *பாடிக்கினு* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *பாடிக்கு* என்பது *பாடி+க்கு* எனப் பிறழாய்வு செய்யப் பட்டு, *-க்கு* என்னும் வடிவம் *செய்து* வாய்பாட்டு வினைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. இதன் விளைவாகத் தோன்றியவையே *செய்துக்கினு* (=செய்துகொண்டு) வாய்பாட்டு வினைகள். இதனடி யாகத் தோன்றியவையே *செய்துக்கினுருந்தான், செய்துக்கினிருக்கான், செய்துக்கினிருப்பான்* ஆகிய வாய்பாட்டுத் தொடர் நிகழ்ச்சி வினைகள். இந்த ஆய்வு *பாடிக்கினான்* (=பாடிக் கொண்டான்), *செய்துக்கினான்* (=செய்துகொண்டான்) ஆகிய வாய்பாட்டுத் தற்சுட்டு வினைகளுக்கும் பொருந்தும். இவற்றின் நிகழ்கால எதிர் கால வினைகள் குமரித் தமிழில் *பாடிக்குதான்/பாடிக்குவான், செய்துக்குதான்/செய்துக்குவான்* எனவும் பிற கிளைமொழிகளில் *பாடிக்கிறான்/பாடிக்குவான், செய்துக்கிறான்/ செய்துக்குவான்* எனவும் வழங்குகின்றன. இவற்றின் வினைப் பகுதிகள் முறையே *பாடிக்கு, செய்துக்கு* என்ற வாய்பாட்டினவாக இனங்காணத் தக்கவையாகும். இந்த வினைப்பகுதிகளுக்கும் *பாடிக்கொள், செய்துகொள்* ஆகிய தற்சுட்டு வினைப்பகுதிகளுக்கும் பொருண்மைத் தொடர்பைத் தவிர அமைப்பியல் தொடர்பு ஏதுமில்லை. எனவே *பேசிக்கு* என்பதை எடுத்துக்காட்டாக, *பேசிக்கொள்* என்பதன் திரிபாகக் கருதமுடியாது; கருதவும் கூடாது. *பாடிக்கு* (=பாடிக்கொள்), *செய்துக்கு* (=செய்துகொள்) வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றி நிகழும் ஒன்றன் பால் இறந்தகால வினைமுற்றுக்கள் *பாடிக்கிச்சு, செய்துகிச்சு* என்ற வாய்பாட்டினவாக வழக்கில் காணப்படுகின்றன. *பாடிச்சு* (<*பாடிற்று), *செய்திச்சு* (<*செய்திற்று) வாய்பாட்டு வினைகளில் காணப்படும் *இச்சு* என்னும் வடிவம் *பாடிக்கு, செய்துக்கு* வாய்பாட்டு வினைப்பகுதிகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டுப் *பாடிக்கிச்சு, செய்துக்கிச்சு* வாய்பாட்டு வினைகள் தோற்றம் கொண்டன. *பாடிக்கினான், பாடிக்கிச்சு, செய்துக்குனான், செய்துக்கிச்சு* முதலான வாய்பாட்டுத் தற்சுட்டு வினைகள் தமிழகத்தில் வட மாவட்டங்களிலும் புதுவைப் பகுதியிலும் காணப்படுகின்றன.

20. பேச்சுத் தமிழின் இன்னொரு கிளைமொழியில் *பாடிக்கிட்டான், செய்துகிட்டான்* வாய்பாட்டு தற்சுட்டு வினைகளும் *பாடிக்கிட்டிருந்தான், செய்துகிட்டிருந்தான்* வாய்பாட்டுத் தொடர் நிகழ்ச்சி வினைகளும் காணப்படுகின்றன.

படர்க்கையில் தற்சுட்டு ஆண்பால் முக்கால வினைகள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

11 (1) பாடிக்கிட்டான்/செய்துகிட்டான்
(2) பாடிக்கிடுறான்/செய்துக்கிடுறான்
(3) பாடிக்கிடுவான்/செய்துக்கிடுவான்

*பாடிட்டு, செய்திட்டு* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *இட்டு* (<*இற்று) என்னும் வடிவம் *பாடிக்கு, செய்துக்கு* வாய்பாட்டு வினைகளுக்கு விரிவுபடுத்தப்பட்டுப் *பாடிக்கிட்டு, செய்துகிட்டு* ஆகிய வாய்பாட்டுத் தற்சுட்டு வடிவங்களும் அவற்றின் அடியாகப் *பாடிக்கிட்டான், செய்துகிட்டான்* வாய்பாட்டுத் தற்சுட்டுச் சிறப்பு வினைகளும் தோன்றி நிகழலாயின. இவற்றில் நிகழும் *-இட்டு* என்பது இறந்தகால இடைநிலையாகக் கொள்ளத் தக்கதாகும். *பாடிக்கிட்டு, செய்துகிட்டு* வாய்பாட்டு வினைகள் *பாடிக்கிடு* (=பாடிக்கொள்), *செய்துக்கிடு* (=செய்துகொள்) வாய்பாட்டு வினைகளின் மீது தோன்றியனவாகப் பிறழ உணரப் பட்டன. இதன் விளைவாகவே மேலே (10)-இல் குறிக்கப்பட்டுள்ள நிகழ்கால எதிர்கால வினைகள் தோற்றங் கொண்டன. உண்மை நிலை இதற்கு முற்றிலும் மாறுபட்டதாகும். *பாடிக்கிட்டு* என்பதில் நிகழும் *இட்டு* என்னும் வடிவம் *இடு* என்னும் வினையின்மீது தோன்றியதாகப் பிறழாய்வு செய்யப்பட்டு விட்டது. பிறழாய்வுகள் மொழியின் வளர்ச்சிப் போக்கில் எதிர்பாராமல் நிகழும் மாற்று ஆய்வுகளாகும். இத்தகைய ஆய்வுகளுக்கு மனம் ஒரு காரணமாகும். வினையமைப்புகளைப் பிறழ உணர்ந்து மாறுபட்ட ஆய்வுக்குக் காரணமாக அமைவது மனமேயாகும். மொழியில் புதிய பொருண்மைக் கோலங்களும் மொழியமைப்புக்களும் தோன்றியமைவதற்குப் பிறழாய்வுகளின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும்.

21. செந்தமிழ் வழக்கில் காணப்படும் *பாடிக்கொள், செய்துகொள்* வாய்பாட்டுத் தற்சுட்டு வினைகளுக்கும் பேச்சு வழக்கில் காணப்படும் தற்சுட்டு வினைகளுக்கும் அமைப்பியல் தொடர்பு ஏதும் இல்லையென்று முன்னதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. அப்படியானால் செந்தமிழ் வழக்கில் காணப்படும் தற்சுட்டு வினைகளின் தோற்றத்தையும் ஆராயவேண்டும். இந்த வகையில் பழந்தமிழில் காணப்படும் பின்வரும் தொடர் அமைப்புகள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

12. தெரிந்தனர் கொளலே (தொல். சொல். சேனா. 295)
13. உணர்ந்தனர் கொளல் (தொல். சொல். சேனா. 117, 296)
14. புணர்த்தன கொளல் (தொல்.பொருள்.இளம். 278)

*15. **இயற்றினர் கொளல்*** (தொல்.பொருள்.இளம். 336)
*16. **வகுத்தனர் கொண்மின்*** (தொல்.பொருள்.இளம். 418)
*17. **வரைந்தனை கொண்மே*** (ஐங். 289. 4)
*18. **வரைந்தனன் கொளற்கே*** (கலி. 38. 26)
*19. **எடுத்தனன் கொண்டான்*** (கலி. 37. 18)
*20. **ஓம்பினை கொண்மே*** (கலி. 23. 19)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *கொள்* என்பதன் வினைத் திரிபுகள் தற்சுட்டுப் பொருண்மையை உணர்த்தும் துணை வினையைச் சார்ந்தவையல்ல. இவற்றின் முன் நிகழும் சிறப்பு வினைமுற்றுக்கள் முற்றெச்சங்களாகும். இவற்றை எச்ச வினை களாக மாற்றினால் *செய்துகொள்* அல்லது *பாடிக்கொள்* வாய்பாட்டு வினைப்பகுதிகள் தோன்றி நிகழும். இவ்வாறு தோன்றியவையே செந்தமிழ் வழக்கில் காணப்படும் தற்சுட்டு வினைகளாகும். தற்சுட்டு வினைகளாக மாறிய நிலையில், *கொள்* என்ற வினையானது தற்சுட்டுப் பொருண்மையை உணர்த்த லாயிற்று. இதன் விளைவாக இதன்முன் நிகழும் *செய்து, பாடி* ஆகிய வாய்பாட்டு வடிவங்கள் காலப் பொருண்மையை இழந்து வினையடியின் மாற்றுருபுகளாக நிகழும் நிலை ஏற்பட்டு விட்டது. *செய்துக்கு, பாடிக்கு* வாய்பாட்டுத் தற்சுட்டு வினைப் பகுதிகள் பிறழாய்வுக்கு உட்படுத்தப்பட்டதால் இவற்றில் நிகழும் *செய்து, பாடி* ஆகிய வாய்பாட்டு வடிவங்களும் காலப் பொருண்மையை இழந்து வினையடிகளின் மாற்றுருபுகளாக நிகழலாயின.

22. தற்சுட்டு வினைகள் (Reflexive Verbs) தொடர் நிகழ்ச்சி வினைகள் (Progressive/Continuative Verbs). விடுவினைகள் (Completive Verbs) ஆகியவற்றின் தோற்றத்துக்கு, *பாடிற்று* வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களின் பங்களிப்பு எத்தகையது என்பது ஓர் அடிப்படை ஆய்வின் மூலம் மேலே விளக்கப்பட்டது. எல்லா அடிப்படை ஆய்வுகளுமே இப்படி அமையும் என்று சொல்லமுடியாது. ஆயினும் மொழிக் கல்வியையும் இலக்கியக் கல்வியையும் அடிப்படை ஆய்வுகளின் துணையின்றி மேம்படுத்த வாய்ப்பேயில்லை என்பதைக் கொள்கை முடிவெடுக்கும் அரசும், பல்கலைக்கழகமும், பல்கலைக்கழக நிதிக்கழகமும் உணர்வது மட்டுமின்றி விரைந்து செயல்பட்டு மொழி, இலக்கியம் தொடர்பான புதிய மொழியியல் மற்றும் இலக்கியவியலின் பாடத்திட்டங்களை வகுக்க வகை செய்ய வேண்டும். திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும் என்ற பாரதியின் வாக்கு நம்மை வழிநடத்திச் செல்லட்டும்.

**இரா. கோதண்டராமன்**

# நினைதல் தகும்

*வாழிய செந்தமிழ்* என்ற இந்நூல் தமிழ் மொழியியல் சார்ந்த ஓர் ஆய்வுத் தொகுப்பாகும். இந்த நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வாயிலாக வெளிவருவதற்கு அதன் இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் பெரிதும் பாராட்டற்பாலனவாகும். அவரது விரைந்து செயல்படும் திறனும் தொலைநோக்கும் அடிப்படை ஆய்வுகளின் மீதான ஈடுபாடும் இந்த நூல் வெளிவருவதற்குப் பின்புலமாக இருந்துள்ளன. புதிய ஆய்வுத் தடங்களை வகுப்பதில் முனைவர் இராசேந்திரனிடம் காணப்படும் தன்முனைப்பே இந்த நூலை ஆய்வுலகின்முன் கொணர உந்து சக்தியாக இருந்தது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முன்னை இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள் *வாழிய செந்தமிழ்* என்ற இந்த ஆய்வு நூல், நிறுவன வெளியீடாக வெளிவருவதற்கான முயற்சிகளை மேற்கொண்டார். நிறுவனத்தின் இன்றைய இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள் இந்த முயற்சிகளுக்கு வடிவம் தந்து அடிப்படை ஆய்வுக்கு அணி சேர்த்துள்ளார். இருவருக்கும் எனது நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமிதம் கொள்கிறேன்.

தமிழ்மொழி தொடர்பான எனது ஆய்வுச் சிந்தனைகள் ஆய்வாளர்களுக்குப் போய்ச் சேரவேண்டும் என்று அவ்வப் போது அறிவுறுத்தியும் வலியுறுத்தியும் வந்தவர் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் கி. நாச்சிமுத்து அவர்கள் ஆவார். *வாழிய செந்தமிழ்* அவரது கனவை நனவாக்குகிறது. *வாழிய செந்தமிழ்* அவருக்கு நான் செலுத்தும் நன்றிக் கடனாகும்.

புதுவையில் எனக்கு அண்மையிலிருந்து *வாழிய செந்தமிழ்* ஆய்வுகள் தொடர்பான கலந்துரையாளராக இருந்து என்னை மேலும்மேலும் சிந்திக்கத் தூண்டியவர் புதுவைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும் தலைவராகவும் பணியாற்றி ஓய்வு பெற்ற பேராசிரியர் அ. பாண்டுரங்கன் அவர்கள் ஆவார். *வாழிய செந்தமிழ்* வெளிவருவதற்கு அவரது பங்களிப்பு நன்றியுடன் நினைதற்பாலதாகும்.

*வாழிய செந்தமிழ்* ஆய்வு நூலாக வெளிவருவதில் பெரிதும் ஆர்வம் காட்டியவர் எனது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய திரு. இரா. சுப்புர்ராயுலு ரெட்டி அவர்கள் ஆவார். இந்த நூல் தொடர்பாக நான் வேண்டியபோதெல்லாம் உடுக்கை யிழந்தவன் கைபோல விரைந்துவந்து என் இடுக்கண் களைந்த திரு. ரெட்டி அவர்களை நன்றியுடன் நினைவு கூர்வதில் நான் பெருமகிழ்ச்சி கொள்கிறேன்.

திரு. ப. தியாகராசன் அவர்கள் *வாழிய செந்தமிழ்* என்ற இந்த ஆய்வு நூலில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளைக் கணினி மூலம் தட்டச்சு செய்து பலமுறை செம்மைப்படுத்தித் தந்தவர் ஆவார். முதுகலைப் பட்டதாரியும் ஓய்வு பெற்ற மேனிலைப் பள்ளி ஆசிரியருமாகிய திரு. தியாகராசன் அவர்கள் தனது உடல்நலக் குறைவையும் பொருட்படுத்தாமல் தமிழின்மீது தனக்குள்ள ஆர்வமிகுதியாலும் எனது ஆய்வுகளில் அவருக்கு இருந்துவரும் ஈடுபாட்டாலும் தனது உழைப்பை வாழிய செந்தமிழுக்கு நல்கியுள்ளார். அவரை நான் என்றும் நன்றியுடன் நினைவில் கொள்வேன்.

*வாழிய செந்தமிழ்* வெளிவருவதற்கு ஒப்பற்ற துணையாக நின்று என்னைத் தாங்கி நின்றவள் எனது வாழ்க்கைத் துணைவி திருமதி இரா. சாந்தகுணபூஷணம் ஆவாள். உடல்நலம், முதுமை, பொருளியல் பின்னடைவு ஆகியவற்றால் சோர்ந்து போயிருந்த என்னை ஆற்றுவித்து எனது ஆய்வில் தொய்வு நேராவண்ணம் பார்த்துக் கொண்டவள் அவள். தனது சொற்ப ஓய்வூதியத்தைக் கொண்டு எனக்கும் எனது ஆய்வுகளுக்கும் தனது குடும்பத்துக்கும் முதுகெலும்பாக இருந்துவரும் என் துணைவி இந்த நூல் முழுவதையும் மீண்டும் மீண்டும் படிதிருத்தம்செய்யத் துணையாக நின்றவள். அவள் எனது நன்றிக்கும் மேலானவள்.

*வாழிய செந்தமிழ்* சிறப்பான கட்டமைப்புடன் வெளிவருவதற்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மேற்கொண்ட முயற்சிகள் நன்றியுடன் போற்றுதற்குரியனவாகும். நிறுவன ஊழியர்கள் திரு. ச. குணசீலன், திருமதி. ந. லட்சுமி ஆகியோர் எனது நன்றிக்கும் மதிப்புக்கும் உரியவர்கள் ஆவார்கள். ஒரு நிறுவனத்தின் மாட்சியும் வீழ்ச்சியும் அதனை வழிநடத்திச் செல்லும் தலைவரின் தொலைநோக்கையும் ஆளுமைத்திறனையும் பொருத்ததாகும். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வளர்ச்சிக்கும் மாட்சிக்கும் உறுதுணையாக நின்று ஆய்வுக்கு அணிசேர்க்கும் இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கு *வாழிய செந்தமிழ்* வாயிலாக எனது நன்றியை மீண்டும் தெரிவித்துக்கொள்கிறேன்.

**இரா. கோதண்டராமன்**

# நூலாசிரியர் - ஒரு குறிப்பு

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் (1954-1959) வாயிலாகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலைப் பட்டமும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் (1966-1968, 1968-73) மொழியியல் முதுகலைப் பட்டமும், மொழியியல் முனைவர் பட்டமும் பெற்ற இரா. கோதண்டராமன் மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழியல் துறையில் விரிவுரையாளராக இருந்து ஒன்பது ஆண்டுகள் (1973-1982) தமிழிலக்கணமும் மொழியியலும், ஆறு ஆண்டுகள் அமெரிக்க மாணவர்களுக்கு American Institute of Indian Studies சார்பில் தமிழும் கற்பித்தவர். ஏழு ஆண்டுகள் (1982-1988) கேரள மாநிலம் திருவனந்தபுரத்தில் உள்ள அனைத்துலகத் திராவிட மொழியியல் ஆய்வு மையத்தின் மொழியியற் பிரிவில் முதுநிலை ஆய்வாளராகவும் பேராசிரியராகவும் பணியாற்றியவர். அறுபத்து மூன்று மாதங்கள் (1989-1994) புதுச்சேரியிலுள்ள புதுவை அரசின் தன்னாட்சி அமைப்பாகிய புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராகப் பணியாற்றி அதன் அன்றைய வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவர்.

தமிழ் மொழியியல் தொடர்பாக ஆங்கிலத்தில் அவர் எழுதிய Tamil Syntax - New Perspectives என்ற நூலைப் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது. 'புதியன கண்டபோதில் விடுவரோ புதுமை பார்ப்பார்' என்ற கம்பனின் வாக்குக்கு இலக்கணமாகத் திகழும் இவர் தமிழ் மொழியியல் ஆய்வில் தனக்கென முற்றிலும் மாறுபட்ட ஓர் ஆய்வுத் தடத்தைப் பதித்துக் கொண்டவர். *தமிழெனப்படுவது* என்ற இவரது தமிழ் மொழியியல் சார்ந்த ஆய்வு நூலை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 2004-இல் வெளியிட்டுள்ளது. எழுபது வயதினராகிய இவர் கொண்ட ரெட்டிகுலம். தொண்டிண்ட்டிவாரு என்ற ஒன்பது இல்லத் தொகுப்பைச் சேர்ந்த கொளத்தூர் வேமுல நாராயண ரெட்டியின் மரபில் வந்த ஓர் எளிய தெலுங்குக் குடும்பத்தில் வேமுல இராமானுஜ ரெட்டிக்கும் குப்பம்மைக்கும் 08-08-1936இல் (பள்ளிச் சான்றிதழ்ப்படி 15-01-1937-இல்) தலைமகனாகப் பிறந்தவர் ஆவார்.

# வரிவடிவச் சிக்கலும் தீர்வும்

தமிழில் *பங்கு, பஞ்சம், பந்தல், தண்டு, கன்று* முதலான சொற்களில் மெல்லொற்றை யடுத்து நிகழும் வல்லொற்றுக்கள் ஒலியன் நிலையில் (Phonemic Level) நிலையொலியன்களாகவும் (Voiceless Phonemes), ஒலிப்புநிலையில் (Phonetic Level) அலை யொலிகளாகவும் (Voiced Phones) அமைகின்றன. மேற்படிச் சூழலில் வல்லொற்றுக்கள் ஒலிப்பு நிலையில் நிலையொலிகளாகத் தமிழில் ஒலிக்கப்படுவதில்லை.

கன்னடம், தெலுங்கு ஆகிய திராவிட மொழிகளில் வல் லொற்றுக்கள் நிலையொலியன்களாகவும் அலையொலியன்களாகவும் நிகழ்கின்றன. ஆனால் தமிழில் இது போன்ற நிலை இல்லை. இதனால் தமிழ் நெடுங்கணக்கில் மெல்லொற்றுக்களையடுத்து வல்லொற்றுக்கள் நிலையொலிகளாக நிகழ்வதைக் குறிக்க வகை யில்லை. மொழியியல் ஆய்வினைத் தமிழில் மேற்கொள்கையில் ஆய்வாளர்களுக்கு இது ஒரு பேரிடராக இருந்து வருகிறது.

மொழியியல் ஆய்வில் வரிவடிவமானது ஒலிப்பைச் சரியாக உணர்த்த வேண்டும். இதில் மயக்கத்திற்குச் சிறிதும் இடம் இருக்கக்கூடாது. விளைச்சல் என்ற பொருண்மையை உணர்த்தும் தெலுங்குச் சொல்லிலும், எட்டு என்னும் எண்ணுப் பொருண் மையைக் குறிக்கும் கன்னடச் சொல்லிலும் மெல்லொற்றை அடுத்து நிகழும் டகரமெய்யானது நிலையொலித் தன்மையதாகும். இவற்றைத் தமிழில் *பண்ட, எண்டு* என்று எழுதினால் இவற்றில் நிகழும் டகரம் தமிழ் எழுத்தியல் மரபுப்படி அலையொலியாக ஒலிக்கப்படும். இது தவறான ஒலிப்பாகும். இதனைத் தவிர்க்கும் பொருட்டு மெல்லொற்றையடுத்து நிகழும் வல்லொற்று ஊர்ந்த உயிர்மெய் வரிவடிவம் மெய்யாகவும் உயிராகவும் பிரித்து எழுதப்படும் உத்தி இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஆய்வுக் கட்டுரைகளில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. எ-டு. *பண்ட்அ* (தெலுங்கு) 'விளைச்சல்', *எண்ட்உ* (கன்னடம்) 'எட்டு'.

இந்த உத்தியானது ஒலிப்பு நிலையில் உயிரிடையிலும் (Intervocalic Position), இடையொற்றுக்களின் முன்பும் நிகழும் நிலைவல்லொற்று (Voiceless Plosive) அல்லது நிலை வல்லுரசொலி (Voiceless Affricate) ஆகியவற்றைக் குறிக்கவும் இந்த நூலில் கையாளப்பட்டுள்ளது. எ-டு. *மாருச்உ* (<* மாறுச்உ) / *மார்ச்உ* (<*மாற்ச்உ) 'மாற்று', *மாருப்உ* (<*மாற்ப்உ) 'மாற்றம்', *லேப்உ* 'எழுப்பு'. இந்த எடுத்துக்காட்டுக்கள் தெலுங்கில் நிகழ்பவையாகும்.

# 1. புதியன புகுதலும் பழையன தெளிதலும்

## *1.0 பழையன கழிதல்*

*1.1* மொழியாய்வை மரபிலக்கணிகள் நிகழ்த்துவதற்கும் மொழியியலார் நிகழ்த்துவதற்கும் வேறுபாடுண்டு. மரபிலக்கணிகள் ஆய்வில் மொழியின் வளர்ச்சிப்போக்கில். நிகழ்ந்த வரலாற்று உண்மைகள் வெளிப்பட வாய்ப்பில்லை. வே.வேங்கடராஜுலு ரெட்டியாரின் (1963: 90) கூற்று இந்த வகையில் இங்கே குறிப்பிடத்தக்கதாகும். கருதுக: "இலக்கண நூலார் சொற்கள் வழங்குமாற்றை நோக்கிக் கூறும் இயல்பினரேயன்றி, சொற்களின் தொல் லுருவத்தையும், அவற்றின் உண்மைத் தன்மையையும் ஆராய்ந்து கூறுதலை மேற்கொள்வாரல்லர். அப்பணியை மொழிநூலார் செய்தற்குரியர்". நமது ஆய்வு இதனைக் கருத்தில் கொண்டதாகும்.

*1.2* மொழியின் வளர்ச்சிப் போக்கில் நிகழும் மாற்றங்கள் பலவாகும். இந்த மாற்றங்கள் ஒலியனியல், உருபனியல்/சொல்லியல், தொடரனியல், பொருண்மையியல் முதலான நிலைகளில் நிகழ்வதாகும். ஆய்தம் தனது நேரிய ஒலிப்பை இழந்ததும், றகர வல்லொற்று ரகர இடையொற்றாகத் திரிந்ததும் பல பின் விளைவுகளை (எ-டு. சுவற்றில், வயிறுக்கு) ஒலியனியல் நிலையில் ஏற்படுத்தின. **அழம், *புழம், *மகம்* ஆகியவை *அழன், புழன், மக* எனத் திரிந்தது உருபனியல் நிலையில் நிகழ்ந்த மாற்றங்களாகும். *செய்திலன், செய்திலள், செய்திலர்* முதலான இறந்தகால எதிர்மறை வினைகளும் இக்காலத் தமிழில் வழக்கற்றுப்போயின. இவை தொடரனியல் நிலையில் நிகழ்ந்த மாற்றங்களாகும். இந்த மாற்றங்களைத் தவிர வேறு சில சொல்லியல் மாற்றங்களும் தமிழில் நிகழ்ந்துள்ளன. *நினைத்தொறும்* என்ற தொடரானது *நினைம்+தொறும்* என்ற அமைப்பினதாகும். இந்த அமைப்பில் நிகழும் *நினைம்* என்பது **நினையும்* (=நினைக்கும்) என்ற செய்யும் வாய்பாட்டு வினையின் ஒடுக்கமாகும். இதேபோல் *கேட்டொறும்* (<*கேண்ம்+தொறும்) என்ற தொடரில் நிகழும் *கேண்ம்* என்பதும் **கேளும்* (=கேட்கும்) என்ற செய்யும் வாய்பாட்டு வினையின் ஒடுக்கமாகும். வல்வினைக்குரிய பல

செய்யும் வாய்பாட்டு வினைகள் *தொறும்* என்ற கிளவியின் முன் நிகழ்கையில் மெல்வினைக்குரிய செய்யும் வாய்பாட்டு வினைகளாக நிகழும் நிலை தமிழில் காணப்படுகிறது.[1] கருதுக: *ஆர்த்தொறும்* (ஆர்ம்+, *ஆரும் (=ஆர்க்கும்)), *இழத்தொறும்* (இழம்+, *இழயும் (=இழக்கும்)), *உழத்தொறும்* (உழம்+, *உழயும் (=உழக்கும்)), *வியத்தொறும்* (வியம்+, *வியயும் (=வியக்கும்)), *ஈத்தொறும்* (ஈம்+, *ஈயும் (=ஈக்கும்)), *களித்தொறும்* (களிம்+, *களியும் (=களிக்கும்)), *விளித்தொறும்* (விளிம்+, *விளியும் (=விளிக்கும்)), கற்றொறும் (கன்ம்+, *கலும் (=கற்கும்)).

1.3 மேலே குறிப்பிட்ட எடுத்துக்காட்டுக்களுள் *தொறும்* என்பதன்முன் நிகழும் செய்ம் (<*செயும்) வாய்பாட்டு வினைகள் தொன்மொழிக்கு உரியனவாகும். எடுத்துக்காட்டாக, *களித்தொறும்* என்ற தொடரில் நிகழும் *களிம்* (<*களியும்) என்ற செய்ம் வாய்பாட்டு வினை கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இந்த வினையின் அடிநிலை வடிவமாகிய **களியும்* என்ற செயும் வாய்பாட்டு வினை தமிழில் களிக்கும் என்றே அமையும். களித்தொறும் என்ற தொடர் தமிழில் களிக்குந்தொறும் என்றே வழங்கும். இதனைக் கருத்தில் கொண்டு மேல் பத்தியில் குறிப்பிட்ட தொன்மொழிக்குரிய *தொறும்* ஈற்று வினைத்தொடர்கள் தமிழில் நிகழுமாற்றினைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

| | | தொன்மொழி வடிவம் | தமிழ் வடிவம் |
|---|---|---|---|
| 1 | (1) | ஆர்த்தொறும் (அகம். 12.6) | ஆர்க்குந்தொறும் |
| | (2) | இசைத்தொறும் (அகம். 283.7) | இசைக்குந்தொறும் |

---

1. தமிழில் *காண்டொறும்* (< காணுந்தொறும்) என்ற தொடரின் நிகழ்ச்சி பழந்தமிழில் காணப்படுகிறது. *அறிதொறும்* (< *அறிந்தோறும்), *செறிதொறும்* (<*செறிந்தோறும்) ஆகிய தொடர்களின் நிகழ்ச்சியைத் திருக்குறளில் (1110) காணலாம். இந்தத் தொடர்களில் நிகழும் *காண், அறி, செறி* ஆகிய வினைப்பகுதிகள் தமிழில் மெல்வினை சார்ந்த வினைத்திரிபு மரபுக்கு உரியவையாகும். தொன்மொழியில் இவற்றினடியாக அமையும் செயும் வாய்பாட்டு வினைகள், ஒற்றைச் சாளர வினைத்திரிபு மரபுக்கு உரியவையாகலின் *காண்டொறும், அறிதொறும், செறிதோறும்* ஆகியவற்றைத் தொன்மொழி வழக்குகளாகக் கொள்ளமுடியும் என்று தோன்றவில்லை. *நினைத்தொறும்* என்ற தொடரைக் கருத்தில் கொண்டு *காண்டொறும், அறிதொறும், செறிதொறும்* ஆகியவை தொன்மொழியில் **காட்டொறும், *அறித்தோறும், *செறித்தோறும்* என்று அமைவனவாகக் கருதலாம். ஆயினும் இந்தக் கருதுகோள் நுண்ணாய்வுக்கு உரியதாகும்.

| | | |
|---|---|---|
| (3) | இழத்தொறும் (குறள். 940) | இழக்குந்தொறும் |
| (4) | இறைந்தொறும் (பழ. 344) | இறைக்குந்தொறும் |
| (5) | உழத்தொறும் (குறள். 940) | உழக்குந்தொறும் |
| (6) | ஈத்தொறும் (பதி. 61.12, 13) | *ஈக்குந்தொறும் |
| (7) | களித்தொறும் (குறள். 1145) | களிக்குந்தொறும் |
| (8) | கற்றொறும் (பழ. 332) | கற்குந்தொறும் |
| (9) | கேட்டொறும் (நற். 157.7) | கேட்குந்தொறும் |
| (10) | சுவைத்தொறும் (புறம். 164.5) | சுவைக்குந்தொறும் |
| (11) | துடைத்தொறும் (ஐங். 358.3) | துடைக்குந்தொறும் |
| (12) | வியத்தொறும் (புறம். 217.9) | வியக்குந்தொறும் |
| (13) | விளித்தொறும் (நற். 157.5) | விளிக்குந்தொறும் |

மேலே தமிழ் வடிவங்களாகிய *தொறும்* ஈற்று வினைத்தொடர்களில் நிகழும் செயும் வாய்பாட்டு வினைகள் வல்வினைப் பிரிவைச் சார்ந்தவையாகும். ஆனால் தொன்மொழியில் மேற்படி வாய்பாட்டு வினைத்தொடர்களில் நிகழும் செயும் வினைகளை அவ்வாறு கொள்ளமுடியாது. காரணம் இந்த வினைகள் தமிழில் வல்வினை-மெல்வினை வினைத்திரிபு மரபுகள் தோன்றுவதற்கு முன்பே தொன்மொழியில் வழங்கியவையாகும்.

## 2.0 அடிநிலை அமைப்புகள்

2.1 *பழூஉப்பல், குழூஉக்குறி, பரூஉத்திரி* ஆகியவற்றின் நிலைமொழிகளை *பழு, குழு, பரு* எனக் கொள்வார் தொல்காப்பியர். ஆயினும் வரலாற்று நிலையில் இவை **பழுவு, *குழுவு, *பருவு* என்றே இனங்காணப்படும். *பழூஉப்பல், குழூஉக்குறி, பரூஉத்திரி* ஆகிய தொடர்களின் நிலைமொழிகள் வரலாற்றுக் கிளவிகளைக் கொண்டவையாகும். *குருவி, பருவி* ஆகியவை *குரீஇ, பரீஇ* எனத் திரிந்ததைப் போலவே *பழுவு, குழுவு, பருவு* ஆகியவையும் *பழூஉ, குழூஉ, பரூஉ* எனத் திரிந்தன. இதேபோல் *அதூஉம், வரூஉம், உண்பதூஉம்* ஆகியவையும் **அதுவும், *வருகும், *உண்பதுவும்* ஆகியவற்றின் திரிபுகளாகும். பழந்தமிழில் காணப்படும் செய்பு வாய்பாட்டு வினைகள் அனைத்தும் செய்யுபு வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகும். எ-டு: *நினையுபு* (கலி. 57. 22) > *நினைபு* (அகம். 298. 19), *வளைபு*. செய்கு வாய்பாட்டு மெல்வினைகள் அனைத்தும் இதேபோல் செய்யுகு வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்களாகும். எ-டு: *எரிக* (<எரிகு+அ) / *எரியுக* (<எரியுகு + அ. மலயாளம்). பேச்சுத் தமிழில் நிகழும் செ(ய்)யுது வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ்கால வினைகள் அனைத்தும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகும்.

2.2. பழந்தமிழில் நிகழும் பல வினையமைப்புக்கள் தொடர்பான அமைப்பாய்வு மறுபரிசீலனைக்கு உரியதாகும். *செய்மார், செய்தும், செய்கும், செய்மின், செய்மதி, செய்மோ, செய்திசின், செய்தமாறு* முதலான வாய்பாட்டு வினையமைப்புக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். இவையனைத்தும் *வினையடி+மார்/தும்/கும்/மின்/மதி/மோ, செய்து+ இசின், செய்த+மாறு* என மரபிலக்கணிகளால் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த அமைப்பாய்வானது வினைப்பகுதிகள் அல்லது வினையமைப்புக்கள் வழக்கில் நிகழ்வனவாக இருக்கவேண்டும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்ததாகும். ஆனால் மேற்குறிப்பிட்ட வாய்பாட்டு வினையமைப்புக்கள் அனைத்தும் (வரலாற்று நோக்கில்) பின்வருமாறு மாற்று ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டியவையாகும்.

| | வினையமைப்பு | மரபிலக்கண ஆய்வு | | மாற்றாய்வு |
|---|---|---|---|---|
| 2(1) | செய்மார் | செய்+மார் (தொல்.சொல்.சேனா. 7, 207) | | *செய்-ம்+ஆர் |
| (2) | செய்தும் | செய்+தும் | ( " 202) | *செய்+த்+உம் |
| (3) | செய்கும் | செய்+கும் | ( " 202) | *செய்+க்+உம் |
| (4) | செய்மின் | செய்+மின் | ( " 274) | *செய்ம்+இன் |
| (5) | செய்மதி | செய்+மதி | ( " 274) | *செய்ம்+அதி |
| (6) | செய்மோ | செய்+மோ | ( " 274) | *செய்ம்+ஓ |
| (7) | செய்திசின் | செய்தி+சின் | ( " 274) | *செய்து+இசின் |
| (8) | செய்தமாறு | செய்த+மாறு | (" 250, நச்252) | *செய்தம்+ஆறு |

செய்மார் வாய்பாட்டு வினைகளைச் செய்+மார் என்று அமைப்பாய்வு செய்வதற்குச் சேனாவரையர் கூறும் அமைதி (தொல். சொல். 7. உரை) ஏற்புடையதன்று. இதேபோல் செயன்மார் வாய்பாட்டு வினைகளைச் செய்வார் வாய்பாட்டு வினைகளின் எதிர்மறையாகக் கொள்ளும் சேனாவரையரின் ஆய்வும் (தொல். சொல். 207. உரை) ஏற்புடையதன்று. செயன்மார் வாய்பாட்டு வினைகள் செய்மார் வாய்பாட்டு வினைகளின் எதிர்மறைகளாகும்.

### 3.0 சார்புநிலை வினைப்பகுதிகள்

3.1. *பாய்ச்சல், காய்ச்சல்* ஆகியவை *பாய்ச்சு, காய்ச்சு* ஆகிய வினைப்பகுதிகளின் மீது தோன்றியவையாகும். இதேபோல் *அலசல், உரசல்* ஆகியவையும் *அலசு, உரசு* ஆகிய வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். ஆனால் இங்கே குறிப்பிட்டது

போன்ற பல வினைப்பகுதிகள் *அல்* விகுதியின் முன் மட்டுமே நிகழும் நிலையும் தமிழில் காணப்படுகிறது. இத்தகைய வினைப் பகுதிகள் சார்புநிலை வினைப்பகுதிகள் எனக் கருதப்படும். எ-டு: 1. *அலைச்சல்* (*அலைச்சு-), *எரிச்சல்* (*எரிச்சு-), *துணிச்சல்* (*துணிச்சு-), *குறைச்சல்* (*குறைச்சு-), *விளைச்சல்* (*விளைச்சு-), *நீச்சல்* (*நீச்சு-), *கூச்சல்* (*கூச்சு-), *மேய்ச்சல்* (*மேய்ச்சு-), *புகைச்சல்* (*புகைச்சு-), *தீய்ச்சல்* (*தீய்ச்சு-), *இரைச்சல்* (*இரைச்சு-). 2. *விரிசல்* (*விரிசு-), *கிழிசல்* (*கிழிசு-), *பூசல்* (*பூசு-), *கடைசல்* (*கடைசு-), *நெரிசல்* (*நெரிசு-), *கழிசல்* (*கழிசு-), *ஊசல்* (*ஊசு-), *ஊஞ்சல்* (*ஊஞ்சு-, ஊஞ்ச்உ (தெ)), *தடங்கல்* (*தடங்கு-). *தாவல், மோதல்* ஆகியவை *தாவு, மோது* ஆகிய வினைப்பகுதிகளைக் கொண்டவையாகும். இந்த வரிசையிலும் தமிழில் சார்புநிலை வினைப்பகுதிகள் காணப்படுகின்றன. எ-டு: *காவல்* (*காவு-), *ஆவல்* (*ஆவு-), *காதல்* (*காது-).

3.2. வல்வினை மற்றும் மெல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளும், வல்வினை சார்ந்த செய்பு வாய்பாட்டு வினைப்பகுதிகளும் சார்பு வினைப்பகுதிகளாகக் கருதத்தக்கவை யாகும். எ-டு: *தருகுவர்/தருகும்/(தருக)/தருகின்று* (*தருகு-), *கொடுக்குவர்/கொடுக்கும்/கொடுக்க/கொடுக்கின்று/கொடுக்கின்* (*கொடுக்கு-), *கொடுப்ப/கொடுப்பின்* (*கொடுப்பு-). நன்னூலார் *கின்று* என்பதை நிகழ்கால இடைநிலையாக இனங்காண்பார். இதன் விளைவாக, செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளை அறிய முடியாமல் போயிற்று. *செய்கின்று* வாய்பாட்டு வினையமைப்புகள் உண்மையில் *செய்கு+இன்று* வாய்பாட்டு அமைப்பினவாகும். இந்த அமைப்பில் *-இன்று-* என்பது நிகழ்கால இடைநிலையாகத் துணியப்படும். மரபிலக்கண அல்லது வண்ணனை இலக்கண ஆய்வுகள் சில சமயங்களில் வரலாற்று உண்மைகளை மறைத்து விடுவதற்குச் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளே சான்றாக அமைகின்றன. சார்பு நிலை வினைப்பகுதிகள் பொதுவாகச் சில குறிப்பிட்ட அமைப்பியல் சூழல்களில் மட்டுமே நிகழ்கின்றன. செய்கு, செய்பு வாய்பாட்டு வினைப்பகுதிகள் இத்தகையவை யாகும். ஆயினும் அகராதித் தொகுப்பில் இங்கே குறிப்பிட்ட சார்பு வினைப்பகுதிகளும் இடம்பெற வேண்டும். எடுத்துக் காட்டாக, *துணிச்சு, *எரிச்சு, *விரிசு, *ஊஞ்சு, *தடங்கு, *கொடுக்கு, *கொடுப்பு ஆகியவற்றைக் கருத்தில் கொள்ளலாம்.

### 4.0. மையீற்றுப் பெயர்கள்

4.1. தமிழில் ஏராளமான மையீற்றுச் சொற்கள் காணப்படு கின்றன. ஒப்புமையாக்கத்தின் தாக்கத்தால் தோன்றிய மையீற்றுச்

சொற்களைத் தவிர ஏனையவை அனைத்தும் ஐயீற்றுச் சொற்களாகவே கருதப்படும். ஐயீற்றின் முன் நிகழும் மகரம் எழுத்துச் சாரியையாகக் கருதப்படும்.[2] எடுத்துக்காட்டாக *ஒருமை, தாய்மை* ஆகிய சொற்கள் **ஒரு-ம்+ஐ, *தாய்-ம்+ஐ* என்ற அமைப்பினவாக (வரலாற்று நிலையில்) கருதப்படும். *ஒருவன்/ஒருவர்* ஆகியவற்றில் நிகழும் வகர மெய் மகரத்தின் திரிபாகக் கருதப்படும். இதேபோல் *தாய்க்கு* என்பதில் நான்கன் உருபின் முன் நிகழும் ககர மெய்யும் மகரத்தின் திரிபாகக் கொள்ளத் தக்கதாகும். மரபிலக்கணிகள் மையீற்றுச் சொற்களாகக் கருதும் பல சொல்லமைப்புக்கள் மேலே குறிப்பிட்ட மாற்று ஆய்வுக்கு உரியவையாகும். இத்தகைய ஆய்வின் மூலம் சொல்லியல் தொடர்பான பல வரலாற்று உண்மைகளை அறிந்து கொள்ள முடியும்.

4.2. மையீற்றனவாக மரபிலக்கணிகள் இனங்காணும் சொற்கள் ஐயீற்றனவாக வரலாற்று நிலையிற் கருதத் தக்கவையாகலின் இவற்றில் நிகழும் மகர ஈறு அகச்சந்தியிலும் புறச்சந்தியிலும் பல்வேறு திரிபுகளுக்கு இலக்காகின்றது. மகரம் கெடுதலும் இந்தத் திரிபுகளுள் அடங்கும். அகச்சந்தியில் மகர ஈற்றினை எழுத்துச் சாரியையாகக் கருத வாய்ப்பில்லை. ஆனால் புறச்சந்தியில் அதாவது பதப்புணர்ச்சியில் மேற்படி ஈற்றினை எழுத்துச் சாரியையாகக் கருதலாம். எடுத்துக்காட்டாக, *கூர்மை* என்ற சொல்லில் நிகழும் மகரம் *கூர்ங்கல்* (< *கூர்-ம்+கல்) என்ற தொடரில் எழுத்துச் சாரியையாக நிகழ்வதைக் காணலாம். *பெருமை* என்ற சொல்லில் நிகழும் மகரமானது *பெருவெளி* (<*பெரும்+வெளி) என்ற தொடரில் கெடுவதைக் காணலாம். ஆனால் *பெருங்குன்று* என்ற தொடரில் மேற்படி மகரம் வருமொழி வல்லொற்றின் இனமெல்லொற்றாகத் திரிந்தமைகின்றது. இங்கே *பெரும்* என்பது *பெருமை* என்ற சொல்லில் நிகழும் நிலைமொழியாகும். *பெருமை* என்பதையும் *பெரும்* என்பதையும் தனித்தனியாக ஆராயமுடியாது. அதாவது *பெரும்* என்ற குறிப்பு வினையுடன் ஐ என்னும் உறுப்பு சேர்ந்து *பெருமை* என்ற

---

2. இந்தக் கூற்று *அருமை, பெருமை, சிறுமை* முதலான சொற்களில் நிகழும் மகர மெய்க்குப் பொருந்தாது. இவற்றில் நிகழும் *அரும், பெரும், சிறும்* ஆகியவை குறிப்புப் பொதுவினைமுற்றுக்களாகத் தொடக்கத்தில் நிகழ்ந்தவையாகும். இவற்றைக் குறிப்புப் பெயரெச்சங்களாகக் கருதமுடியாது. ஏனெனில் இவற்றையடுத்து நிகழும் ஐயென்னும் உறுப்பானது இலக்கண விகுதியாகக் கருதத் தக்கதாகும்.

வடிவம் தோற்றம் கொள்கிறது என்பது நமது கருதுகோளாகும். ஐயீற்றுச் சொற்களின் பகுதியாக நிகழும் மகர ஈற்றுச் சொற்கள் அகச்சந்தியிலும் புறச்சந்தியிலும் நிகழுமாற்றினைப் பிற்சேர்க்கையில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

## 5.0 வியங்கோள் காட்டும் வெளிச்சம்

5.1 தமிழில் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகள் ஒருவகை வாய்பாட்டு வடிவினவாகும். இவற்றின் எதிர்மறை *செய்யற்க* (<*செய்-அல்+க்க) என்ற வாய்பாட்டு வடிவினவாகத் தோன்றினாலும் சில அமைப்பியல் சிக்கல்களை இங்கே எதிர்கொள்ள வேண்டியுள்ளது. மெல்வினை சார்ந்த *செய்யற்க* வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகள் வல்வினை சார்ந்த வினைகளுக்கு உரியனவாகத் தோன்றுகின்றன. *பறிக்க, கொடுக்க, சேர்க்க, தேய்க்க, கற்க, கேட்க* முதலானவை வல்வினை சார்ந்த வியங்கோள் வினைகளாகும். *வருக, செல்க, தேய்க, சேர்க, உண்க* முதலானவை மெல்வினை சார்ந்த வியங்கோள் வினைகளாகும். மெல்வினை சார்ந்த செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் எதிர்மறை வினைகள் *செய்யல்க* வாய்பாட்டினவாய் அமைய வேண்டும். ஆனால் இத்தகைய வாய்பாட்டு வினைகள் தமிழில் காணப்படவில்லை. தமிழில் காணப்படும் *செய்யற்க* வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகள் அடிப்படையில் வல்வினைக்கு உரியவையாகலின் இவற்றின் உடன்பாட்டு வினைகள் *பறிக்க, அழைக்க, அளிக்க, குடிக்க, சேர்க்க* என அமையவேண்டும். ஆயினும் இவற்றுக்கு நேரான *அளியற்க, *பறியற்க, *அழையற்க என்பதுபோன்ற வடிவில் அமைந்த எதிர்மறை வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சியும் தமிழில் காணப்படவில்லை. இதே போல் *அளியல், *பறியல், *அழையல், *குடியல் முதலான வல்வினை சார்ந்த செயல் வாய்பாட்டு எதிர்மறை மற்றும் உடன்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் தமிழில் காணப்பட வில்லை. இதனின்றும் செய்யற்க வாய்பாட்டு வினைகளைத் தொன்மொழியின் எச்சங்களாகக் கருதத் தோன்றுகிறது. வியங்கோள் வினைகள் தொடர்பான விரிவான ஆய்வினை இத்தொகுப்பின் இறுதிக் கட்டுரையில் காண்க.

5.2 *மறியல், குளியல், சமையல், படையல், பொரியல், அவியல்* ஆகிய செயல் வாய்பாட்டு உடன்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி தமிழில் காணப்படுகின்றது. இவற்றுள் *மறியல், குளியல், சமையல்* ஆகியவற்றின் நிகழ்ச்சியை *மறியல் போராட்டம், குளியல் அறை, சமையல் வேலை* ஆகிய தொடர்களில் காணலாம். ஆயினும்

இவற்றில் உள்ள செயல் வாய்பாட்டு வினைகளைத் தொன்மொழியின் எச்சங்களாகவே தமிழில் குறிக்கவேண்டும். இந்த வினைகள் வல்வினை-மெல்வினை சார்ந்த இருவகை வினைத்திரிபு மரபுகள் தமிழில் தோன்றுவதற்கு முன்பே தொன்மொழியில் ஒற்றைச் சாளர வினைத்திரிபு மரபு மட்டும் போற்றப்பட்ட ஒரு காலக்கட்டத்தில் வழக்கில் இருந்தவையாகும். *மறியல், குளியல், சமையல், படையல், பொரியல், அவியல்* ஆகியவற்றின் வினைப்பகுதிகளின் மீதமைந்த *மறியல், குளியல், சமையல், படையல், பொரியல், அவியல்* முதலானவற்றில் காணப்படும் வினைத்திரிபு மரபு தமிழில் வல்வினைக்குரியதல்ல. தமிழில் இவை *மறிக்கல், குளிக்கல், சமைக்கல், படைக்கல், பொரிக்கல், அவிக்கல்* என அமையவேண்டும். இத்தகைய வல்வினை சார்ந்த வினைகளின் நிகழ்ச்சியானது தமிழில் *செய்யலாம்* வாய்பாட்டு வினைகளில் மட்டுமே காணப்படுகின்றது. எ-டு. *மறிக்கலாம், குளிக்கலாம், சமைக்கலாம், படைக்கலாம், பொரிக்கலாம், அவிக்கலாம்* இதனின்றும் வல்வினை-மெல்வினை சார்ந்த வினைத்திரிபு மரபுகள் தமிழில் தோன்றுவதற்கு முன்பு, அதாவது தொன்மொழியிலிருந்து தமிழ் தனிமொழியாகப் பிரிவதற்கு முன்பு *மறியல், குளியல், சமையல், படையல், பொரியல், அவியல்* என்ற வடிவினவாகவே வல்வினைகளின் *செயல்* வாய்பாட்டு வடிவங்களும் வழக்கில் இருந்தன என்ற உண்மை பெறப்படுகின்றது.

5.3 *குடி, பறி, உரை, கேள், கல்* முதலானவை தமிழில் வல்வினை சார்ந்தவையாயினும் தொன்மொழியில் இவற்றினடியாகத் தோன்றிய செயல் மற்றும் செய்யும் வாய்பாட்டு வினைகள் **குடியல்/*குடியும், *பறியல்/*பறியும், *உரையல்/*உரையும், *கேளல்/*கேளும், *கலல்/*கலும்* என்று நிகழ்ந்தனவாதல் வேண்டும். தமிழில் காணப்படும் *கேளாமல், கல்லாமல், நில்லாமல், இராமல்* முதலானவற்றின் நிகழ்ச்சியும், தொல்காப்பியத்தில் பயின்று வழங்கும் *நிலையல்/நிலையும், நினையுங்காலை* என்ற தொடரில் நிகழும் *நினையும்* ஆகியவற்றின் நிகழ்ச்சியும் இந்த உண்மையை வலியுறுத்துவனவாக உள்ளன. அதனால்தான் *தேய்க/தேய்க்க, தணிக/தணிக்க, சேர்க/சேர்க்க* என்ற இணைகளுக்கு நேரான எதிர்மறை இணைகளின் நிகழ்ச்சி தன்வினை-பிறவினை என்ற பாங்கில் முழுமைபெறாமற் போய்விட்டது. எனவே *தேயற்க, தணியற்க, சேரற்க* ஆகியவை தன்வினைக்குரியவையா, பிறவினைக்குரியவையா, அல்லது இரண்டுக்கும் உரியவையா என்ற குழப்பம் நிலவுகிறது. அதே சமயத்தில் **குடிக்கற்க, *பறிக்கற்க, *கேட்கற்க, *கற்கற்க, *நிற்கற்க* முதலானவற்றின் நிகழ்ச்சியும்

தமிழில் காணப்படவில்லை. **குடியற்க*, **பறியற்க* முதலானவை கோட்பாட்டு நிலையில் ஏற்புடையவை யாயினும் இவற்றின் நிகழ்ச்சியும் தமிழில் இயல்பானதாக அமையவில்லை.

### 6.0 தொடர் நிகழ்ச்சியும் செயல் முதிர்வும்

6.1 தமிழில் தொடர் நிகழ்ச்சி வினைகள் (Continuous/Progressive Participles) *செய்துகொண்டு* என்ற வாய்பாட்டிலும் செயல்முதிர்வு வினைகள் (Completive Verbs) *செய்துவிடு* வாய்பாட்டிலும் அமைகின்றன. ஆனால் பேச்சுவழக்கில் குமரி மாவட்டக் கிளை மொழியிலும் பார்ப்பனக் கிளைமொழியிலும் இந்த வாய்பாட்டு வடிவங்கள் வேறு வாய்பாட்டு வகையினவாகக் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, பார்ப்பனத் தமிழில் *பாடிண்டு* என்பது *பாடிக்கொண்டு* என்பதற்கு நேரான வடிவமாகும். *பாடிண்டு* என்பது பழந்தமிழில் வழங்கும் *பாடின்று* என்ற இறந்தகாலப் பொதுவினைமுற்றின் (Past Impersonal Finite Verb) திரிபாகும். பின்வரும் எடுத்துக்காட்டைக் கருத்தில் கொள்க.

> 3. நீத்து நீடினர் என்னும் புலவி
> உட்கொண்டு ஊடின்றும் இலையோ (நற். 237.5)

இந்த எடுத்துக்காட்டில் *ஊடின்று* என்பது இறந்தகாலப் பொது வினைமுற்றாகும். *பாடிண்டு* வாய்பாட்டுத் தொடர் நிகழ்ச்சி வினையின் தாக்கத்தால் செய்துண்டு வாய்பாட்டு வினைகளும் பார்ப்பனத் தமிழில் தோன்றி நிகழலாயின.[3] கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இத்தகைய வினைகள் நிகழ்வெச்ச வினைகளாக (Present Participles) அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக, *ஓதுத்து* (=படித்துக்கொண்டு) என்பது கன்னடத்திலும், *பாடுத்ஊ* < **பாடுத்உ-வு* (=பாடிக் கொண்டு) என்பது தெலுங்கிலும் நிகழ்காலத்துக்குரிய வினையெச்சங்களாகும். இத்தகைய வினையெச்சங்கள் தமிழில் காணப்படவில்லை. ராபர்ட் கால்டுவெல்லும் (1961:487) இதனைச் சுட்டுகிறார். பழந்தமிழில் காணப்படும் செய்யூஉ வாய்பாட்டு வினைகள் தொடக்கத்தில் அதாவது முந்து தமிழில் (Pre Tamil) நிகழ்கால வினையெச்சங்களாக நிகழ்ந்திருக்கலாம்.

---

3. பாடிண்டு வாய்பாட்டு வினைகள் பாடி+ண்டு என்று பிறழாய்வு செய்யப்பட்டு *-ண்டு* என்ற வடிவம் செய்து வாய்பாட்டு வினைகளை யடுத்தும் விரிவுபடுத்தப்பட்டுச் செய்துண்டு வாய்பாட்டு வினைகள் தோற்றம் கொண்டன.

6.2. *ஆடிற்று, பாடிற்று* முதலான வினைகள் பொதுவினை முற்றுக்களாகவும் நிகழும் நிலை காணப்படுகின்றது. *சொல்லிற்றிலன்* (புறம். 150. பழைய உரை) என்பதில் *சொல்லிற்று* என்பது பொது வினைமுற்றாகும். *யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்* (தொல்.சொல். சேனா. 106) என்ற நூற்பாவில் *கூறிற்று* என்பதும் பொதுவினைமுற்றாகும். குமரித் தமிழில் தொடர் நிகழ்ச்சி வினையும், செயல் முதிர்வு வினையும் *பாடிற்று* என்பதுபோன்ற இறந்தகாலப் பொதுவினைமுற்றின் திரிபுகளாகக் காணப்படுகின்றன. ஐசக் அருமைராஜனில் (1975) இவற்றின் நிகழ்ச்சியைக் காணலாம். பின்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

**தொடர் நிகழ்ச்சி வினை**

4(1) குளிச்சிற்றிருக்கா (ப. 2) "குளித்துக்கொண்டிருக்கிறாள்"

(2) ஒனக்குக் கொஞ்சம் கடலையும் வாங்கிற்று (=வாங்கிக் கொண்டு) வா (ப. 3)

(3) நானே போயி ... ... ... ஒரு சேல வாங்கிற்று (=வாங்கிக் கொண்டு) வாரேன் (ப. 52)

(4) பாலையா ... ... ... தூக்கிற்று (=தூக்கிக்கொண்டு) போயிற்றான் (ப. 72)

(5) ரெண்டு நாரு பெட்டியும் எடுத்துற்று (=எடுத்துக்கொண்டு) வால (ப.84)

(6) கடன் ஏறிற்றே (=ஏறிக்கொண்டே) போவு (ப. 90)

(7) டாக்டர கூட்டிற்று (=கூட்டிக்கொண்டு) வாரேன் (ப. 168)

**செயல் முதிர்வு வினை**

5(1) பொஸ்தகம் வாங்காம வராண்டாம்னு வாத்தியாரு சொல்லிற்றாரு (=சொல்லிவிட்டார்) (ப.3)

(2) கொத்தனாரும் வேறு ரெண்டு மூணு பேரும் அங்க கூடிற்றாங்க (=கூடிவிட்டார்கள்) (ப. 4)

(3) ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிற்றாங்க (=கொண்டு போய்விட்டார்கள்) (ப. 4)

(4) லைட்டெல்லாம் வயலுக்குள்ள நொழஞ்சிற்று (=நுழைந்து விட்டது) (ப. 33)

(5) மீனக் கழுவிற்றேன் (=கழுவிவிட்டேன்) (ப. 49)

(6) எனக்க தாலிய வித்துற்றேன் (=விற்றுவிட்டேன்) (ப. 51)

(7) பாலையா ... ... ... தூக்கிற்று போயிற்றான் (=போய் விட்டான்) (ப. 72)

(8) இதுக்குள்ள மறந்துற்றானே (=மறந்துவிட்டானே) (ப. 130)

(9) முத்தையா வீடு வந்துற்று (=வந்துவிட்டது) (ப. 146)

(10) அப்பாகிட்ட சொல்லிற்று (=சொல்லிவிட்டு) வரட்டா? (ப.5)

(11) ஏ, மேரி வேணும்னா போயிற்று (=போய்விட்டு) வா (ப. 7)

*ஆடிற்று, பாடிற்று* முதலான பொதுவினைமுற்றுக்களில் நிகழும் *-இற்று* என்பது துகர ஈற்றுச் செய்து வாய்பாட்டு வினைகளை யடுத்தும் ஒப்புமையாக்கத்தின் தாக்கத்தால் நிகழும் நிலைமை மேல் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.[4]

மையீற்றுப் பெயர்கள் மகரத்தைத் தொடர்ந்த ஐயீற்றுப் பெயர்களாகும். இது வரலாற்று உண்மை. பிறழாய்வின் காரணமாக இவை மையீற்றனவாகக் கருதப்படுகின்றன. மையீற்றுப் பெயர்கள் சில ஐயீற்றனவாக இங்கே மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

---

4. பொதுப் பேச்சுத் தமிழில் (Standard Spoken Tamil) காணப்படும் *பாடிட்டு* வாய்பாட்டு வினைகள் *பாடிற்று* வாய்பாட்டு இறந்தகாலப் பொது வினைமுற்றுக்களின் (Impersonal Finite Verbs) திரிபாகும். *பாடிவிட்டு, பாடிக்கொண்டு* ஆகிய வாய்பாட்டு வினைகளின் பொருண்மையைக் குறிக்கும் *பாடிட்டு* வாய்பாட்டு வினைகளின் தாக்கத்தால் செய்துட்டு/செய்திட்டு வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் பொதுப்பேச்சுத் தமிழில் காணப்படுகின்றது. இதே போல் பொதுப்பேச்சுத் தமிழில் *பாடிகிட்டு* (<பாடிக்கிட்டு), *செய்துகிட்டு* (<செய்துக்கிட்டு) வாய்பாட்டுத் தற்சுட்டு வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படுகின்றது. *பாடிகிட்டு* வினைகள் *பாடி+கிட்டு* எனப் பிறழாய்வு செய்யப்பட்டு இந்த அமைப்பில் நிகழும் *-கிட்டு* என்பது செய்து வாய்பாட்டு வினைகளை யடுத்து விரிவுபடுத்தப்பட்டுச் *செய்துகிட்டு* வாய்பாட்டு வினைகள் தோற்றம் கொண்டன. *பாடிகிட்டு* வாய்பாட்டு வினைகள் *பாடிகு+ இட்டு* என்ற நேரிய அமைப்பினவாகும். இந்த அமைப்பில் நிகழும் *-இட்டு* என்னும் வடிவம் *பாடிட்டு* (<பாடிற்று) என்பதினின்றும் விரிவாக்கத்தின்மூலம் பெறப்பட்டதாகும். பாடிகு என்பது பாடிக்கு என்பதன் ஒடுங்கிய வடிவமாகும். *பாடிக்கு* (=பாடிக்கொள்) என்பது *பாடு+இக்கு* என்ற அமைப்பினதாகும். இந்த அமைப்பில் தற்சுட்டு வினையாக நிகழும் *இக்கு* என்பது பழந்தமிழில் அருகி வழங்கும் *செய்தைக்க* (<செய்து+ஐக்கு-அ) வாய்பாட்டு வினைகளில் வழக்கற்றுப்போன *ஐக்கு* என்னும் இருப்பு/ஆக்க வினையின் திரிபாகும். பொருண்மைத் திரிபின் காரணமாக *இக்கு* என்பது தற்சுட்டு வினையாக நிகழ்கிறது. இது தொடர்பான கூடுதல் செய்திகளை இந்த நூலின் முன்னுரையிலும், இறுதிக் கட்டுரையாக இடம்பெற்றுள்ள *வாழியசெந்தமிழ்* என்ற கட்டுரையிலும் காண்க.

## பிற்சேர்க்கை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அணிமை | *அணிம் | அணித்து (<அணிம்+த்உ)[5] | -------- |
| 2. | அருமை | *அரும் | --------- | அரும்பணி |
| 3. | இளமை | *இளம் | இளவல் (<இளம்+அல்) | இளம்பருவம், இளவேனில் |
| 4. | இறைமை | *இறைம் | இறைவன் (<இறைம்+அன்) | இறைப்பணி |
| 5. | இனிமை | *இனிம் | இனிப்பு (<இனிம்+ப்உ) | -------- |
| 6. | உரிமை | *உரிம் | உரித்து (<உரிம்+த்உ) | உரிப்பொருள் |
| 7. | எழுமை | *எழும் | எழுவர் (<எழும்+அர்) | எழுபது (<எழும்+பது) |
| 8. | ஒருமை | *ஒரும் | ஒருவன் (<ஒரும்+அன்) | ஒருக்கால் 'ஒருவேளை' |
| 9. | கடமை | *கடம் | ?கடவது (<கடம்+அது) | கடப்பாடு, கற்புக்கடம் |
| 10. | கடுமை | *கடும் | கடுப்பு (<கடும்+ப்உ) | கடும்போர் |
| 11. | கயமை | *கயம் | கயவன் (<கயம்+அன்) | -------- |
| 12. | கருமை | *கரும் | கருப்பு (<கரும்+ப்உ) | கருங்குவளை |
| 13. | கிழமை | *கிழம் | கிழவன் (<கிழம்+அன்) கிழத்தி (<கிழம்+த்இ) | -------- |
| 14. | குறுமை | *குறும் | -------- | குறந்தொகை, குறுநகை |
| 15. | கூர்மை | *கூர்ம் | -------- | கூர்ங்கல் |
| 16. | கொடுமை | *கொடும் | -------- | கொடுஞ்சொல் |
| 17. | கொழுமை | *கொழும் | க்ரொவ்வு (<*கொழுவு) (தெ) | கொழுங்கொடி |
| 18. | சிறுமை | *சிறும் | சிறுமி (< சிறும்+இ), சிறுவன் (<சிறும்+அன்) | சிறுக்கன்று (நாலா. 174) |
| 19. | செம்மை | *செம் | செம்பு (<செம்+பு) | செங்குவளை, செவ்வாழை |
| 20. | சேய்மை | *சேய்ம் | சேய்த்து (<சேய்ம்+த்உ) | ------- |
| 21. | தலைமை | *தலைம் | தலைவன் (<தலைம்+அன்) | தலைச்சங்கம் |

5. சில விகுதிகளில் வல்லொற்றுக்களின் நிலையொலித் தன்மையை (Voiceless Character) விளக்கும்பொருட்டு வல்லொற்று ஊர்ந்த உயிர்மெய் யெழுத்துக்கள் மெய்யும் உயிருமாகப் பிரித்து இந்த ஆய்வில் குறிக்கப் பெற்றுள்ளன. *தீங்கு, தீம்பு* ஆகியவற்றில் *கு, பு* ஆகிய உயிர்மெய் விகுதிகளில் நிகழும் வல்லொற்றுக்கள் அலையொலித்தன்மையினவாகலின் (Voiced Character) அவை மெய்யும் உயிருமாகப் பிரித்துக் காட்டப்படவில்லை.

| | | | |
|---|---|---|---|
| 22. திறமை | *திறம் | திறவோர் (<திறம்+ஓர்) | ------- |
| 23. தீமை | *தீம் | தீங்கு (<தீம்+கு),<br>தீம்பு (<தீம்+பு) | தீச்செயல் |
| 24. பசுமை | *பசும் | -------- | பசும்புல் |
| 25. பசுமை | *பசும் | பசும்ப்உ/பசுப்உ<br>(தெ)மஞ்சள் | பசும்பொன்<br>'தங்கம்' |
| 26. பருமை | *பரும் | பருமன் (<பரும்+அன்) | பருப்பொருள் |
| 27. பழமை | *பழம் | -------- | பழங்காலம்,<br>பழமொழி |
| 28. புலமை | *புலம் | புலவன் (<புலம்+அன்) | புலநெறி |
| 29. பெருமை | *பெரும் | பெரப்பம் (<பெரும்+ப்உ-) | பெரும்பணி |
| 30. புதுமை | *புதும் | புதுவது (<புதும்+அது) | புதுப்பாடல் |
| 31. பொதுமை | *பொதும் | -------- | பொதுப்பணி |
| 32. பொறுமை | *பொறும் | ?பொறுப்பு | --------- |
| 33. மடமை | *மடம் | மடவன் (<மடம்+அன்),<br>மடத்தி (<மடம்+த்இ) | மடச்செயல் |
| 34. முதுமை | *முதும் | -------- | முதுவேனில் |
| 35. முழுமை | *முழும் | முழுவதும் (<முழும்+அது) | முழுப்பயன் |
| 36. வளமை | *வளம் | வளப்பம் (<வளம்+ப்உ-) | வளநாடு |
| 37. வறுமை | *வறும் | வறுவல் (<வறும்+அல்),<br>வறுவு (தெ) 'வற்றல்' | வறும்பூ<br>(மணி. 18.20) |
| 38. வெண்மை | *வெண்ம் | வெளுப்பு (<வெளும்+ப்உ)<br>(<*வெளும்) | வெண்குடை<br>(வெண்<வெண்ம்) |
| 39. வெம்மை | *வெம் | வெம்பு (<வெம்+பு),<br>வெப்பம் (<வெம்+ப்உ-) | வெங்கனல்<br>வெவ்வளி<br>(வெவ்+வளி) |
| 40. வெறுமை | *வெறும் | ---------- | வெறும்பேச்சு |



# 2. வினாக்கள்

### *1.0 வினா வகைகள்*

*1.1* தமிழில் ஒரு வாக்கியத்தை இரண்டு வகையான வினாக்களுக்கு உட்படுத்தலாம். முதல் வகை வினா எவன், எவள், எவர்/யார், எது, எவை, எந்த, ஏன், எது, எப்படி, எங்கே, எப்போது, என்ன முதலிய வினாச்சொற்களைக் கொண்டு அமையும். இதனைப் பின்வரும் வாக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு *(2)* முதல் *(7)* வரை உள்ளது போல் அமைத்துக் காட்டலாம்.

*(1)* ஆனந்தவல்லி நேற்று ஆடிவீதியில் அருமையாகப் பாடினாள்

*(2)* (அ) யார் நேற்று ஆடிவீதியில் அருமையாகப் பாடியது?
(ஆ) எவள் நேற்று ஆடிவீதியில் அருமையாகப் பாடினாள்?

*(3)* ஆனந்தவல்லி எப்போது ஆடிவீதியில் அருமையாகப் பாடினாள்?

*(4)* ஆனந்தவல்லி நேற்று எந்த வீதியில் அருமையாகப் பாடினாள்?

*(5)* ஆனந்தவல்லி நேற்று எங்கே அருமையாகப் பாடினாள்?

*(6)* ஆனந்தவல்லி நேற்று ஆடிவீதியில் எப்படிப் பாடினாள்?

*(7)* ஆனந்தவல்லி நேற்று ஆடிவீதியில் என்ன செய்தாள்?[1]

*1.2* மேற்குறிப்பிட்ட ஒவ்வொரு வினா வாக்கியமும், முதல் வாக்கியத்தில் நிகழும் ஒவ்வொரு சொல்லையும் தனித்தனியே வினவுவதாக அமைந்துள்ளது. இது ஒரு முறை. முதல்

---

1. தெரிநிலை வினைமுற்றுக்களை **என்ன செய்**-என்ற வாய்பாட்டு வினாக்களுக்கு உட்படுத்துகையில், மேற்படி வினைமுற்றுக்களைத் தழுவி நிற்கும் (குறிப்பு) வினையெச்சங்களும் இவ்வினாக்களுக்கு உட்படுகின்றன. எடுத்துக்காட்டாக **மாதவன் மாதவியை அணைத்து** முத்தமிட்டான் என்ற வாக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு **மாதவன் மாதவியை** என்ன **செய்தான்?** என்ற வினாவை எழுப்புகையில் இதற்கு விடையாக **(மாதவன் மாதவியை) அணைத்து முத்தமிட்டான்** என்பது அமையும். மேற்படி வினாவுக்குரிய விடையில் வினையெச்சமும் பொருந்தி நிற்பதைக் காணலாம். ஆயினும் வினைமுற்றுக்களைத் தழுவி நிற்கும் (குறிப்பு) வினையெச்சங்கள் மேற்படி வினாக்களுக்குரிய விடைகளில் நிகழ்ந்தேயாக வேண்டும் என்று நியதியில்லை.

வாக்கியத்தில் நிகழும் எல்லாச் சொற்களையும் ஒரே சமயத்தில் வினவுவதாக அமைவது இன்னொரு முறை. இதனைக் கீழே காணலாம்.

(8) எவள் எப்போது { எந்த வீதியில் / எங்கே } (எப்படி) என்ன செய்தாள்?

1.3 இவ்வாறு தனி வினாச் சொற்களைக் கொண்டு அமையும் முதல் வகை வினாக்களை **எவ்வென்** வினாக்கள் எனக் குறிப்பிடலாம்.[2] இத்தகைய வினாக்களுக்கு விடையாக அமையும் சொற்கள் அறிந்த ஒன்றாகவோ அறியப்படாத ஒன்றாகவோ இருக்கும். அறிந்த ஒன்றாக இருந்தால் (2) முதல் (7) வரை உள்ள வினாக்களுக்குரிய விடைகள் முதல் வாக்கியத்தினின்றும் பெறப்படும். அறியாத ஒன்றாயின் மேற்படி வினாக்களுக்குரிய விடைகள் கீழே குறிப்பிட்டவை போல் இருக்கும்.

(9) யாரோ/எவளோ.............................. பாடினாள் (2)

(10) ஆனந்தவல்லி எப்போதோ.............................பாடினாள் (3)

(11) ஆனந்தவல்லி....எந்த வீதியிலோ பாடினாள் (4)

(12) ஆனந்தவல்லி.....எங்கோ.....பாடினாள் (5)

(13) ஆனந்தவல்லி.....எப்படியோ.....பாடினாள் (6)

(14) ஆனந்தவல்லி.....என்னவோ செய்தாள் (7)

1.4 இரண்டாம் வகை வினாக்கள் ஆமாம்/இல்லை என்ற விடைகளைத் தோற்றுவிப்பனவாக அமையும். தமிழில் இத்தகைய வினாக்கள்-ஆ என்னும் உருபன் மூலம் உணர்த்தப்படும். இம்முறையைக் கொண்டு முதலாம் வாக்கியத்திலிருந்து பின்வரும் வினாக்களைப் பெறலாம்.

(15) ஆனந்தவல்லியா...................பாடினாள்?

(16) ஆனந்தவல்லி நேற்றா.............................பாடினாள்?

(17) ஆனந்தவல்லி..................ஆடி வீதியிலா பாடினாள்?

(18) ஆனந்தவல்லி.....................அருமையாகவா பாடினாள்?

(19) ஆனந்தவல்லி.........................பாடினாளா?

## 2.0 இருவகை வினாவும் நிகழும் தொடரன்

2.1 மேலே (15) முதல் (19) வரையுள்ள வாக்கியங்களில் ஆ. என்னும் உருபன் வினாப் பொருண்மையை உணர்த்தி நிற்கின்றது.

---

2. எ, ஏ, யா ஆகிய எழுத்துக்களை முதலாகக் கொண்ட வினாச் சொற்கள் அனைத்தும் எவ்வென் வினாக்களின்பாற்படும்.

இந்த உருபன் மூலம் அமையும் வினாக்களை *ஆவென்* வினாக்கள் எனக் குறிப்பிடலாம். *ஆவென்* வினாக்களுக்கும், *எவ்வென்* வினாக்களுக்கும் உரிய விடைகள் மாறுபட்ட தன்மையினவாத லால் முதல் வாக்கியத்தில் உள்ள எல்லாச் சொற்களையும் வாக்கியம் (8) இல் குறிப்பிட்டது போல் ஒரே சமயத்தில் (20) இல் உள்ளது போல் *ஆவென்* வினாக்களுக்கு உட்படுத்தவோ, (21) இல் உள்ளது போல் *ஆவென்* வினாவும் *எவ்வென்* வினாவும் ஒரே வாக்கியத்தில் நிகழும் வண்ணம் அமைக்கவோ முடியாது.

(20) *ஆனந்தவல்லியா நேற்றா ஆடிவீதியிலா அருமையாகவா பாடினாளா?

(21) *எவள் நேற்றா..............பாடினாள்?

வாக்கியம் (21)-இல் உள்ளது போன்ற வினாக்கள் ஏற்புடையன அல்ல என்றாலும் *எவ்வென்* வினாவும் ஆவென் வினாவும் ஒரே வாக்கியத்தில் ஏற்புடையனவாக நிகழும் பாங்கினைப் பின்வரும் வாக்கியங்களில் காணலாம்.

(22) எவள் நேற்று ஆடிவீதியில் அருமையாகப் பாடினாளா?

(23) ஆனந்தவல்லி எப்பொழுது.............பாடினாளா?

(24) ஆனந்தவல்லி.................எந்த வீதியில்...............பாடினாளா?

(25) ஆனந்தவல்லி...................எங்கே...............பாடினாளா?

(26) ஆனந்தவல்லி...............எப்படிப் பாடினாளா?

(27) ஆனந்தவல்லி...................ஆடிவீதியில்...............என்ன செய்தாளா?

மேலே (22) முதல் (26) வரையுள்ள வாக்கியங்கள் அனைத்திலும் *ஆவென்* வினாவானது வினைமுற்றின் மீது நிகழ *எவ்வென்* வினா ஏனைய சொற்களின் மீது நிகழ்கின்றது. வாக்கியம் (27)-இல் நிகழும் *எவ்வென்* வினாவும் *ஆவென்* வினாவும் தொழின்மை (Action) பற்றிய செயப்படு பொருளோடு கூடிய பின்வரும் வினைமுற்றின் மீது நிகழ்வனவாகும்.

(28) ஆனந்தவல்லி..................................பாடுதல் செய்தாள்.

2.2 வாக்கியம் (21)-இல் அமைந்த வினா ஏற்றுக்கொள்ளப் படாமல் போவதற்கும், (22) முதல் (27) வரையுள்ள வாக்கியங்களில் உள்ள வினாக்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கும் காரணம் என்ன? வாக்கியம் (21)-இல் வினைமுற்று அல்லாத ஏனைய கிளவிகளின் மீது *எவ்வென்* வினாவும் *ஆவென்* வினாவும் நிகழ்கின்றன. அதனை அடுத்து நிகழும் ஆறு வாக்கியங்களில் இந்த நிலை இல்லை. இதுதான் காரணம். இன்னொரு காரணம்

(22) முதல் (27) வரையுள்ள வாக்கியங்களில் நிகழும் இருவகை வினாக்களும் இருவேறு வாக்கியங்களில் நிகழ்வனவாகும். இதனைப் பின்னர்க் காண்போம்.

## 3.0 எவ்வென் வினாவில் ஆவென் வினா

3.1 எவ்வென் வினாச் சொல்லையடுத்து ஆவென் வினா உருபன் நிகழும் பின்வரும் வாக்கியங்கள் ஏற்புடையனவாகக் கருதப் பெறுவதில்லை.

(29) *எவளா..........................அருமையாகப் பாடினாள்?

(30) *ஆனந்தவல்லி எப்பொழுதா........................அருமையாகப் பாடினாள்?

(31) *ஆனந்தவல்லி................எந்த வீதியிலா அருமையாகப் பாடினாள்?

(32) *ஆனந்தவல்லி........................எங்கேயா அருமையாகப் பாடினாள்?

(33) *ஆனந்தவல்லி..........................எப்படியா பாடினாள்?

(34) *ஆனந்தவல்லி...........................என்னவா செய்தாள்?

3.2 ஆனால் எவ்வென் வினாச் சொல்லையடுத்து நிகழும் சொல் அவ்வினாவுக்கு விடையாக அமைந்தால், விடையாக அமையும் அச்சொல் எப்போதும் ஆவென் வினா உருபனை ஏற்றே நிகழும். இதனைப் பின்வரும் வாக்கியங்களில் காணலாம்.

(35) யார், ஆனந்தவல்லியா................பாடினாள்?

(36) ஆனந்தவல்லி எப்பொழுது, நேற்றா.............பாடினாள்?

(37) ஆனந்தவல்லி.........................எங்கே, ஆடிவீதியிலா பாடினாள்?

(38) ஆனந்தவல்லி........................எப்படி, அருமையாகவா பாடினாள்?

(35) முதல் (38) வரையுள்ள வினா வாக்கியங்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்குக் காரணம், மேற்படி வாக்கியங்கள் அனைத்திலும் ஒரே சொல் இருவகை வினாக்களுக்கும் உட்படுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, *ஆனந்தவல்லி* என்னும் சொல் (35)-ஆம் வாக்கியத்தில் *எவ்வென்* வினாவுக்கும் *ஆவென்* வினாவுக்கும் உட்படுத்தப்பட்டு இருப்பதைக் காணலாம். இத்தகைய வினா வாக்கியங்கள் பயனிலை தொக்க வாக்கியங்களாகும். இவற்றில் பயனிலை தொக்கது *எவ்வென்* வினா வாக்கியங்களாகும்.

## 4.0 பயனிலை தொகா எவ்வென் வினா வாக்கியங்கள்

மேலே (35) முதல் (38) வரையில் உள்ள வாக்கியங்கள் ஏற்புடையனவாக அமைவதற்கு இன்னொரு முக்கியமான

காரணம், மேற்படி வாக்கியங்களில் நிகழும் இருவகை வினாக்களும் இருவேறு வாக்கியங்களில் நிகழ்வதேயாகும். இந்த இருவேறு வாக்கியங்கள் யாவை என்பதைக் கீழே காணலாம்.

*(39) யார் பாடினாள்? ஆனந்தவல்லியா......பாடினாள்? (=35)*

*(40) ஆனந்தவல்லி எப்பொழுது......பாடினாள்?..... நேற்றா.....பாடினாள்? (=36)*

*(41) ஆனந்தவல்லி.....எங்கே பாடினாள்?.....ஆடிவீதியிலா பாடினாள்? (=37)*

*(42) ஆனந்தவல்லி...எப்படிப் பாடினாள்?...அருமையாகவா பாடினாள்? (=38)*

*(39)* முதல் *(42)* வரையுள்ள வாக்கியங்களின் புற வடிவங்களே *(35)* முதல் *(38)* வரையுள்ள வாக்கியங்களாகும். *(39)* முதல் *(42)* வரையுள்ள இருவகை வினா வாக்கியங்களில் நிகழும் ஒன்றிய பயனிலை உறுப்புகளுள் (Identical Predicate Constituents) முதல் பயனிலை உறுப்பாகிய **பாடினாள்** என்பது வீழ்ந்துபடுவதன் மூலம் *(35)* முதல் *(38)* வரையுள்ள புறவடிவங்கள் கிடைக்கின்றன.

## 5.0 ஆவென்வினாவை மறுக்கும் எவ்வென்வினாக்கள்

எவ்வென் வினாச் சொல்லையடுத்து **ஆவென்** வினா உருபன் நிகழ்ந்தால் அத்தகைய வினா அமைப்புகள் ஏற்புடையன அல்ல என்பது *(29)* முதல் *(34)* வரையுள்ள வாக்கியங்கள் மூலம் முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது. இவ் வாக்கியங்களின்கண் நிகழும் வினா அமைப்புகள் ஏற்கப்படாமல் போவதற்கு அவற்றில் நிகழும் பால் விகுதியோடு கூடிய வினைமுற்றுக்களே காரணம் என்று தோன்றுகின்றது. இவ்வாறு இல்லாமல் மேற்படி வினை முற்றுக்கள் பெயர்த்தன்மையினவாக அமைகையில் *எவ்வென்* வினாச் சொல்லையடுத்து *ஆவென்* வினா உருபன் நிகழ்வது இயல்பாகத் தோன்றுகிறது. இதனைச் சற்று விரிவாக ஆராயலாம்.

## 6.0 ஆவென் வினாவை எவ்வென் வினா ஏற்கும் தொடரனியற் சூழல்

*6.1* ஒரு வாக்கியத்தில் வினைமுற்றுக்கு இடப்புறமாக நிகழும் சொற்களை வலியுறுத்திக்கூற முற்படும்போது, அந்த வாக்கியம் இருவகை மாற்றங்களுக்கு உள்ளாகிறது. ஒன்று வலியுறுத்தலுக்கு இலக்காகும் சொல்லானது பயனிலைக்கு வலப்புறம் வந்து நிற்கிறது. இரண்டு, சிறப்பு வினை முற்றாகிய (Personal Finite Verb) பயனிலை பொது வினை முற்றாக (Impersonal Finite Verb) நிகழ்கிறது. *ஆனந்தவல்லி நேற்று ஆடிவீதியில் பாடினாள்*

என்னும் வாக்கியத்தில் *பாடினாள்* என்னும் பயனிலைக்கு முன்னர் நிகழும் *ஆனந்தவல்லி, நேற்று, ஆடிவீதியில்* ஆகிய மூன்று உறுப்புகளும் வலியுறுத்தலுக்கு இலக்காகும் போது கீழ்வரும் வாக்கியங்கள் தோற்றம் கொள்கின்றன.[3]

43(அ) நேற்று சென்னையில் அருமையாகப் பாடியது ஆனந்தவல்லி (ஆகும்)

(ஆ) நேற்று சென்னையில் அருமையாகப் பாடியவள்[4] ஆனந்தவல்லி (ஆவாள்)

(44) ஆனந்தவல்லி..........ஆடிவீதியில் பாடியது நேற்று (ஆகும்)

(45) ஆனந்தவல்லி.............நேற்று பாடியது ஆடிவீதியில் (ஆகும்)

6.2 இந்த வாக்கியங்களில் ஈற்றயலினவாக நிகழும் *ஆனந்தவல்லி, நேற்று, ஆடிவீதியில்* ஆகிய உறுப்புகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு அமையும் *எவ்வென்* வினாச் சொற்களையடுத்து *ஆவென்* வினா உருபன் பொருந்தி நிற்கும். இதனைப் பின்வரும் வாக்கியங்களில் காணலாம்.

46 (அ) நேற்று ஆடிவீதியில் அருமையாகப் பாடியது யாரா?

(ஆ) நேற்று ஆடிவீதியில் அருமையாகப் பாடியவள் எவளா?

(47) ஆனந்தவல்லி ஆடிவீதியில் பாடியது எப்பொழுதா?

48 (அ) ஆனந்தவல்லி நேற்று பாடியது எந்த வீதியிலா?

(ஆ) ஆனந்தவல்லி நேற்று பாடியது எங்கேயா?

6.3 மேலே (46) முதல் (48) வரையுள்ள வாக்கியங்களில் இருவகை வினாக்களும் ஒன்றுபட்டு நிற்பது ஏற்புடையதாகத் தோன்றுவதற்குக் காரணம், இவ் இருவகை வினாக்களும் புதையமைப்பில் (Deep Structure) இருவேறு வாக்கியங்களுக்கு உரியனவாகி நிற்பதேயாகும். மேற்படி வாக்கியங்களின் புதையமைப்பைக் கீழே காணலாம்.

---

3. இத்தகைய வாக்கியங்கள் கவை வாக்கியங்கள் (Cleft Sentences) என்று குறிக்கப்படும்.

4. கவை வாக்கியத்தில் நிகழும் **பாடியவள்** என்பது வினையாலணையும் பெயர் அன்று. இது நேர்வாக்கியத்தில் (Normal Sentence) நிகழும் **பாடினாள்** என்ற வினைமுற்றின் மாற்று வடிவமாகும். கவை வாக்கியங்களில் நிகழும் செய்தவன், செய்தவள், செய்தவர்; செய்பவன், செய்பவள், செய்பவர் ஆகிய வாய்பாட்டுக் கவை வினைப் பயனிலைகள் (Cleft Predicates) நேர் வாக்கியங்களில் நிகழும் இயல்பு வினைப் பயனிலைகளின் திரிபன்கள் (Alternants) ஆகும். எனவே இவற்றை வினையாலணையும் பெயர்களாகக் கருத முடியாது.

*(49) நீங்கள் (நேற்று ஆடிவீதியில் அருமையாக பாடியது யார் என்று) கேட்கிறீர்களா?*

*(50) நீங்கள் (ஆனந்தவல்லி ஆடிவீதியில் பாடியது எப்பொழுது என்று) கேட்கிறீர்களா?*

*(51) நீங்கள் (ஆனந்தவல்லி நேற்று பாடியது எங்கே என்று) கேட்கிறீர்களா?*

இவ்வாறே (22) முதல் (27) வரையுள்ள வாக்கியங்களில் நிகழும் இருவகை வினாக்களும் இருவேறு வாக்கியங்களில் நிகழும் பெற்றியனவாகும். இதனைப் பின்வரும் புதையமைப்புகள் மூலம் உணரலாம்.

*(52) நீங்கள் (எவள் நேற்று.........பாடினாள் என்று) கேட்கிறீர்களா? (=22)*

*(53) நீங்கள் (ஆனந்தவல்லி எப்பொழுது.......பாடினாள் என்று) கேட்கிறீர்களா? (=23)*

*(54) நீங்கள் (ஆனந்தவல்லி........எந்த வீதியில்..........பாடினாள் என்று) கேட்கிறீர்களா? (=24)*

*(55) நீங்கள் (ஆனந்தவல்லி........எங்கே........பாடினாள் என்று) கேட்கிறீர்களா? (=25)*

*(56) நீங்கள் (ஆனந்தவல்லி......எப்படிப் பாடினாள் என்று) கேட்கிறீர்களா? (=26)*

*(57) நீங்கள் (ஆனந்தவல்லி......என்ன செய்தாள் என்று) கேட்கிறீர்களா? (=27)*

6.4 இனி (22) முதல் (27) வரையுள்ள வினா வாக்கியங்களும், (46) முதல் (48) வரையுள்ள வினா வாக்கியங்களும் அவற்றுக்குத் தொடர்புள்ள புதை வடிவங்களிலிருந்து எவ்வாறு பெறப்படு கின்றன என்பதை வாக்கியங்கள் (53)-ஐயும் (50)-ஐயும் கொண்டு விளக்கிக் காட்டலாம். இவ்விரு வாக்கியங்களிலும் நிகழும் *ஆவென்* வினா உருபன் இடம்பெயர்ந்து முதலில் *என்று* என்னும் வாக்கியச் சாரியையின் பின் பொருந்துகிறது. இவ்வாறு அமைந்த வாக்கியங்களைக் கீழே காணலாம்.

*(59) நீங்கள் ஆனந்தவல்லி எப்பொழுது பாடினாள் என்றா கேட்கிறீர்கள்?*

*(60) நீங்கள் ஆனந்தவல்லி பாடியது எப்பொழுது என்றா கேட்கிறீர்கள்?*

இவ்வாறு இடம்பெயர்ந்த *ஆவென்* வினா உருபன் மீண்டும் இடம் பெயர்ந்து *பாடினான், யார்* ஆகிய சொற்களின் பின் பொருந்தி நிற்கிறது. இவ்வாறு இரண்டாம் முறை *ஆவென்* உருபன் இடப்பெயர்ச்சிக்கு இலக்காகும் போது தொடக்கத்தில்

மேற்படி உருபனுக்குப் பற்றுக் கோடாக இருந்த வாக்கியமும், *என்று* என்னும் சாரியையும் அடியோடு வீழ்ந்துபடுகின்றன. இதன் விளைவாக வாக்கியங்கள் (23)-உம் (47)-உம் தோற்றம் கொள்கின்றன.

## 7.0 வினாவாக்கியங்களின் புதை நிலையமைப்பு

மேலே நிகழ்த்திய ஆய்வினின்றும் வினா வாக்கியங்களைப் பற்றிய ஓர் அரிய உண்மை புலனாகின்றது. அதாவது வினா வாக்கியங்கள் அனைத்தும் புதை வடிவில் முற்றெச்ச வாக்கியங்களின் (Complex Sentences) பகுதிகளாக இயல்கின்றன. இப்பின்னல் வாக்கியங்களில் அகப்படும் சார்பு வாக்கியங்களாக (Constituent Sentences) வினா வாக்கியங்கள் அமைகின்றன. இச் சார்பு வாக்கியங்களை அகப்படுக்கும் முதன்மை வாக்கியங்கள் (Matrix Sentences) தன்மையிடப் பெயர்களை எழுவாயாகக் கொண்டு நடை பெறுகின்றன. சற்று விளக்கமாகக் கூறவேண்டு மானால் *நீங்கள் ஆனந்தவல்லி எப்பொழுது......பாடினாள் என்று கேட்கிறீர்களா?* (53) என்ற வினாவுக்கு வித்தாக அமைவது கீழ்வரும் வாக்கியமாகும்.

(61)நான் ஆனந்தவல்லி எப்பொழுது........பாடினாள் என்று கேட்கிறேன்.

மேலே (59)-இல் குறிக்கப்பெற்ற வாக்கியம் முன்னிலையில் உள்ளவரால் (53)-இல் உள்ளதுபோல் வினாவுக்கு உட்படுத்தப் படாமற்போனால் *ஆனந்தவல்லி எப்பொழுது..........பாடினாள்* (3) என்ற வினாவும், அவ்வாறு உட்படுத்தப்பட்டால் *ஆனந்தவல்லி எப்பொழுது......... பாடினாளா?* (23) என்ற வினாவும் கிடைக்கும்.



# 3. செத்துப்போன செத்து

## பகுதி - 1

### *1.0 என்று: ஓர் வாக்கியச் சாரியை*

*1.1* சங்க இலக்கியங்களில் பரவலாக நிகழும் *செத்து* என்னும் செய்து வாய்பாட்டு வினை பிற்காலத் தமிழில் வழக்கற்றுப் போனதாகத் தோன்றுகின்றது. *கருதி, எண்ணி, நினைத்து* எனப் பொருள் கொள்ளத்தக்க வகையில் அமைந்த இவ்வினை யமைப்பின் பகுதி இன்னது என்பதைக் கண்டறிய பழந்தமிழில் சான்றுகள் ஏதும் காணப்படவில்லை. தொடரனியல் அடிப்படையில் *செத்து* என்னும் வடிவம் *கருதி, எண்ணி, நினைத்து* ஆகிய செய்து வாய்பாட்டு வினைகளினின்றும் குறிப்பிடத்தக்க வகையில் மாறுபட்டு நிற்கின்றது. *கருதி, எண்ணி, நினைத்து* ஆகிய வடிவங்கள் பொதுவாக *என்று* அல்லது *என* என்னும் இடைச் சொல்லையடுத்து நிகழும் பான்மையனவாய் அமைகின்றன. கருதுக:

(1) கண்ணனை நல்லவன் என்று கருதி முருகன் அழைத்தான்.

(2) முருகனைத் தெய்வம் என்று எண்ணித் தமிழர்கள் வழிபடுகின்றனர்.

(3) மணியனைக் கொடியவன் என்று நினைத்து மாதவி வெறுத்தாள்.

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் *கருதி, எண்ணி, நினைத்து* ஆகிய வினைவடிவங்கள் அமைந்துள்ள வாக்கிய அமைப்பைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

(4) வேற்றுமைத்தொடர்-2+பெயர்த்தொடர்+என்று { கருதி / எண்ணி / நினைத்து }

இவ்வமைப்பில் வேற்றுமைத் தொடர்-2 என்னும் உறுப்பு ஐயென்னும் வேற்றுமையுருபை ஏற்ற பெயர்களைக் குறிப்பதாகும்.[1]

---

1. [வேற்றுமைத் தொடர்-2 + பெயர்த்தொடர்-என்று] என்பது ஒரு வாக்கியமாகும். இந்த வாக்கியத்தின் எழுவாயானது செயப்படுபொருளாக உயர்த்தப்படும் நிலையில் தலைமைக் கட்டுரையில் (1) முதல் (3) வரையிலான எடுத்துக்காட்டுக்களில் நிகழும் [*கண்ணனை நல்லவன் என்று*], [*முருகனைத் தெய்வம்-என்று*], [*மணியனைக் கொடியவன் என்று*] ஆகிய அமைப்புகள் தோற்றம் கொள்கின்றன.

*கண்ணனை* (1), *முருகனை* (2), *மணியனை* (3) ஆகிய பெயர்கள் மேற்படி உறுப்பின் கீழ் அமைவனவாகும்.

1.2 ஒன்று முதல் மூன்று வரை குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக் காட்டுகளில் நிகழும் *என்று* என்னும் இடைச் சொல் வாக்கியச் சாரியை (Sentential Complementizer) ஆகும். இது மேற்படி எடுத்துக்காட்டுக்களின் வாக்கிய அமைப்பில் ஓர் இன்றியமையாத உறுப்பாகும். இவ்வுறுப்பு இல்லாமல்;

(5) *வேற்றுமைத்தொடர்-2 + பெயர்த்தொடர் + { கருதி / எண்ணி / நினைத்து }

என அமையும் வாக்கிய அமைப்புக்கள் ஏற்றுக் கொள்ளத் தக்கவையல்ல. சற்று விளக்கமாகக் குறிப்பிட வேண்டுமானால் பின்வரும் வாக்கியங்கள் இலக்கணத்தன்மை உடையனவாகக் கருதப்படுவதில்லை.

(6) *கண்ணனை நல்லவன் கருதி முருகன் அவனை அழைத்தான்

(7) *முருகனைத் தெய்வம் எண்ணி தமிழர் வழிபடுகின்றனர்

(8) *மணியனைக் கொடியவன் நினைத்து மாதவி அவனை வெறுத்தாள்

## 2.0 செத்து அனையதன்று

2.1 இனி, *செத்து* என்னும் வடிவம் சங்க இலக்கியங்களில் அமையும் பான்மையினைக் காண்போம்.

(9) சேறும் சேறும் என்றலிற் பண்டைத்தன்
மாயச் செலவாச் **செத்து** மருங்கற்று
மன்னிக் கழிகென் றேனே. (குறுந்தொகை 325. 1-3)

(10) பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பின் வாயாச் **செத்து**
ஒய்யென ஆங்கே எடுத்தனன். (கலித்தொகை 37-17,18)

இவ்விரு எடுத்துக்காட்டுக்களிலும் *செத்து* என்னும் வினையின் முன் நிகழும் *மாயச் செலவா, வாயா* ஆகிய தொடர்கள் *பெயர்த் தொடர்+ஆ* என்ற அமைப்பினவாகும். இத்தகைய அமைப்பின வாகிய தொடர்களில் நிகழும் *ஆ* என்னும் சொல் *ஆக* மற்றும் *என்று/என* ஆகியவற்றுடன் செம்மை வழக்கில் (Free Variation) நிகழும் தன்மையதாய் உள்ளமையால், *மாயச் செலவாச் செத்து, வாயாச்செத்து* ஆகிய தொடர்கள் பின்வரும் தொடர்களுடன் பொருள் நிலையில் ஒன்றுபடுகின்றன.

11 (அ) மாயச் செலவாகச் செத்து

(ஆ) மாயச் செலவு {என்று / என-ச்} செத்து

12 (அ) வாயாச் செத்து (வாய் = உண்மை)

(ஆ) வாய் {என்று / என-ச்} செத்து

2.2 எடுத்துக்காட்டுக்கள் (9), (10) இரண்டிலும் வேற்றுமைத் தொடர்-2 என்னும் உறுப்பு தொக்கி நிற்கின்றது. இதனைக் கருத்தில் கொண்டு மேற்படி எடுத்துக்காட்டுக்களில் *செத்து* என்னும் வினை நிகழ்ச்சிக்கு நிலைக்களனாக அமையும் வாக்கிய அமைப்பைப் பின்வருமாறு சுட்டலாம்.

(13) (வேற்றுமைத்தொடர்-2) + பெயர்த்தொடர் + ஆ + செத்து...

## 3.0 வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென

3.1 *செத்து* என்னும் வினையின் முன் நிகழும் பெயர்த் தொடரை அடுத்து *ஆ* என்னும் சொல் அமையும் போக்கு சங்கப் பாடல்களில் மிகமிக அருகிய வழக்காகவே காணப் படுகின்றது. *என்று* அல்லது *என* என்னும் இடைச் சொல்லின் நிகழ்ச்சி *செத்து* என்னும் வினையின் முன் சங்கப் பாடல்களில் எங்கும் காணப்படவில்லை. ஆனால் இவ் வினையினையடுத்து *என* என்னும் இடைச்சொல் நிகழும் போக்கை ஐங்குறுநூற்றில் *வெள்ளாங்குருகின்*.....எனத் தொடங்கும் பத்துப் பாடல்களில் காண்கிறோம்.

(14) வெள்ளாங் குருகின் பிள்ளை **செத்தென**
காணிய சென்ற மடநடை நாரை (ஐங்குறுநூறு 151)

இவ்வாக்கிய அமைப்பில் *நிகழும் என* என்னும் இடைச்சொல் யாப்பமைதி கருதி, *செத்து* என்னும் வினையையடுத்து வைக்கப் பட்டதாகக் கொண்டு மேற்படி வாக்கிய அமைப்பைப் பின்வருமாறு உருவாக்கம் செய்து கொள்ளலாம்.

(15) *வெள்ளாங்குருகின் பிள்ளை எனச் செத்து
காணிய சென்ற மடநடை நாரை.

இவ்வுருவாக்கத்தினைக் கருத்தில் கொண்டு (13)-இல் குறிக்கப் பெற்ற வாக்கிய அமைப்பைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

(16) (வேற்றுமைத்தொடர்-2) +பெயர்த்தொடர் { ஆ / என-ச் } + செத்து

*3.2 செத்து* என்னும் வினையின் முன் நிகழும் பெயர்த் தொடர்கள் *ஆ, என, என்று* ஆகிய இடைச்சொற்களின் நிகழ்ச்சியின்றி அமையும் போக்கே சங்கப் பாடல்களில் மிகுதியாக உள்ளது. இவ்வாறு அமையும் வாக்கிய அமைப்பைப் பின்வருமாறு குறிக்கலாம்.

(17) வேற்றுமைத்தொடர்-2 + பெயர்த்தொடர் + செத்து...

இத்தகைய அமைப்பினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(18) நிரைகால் ஒற்றலின் கல்சேர்பு உதிரும்
வரைசேர் மராஅத்து/ஊழ்மலர்/[பெயல்] **செத்து**
உயங்கல் யானை நீர்நசைக்கு அலமர (அகம்.199.2-4)

(19) / மேய்பிணைப் பயிரும் மெலிந்தழி படர்குரல் /
அருஞ்சுரம் செல்லுநர் [ஆள்] **செத்து** ஓர்க்கும் (அகம். 395. 11,12)

(20) வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்து
ஒறுவாய்ப் பட்ட / தெரியல் / [ஊன்] **செத்து**
பருந்துகொண் டுகப்பயாம் கண்டனம். (புறம். 271. 5-8)

(21) /புள்ளொலி / [மணிச்] **செத்து** ஓர்ப்ப
விளிந்தன்று மாதவத் தெளிந்தவென் நெஞ்சே (நற்றிணை 178. 9,10)

(22) புன்கால் நாவற் பொதிப்புற / இருங்கனி /
[கிளை] **செத்து** மொய்த்த தும்பி (நற்றிணை 35. 2,3)

(23) புனலாடு மகளிர் இட்ட / பொலங்குழை /
இரைதேர் மணிச்சிரல் [இரை] **செத்து** எறிந்தென
(பத்துப்பாட்டு 4. 312, 313)

(24) தீயின் அன்ன ஒண்செங் காந்தட்
டுவற் கலித்த / புதுமுகை / [ஊன்] **செத்து**
அறியா தெடுத்த புன்புறச் சேவல் (பத்துப்பாட்டு 10. 145-147)

(25) பலவின், நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த / தேறல்/
[நீர்] **செத்து** அயின்ற தோகை (பத்துப்பாட்டு 8. 189-191)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் சாய்வுக் கோட்டு அடைப்புக்களில் உள்ளவை **வேற்றுமைத்தொடர்-2** என்னும் உறுப்பையும், பகர

அடைப்புக்களில் உள்ளவை **பெயர்த் தொடர்** என்னும் உறுப்பையும் குறிப்பனவாகும்.[2]

3.3 **செத்து** என்னும் வினையமைந்த தொடர்களில் **வேற்றுமைத் தொடர்-2** என்னும் உறுப்பு தொக்கி நிற்பதும் உண்டு. இவ்வாறு நிகழும் வாக்கிய அமைப்பினைப் பின்வருமாறு குறிக்கலாம்.

*(26)* (வேற்றுமைத்தொடர்-2) + பெயர்த்தொடர் + செத்து....

இத்தகைய வாக்கிய அமைப்பினைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

*(27)* இரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்
கவுள்மலிபு இழிதரும் காமர் கடாஅம்
இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப [யாழ்] **செத்து**
இருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும் (அகம். 88. 9-12)

தொக்கி நிற்கும் சொல்: **ஆர்ப்பு**

*(28)* கடும்பகட் டொருத்தல் நடுங்கக் குத்திப்
போழ்புண் படுத்த பொரியரை ஓமைப்
பெரும்பொளிச் சேயரை நோக்கி [ஊன்] **செத்து**
கருங்கால் யாஅத்துப் பருந்துவந் திறுக்கும் (அகம். 397. 10-13)

தொக்கி நிற்கும் தொடர்: **சேயரை**

*(29)* கைவல் இளையர் கடவுட் பழிச்ச
[மறப்புலிக் குழூஉக்குரல்] **செத்து** வயக்களிறு
வரைசேர்பு எழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்து... (பதிற்றுப்பத்து 41. 6-9)

தொக்கி நிற்கும் சொல்: **பழிச்சல்**

3.4 இவ்வெடுத்துக்காட்டுக்கள் மூன்றிலும் தொக்கி நிற்கும் உறுப்புக்களை மீட்பதற்கு வேண்டிய தடயங்கள் இருப்பதால், மேற்படி உறுப்புக்கள் வெளிப்படையாகக் குறிக்கப் பெறாமல் விடப்பட்டுள்ளன. இத்தகைய தடயங்கள் இல்லாத நிலையில் தான் *வேற்றுமைத்தொடர்-2* என்னும் உறுப்பு **செத்து** என்னும் வினை அமையும் தொடர்களில் குறிக்கப்படுகின்றது. இந்த நிலையை (18) முதல் (25) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

---

2. ஆயினும் **வேற்றுமைத்தொடர்-2** என்னும் உறுப்பானது பகர அடைப்பினுள் நிகழும் உறுப்பின் எழுவாயாகக் கொள்ளத்தக்கது என்பதே உண்மையாகும்.

## 4.0 செத்தனள் பேணி

4.1 செத்து என்னும் வினையமைப்பு, இயைபு விகுதிகளை ஏற்று நிகழும் நிலை சங்கப் பாடல்களில் மிக மிக அருகிக் காணப்படுகின்றது. இவ்வகையில் பின்வரும் எடுத்துக்காட்டு களைக் கருத்தில் கொள்ளலாம்.

(30) வென்வேற் பொறையன் என்றலின் வெருவர
வெப்புடை யாடூஉச் **செத்தனென்** மன்யான் (பதிற்றுப்பத்து 86. 3,4)

(31) யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே
கூரெயிற் றரிவை குறுகினள் யாவரும்
காணுநர் இன்மையிற் **செத்தனள்** பேணிப்
பொலங்கலம் சுமந்த பூண்டாங் கிளமுலை
வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டனள் நின்றோள் கண்டுநிலைச் செல்லேன். (அகம். 16. 5-11)

முதல் எடுத்துக்காட்டாகிய (30) இல் உள்ள ஈற்றடிக்கு உ.வே.சா. பதிப்பில் பின்வருமாறு உரை வரையப் பெற்றுள்ளது: யான் அவனை *வெப்பமுடையான் ஒரு மகன் என்று முன்பு* கருதினேன். இவ்வெடுத்துக் காட்டில் *வென்வேற்பொறையன்* என்னும் பெயர்த் தொடரின் பதிலியாகிய (Proform) ஐயுருபேற்ற *அவன்* என்னும் பெயர் தொக்கி நிற்பதைக் காணலாம். எடுத்துக்காட்டு (31) இல் நிகழும் *செத்தனள்* என்னும் வினைக்குக் கழகப்பதிப்பில் உள்ள உரை தெளிவில்லாமல் உள்ளது. இவ்வெடுத்துக்காட்டின் திரண்ட கருத்தைப் பின்வருமாறு அமைக்கலாம்: *புதல்வனை அரிவை தமியோற்கண்டு யாவரும் காணுநர் இன்மையின் அதனைக் கருதினளாகி அவனைக் குறுகி வருக என் உயிரெனப் பேணிக் கொண்டனளாகி நின்றாள்.* இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *செத்தனள்* என்னும் முற்று வடிவத்தை எச்சமாகக் கொண்டு அதன் செயப்படுபொருளாகக் *காணுநர் இன்மையை* என்னும் வேற்றுமைத் தொடரின் பதிலியாகிய *அதனை* என்பதனை மேற்படி முற்றெச்சத்தின் முன் அமைக்கலாம். இந்த எடுத்துக்காட்டில் *செத்தனள்* என்னும் வினை நிகழ்ச்சிக்கு நிலைக் களனாக உள்ள வாக்கிய அமைப்பு (17) இல் குறிக்கப்பெற்ற அமைப்பினின்றும் மாறுபட்டுப் பின்வருமாறு அமைகின்றது.

(32) விளைவுத்தொடர் + வேற்றுமைத்தொடர்-2 + செத்தனள்........

இவ்வமைப்பில் *காணுநர் இன்மையின்* என்பது விளைவுத் தொடராகவும், அதன் பதிலியாகிய ஐயுருபு ஏற்ற *அதன்* என்னும் பெயர் இரண்டாம் வேற்றுமைத் தொடராகவும் அமையும். இத்தகைய வாக்கிய அமைப்புக்களில் *செத்து* என்னும் வினையின் முன் *என்று/என* இடைச்சொல்லுக்கு இடமில்லையாதலின் கீழே குறிக்கப் பெற்றுள்ளது போன்ற வாக்கியங்கள் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.

(33) *அரசன் கொடியன் ஆதலின் அதனை என்று கருதி.....

## 5.0 செயப்படுபொருள் குன்றாச் செத்து

5.1 பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் (32) இல் குறிக்கப் பெற்றுள்ள தொடரமைப்பின் கீழ் அமைவனவாகும்.

(34) முருகன் ஆரணங்கு என்றலின் **அது செத்து** (அகம். 98-100)

(35) யாறுசென் மாக்கள் சோறுபொதி வெண்குடை
கணைவிசைக் கடுவளி யெடுத்தலின் **துணை செத்து**
வெருளேறு பயிரும்............... (அகம். 121. 11-13)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் *அது, துணை* ஆகியவை *செத்து* என்னும் வினையின் செயப்படுபொருளாய் அமைந்துள்ளன. பின்வரும் எடுத்துக்காட்டினைக் கருத்தில் கொள்க.

(36) தினைகிளி கடிகெனிற் பகலும் ஒல்லும்
இரவுநீ வருதலின் ஊறும் அஞ்சுவல்
யாங்குச் செய்வாம் எம் **இடும்பை** நோய்க்கென
ஆங்கியான் கூறிய வனைத்திற்குப் **பிறிது செத்து**
ஓங்குமலை **நாடன்** உயிர்த்தோன். (குறுந். 217. 1-5)

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *பிறிது செத்து* என்னும் தொடருக்குப் பின்வருமாறு இரண்டு வகையில் பொருள் உரைக்கலாம்.

(37) யான் (இங்ஙனம்) கூறிய அளவில் ஓங்குமலைநாடன்
என்கூற்றினைப் பிறிதொன்றாகக் கருதி உயிர்த்தனன்.

(38) யான் (இங்ஙனம்) கூறிய அளவில் ஓங்குமலை
நாடன் பிறிதொன்றினைக் கருதி உயிர்த்தனன்.

முதற்பொருளைக் கருத்தில் கொண்டால் *பிறிது செத்து* என்னும் தொடருக்கு நிலைக்களனாக உள்ள வாக்கியத்தின் அமைப்பு, இரண்டாம் வேற்றுமைத் தொடர் தொக்கி நின்று (27) முதல் (29) வரை குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக்காட்டுகளின் வாக்கிய அமைப்புடன் - அதாவது (26)இல் குறிக்கப்பெற்றுள்ள அமைப்புடன்- சென்று பொருந்தும். அவ்வாறின்றி (38)இல் குறிக்கப்பெற்றுள்ள

பொருளைக் கொண்டால் மேற்படி தொடருக்கு நிலைக்களனாக உள்ள வாக்கிய அமைப்பினைப் பின்வருமாறு குறிக்கலாம்.

**(39) பெயர்த்தொடர் + வேற்றுமைத்தொடர்–2 + செத்து.......**

இவ்வமைப்பில் உள்ள *பெயர்த்தொடர், வேற்றுமைத் தொடர்-2* ஆகிய இரண்டும் முறையே *ஓங்குமலை நாடன், பிறிது* ஆகியவற்றைக் குறிப்பனவாகும்.

## 6.0 உணல் செத்து

*கருதி* என்னும் பொருள்படும் *செத்து* என்னும் வினையமைப்பு அமைந்த தொடரமைப்பில் உள்ள சொற்கள் நிலைமாறிக் கிடப்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(40) விடியல் **வெங்கதிர் காயும்** வேயமல் அகலறைக்
கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை
அருமணி அவிருத்தி யரவுநீர் உணல் **செத்துப்**
பெருமலை மிளிர்ப்பன்ன சாற்றுடைக் கனைபெயல்
உருமுக்கண் ணுறுதலின்......................... (கலித்தொகை 45. 1-5)

இவ்வெடுத்துக்காட்டில் அமைந்த வாக்கிய அமைப்பைக் *காந்தளங் குலையினை நீர் உணல் அரவு செத்து உருமுக்கண்ணுறுதலின்* எனக்கொண்டால் பொருள் தெற்றெனப் புலப்படும். *காய்ந்து செலல் கனலி* (அகம்.55.1), *விரை செலல் கடுங்கணை* (அகம். 281.7) ஆகிய தொடர்களில் நிகழும் *செலல்* என்னும் வினை *செல்லும்* எனப் பெயரெச்சமாகக் கொள்ளத்தக்க தாகும். இதனைக் கருத்தில் கொண்டு *நீர் உணல் அரவு* என்னும் தொடருக்கு *நீர் உண்ணும் அரவு* எனப் பொருள் கொள்ளலாம். இதனைப் பின்புலமாகக் கொண்டு மேலே உள்ள மாற்றி யமைக்கப்பெற்ற வாக்கியத்துக்குப் பின்வருமாறு பொருளுரைக்கலாம். *காந்தளங் குலையினை நீர் உண்ணும் அரவு என்று கருதி உருமுக் கண்ணுறுதலின்*. இப் பொருளை அடிப்படையாகக் கொண்டு (41) இல் நிகழும் *செத்து* என்னும் சொல்லின் நிகழ்ச்சிக்கு நிலைக்களனாயுள்ள வாக்கியத்தின் அமைப்பை (17) இல் குறிக்கப்பெற்ற அமைப்புடன் பொருத்திக் கொள்ளலாம்.

## 7.0 தேறுதல் செத்து

பின்வரும் எடுத்துக்காட்டு (17) இல் உள்ள அமைப்புடன் பொருந்தாமல் சற்று மாறுபட்டதாயுள்ளது.

(41) சிறுகட் பன்றி பெருஞ்சின வொருத்த
றுறுக லடுக்கத்து வில்லோர் மாற்றி
ஐவனம் கவரும் குன்ற நாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
பண்பில சொல்லும் தேறுதல் செத்தே (ஐங்குறு. 267)

இவ்வெடுத்துக்காட்டின் வாக்கிய அமைப்பைக் *குன்ற நாடன் தேறுதல் செத்து வண்டுபடு கூந்தலைப் பேணிப் பண்பில சொல்லும்* என அமைத்துக் கொள்ளலாம். *தேறுதல் செத்து* என்னும் தொடருக்குத் *தேறும் என்று கருதி* எனப் பொருள் கொண்டு மேற்படி தொடர் நிகழும் வாக்கியத்தின் அமைப்பைப் பின்வருமாறு குறிக்கலாம்.

(42) வாக்கியம் + செத்து.............

இவ்வமைப்பில் உள்ள *வாக்கியம்* என்னும் உறுப்பு *வண்டுபடு கூந்தலள் தேறும் / தேறுவாள்* என்பதைக் குறிப்பதாகும்[3]. *தேறுதல் செத்து* என்பதற்கு *(அவள்) தேறுதலைக் கருதி* எனப் பொருள் கொண்டால் மேற்படி தொடர் நிகழும் வாக்கிய அமைப்பு பின்வருமாறு அமையும்.

(43) ............வேற்றுமைத்தொடர்-2 + செத்து............

இவ்வமைப்பில் பின்வரும் எடுத்துக்காட்டும் அமைவதாய் உள்ளது.

(44) கிழங்ககழ் கேழல் உழுத சிலம்பிற்
றலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்
புல்லென் குன்றத்துப் புலம்புகொ ணெடுவரை
காணினும் கலிழுநோய் செத்துத்
தாம்வந் தனர்தம் காதலோரே. (ஐங்குறுநூறு 270)

---

3. சங்க இலக்கியங்களில் கருது என்னும் பொருண்மைத்தாகிய செத்து என்னும் செய்து வாய்பாட்டு வடிவம் வரும் இடங்களை ஆராய்ந்த அளவில், பெயரைப் பயனிலையாகக் கொண்ட வாக்கியங்களையடுத்தே அதன் நிகழ்ச்சி அமைகின்றது. வினைமுற்றுக்களைப் பயனிலையாகக் கொண்ட வாக்கியங்களையடுத்து செத்து என்னும் சொல் வரும் நிலை அங்கே காணப்படவில்லை. ஆனால் இதனை ஓர் சான்றாகக் கொண்டு பழந்தமிழில் வினைப்பயனிலையையடுத்து மேற்படி சொல் வரும் பெற்றியது அல்ல என்று கூறிவிட முடியாது. ஏனெனில் சங்க இலக்கியங்களின் நோக்கம் மொழியின் அமைப்பை விளக்குவதன்று. தலைமைக் கட்டுரையில் (51) இல் வரும் வாக்கிய அமைப்பை நோக்கும் போது பழங் கன்னடத்தில் வினைப் பயனிலையை அடுத்தும் கெத்து (gettu) என்னும் சொல் வரும் நிலை புலனாகின்றது.

## 8.0 மதிசெத்து

*செத்து* என்னும் சொல்லின் பொருள் இன்னது என்று அறுதியிட்டுக் கூறமுடியாத வகையில் பின்வரும் எடுத்துக் காட்டு அமைந்துள்ளது.

(45) கைபுனை கிளர்வேங்கை காணிய வெருவுற்று
மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புறச்
செய்தொழில் கொள்ளாது மதி **செத்துச்** சிதைதர
(பரிபாடல் 10. 46-48)

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *செத்து* என்னும் சொல்லானது *கருதி* என்னும் பொருள் பயப்பதாகப் பரிமேலழகர் கருதுகின்றார். இது உண்மையாயின் *செத்து* என்னும் வினையின் செயப்படு பொருள் பற்றிய செய்தி மேற்படி எடுத்துக் காட்டில் சுட்டப்பட வேண்டும். சுட்டிக்காட்டும் வகையில் அங்கே செயப்படுபொருள் இருப்பதாகத் தோன்றவில்லையாதலால் *செத்து* என்னும் சொல்லின் பொருளை மேற்படி எடுத்துக்காட்டில் மீண்டும் சிந்திக்க வேண்டியுள்ளது. இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *மதி செத்து* என்னும் தொடருக்கு *அறிவு கலங்கி* எனப் பொருள் கொண்டால் செயப்படுபொருள் பற்றிய சிக்கல் எழ வாய்ப்பில்லை. இங்கு *மதி* என்பதனைப் பரிமேலழகர் இசை நிறையாகக் கொள்வார். ஆகவே *மதிசெத்து* என்ற தொடரின் பொருளைத் திட்டவட்டமாகக் கூற முடியவில்லை.

## 9.0 பிறிதொன்றாகிய செத்து

9.1 *செத்து* என்னும் சொல் பின்வரும் இரு எடுத்துக் காட்டுக்களிலும் *கருதி* என்னும் பொருளில் வழங்காமல் வெவ்வேறு பொருளில் வழங்குவதைக் காணலாம்.

(46) அரிசெத்து உணங்கிய பெருஞ்செந் நெல்லின்
தெரிகொள் அரிசித் திரணெடும் புழுக்கல்
(பத்துப்பாட்டு 4. 473-474)

(47) வேருழந் துலரி மருங்கு செத்து ஒழியவந்து (புறம். 370.5)

எடுத்துக்காட்டு (46)-இல் நிகழும் *செத்து* என்னும் சொல்லுக்கு போன்று / போல எனப் பொருள் கொள்ளத் தோன்றுகின்றது. *அரிசெத்து உணங்கிய பெருஞ்செந்நெல்* என்ற தொடருக்கு உவே.சா. பதிப்பில் *நிறத்தால் ஞாயிற்றையொத்த உலர்ந்த பெரிய செந்நெல்* என்ற உரை காணப்படுகின்றது. இத்துடன் ***அரிசெய் தென்று*** பாடமாயின் அரிதலைச் செய்து என்று கூறுக என்ற

குறிப்பும் மேற்படி பதிப்பில் காணப்படுகின்றது. உரையாசிரியர்கள் செத்து என்னும் சொல்லை உவமக் கிளவியாகக் கொள்வர். (தொல். பொருள். 286. பேராசிரியர்; தொல். பொருள். 282. இளம்பூரணர்). *அரி* என்ற சொல்லுக்குப் பொன் என ஒரு பொருள் உண்டாகலின் அரி செத்துணங்கிய என்ற பகுதிக்குப் **பொன் போல் உணங்கிய** என்று பொருளுரைக்கலாம் எனத் தோன்றுகிறது.

*9.2* எடுத்துக்காட்டு *(47)* இல் நிகழும் *மருங்கு செத்து* என்னும் தொடருக்குக் கழகப் பதிப்பில் *வயிறு ஒட்டி* என்று பொருள் உரைக்கப்படுகின்றது. இத்தொடரில் அமைந்த **செத்து** என்னும் சொல் சிறுமையைக் குறிக்கும் *சிற்று* (நோக்குக: சிற்றலை <*சிற்று+அலை) என்னும் சொல்லுடன் தொடர்புடையதாகும். *சிற்று, செற்று* என அமையும் நிலை மலயாளத்தில் காணப்படு கின்றது.(DED. 1326) பழங்கன்னடத்தில் *சிறு* என்ற பொருள்படும் **கிறு** என்னும் வினை *கெத்து* (<*கெற்று) என்னும் செய்து வாய்பாட்டு வினையாக அமையும் நிலை காணப்படுகின்றது. (Sabdhamani Dharpana. நூற்பா. *240*, சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு-*1973*). *மருங்கு செத்து* என்னும் தொடரில் உள்ள *செத்து* என்னும் வினை, மேலே குறிப்பிட்ட *கெத்து* (kettu) என்னும் செய்து வாய்பாட்டு வினையுடன் பொருள் நிலையில் ஒன்று படுவதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *மருங்கு செத்து* என்னும் தொடருக்கு *வயிறு சிறுத்து* என்று பொருள் கொள்ளலாம்.

### 10.0 பொருள் பல குறித்த செத்து

இப்பகுதியில் *செத்து* என்னும் சொல்லுக்கு *கருதி, போன்று, சிறுத்து* என மூன்று பொருள்கள் சுட்டப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டு *(45)*-இல் இதன் பொருள், தெளிவாகவில்லை. சங்க இலக்கியங்களில் நாற்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் *செத்து* என்னும் சொல் காணப்படுகின்றது. மிகப் பெரும்பான்மையான இடங்களில் இச்சொல், *கருதி* என்றே பொருள் கொள்ளப் படும் வகையில் அமைகின்றது. இப்பொருள் எந்த அளவுக்குப் பொருத்தமானது என்பதையும் *செத்து* என்னும் சொல்லின் வரலாற்றையும் இரண்டாம் பகுதியில் காண்போம்.

## பகுதி - 2

### 11.0 செத்தின் வினையடி

தொடக்கத்தில் குறிப்பிட்டதுபோல் *செத்து* என்னும் செய்து வாய்பாட்டு வினையின் பகுதியைக் கண்டறியத் தமிழில் சான்றுகள்

ஏதும் காணப்படவில்லை. இந்த வகையில் கன்னடம் நமக்கு உறுதுணை புரிகின்றது. கி.பி.12 ஆம் நூற்றாண்டில் கேசிராஜா என்பவரால் எழுதப்பெற்ற *சப்தமணி தர்ப்பண* (சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு - 1973) என்னும் முதல் கன்னட இலக்கண நூலின் மூலம் *செத்து* என்னும் வினையமைப்பின் பகுதி பற்றி அறிய முடிகிறது. இகரம் எகரமாகத் திரிதல் (நூற்பா 240), றகரம் தகரமாகத் திரிதல் (நூற்பா 242) ஆகிய செய்திகளைக் குறிப்பிடுகையில் மேற்படி இலக்கண நூலில் *கிறு* (giRu) என்னும் வினைப்பகுதி குறிக்கப்படுகின்றது. இவ்வொலித் திரிபுகளுக்குச் சான்று காட்டும் வகையில் *கிறு* (giRu) என்னும் வினையடியும், அதனடியாகத் தோன்றிய *கெத்தம்* (gettam) என்னும் இறந்தகாலத் தன்மைப் பன்மை வினை முற்றும் சப்தமணிதர்ப்பணத்தில் குறிக்கப்பட்டுள்ளன. *கிறு* (giRu) என்னும் வினைக்குக் கிட்டல் to conceive, to think, to imagine, to take for ஆகிய பொருள்களைக் குறிப்பிடுவார் (Kittel's Kannada-English Dictionary Vol.2. Madras University Publication, 1969). *கிறு* (giRu) என்னும் வினை *கெத்து* (gettu) என்ற செய்து வாய்பாட்டு வினையாக அமையும் நிலை, தமிழில் *பெறு* என்னும் வினை *பெற்று* என்னும் செய்து வாய்பாட்டு வினையாக அமையும் நிலைக்கு ஒப்பானது ஆகும்.

## 12.0 கெத்தின் வழியது செத்து

12.1 வண்ணனை ஆய்வில் (Descriptive Analysis) *கிறு* (giRu) என்னும் வினையில் உள்ள றகரம் *கெத்து* (gettu) என்னும் செய்து வாய்பாட்டு வடிவத்தில் தகரமாகத் திரிந்தது எனக் கொள்ளப் பெற்றாலும் வரலாற்று நிலையில் மேற்படி ஒலிமாற்றத்தை நேரடி நிகழ்ச்சியாகக் கொள்ள முடியாது. *கெத்து* என்பதன் முந்தைய வடிவமாகக் **கெற்று* (geRRu) என்பதை அமைத்துக் கொண்டு -ற்ற்- > -த்த்- என்ற ஒலித் திரிபு விதியின் மூலம் **கெற்று* என்னும் வடிவம் *கெத்து* எனத் திரிந்தது என்று கொள்ளலாம். *கொடு* என்பதன் செய்து வாய்பாட்டு வினை கன்னடத்தில் *கொட்டு* என அமைவதையும் இங்கே கருத்தில் கொள்ளலாம்.

12.2 *செத்து* என்னும் வினைக்கு நிகராகக் கன்னடத்தில் உள்ள *கெத்து* என்னும் வடிவத்தில் மொழி முதல் வல்லொற்று அலையொலியாக (Voiced) உள்ளது. இதனைத் தொல் வடிவத்தில் நிலையொலியாகக் (Voiceless Sound) கொண்டால் gettu என்பதன் மூல வடிவம் *kettu (< *keRRu) என அமையும். இவ்வாறு அமைந்த தொல் வடிவத்தில் உள்ள நிலையொலியாகிய மொழிமுதல் ககரம், சகரமாகத் திரிந்த நிலையில் *செத்து* என்னும் வடிவம் தமிழில் அமைந்ததாகக் கொள்ளலாம்.

## *13.0 கன்னடத் தொடரனில் கெத்து*

*13.1* **கிறு** (giRu) என்னும் வினையடியாகத் தோன்றிய வினை யமைப்புக்கள் பழங்கன்னடத்தில் மட்டுமே காணப்படுகின்றன. இதில் குறிப்பிடத்தக்க செய்தி என்னவென்றால் மேற்படி வினையடியாகத் தோன்றிய வினை வடிவங்களின் முன் *என்று* என்னும் இடைச்சொல்லுக்கு நேரான கன்னட இடைச் சொல்லின் நிகழ்ச்சி தவிர்க்கப்படுகின்றது. இத்தகைய நிலையைத் தமிழிலும் *(18)* முதல் *(25)* வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் நாம் கண்டோம். பின்வரும் பழங்கன்னட வாக்கியங்களில் இத்தகைய நிலையினைக் காணலாம்.

*(48)* ஸாது **கெத்து** பஹெயாதவனான் ஒடன் அட்டிதன்
(sa:du gettu baheya:davana:n oDan aTTidan
(Kavirajama:rga (1.128) 9th Century A.D.)

இவ்வெடுத்துக்காட்டில் உள்ள *ஸாது கெத்து* என்னும் தொடர் *சாது என்று கருதி* என்று பொருள்படும்.

*(49)* அதனு சிகிய கிடிகளெ **கெத்தள்**
(adanu sikhiya KiDigaLe gettaL (Pampa Bharata (5.5) 10th Century A.D.)

பொருள்: காமனின் தீப்பொறிகளே என்று கருதினாள்.

*(50)* பொஸது அலர்த ஒந்து தாவரயெ **கெத்து** முக அப்ஜமன் ஒந்து தும்பி சும்பிஸெ.......... (posatu alarda ondu ta:varaye gettu mukha abjaman ondu tumbi cumbise (Pampa Bharata. 5.63)

பொருள்: புதிதாக அலர்ந்த ஒரு தாமரையே என்று கருதி முகக் கமலத்தை ஒரு வண்டு முத்தமிடுகையில்.........

*(51)* ஹஸ்தினபுரதொள் பாண்டவர் இர்தரெ **கெத்து** அல்லிகெ நிட்டாலியாகி தாழியன் இட்டு... (hastinapuradoL pa:NDavar irdare gettu allige niTTa:liya:gi da:liyan iTTu........
(Pampa Bharata - 13.106 Prose)

பொருள்: அஸ்தினாபுரத்தில் பாண்டவர் இருந்தனரென்று கருதி அங்கே நேரடியாகத் தாக்குதலைச் செய்து....

*(52)* ஸ்ருத, ஸோமக ப்ரமுகரப்ப பஞ்ச்ச பாண்டவரம் பாண்டவரெ கெத்து கொந்து..... (sruta, so:maka pramukharappa pañca pa:NDavaram pa:NDavare gettu kondu...... (Pampa Bharata. 13/106. Prose)

பொருள்: ஸ்ருத, சோமக முதலிய (உப) பஞ்ச பாண்டவர் களை, பாண்டவர்களே என்று கருதி, கொன்று.....

13.2 மேலே குறிப்பிட்ட ஐந்து எடுத்துக்காட்டுக்களிலும் *கெத்து, கெத்தள்* ஆகிய வினைகளின் முன் *என்று* என்னும் இடைச்சொல்லுக்கு நிகரான கன்னட இடைச்சொல்லின் நிகழ்ச்சி அமையாமையைக் கருதுகையில், மேற்படி வினை நிகழும் குறிப்பிட்ட தமிழ்-கன்னட வாக்கிய அமைப்புக்கள் ஏதோ ஒரு விபத்துக்கு உள்ளாகியிருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. இந்த விபத்து எத்தகையது என்பதைத் திட்ட வட்டமாக இப்போதைக்குச் சுட்டிக்காட்ட முடியவில்லையென் றாலும், அதன் தன்மையைப் பின்வருமாறு எண்ணிப் பார்க்கலாம்.

### 14.0 செத்தின் முன் வாக்கியச் சாரியை

*கருது, எண்ணு, நினை, நம்பு, எதிர்பார்* ஆகிய வினைகளின் அடியாகத் தோன்றிய செய்து வாய்பாட்டு வடிவங்கள் வாக்கியத்தில் அமைகையில் அவற்றில் *என்று, என* ஆகிய இடைச் சொற்களின் நிகழ்ச்சி தவிர்க்க முடியாததாகின்றது. இதில் குறிப்பிடத்தக்கது என்னவெனில் *என்று, என* ஆகிய வற்றின் பின் மேற்படி வினைகளின் அடியாகத் தோன்றிய செய்து வாய்பாட்டு வடிவங்களின் நிகழ்ச்சி அமைந்தேயாக வேண்டும் என்ற நியதில்லை. பின்வரும் எடுத்துக்காட்டுக்களின் மூலம் இதனை அறியலாம்.

(53) கண்ணன் வருவான் என்று { கருதி / எண்ணி / நினைத்து / நம்பி / எதிர்பார்த்து } கமலா சென்றாள்

(54) கண்ணன் வருவான் என்று கமலா சென்றாள்.

மேலே (53)இல் நிகழும் *என்று* என்னும் சொல்லும், (54) இல் நிகழும் *என்று* என்னும் சொல்லும் ஒரு திறத்தன அல்ல. முந்தியதில் நிகழும் *என்று* என்பது ஓர் இடைச்சொல்லாகும். இதனைச் சொல்லியல் ஆய்வுக்கு உட்படுத்த முடியாது. பிந்தியதில் நிகழும் *என்று* என்பது *செய்து* வாய்பாட்டு வினையாகும். இந்த வினையானது *கருதி/எண்ணி/சொல்லி* என்ற செய்து வாய்பாட்டு வினையின் பொருண்மைகளை உணர்த்துவதாகும். எனவே இதனைச் சொல்லியல் ஆய்வுக்குட்படுத்தலாம். இந்த வினையின் முன் *என்று* என்னும் இடைச்சொல் தவிர்க்கப்படுகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு *கெத்து* (gettu) என்னும் கன்னட வினையும் அதன் திரிபாகிய *செத்து* என்னும் தமிழ் வினையும் *கருதி/எண்ணி/நினைத்து* என்ற பொருண்மையதாகத்

துணியலாம். *செத்து,* வாக்கியத்தில் நிகழ்கையில் அதன் முன் *என்று/என* என்ற வாக்கியச் சாரியையின் நிகழ்ச்சிக்கு வாய்ப்பில்லை. ஆனால் *ஆ (=ஆக)* என்ற இடைச் சொல்லின் நிகழ்ச்சிக்கு வாய்ப்புள்ளது என்பதை *வாயாச் செத்து* (குறுந். *325.2)* என்ற தொடரமைப்பு உணர்த்துகின்றது.

## பிற்சேர்க்கை

**செத்து** என்னும் சொல் பற்றிய ஆராய்ச்சியை மேலும் தொடரும் வகையில், மேற்படி வினையமைப்பு சங்க இலக்கியங் களில் வரும் இடங்களும், அதன் வருகைக்கு நிலைக்களனாய் அமைந்துள்ள வாக்கிய அமைப்பின் பகுதிகளும் கீழே குறிக்கப் பெற்றுள்ளன.

1. **வே.தொ–2 + பெ.தொ–ஆ + செத்து......**

   1. குறுந்தொகை : 352.2 (வே.தொ-2. தொக்கியது)
   2. கலித்தொகை : 37.17

2. **வே.தொ–2 + பெ.தொ + என செத்து.........**

   இத்தொடரமைப்பில் உள்ள **என செத்து** என்னும் பகுதி **செத்து** என என்றமைகின்றது.

   ஐங்குறுநூறு: வெள்ளாங்குருகுப்பத்தில் (151-160), ஒவ்வொரு பாடலிலும் உள்ள முதல் இரண்டு அடிகள்.

3. **வே.தொ–2 + பெ.தொ + செத்து..........**

   1. அகநானூறு : 12.11, 21.25, 126.1, 199.3, 241.9, 395.12
   2. புறநானூறு : 128.3, 271.6
   3. நற்றிணை : 35.1, 178.9, 248.7, 344.10
   4. ஐங்குறுநூறு : 166.2, 239.2, 289.1
   5. பத்துப்பாட்டு : 4.183, 4.313, 8.191, 10.146

4. **(வே.தொ – 2) + பெ.தொ + செத்து..........**

   இவ்வமைப்பில் வே.தொ-2 தொக்கி நிற்கிறது

   1. அகநானூறு : 88.11, 232.3, 394.13
   2. புறநானூறு : 379.4
   3. நற்றிணை : 249.6
   4. பதிற்றுப்பத்து: 41.7, 90.42
   5. ஐங்குறுநூறு : 106.2

5. விளைவுத்தொடர் + (வே. தொ.-2) + செத்து...

இங்க வே.தொ-2 தொக்கி நிற்கின்றது.

1. அகநானூறு : 16.8
2. பதிற்றுப்பத்து: 86.4.

6. வே.தொ-2 +செத்து

1. அகநானூறு : 98.10, 121.12, 249.6
2. ஐங்குறுநூறு : 270.4
3. குறுந்தொகை : 217.4

7. வே.தொ-2 + உணல் - பெ.தொ + செத்து..........
கலித்தொகை : 45.3

8. வே.தொ-2 + செத்து... (அல்லது வாக்கியம் + செத்து)...
ஐங்குறுநூறு : 267.5

9. போன்று என்ற பொருள் கொள்ளத்தக்க வகையில்:
பத்துப்பாட்டு : 4.473

10. சிறுத்து அல்லது சுருங்கி என்னும் பொருளில்:
புறநானூறு : 370.5

11. பொருள் தெளிவின்மை:
பரிபாடல் : 10.48



# 4. மள்ளர் கையதை கூர்வாள்

## பகுதி - 1

### *1.0 ஐயோடு சிவணும் ஆவாய்*

*ஐயென்கிளவி முன்னிலை ஒருமைப் பொருண்மையும், வேற்றுமைப் பொருண்மையும் உணர்த்தும் ஓர் இடைச் சொல்லாகவே மரபிலக்கணங்களில் நமக்கு அறிமுகமாகிறது. இவ்விரண்டு பொருண்மைகளுக்கு அப்பாலும் இவ்விடைச் சொல் வேறு வகையான பொருண்மை விளக்கத்துக்கு உரியது என்ற உண்மையை மரபு வழிப்பட்ட புலமை நமக்கு உணர்த்திய தாகத் தெரியவில்லை. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க:*

(1) எமக்கு **நீ யாரை?.....** (கலித்தொகை 88.3)

(2) கேளாய் வாழியோ **மகளை!** நின் தோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு
பெருமலை இறந்தது நோவேன் (அகம். 63. 1-3)

(3) செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்கல் **நாடனை!**
நீவா ழியர்நின் றந்தை
தாய்வா ழியர் நிற் பயந்திசி னோரே (புறம். 137. 12-15)

(4) இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் **கணவனை**
யானா கியர்நின் நெஞ்சு நேர்பவளே (குறுந். 49. 3-5)

இந்நான்கனுள் முதல் எடுத்துக்காட்டில் *யாரை* என்பதில் நிகழும் ஐயென் கிளவி *ஆவாய்* என்னும் குறிப்புவினையின் பொருண்மை யமைப்புக்கு உரியதாகலின், அது வெறும் முன்னிலைப் பொருண்மையை மட்டுமே உணர்த்தும் இடைச்சொல் அன்று. அதன் பொருண்மையமைப்பு [இருப்பு+முன்னிலை (+ஒருமை)] எனக் குறிக்கத்தக்கதாகும். [இருப்பு] என்பது *இருத்தல்* என்பதனைக் குறிக்கும் ஓர் பொருண்மைக் கூறாகும். எடுத்துக்காட்டுக்கள் (2), (3)-இல் நிகழும் *மகளை* (=மகளே!), *நாடனை* (=நாடனே!)

ஆகியவற்றில் காணப்படும் ஐயென்கிளவி முன்னிலைப் பொருண்மையை மட்டும் உணர்த்தாமல் விளிப்பொருண்மையையும் உணர்த்துவதாகின்றது. விளிப்பொருண்மை, முன்னிலைப் பொருண்மையை உள்ளீடாகக் கொண்டது. ஆகவே விளியைக் குறிக்கையில் முன்னிலையைக் குறிக்கத் தேவையில்லை. இதனைக் கருத்தில் கொண்டு *(2), (3)* இல் நிகழும் ஐயென் கிளவியின் பொருண்மையை [இருப்பு+விளி+[+ஒருமை]] அல்லது [விளி+ [+ஒருமை]] எனக் குறிக்கலாம்.[1] நான்காம் எடுத்துக்காட்டில் *கணவனை* என்பதில் நிகழும் ஐயென் கிளவி முன்னிலைக் கிளவியாக அமையாமல் ஆக/ஆய் என்பதற்கு நிகரான ஒன்றாகவே அமைவதாகத் தோன்றுகின்றது. குறுந்தொகை உரை ஆசிரியர் இதனைச் சாரியையாகக் கொள்வார். (பார்க்கவும்: குறுந்தொகை, உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு). மரபு வழிப் புலமை மொழியின் சிறப்பியல்புகளை அறிந்து கொள்ளப் போதுமான அளவுக்குத் துணை புரியவில்லை என்பதை மேலும் சில எடுத்துக் காட்டுக்கள் மூலம் உணர்த்தலாம்.

*(5)* கொல்புனற் றளிரின் நடுங்குவனள் நின்று நின்
எறியர் ஓக்கிய சிறுசெங் குவளை
ஈயென இரப்பவும் ஒல்லாள் நீயெமக்கு
யாரை யோவெனப் பெயர்வோள் **கையதை**
(பதிற்றுப்பத்து 52. 21-24)

*(6)* நகைசான்ற கனவன்று நனவன்று **நவின்றதை** (பரிபாடல் 8.77)

*(7)* **ஊர்ந்ததை,** எரிபுரை யோடை இடைஇமைக்கும்
சென்னிப் பொருசமம் கடந்த புகழ்சால் வேழம்
(பரிபாடல் 21.1-2)

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களுள் *கையதை* என்பதில் நிகழும் ஐயென் கிளவியை அசைநிலை எனப் பதிற்றுப்பத்து உரையாசிரியரும், பிந்திய இரண்டில் நிகழும் *நவின்றதை, ஊர்ந்ததை* ஆகியவற்றில் உள்ள ஐயென் கிளவியைப் *பகுதிப்பொருளது* எனவும் *பகுதிப்பொருள் விகுதி* எனவும் பரிபாடல் உரையாசிரியராகிய

1. ஐயென் கிளவி தொடர்புள்ள எடுத்துக்காட்டுக்களில் [இருப்பு+விளி+[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பினை உணர்த்துவதாகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகின்றது. ஏனெனில் *கண்ணே; மணியே* என்ற கொஞ்சு மொழிகள் *கண்ணானவனே மணியானவனே* என்றோ *கண் போன்று உள்ளவனே, மணிபோன்று உள்ளவனே* என்றோ விரிக்கத் தக்கனவாய் அமைந்து *கண்ணே, மணியே* என்பனவற்றில் நிகழும் (ஐயென்கிளவியின் திரிபாகிய) ஏகாரக்கிளவி இருப்புப் பொருண்மையுட்பட பல பொருண்மைகளை உணர்த்துவனவாய் அமைகின்றன.

பரிமேலழகரும் குறித்துச் செல்வர். மரபு வழிப்புலமை கிட்டத்தட்ட அமைப்பு மொழியியற் கோட்பாட்டினை ஒத்துச் செல்வதால் மரபிலக்கணப் புலவர்களிடத்தில் ஆகட்டும் உரையாசிரியர்களிடத்தில் ஆகட்டும் மொழியின் தனித் தன்மையைப் புலப்படுத்தும் சிந்தனைகளை நாம் எதிர்பார்க்க முடியாது. பல்வேறு பொருண்மைகளும், பொருண்மை யமைப்புகளும் மொழியில் எவ்வாறு வெளிப்பாடு பெறுகின்றன என்பதில் மரபுவழிப்புலமை அவ்வளவாக அக்கறை செலுத்துவ தில்லை. மரபு வழிப்புலமையின் இலக்கணச் சிந்தனைகள் ஒரு நேர்முகவர்ணனைக்கு ஒப்பானதாகும். பார்வையில் பட்டுப் பழகிப் போனவைதான் இந்த வர்ணனையில் இடம்பெறும். பார்வையில் படாதவையும், பழக்கமில்லாதவையும் மரபு வ்ழிப்புலமையால் அசைநிலையெனவும், பகுதிப் பொருள் விகுதி எனவும் ஒதுக்கப்பட்டுவிடுகின்றன. இந்த ஒதுக்கலுக்கு ஐயென்கிளவி மட்டும் எப்படித் தப்பாமலிருக்கமுடியும்? ஒரு வரிவடிவம் நடைமுறையில் இருக்கிறதா இல்லையா என்பது நமக்கு முக்கியம் அல்ல. ஒரு குறிப்பிட்ட பொருண்மை அல்லது பொருண்மையமைப்பு எப்படியெல்லாம் வரிவடிவங்களாக வெளிப்பாடு பெறுகின்றது என்பதுதான் நமக்கு முக்கியம். இந்த வரிவடிவங்களில் சில வழக்கில் இருக்கலாம்; சில வழக்கற்றுப் போயிருக்கலாம். இதுபற்றி நமக்குக் கவலையில்லை. மரபுவழிப் புலமையின் சிந்தனைப்போக்கானது இந்தச் சிந்தனைப்போக்கிற்கு அப்பாற்பட்டது. நமது நிலை மரபுவழிப் புலமையிலிருந்து மாறு பட்ட ஒன்றாகும். மரபுவழிப் புலமைக்கு அப்பால் நின்று, பகுதிப் பொருள் விகுதி எனவும், அசைநிலை எனவும் உரையாசிரியர்களால் குறிக்கப்பெறும் ஐயென்கிளவியின் பொருண்மையமைப்பினையும் பழந்தமிழில் அது எப்படியெல்லாம் திரிந்தமைந்தது என்பதையும் சுருக்கமாக ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## 2.0 ஐ எனப்படுவது

2.1 ஐயென்கிளவியின் பொருண்மையமைப்பினைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளின் துணைகொண்டு கண்டறியலாம்.

(8) ஏனலம் சிறுதினைச் சேணோன் **கையதைப்**
பிடிக்கை யமைந்த கனல்வாய்க் கொள்ளி
விடுபொறிச் சுடரின் மின்னியவர்
சென்ற தேஎத்து நின்றதால் மழையே (அகம். 73.14-17)

(9) போர்வேட் டெழுந்த மள்ளர் **கையதை**
கூர்வாட் குவிமுகம் சிதைய நூறி (அகம். 144. 14-15)

இவ்விரு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *கையதை* என்னும் குறிப்பு வினை *கையது+ஐ* என்ற அமைப்பினதாகிப் பெயரெச்சச் செயற்பாட்டினதாய் நிகழ்கின்றது. இவ்வமைப்பின் பொருண்மை யமைப்பு *கையில் உள்ளதாகிய* என்ற பொருண்மையமைப்புடன் பொருந்துவதாகும். *கையதை* என்பதில் உள்ள *கையது* என்னும் குறிப்பு வினையமைப்பு *கையில் உள்ளது* என்பதனோடும், ஐயென் கிளவி *ஆகிய* என்பதனோடும் பொருண்மை நிலையில் பொருந்தி நிற்கின்றன. *கையில் உள்ளதாகிய* என்ற தொடரில் நிகழும் *உள்ளது, ஆகிய* என்ற இரண்டு வினையமைப்புக்களின் பொருண்மையமைப்புக்களும் முறையே *கையதை* என்பதில் நிகழும் *அது, ஐ* ஆகிய வடிவங்களின் மூலமாக வெளிப்பாடு பெறுகின்றன. இதன் மூலம் ஐயென்கிளவி *கையதை* என்னும் அமைப்பில் ஒரு வினையின் தகுதியுடன் செயல்படுவது புலனாகிறது. இந்த முடிபு ஆகிய என்னும் குறிப்பு வினைப் பெயரெச்சத்துக்கு உரியதாகிய [இருப்பு] என்ற பொருண்மைக்கு மேற்படி ஐயென்கிளவியையும் உரிமையாக்க வகை செய்கின்றது.

*2.2* [இருப்பு] என்ற பொருண்மைக்கு உரியதாகிய ஐயென் கிளவியாகிய வினை, சங்கப் பாடல்கள் தோன்றிய காலத்தில் வழங்கிய தமிழில் வழக்கற்றுப்போன ஒன்றாகக் கொள்ளத்தக்க தாகும். பழந்தமிழ் இலக்கியங்களில் இதன் நிகழ்ச்சியைப் பழமைச் சின்னத்தைப் போற்றும் பாங்கில் அமைந்த ஒன்றாகவே கருதவேண்டும். ஐயென்கிளவியின் செயற்பாடு வாக்கியச் சூழலுக் கேற்பப் பயனிலையாகவோ எச்சமாகவோ அமையும். இந்த வகையில் எடுத்துக்காட்டு (5)-இல் நிகழும் *கையதை* என்பதில் அமைந்த ஐயென்கிளவியைக் கருத்தில் கொள்ளலாம். இவ்வெடுத்துக்காட்டில் *கையதை* என்னும் குறிப்புவினையானது பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த ஒன்றாகும். இதனை, *'இரப்ப என்னும் செயவென் எச்சத்தினைக் கையதை என்னும் முற்றுவினைக் குறிப்போடு முடிக்க'*, என்னும் உரையாசிரியரின் குறிப்புரையும் தெளிவுபடுத்துகின்றது. ஆனால் உரையாசிரியர் இந்த முற்றுவினைக் குறிப்புக்குப் பொருள் உரைக்கையில் ஐயென்கிளவியை அசை நிலையாக ஒதுக்கிவிட்டு, *கையது* என்ற அமைப்பை மட்டுமே கருத்தில் கொண்டு *கையில் உள்ளது* என்று பொருள் குறித்துச் செல்கின்றார். இது மரபுவழிப் புலமைக்கு அமைந்த கோட்பாட்டின் குறைபாடாகும். எடுத்துக்காட்டுக்கள் (8), (9)-இல் நிகழும் *கையதை* என்பதில் அமைந்த ஐயென்கிளவியானது *ஆகிய* குறிப்பு வினைக்கு நிகராய் அமைதலைக் கண்டோம். எடுத்துக்காட்டு

(5)-இல் *கையதை* பயனிலையாய்ச் செயல்படுவதால் இந்தச் சூழலில் ஐயென்கிளவியானது *ஆயிற்று* அல்லது *ஆகிறது* என்ற வினைக்கு நிகராகிப் பயனிலைச் செயற்பாட்டுக்கு உரியதாகின்றது. சற்று விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், எடுத்துக்காட்டு, (5)-இல் பயனிலையாகச் செயல்படும் ஐயென்கிளவி, எடுத்துக் காட்டுக்கள் (8), (9)-இல் முற்றெச்சமாய் அமைந்த பெயரெச்சச் செயற்பாட்டினை. மேற்கொள்கின்றது. பயனிலைச் செயற்பாட்டில் ஐயென்கிளவி மலயாளத்தில் நிகழும் *செய்யுந்து, செய்யும்* வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களைப் போன்றதாகையால், திணை-பால்-எண்-இடப்பொருண்மைகளுக்கு இதில் இடமில்லை. பயனிலைச் செயற்பாட்டிலாகட்டும், எச்சச் செயற்பாட்டிலாகட்டும் ஐயென்கிளவி ஒரு பொதுக்குறிப்பு வினையாகவே தொல் பழந்தமிழில் (அல்லது தொல் பழந்திராவிடத்தில்) நிகழ்ந்ததாகக் கருதலாம். குறிப்பிட்ட வினையமைப்பு பயனிலையாகவும், பெயரைத் தழுவிய எச்சமாகவும் செயல்படும் நிலை தொல்காப்பியத்திலும், சங்கப்பாடல்களிலும் காணப்படுவதால், இத்தகைய நிலை தொல் பழந்தமிழில் (அல்லது தொல் பழந்திராவிடத்தில்) இருந்ததாக மீட்டுருவாக்கம் செய்யமுடியும். இத்தகைய ஒரு நிலையையே ஐயென்கிளவியின் செயற்பாடுகள் தெளிவுபடுத்துகின்றன.

2.3 ஐயென்கிளவியானது குறிப்பு வினை முற்றினையடுத்துப் பயனிலையாகவும், எச்சமாகவும் நிகழும் பாங்கினை எடுத்துக் காட்டுகள் (5)-இலும் (8) மற்றும் (9)-இலும் கண்டோம். தெரிநிலை வினைமுற்றுக்களை அடுத்தும் ஐயென்கிளவி இருப்பு வினையாக நிகழும் போக்கினைப் பழந்தமிழில் காணலாம்.

(10) விருப்பொன்று பட்டவ ருளநிறை யுடைத்தென
வரைச்சிறை **யுடைத்ததை** வையை வையைத்
திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை யறைகெனும்
உரைச்சிறைப் பறையெழ வூரொலித் தன்று (பரிபாடல் 6.21-24)

(11) ............ ............ ............ நம்மூர்க் கெலாஅம்
ஆகுல மாகி **விளைந்ததை** என்றுந்தன்
வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கை பெருங்கருங் கூத்து. (கலித்தொகை 65.26-29)

இவ்வெடுத்துக்காட்டுகளில் அமைந்த *உடைத்ததை, விளைந்ததை* என்ற வினையமைப்புக்கள் *உடைத்தது, விளைந்தது* என்ற வினை களுக்கு நிகராகவே பரிமேலழகராலும், நச்சினார்க்கினியராலும்

கொள்ளப்படுகின்றன. *உடைத்ததை* என்பதில் நிகழும் ஐயென் கிளவியைப் பகுதிப் பொருள் விகுதியாகக் கொள்வார் பரிமேலழகர். இவ்விரு வினையமைப்புகளிலும் நிகழும் ஐயென் கிளவி, *கையதை* என்பதில் நிகழும் ஐயென் கிளவியினின்றும் வேறுபட்டதன்று. ஆகவே *உடைத்ததை, விளைந்ததை* ஆகிய வினைமுற்றுக்களும் முறையே *உடைத்ததாயிற்று, விளைந்த தாயிற்று* என விரிக்கத்தக்கனவாகின்றன. இதன் மூலம் *உடைத்ததை, விளைந்ததை* ஆகியவற்றில் நிகழும் ஐயென்கிளவி *ஆயிற்று* என்ற வினைக்கு நிகராவதை அறியலாம். இவ்வினை யமைப்புகளில் நிகழும் ஐயென் கிளவி குறிப்பு வினையாதலால் இதன் பொருண்மை [இருப்பு] என்றே அமையும். ஐயென்கிளவி தெரிநிலை வினைமுற்றுக்களையடுத்து நிகழும் நிலை பழந்தமிழில் வழக்கற்றுப் போயிற்றெனினும், அதன் பொருண்மை அமைப்பு இயைபுப் பொருண்மையை உணர்த்தியும் உணர்த்தாமலும் பல்லுருபாக்க உத்தியின் மூலம் வினைமுற்றுக்களை அடுத்து வெளிப்பாடு பெறுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகள் புலப்படுத்தும்.

(12) அவன் என்னை முன்னர் விரும்பிய பின்னர் நலத்தைச் சிதைத்தான் ஆயினான்
(கலித்தொகை 142. நச்சினார்க்கினியர் உரை)

(13) தன் நலத்தை அவன்கொண்டமை கூறினாள் ஆயிற்று
(கலித்தொகை 64. நச்சினார்க்கினியர் உரை)

## 3.0 இருப்பும் இயைபும்

இவ்விரண்டிலும் ஐயென் குறிப்புவினையானது *ஆயினான்* எனவும், *ஆயிற்று* எனவும் வெளிப்பாடு பெறுவதைக் காணலாம். இவ்விரண்டனுள் பிந்திய வெளிப்பாடு, தொன்மையில் பயனிலையாய்ச் செயல்பட்ட வினைகள் இயைபுப் பொருண்மையின்றிப் பொது வினைகளாய் இருந்தமையைப் புலப்படுத்தும் ஓர் அகச்சான்றாகக் கொள்ளத்தக்கதாகும். தொன்மையில் பயனிலையாய்ச் செயல்பட்ட வினைகள் இயைபுப் பொருண்மையையும் சேர்த்து உணர்த்திருக்கு மாயின், (13)-இல் அமைந்துள்ள பொதுவினை நிகழ்ச்சிக்குப் பிந்திய தமிழில் வாய்ப்பு இருந்திருக்காது. ஐயென்கிளவியின் இருப்புப் பொருண்மை (12), (13)-இல் உள்ளதுபோல் வினையமைப்புக்களை யடுத்து வெளிப்பாடு பெறாமற்போகுமாயின், தனி வினையில் உள்ள முற்றுவிகுதியே அப்பொருண்மையமைப்பினை உணர்த்து

வதாகக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, (12)-இல் *ஆயினான்* என்னும் இருப்பு வினையின் நிகழ்ச்சி இல்லையாயின், *சிதைத்தான்* என்பதில் நிகழும் *ஆன்* என்னும் முற்று விகுதியே இயைபுப் பொருண்மையை உணர்த்துவதுடன் இருப்புப் பொருண்மையையும் சேர்த்து உணர்த்தும். *ஆயினான்* என்ற வினை நிகழ்கையில் *சிதைத்தான்* என்பதில் உள்ள *ஆன்* என்ற விகுதி இயைபுப் பொருண்மையை மட்டுமே உணர்த்தி நிற்கும். இயைபுப் பொருண்மையை உணர்த்தும் முற்று விகுதிகள் இருப்புப் பொருண்மையையும் உணர்த்துவனவாதலை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம்.

(14) அவன் என்னை முன்னர் விரும்பிய பின்னர் நலத்தைச் சிதைத்தான் ஆயினான். இங்ஙனம் சிதைத்தவனை எதிர்ப்பட்டால் யான் கூடாமல் வேறு செய்வது எவன் கொல்?
(கலித்தொகை 142. நச்சினார்க்கினியர் உரை)

இவ்வெடுத்துக்காட்டில் முதல் வாக்கியம் *சிதைத்தான் ஆயினான்* என்று முடிகின்றது. அடுத்த வாக்கியம் இவ்வினையமைப்பின் தொடர்ச்சியாகச் *சிதைத்தவன்* என்று வினையடையையடுத்துத் தொடங்குகின்றது. முதல் வாக்கியப் பயனிலையை நோக்க முறைப்படி இரண்டாம் வாக்கியத்தில் அமைந்த *சிதைத்தவன்* என்ற அமைப்பானது *சிதைத்தான் ஆயினான்* என்றோ *சிதைத்தவன் ஆனவன்* என்றோ அமையவேண்டும். அவ்வாறு அமையாமல். *சிதைத்தவன்* என்று மட்டுமே அமைவதால், இவ்வமைப்பில் *ஆயினான்* அல்லது *ஆனவன்* என்ற வினையின்கண் அமைந்த இருப்புப் பொருண்மை உள்ளீடாகப் பொருந்தி நிகழ்கிறது என்றே கொள்ளவேண்டும். இது காரணம் பற்றியே *சிதைத்தவன்* என்ற அமைப்பினை அடுத்து [இருப்பு] என்ற பொருண்மை தனி வரிவடிவ அமைப்பாக வெளிப்பாடு பெறாமற்போகின்றது. சங்கப்பாடல்களில் நிகழும் தனிவினைகள் பொருள் விளக்கம் பெறுகையில் இப் பொருண்மையானது தனி வரிவடிவமாக வெளிப்பாடு பெறுவதை உரையாசிரியர்கள் தமிழில் காணமுடிகின்றது. எடுத்துக்காட்டாக, *முயங்கினை சென்றீமோ* (கலித்தொகை 64.29) என்ற தொடருக்குப் பொருள் குறிக்கையில், *முயங்கிச் செல்வாய்* எனக் குறிக்காமல் *முயங்கினையாய்ச் செல்வாய்* என்று நச்சினார்க்கினியர் குறிப்பதைக் கருத்தில் கொள்ளலாம். இத்தகைய உரை அமைவதற்குக் காரணம் பாடலில் நிகழும் *முயங்கினை* என்னும் தனிவினையில் உள்ள ஐயென்னும் முன்னிலை ஒருமை விகுதி

[இருப்பு +இயைபு] என்ற பொருண்மையமைப்பை உள்ளீடாகக் கொண்டுள்ளது என்ற உணர்வேயாகும். இல்லையெனில் *முயங்கினை* போன்ற தனிவினைகள் இத்தகைய பொருள் விளக்கம் பெறுவதற்கு வாய்ப்பே இல்லை. *முயங்கினை* என்னும் முற்றெச்சத்துக்கு ஈடாக *முயங்கி* என்னும் பொது வினையெச்சம் அமைவதால் முந்தியதில் ஐயென்கிளவிக்கு அமைந்த [இருப்பு+ இயைபு] என்ற பொருண்மையமைப்பில் காணப்படும் இருப்புப் பொருண்மை பிந்தியதில் அமைந்த இகரக் கிளவிக்கும் பொருந்தும். முற்றுவினைகளில் மட்டுமல்லாமல் எச்சவினைகளிலும் இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சியை இது தெளிவுபடுத்துவதாய் உள்ளது.

## 4.0 கவைப் பயனிலையில் ஐயென் கிளவி

4.1 இனி மீண்டும் ஐயென் கிளவிக்கு வருவோம். இருப்புப் பொருண்மையமைப்புக்குரிய ஐயென் கிளவி நேர் வினை முற்றுக்கு நிகராய் அமையும் கவை வினைமுற்றினை அடுத்தும் நிகழும் நிலையைப் பழந்தமிழில் காண முடிகின்றது. *மாதவன் மாதவியை மணந்தான்* என்ற நேர் வாக்கியத்தில் நிகழும் *மணந்தான்* என்னும் வினையானது நேர்வினையாகவும், *மாதவன் மணந்தது மாதவியை, மாதவியை மணந்தவன்/மணந்தது மாதவன்* ஆகிய கவை வாக்கியங்களில் நிகழும் *மணந்தது, மணந்தவன்* என்பவை கவை வினைகளாகவும் கருதப்பெறும். ஐயென்கிளவி பழந்தமிழில் திணைபால்-எண்-இடப் பொருண்மையை உணர்த்தாத கவைவினைகளாகிய பொதுவினைகளை அடுத்தே பெரும்பாலும் நிகழ்கின்றது. (இக்கூற்று சரிபார்க்க வேண்டிய ஒன்று)

(15) நிலனாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்த சொல் புதிதுண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்து நாம் விடுத்தக்கால்
சுடரிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை
(கலித்தொகை 35. 17-20)

(16) புகர்முகக் களிறொடு புலிபொரு துழக்குநின்
அகன்மலை யடுக்கத்த அமையேய்க்கும் என்பதோ
கடையெனக் கலுழுநோய் கைம்மிக என் தோழி
தடையின திரண்டதோள் தகைவாடச் சிதைத்ததை
(கலித்தொகை 45. 12-15)

(17) போதெழின் மலருண்கண் இவண் மாட்டு நீயின்ன
காதலை யென்பதோ இனிதுமற் றின்னாதே

மின்னோரும் கண்ணாக இடி யென்னாய் பெயலென்னாய்
இன்னதோ ராரிடை ஈங்குநீ **வருவதை**

(கலித்தொகை 49. 10-13)

(18) **ஊர்ந்ததை**, எரிபுரை யோடை இடையிமைக்கும் சென்னிப்
பொருசமன் கடந்த புகழ்சால் வேழம்

(பரிபாடல் 21. 1, 2)

(19) **பூண்டதை**, சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த
உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடக் கமழ்தார்

(பரிபாடல் 21. 10, 11)

(20) **அமர்ந்ததை**.... ..... ..... ..... ....
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம் (பரிபாடல் 21. 12, 15)

இந்த ஆறு எடுத்துக்காட்டுகளில் நிகழும் *உரைத்ததை, சிதைத்ததை, வருவதை, ஊர்ந்ததை, பூண்டதை, அமர்ந்ததை* ஆகிய கவை வினைகள் முறையே *உரைத்ததானது, சிதைத்ததானது, வருவதானது, ஊர்ந்ததானது, பூண்டதானது, அமர்ந்ததானது* ஆகிய அமைப்புக்களுடன் பொருண்மையமைப்பில் ஒன்றுபடு வனவாகும். பொருண்மையமைப்பில் காணப்படும் இந்த ஒற்றுமை *உரைத்ததை* முதலியவற்றில் நிகழும் ஐயென் கிளவியை *உரைத்ததானது* முதலியவற்றில் காணப்படும் *ஆனது* என்ற குறிப்புவினைக்கு ஈடாகக் கொள்ளத் துணைபுரிகிறது. இதனடிப்படையில் *ஆனது* என்பதன் பொருண்மையமைப்புக்கு ஐயென்கிளவியும் உரியதாகின்றது என்பது பெறப்படுகின்றது.

4.2 *உரைத்ததை* (15) என்னும் கவை வினைக்கு நேரான நாமறிந்த நேர்வினை *உரைத்தார் ஆயினார்* என அமையும். சற்று விளக்கமாகச் சொல்லவேண்டுமாயின் *உரைத்ததை* என்னும் கவை வினை நிகழும் வாக்கியம் **அவர் வருதும் என்று நமக்கு உரைத்தானது நீண்மாடக்கூடலார் புலனாவிற் பிறந்த சொல் புதிதுண்ணும் பொழுதிலாகும்* என்ற கவை வாக்கியமாய் அமைந்து, **நீண்மாடக் கூடலார் புலனாவிற் பிறந்தசொல் புதிதுண்ணும் பொழுதில் வருதும் என்று அவர் நமக்கு உரைத்தார் ஆயினார்* என்ற நேர்வாக்கியத்துடன் பொருந்தும். நேர்வாக்கியத்தில் நிகழும் *உரைத்தார் ஆயினார்* என்னும் நேர்வினைத் தொடர், கவை வாக்கியத்தில் *உரைத்ததானது* அல்லது *உரைத்ததை* என்ற கவை வினைத்தொடராக அமையும். இந்த ஆய்வு முறையினை ஏனைய எடுத்துக்காட்டுகளில் நிகழும் *சிதைத்ததை, வருவதை, ஊர்ந்ததை, பூண்டதை, அமர்ந்ததை,* ஆகிய கவை வினைகள் அமைந்த வாக்கியங்களுக்கும் பொருத்தலாம்.

எடுத்துக்காட்டு (17)-இல் நிகழும் *வருவதை* என்பது **வருகின்றாய் ஆகிறாய்* என்ற நேர்வினைத் தொடருடன் பொருந்தும். இறுதி மூன்று எடுத்துக்காட்டுகளில் *முருகன்* என்பதனை எழுவாயாகக் கொண்டு *ஊர்ந்ததை* முதலியவற்றை விளக்கலாம். எடுத்துக் காட்டாக (18)-இல் நிகழும் *ஊர்ந்ததை* என்பதனை **முருகன் ஊர்ந்ததானது* என விரித்து, இதனை **முருகன் ஊர்ந்தான் ஆயினான்* என்ற நேர் வாக்கியத்துடன் பொருத்திக் கொள்ளலாம். *பூண்டதை, அமர்ந்ததை* ஆகியவற்றுக்கும் இவ்வாறே கொள்க.[2]

## 5.0 குறிப்பு வினையில் ஐயென் கிளவி

5.1 ஐயென்கிளவி, குறிப்புவினை முற்றுக்களையடுத்து நிகழ்கையிலும் குறிப்புக் கவைவினையாக நிகழவல்லது என்பதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் உணர்த்தும்.

(21) **கையதை**, (கொள்ளாத் தெவ்வர்கொள் மாமுதல் தடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்படை திறந்த) வேல்.
(பரிபாடல் 21. 8,9)

(22) **கையதை**, (அலவன் கண்பெற அடங்கச் சுற்றிய பலவுறு
கண்ணுள் சிலகோல்) அவிர்தொடி (கலித்தொகை 85. 6,7)

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *கையதை வேல், கையதை.... அவிர்தொடி* ஆகிய வாக்கியங்கள் முறையே *கையில் உள்ளதானது வேல், கையில் உள்ளதானது அவிர்தொடி* என

2. இவ்வாய்வில் (15) முதல் (20) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *உரைத்ததை, சிதைத்ததை, வருவதை, ஊர்ந்ததை, பூண்டதை, அமர்ந்ததை* ஆகிய கவை வினைகளை இன்னொரு கோணத்திலும் பார்க்கலாம். எடுத்துக்காட்டாக (15)-இல் நிகழும் *உரைத்ததை* என்ற வினையமைப்பு *உரைத்தபொழுது* அல்லது *உரைத்தகாலம்* எனவும் விரிக்கற்பாலதாகலின் மேற்படி வினையமைப்பை *உரைத்தபொழுதானது* அல்லது *உரைத்தகாலமானது* என்ற தொடர்களுடனும் பொருத்தலாம். இந்த வகையிலும் ஐயென்கிளவியானது *ஆனது* என்ற குறிப்பு வினையின் பொருண்மையமைப்புக்கு உரியதாகின்றது.

இதனைக் கருத்தில்கொண்டு எடுத்துக்காட்டுகள் (2), (3)-இல் நிகழும் *மகளை, நாடனை* ஆகியவற்றை முறையே **மகள் ஆனவளை* (=மகள் ஆனவளே), *நாடன் ஆனவனை (=நாடன் ஆனவனே) என விரிக்கலாம். இவ்விரிவமைப்புகளில் நிகழும் ஐயென்கிளவி [விளி[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பை மட்டுமே உணர்த்தும். ஆனால் *மகளை, நாடனை* என்பனவற்றில் நிகழும் ஐயென்கிளவி இத்தகையதன்று. ஆகவேதான் இக்கிளவி அடிக்குறிப்பு (1)-இல் குறிக்கப் பெற்றுள்ள [இருப்பு[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்புக்கு உரியதாகின்றது. *மகளை, நாடனை* ஆகியவை **மகள் ஆனவளை, *நாடன் ஆனவனை* என விரிக்கற்பாலனவாகலின், மேற்படி குறுக்க வடிவங்களில் நிகழும் ஐயென் கிளவிக்கு உரிய பொருண்மையமைப்பில் காலப்பொருண்மை குறிப்பாகப் பெறப்படுகின்றது.

விரிக்கற்பாலனவாகும். இவ்விரிவமைப்புக்களில் நிகழும் *ஆனது* என்ற குறிப்புக் கவை வினையுடன் *கையதை* என்பதில் உள்ள ஐயென்கிளவி பொருந்தி, குறிப்புக்கவை வினையாதலைக் காணலாம். இந்த இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் நிகழும் *கையதை* என்பதானது நேர்வினையாகக் கொள்ளப்படுமாயின் *கையதை ... வேல், கையதை ... அவிர்தொடி* என்ற வாக்கியங்கள் முறையே *வேல் கையில் உள்ளதாகும், அவிர்தொடி கையில் உள்ளதாகும்* என்ற நேர்வாக்கியங்களுடன் சென்று பொருந்தும். இந்தப் பொருத்தம் ஐயென்கிளவியை, *ஆகும்* என்ற குறிப்பு நேர்வினைக்குச் சமமாகக் கொள்ள வகைசெய்கின்றது.

*5.2* எடுத்துக்காட்டுக்கள் *(21), (22)*-இல் நிகழும் *கையதை* என்பதில் உள்ள *கையது* என்னும் குறிப்புவினையானது *கையில் உள்ள கருவி, கையில் உள்ள அணி* என விளக்கம் பெறுவதற்கு உரியதாயின், *கையதை* என்ற அமைப்பு *கையில் உள்ள கருவியானது, கையில் உள்ள அணியானது* என விரிக்கப்பெறும். இத்தகைய விரிவமைப்புக்களிலும் ஐயென்கிளவி *ஆனது* என்ற குறிப்புக்கவை வினையுடன் பொருந்துவதைக் காணலாம். *கையில் உள்ள கருவியானது வேல், கையில் உள்ள அணியானது அவிர்தொடி* என்ற கவை வாக்கியங்கள் *வேல் கையிலுள்ள கருவியாகும், அணி கையில் உள்ள அவிர்தொடியாகும்* என்ற நேர்வாக்கியங்களுடன் பொருந்தி, ஐயென்கிளவியை *ஆகும்* என்னும் நேர் வினையின் பிரதிபலிப்பாகக்கொள்ளவும் வகை செய்வதைக் காணலாம். இந்தச் சான்றுகள் அனைத்தும் ஐயென் கிளவியை இருப்புப்பொருண்மையை உணர்த்தும் குறிப்புவினையாகக் கொள்வதற்குத் துணைபுரியும் வலுவான சான்றுகளாகும். அத்துடன் ஐயென்கிளவியின் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மையைத் தவிர அல்லது இருப்புப்பொருண்மையுடன் வேறுபொருண்மைக் கூறுகளும் இடம்பெறவல்லன என்பதையும் இச்சான்றுகள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வாறு வேறு பொருண்மைக்கூறுகளையும் தன் வரிவடிவத்தின் மூலம் உணர்த்துதல் இருப்பு வினைக்கமைந்த சிறப்பியல்புகளில் ஒன்றாகும்.

5.3 பழந்தமிழ் இலக்கியங்களில் ஐயென்கிளவி பெரும்பாலும் கவை வினைகளையடுத்து நிகழும் போக்கே காணப்படுகின்றது. கலித்தொகையில் இதன் நிகழ்ச்சி மிகுதியாக உள்ளது. இங்கெல்லாம் நிகழும் ஐயென் கிளவியின் பொருண்மை

யமைப்பினை இவ் ஆய்வில் கண்டவாறு காணமுற்பட்டால் மொழியை நாம் சரியான கோணத்தில் பார்க்க முயல்கிறோம் என்று பொருள்படும். இந்த வகையில் உரையாசிரியர்களை நம்பிப் பயனில்லை. (ஆனால் உரையாசிரியர்களின் மொழி சில சமயங்களில் இத்தகைய ஆய்வுக்குப் பெருந்துணை புரியவல்லதாகும்). மொழியின் ஒரு குறிப்பிட்ட பொருண்மையமைப்புக்குரிய வடிவம் காலந்தோறும் வெவ்வேறு வரிவடிவங்களாக வெளிப்பாடு பெறுவதற்கு வாய்ப்பு உண்டு. இது மொழியில் நிகழும் இயல்பான வளர்ச்சியாகும். மொழியை அணுகும் யாரும் இந்த உண்மையை நன்கு உணர்ந்து கொண்டால்தான் ஒரே பொருண்மையமைப்பை உணர்த்தும் ஒன்றுக்கு மேற்பட்ட வரிவடிவங்களைத் தொடர்புபடுத்த முடியும். இந்த உணர்வு உரையாசிரியர்களுக்கும் மரபுவழிப் புலமையாளர்களுக்கும் இல்லாமற் போனமையால்தான் ஐயென் கிளவியின் பொருண்மை யமைப்பு புகைமூடிப்போயிற்று. இந்தப் புகை மூட்டம் ஐயென்கிளவியின் திரிபுகளையும் செம்மையாகச் சூழ்ந்து கொண்டது. இதனைச் சற்று தொலைவு சென்ற பிறகு காணலாம்.

## 6.0 பொருளொடு புணரா ஐயென் கிளவி

ஐயென்கிளவி சார்ந்து நிற்கும் ஓர் அமைப்பு தனக்குரிய பொருண்மையை உணர்த்தாமல் வேறு பொருண்மையை உணர்த்தும் நிலையில், மேற்படி ஐயென்கிளவி தனக்குரிய பொருண்மையமைப்பினை உணர்த்துவதாகாது. பின்வரும் எடுத்துக்காட்டினைக் கருத்தில் கொள்க.

(23) நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினநீடி னோரும்
சேரா வறத்துச் சீரி லோரும்
அழிதவப் படிவத்து அயரி யோரும்
மறுபிறப் பில்லெனும் மடவோரும் சேரார்
நின்னிழல்... ... ... ... (பரிபாடல் 5. 71-77)

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் **அல்லதை** என்னும் அமைப்பு எதிர்மறை (?)ப் பொருண்மையை உணர்த்தாமல் **தவிர** என்னும் பொருண்மையை உணர்த்துவதால் இதன்கண் காணப்படும் ஐயென்கிளவி, பகுதிப் பொருள் விகுதியாக அமைந்து,தனக்குரிய பொருண்மையமைப்பை உணர்த்தும் வாய்ப்பினை இழந்து விடுகின்றது.

## பகுதி - 2

### 7.0 விகுதியேற்கும் ஐயென்கிளவி

*7.1* இருப்புப் பொருண்மைக்குரிய ஐயென்கிளவி ஒரு வினைக்குரிய நிலையில் விகுதியேற்கும் போக்கினைப் பின்வரும் எடுத்துக்காட்டுகள் உணர்த்தும்.

(24) நீயுடன் படுதலின் யான்தர வந்து
குறிநின் றனனே குன்ற நாடன்
இன்றை யளவை **சென்றைக்கென்றி**
கையும் காலும் ஓய்வன அழுங்கத்
தீயுறு தளிரின் நடுங்கி
யாவது மிலையான் செயற்குரி யதுவே (குறுந்தொகை 383)

(25) கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர் தூற்றத்
தொன்னலம் நனிசாய நம்மையோ **மறந்தைக்க**
ஒன்னாதார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்ற
வெண்வேலான் குன்றின் மேல் விளையாட்டும் விரும்பார்கொல்
(கலித்தொகை 27. 13-16)

(26) எழுதெழில் மலருண்கண் **இருந்தைக்க** வெனப்போனான்
(சிலம்பு. 19. 67)

(27) வாய்வதின் வந்த குரவையின் வந்தீண்டும்
ஆயமட மகளிர் எல்லீரும் கேட்டீமின்
ஆயமட மகளிர் எல்லீரும் **கேட்டைக்க**
பாய்திரை வேலிப் படுபொருள் நீயறிதி
காய்கதிர் செல்வனே கள்வனோ என் கணவன்
(சிலம்பு. 18. 47-51)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *சென்றைக்க, மறந்தைக்க, இருந்தைக்க, கேட்டைக்க* ஆகிய வினை அமைப்புக்கள் *செய்தைக்க* என்ற வாய்பாட்டினவாகி, முறையே *செல்க, மறக்க, இருக்க, கேட்க* என்ற செய்க வாய்பாட்டு வினைகளுடன் பொருந்தி வியங்கோட் பொருண்மையை உணர்த்துவதாகத் தோன்றுகின்றது. *மறந்தைக்க* என்பதனை *வியங்கோட்டிரிசொல்* எனக் குறிப்பார் நச்சினார்க்கினியர். *கேட்டைக்க* என்பதைப் பற்றிக் குறிப்பிடுகையில் '*கேட்டை என்னும் வினையசைச் சொல் உடனடுக்கி வரற்பாலது கேட்டீமின் என்பதனோடு மொழியிடையடுக்காகி ஈற்று வியங்கோட் பொருண்மையாற் கேட்க வென்னும் பொருட்டாயிற்று*' என்பார் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார். எடுத்துக்காட்டு (27)-இல்

*கேட்டீமின், கேட்டைக்க* ஆகிய இரண்டும் ஒரே சூழலில் நிகழ்வதால் *கேட்டைக்க* என்பது ஏவற் பொருண்மையை உணர்த்தக்கூடுமா என்பது சிந்தனைக்குரியது.

7.2 செய்தைக்க வாய்பாட்டு வினைகள் *செய்து+ஐக்க* என்ற அமைப்பினவாகக் கொள்ளத்தக்கனவாகும். இவ்வமைப்பில் நிகழும் *ஐக்க* என்னும் வினையமைப்பு ஐயென்கிளவியின் அடியாகத் தோன்றிய ஒரு செய்க வாய்பாட்டு வல்வினையாகும். இதனைத் தெளிவுபடுத்தும் வகையில் எடுத்துக்காட்டு (26)-இல் உள்ள *இருந்தைக்க* என்னும் வினையமைப்பினைக் கருத்தில் கொள்வோம். இவ்வினையமைப்பு *இருப்பாய் ஆக* என்ற தொடரின் பொருண்மையுடன் ஒன்றுபடுகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு *இருந்தைக்க* என்பதில் உள்ள *இருந்து, ஐக்க* ஆகிய வினைகளை முறையே *இருப்பாய், ஆக* என்ற வினைகளின் மாற்று வடிவங்கள் எனக் கொள்ளலாம். *இருந்தைக்க* என்ற வினையமைப்பு *இருக்க* என்ற அமைப்பினோடும் பொருண்மை நிலையில் ஒன்று படுவதால், பிந்திய அமைப்பில் நிகழும் *இருக்கு+அ* என்ற உறுப்புக்கள் முறையே முந்திய அமைப்பில் நிகழும் *இருந்து, ஐக்க* என்ற உறுப்புகளின் மாற்று வடிவங்களாக அமைகின்றன. *இருக்க, இருந்தைக்க, இருப்பாய் ஆக* ஆகியவற்றில் நிகழும் உறுப்புக்கள் ஒன்றோடொன்று பொருந்துமாற்றினைப் பின்வரும் சமன்பாடு தெளிவுபடுத்தும்.

| (28) உறுப்பு-1 | | உறுப்பு-2 |
|---|---|---|
| இருக்கு | + | அ |
| இருந்து | + | ஐக்க (< ஐக்கு + அ) |
| இருப்பாய் | + | ஆக |

இச்சமன்பாட்டில் *இருந்து* என்னும் உறுப்பு *இரு* என்பதன் மாற்றுருபாகக் கொள்ளப்படும். *இருப்பாய்* என்னும் உறுப்பு காலக்குறிப்பு ஏதுமின்றி இயைபு விகாரத்தின்மூலம் வருவிக்கப் பெறும்.[3] செய்தைக்க வாய்பாட்டு வினைகளில் நிகழும் *ஐக்க* என்னும் வடிவம் *ஆக* என்பதனை மாற்றுவடிவமாகக் கொண்டுள்ளதால்,

---

3. *இருப்பாய் ஆக* என்ற தொடரில் நிகழும் *இருப்பாய்* என்னும் வினை *இருப்பு+ஆய்* எனக் கொள்ளப்படும். இவ்வமைப்பில் நிகழும் *இருப்பு* என்னும் வரிவடிவம் *இரு* என்னும் வினையடியின் மாற்றுருபாகக் கொள்ளப்படும். [முன்னிலை[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்புக்கு உரிய ஆய் என்னும் விகுதி இயைபு விகாரத்தின் **(Agreement Transformation)** துணைகொண்டு வருவிக்கப்படும்.

பிந்தியது எங்ஙனம் *ஆகு+அ* என்ற ஆய்வுக்கு உரியதாகின்றதோ அங்ஙனமே முந்தியதும் *ஐக்கு+அ* என்ற ஆய்வுக்குரியதாகின்றது. இதன் மூலம் ஐயென்கிளவி *ஆகு* என்பதன் மாற்று வடிவம் என்ற செய்தி பெறப்படுகின்றது. இம்மாற்று வடிவம் காலத்தால் முந்தியதாகும். ஒரு நிலையில் பயனிலையாகவும் முற்றெச்சமாகவும் செயல்பட்ட ஐயென்கிளவி *செய்தைக்க* வாய்பாட்டு வினைகளில் விகுதி ஏற்கும் அளவுக்கு வளர்ச்சி அடைந்துவிட்டது. *ஐக்க* என்ற வினையமைப்பில் *ஐக்கு* என்பது இருப்புப் பொருண்மையும், அகரக்கிளவி வியங்கோட் பொருண்மையையும் உணர்த்துவனவாகும்.[4] இவ்வாய்வின் மூலம் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் அகர கிளவி [இருப்பு+வியங்கோள்] என்ற பொருண்மையமைப்புக்கு உரியதாகும் செய்தியும் பெறப்படுகின்றது.[5] இப்பொருண்மையமைப்பில் காலப் பொருண்மைக்கு இடமில்லை. ஏனெனில் வியங்கோள் காலத்தைச் சார்ந்து நிற்க வேண்டுமென்ற கடப்பாடு இல்லை. இது ஏவல் வினைகளுக்கும் பொருந்தும்.

7.3 இந்தக் கட்டத்தில் சற்றுப் பின் சென்று ஐயென் கிளவியின் பொருண்மையமைப்பில் நேர்ந்த மாறுதல்களைக் குறிப்பிட்டாக வேண்டும். செய்தைக்க வாய்பாட்டு வினைகளில் கண்டதுபோல் *ஐக்க* என்னும் வினையமைப்பு மட்டும் செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழவில்லை. இவ்வாய்பாட்டு வடிவங்களையடுத்து ஐயென் கிளவி மட்டுமே நிகழும் நிலையும் பழந்தமிழில் காணப்படுகின்றது.

---

4. *ஐக்க* என்பதை *ஐக்கு+அ என்று பகுத்து, ஐக்கு என்பதை வண்ணனை நிலையில் ஐ (=ஆகு) என்பதன் மாற்றுருபாகக் கருதலாம்.

5. *இருந்தைக்க, இருப்பாய் ஆக* ஆகிய வியங்கோள் வினைகளில் இருப்புப் பொருண்மை *இரு, ஐ, ஆகு* என மூன்று வரிவடிவங்களில் வெளிப்பாடு பெறுகின்றது. முதல் வினையில் இப்பொருண்மை *இரு, ஐ* ஆகிய வடிவங்களிலும் இரண்டாம் வினையில் *இரு, ஆகு* என்ற வடிவங்களிலும் வெளிப்பாடு பெறுகின்றது. இருக்க (<இருக்கு + அ) என்ற வினையமைப்பில் *அ* என்பது இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சியைக் குறிக்க வேண்டியதில்லை என்றே தோன்றுகின்றது. ஏனெனில் *இருக்க* என்பதில் பகுதியே இப்பொருண்மையை உணர்த்திவிடுகின்றது. *இருந்தைக்க, இருப்பாய் ஆக* ஆகிய வினைகளில் இருப்புப் பொருண்மை பிரதி செய்யப்பட்டாக வேண்டிய ஒரு நெருக்குதல் ஏற்படுகின்றது. இந்த நெருக்குதலை *இருக்க* என்ற வியங்கோள் வினையின் மீது சுமத்த வேண்டாம் என்றே தோன்றுகின்றது. சுமத்தித்தான் தீரவேண்டுமென்றால் இங்கும் இருப்புப் பொருண்மையைப் பிரதி செய்வதைத் தவிர வேறு வழியில்லை. இருப்பு வினைகளைத் தவிர ஏனைய வினையடிகளின் அடியாகத் தோன்றிய செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் அகரக்கிளவி [இருப்பு+வியங்கோள்] என்ற பொருண்மையமைப்பைக் குறித்து நிற்கும்.

(29) இன்னும், கடம்பூண் டொருகால்நீ வந்தை யுடம்பட்டாள்
என்னாமை என்மெய் தொடு (கலித்தொகை 63. 12, 13)

(30) ஆயிழாய், தாவாத எற்குத் தவறுண்டோ காவா தீங்கு
ஈத்தை இவனையாம் கோடற்கு (கலித்தொகை 86. 1, 2)

(31) நன்னுதால்! காண்டை நினையா நெடிதுயரா
என்னுற்றாள் கொல்லோ இஃதொத்தி
(கலித்தொகை 144. 1,2)

(32) நெட்டிருங் கூந்தலாய் கண்டை இஃதோர்சொல்
(கலித்தொகை 105. 57)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *வந்தை* (=வாராய்), *ஈத்தை* (=ஈயாய்), *காண்டை, கண்டை* (=காணாய்) ஆகிய வினையமைப்புக்கள் செய்தை வாய்பாட்டினவாகி ஏவற் பொருண்மையை உணர்த்து வனவாகின்றன. எடுத்துக்காட்டு (29)-இல் நிகழும் *வந்தை* என்பதற்கு *வாராய்* என உரை வகுத்து *'வாவென்றது வந்தையெனத் திரிந்தது'* எனக் குறிப்புரை நல்குவார் நச்சினார்க்கினியர்.[6] செய்தை வாய்பாட்டு வடிவங்களில் நிகழும் ஐயென்கிளவி [இருப்பு+ஏவல்+[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்புக்கு உரியதாகும். ஏவற் பொருண்மையின் நிகழ்ச்சியின் முன்னிலைப் பொருண்மை உள்ளீடாக இருப்பதால் பிந்தியதைத் தனியாகச் சுட்டவேண்டுவது இல்லை. செய்தை வினைகளில் ஐயென் கிளவிக்குக் குறிக்கப்பெற்ற பொருண்மை அமைப்பு *செய்யாய்* வாய்பாட்டு ஏவல் வினைகளில் நிகழும் *ஆய்* என்னும் விகுதிக்கும் பொருந்தும். செய்தை வாய்பாட்டு வினைகளும் செய்யாய் வாய்பாட்டு வினைகளும் ஒரே பொருண்மையனவாகத் தோன்று வதால் முந்தியதில் நிகழும் செய்து வாய்பாட்டு வடிவங்கள் வினையடிகளின் மாற்றுருபுகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. இது மேலும் ஆய்வுக்குரியது.

7.4 செய்தைக்க வாய்பாட்டு வினைகளில் *ஐக்க* என்னும் செய்க வாய்பாட்டு வினை ஐயென்னும் வினையடியாகத் தோன்றியது என முன்னர்க் கண்டோம். இவ்வினையடியாகத் தோன்றி, செய்து வாய்பாட்டு வடிவங்களை அடுத்து நிகழும் இருவகை வினைகளைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

---

6. *வந்தை, ஈத்தை, காண்டை/கண்டை* ஆகியவற்றை இறந்தகால வினைகளாகக் கருதுவதற்கில்லை. இவற்றின் காலப்பகுதிகளாகிய *வந்து, ஈத்து, காண்டு/கண்டு* ஆகியவற்றைச் *செய்யுந்த்உ (>செய்யுத்து) வாய்பாட்டு இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களின் திரிபுகளாகக் கருதலாம். எ-டு: *வருந்து>வர்ந்து>வந்து; *ஈயுத்து>ஈய்த்து>ஈத்து.

*(33) இடைபாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைபாயும் வெள்ளேறு* ***கண்டைகா*** *(கலித்தொகை 105. 43-44)*

*(34) இனி, யாதுமீக் கூற்றம் யாமில மென்னுந்
தகையது* ***காண்டைப்பாய்*** *நெஞ்சே! (கலித்தொகை 87. 14-15)*

இவ்விரு எடுத்துக்காட்டுக்களிலும் செய்து வாய்பாட்டு வடிவத்தையடுத்து ஐயென் வினையடியாகத் தோன்றிய *ஐகா, ஐப்பாய்* ஆகிய வினையமைப்புக்கள் நிகழ்கின்றன. *கண்டைகா* என்னும் வினைக்கு நச்சினார்க்கினியர் *காணாய்* என உரை வகுப்பதைக் கருத்தில் கொண்டு, *ஐகா* என்னும் வினையமைப் பினைச் செய்தை வினைகளில் நிகழும் ஐயென்கிளவியின் பொருண்மையமைப்புக்கு உரிமையாக்கலாம். *கண்டைகா* என்னும் வினைக்குக் குறிப்புரை எழுதுகையில் *'இகா முன்னிலையசை, அது காவெனத் திரிந்தது'* என நச்சினார்க்கினியர் குறிப்பிடுவதால் மேற்படி வினையமைப்பு அவர் பார்வையில் **கண்டை+இகா* என்று அமைகின்றது. ஐயென்கிளவியை ஓர் வினையாகக் கொண்ட நமக்கு நச்சினார்க்கினியரின் **கண்டை+இகா* என்ற ஆய்வுமுறை உடன்பாடில்லை. நமது ஆய்வில் *கண்டைகா* என்பது *கண்டு+ஐகா* என்றே அமையும். இந்த அமைப்பில் நிகழும் *ஐகா* என்னும் வினை செய்தைக்க வினைகளில் நிகழும் *-ஐக்க* என்பதனுடன் தொடர்புடையதாகக் கொள்ளத்தகுமா என்பது சிந்தனைக்குரிய ஒன்றாகும். *ஐகா* என்பதனை *ஐகு+ஆ* என்ற அமைப்பினதாகக் கொண்டு முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும், இரண்டாம் உறுப்பு [ஏவல் + [+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பையும் குறிப்பனவாகக் கொள்ளலாம். இந்த ஆய்வில் *ஐகு* என்னும் இருப்பு வினை ஐயென் கிளவியின் மாற்றுருபாகக் கொள்ளப்படும். *கண்டைகா* என்ற அமைப்பில் *கண்டு* என்னும் செய்து வாய்ப்பாட்டு வடிவம் *காண்* என்னும் வினையடியின் மாற்றுருபாகும். (அடிக்குறிப்பு 7-இல் காணப் படும் மாற்றுக் கருதுகோளையும் கருதுக). *கண்டைகா, காணாய்* ஆகியவற்றில் *-ஐகா* என்னும் அமைப்பும், *ஆய்* என்னும் வரி வடிவமும் உணர்த்தும் பொருண்மையமைப்பினை *0* எனக் குறிக்கப்பெறும் உருவிலாக்கிளவியும் உணர்த்தும். இவ்வுருவிலாக் கிளவி வினையடிகளையடுத்து நிகழற்பாலதாகும்.

7.5 இனி எடுத்துக்காட்டு (34)-க்கு வருவோம். இவ்வெடுத்து காட்டில் நிகழும் *காண்டைப்பாய்* என்பது *காணாய்* என்னும்

ஏவல் வினையின் பொருண்மை அமைப்புக்கு உரியதாகும்.[7] நச்சினார்க்கினியர் இந்த வினைக்கு *நினைத்துப்பார்ப்பாய்* என்று பொருள் உரைப்பார். *காண்டைப்பாய்* எதிர்கால வினையாக நிகழுமாயின் அதில் உள்ள *ஐப்பாய்* என்னும் ஐயடிவினை ஐ+ப்ப்+ஆய் என்ற அமைப்பினதாகக் கொள்ளப் பெற்று முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும், இரண்டாம் உறுப்பு காலப் பொருண்மையையும் மூன்றாம் உறுப்பாகிய *ஆய்* [முன்னிலை + [+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பையும் உணர்த்துவனவாகக் கொள்ளப்படும். எடுத்துக்காட்டு (34)-இல் நிகழும் *காண்டைப்பாய்* ஏவற் பொருண்மையை உணர்த்து வதால் *ஐப்பாய்* என்னும் ஐயென் வினை *ஐப்பு+ஆய்* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்பெற்று *ஐப்பு* என்னும் வடிவம் இருப்புப் பொருண்மையையும் அதனை அடுத்து நிகழும் *ஆய்* என்னும் வடிவம் [ஏவல் + [+ஒருமை]] என்ற பொருண்மை அமைப்பையும் குறிப்பனவாகக் கொள்ளப்படும். *ஐப்பு* என்பது *ஐயென்* வினையின் மாற்றுருபாகக் கொள்ளப்படும். இவ்வாறே *காண்டைப்பாய்* என்பதில் நிகழும் *காண்டு* என்னும் வடிவம் *காண்* என்னும் வினையடியின் மாற்றுருபாகக் கருதப்பெறும். ஏவல் வினைகளின் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சி தவிர்க்க முடியாத ஒன்று என்பதைக் *காண்டைப்பாய்* வினையில் நிகழும் (இருப்புப் பொருண்மையை உணர்த்தும் ஐயென் கிளவியின் மாற்றுருபாகிய) *ஐப்பு* என்ற வடிவம் நன்கு உணர்த்துகின்றது. ஆகவேதான் *காண்டைப்பாய்* என்பதற்கு நிகராக அமையும் *காணாய், காண்பாய்* ஆகிய ஏவல் வினைகளில் நிகழும் *ஆய்* என்னும் வடிவத்துக்குரிய பொருண்மை யமைப்பு [இருப்பு+ஏவல்+ [+ஒருமை]] எனக் குறிக்கப்படுகின்றது. செய்தை வாய்பாட்டு ஏவல் வினைகளில் நிகழும் ஐயென் கிளவியின் பொருண்மை அமைப்பில் இருப்புப் பொருண்மை இடம் பெறுவதற்கும் இதுவேதான் காரணம். *காண்டைப்பாய்* என்பதைக் *காண்பாய் ஆவாய்* என்ற அமைப்பாகவும் கொள்ள முடியும். இந்த ஆய்வில் *காண்டு, ஐப்பாய்* இரண்டும் முறையே *காண்பாய், ஆவாய்* என்பவற்றோடு பொருந்தும்.

---

7. *காண்டைப்பாய்* என்னும் ஏவல் வினை *கண்டைப்பாய்* என்று அமையும் நிலையும் காணப்படுகின்றது. *புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே!* (கலித்தொகை 89. 13) என்ற எடுத்துக்காட்டில் நிகழும் *காண்டைப்பாய்* என்ற வினைக்கு *கண்டைப்பாய்* என்றும் ஒரு பாடம் இருப்பதாகக் கழகப் பதிப்பில் குறிக்கப் பெற்றுள்ளது.

## பகுதி - 3

## 8.0 ஐயென் கிளவியின் திரிபுகள்

8.1 ஐயென்னும் வரி வடிவம் உண்மையில் *அய்* என்பதன் எழுத்து வழக்காகக் கொள்ளத்தக்கதாகும். இந்த வடிவம் *இ, ஈ, எ, ஏ, அ* எனத் திராவிட மொழிகளில் பலவாகத் திரிந்தமையும்.[8] ஐயென்கிளவி பற்றிய இந்த ஆய்வில் அதன் திரிபுகளைக் கருத்தில் கொண்டால் மேற்படி கிளவியின் பொருண்மையமைப்புடன் மேலும் சில வரிவடிவங்களைத் தொடர்புபடுத்தலாம். இந்த வகையில் முதலில் *இகா, இகும்* ஆகிய இரண்டு வடிவங்களைக் கருத்தில் கொள்ளலாம். இவற்றுள் *இகா* என்னும் வடிவம் *காண்* என்னும் வினைப் பகுதியை அடுத்தும் அதன் மாற்று வடிவமாகிய *காண்டும்* என்னும் இறவாக்காலச் செய்து வாய்பாட்டு வடிவத்தை யடுத்தும் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

(35) கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறாஅக் குரூஉச்செகில் காணிகா
(கலித்தொகை 105. 35-36)

---

8. அகவற்பாடல்களில் ஈற்றடி ஈற்றுச்சீர் ஏகாரத்தில் முடிவதைப் பழந்தமிழ்ப் பாடல்களில் காணலாம். (நிலை மண்டில அகவற்பா இதற்கு விலக்கு). இந்த ஏகாரம் *அய் என்பதன் திரிபாகக் கருதத்தக்கதாகும். ஐயென்கிளவியின் இருப்புப் பொருண்மையை இந்த ஏகாரத்துக்கும் உரிமையாக்க முடியும். ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம்.

(அ) வருவர் வாழி தோழி_________
கன்மிசை யருவிய காடிறந் தோரே (அகம். 25. 18, 22)

இந்த எடுத்துக்காட்டின் வாக்கிய அமைப்பினைப் பின்வருமாறு உரைநடைப் படுத்திக் கொள்ளலாம்.

(ஆ) தோழி! கன்மிசையருவிய காடிறந்தோர் வருவரே என்பதில் நிகழும் இறுதி ஏகாரக்கிளவியை ஐயென் வினையின் திரிபாகக் கொண்டு **தோழி! கன்மிசையருவிய காடிறந்தோர் வருவர் ஆவர்* என்று மேற்படி பிரிவில் நிகழும் வாக்கியத்திற்குப் பொருள் உரைக்கலாம். (அ) பிரிவில் நிகழும் வாக்கிய அமைப்பை அப்படியே வைத்துக்கொண்டு **வருவர்...காடிறந்தோர் ஆனவர்* எனவும் பொருள் உரைக்கலாம். இந்த ஆய்வு அகவற்பாடல்களில் ஈற்றடி ஈற்றுச்சீரில் நிகழும் ஏகாரக் கிளவியை வெறும் யாப்பமைதிக்கான உறுப்பாகக் கொள்ளாமல் இருப்புப் பொருண்மையைக் குறிக்கும் உறுப்பாய்க் கொள்வதற்கு வகை செய்கின்றது. பொருண்மை விளக்கம் பெறாத நிலையில் வண்ணனை ஆய்வில் இந்த ஏகாரக் கிளவி யாப்பமைதிக்கான உறுப்பாகக் கொள்ளப்பட்டதில் வியப்பொன்று மில்லை.

(36) பொய்யாமை நுவலுநின் செங்கோலச் செங்கோலின்
செய்தொழிற்கீழ்ப் பட்டாளோ இவளிவட் காண்டிகா
காமநோய் கடைக்கூட்ட வாழுநாள் முனிந்தாளை
(கலித்தொகை 99. 11-13)

எடுத்துக்காட்டு (33)-இல் காணப்படும் *கண்டைகா* என்பதில் நிகழும் *-ஐகா* என்ற வினையமைப்பும், மேலே (35), (36)-இல் *காணிகா, காண்டிகா* என்பவற்றில் நிகழும் *-இகா* என்ற அமைப்பும் ஒரே பொருண்மையனவாகக் கொள்ளத்தக்கதாகும். ஏனெனில் *காணிகா, காண்டிகா* ஆகிய இருவினைகளும் *கண்டைகா* என்ற வினையைப் போல் *காணாய்* என்னும் ஏவல் வினையின் பொருண்மை அமைப்புக்குரியனவாகும். நச்சினார்க்கினியரும் இவ் வினைகளுக்குப் *பாராய்* எனப் பொருள் குறிப்பார். *காண்டிகா* என்ற வினையமைப்பில் *'காண்டி என்னும் முன்னிலை வினை யோடு காவென்னும் அசைநிலையிடைச் சொல் நின்றது'* என்று குறிப்பார் நச்சினார்க்கினியர். இந்தக் கூற்றை வரலாற்று நோக்கில் ஏற்பதற்கில்லை. நமது ஆய்வில் *இகா* என்பதில் காணப்படும் இகரக் கிளவி இருப்புப் பொருண்மை யதாகிய ஐயென்கிளவியின் திரிபாகக் கொள்ளத்தக்கதாகின்றது. *இகா* என்ற வினையமைப்பை **இகு+ஆ* என்ற அமைப்பினதாகக் கொண்டு முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும், இரண்டாம் உறுப்பு [ஏவல்+[+ஒருமை]] என்ற பொருண்மை யமைப்பையும் உணர்த்துவன வாகக் கொள்ளலாம். *இகா* என்பதில் முதல் உறுப்பாக நிகழும் *இகு* என்பது ஐயென் கிளவியின் மாற்றுருபாகக் கருதப்பெறும்.

8.2 *இகா* என்னும் வினையமைப்புக்கு ஈடாகத் தொல் காப்பியர் முன்னிலை அசைச்சொல் என்ற பெயரில் *இக* என்னும் ஓர் அமைப்பைக் குறிப்பிடுகிறார். (சொல். 270. தெய்வச்சிலையார்) இந்த முன்னிலையசைச் சொல்லின் நிகழ்ச்சியைத் *தண்டுறை யூரயாம் கண்டிக* என்ற எடுத்துக்காட்டு மூலம் தெய்வச்சிலையார் குறிப்பார். *இக* என்னும் தொல்காப்பிய முன்னிலை அசைச்சொல் *இகா* என்பதனின்றும் வேறுபட்டதன்று. *இகா* என்பதற்கு அமைந்த ஆய்வு *இக* என்பதற்கும் பொருந்தும். ஆகவே *இக* என்னும் அமைப்பு நமது பார்வையில் இகாவைப் போல் வினையாகவே தென்படும். *இக, இகா* ஆகியவற்றில் நிகழும் இகரக்கிளவியாகிய மாற்றுருபு மட்டுமே தனியாக வினையடிகளின் மாற்றுருபுகளாகிய இறவாக் காலச் செய்து வாய்பாட்டு வடிவங்களை அடுத்தும், வினையடிகளை யடுத்தும் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(37) நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்
நுந்தைபால் **உண்டி**சில (கலித்தொகை 85. 24, 25)

(38) செறாஅ துளனாயின் கொள்வேன் அவனை
பெறாஅதியான் நோவேன் அவனையெற் காட்டி
(கலித்தொகை 147. 40, 41)

(39) ஊசலூர்ந் தாட ஒரு ஞான்று வந்தானை
அய்ய சிறிதென்னை **யூக்கி** யெனக்கூறத்
தையால் நன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு
பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பின் வாயாச்செத்
தொய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான் மேல்
மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் (கலித்தொகை 37. 14-19)

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் ஏவல் வினை களாகிய *உண்டி* (=உண்ணாய்), *காட்டி* (=காட்டாய்), *ஊக்கி* (=ஊக்காய்) ஆகியவற்றுள் நிகழும் இகரக்கிளவி ஐயென் கிளவியின் திரிபாகக் கொள்ளத்தக்கதாகலின் இதன் பொருண்மை யமைப்பில் இருப்புப் பொருண்மையும் இடம்பெற்றாக வேண்டும். *உண்டி, காட்டி, ஊக்கி,* ஆகியவை *உண்டு+இ, காட்டு+இ, ஊக்கு+இ* என்ற அமைப்பினவாகலின், *காணிகா, காண்டிகா* ஆகியவற்றில் நிகழும் *இகா* என்பதனை இரண்டு உறுப்புக்களாகப் பகுத்து ஆய்வதே பொருத்தமானதாகத் தோன்றுகின்றது.[9]

8.3 *காட்டி, ஊக்கி* ஆகிய இகர ஈற்று வினையமைப்புக்கள் ஏவற் பொருண்மையை உணர்த்த *வாழ்+இ* என்ற அமைப்பின தாகிய *வாழி* என்னும் வினையானது ஏவல் கண்ணிய வியங்கோட் பொருண்மையை உணர்த்தி நிற்கின்றது. வியங்கோளுக்கும் ஏவலுக்கும் உள்ள வேறுபாடு பற்றிய ஆய்வுக்கு இங்கு இடமில்லையாதலால் *வாழி* என்பதில் நிகழும் இகரக்கிளவியின் பொருண்மை அமைப்பினை [இருப்பு+வியங்கோள்] எனக் குறிப்பதுடன் நாம் அமைந்து விடலாம். இருப்பு வினை பல்வேறு இலக்கணப் பொருண்மைகளைக் கவரவல்லது என்பதற்குக் *காட்டி, ஊக்கி* என்பவற்றில் நிகழும் இகரக்கிளவியும், *வாழி* என்பதில் நிகழும் இகரக் கிளவியும் சிறந்த சான்றுகளாக அமைவதைக் காணலாம்.

---

9. *உண்டி* என்பது *உணுதி (=உண்ணுதி) என்பதன் திரிபாகும். வண்ணனை நிலையில் இதனை உண்-த்-இ, என்றும் வரலாற்று நிலையில் உண்டு+இ என்றும் ஆராயலாம். இகரம் முன்னிலை ஒருமை விகுதியாகக் கொள்ளத்தகும். இது *அய்* (=ஐ) என்பதன் திரிபாகும். இதனை முன்னிலைப் பொருண்மையை உணர்த்தும் இருப்பு அல்லது உள்வினை (Copula Verb) எனக் கருதலாம்.

8.4 இகும் என்னும் கிளவியை முன்னிலை அசைச் சொல்லாகக் கொள்வதுடன் தன்மையிலும் படர்க்கையிலும் அது நிகழவல்லது எனக் குறிப்பார் தொல்காப்பியர். (சொல். 270, 271) தெய்வச்சிலையார்).

(40) கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை
ஒண்டொடி மடவரற் **கண்டிகும்** கொண்க!
நன்னுதல் இன்று மாஅல் செய்தெனக்
கொன்னொன்று கடுத்தனள் அன்னையது நிலையே
(ஐங்குறுநூறு 194)

(41) இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்
அயந்திகழ் சிலம்ப! **கண்டிகும்**
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே (ஐங்குறுநூறு 264)

(42) வளையணி முன்கை வாலெயிற் றமர்நகை
இளைய ராடும் தளையவிழ் கானற்
குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தோ ளண்ணற் **கண்டிகும்** யாமே (ஐங்குறுநூறு 198)

(43) **கண்டிகும்** அல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே (ஐங்குறுநூறு 122)

(44) இலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
கடுந்தெற லிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்கு
அறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே (புறம். 378. 13, 18-22)

(45) **புகழ்ந்திகும்** அல்லரோ பெரிதே
(தொல்.சொல். 275 சேனாவரையர் எடுத்துக்காட்டு)

இந்த ஆறு எடுத்துக்காட்டுக்களில் முதல் இரண்டில் நிகழும் *கண்டிகும்* முன்னிலை வினை போலவும், அடுத்த இரண்டில் நிகழும் *கண்டிகும்* தன்மை வினைபோலவும் இறுதி இரண்டில் நிகழும் *பெற்றிகும், புகழ்ந்திகும்* ஆகியவை படர்க்கை உயர்திணை வினை போலவும் மயக்கத்தை உண்டுபண்ணுகின்றன. ஆய்வு வசதியின் பொருட்டு இவ்வினைகளைச் செய்திகும் வாய்பாட்டின வாகக் கொள்ளலாம். முதல் இரண்டு எடுத்துக்காட்டுக்களில் நிகழும் கண்டிகும் என்னும் செய்திகும் வாய்பாட்டு வினை *காணாய்* என்னும் ஏவல் வினையின் பொருண்மையமைப்புடன் பொருந்துவதாகும். *காணாய்* என்னும் ஏவல் வினையுடன் பொருந்தும்

*கண்டிகும்* என்னும் வினையில் நிகழும் *இகும்* என்னும் கிளவி செய்யும் வாய்பாட்டு ஏவல் வினையாகக் கொள்ளத்தக்கதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *இகும்* என்பதனை *இகு+உம்* என்ற அமைப்பினதாகக் கொண்டு இகரக்கிளவியின் மாற்றுருபாகிய *இகு* என்னும் முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும், இரண்டாம் உறுப்பு [ஏவல்+ [+ஒருமை*(?)*]] என்ற பொருண்மை யமைப்பையும் உணர்த்துவனவாகக் கொள்ளலாம். *செய்யும்* வாய்பாட்டு வினைகள் *செய்ம்* என்ற வாய்பாட்டினவாய் ஒடுங்கி *ஏ* மற்றும் *ஓ* ஆகிய கிளவிகளை ஏற்றும் ஏற்காமலும் ஏவற் பொருண்மையை உணர்த்தும் நிலையைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.[10]

*(46)* தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு **தின்ம்** எனத் தருதலின்
*(புறம். 150. 12, 13)*

*(47)* ............... சான்றோர்
உண்ணா ராயினும் தன்னொடு சூளுற்று
**உண்ம்** என விரக்கும் பெரும் பெயர்ச் சாத்தன் *(புறம். 178. 3-5)*

*(48)* செலீஇய! சேறி யாயின் இவளே
வருவை யாகிய சின்னாள்
வாழா ளாதல்நற் கறிந்தனை **சென்மே** *(நற்றிணை. 19. 7-9)*

*(49)* நின்னாங்கு வரூஉமென் நெஞ்சினை
என்னாங்கு வாராது ஓம்பினை **கொண்மே**
*(கலித்தொகை. 23. 18, 19)*

*(50)* கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி!
காமஞ் செப்பாது கண்டது **மொழிமோ** *(குறுந்தொகை. 2.1, 2)*

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் **தின்ம், *உண்ம், *சென்ம், *கொண்ம், *மொழிம்* ஆகிய **செய்ம்* (<செயும்) வாய்பாட்டு ஏவல் வினைகளைக் கருத்தில் கொண்டு *(40), (41)*-இல் காணப்படும் *கண்டிகும்* என்னும் வினையமைப்பில் நிகழும் *இகும்* என்னும் கிளவியைச் செய்யும் வாய்பாட்டு ஏவல் வினையெனக்

---

10. *செய்(ம்)மோ* வாய்பாட்டு ஏவல் வினைகளை, செய்+மோ என்ற அமைப்பினவாகக் கொண்டு மோ என்பதனை முன்னிலை அசைச் சொல்லாகக் கொள்வார் தொல்காப்பியர் (சொல், 270. தெய்வச்சிலையார்) வரலாற்று நிலையில் செய்(ம்)மோ வாய்பாட்டு வினைகள் *செய்ம்+ஓ என்ற அமைப்பினவாகி முதல் உறுப்பாகிய செய்ம் வாய்பாட்டு வினைகள் ஏவற் பொருண்மையை உணர்த்தினவாகக் கொள்வது பொருத்தமாக அமையும். தொல்காப்பியரின் ஆய்வு முறையில் நிகழும் மோவென் கிளவி பிறழ்பிரிப்பால் இனங்காணப்பட்ட ஒன்றாகும்.

கொள்ளலாம். *இகும்* என்பதன்முன் நிகழும் *கண்டு* என்னும் செய்து வாய்பாட்டு வடிவம் *காண்* என்பதன் மாற்றுருபாகும். இது மேலும் ஆய்வுக்குரியது.

8.5 இனி (42) முதல் (45) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் செய்திகும் வாய்பாட்டு வினைகளைக் காண்போம். எடுத்துக்காட்டுக்கள் (42), (43) இல் நிகழும் *யாமே, அல்லமோ* ஆகிய தன்மைப்பொருண்மையை உணர்த்தும் வடிவங்களைக் கொண்டு இவற்றின் முன் நிகழும் *கண்டிகும்* என்பதனைத் தன்மை வினையாகக் கருத முடியாது.[11] இவ்வாறே (44), (45)-இல் நிகழும் *ஒக்கல், அல்லரோ* ஆகிய படர்க்கை வடிவங்களை நினைத்துக் கொண்டு *பெற்றிகும், புகழ்ந்திகும்* ஆகியவற்றைப் படர்க்கை வினைகளாகக் கொள்ள முடியாது. *ஞான் வரும்* என்ற மலையாள வாக்கியத்தில் நிகழும் *வரும்* என்பது தன்மை வினை என்று வாதிட்டால் எப்படி இருக்கும்? இதனை எப்படி ஏற்க முடியாதோ அப்படியே செய்திகும் வாய்பாட்டு வினைகளைத் தன்மை, படர்க்கை வினைகள் என்று கருத முற்படுவதையும் ஏற்க முடியாது. தொல்காப்பியரையும் இக்கருத்தினராகக் கொள்ள முடியாது. ஏனெனில் செய்திகும் வாய்பாட்டு வினைகள் முன்னிலை தவிர ஏனையிடத்தும் பொருந்தும் என்று அவர் கூறுகிறாரே தவிர, இவ்வாய்பாட்டு வினைகளைத் தன்மை மற்றும் படர்க்கை வினைகளாக அவர் கருதுவதாகத் தோன்றவில்லை.

8.6 எடுத்துக்காட்டுக்கள் (42) முதல் (45) வரை உள்ளவற்றில் நிகழும் செய்திகும் வாய்பாட்டு வினைகள் பொது வினைகளாகக் கொள்ளத்தக்கனவாகத் தோன்றுகின்றன. மொழியில் பயிலத் தொடங்கிய நிலையில் அவை பல்வேறு காலப்பொருண்மைகளை உணர்த்தியிருக்கும் என்று நம்ப முடியவில்லை. சங்கப்புலவர்களாகட்டும், உரையாசிரியர்களாகட்டும் இதனை எந்த அளவுக்கு உணர்ந்திருந்தார்கள் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லை. ஒரு குறிப்பிட்ட வினையமைப்பு இரு வேறு காலப்பொருண்மைகளை உணர்த்த முடியாது. செய்திகும்

11. செய்திகும் வாய்பாட்டு வினைகள் தன்மைப்பன்மை வினைகளாகக் கொள்ளத்தக்கனவாயின், அவற்றில் நிகழும் இகும் என்னும் கிளவியைச் செய்கும் வாய்பாட்டு வினையாகக் கொண்டு அதனை இகு+உம் என்று ஆராயலாம். செய்கும் (< செய்கு + உம்) வாய்பாட்டு வினையாக இகுமென் கிளவியைக் கொள்ளலாம். செய்திகும் வாய்பாட்டு வினைகள் தன்மை, படர்க்கை ஆகிய இடத்தனவாக அவை தோற்றம் கொண்ட காலக் கட்டத்தில் உணர்த்தியிருக்கும் என்று கருத முடியாது.

வாய்பாட்டு வினைகள் ஏவல், இறப்பு ஆகிய பொருண்மைகளை உணர்த்துவனவாகச் சங்கப்புலவர்களால் கொள்ளப்பட்டிருக்குமோ என்று ஐயுறத் தோன்றுகின்றது. இவ்வாறு கொள்ளப்பட்டிருந்தால் செய்திகும் வினைகளின் பொருண்மையமைப்பு சங்கப் பாடல்கள் தோன்றிய காலத்திலோ அல்லது அதற்கு முன்பாகவோ இரு வகையாகப் புரிந்துகொள்ளப்பட்டதாக நினைக்கத் தோன்றுகிறது. செய்திகும் வினைகளின் பொருண்மையமைப்பு சங்கப் பாடல்கள் தோன்றிய காலத்தில் போற்றப்படாமற் போயிருந்தால் அதற்குக் காரணம் சங்கத்தமிழ் வழக்கில் இவ்வினைகள் வழக்கற்றுப் போயிருக்க வேண்டும். செய்திகும் வினைகள், ஒருபக்கம் ஏவற் பொருண்மையும் இன்னொருபக்கம் பொதுவினைகளாயமைந்து இறப்புப் பொருண்மையையும் (?) தொடக்கத்தில் உணர்த்தி யிருக்க வேண்டும். இது மேலும் சிந்திக்கத்தக்கது.

*8.7* செய்திகும் வாய்பாட்டு வினைகள் பொது வினை முற்றுக்களாகக் கருதப்படும் நிலையில் அவற்றில் நிகழும் *இகும்* என்பது *ஆகும்* என்ற பொது உள்வினைக்கு (Impersonal Copula Verb) நிகராகக் கருதப்படும். அதன் முன் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகள் இறந்தகாலப் பொதுவினை முற்றுக் களாகக் கொள்ளப்படும். இதனைக் கருத்தில் கொண்டு எடுத்துக் காட்டாக (44)-இல் நிகழும் *பெற்றிகும்* என்ற வினைமுற்றின் பொருண்மையைப் *பெற்றார் ஆயினர்/ஆவர்* என்று கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

## பகுதி - 4

### *9.0* ஐயின் திரிபே ஈயென் கிளவி

*9.1* ஐயென்கிளவியின் பல திரிபுகளுள் ஈயென் கிளவியும் ஒன்றாகும். ஆகவே ஐயென்கிளவிக்குப் பொருந்திய பொருண்மை அதன் திரிபுகளில் ஒன்றாகிய ஈயென் கிளவிக்கும் பொருந்தும். ஈயென்கிளவி வினையடிகளின் மாற்றுருபுகளாகிய இறவாக் காலச் செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழும்.

*(51)* ...... ............ .......... என்
ஒண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே *(அகம். 16. 14-16)*

*(52)* அன்னான் ஒருவன் தன் ஆண்டகை விட்டென்னைச்
சொல்லும் சொற்கேட்டீ சுடரிழாய்! *(கலித்தொகை. 47. 7, 8)*

(53) நோதலு முண்டீங்கு என்கை வந்தீ
செம்மால்நின் பாலுண் ணிய (கலித்தொகை. 85. 20, 21)

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *சென்றீ, கேட்டீ, வந்தீ* ஆகிய வினைகள் ஏவல் அல்லது வியங்கோட் பொருண்மையை உணர்த்துவனவாகும். ஏவலாயின் [இருப்பு+ [+ஏவல்] [+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பையும், வியங்கோளாயின் [இருப்பு+ வியங்கோள்] என்ற பொருண்மையமைப்பையும் மேற்படி வினைகளில் நிகழும் ஈயென்கிளவி உணர்த்தி நிற்கும். ஈயென் கிளவியின் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சியை நியாயப்படுத்தும் வகையில் அமைந்தவை ஆகும் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள்.

(54) செல்க பாகநின் செய்வினை நெடுந்தேர்
பூங்கண் புதல்வன் தூங்குவயின் ஒல்கி
**வந்தீக** எந்தை என்னும்
அந்தீங் கிளவி கேட்க நாமே (நற்றிணை. 221. 7, 11-13)

(55) அவருள், எக்கடவுள் மற்றக் கடவுளைச் **செப்பீமன்**
(கலித்தொகை. 93. 10)

(56) பொங்கிரு முந்நீர் அகமெல்லாம் நோக்கினை
திங்களுள் தோன்றி இருந்த குறுமுயால்!
எங்கேள் இதனகத்து உள்வழிக் **காட்டீமோ** (கலித்தொகை. 144. 17-19)

(57) முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகால் எம்மை முயங்கினை **சென்றீமோ**
(கலித்தொகை. 64. 28, 29)

(58) வேற்றுமை யென்கண்ணோ ஓராதி தீதின்மை
தேற்றக் **கண்டீயாய்** தெளிக்கு (கலித்தொகை. 88. 15, 16)

(59) நின்னையான் கழறுதல் வேண்டுமோ
என்னோர்க ளிடும்பையும் **களைந்தீவாய்** நினக்கே
(கலித்தொகை. 100. 22, 23)

(60) கடுமான் மாற **மறவா தீமே** (புறம். 198. 27)

(61) ................ குன்றழல் வெஞ்சுரம்
இறத்திரால் ஐயமற் றிவணிலைமை **கேட்டீமின்**
(கலித்தொகை. 25. 11, 12)

(62) மெலியப் பொறுத்தேன் **களைந்தீமின்** சான்றீர்!
(கலித்தொகை. 142. 55)

இவ்வெடுத்துக்காட்டுக்கள் அனைத்திலும் இறவாக்காலச் செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழும் ஈயென்கிளவி ஒரு வினைக்குரிய நிலையில் ஏவல் அல்லது வியங்கோட் பொருண்மையை உணர்த்தும் விகுதிகளை ஏற்று நிகழ்தலைக் காணலாம். இவ்வினை யமைப்புக்களில் நிகழும் ஈயென்கிளவி இருப்புப் பொருண்மையை உணர்த்தும் ஐயென்கிளவியின் திரிபாதலால் மேற்படி ஈயென்கிளவியும் இருப்புப் பொருண்மையை உணர்த்துவதாகவே கொள்ளப்படும். ஈயென்கிளவி ஐயென் கிளவியின் பொருண்மைக்கு உரியதாதலைப் பின்வரும் எடுத்துக்காட்டு தெற்றெனப் புலப்படுத்தும்.

*(63)* ஆயமட மகளிர் எல்லீரும் கேட்டீமின்
ஆயமட மகளிர் எல்லீரும் கேட்டைக்க *(சிலம்பு. 18. 48, 49)*

இவ்வெடுத்துக்காட்டில் *கேட்டு* என்பதனையடுத்து நிகழும் *ஐக்க, ஈமின்* இரண்டும் ஒரு பொருள் நுதலிவந்ததைக் காணலாம். *(54)* முதல் *(62)* வரையிலான எடுத்துக்காட்டுக்களில் ஈயென்னும் வினையடியாகத் தோன்றிய வினையமைப்புக்களில் இருப்புப் பொருண்மையும் ஏவல் அல்லது வியங்கோட் பொருண்மையும் வெவ்வேறு வடிவங்களில் வெளிப்பாடு பெறுகின்றன. ஆனால் *சென்றீ* (51), *கேட்டீ* (52), *வந்தீ* (53) ஆகிய மூன்று வினையமைப்புக் களிலும் *இருப்பு* மற்றும் *ஏவல் அல்லது வியங்கோட்* பொருண்மைகள் ஈயென்னும் ஒரே வரிவடிவத்தின்மூலம் வெளிப் பாடு பெறுகின்றன. ஈயென் கிளவியின் அடியாக மலர்ந்த *ஈத்தை* என்னும் முற்றுவினை செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழும் நிலை பழந்தமிழில் காணப்படுகின்றது.

*(64)* என்பாலால் பாராட்டு வந்தோய் குடியுண்டீத்தை யென்
பாராட்டைப் பாலோ சில *(கலித்தொகை. 85. 32, 33)*

*(65)* நின்னோ டுசாவுவேன் **நின்றீத்தை** *(கலித்தொகை. 94. 4)*

*(66)* எம்மையும் பொருளாக **மதித்தீத்தை** *(கலித்தொகை. 14. 17)*

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *உண்டீத்தை, நின்றீத்தை, மதித்தீத்தை* ஆகிய வினைகள் *செய்தீத்தை* வாய்பாட்டினவாய் அமைந்து, ஏற்கெனவே குறிப்பிட்ட செய்தை வாய்பாட்டு வினைகளின் பொருண்மையமைப்புக்கு உரியனவாகின்றன. செய்தை வினைகளில் நிகழும் ஐயென் கிளவிக்கு அமைந்த [இருப்பு+ஏவல்+[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பு, செய்தீத்தை வாய்பாட்டு வினைகளில் நிகழும் *ஈத்தை* என்னும் வினையமைப்பையும் தழுவிச் செல்லும். குறிப்புவினையாயின்

இவ்வினை *ஈத்து+ஐ* என்ற அமைப்பினதாகி முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும், இரண்டாம் உறுப்பு [ஏவல்+[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பையும் உணர்த்தும். பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் செய்தீத்தை வாய்பாட்டில் அமையாமல் மாறுபட்டுக் காணப்படுகின்றன.

(67) வரிசைப் பெரும்பாட்டோ டெல்லாம் பருகீத்தை
தண்டுவென் ஞாயர் மாட்டைப் பால் (கலித்தொகை. 85. 35,36)

(68) வேய்நரல் விடரகம் நீயொன்று பாடித்தை (கலித்தொகை. 40. 10)

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் *பருகு, பாடு* ஆகிய வினையடிகளையடுத்து முறையே *ஈத்தை, இத்தை* ஆகிய வடிவங்கள் நிகழ்கின்றன.[12] பிந்தியதில் அமைந்த *இத்தை* என்பது பதிப்பில் நேர்ந்த தவறா அல்லது மூலபாடமே அப்படியா என்று விளங்கவில்லை. மூலபாடமே அப்படித்தான் எனில் *இத்தை* என்பதனை *ஈத்தை* என்பதன் மாற்றுவடிவமாகக் கொள்ளலாம். பொருண்மையமைப்பைப் பொறுத்தவரையில் *ஈத்தை* (< ஈத்து + ஐ) என்பதன் பொருண்மையமைப்பே *இத்தை* (< இத்து + ஐ) என்பதற்கும் உரியதாகும்.

9.2 செய்தீத்தை வாய்பாட்டு வினைகள் செய்வாய் என்னும் வாய்பாட்டு எதிர்கால முன்னிலை வினைகளுடன் பொருந்துமாயின், *ஈத்தை* என்பதனை *ஈ-த்த்+ஐ* என மூன்று உறுப்பினவாகக் கொண்டு, முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும் இரண்டாம் உறுப்பு எதிர்வுப் பொருண்மையையும், மூன்றாம் உறுப்பு [முன்னிலை + [+ஒருமை]] என்ற பொருண்மை யமைப்பையும் உணர்த்துவனவாகக் கருதலாம்.

## 10.0 இறவாக்கால முன்னிலை ஈத்தை

10.1 செய்தீத்தை வாய்பாட்டு வினைகளுக்கு நிகராக அமைவன வற்றுள் செய்தி (< செய்யுதி) வாய்பாட்டு வினைகளும் அடங்கும். இவ்வாய்பாட்டு வினைகள் பழந்தமிழில் மிகுதியாகக் காணப்படு கின்றன.

(69) கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்ஙனம் ஒத்தியோ வீங்குசெலன் மண்டிலம் (புறம். 8. 5, 6)

12. பருகு, பாடு ஆகிய வினைகள் இ/இன் என்ற இறந்தகால விகுதியை ஏற்பவையாகும். ஆகவே *ஈத்தை/இத்தை* என்பது நேரடியாக வினைப் பகுதியை அடுத்து நிகழ்கின்றது.

பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே (புறம். 8. 5-10)

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *ஒத்தி, வரைதி, இறத்தி, வருதி, ஒளித்தி, விளங்குதி* ஆகிய செய்தி வாய்பாட்டு வினைகள் இறவாக் காலவினைகளாய் அமைந்து *செய்-த்+இ* என்ற வாய்பாட்டு அமைப்பினை மேற்கொண்டு, இரண்டாம் உறுப்பு காலப் பொருண்மையையும், மூன்றாம் உறுப்பு [இருப்பு+முன்னிலை+[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பையும் உணர்த்துவனவாய் நிகழ்கின்றன. இவ்வினைகள் *செய்து+இ* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகலின் இந்த அமைப்பில் நிகழும் இகரக்கிளவி [இருப்பு+முன்னிலை+[+ஒருமை]] என்ற பொருண்மையமைப்புக்கு உரியதாகும்.எடுத்துக்காட்டுக்கள் (37), (38), (39)-இல் நிகழும் *உண்டி, காட்டி ஊக்கி* ஆகிய வினைகளில் நிகழும் இகரக் கிளவியும் மேலே குறிப்பிட்ட பொருண்மையமைப்புடன் பொருந்தும். *காட்டி, ஊக்கி* ஆகிய வினைகளின் பகுதியானது செய்து வாய்பாட்டு வடிவின அல்லவாதலால் இவற்றை *காட்டு+இ, ஊக்கு+இ* என்று பிரிப்பதைத் தவிர வேறு வழியில்லை. இதனைக் கருத்தில் கொண்டு செய்தி வினைகளைச் செய்து+இ என்ற அமைப்பினவாகக் கொள்வதே பொருந்தும் என்று தோன்று கின்றது.[13]

10.2 ஐயென்கிளவியின் திரிபாகிய ஈயென்கிளவி வினைக்குரிய தகுதியுடன் முற்றாகவும் எச்சமாகவும் இறவாக்காலச் செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழும் நிலையினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம். ஒவ்வொரு எடுத்துக்காட்டிலும் அடைப்புக்களில் மேலும் கீழுமாக இரண்டு வினையமைப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மேலே நிகழும் வினை யமைப்பு பாடத்திலும் கீழே நிகழும் வினையமைப்பு நம்மால் குறிக்கப்பெற்று இலக்கியவழக்கிலும் காணப்படுவனவாகும்.

(70) பேதுற்றாய்ப் போலப் பிறரெவ்வம் நீயறியாய்

யாதொன்றும் வாளாது { இறந்தீவாய் / இறப்பாய் } கேளினி
(கலித்தொகை 56. 27, 28)

13. இந்த அமைப்பில் *செய்து* என்பது *செய்யுந்து* வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினையின் ஒடுக்கமாகும். எ-டு: வரைது- (<வரையுது< *வரையுந்து); இறத்து- (<இறய்த்து <இறயுத்து <*இறயுந்த்உ); ஒளித்து- (<ஒளிய்த்து <ஒளியுத்து <*ஒளியுந்த்உ)

(71) நன்றும், தடைஇயமென்றோளாய் {கேட்டீவாய் / கேட்பாய்} ஆயின்
(கலித்தொகை 93.5)

(72) தூதுவந் தன்றே தோழி
துயரறுகிளவியோடு {அயர்ந்தீகம் / அயர்கம்/அயர்வோம்} விருந்தே
(கலித்தொகை 32. 18, 19)

(73) மறைநின்று, தாமன்று {வந்தீத்தனர் / வந்தார்} (கலித்தொகை 86. 28)

(74) முலையிடைத் துயிலும் {மறந்தீத்தோய் / மறந்தோய்} (கலித்தொகை 128. 14)

(75) பொங்கிரு முந்நீர் அகமெல்லாம் நோக்கினை
திங்களுள் தோன்றி யிருந்த குறுமுயலால்!
எங்கேள் இதனகத்து உள்வழிக் காட்டீமோ
{காட்டீயாய் / காட்டாய்} ஆயின் கதநாய் கொளுவுவேன்
(கலித்தொகை 144. 17-20)

(76) பண்டின்னை யல்லைமன் ஈங்கெல்லி
கண்ட தெவன்மற் றுரை {வந்தீய / வர} (கலித்தொகை 93. 3, 4)

(77) யாயும் அறிய {உரைத்தீயின் / உரைக்கின்/உரைத்தால்} யானுற்ற
நோயும் களைகுவைமன் (கலித்தொகை 111. 23, 24)

(78) அன்ன தன்மை {அறிந்தீயார் / அறியாது/அறியாமல்}
நின்னது தாவென நிலை தளர
......குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையொன் றென்கோ (புறம். 136. 10, 11, 13, 14)

இவ்வெடுத்துக்காட்டுக்கள் அனைத்திலும் அடைப்புக்களில் மேலே நிகழும் வினையமைப்புக்களில் இறவாக்காலச் செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழும் ஈயென்கிளவி இருப்புப் பொருண்மையை உணர்த்துவதால், மேற்படி அடைப்புக்களில் கீழே நிகழும் வினைகளின் பொருண்மை அமைப்பிலும் இருப்புப் பொருண்மை இடம்பெற்றாக வேண்டும். ஏனெனில் மேலும் கீழுமாக அமைந்த வினை அமைப்புக்கள் ஒரே பொருளனவாகும். இதன்மூலம் அறியலாகும் ஓர் உண்மை யாதெனில் பயனிலைச் செயற்பாட்டில் நிகழும் வினைகளாகட்டும், எச்சச்செயற்பாட்டில் நிகழும் வினைகளாகட்டும் அவற்றின் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சி தவிர்க்க முடியாத ஒன்றாகும் என்பதேயாகும்.

அடைப்புக்களில் கீழே நிகழும் வினைகளில் எந்த வரிவடிவத்தின் பொருண்மை யமைப்பில் இருப்புப் பொருண்மை இடம்பெறும் என்பது வினை அமைப்பைப் பொறுத்து முடிவு செய்யப்பட வேண்டிய தாகும். கால இடைநிலை என்று ஒன்று தனியாகச் சுட்டப்படும் வினைமுற்றுக்களில் அவ்விடைநிலையை அடுத்து நிகழும் இயைபு விகுதியின் பொருண்மையமைப்பிலும், எச்ச வினைகளில் எச்சவிகுதிகளின் பொருண்மையமைப்பிலும் இருப்புப் பொருண்மை இடம் பெறும். செய்கு மற்றும் செய்யும் வாய்பாட்டு வினைகளில் குகரக்கிளவியும், உம்மைக்கிளவியும் தம் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மையை ஏற்றுச் செயல்படும். இருப்புப் பொருண்மையை உணர்த்தும் வினையடிகளின் மீது அமைந்த வினையமைப்புக்களில் பகுதியே இருப்புப் பொருண்மையை உணர்த்துவதால் மீண்டுமொரு முறை முற்று விகுதிகளிலோ, எச்ச விகுதிகளிலோ இருப்புப் பொருண்மையைச் சுட்ட வேண்டியதில்லை.

10.3 ஈயென்கிளவியின் அடியாகத் தோன்றிய வினை யமைப்புக்கள் இறவாக்காலச் செய்து வாய்பாட்டு வடிவங்களை யடுத்து நிகழாமல் தொழிற்பெயர்களென மரபிலக்கணிகளால் குறிக்கப்படும் வடிவங்களையடுத்து நிகழும் நிலையும் பழந்தமிழில் காணப்படுகின்றது.

(79) முரசு முழங்கு நெடுநகர் அரசு { துயிலீயாது / துயிலாது/துயிலாமல் }
(பதிற்றுப்பத்து 12.7)

(80) போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதிவாய்த் { தோன்றலீயாது / தோன்றாது/தோன்றாமல் } தம்பழியூக்குநர்
(பதிற்றுப்பத்து 71. 10, 11)

(81) கந்து { கோளீயாது / கொள்ளாது/கொள்ளாமல் } காழ்பல முருக்கி
(பதிற்றுப்பத்து 77. 8)

(82) கட்போர் உளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பின் அல்லது { கொடுத்தல் ஈயாது / கொடுக்காது/கொடுக்காமல் }
உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும் (சிலம்பு 5. 115-117)

இவ்வெடுத்துக்காட்டுக்களுள் முதல் இரண்டில் நிகழும் *துயிலீயாது தோன்றலீயாது* ஆகிய வினையமைப்புக்கள் வினை(யெச்ச)த் திரிசொல்லாகக் குறிக்கப்பெற்று *துயிலாது, தோன்றாது* என்ற எச்சவினைகளின் பொருளனவாகப் பதிற்றுப்

பத்தின் பழைய உரை கொள்கின்றது. (உ.வே.சா. பதிப்பைப் பார்க்கவும்). இறுதி இரண்டு எடுத்துக்காட்டுக்களில் ஈயென் அடியாகத் தோன்றிய எச்சவினைகள் *கோள், கொடுத்தல்* ஆகிய தொழிற்பெயர்களையடுத்து நிகழ்கின்றன. இத்தொழிற் பெயர்கள் வினையடிகளின் மாற்றுருபுகளாகக் கொள்ளத்தக்கன வாதலால் வினையடிகள் அனைத்துமே தொழிற்பெயர்களாக அல்லது வினைப் பெயர்களாகக் கொள்ளத்தக்கவை என்பது தெளிவாகின்றது. எடுத்துக்காட்டு (79)-இல் நிகழும் *துயிலீயாது* என்பதிலுள்ள *துயில்* என்னும் சொல் தொழிற்பெயராகச் செயல்படுவதால் *துயிலாது/துயிலாமல்* என்பதில் நிகழும் *துயில்* என்னும் வினையடியும் தொழிற்பெயராகவே கொள்ளப்படும். ஈயென் கிளவியின் அடியாகத் தோன்றிய பல வினையமைப்புக்கள் வினையடிகளின் மாற்றுருபுகளாகிய செய்து வாய்பாட்டு வடிவங் களையடுத்தே நிகழ்வதால், மேற்படி வாய்பாட்டு வடிவங்களும் தொழிற்பெயர்களாய்க் கொள்வதற்குரிய தகுதியைப் பெறுகின்றன. (79) முதல் (82) வரையுள்ள நான்கு எடுத்துக்காட்டுக்களிலும் அடைப்புக்களில் மேலே நிகழும் வினையமைப்புகளின் பொருண்மையமைப்பில் தென்படும் இருப்புப் பொருண்மை, மேற்படி அடைப்புக்களில் கீழே நிகழும் *துயிலாது/துயிலாமல், தோன்றாது/தோன்றாமல், கொள்ளாது/கொள்ளாமல், கொடுக்காது/கொடுக்காமல்* ஆகிய எச்சவினைகளின் பொருண்மையமைப்பிலும் இடம்பெற்றாக வேண்டும். இவ் வினைகளின் ஈற்றில் நிகழும் துகரக் கிளவி மற்றும் அல்லென் கிளவி ஆகியவற்றின் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மை இடம்பெறும். இக்கிளவியின் பொருண்மை யமைப்பு [இருப்பு+ காலம்] என்று அமையும்.

## 11.0 ஓர் விபத்து

தமிழ் வினைகளின் வரலாற்றில் ஏற்பட்ட விபத்து, இருப்புப் பொருண்மையை உணர்த்தும் ஐயென்கிளவியின் திரிபாகிய ஈயென்கிளவியும் இருப்புப் பொருண்மையதே என்பதை உணராமற் போனதாகும். இதன் விளைவு, ஈயென்கிளவியின் பொருண்மையானது தருதல் எனத் தவறாகப் பொருள் கொள்ளப்பட்டு, தருதற் பொருண்மையதாகிய *தா* என்னும் வினை வினையடிக்குப் பக்கத்தில் சேர்க்கப்பட்டுவிட்டது. இந்த நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

*(83)* யாரை நீ எம்மில் **புகுதர்வாய்** *(கலித்தொகை 98.1)*

*(84)* மெய்ம்மலி யுவகையன் **புகுதந்தான்** *(கலித்தொகை 40. 32)*

*(85)* அளைமாரிப் **பெயர்தருவாய்** *(கலித்தொகை 108. 26)*

*(86)* தோளிடைப் **புகுதந்து** *(கலித்தொகை 105. 32)*

*(87)* தெறுகதிர் **திகழ்தரும்** உருகெழு ஞாயிறு (பதிற்றுப்பத்து 52. 29)

மேல் எடுத்துக்காட்டுக்களில் *புகு, பெயர், திகழ்* ஆகிய வினையடிகளையடுத்து நிகழும் தாவென்கிளவி ஐயென்கிளவியின் மாற்றுருபாகக் கொள்ளத்தக்கதாகும். இதன் அடிப்படையில் தாவென்கிளவி மேற்படி எடுத்துக்காட்டுக்களில் இருப்புப் பொருண்மையை உணர்த்துவதாகவே கொள்ளப்படும். மேல் எடுத்துக்காட்டுக்கள் ஐந்திலும் நிகழும் தாவென் கிளவியமைந்த வினையமைப்புக்கள் புலவர்களின் படைப்பாகவே கருதத் தோன்றுகின்றது. பேச்சு வழக்கில் இது எந்தக் காலத்திலும் நிகழ்ந்து இருக்குமா என்பதும் ஐயப்பாட்டிற்குரிய ஒன்றாகும். ஆயினும் இங்கே இன்னொன்றையும் கருத்தில் கொள்ள வேண்டும். இந்தி மொழியில் கொடு அல்லது தா என்பதற்கு நிகரான வினையானது வினையடியை அடுத்துத் துணை வினையாகப் பயின்று வழங்குகிறது. இதனையும் கருத்தில் கொண்டுதான் தமிழில் துணை வினையாகக் காணப்படும் ஈயென் வினையின் நிகழ்ச்சியை ஆராயவேண்டும் என்று தோன்றுகிறது.

## 12.0 ஐயின் நெடிலே ஆயென் றாகும்

இவ்வாய்வினை முடிப்பதற்கு முன் ஐயென் கிளவியின் நெடிற் கிளவியைப் பற்றியும் சிறிது கூறியாக வேண்டும். ஐயென்கிளவியின் நெடிற்கிளவி **ஆய்* என்பதாகும். இவ்வடிவம் ஐயென்கிளவியின் தாய் வடிவமாகிய **அய்* என்ற குறில் வடிவத்தின் நெடிற்கிளவி யாகும். ஐயென் கிளவியின் மாற்றுருபு களாகக் கொள்ளத்தக்க வடிவங்களுள் **ஆய்* என்னும் நெடிற் கிளவியும் ஒன்றாகும். இதன் நிகழ்ச்சியைப் பின்வரும் எடுத்துக் காட்டில் காணலாம்.

*(88)* மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று *(குறள். 1112)*

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *மையாத்தி* என்னும் வினையமைப்பு *மயங்குதி/மயங்குவாய்* என்று பொருள்படும். இவ்வினையமைப்பில் நிகழும் மையென்கிளவியானது *மயங்குதி/*

*மயங்குவாய்* என்பதில் உள்ள *மயங்கு* என்பதன் மாற்றுருபாகும். மையென்கிளவியை அடுத்து நிகழும் *ஆத்தி* என்னும் முன்னிலை வினை *ஆய்-த்த்+இ* என்ற அமைப்பினதாயின் முதல் உறுப்பு இருப்புப் பொருண்மையையும், இரண்டாம் உறுப்பு இறவாக் காலப் பொருண்மையையும், மூன்றாம் உறுப்பு [முன்னிலை+ [+ஒருமை]] என்ற பொருண்மையமைப்பையும் உணர்த்துவனவாய் அமையும். *ஆத்தி* என்பதில் நிகழும் *ஆ* என்னும் வடிவம் **ஆய்* என்பதன் திரிபாகும். அதாவது, ஐயென் கிளவிக்கு **ஆய்* என்பதன் மூலம் கிடைத்த மாற்றுருபாகும் இந்த *ஆ* என்னும் வடிவம்.[14]



---

14. தமிழில் செய்தி வாய்பாட்டு இறவாக்கால வினைமுற்றுக்களின் அமைப்பு *செய்து+இ* என்ற வாய்பாட்டினதாகும். இந்த அமைப்பில் காணப்படும் *செய்து* வாய்பாட்டு வினைகள் செயுது வாய்பாட்டு இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களின் ஒடுக்கமாகும். *செயுது* வாய்பாட்டு வினைகளின் வரலாற்று நிலையிலான அடிநிலை வடிவங்கள் **செய்யுந்து* வாய்பாட்டினவாகும். இதனைக் கருத்தில் கொண்டு *மையாத்தி* என்பதில் நிகழும் ஆத்தி என்பதனை *ஆத்து+இ* என்ற அமைப்பினதாகக் கொண்டு இதில் உள்ள *ஆத்து* என்பதன் வரலாற்று அமைப்பினை வருமாறு புலப்படுத்தலாம்.

ஆத்து-< *ஆய்த்து < *ஆயுத்து < *ஆயுந்த்உ (a:yun[t]u)

இந்த ஆய்வில் ஆயுந்த்உ என்பதில் மெல்லொற்றினை அடுத்து நிகழும் தகர வல்லொற்று நிலையொலித்தன்மை (Voicelessness) கொண்டதாகும்.

# 5. வினை செயல்

## *1.0 செயல் வினைமுற்றுக்கள்*

*1.1 பழந்தமிழில் செயல் வாய்பாட்டு வினைகளும் (சுருக்கம்: செயல்வினைகள்), செய்தல் வாய்பாட்டு வினைகளும் (சுருக்கம்: செய்தல் வினைகள்) தொழிற்பெயர்களாக அமைவதுடன் பயனிலைகளாகவும், செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகரான பெயரெச்சங்களாகவும், செய்து வாய்பாட்டு வினைகளுக்கு நிகரான வினையெச்சங்களாகவும் நிகழும் நிலை காணப்படுகின்றது. இவ்விரு வகை வினைகளுள் செய்தல் வினைகள் எச்சவினை களாக நிகழ்தல் மிக அருகியே காணப்படுகின்றது.*

*1.2 பயனிலைகளாகச் செயல்படுகையில் செயல் மற்றும் செய்தல் வினைகள் இருவகைப் பொருண்மைகளை உணர்த்து கின்றன. ஒன்று, விழைவு; பிறிதொன்று, இயல்பு. முதல்வகைப் பொருண்மை வியங்கோட் பொருண்மைக்கு நிகராக இருக்கலாம். இலக்கணப் புலவர்களும், உரை ஆசிரியர்களும் நாம் விழைவுப் பொருண்மையாகக் கொள்வதை வியங்கோட் பொருண்மையாகவே கொள்வர். விழைவும், வியங்கோளும் ஒன்றா, வேறா என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும். இரண்டாம் வகைப் பொருண்மையை, சூரியன் கிழக்கில் உதிக்கும், சான்றோர் உண்மையே பேசுவர் முதலியவற்றில் அமைந்த பயனிலைகளில் காணலாம். இவ்விரண்டனுள் விழைவுப் பொருண்மையை உணர்த்தும் செயல் வினைகளையும், செய்தல் வினைகளையும் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.*

(1) அறவை யாயின் நினதெனத் *திறத்தல்*
மறவை யாயின் போரொடு *திறத்தல்* (புறம். 44. 11, 12)

(2) ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் *செயல்* (குறள். 33)

(3) செப்பும் வினாவும் வழாஅல் *ஓம்பல்* (தொல்.சொல்.சேனா. 13)

(4) இயற்கைப் பொருளை இற்றெனக் *கிளத்தல்*
(தொல்.சொல்.சேனா. 19)

(5) செயற்கைப் பொருளை ஆக்கமொடு *கூறல்*

(தொல்.சொல்.சேனா. 20)

(6) இன்ன பெயரே இவையெனல் வேண்டின்
முன்னம் சேர்த்தி முறையின் *உணர்தல்* (தொல்.சொல்.சேனா. 193)

(7) ஆவோ வாகும் பெயருமா ருளவே
ஆயிடன் *அறிதல்* செய்யு ளுள்ளே (தொல்.சொல்.சேனா. 195)

இவ்வேழு எடுத்துக்காட்டுகளிலும் பயனிலையாக அமையும் செயல் மற்றும் செய்தல் வினைகள் *செய்தல் வேண்டும்* என்ற வாய்பாட்டுத் தொடரின் பொருண்மையைக் குறிப்பனவாகும். இவ்வினைகள் வியங்கோட் பொருண்மையினவாயின் *செய்க* வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் பொருண்மையைக் குறிப்பனவாய் அமையும். மேல் எடுத்துக்காட்டுகளில் செயல் மற்றும் செய்தல் வினைகள் உணர்த்தும் பொருண்மையைவிட அவை பயனிலையாகச் செயல்படும் செய்தியையே நாம் இங்கு நினைவில் கொள்ள வேண்டும். உணர்த்தும் பொருண்மை விழைவா வியங்கோளா என்ற குழப்பம் தீரும்வரை X (எக்ஸ்) என்றுகூட வைத்துக்கொண்டு நாம் ஆய்வைத் தொடரலாம். ஆகவே அந்த வகையில் இப்போதைக்கு நாம் சிக்காமல் போவதே நல்லது.

1.3 செயல்வினைகள் பயனிலைகளாக நிகழ்கையில் பலர்பால் முற்றெச்சங்கள் அவற்றை அவாவி நிற்றலைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(8) உணரக் கூறிய புணரியல் மருங்கில்
கண்டு செயற் குரியவை *கண்ணினர் கொளலே*

(தொல்.எழுத்து.இளம். 406)

(9) அவையல் கிளவி *மறைத்தனர் கிளத்தல்* (தொல்.சொல்.சேனா. 442)

(10) எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் *கிளத்தல்* (தொல்.சொல்.சேனா. 284)

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களில் நிகழும் முற்றெச்சங்களைக் கருத்தில் கொள்கையில் *கொளல், கிளத்தல்* ஆகிய பயனிலை களின் எழுவாய் பலர்பாற் பெயராய் அமையும் என்பது பெறப்படும். இவ்வெழுவாய் புலவர் (தொல்.சொல். சேனா. 148, 156, 164, 204, 224, 231, 238, 241, 275, 358, 396, 403, 421 முதலிய நூற்பாக்களில் புலவர் எழுவாயாகச் செயல்படுகிறது) அல்லது மக்கள் என்பது போல் இருக்குமாயின் *கொளல், கிளத்தல்*

ஆகியவற்றை வியங்கோள் அல்லது விழைவு வினைகளாகக் கொள்வதைவிட *கொள்வர், கிளப்பர்* என்பவற்றுக்கு ஈடானவை எனக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது. எடுத்துக்காட்டு (10)-இல் நிகழும் நூற்பாவினை இரண்டு பயனிலைகள் உள்ள வாக்கியங்களாகக் கொள்ளவும் வாய்ப்பு உண்டு. *எஞ்சு பொருட் கிளவி செஞ்சொல் ஆயின் பிற்படக் கிளவார்* எனவும் *முற்படக் கிளத்தல்* எனவும் கொண்டு *கிளவார், கிளத்தல்* என்று இரண்டு பயனிலைகளைச் சுட்ட முடியும். முதல் பயனிலையாகிய *கிளவார்* என்பதைக் கருத்தில் கொண்டால் பயனிலையாகிய *கிளத்தல்* என்பதை விழைவுப் பொருண்மைய தாகவோ, வியங்கோட் பொருண்மையதாகவோ கொள்ள முடியாது. அது *கிளப்பர்* என்ற வினைக்கு நிகராயமைந்து இயல்புப் பொருண்மையைக் குறிப்பதாகவே கருதப்படும்.

## 2.0 செய்தல் வினைமுற்றுக்கள்

2.1 செய்தல் வினைகளைப் பொறுத்தவரையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் சிந்தனைக்குரியனவாகின்றன.

(11) ஞகாரை ஒற்றிய தொழிற் பெயர் முன்னர்
அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து *மிகுமே*
உகரம் *வருதல்* ஆவயின் ஆன (தொல்.எழுத்து.இளம். 297)

(12) யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தம் *கெடுதல்* ஆவயின் ஆன (தொல். எழுத்து. இளம். 201)

(13) அகமென் கிளவிக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே ஆசிரி யர்க்க
மெல்லெழுத்து *மிகுதல்* ஆவயின் ஆன (தொல். எழுத்து. இளம் 316)

2.2 இம்மூன்று எடுத்துக்காட்டுகளிலும் பயனிலைகளாக நிகழும் *வருதல், கெடுதல், மிகுதல்* ஆகிய மூன்று செய்தல் வினைகளும் வியங்கோட் பொருண்மையை உணர்த்துவனவாகக் கொள்ள முடியாது. காரணம் இப்பயனிலைகள் அமைந்த நூற்பாக்கள் இலக்கணச் செய்தியை நேர்முக வர்ணனைப் பாங்கில் வெளிப்படுத்துவனவாய் அமைந்துள்ளன. முதல் இரண்டு எடுத்துக்காட்டுக்களில் *மிகும், சிவணும்* என்ற செய்யும் வாய்பாட்டுப் பயனிலைகளில் ஒரு வாக்கியம் முடிகிறது. அடுத்த வாக்கியத்தில் *வருதல் (11), கெடுதல் (12)* ஆகிய பயனிலைகள்

நிகழ்கின்றன. இத்தகைய சூழலில் இவ்விரு செய்தல் வினைகளும் எங்ஙனம் வியங்கோட் பொருண்மையை உணர்த்த முடியும்? விழைவிற்கு ஓரளவு வாய்ப்பிருக்கலாம். வியங்கோளாக *வருதல், கெடுதல்* ஆகியவை அமைய வாய்ப்பில்லை. மிகுதியான வாய்ப்பு இவ்விரு செய்தல் வினைகளையும் செய்யும் வாய்பாட்டுப் பயனிலை களுடன் சமன்படுத்துவதற்கு இருப்பதாகக் கொள்ளலாம். இறுதி எடுத்துக்காட்டில் நிகழும் *மிகுதல்* என்னும் செய்தல் வினைப் பயனிலைக்கும் இது பொருந்தும். இவ்வெடுத்துக்காட்டிலும் *வரைநிலை யின்று* என்ற பயனிலையை அடுத்து *மிகுதல்* என்னும் பயனிலை இரண்டாம் வாக்கியத்தில் நிகழ்வதால் இதனை வியங்கோட் பயனிலையாகக் கொள்வதற்கு வாய்ப்பு உண்டா என்பது சிந்தனைக்குரியது. விழைவுக்கு வாய்ப்பிருக்கலாம். ஆயினும் இம்மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நூற்பாக்கள் செய்தியை வெளிப்படுத்தும் போக்கினைக் கருத்தில் கொண்டு *வருதல், கெடுதல், மிகுதல்* ஆகிய மூன்றும் முறையே *வரும், கெடும், மிகும்* ஆகியவற்றுக்கு நிகரானவை எனக் கொள்ளுதல் பொருத்தமாகத் தோன்றுகிறது. இச்சமன்பாடு பின்வரும் எடுத்துக்காட்டுகளில் அமைந்த செய்தல் பயனிலைகளுக்குப் பொருந்துவதாகத் தோன்றவில்லை.

(14) வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை
ஒல்வழி *அறிதல்* வழக்கத் தான (தொல். எழுத்து. இளம். 247)

(15) மெல்லெழுத் துறழும் மொழியுமா ருளவே
செல்வழி *அறிதல்* வழக்கத் தான (தொல். எழுத்து. இளம். 313)

2.3 இவ்விரு எடுத்துக்காட்டுகளிலும் நூற்பா வெளிப் படுத்தும் செய்தியைப் பின்புலமாகக் கொண்டு நோக்குகையில் *அறிதல்* என்னும் செய்தல் வினை *அறிக* என்னும் வியங்கோள் வினைக்கு நிகராகி வியங்கோட்பொருண்மையை உணர்த்துவதாகக் கருத முடிகின்றது. தன் பார்வையில் தென்படாத ஆனால் எங்கோ வழக்கில் உள்ளதாகத் தனக்குப் படுகின்ற ஓர் இலக்கணச் செய்தியை இந்நூற்பாக்களில் தொல்காப்பியர் உணர்த்துவதால் இவற்றில் நிகழும் *அறிதல்* என்னும் பயனிலை *அறிக* என்னும் வியங்கோள் வினையின் பொருண்மையுடன் பொருந்துவதாகக் கொள்ள வாய்ப்பிருக்கின்றது. இந்த இரு எடுத்துக்காட்டுகளும் விழைவுப் பொருண்மையையும் வியங்கோட்பொருண்மையையும் வேறுபடுத்திக் காட்டுவது போல் தோன்றுகின்றன. இரண்டுக்கும் வேறுபாடு இல்லையென்றாலும் நமது ஆய்வு இதனால் பாதிக்கப்படப் போவதில்லை.

## 3.0 செயலும் செய்தலும்

3.1 இயல்புப் பொருண்மையை உணர்த்த வல்லனவாக முன்னர்க் குறிக்கப்பெற்ற செயல்வினைகளும், செய்தல் வினைகளும் பயனிலைகளாய் அமைந்து மேற்படிப் பொருண்மையைப் புலப்படுத்துவதைக் காணலாம்.

(16) மெய்யின் இயற்கை புள்ளியொடு *நிலையல்*
(தொல். எழுத்து. இளம். 15)

(17) மெய்யீ றெல்லாம் புள்ளியொடு *நிலையல்*
(தொல். எழுத்து. இளம். 105)

(18) முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவல்என மொழிப உகரக் கிளவி
முதனிலை *நீடல்* ஆவயின் ஆன (தொல். எழுத்து. இளம். 455)

(19) புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉம் காலம் தோன்றின்
தெளிநிலை யுடைய ஏகாரம் *வரலே* (தொல். சொல். சேனா. 151)

(20) சுண்ணந்தானே,
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி யறிந்து *துணிந்தனர் இயற்றல்*
(தொல். சொல். சேனா. 406)

(21) மொழிமாற் றியற்கை
சொல்நிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் *கொளாஅல்*
(தொல். சொல். சேனா. 409)

3.2 இந்த ஆறு எடுத்துக்காட்டுகளில் (20)-இல் *துணிந்தனர்* என்னும் பலர்பால் முற்றெச்சத்தை அடுத்து நிகழும் *இயற்றல்* என்னும் செயல்வினை *இயற்றுவர்* என்பதற்கு ஈடானதாகும். ஏனைய எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *நிலையல், தவல், வரல், கொளாஅல்* ஆகிய செயல் வினைகளும், (18)-இல் நிகழும் *நீடல்* (>நீள்-த்+அல்) என்னும் செய்தல் வினையும் செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகராகிப் பயனிலையாகச் செயல்படுகின்றனவாகக் கருதத்தகும். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணம் இயல்புப் பொருண்மையை உணர்த்தும் செய்யும் வாய்பாட்டுப் பயனிலைகள் தொல்காப்பிய நூற்பாக்களில் மிகுதியாகக் காணப் படுவதேயாகும். பின்வரும் நூற்பாக்களில் நிகழும் பயனிலைகளையும் கருத்தில் கொள்க.

(22) ஞநமவ இயையினும் உகரம் *நிலையும்* (தொல். எழுத்து. இளம். 298)

(23) மெய்யின் இயக்கம் அகரமொடு *சிவணும்* (தொல். எழுத்து. இளம். 46)

(24) ணகாரை முன்னர் மகாரம் *குறுகும்* (தொல். எழுத்து. இளம். 52)

3.3 இப்படிப் பல நூற்பாக்களில் செய்யும் வாய்பாட்டுப் பயனிலைகளைத் தொல்காப்பியர் இயல்புப் பொருண்மையை உணர்த்தும் வகையில் ஆண்டுள்ளார். உரையாசிரியரோ பதிப்பாசிரியரோ செயல் மற்றும் செய்தல் வினைப் பயனிலைகளைச் செய்யும் வாய்பாட்டுப் பயனிலைகளாகவோ செய்தல் வாய்பாட்டுப் பயனிலைகளாகவோ மாற்றத் துணிந்தால் உண்மையான பாடத்தைக் கண்டறிய தொல்காப்பியரே வந்தாலும் முடியாது. இப்படியொரு நிலை தொல்காப்பிய உரியியல் நூற்பாவுக்கு நேர்ந்திருக்கிறது. *கயவென் கிளவி மென்மையும் ஆகும்* என்று சேனாவரையர் பாடம் கொள்ளும் உரியியல் நூற்பாவானது *கயவென் கிளவி மென்மையும் செய்யும்* எனத் தெய்வச்சிலையாரால் பாடம் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வாறே, *நலத்தின்கண் நாறின்மை தோன்றின் அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்* என்று நமக்கு அறிமுகமான குறளானது சுப்பிரமணிய தீட்சிதர் தனது பிரயோக விவேகத்துக்கு வகுத்த உரையில் *ஐயப்படல்* எனப் பாடம் பெற்று முடிகின்றது. எது உண்மை? எது போலி? யாருக்குத் தெரியும்? பிந்தியதில் நேர்ந்த மயக்கத்துக்குக் காரணம் செயல் வினைகளும் செய்யும் வினைகளும் ஒரே செயற்பாட்டில் நிகழவல்லன என்ற உள்ளுணர்வாக இருக்கவேண்டும்.

## 4.0 முன்பழந்தமிழில் செயலும் செய்தலும்

செயல் மற்றும் செய்தல் வினைகள் தொல்காப்பியர் காலத்து மொழியிலாகட்டும், சங்கப்பாடல்கள் தோன்றிய காலத்தில் நடைமுறையில் இருந்த மொழியிலாகட்டும், பயனிலைகளாகவும், செய்து மற்றும் செய்யும் வாய்பாட்டு எச்சங்களுக்கு நிகராகவும் பயின்று வழங்கியிருக்கும் என்று கொள்வதற்குத் தயக்கமாகவே உள்ளது. தொல்காப்பியம் மற்றும் சங்கப் பாடல்கள் தோன்றிய காலத்துக்கு முன்பிருந்த மிகப் பழந்தமிழில் செயல்வினைகளும் செய்தல் வினைகளும் (செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகரான) பயனிலைகளாகவும் எச்சங்களாகவும் பயின்று வழங்கி இருக்க வேண்டும். தொல்காப்பியமும் சங்கப் பாடல்களும் தோன்றிய காலத்தில் இவ்வினைகளின் மேற்படி செயல்பாடுகள் அருங்கலைப் பொருள் போல் இப்படைப்புக் களில் போற்றப்பட்டிருக்கலாம். இவ்வாறு நாம் கருதக் காரணம் தொல்காப்பியத்திலும், சங்கப் பாடல்களிலும் இவ்வினைகளின்

பயனிலை மற்றும் எச்சச் செயற்பாடுகள் எண்ணிக்கையில் மிக அருகியே காணப்படுகின்றன. இன்னொரு காரணம், சிறப்பு வினைகள் (Personal Verbs), பொது வினைகளை (Impersonal Verbs) நோக்கக் காலத்தால் பிந்தியவை. செயல் வினைகள் பொது வினைகளாயமைந்து பயனிலைகளாகவும், எச்சங்களாகவும் செயல்பட்ட நிலையானது காலத்தால் முந்தியது. சிறப்பு வினைகள் பயின்று வழங்கத் தொடங்கிய பிந்திய நிலையில் தோன்றியவையே நமக்குக் கிடைத்திருக்கும் பழந்தமிழ் நூல்கள். மொழி நடையின் சிறப்பைப் பேண இக்காலத்தில் பழந்தமிழ்ச் சொற்களையும், வினையமைப்புகளையும், தொடர்களையும் பயன்படுத்துவது போலவே தொல்காப்பியத்திலும், சங்கப் பாடல்களிலும் செயல் மற்றும் செய்தல் வினைகளின் செயற்பாடுகள் கவிஞர்களின் புலமை வளத்தைக் காட்டவும், மொழிநடையின் சிறப்பை மிகுதிப் படுத்தவும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். தொல்காப்பியர் காலத்தில் செயல் மற்றும் செய்தல் வினைகளில் பயனிலைச் செயற்பாடு பயின்று வழங்கியிருந்திருக்குமானால், இச்செயற் பாட்டில் அவற்றின் பொருண்மையைக் கண்டறிய நாம் இத்துணை இடர்ப்பட்டுக்கொண்டிருக்க வேண்டிய நிலை நேர்ந்திருக்காது. இவ்வினைகள் பயனிலையாகச் செயற்பாடு பெறுகையில் அவற்றின் பொருண்மை ஒன்றுக்கு மேற்பட்டதாய் அமைவதை மட்டும் கருத்தில் கொண்டு அடுத்த கட்டத்துக்குச் செல்லலாம்.

## 5.0 தொல்காப்பியரின் இலக்கண விளக்கக்கோட்பாடு

5.1 தொல்காப்பியத்தில் நிகழும் செயல் மற்றும் செய்தல் வினைகளின் பயனிலைச் செயற்பாட்டில் அமையும் பொருண்மையை இனம் கண்டு கொள்வதற்கு உள்ள ஒரே வழி தொல்காப்பியர் தமது இலக்கணத்தை எந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைத்தார் என்பதைப் பொருத்ததாகும். பனம்பாரனார் கூற்றுப்படி தொல்காப்பியர் *தமிழ்கூறு நல்லுலகத்து, வழக்கும் செய்யுளும் பொருளும் நாடிச், செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு, முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி* (தொல். எழுத்து. இளம். சிறப்புப் பாயிரம்) இலக்கணம் செய்தார் என்று அறிகிறோம்.

5.2 மொழியின் நிகழ்ச்சி இப்படி அமையவேண்டும் என்ற கோட்பாட்டில் தொல்காப்பிய எழுத்தும், சொல்லும் அமைந் திருந்தால் செயல் மற்றும் செய்தல் பயனிலைகள் வியங்கோள் அல்லது விழைவு அல்லது இரண்டுமாகிய பொருண்மையை

உணர்த்துவதாகக் கருதலாம். மாறாக, எழுத்தும் சொல்லும் மொழியின் நிகழ்ச்சி இப்படி அமைந்துள்ளது என்ற கோட்பாட்டில் அமைந்திருந்தால் செயல் மற்றும் செய்தல் பயனிலைகள் இயல்புப் பொருண்மையை உணர்த்துவதாகக் கொள்ளலாம். தொல்காப்பியரின் கோட்பாடு இந்த இரண்டையும் தழுவியது என்பது பனம்பாரனாரின் சிறப்புப் பாயிரத்தின் மூலம் அறியப்படுவதால் தொல்காப்பியத்தில் மேற்படி வினைகள் எங்கெங்கே வியங்கோள், விழைவு, இயல்பு ஆகிய பொருண்மைகளை உணர்த்துகின்றன என்பதை இனம் காண முடியாமல் இடர்ப்பட வேண்டியுள்ளது. இரண்டு நிலைகளில் இவ்வினைகளின் பொருண்மையைக் கண்டறிய முற்படலாம். ஒன்று: நூற்பாக்கள் செய்தியை வெளிப்படுத்தும் போக்கும், அந்நூற்பாக்களுடன் தொடர்புள்ள முந்திய, பிந்திய நூற்பாக்களில் பயனிலைகள் அமைந்துள்ள போக்கும். இரண்டு: தொல்காப்பிய எழுத்து, சொல், நூற்பாக்களில் அமைந்துள்ள பயனிலைகள் பொருள் உணர்த்தும் போக்கு. இவ்விரண்டு நிலைகளில் பொருண்மை விளக்கம் புலப்படவில்லையாயின் தொல்காப்பியர்தான் வந்து சிக்கலை அவிழ்க்க வேண்டும். தொல்காப்பியத்தில் மிகப் பெரும் பாலான நூற்பாக்களின் வினைப் பயனிலைகள் வியங்கோள் தன்மையனவாக அமையாமல், செய்தி விளக்கப்பாங்கில் அமைந்தனவாகவே உள்ளதை நாம் புறக்கணித்துவிட முடியாது.

### 6.0 பன்முகம் கொண்ட பயனிலையாக

பயனிலைகளாகச் செயல்படும் செயல் மற்றும் செய்தல் வினைகளின் பொருண்மையானது விழைவு, வியங்கோள், இயல்பு ஆகிய மூன்றினோடும் மயங்கி நிற்பதால் இவ்வாய்வில் அமைந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் செயல் வினைகளும் செய்தல் வினைகளும் கோட்பாட்டு விளக்கத்தைப் பொறுத்து வியங்கோளாகவும், விழைவாகவும் இயல்பாகவும் நாம் கருதுவன மாறியும் அமையலாம். இந்த மாற்றம் இந்த ஆய்வின் தன்மையைச் சிதைக்கப் போவதில்லை. செயல் மற்றும் செய்தல் வினைகளின் பயனிலைச் செயல்பாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட பொருண்மைகள் புலப்படுகின்றன என்ற நமது கருத்தினை இன்னொரு செய்தியின் மூலமும் வலுப்படுத்திக் கொள்ளலாம். *வியங்கோளாய் அமையும் செயல் மற்றும் செய்தல் வினைகள் அமைந்த வாக்கியங்களைப் பெயரெச்சத் தொடர்களாக மாற்ற முடியாது. செயல் மற்றும் செய்தல் வினைகள் பெயரெச்சமாயும் செயற்படுவதால் இப்பெயரெச்சத்துக்கு நிகராய் அமையும் செயல் மற்றும் செய்தல் பயனிலைகளில் வியங்கோட் பொருண்*

*மையைச் சுட்ட முடியாது.* ஆகவே இவ்வினைகள் பயனிலைகளாகச் செயல்படுகையில் அவை குறைந்தது இரண்டு பொருண்மைகளையாவது உணர்த்தியே தீர வேண்டும். ஒன்று, வியங்கோள்; பிறிதொன்று, விழைவு அல்லது இயல்பு.

## 7.0 பெயரெச்சமாகச் செயலும் செய்தலும்

செயல் மற்றும் செய்தல் வினைகள் பெயரெச்சமாகச் செயல்படும் நிலையை இனிக் காண்போம். செய்தல் வினைகள் பெயரெச்சமாகச் செயல்படும் நிலை பழந்தமிழில் மிக அருகியே காணப்படுகின்றது. தொழிற்பெயர்களின் அறுவகை இயல்புகளைத் தொகுத்துரைக்கையில் எச்சமாகவும் முற்றாகவும் அவை செயல்படும் எனக் குறிப்பிடுவார் சுவாமிநாத தேசிகர் (இலக்கணக் கொத்து, நூற்பா 82). *பொருள் செயல் வகை, வினை செயல் வகை, தோன்றலாறே, உயிர்த்தலாறே* ஆகிய தொடர்களின் மூலம் செயல் வினைகள் பெயரெச்சமாகச் செயல்படும் பாங்கினையும், *ஆய்தம் கெடுதல் ஆவயின் ஆன, மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்* ஆகிய எடுத்துக் காட்டுக்களின் மூலம் செய்தல் வினையும், செயல் வினையும் வினைமுற்றாகச் செயல்படும் பாங்கினையும் சுவாமிநாத தேசிகர் தெளிவுபடுத்துகிறார் (இலக்கணக் கொத்து, நூற்பா 82, உரை). செயல் வினைகளும் செய்தல் வினைகளும் - மிகுதியாக, முந்தியவை - பெயரெச்சமாகச் செயல்படும் நிலையைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

(25) தண் *வரல்* வாடையும் பிரிந்திசினோர்க் கழலே (குறுந்தொகை 35.5)

(26) எழுத்தெனப்படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்பஃதென்ப
சார்ந்து *வரல்* மரபின் மூன்றலங் கடையே (தொல். எழுத்து. இளம். 1)

(27) காய்ந்து *செலற் கனலி* கல்பகத் தெறுதலின் (அகம். 55.1)

(28) விண் *செலல்* மரபின் ஐயர்க் கேந்தியது ஒருகை
(பத்துப்பாட்டு 1.107, 108)

(29) மா *புகல்* கானம் (பத்துப்பாட்டு 10.69)

(30) ஊசல் *மேவல்* சேயிழை மகளிர் (பதிற்றுப்பத்து 43.2)

(31) புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை உயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல *உயிர்த்தல்* ஆறே (தொல். எழுத்து. இளம் 17)

(32) பெயரெனப் படுபவை தெரியும் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ வுருபின *தோன்றல்* ஆறே (தொல். சொல். சேனா. 160)

(33) நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று *இடித்தற்* பொருட்டு (குறள். 784)

(34) வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்று *உணரற்* பாற்று (குறள். 11)

(35) பொருள் *தரல்* விருப்பொடு (அகம். 32.20)

(36) கேட்டற் கினிதுநின் செல்வம் கேட்டொறும்
*காண்டல்* விருப்பொடு (பதிற்றுப்பத்து 12.9, 10)

இப்பன்னிரண்டு எடுத்துக்காட்டுகளில் (31)-இல் நிகழும் *உயிர்த்தல்,* (33)-இல் நிகழும் *நகுதல், நட்டல், இடித்தல்* (36)-இல் நிகழும் காண்டல் ஆகியவை செய்தல் வினைகளாயும், ஏனைய வற்றுள் நிகழும் *வரல், செலல், புகல், மேவல், தோன்றல், உணரல், தரல்* ஆகியவை செயல் வினைகளாயும் அமைந்து செய்யும் அல்லது செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்சங்களுக்குரிய செயற்பாட்டினை மேற்கொண்டுள்ளன. செயல் மற்றும் செய்தல் வினைகளின் இப்பெயரெச்சச் செயல்பாட்டினை நோக்கும் போது செய்யும் வாய்பாட்டு வினைகளைப் போல் இவ்வினை களும் பயனிலையாகவும் பெயரெச்சமாகவும் செயல்படும் தன்மையின என்பது புலனாகிறது. இவ்வகையில் செயல் மற்றும் செய்தல் வினைகளை எச்சவினைகள் எனக் குறிப்பதற்கு மாறாக, முற்றெச்ச வினைகள் எனக் குறிப்பதே பொருத்தமாகும். இம் முற்றெச்சவினைகள் பயனிலையாகச் செயல்படுகையில் முன்னர்க் குறிப்பிட்டது போல அவை வியங்கோட் பொருண்மையை உணர்த்த முடியாது. ஏனெனில் வியங்கோட் பயனிலைகள் அமைந்த வாக்கியங்களைப் பெயரெச்சத் தொடர்களாக மாற்ற முடியாது. செயல் வினைகளும், செய்தல் வினைகளும் தொல்காப்பியர் காலத் தமிழிலும், சங்கப் பாடல்கள் தோன்றிய காலத் தமிழிலும் எவ்வாறு பயனிலைச் செயற்பாட்டினை இழந்தனவோ அவ்வாறே எச்சச் செயற்பாட்டினையும் இழந்து பழமையைப் போற்றும் மரபாகத் தொல்காப்பியம், சங்கப் பாடல்கள், குறள் முதலியவற்றில் இச்செயற்பாடுகள் இடம் பெற்றனவாகக் கருத வேண்டும். ஏனெனில் இவ்விலக்கியங்களில் இச் செயற்பாடுகளை வேறுவகை வினைகள் ஆற்றலுடன் பற்றிக்கொண்டு விட்டன.

## 8.0 வினையெச்சமாகச் செயல்வினைகள்

செயல் வினைகள் ஓரோவழி வினையெஞ்சுகிளவியாக நிகழும் நிலையும் பழந்தமிழில் காணப்படுவதைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் உணர்த்தும்.

(37) ஆவுதி நறும்புகை முனைஇக் குயில்தம்
மாயிரும் பெடையொடு *இரியல்* போகி (பத்துப்பாட்டு 9.55, 56)

38) தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
அரிபுகு பொழுதின் *இரியல்* போகி (பத்துப்பாட்டு 4.201, 202)

இவ்விரு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *இரியல்* என்னும் செயல் வினை *இரிந்து* என்னும் செய்து வாய்பாட்டு வினை யெச்சத்துக்கு நிகராய் அமைந்த ஒன்றாகும். (இங்கே நிகழும் *இரியல்* என்னும் செயல் வாய்பாட்டு வினையின் நேர் எதிர்மறை *இரியாமல்* என்று அமையும்).

## 9.0 வினைப்பகுதிகள் பெயராகலின்

9.1 செயல் மற்றும் செய்தல் வினைகளின் பிறிதொரு வகைச் செயற்பாடு அவை தொழிற் பெயர்களாய் அமைதலாகும். பார்க்கப் போனால், தொழிற்பெயர் என்பது ஒரு செயற்பாடாகக் கொள்ளத்தக்கதா என்பதே ஐயத்திற்குரிய ஒன்றாகும். ஏனெனில் வினைப்பகுதிகள் பெயர் வகையின எனக் கொள்ளத்தக்கவை என்பது நமது கோட்பாடு (கோதண்டராமன், இரா. 1978. 47-53). இதன்படி ஓர் வினைப்பகுதியை நிலைக்களனாகக் கொண்டு அமையும் எல்லா வினையமைப்புகளுமே வினைப் பெயர்கள் தாம். வினையடியாகத் தோன்றிய ஓர் குறிப்பிட்ட விகுதியின் சேர்க்கையால் தொழிற்பெயராய் அமைகின்றது என்ற கருத்தினை நாம் ஏற்றுக் கொள்ளவில்லை. ஓர் வினையமைப்பு தொழிற் பெயர் எனக் கொள்ளப்படுவதற்குக் காரணம் அதன் வினைப் பகுதியே பெயர் என்பதால்தான். இந்த வகையில் வினையடியாகத் தோன்றியமையும் எல்லா வகையான முற்றுக்களும் எச்சங்களும் தொழிற் பெயர்களே. எச்சமாகவும் பயனிலையாகவும் நிகழும் செயல் வினைகளும் செய்தல் வினைகளும் ஒரு நிலையில் மரபிலக்கணங்களால் தொழிற்பெயர்களாகக் கருதப்படுவதற்குக் காரணம் அவை நிகழும் வாக்கியச் சூழல் வித்தியாசமாக அமைவதுதான். இவ்வினைகள், செய்வது வாய்பாட்டு வினை களுடன் தொடர்புடையன என்பதைப் பின்வரும் எடுத்துக் காட்டு உணர்த்தும்.

(39) தேன் { பருகல் / பருகுதல் / பருகுவது } உடம்புக்கு நல்லது.

செய்வது வாய்பாட்டு வினைகள் பால் வினைகளுடன் தொடர்புடையவை என்பதனைப் பின்வரும் ஒரே பொருண்மையினவாகிய எடுத்துக்காட்டுக்கள் உணர்த்தும்.

(40) முருகன் காலையில் தேன் பருகுவான். (நேர் வாக்கியம்)

(41) முருகன் காலையில் பருகுவது தேன். (கவை வாக்கியம்)

இந்த இரண்டு எடுத்துக்காட்டுகளுடன் (39)-இல் உள்ளவற்றைப் பொருத்திப் பார்த்தால் தொழிற்பெயர்களாகக் கருதப்படும் செயல் வினைகளும் செய்தல் வினைகளும் ஒரு நிலையில் பயனிலைச் செயற்பாட்டினை மேற்கொண்ட வினைகளுடன் ஒன்றுவதைக் காணலாம். இந்தக் கண்ணோட்டத்தில் இனிப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களை அணுகுவோம்.

(42) வளியென வரூஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் *நிலையல்* செவ்வி தென்ப (தொல். எழுத்து. இளம். 243)

(43) உஊ ஒஓ என்னும் நான்குயிர்
வ என் எழுத்தொடு *வருதல்* இல்லை (தொல். எழுத்து. இளம். 63)

9.2 இவ்விரு எடுத்துக்காட்டுகளிலும் நிகழும் *நிலையல்* (=நிற்றல்) என்னும் செயல்வினையும், *வருதல்* என்னும் செய்தல் வினையும் முறையே *நிற்பது, வருவது* என்ற வினைகளின் பொருண்மையோடு பொருந்துவனவாகும். இவற்றுள் (43)-இல் நிகழும் *வருதல் இல்லை* என்ற தொடர் *வராது* அல்லது *வாரா* என்ற முற்று வினையுடன் பொருண்மை நிலையில் பொருந்தி நிற்பதால் *வருதல்* என்பதும் *வராது* அல்லது *வாரா* என்பதில் உள்ள வினைப்பகுதியும் மாற்றுருபு உறவில் அமைதலையும் காணலாம். (வினைப்பகுதிகளைப் பெயராய்க் கொள்வதற்கு இது ஓர்அகச் சான்றாகவும் அமைவதை அறியலாம்) எச்சமாகவும் பயனிலையாகவும் அமைவதற்கான வாக்கியச் சூழலில் ஓர் வினையமைப்பு நிகழாமல் மாறுபட்ட வாக்கியச் சூழலில் அது நிகழுமாயின் மரபிலக்கணிகளின் பார்வையில் அவ்வினையமைப்பு தொழிற்பெயர்த் தன்மையதாக அமைகின்றது. செயல் மற்றும் செய்தல் வினைகளின் மூவகைச் செயற்பாடுகளை நோக்குகையில் மரபிலக்கணிகளால் தொழிற்பெயர்கள் எனக் கருதப்பெறும் வினையமைப்புக்களும் வரலாற்றுக்கு முந்தைய நிலையில் பயனிலைகளாகவும் எச்சங்களாகவும் நிகழ்ந்து இருக்க வேண்டும் என்று கருதத் தோன்றுகின்றது.

## 10.0 அல்லும் தல்லும்

10.1 செயல் வினைகளும், செய்தல் வினைகளும் பயனிலைகளாகவும் எச்சங்களாகவும், தொழிற்பெயர்களாகவும் நிகழும் போக்கு பல்வேறு எடுத்துக்காட்டுக்கள் மூலம் மேலே அறியப் பட்டது. இனி இவ்வினைகளில் நிகழும் *அல்* மற்றும் தல்லென் கிளவிகளின் பொருண்மையமைப்பினைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கலாம். இச் சிந்தனைக்குப் பெயரெச்சச் செயற் பாட்டில் அமைந்த செயல்வினைகளையும் செய்தல்வினை களையும் முதலில் கருத்தில் கொள்ளலாம். இதற்கு முன்பாக மேற்படி வினைகள் அமைந்த பெயரெச்சத் தொடர்களைப் பற்றிய ஒரு செய்தியை நினைவூட்டிக் கொள்ளலாம்.

10.2 இரண்டு வகையான தலைமைப் பெயர்கள் அமைந்த பெயரெச்சத் தொடர்களில் செயல்வினைகளும், செய்தல் வினைகளும் பெயரெச்சச் செயற்பாட்டினவாய் நிகழ்கின்றன. முதல் வகையில் தலைமைப் பெயர், வாக்கியத்தின் அக உறுப்பாக அமைகின்றது. *முருகனை மணந்த வள்ளி* என்ற பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயராக நிகழும் *வள்ளி* என்னும் பெயர் *வள்ளி முருகனை மணந்தாள்* என்ற வாக்கியத்தில் நிகழ்வது இந்த வகையில் அடங்கும். இவ்வாறு அமையும் பெயரெச்சத் தொடர்களை *அகநிலைப் பெயரெச்சத் தொடர்கள்* எனக் குறிப்பிடலாம். இரண்டாம் வகையில், தலைமைப் பெயர் வாக்கியத்தின் புறஉறுப்பாக அமையும். *முருகன் வந்த செய்தி* என்ற பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயராக நிகழும் *செய்தி* என்னும் பெயர் *முருகன் வந்தான்* என்ற வாக்கியத்தில் நிகழாமல் அதன் புறத்தே நிகழ்வது இந்த வகையில் அடங்கும். இவ்வாறு அமையும் பெயரெச்சத் தொடர்களைப் புறநிலைப் பெயரெச்சத் தொடர்கள் என வழங்கலாம். இப்பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரானது வாக்கியம் முழுவதையும் தழுவி அதன் பிரதிபலிப்பாக அமையும். *முருகன் வந்த செய்தி* என்ற பெயரெச்சத் தொடரில் *செய்தி* என்னும் தலைமைப் பெயர், *முருகன் வந்தான்* என்ற வாக்கியம் முழுவதையும் பிரதி பலிப்பதாக அமைதலைக் காணலாம். செயல் வினைகள் அமைந்த பெயரெச்சத் தொடரில் அகநிலைத் தலைமைப் பெயரும், புறநிலைத் தலைமைப் பெயரும், செய்தல் வினையமைந்த பெயரெச்சத் தொடரில் புறநிலைத் தலைமைப் பெயரும் அமைந்த எடுத்துக்காட்டுக்களைக் கீழே காணலாம்.

(44) தண் வரல் வாடை-அகநிலைப் பெயரெச்சத்தொடர்
(குறுந்தொகை 35.5)

(45) சார்ந்து வரல் மரபு-புறநிலைப் பெயரெச்சத்தொடர்
(தொல். எழுத்து. இளம். 1)

(46) பொருள் தரல் விருப்பு-புறநிலைப் பெயரெச்சத்தொடர் (அகம். 29.20)

(47) காண்டல் விருப்பு-புறநிலைப் பெயரெச்சத்தொடர்
(பதிற்றுப்பத்து 12.10)

10.3 செயல்வினைகளில் நிகழும் அல்லென்கிளவியின் பொருண்மையமைப்பினைக் கண்டறிய *தண் வரல் வாடை* என்ற அகநிலைப் பெயரெச்சத்தொடரை முதலில் கருத்தில கொள்ளலாம். இத் தொடரின் பொருண்மையமைப்புடன் ஒன்றுபடும் பல்வேறு தொடர்கள் கீழே குறிக்கப் பெற்றுள்ளன.

48 (அ) தண்ணென வரும் வாடை
(ஆ) தண்ணென வருதல் ஆகிய வாடை
(இ) தண்ணென வருகின்ற வாடை } தண்வரல் வாடை
(ஈ) தண்ணென வருகின்றதாகிய வாடை
(உ) தண்ணென வருவதாகிய வாடை

10.4 இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *வரல், வரும், வருதல், வருகின்று, வருகின்றது, வருவது* ஆகிய ஆறும் சிதறிய வழக்கில் **(Complementary Distribution)** அமைந்த இறவாக்காலப் பொதுவினை முற்றுக்கள் **(Non-Past Impersonal Finite Verbs)** ஆகும். *வரல்* என்பது *தண்* என்பதனையடுத்தும், *வரும்* என்பது *தண்ணென* என்பதனை அடுத்தும், *வருதல்* என்பது *தண்ணென, ஆகிய* என்பவற்றின் இடையிலும், *வருகின்று* என்பது அகரக் கிளவியின் முன்பும் *தண்ணென* என்பதன் பின்பும், *வருகின்றது, வருவது* ஆகியவை *தண்ணென, ஆகிய* என்பவற்றின் இடையிலும் நிகழ்கின்றன. இவற்றுள் *வருதல், வருகின்றது, வருவது* ஆகியவை தம்முள் உறழ்ந்தும் ஏனைய பொதுவினை முற்றுக்களோடு சிதறிய வழக்கிலும் நிகழ்கின்றன. இங்கே குறிக்கப்பெற்றுள்ள ஆறு பொது வினை முற்றுக்களும் வண்ணனை நிலையில் ஒருசேர நிகழ்ந்தாலும் அவை பல்வேறு படிநிலைகளுக்கு உரியனவாகும். ஆகவே தான் அவற்றின் நிகழ்ச்சி பல்வேறு தொடரனியல் சூழல்களால் **(Syntactic Contexts)** கட்டுப்படுத்தப்பட்டுச் சிதறிய வழக்கினதாகக் காணப்படுகின்றது.

*10.5* மேலே குறிப்பிட்ட ஆறு பொதுவினைமுற்றுக்களின் உருபனியல் அமைப்பைப் பொறுத்தவரையில் *வரல், வரும்* இரண்டும் முறையே *வர்+அல், வர்+உம்* என்ற அமைப்பினவாகும். செயல் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களில் நிகழும் *அல்* என்பதும் உம் என்பதும் உறழ்ச்சி வடிவங்கள் (Free Variants) ஆகும். செய்தல் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் அமைப்பைச் *செய்து+அல்* எனக் கொண்டால் இதில் நிகழும் *அல்* என்பது சாரியையாக அமையலாம் *(?)*. *(பார்க்க: துணைப் பகுதி 20.0)*. இதனைக் கருத்தில் கொண்டு *வருதல்* என்பதை *வருது+அல்* என்ற அமைப்பினதாகக் கொள்ளலாம். செய்கின்று வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் செய்கு+இன்று என்ற அமைப்பினவாகக் கருதத்தக்கனவாகையால் *வருகின்று* என்பது *வருகு+இன்று* என்ற அமைப்பினதாகக் கொள்ளத்தக்கதாகும். நன்னூல் ஆசிரியர் பவணந்தி இந்த வாய்பாட்டு வினைகளை, செய்+கின்று என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கொள்வது ஒருவகை ஆய்வு முறையாகும். நடப்பில் பயின்று வழங்கும் தனி உருபன்களையே (Free Morphemes) அடிநிலைக் கிளவிகளாக உருபனியல் ஆய்வில் கருத்தில் கொள்ளப்பட வேண்டும் என்பது ஒரு வசதிக்காகத் தான். இந்த அடிப்படையில் அமைந்ததுதான் பவணந்தியின் ஆய்வு முறை. உண்மை என்னவெனில் வரலாற்று நிலையில் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளின் நிகழ்ச்சி பழந் தமிழிலேயே தொடங்கிவிட்டது. எ-டு : *வருகுவன்* (நற். *119.8), வருகுவது* (புறம் *139.14), கொடுக்குவர்* (புறம். *182.5), தூர்க்குவன் (பத்துப். 9.271)*. எனவே, செய்கின்று வாய்பாட்டுப் பொது வினை முற்றுக்களை வண்ணனை நிலையிலேயே செய்கு+ இன்று என்ற அமைப்பினவாகக் கொள்வதற்கு எதுவும் கோட்பாட்டு நிலையில் தடையாக இல்லை. இந்த ஆய்வின் படி செய் என்ற வாய்பாட்டு வினைப்பகுதிகளின் மாற்றுருபுகளாக *இன்று* என்பதன் முன் நிகழும் செய்கு வாய்பாட்டு வடிவங்கள் கருதப்படும். இந்த ஆய்வானது படிக்க *(<படிக்கு+அ)*, பார்க்க *(<பார்க்கு+அ)*, படிக்கும் *(<படிக்கு+உம்)*, பார்க்கும் *(<பார்க்கு+உம்)* முதலான வற்றுக்கும் பொருந்தும். செய்கின்றது, செய்வது ஆகிய வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களில் நிகழும் *அது* என்னும் உறுப்பை வண்ணனை நிலையில் இலக்கண உருபனாகக் கொள்ள வாய்ப்பில்லையாகலின் அதனைச் சாரியையாகக் கொள்ளலாம். எஞ்சியுள்ள செய்கின்று, செய்வு (< *செய்பு) வாய்பாட்டு வினைகள் செய்கு+ இன்று, செய்+வு என்ற அமைப்பினவாகக் கருதற்பாலனவாகும். இதனைக் கருத்தில்

கொண்டு (48)-இல் நிகழும் *வருகின்றது, வருவது* ஆகியவற்றில் உள்ள *-அது* என்பது சாரியையாகக் கொள்ளப்பட்டு, எஞ்சியுள்ள *வருகின்று, வருவு* ஆகியவை முறையே *வருகு+இன்று, வரு+வு/ வர்-உவு* என்ற அமைப்பினவாகத் துணியப்படும்.

10.6 செயல் வினையானது செய்து வாய்பாட்டு வினையெச்சச் செயற்பாட்டினையும் மேற்கொள்ளவல்லது என்பதை எடுத்துக்காட்டுக்கள் (37), (38)-இல் அமைந்த *இரியல் போகி* என்ற தொடரில் கண்டோம். இத்தொடரில் அமைந்த *இரியல்* என்னும் செயல்வினை *இரிந்து* என்னும் செய்து வாய்பாட்டு வினைக்கு நிகரானதாகும். இவ் வினையில் அமைந்த அல்லென் கிளவியும் [இருப்பு+காலம்] என்ற பொருண்மையமைப்பினையே குறிக்கும். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களை அடிப்படையாகக் கொண்டு விளக்கலாம்.

49 (1) கருந்தொழிற் கொல்லன் *காட்டினன்* உரைப்போன்
(சிலம்பு. 16. 165)

(2) மூவருள் ஒருவன் துப்பா கியரென
ஏத்தினர் தரூஉம் கூழே நும்குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவல ரதுவே (புறம். 122. 5-7)

50 (1) நாணும் உட்கும் நண்ணுவழி அடைதர
ஒய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ
(பத்துப்பாட்டு 8. 184, 185)

(2) நெய்விலைக் கட்டிப் பசும்பொன் *கொள்ளாள்*
எருமை நல்லான் கருநாகு பெறூஉம் (பத்துப்பாட்டு 4. 164, 165)

(3) இருளிடை என்னாய் நீ இரவு அஞ்சாய் வந்தக்கால் (கலி. 38. 14)

51 (1) கருந்தொழிற் கொல்லனும் ... ...
கோவலன் தன்னைக் *குறுகினன் ஆகி* (சிலம்பு. 16. 154, 157)

(2) கைக்கோற் கொல்லனைக் *கண்டனன் ஆகி* (சிலம்பு 16. 108)

52 (1) வினைவிளை காலம் ஆதலின் யாவதும்
சினையலர் வேம்பன் *தேரான் ஆகி* (சிலம்பு 16. 148, 149)

(2) மையல் வேழம் மடங்கலின் எதிர்தர
உய்விடம் *அறியேம் ஆகி* (பத்துப்பாட்டு 8. 165, 166)

(3) பகலும் நம்வயின் *அகலான் ஆகி* (அகம். 50. 5)

மேலே (49) முதல் (52) வரை கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக் காட்டுக்களில் முதல் இரண்டு எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *காட்டினன், ஏத்தினர், வாழ்த்தினர், விடாஅன், கொள்ளாள்,*

*அஞ்சாய்* ஆகிய முற்றுவினைகள் முறையே *காட்டி, ஏத்தி வாழ்த்தி, விடாது/விடாமல், கொள்ளாது/கொள்ளாமல், அஞ்சாது/அஞ்சாமல்* ஆகிய பொது எச்சங்களுக்கு நிகரான முற்றெச்சங்களாய்ச் செயல்படுகின்றன. இவ்வாறே பிந்திய இரண்டு எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *குறுகினன் ஆகி, கண்டனன் ஆகி, தேரான் ஆகி, அறியேம் ஆகி, அகலான் ஆகி* என்ற தொடர்கள் முறையே *குறுகி, கண்டு தேராது/தேராமல், அறியாது/அறியாமல், அகலாது/அகலாமல்* ஆகிய பொது எச்சங்களுக்கு நிகரானவையாய்ச் செயல்படுகின்றன. பிந்திய இரண்டு எடுத்துக்காட்டுக்களில் நிகழும் சிறப்பு வினைமுற்று+ ஆகி என்ற அமைப்பினதாகிய எச்சத்தொடர்களை நோக்கும்போது, முந்திய இரண்டு எடுத்துக்காட்டுக்களில் அமைந்த முற்றெச்சங்கள் பிந்திய தன்மையில் அமைந்த எச்சத்தொடர்களாய் அதாவது, **காட்டினன் ஆகி, *ஏத்தினன் ஆகி, *வாழ்த்தினர் ஆகி, *விடாஅன் ஆகி, *கொள்ளாள் ஆகி, *அஞ்சாய் ஆகி* என விரிக்கத்தக்கவை என்பதும், பிந்திய தன்மையில் அமைந்த *சிறப்பு வினைமுற்று+ ஆகி* என்ற எச்சத் தொடர்கள் முந்திய தன்மையில் அமைந்த முற்றெச்சங்களாய் அதாவது *குறுகினன், கண்டனன், தேரான், அறியேம், அகலான்* எனக்குறுகி அமையும் என்பதும் பெறப்படுகின்றது. இதனின்றும் முந்திய தன்மையிலான எடுத்துக்காட்டுக்களில் நிகழும் முற்றெச்சங்களாகிய *காட்டினர், ஏத்தினர்* முதலியன *ஆகி* என்ற எச்சச் செயல்பாட்டில் அமைந்த வினையின் பொருண்மையை உள்ளீடாகக் கொண்டுள்ளன என்ற அரிய உண்மை புலப்படுகிறது. முற்றெச்சங்களுக்குப் பொருந்தும் இந்த உண்மை, பொது எச்சங்களாகிய செய்து மற்றும் செய்யாது/செய்யாமல் ஆகிய வாய்பாட்டு வினைகளுக்கும் பொருந்தும். முற்றெச்சங்கள் பயனிலைகளாகச் செயற்படுகையில் முற்றெச்சங்களில் உள்ளீடாக அமையும் *ஆகி* என்பதன் பொருண்மையமைப்பு பயனிலை வினைகளிலும் உள்ளீடாக அமைதல் தவிர்க்க முடியாத ஒன்றாகும். *ஆகி* என்னும் வினையமைப்பு, [இருப்பு+காலம்] என்ற பொருண்மையமைப் பினதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *இரியல் போகி* என்ற தொடரில் முற்றெச்சமாய் அமைந்த இரியல் என்னும் செயல் வினையில் நிகழும் அல்லென் கிளவியும் [இருப்பு+காலம்] என்ற பொருண்மையமைப்பை எச்சம் மற்றும் பயனிலைச் செயற்பாடு களில் உணர்த்தி நிற்கின்றது எனத் துணியலாம். *இரியல்* என்பதனை முற்றெச்சமாகக் கொள்ளாமல் *இரிந்து* என்பதற்கு ஈடாகக் கொண்டாலும் இந்தத் துணிபு செல்லுபடியாகும்.

10.7 முற்று வினைகளிலும் எச்ச வினைகளிலும் இருப்புப் பொருண்மை உள்ளீடாகச் செறிந்து நிற்கும் நிலையினை மேலே அறியமுடிந்தது. இந்த நிலையானது தொழிற்பெயர்களிலும் அமைவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களின் வாயிலாக அறியலாம்.

(53) விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
*பழகுவர் ஆதலோ* அரிதே (அகம் 61.13, 14)

(54) தோடும் தொடலையும் கைக்கொண்டு அல்கலின்
*ஆடினர் ஆதல்* நன்றோ (அகம் 138.12, 13)

(55) இன்னே வருகுவன் என்று தலைவியை *ஆற்றுவித்தாள்*
*ஆதல்* அறிக (அகம், 4 உரை. கழகப்பதிப்பு)

(56) தலைவனுக்குப் பேதமை *ஊட்டினாள் ஆதல்*
நுண்ணிதின் உணர்க (அகம். 2 உரை. கழகப்பதிப்பு)

(57) என்னைப் பெண் பிசாசு என்று கருதி *அஞ்சினான்*
*ஆதலை* யான் அறிந்து....
(கலித்தொகை, 65, நச்சினார்க்கினியர் உரை, கழகப்பதிப்பு)

(58) செலீஇய சேறி யாயின் இவளே
வருவை யாகிய சின்னாள்
*வாழாள் ஆதல்* நற் கறிந்தனை சென்மே (நற்றிணை, 19. 7-9)

இந்த ஆறு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *பழகுவர் ஆதல், ஆடினர் ஆதல், ஆற்றுவித்தாள் ஆதல், ஊட்டினாள் ஆதல், வாழாள் ஆதல்* ஆகிய தொடர்களில் இருப்புப் பொருண்மை உணர்த்தும் *ஆதல்* என்னும் குறிப்பு வினையின் நிகழ்ச்சியைக் காணலாம். இந்த ஆறு தொடர்களும் முறையே *பழகுதல், ஆடியது/ஆடியமை, ஆற்றுவித்தது/ஆற்றுவித்தமை, ஊட்டியது/ஊட்டியமை, அஞ்சியது/அஞ்சியமை, வாழாதது/வாழாமை* ஆகிய வினைப் பெயர்களின் விரிவுகளாகும். இதன்பொருள், (53) முதல் (58) வரை அமைந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் விரிந்து அமைந்த *பழகுவர் ஆதல்* முதலிய வினைப்பெயர்களும், குறுக்கங் களாக நாம் சுட்டிய *பழகுதல்* முதலிய வினைப்பெயர்களும் ஒரே பொருண்மையினைக் கொண்டவை என்பதாகும். இதன் அடிப்படையில், வினைப்பெயர்களும் இருப்புப் பொருண்மையை உள்ளீடாகக் கொண்டுள்ளன என்பது பெறப்படுகின்றது. செயல் மற்றும் செய்தல் வாய்பாட்டு இறவாக்கால வினைப்பெயர் களுக்கும் இந்த முடிவு ஒத்ததாகும்.

## 11.0 இருப்புவினைக் கருதுகோள்

மேலே குறிக்கப்பெற்ற பல திறத்தனவாகிய எடுத்துக் காட்டுக்கள் மூலம் பல்வேறுவகையான வினையமைப்புகள் உளன்,

உளர், உளது முதலானவற்றில் நிகழும் இருப்புப் பொருண்மையைக் குறிக்கும் *உள்* என்ற குறிப்பு வினையின் பொருண்மையை அதாவது, இருப்புப் பொருண்மையை உள்ளீடாகக் கொண்டவை என ஒரு கருதுகோளை உருவாக்கிக் கொள்ளலாம். இந்தக் கருதுகோளை உள்வினைக் கருதுகோள் எனக் குறிப்பிடலாம். உள்வினைக் கருதுகோளுக்குச் செயல்வினைகளாகட்டும், செய்தல் வினைகளாகட்டும் விதிவிலக்காய் அமைவன அல்ல. இந்தக் கருது கோள் மூலம் ஒரு பொதுச் சிந்தனையைக் கோட்பாட்டு முறையில் அமைத்துக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட வினையமைப்பின் கண் இருப்புப்பொருண்மை உள்ளீடாக இடம்பெற்றுள்ளமை தெளிவுபடுத்தப்படுமாயின் அனைத்து வகையான வினையமைப்புக் களிலும் இந்த இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சி உள்ளீடாக இடம்பெறுவதற்கான ஒரு கோட்பாட்டு வாய்ப்பு இருப்பதாகவே கருதத்தோன்றுகிறது. இந்தச் சிந்தனை, இருப்புப் பொருண்மையை உணர்த்தும் *ஆகு, என், இரு* முதலிய வினைகளின் சிறப்பியல்பு களின் அடிப்படையில் மேலும் செம்மைப்படுத்தப்பட வேண்டிய ஒன்றாகும். இது ஒரு தனி ஆய்வுக்குரிய பொருளாகலின் இங்கே இதுபற்றி விரிவாகப் பேசுவதற்கில்லை. இருப்புப்பொருண்மையை உணர்த்தும் உள்வினைக்குரிய நான்கு சிறப்பியல்புகளைக் குறிப்பிடுவதுடன் நாம் இங்கு அமையலாம். இந்த நான்கு சிறப்பியல்புகள் விளக்கம் ஏதுமின்றிக் கீழே குறிக்கப் பெறுகின்றன.

59 (அ) உள்வினையாகிய இருப்பு வினையின் நிகழ்ச்சி சில நிலைகளில் தவிர்ப்புக்கு இலாக்காகும் தன்மையது.

(ஆ) உள்வினையாகிய இருப்பு வினை தனக்குரிய இருப்புப் பொருண்மையை இழக்காமல் வேறு பொருண்மைகளையும் சேர்த்து உணர்த்தும் தன்மையது.

(இ) உள்வினையாகிய இருப்புவினை தனக்குரிய இருப்புப் பொருண்மையை இழந்து வேறு பொருண்மைகளை உணர்த்தும் தன்மையது.

(ஈ) உள்வினையாகிய இருப்பு வினை தனக்குரிய இருப்புப் பொருண்மையையும் இழந்து வேறு பொருண்மையையும் உணர்த்தாமல் வெற்றுறுப்பாகவும் சாரியையாகவும் நிகழும் தன்மையது.

வினையமைப்புக்களில் உள்ளீடாக இருப்புப்பொருண்மை செறிந்து நிற்கும் என்ற நமது பொதுச் சிந்தனை, (59)-இல் குறிக்கப் பெற்றுள்ள இருப்பு வினைச் சிறப்பியல்புகளின் அடிப்படையில் விளக்கத்துக்குரியதொன்றாகும். எடுத்துக் காட்டாக *தண்வரல் வாடை, இரியல் போகி* என்ற தொடர்களில்

அமைந்த அல்லென்கிளவியின் பொருண்மையமைப்பு 59(ஆ) பிரிவில் குறிக்கப்பெற்றுள்ள இருப்பு வினையின் சிறப்பியல்புடன் வைத்து விளக்கப்பட வேண்டிய ஒன்றாகும். இவ்வாறே *நன்னுதல்* என்பதில் இருப்பு வினையின் நிகழ்ச்சி 59(அ) பிரிவில் அமைந்த இருப்பு வினையின் சிறப்பியல்பையும், *நன்று ஆகிய நுதல்* (கலித்தொகை 143. நச்சினார்க்கினியர் உரை, கழகப் பதிப்பு) என்பதில் *நன்று* என்பதன்கண் நிகழும் துகரக் கிளவியின் பொருண்மையமைப்பு 59(இ) பிரிவில் குறிக்கப் பெற்றுள்ள இருப்பு வினையின் சிறப்பியல்பையும் கருத்தில் கொண்டு விளக்கப்படும். *பழகுவர் ஆதல்* (அகம் 61.14), *வாழாள் ஆதல்* (நற்றிணை 19.9) ஆகிய தொடர்களில் அமைந்த *ஆதல்* என்பதில் நிகழும் அல்லென் கிளவியின் பொருண்மையமைப்பு 59(ஈ) பிரிவில் குறிக்கப்பெற்றுள்ள இருப்பு வினைச் சிறப்பியல்பின் அடிப்படையில் விளக்கம் பெறும். இந்தச் செய்திகளை இத்துடன் நிறுத்திக்கொண்டு இனி நமது தலைமை ஆய்வுக்கு வருவோம்.

## 12.0 இயைபு முற்றுக்களின் இலக்கணச் செயற்பாடுகள்

12.1 இயைபு முற்றுக்கள் அதாவது இயைபு விகுதிகளை (Agreement Markers) ஏற்ற சிறப்பு வினைமுற்றுகள் பயனிலை யாகவும் எச்சமாகவும் செயல்படும் நிலை பழந்தமிழில் இயல்பாகக் காணப்படுவதால், பழந்தமிழுக்கு முந்திய தமிழில் (Pre Tamil) அல்லது தமிழ் கிளைப்பதற்கு அடிநாதமாக இருந்த ஒரு தொன் மொழியின் தொடக்க நிலையில் வினைமுற்றுக்கள் வாக்கியச் சூழலுக்கு ஏற்ப, பல்வேறு செயற்பாடுகளை உணர்த்தினவாதல் வேண்டும். இந்தச் செயற்பாடுகளின் சுவடுகள் மலயாளத்தில் செய்து வினைகளிலும், தமிழில் செயல் வினைகள், செய்தல் வினைகள், செய்யும் வினைகள் ஆகியவற்றிலும் பிரதிபலிப்பதைக் காணமுடிகின்றது. தொடக்கத்தில் இத்தகைய வினைமுற்றுக்கள் பொதுவினை முற்றுக்களாகவே இருந்தனவாதல் வேண்டும். பின்னர்த் தோன்றிய சிறப்பு வினைமுற்றுக்கள் பயனிலையாக மட்டுமன்றி முற்றெச்சமாகவும் செயல்பட்டதற்குக் காரணம் பொதுவினை முற்றுக்களின் பயனிலை, எச்சம் ஆகிய இரட்டைச் செயற்பாடுகளேயாகும்.

12.2 செயல் மற்றும் செய்தல் வினைகள் எச்சச் செயற் பாட்டினவாய் அமைகையில் உணர்த்தும் பொருண்மை அவை பயனிலைச் செயற்பாட்டினவாய் அமையும்போதும் பாதுகாப்பாகவே இருக்கும். ஆனால் மேற்படி வினைகள் வியங்கோட் பயனிலையாய் நிற்கையில் அவற்றில் அமைந்த அல்லென் கிளவி உணர்த்தும்

பொருண்மை மாறுபட்ட ஒன்றாக அமையும். செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் அகர விகுதியானது [இருப்பு+ வியங்கோள்] என்ற பொருண்மையமைப்பினதாகும். இப் பொருண்மையமைப்பில் இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சியைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களின் அடியாக அமையும் விளக்கத்தின் மூலம் நியாயப்படுத்தலாம்.

*(60) அரசன் (நீடூழி) வாழ்க*

*(61) அரசன் (நீடுழி) வாழ்வான் ஆக*

இவ்விரு எடுத்துக்காட்டுக்களும் ஒரே பொருண்மையினவாகும். பிந்திய எடுத்துக்காட்டில் நிகழும் *ஆக* என்னும் வினையமைப்பில் *ஆகு* என்பது இருப்புப் பொருண்மையையும், அதனையடுத்து நிகழும் அகரக் கிளவி வியங்கோட் பொருண்மையையும் உணர்த்துவனவாகும். இதனைக் கருத்தில் கொண்டு முந்திய எடுத்துக்காட்டில் உள்ள *வாழ்க* என்னும் வியங்கோள் வினையில் நிகழும் *வாழ்கு* என்ற இறவாக்காலப் பொது வினைமுற்றை அல்லது (செய்கு வாய்பாட்டுப் பொது வினைமுற்றை) அடுத்து நிகழும் அகரக்கிளவி [இருப்பு+வியங்கோள்] என்ற பொருண்மை யமைப்பினது எனத் தெளியலாம். அகரக்கிளவியின் இந்தப் பொருண்மை அமைப்பு 59(ஆ) பிரிவில் குறிக்கப்பெற்றுள்ள இருப்பு வினைச் சிறப்பியல்பினைப் பிரதிபலிப்பதாகும். மேல் எடுத்துக்காட்டுக்களில் (60)-இல் நிகழும் *வாழ்கு* என்னும் இறவாக்காலப் பொதுவினை முற்றும் (61)-இல் நிகழும் *வாழ்வான்* என்ற எதிர்காலச் சிறப்பு வினைமுற்றும் தொடரனியற் சூழல்களால் கட்டுப்படுத்தப்பட்டுச் சிதறிய வழக்கில் நிகழ்கின்றன. இந்தச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு வியங்கோட் பயனிலையாக நிகழும் செயல் வினைகளில் அமைந்த *அல்லென்* கிளவி [இருப்பு+ வியங்கோள்] என்ற பொருண்மையமைப்புக்கு உரியதாகி 59(ஆ) பிரிவில் குறிக்கப் பெற்றுள்ள இருப்பு வினைப் பண்புடன் பொருந்துவதாக வரையறை செய்யலாம். இறவாக்கால விகுதியாகத் தகர மெய்யைக் கொண்டுள்ள செய்தல் வினைகள் வியங்கோட் பயனிலையாகச் செயற்படுகையில் அவற்றில் நிகழும் அல்லென் கிளவியின் பொருண்மையமைப்பும் வாழ்க என்பதில் அமைந்த அகரக் கிளவியின் பொருண்மையமைப்பும் ஒரு நிகரனவாகும். செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகளைப் போலவே செய்தல் வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் செய்து (<*செயுது <*செயுந்து) வாய்பாட்டு வினைகளும் இறவாக்காலப் பொது

வினைமுற்றுக்களாகக் கருதத்தக்கவையாகும். எனவே செய்க மற்றும் செய்தல் வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் அகர விகுதியும் அல்லென் விகுதியும் பொருண்மை அமைப்பில் ஒரு நிகரனவாகின்றன.

## 13.0 பொருண்மை விளக்கம்

13.1 செயல் மற்றும் செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் ஈற்று விகுதிகளின் பொருண்மை அமைப்பினைப் பற்றி இனி ஆராயலாம். செய்யும் வாய்பாட்டு வினைகள் பயனிலையாகவும் பெயரெச்சமாகவும் நிகழ்வதைப் போன்றே செயல், செய்தல் ஆகிய வாய்பாட்டு வினைகளும் பயனிலையாகவும் பெயரெச்சமாகவும் செயல்படும் பெற்றியனவாகும். *வீங்கு செலல் மண்டிலம்* (புறம். 8-6), *விரை செலல் திகிரி* (அகம். 53-2), *சார்ந்து வரல் மரபு* (தொல். எழுத்து. 1), *கடுவரற் கான்யாறு* (அகம். 18.2), *முயங்கல் விருப்பு* (அகம். 86.23), *காண்டல் விருப்பு* (பதி. 12.20) ஆகிய தொடர்களில் நிகழும் *செலல், வரல், முயங்கல், காண்டல்* (<காணுதல்) ஆகிய செயல், செய்தல் வாய்பாட்டுப் பொது வினை முற்றுக்களானவை செய்யும் வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக் களைப் போலவே பெயரெச்சமாகச் செயல்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக:

(62) முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை *நீடல்* ஆவயின் ஆன (தொல். எழுத்து. இளம். 455)

(63) ழகர வுகரம் நீடிடன் உடைத்தே
உகரம் *வருதல்* ஆவயின் ஆன (தொல். எழுத்து. இளம். 262)

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் *தவல்* (=தவும்/கெடும்), *நீடல்* (=நீடும்/நீளும்), *வருதல்* (=வரும்) ஆகிய செயல், செய்தல் வாய்பாட்டு வினைகளானவை செய்யும் வாய்பாட்டு வினைகளைப் போன்றே பயனிலையாகச் செயல்படுகின்றன. பயனிலையாகவும் இன்றி, பெயரெச்சமாகவும் இன்றி இந்த வாய்பாட்டு வினைகள் மாறுபட்ட தொடரனியற் சூழலில் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

(64) ஆய்தம் நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வரூஉம் காலை யான (தொல். எழுத்து. இளம். 400)

(65) நாயும் பலகையும் வரூஉம் காலை
ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே
உகரம் கெடுவழி அகரம் நிலையும் (தொல். எழுத்து. இளம். 375)

*நிலையல்* (=நிலைத்தல்/நிலைப்பது) என்னும் செயல் வாய்பாட்டு வினையும், *கெடுதல்* (=கெடுவது) என்னும் செய்தல் வாய்பாட்டு வினையும் இந்த எடுத்துக்காட்டுக்களில் பெயர்நிலைக் கிளவிகளாய் அமைகின்றன. செய்யும் வாய்பாட்டு வினைகள் இவ்வாறு அமைவதில்லை. ஆயினும் ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். வினையமைப்புகள் அனைத்துமே அடிப்படையில் வினைப்பெயர்களே. காரணம், வினைப்பகுதியே வினைப்பெயராகக் கொள்ளத்தக்கதாகும். எனவே இதனடியாகத் தோன்றும் எவ் வகை வினையமைப்பும் வினைப்பெயராகவே கருதற்பாலதாகும்.

*13.2* செயல் மற்றும் செய்தல் வாய்பாட்டு வினைகள் இப்படிப் பலவாறாகச் செயல்படுவதை இலக்கண ஆய்வு தெளிவுபடுத்த வேண்டும். செய்யும் வாய்பாட்டு வினைகளோடு இரண்டு செயற் பாடுகளில் மேற்படி வாய்பாட்டு வினைகள் ஒன்றுபடுவதால் *அல்* என்னும் விகுதியும் *உம்* என்னும் விகுதியும் ஒரே பொருண்மை யமைப்புக்கு உரியவைபோல் தோன்றுகின்றன. ஆயினும் செய்தல் வாய்பாட்டு வினைகளில் தகரக்கிளவி இறவாக் கால விகுதியாக நிகழ்வது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இந்த விகுதியானது உணர்த்தும் காலப் பொருண்மையைச் செயல் வாய்பாட்டு வினைகளில் அல்லென்கிளவியும், செய்யும் வாய்பாட்டு வினைகளில் உம்மைக்கிளவியும் உணர்த்துகின்றன. இதனின்றும் செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் அல்லென் கிளவியும், செயல் வாய்பாட்டு, வினைகளில் நிகழும் அல்லென்கிளவியும் பொருண்மையமைப்பில் ஒரு நிகரனவல்ல என்பது தெளி வாகின்றது. எனவே செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் அல்லென் கிளவியை *ஆதல்* என்பதற்கு நிகராகக் கருதலாம். இதனைத் தொடர்ந்து, *நீவருதல் நன்று* என்ற எடுத்துக்காட்டில் வருதல் என்பது *வருவாய் ஆதல்* என்பதனோடு பொருந்தும். *வருதல்* என்பதில் உள்ள *வருது* என்ற பொதுவினை முற்றும் *வருவாய் ஆதல்* என்பதில் நிகழும் *வருவாய்* என்பதும் சிதறிய வழக்கில் நிகழ்வனவாகும். *வருதல்* என்பதில் நிகழும் *வருது* என்பது எழுவாய்க்கு ஏற்பச் சிறப்பு வினையாக மாறி அமையும். இதனைக் கருத்தில் கொண்டு செய்தல் வாய்பாட்டு வினைகளைச் செய்து + அல் என்று பகுப்பாய்வு செய்யலாம். இந்த அமைப்பில் *-அல்* என்னும் விகுதியின் பொருண்மையமைப்பானது செயல் மற்றும் செய்யும் வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-அல், -உம்* ஆகிய விகுதிகளின் பொருண்மையமைப்புடன் ஒன்றுபடுவதாகும். செய்தல் வாய்பாட்டு இறவாக்கால வினைகள் 20.1-இல் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

## 14.0 செய்கை வாய்பாட்டு வினைமுற்றுக்கள்

14.1 இடைப்பிறவரலாக இங்கே ஓர் செய்தியைக் குறிப்பிட்டாக வேண்டும். செய்தல் வாய்பாட்டு வினைகளைப் போலவே பழந்தமிழில் (அருகிய வழக்காகச்) செய்கை வாய்பாட்டு வினைகள் பெயரெச்சமாகச் செயல்படும் நிலை காணப்படு கின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(66) கொம்மையம் பசுங்காய் குடுமி விளைந்த
பாகல் ஆர்கைப் பறைக்கட் பீலித்
தோகை... ... ... (அகம். 15.3-5)

(67) ... ... நெடுந்தா ளியாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை
முடைநசை இருக்கைப் பெடை...... (அகம். 51.2-4)

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *ஆர்கை, இருக்கை* ஆகிய வினைகள் *ஆரும், இருக்கும்* என்ற செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகராய் அமைந்து பெயரெச்சமாகச் செயல்படுகின்றன. இந்த நிலையானது செய்கை வாய்பாட்டு வினைகள் கோட்பாட்டு நிலையில் பயனிலையாகவும் செயல்பட வல்லவை என்பதைத் தெளிவுபடுத்துவதாக உள்ளது. செயல், செய்தல், செய்யும் வாய்பாட்டுப் பொதுவினைகள் பயனிலை யாகவும் செயல்படுவதைக் கருதுகையில் செய்கை வாய்பாட்டு வினைகள் பயனிலையாகவும் செயல்படும் பெற்றியன என்ற முடிபு தவிர்க்க முடியாத ஒன்றாகிறது. இதனைக் கருத்தில் கொண்டு **மயில் பாகல் ஆர்கை* (=மயில் பாகல் ஆரும்), **பெடை உயர்சினை இருக்கை* (=பெடை உயர்சினை இருக்கும்) என்ற முற்று வாக்கியங்களை மீட்டுருவாக்கம் செய்யலாம். செய்கை வாய்பாட்டு வினைகள் *செயுகை (=செய்யுகை) வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்களாகும். கருதுக : தின்னுகை/தின்கை, உண்ணுகை/உண்கை, புரளுகை/புரள்கை, கவருகை/கவர்கை. *செயுகை வாய்பாட்டு மெல்வினைகள் மலயாளத்தில் செயுக (=செய்க) வாய்பாட்டினவாய் அமையும். இந்த வாய்பாட்டு வினைகள் செய்யும் வாய்பாட்டு வினைகளைப் போல் பழைய மலயாளத்தில் பயனிலையாக நிகழும் பெற்றியனவாகும். (L.V. Ramaswamy Ayyar 1936:71). பின்வரும் மலயாள எடுத்துக் காட்டினைக் கருதுக:

(68) பக்ஷிகளெப் போலே கரயுக
'பறவைகளைப் போல் ஒலிக்கும்/கத்தும்'

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *கரயுக* (=தமிழ் : கரையுகை/கரைக) என்னும் வினையானது கரயும் (=கரையும். எ-டு. காகம் கரையும்) என்பதற்கு நிகராய் அமைந்து பயனிலையாகச் செயல்படுகின்றது. தமிழில் செய்கை (=செய்யும்) வாய்பாட்டு வினைகள் பயனிலையாக நிகழும் வாக்கிய வகையை (66), (67)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களை அகச்சான்றாகக் கொண்டு மீட்டுருவாக்கம் செய்ய முடியும். இந்த வகை முற்றுவாக்கியங்கள் தமிழில் நிகழ்வதாகத் தெரியவில்லை. இவை தொல் தமிழ்-மலயாள நிலைக்கு (Proto Tamil - Malayalam Stage) உரியனவாகத் தோன்றுகின்றன. இது மேலும் ஆய்வுக்கு உரியதாகும்.

14.2 செய்கை வாய்பாட்டு வினைகள் செய்கு+ஐ என்ற அமைப்பினவாகத் தோன்றினாலும், இவற்றில் நிகழும் ஐயென் கிளவியானது செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் அல்லென் கிளவியைப் போல் தோன்றுகிறது. இது உண்மையாயின் செய்தல் வினைகளைச் செய்து+அல் என்று வண்ணனை நிலையில் பகுப்பதைப் போன்றே செய்கை வாய்பாட்டு வினைகளையும் செய்கு+ஐ என்று பகுக்க நேரிடும். இங்கே இன்னொரு செய்தியையும் குறிப்பிட்டாக வேண்டும். செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் செய்து வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்களைப் போலவே செய்கை வாய்பாட்டு வினைகளில் நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகளும் இறவாக் காலப் பொது வினைமுற்றுக்களாகும். இவற்றின் நிகழ்ச்சியை இறவாக் கால எதிர்மறை வினைமுற்றுக்களாகிய செய்கிலன், செய்கிலள், செய்கிலர் முதலான வாய்பாட்டு அமைப்புக்களில் காணலாம். செய்கு வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகராகத் தோன்றினாலும் இவை பெயரெச்சமாக நிகழும் தொடர்களைத் தமிழில் காண முடியவில்லை.

14.3 தமிழில் செய்கை வாய்பாட்டு வினைகளின் பெயரெச்சச் செயற்பாட்டினையும், மலயாளத்தில் செயுக (=செய்யுக < செய்யுகை) வாய்பாட்டு வினைகளின் பயனிலைச் செயற் பாட்டையும் கருத்தில் கொண்டு தமிழில் மேற்படி வாய்பாட்டு வினைகளின் அமைப்பைச் செய்கு+ஐ எனக் கொள்ளலாம். இந்த அமைப்பில் நிகழும் *ஐ* என்னும் விகுதியானது முன்னரே குறிப்பிட்டது போல் செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-அல்* என்னும் விகுதிக்கு நிகரானதாகும். இந்த அடிப்படையில் செய்யும், செயல், செய்தல், செய்கை ஆகிய வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-உம், -அல், -ஐ* ஆகிய விகுதிகளின் பொருண்மையமைப்பைக் கண்டறிய இனி முற்படலாம்.

## 15.0 ஒருங்கிணைந்த ஆய்வு

15.1 *பாடும் பறவை* என்ற பெயர்த்தொடர் *பாடுவதாகிய பறவை* என்ற பெயர்த்தொடராகப் பொருண்மை சிதையாமல் விரிக்கத்தக்கதாகும். இந்த இரண்டு தொடர்களுக்கும் இடையில் உள்ள இலக்கண உறவை ஓர் ஒருங்கிணைந்த ஆய்வின் மூலம் புலப்படுத்தியாக வேண்டும். பிந்திய தொடரில் நிகழும் *ஆகிய* என்பது உள்வினைப் பெயரெச்சம் (Copula Relative Participle) ஆகும். இந்தப் பெய ரெச்சம் இருப்புப்பொருண்மையையும் காலப்பொருண்மையையும் முறையே *ஆகு, -இய* என்ற வரிவடிவங்களின் மூலம் உணர்த்துகின்றது. இந்த இரண்டு பொருண்மைக் கூறுகளையும் *பாடும்* என்ற பெயரெச்ச வினைமுற்றில் நிகழும் உம்மைக்கிளவி ஒருசேர உணர்த்தி நிற்கின்றது. இதனைக் கருத்தில் கொண்டு பயனிலை வினைமுற்றாயினும், பெயரெச்ச வினைமுற்றாயினும் செய்யும் வாய்பாட்டு வினைகளில் நிகழும் உம்மைக்கிளவியின் பொருண்மையமைப்பு [+இருப்பு, +காலம்] எனக் கொள்ளத் தக்கதாகின்றது. இந்தப் பொருண்மையமைப்பு செயல், செய்தல், செய்கை வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-அல், -ஐ* ஆகிய விகுதிகளுக்கும் பொருந்தும். *பாடுவதாகிய பறவை* என்ற தொடரில் உள்ள *பாடுவது* என்பது இறவாக்காலச் சிறப்பு வினைமுற்றாகும். *பாடும்* என்பதன் மாற்று வடிவமாகக் கொள்ளத்தக்க *பாடுவது* என்ற முற்று வினை *பாடு+வ்+அது* என்ற அமைப்பினதாகக் கொள்ளத் தோன்றும். இந்த அமைப்பில் நிகழும் *-அது* என்னும் வடிவம் இயைபுப் பொருண்மையை உணர்த்துவதாகும். *பாடும்* என்ற வினையில் உம்மைக் கிளவி உணர்த்தும் காலப் பொருண்மை *பாடுவது* என்பதிலும், *ஆகிய* என்பதிலும் வகரம் மற்றும் *-இய* ஆகிய வடிவங்களால் இரு முறை உணர்த்தப்படுகின்றது. இலக்கண விளக்கமானது இந்த உண்மைகளையெல்லாம் கருத்தில் கொள்வதுடன், பொருண்மைக் கூறுகள் எவ்வாறு வரிவடிவம் பெறுகின்றன என்பதையும் தெளிவுபடுத்த வேண்டும். இந்த ஆய்வை மேற்கொள்வதற்குமுன் பொருள்கோட்கிளவி (Semantic Absorber) என்பதைப் பற்றி விளக்கியாக வேண்டும்.

15.2 செய்யும், செயல், செய்தல், செய்கை ஆகிய வாய்பாட்டு வினைமுற்றுக்களில் நிகழும் *-உம், -அல், -ஐ* ஆகியவை விகுதி நிலையில் அமைந்த உள்வினைகளாகக் (Suffixal Copulas) கருதத்தக்கவையாதலால் இவ்விகுதிகள் இருப்புப்பொருண்மை யுடன் தொடர்புபடும் நிலையினை இலக்கண ஆய்வு புலப்படுத்த வேண்டும். இருப்புப் பொருண்மையுடன் வினை விகுதிகள்

தொடர்பு உள்ளவை என்பதை வலியுறுத்தும் வகையில் *ஆகு* என்னும் ஒரு கற்பிதக் குறியீட்டினைப் பொருண்மையமைப்பு பற்றிய ஆய்வில் நாம் அமைத்துக் கொள்ளலாம். இந்தக் குறியீடு, பொருண்மைக் கூறு அல்லது கூறுகளைக் கவர்ந்து சூழலுக் கேற்ற வரிவடிவமாக மாறியமையும் பெற்றியதாகும். இதனைக் கருத்தில் கொண்டு இக்கற்பிதக் குறியீட்டினைப் *பொருள்கோட் கிளவி* என்னும் கலைச் சொல்லால் குறிப்பிடலாம். பொருள் கோட் கிளவியாகிய *ஆகு* என்னும் வரிவடிவம் சாரிய்ய போன்று பொருளேதுமற்ற ஓர் வெற்றுருப்பாகும். இந்தக் குறியீட்டினைப் பொருள் கோட்கிளவியாக நாம் கொண்டதற்குக் காரணம் இருப்புப் பொருண்மையைக் குறிக்கும் *ஆகு* என்னும் வரிவடிவத் துடன் வினை விகுதிகளைத் தொடர்புபடுத்த வேண்டும் என்பதேயாகும். இன்னொரு காரணம், *ஆகு* என்பதன் அடியாகத் தோன்றிய *ஆம், ஆனால், ஆவது, ஆயிற்று* முதலிய அமைப்புக்கள் பல்வேறு பொருண்மைகளை உணர்த்தும் தன்மையனவாய் அமைவதாகும். எடுத்துக்காட்டாக *முருகன் வந்தானாம், முருகன் வரலாம், முருகன் தேன் தமிழாம் தென் தமிழில் பாடினான், நீ அப்பாவாம்; நான் அம்மாவாம்* (சிறுவர் விளையாட்டில்), *முருகன் இரண்டாம் வகுப்பில் படிக்கிறான்* முதலியவற்றில் நிகழும் *ஆம்* என்னும் வினை இருப்புப் பொருண்மையை உணர்த்தும் *ஆகு* என்னும் வினையடியாகத் தோன்றிய போதிலும் அது உணர்த்தும் பொருண்மைகள் பல்வேறு திறத்தனவாகும். *மாதவன் பாடுவானானால் மாதவி ஆடுவாள், மாதவன் பாடுவான்; ஆனால் மாதவி ஆடமாட்டாள்* இவ்விரு வாக்கியங்களிலும் நிகழும் *ஆனால்* என்பது ஒரே பொருண்மைக்குரியதன்று. *முருகனாவது வருவானா, முருகனாவது வருவதாவது, முருகனாவது வள்ளியாவது வரலாம், முருகன் இரண்டாவது வரிசையில் இருக்கிறான்* முதலிய வாக்கியங்களில் நிகழும் *ஆவது* என்னும் கிளவி பல்வேறு பொருண்மைகளை உணர்த்துவதை அறியலாம். *முருகன் வந்தாயிற்று, முருகனைக் காப்பாற்ற நானாயிற்று* ஆகிய வாக்கியங்களில் நிகழும் *ஆயிற்று* என்பது ஒரே பொருண்மை அமைப்புக்கு உரியதன்று. *இந்த வேலை முருகனால் ஆகாது, முருகன் இந்த வேலையைச் செய்யலாகாது* ஆகியவற்றில் நிகழும் *ஆகாது* என்னும் உறுப்பு வெவ்வேறு பொருண்மையமைப்பின வாகும். *ஆகு* என்னும் வினையடியாகத் தோன்றிய இவ்வினை யமைப்புக்கள் அனைத்தும் இவ்வாறு பல்வேறு பொருண்மை யமைப்புகளுக்கு உரியனவாய் அமைவதால் நமது இலக்கண ஆய்வு இந்த நிலையை இரண்டு நிலைகளில் தெளிவுபடுத்த வேண்டும். ஒன்று, இந்த வினையமைப்புக்கள் எல்லாம் *ஆகு* என்னும் வினையுடன் தொடர்புடையன. இரண்டு, *ஆகு* என்னும்

இருப்பு வினை தன் பொருண்மையை இழந்தும் இழக்காமலும் பல்வேறு பொருண்மைக் கோலங்களை மேற்கொள்ளவல்லது; தன் பொருண்மையை இழந்து சாரியையாகவும் அமையவல்லது. இந்த இரண்டு நிலைகளைத் தெளிவுபடுத்தும் வகையில் *ஆகு* என்னும் பொருளற்ற ஓர் கற்பிதக் குறியீட்டினை நாம் நமது ஆய்வில் படைத்துக் கொள்கிறோம். இக்கற்பிதக் குறியீடு, பல்வேறு பொருண்மைகளைக் கவர்ந்து *ஆம், ஆனால், ஆவது* முதலிய வரிவடிவங்களாக வெளிப்பாடு பெறுகின்றது. *ஆகு* என்னும் கற்பிதக்குறியீடு, வெளிப்பாடு பெற்ற வரிவடிவங்கள் (*ஆகு* என்னும்) இருப்பு வினையுடன் தொடர்பு கொண்டவை என்பதை உள்ளீடாக நின்று உணர்த்துகின்றது. வினை விகுதிகளின் பண்புகள், *ஆகு* என்னும் இருப்பு வினையின் பண்புகளுடன் ஒத்துச் செல்லும் பாங்கினைக் கருத்தில் கொண்டு இவ்விரண்டுக்கும் இடையில் அமைந்த உறவைப் புலப்படுத்தும் வகையில், பொருண்மையமைப்புப் பற்றிய ஆய்வில் *ஆகு* என்பதானது ஓர் கற்பிதக் குறியீடாகக் கொள்ளப்படுகிறது. கற்பிதக் குறியீடாகிய *ஆகு* என்னும் இந்தப் பொருள்கோட் கிளவியை இருப்பு மற்றும் ஆக்கப்பொருண்மைகளை உணர்த்தும் *ஆகு* என்னும் வடிவத்துடன் குழப்பிக் கொள்ளக்கூடாது.

15.3 பொருள்கோட்கிளவி (Semantic Absorber) பொருண்மைக் கூறுகளைக் கவர்ந்து பொருத்தமான வரிவடிவங்களாய் அமையும் நிகழ்ச்சியானது கிளவியாக்க விதிகள் (Lexicalization Rules) மூலம் நடைபெறுகின்றது. விகாரங்கள் (Transformations) செயல்பட்ட நிலையில் அமையும் இந்தக் கிளவியாக்க விதிகள் (வரிவடிவங் களுக்கிடையே காணப்படும் விட்டிசையைத் தவிர்க்கும்) சேர்க்கை விகாரம் (Adjunction Transformation) செயல்படுவதற்கு முன்னதாகவே செயல்பட்டுவிடும். தேவையெனில், சேர்க்கை விகாரம் செயல்பட்ட பிறகு சந்திவிதிகள் செயல்படும்.

15.4 பொருள்கோட் கிளவியாகிய ஆகு என்னும் வெற்றுருப்பு ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பொருண்மைகளைக் கவரவல்லது. ஒரு குறிப்பிட்ட ஆய்வில் நிகழும் ஒன்றுக்கு மேற்பட்ட பொருண்மை உறுப்புக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட வரி வடிவங்களைப் பெறுமாயின் கிளவியாக்க விதிகளும் ஒன்றுக்கு மேற்பட்டனவாய் இருக்கும். புதையமைப்பில் இருக்கும் ஒற்றைப் பொருள்கோட்கிளவி இதைக் கருத்தில் கொண்டு பொருண்மை யுறுப்புக்கள் பெறும் வரிவடிவங்களின் எண்ணிக்கைக்கு ஏற்பப் பலவாகப் பிரதியாக்கம் (Copying) செய்யப்படும். எடுத்துக் காட்டாக, *தண் வரல் வாடை, தண்ணென வரும் வாடை,*

*காண்டல் விருப்பு* ஆகிய தொடர்களில் அமைந்த *வரல், வரும், காண்டல்* என்பவற்றில் [இருப்பு], [காலம்] ஆகிய பொருண்மைகளை உணர்த்தி நிற்கும் *அல், உம்,* ஆகிய விகுதிகள் பின்வரும் கிளவியாக்க விதிகள் மூலம் பெறப்படும்.

$$\text{(69) ஆகு+[இருப்பு+காலம்]} > \left[\begin{Bmatrix}\text{அல்}\\ \text{உம்}\\ \text{அல்}\end{Bmatrix}\right] \Big/ \left[\begin{matrix}\text{வர்}\\ \\ \text{காண்டு}\end{matrix}\right] -$$

## 16.0 ஆள்காட்டி விரலும் ஆள்காட்டும் விரலும்

16.1 தமிழில் *ஆள்காட்டி விரல், மரங்கொத்திக் குருவி, மரமேறி மாணிக்கம்* முதலான பெயர்த்தொடர்கள் பரவலாகக் காணப் படுகின்றன. இந்த எடுத்துக்காட்டுக்களில் உள்ள தொடர்கள் *ஆள்காட்டும் விரல், மரம் கொத்தும் குருவி, மரம் ஏறும் மாணிக்கம்* என்ற தொடர்களின் பொருண்மையோடும், தொடரியல் அமைப்போடும் பொருந்துவனவாகும். இத்தகைய பொருத்தமானது *காட்டி* (< காட்டு+இ), *கொத்தி* (< கொத்து+இ), *ஏறி* (< ஏறு+இ) ஆகிய வினையமைப்புக்கள், செய்யும் வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினைகளுக்கு நிகரான பொது வினை முற்றுக்களாகத் தொல்தமிழில் (Proto Tamil) நிகழ்ந்து இருக்க வேண்டும் என்ற உண்மையை வலியுறுத்துவனவாக உள்ளன. இந்த வினையமைப்புக்கள் தமிழில் முற்று வாக்கியங்களில் (Simple Sentences) பயனிலையாகச் செயல்படும் நிலை காணப் படவில்லை. ஆனால் *ஆள்காட்டி விரல்* என்ற பெயர்த்தொடரை எடுத்துக்காட்டாகக் கருத்தில் கொண்டு **விரல் ஆளைக்காட்டி* (=விரல் ஆளைக் காட்டும்) என்ற முற்று வாக்கியத்தை மீட்டுருவாக்கம் செய்ய முடியும் என்றே தோன்றுகிறது.

16.2 *ஆள்காட்டி விரல்* போன்ற அமைப்புக்களில் தலைமைப் பெயரும் (Head Noun) அதனைத் தழுவி நிற்கும் பெயரெச்ச வினைமுற்றும் எழுவாய்-பயனிலை என்ற இலக்கண உறவில் அமைந்துள்ளன. மேலும் இத்தகைய தொடர்களில் நிகழும் பெயரெச்ச வினைமுற்றுக்கள் இறந்தகால வினைகளாகக் கொள்ளத்தக்கவையல்ல. இந்த உண்மைகளைக் கருத்தில் கொண்டு மேலே (69)-இல் வகுத்து உள்ள கிளவியாக்க விதியின் மூலம் *ஆள்காட்டிவிரல்* போன்ற பெயர்த்தொடர்களில் நிகழும் இறவாக்காலப் பெயரெச்ச வினைமுற்றுக்களில் காணப்படும் இகர விகுதியை வருவிக்கலாம். இங்கே இன்னொன்றையும் குறிப்பிட்டாக வேண்டும். *தேரோட்டிக் கண்ணன்* என்பதும் *தேரோட்டி மகன்* என்பதும் மாறுபட்ட தொடரனியல்

அமைப்பினவாகும். *தேரோட்டிக் கண்ணன்* என்பது *தேரோட்டும் கண்ணன்* என்றும் *தேரோட்டி மகன்* என்பது *தேரோட்டியின் மகன்* என்றும் விளக்கற்பாலனவாகும். தேரோட்டியின் பெயரைக் *கண்ணன்* எனக்கொண்டு, *தேரோட்டி மகன்* என்ற தொடரைத் *தேரோட்டிக் கண்ணனின் மகன்* என்று விளக்கலாம். இத்தகைய அமைப்பில் நிகழும் *தேரோட்டிக் கண்ணன்* என்பதைத் *தேர் ஓட்டும் கண்ணன்* என்றே விளக்கலாம்.

## 17.0 கிளவியாக்கம் – ஒரு குறிப்பு

இனிக் கிளவியாக்க விதி செயல்படுமாற்றினைச் சுருக்கமாக ஆராயலாம். மேலே (69)-இல் உள்ளது ஒரு கிளவியாக்க விதியாகும். கிளவியாக்க விதிகளில் பொருள்கோட் கிளவியின் நிகழ்ச்சியானது இன்றியமையாததாகும். கிளவியாக்க விதி என்பது விகார விதி (Transformational Rule) அன்று. கிளவியாக்க விதியானது *வரல், வரும் வருதல்* முதலான வினைகளில் நிகழும் *-அல், -உம்* ஆகிய வடிவங்களைப் படைத்துக் கொடுக்க வல்லதாகும். கிளவியாக்க விதியில் பொருண்மைக் கூறு ஏதும் குறிக்கப்படாமல் இருந்தால், பொருள்கோட்கிளவியானது பகுதிப் பொருள் விகுதி அல்லது சாரியையாகத் திரிந்தமையும். கிளவியாக்க விதிகள் மூலம் கிடைக்கும் ஒட்டுமொத்த வடிவங்கள் சேர்க்கை விகாரம் (Adjunction Transformation) செயல்பட்ட பின் தேவைப்பட்டால் சந்திவிதிகளுக்கு உட்படுத்தப்படும். மேலே (69)-இல் குறிக்கப் பெற்றுள்ள கிளவியாக்க விதியின் மூலம் இரண்டு வகையான ஒட்டுமொத்த வடிவங்கள் பெறப்பட்டுள்ளன. அவை *வர்#அல், வர்#உம், காண்டு#அல்* என்பவையாகும். இவற்றில் காணப்படும் விட்டிசைகள் - அதாவது #, - சேர்க்கை விகாரத்தின் மூலம் தவிர்க்கப்பட்ட பின் *வரல், வரும், *காண்டல்* ஆகிய வடிவங்கள் கிடைக்கும். இந்த அமைப்பில் *காண்டு* (*<காண்து *<காணுது *<காணுந்து) என்பது இறவாக்கால வினைமுற்றாகவும் *அல்* என்பது [இருப்பு+நிகழ்வு] என்ற பொருண்மையமைப்பை உணர்த்தும் உள்வினையாகவும் கொள்ளப்படும். *காண்டு* என்பதில் துகரக்கிளவி இறவாக்காலப் பொருண்மையை மட்டுமே குறிக்கும். இனி எடுத்துக்காட்டு (48)-இல் குறிக்கப் பெற்றுள்ள தொடர்களில் நிகழும் வினையமைப்புகளை மாற்றிலக்கண முறையில் வருவிப்பது பற்றி மேலோட்டமாகச் சிந்திக்கலாம். (முழுமையான மாற்றிலக்கண ஆய்வு இக் கட்டுரையின் இறுதிப்பகுதியில் நிகழ்த்தப் பெற்றுள்ளது).

## *18.0 மறியல் வினைகள்*

*18.1* பயனிலைச் செயற்பாட்டில் நிகழவல்லனவாகிய சில தொன்மையான செயல் வாய்பாட்டுவினைகளைப் பற்றி இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். *மறியல், சமையல், குளியல், நிலையல், நினையல்* முதலான வினைகள் செயல் வாய்பாட்டினவாகும். இத்தகைய வினைகள் இக்காலத் தமிழில் பயனிலையாகச் செயல்படும் போக்கு காணப்படவில்லை. ஆயினும் இந்த வினைகள் பெயரெச்சச் செயற்பாட்டில் நிகழுமாற்றினை *மறியல் போராட்டம், சமையல் வேலை, குளியல்அறை* ஆகிய பெயர்த் தொடர்களிலும் *நிலையல் வேண்டும்* (தொல். எழுத்து. இளம். 15) என்ற வினைத்தொடரிலும் காணலாம். இத்தொடர்களில் நிகழும் *மறியல், சமையல், குளியல்,* ஆகியவை *மறிக்கும், சமைக்கும், குளிக்கும்* ஆகிய செய்யும் வாய்பாட்டு வினைகளோடு பொருந்துவனவாகும். இங்கே ஒரு செய்தியைக் குறிப்பிட்டாக வேண்டும். *மெய்யின் இயற்கை புள்ளியோடு நிலையல்* (தொல். எழுத்து. இளம். 15) என்ற நூற்பாவில் நிகழும் *நிலையல்* என்னும் செயல் வாய்பாட்டு வினைக்கு நிகரான செய்யும் வாய்பாட்டு வினை *நிலையும்* என்பதாகும். இதன் நிகழ்ச்சியை *ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்* (தொல். எழுத்து. இளம். 128) என்ற நூற்பாவில் காணலாம். இந்த அடிப்படையில் *மறியல், சமையல், குளியல்* ஆகியவற்றுடன் பொருந்தும் செய்யும் வாய்பாட்டு வினைகள் **மறியும், *சமையும், *குளியும்* என்றே அமையும். வல்வினை-மெல்வினைப் பாகுபாட்டின் தோற்றத்தினைத் தொடர்ந்து *மறி, சமை, குளி* ஆகிய வினைப்பகுதிகள் வல்வினைப் பிரிவில் நிகழத் தொடங்கின. இதன் விளைவாக **மறியும், *சமையும், *குளியும்* ஆகியவை தவிர்க்கப்பட்டு *மறிக்கும், சமைக்கும், குளிக்கும்* ஆகிய வல்வினைக்குரிய செய்யும் வாய்பாட்டு வினைகள் அவற்றின் இடத்தில் நிகழத் தொடங்கி விட்டன. ஆயினும் இன்றும் *மறியும், சமையும், குளியும்* ஆகியவை ஏவல் வினைப் பயனிலைகளாக நிகழ்வது கருதத்தக்கதாகும். எ-டு: *நீர் மறியும்/சமையும்/குளியும்.* உண்மையில் நிலைமை என்னவெனில் இக்காலத் தமிழில் வல்வினைப் பகுதிகளாக இனங்காணப்படுபவை செய்யும் வாய்பாட்டு ஏவல் வினைப் பயனிலையாக அமைகையில் மெல்வினைக்குரிய செய்யும் வாய்பாட்டினவாகவே நிகழ்கின்றன. எ-டு: *நீர் கேளும்/பாரும்.* வல்வினையில் அமைந்த **நீர் கேட்கும்/பார்க்கும்* முதலான ஏவல் வாக்கியங்கள் ஏற்புடையனவல்ல.

18.2 செயல் வாய்பாட்டினவாகிய *மறியல், சமையல், குளியல், நினையல், புதையல், அவியல், பொரியல்* முதலான பொது வினைமுற்றுக்கள் வல்வினை-மெல்வினைத் தோற்றத்துக்கு முந்தைய நிலையில் வழங்கிய தொல்வினைகளாகலின் இவற்றைப் பிற செயல் வாய்பாட்டு வினைமுற்றுக்களினின்றும் வேறுபடுத்தும் வகையில் *மறியல்* வினைகள் என வகைப்படுத்தலாம். *மறியல்* வினைகளின் வினைப்பகுதிகள் பெரும்பாலானவை வல்வினை-மெல்வினைத் தோற்றத்துக்குப் பிறகு *மறியும்* வாய்பாட்டு வினைகளாக அமையாமல் *மறிக்கும்* வாய்பாட்டினவாகத் தமிழில் நிகழ்வனவாயின. இதனால்தான் *மறியல் போராட்டம்* என்ற அமைப்பில் உள்ள *மறியல்* என்ற பெயரெச்ச வினை முற்றானது *மறிக்கும், மறித்தல் ஆகிய, மறிப்பதாகிய, மறிக்கின்ற, மறிக்கின்றதாகிய* என்ற வினையமைப்புகளோடு பொருந்து வதாகின்றது. இவற்றில் நிகழும் *மறிக்கும்* அகரக் கிளவியின் முன் நிகழும் *மறிக்கின்று* ஆகியவை *மறியல்* என்பதைப் போல் பொது வினைமுற்றுக்களாகவும் *ஆகிய* என்பதன் முன் நிகழும் *மறித்தல், மறிப்பது, மறிக்கின்றது,* ஆகியன ஒன்றன்பால் சிறப்பு வினை முற்றுக்களாகவும் கொள்ளத்தக்கனவாகின்றன. இந்தப் பின்னணியில் *மறியல் போராட்டம்* என்ற தொடரோடு பொருந்தும் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

70 (1) மறியல் போராட்டம்
(2) மறிக்கும் போராட்டம்
(3) மறித்தல் ஆகிய போராட்டம்
(4) மறிப்பதாகிய போராட்டம்
(5) மறிக்கின்ற போராட்டம்
(6) மறிக்கின்றதாகிய போராட்டம்

இந்தத் தொடர்களில் நிகழும் பல்வேறு வினையமைப்புக்களை வருவிப்பதற்கான கிளவியாக்க விதிகள் கீழே வகுக்கப்பட்டுள்ளன.

(71) ஆகு+[இருப்பு+[-இறப்பு]] > { அல் / உம் } / மறி –

72 (1) ஆகு+[-இறப்பு] > [ த் { ப் / இன்ற் } ] / மறி – [ அல் / அது / { அது / அ } ]

(2) ஆகு+[ஒன்றன்பால்] > [ அல் / அது ] / [ த் { ப் / இன்ற் } ] –

73 (1) ஆகு+[இருப்பு+[-இறப்பு]] > அ/ இன்ற் –

(2) ஆகு+[இருப்பு] > ஆகு {மறித்தல் / மறிப்பது / மறிக்கின்றது} –

(3) ஆகு+[-இறப்பு] > இய/ஆகு –

மேலே (71), (72), (73) ஆகியவற்றில் செயல்படும் கிளவியாக்க விதிகள் மூலம் வருவிக்கப்பட்டுள்ள ஒட்டுமொத்த வடிவங்கள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

74 (1) மறி#அல் (கிளவியாக்க விதி - 71)

(2) மறி#உம் (கி.வி. - 71)

(3) மறி#த்#அல் (கி.வி. - 71.1, 2)

(4) மறி#இன்ற்#அ (கி.வி. - 72. 1; 73.1)

(5) மறி#ப்#அது (கி.வி. - 72.1, 2)

(6) மறி#இன்ற்#அது (கி.வி. - 72.1, 2)

(7) ஆகு#இய (கி.வி. - 73.2, 3)

(8) மறி#த்/ப்/இன்ற்#அது#ஆகு#இய

சேர்க்கை விகாரம் செயல்பட்டு விட்டிசைகள் (#) தவிர்க்கப் பட்ட நிலையில் (74)-இல் குறிக்கப்பெற்றுள்ள ஒட்டு மொத்த வடிவங்கள் மீது பின்வரும் சந்தி விதிகள் செயல்படும்.

75 (1) மறி > மறிய்/-அல் (மறிய்-அல் = மறியல்)

(2) மறி > மறிம்/-[த் / ப்] (மறிம்-த்(-அல்), மறிம்-ப்(-அது))

(3) ம் > [ப் / ந்] / – [ப் / த்] (மறிப்-ப் (-அது), மறிந்-த் (-அல்)),

(4) ந் > த்/- த் (மறித்-த் (-அல்)

(5) மறி >மறிக்கு/-{உம் / இன்ற்} (மறிக்கு-உம், மறிக்கு-இன்) மறிக்கு-இன்ற் (-அது/அ)

(6) -உ > 0/- உயிரொலியன் (-உ = குற்றியலுகரம்)

## 19.0 நகுதற் பொருட்டன்று நட்டல்

மேலே நிகழ்த்தப்பெற்ற ஆய்வில் நிகழும் சில வினை அமைப்புக்களைப் பற்றி இங்குச் சற்று விரிவாகப் பேசியாக வேண்டும். முதலில் செய்தல் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களைக் கருத்தில் கொள்ளலாம். *நகுதற் பொருட்டன்று நட்டல்* (குறள். 784) என்ற இறவாக்காலப் பொது முற்று வாக்கியத்தில் **(Non-Past Impersonal Finite Clause))** நிகழும் *நகுதல்,*

*நட்டல்* ஆகியவை செய்தல் வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக் களாகும். இவற்றுள் *நட்டல்* என்பது எழுவாய் வினைமுற்றாகவும், *நகுதல்* என்பது பெயரெச்ச வினைமுற்றாகவும் செயல்படுகின்றன. *தீயவை செய்தார் கெடுதல்* (குறள். 208), *(மூகர வுகரம் நீடிடன் உடைத்தே) - உகரம் வருதல் ஆவயின் ஆன* (தொல்.எழுத்து. இளம். 262) ஆகிய பொதுமுற்று வாக்கியங்களில் *கெடுதல், வருதல்* என்னும் செய்தல் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் பயனிலையாகச் செயல்படுகின்றன. இவற்றுள் *கெடுதல்* என்பது வாக்கியப் பெயர்த்தொடரில் (Sentential Noun Phrase) நிகழும் எழுவாயாகும். *வருதல்* என்ற வினை முற்று நிகழும் வாக்கியம் பெயர்த்தொடராகக் கொள்ளத் தக்கதன்று. *செயற்பாலது* (குறள். 40), *தினற்பொருட்டு* (குறள். 256) ஆகிய தொடர்களில் நிகழும் *செயல், தினல்* ஆகிய செயல்வாய்பாட்டு வினைகள் செய்யும் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களுக்கு நிகரனவாகிப் பெயரெச்ச வினைமுற்றுக்களாகச் செயல்படு கின்றன. *தந்தை மகற் காற்று நன்றி அவையத்து, முந்தி யிருப்பச் செயல்* (குறள்.67) என்ற வாக்கிய அமைப்பில் *செயல்* வினைமுற்று எழுவாயாகச் செயல்படுகின்றது. இவற்றையெல்லாம் கருதுகையில் ஓர் உண்மை புலனாகின்றது. செயல், செய்தல் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் பெயரெச்ச வினைமுற்றுக்களாக மட்டுமின்றி எழுவாயாகவும், பயனிலையாகவும், பெயர் நிலைக் கிளவியைப் போல் வேற்றுமை உருபேற்கும் வினைமுற்றுக்களாகவும் செயல்படவல்லவை என்பது தெளிவாகின்றது. வினையெச்ச வினைமுற்றுக்களாக நிகழ்கையில் வாக்கியப் பெயர்த்தொடர் (Sentential NP) வினையெச்சமாக அமைகிறது. எடுத்துக்காட்டாக, *அமைச்சர் வருதலை அறிந்தேன்* என்ற அமைப்பில் *வருதல்* என்பது *அமைச்சர்* என்ற எழுவாய்க்குரிய பயனிலை வினை முற்றாக இருந்தாலும் *அமைச்சர் வருதலை* என்ற வேற்றுமை உருபேற்ற வாக்கியப் பெயர்த் தொடர் *அறிந்தேன்* என்ற பயனிலையைத் தழுவும் தொடராகச் செயல்படுகின்றது. அத்துடன் சற்றுமுன் குறிப்பிட்டதைப் போல் செயல், செய்தல் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் பயனிலையாக நிகழ்கையில் அவை நிகழும் வாக்கியங்களானவை வாக்கியப் பெயர்த்தொடர் களாகவும் அமைய வாய்ப்புள்ளது. எ-டு: *[[அமைச்சர் வருதல்] உறுதி/ உண்மை]* இந்த எடுத்துக்காட்டில் *அமைச்சர் வருதல்* என்ற இறவாக்காலப் பொது வினைமுற்று வாக்கியம் எழுவாயாகவும், *உண்மை/உறுதி* என்பது அதன் பயனிலையாகவும் நிகழ்வதைக் காணலாம். வாக்கியப் பெயர்த் தொடர்களை மொழியியலார் **Sentential Complements** என்று குறிப்பிடுவர்.

## 20.0 செய்தல் வினையமைப்பு

20.1 செய்தல் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களை மூன்று வகையாக ஆராயலாம். ஒன்று, அவற்றில் நிகழும் *அல்* விகுதியைப் பகுதிப்பொருள் விகுதியாகக் கொள்ளுதல். இந்த ஆய்வில் *அல்* என்பதை அதன் முன் நிகழும் இறவாக் கால விகுதியாகிய தகரக் கிளவியின் ஒருங்கிணைந்த உறுப்பாகக் கொள்வதன் மூலம் செய்தல் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் செய்+தல் என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கருதப்படும். இது மரபிலக்கண ஆய்வின்பாற்படும். *அல்* விகுதியைச் சாரியையாகக் கொண்டால் அது, *ஆகு>அல்/த்*- என்ற கிளவியாக்க விதியின்மூலம் வருவிக்கப் படும். இந்த இரண்டு ஆய்வும் நமக்கு உடன்பாடில்லை. மூன்றாவதுஆய்வு முறையானது செய்தல் வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களைச் செய்து+அல் என்ற வாய்பாட்டு அமைப் பினவாகக் கொண்டு இவற்றில் நிகழும் செய்து (< *செயுது (=செய்யுது) < *செயுந்து (=செய்யுந்து)) வாய்பாட்டு இறவாக்கால வினைகளைப் பொதுவினைமுற்றுக்களாகவும், *அல்* என்பதை செய்வது வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-அது* என்னும் விகுதியின் மாற்றுருபாகவும் துணியப்படும். *செயுந்த்உ வினை களும் அவற்றின் திரிபுகளும் செய்தல் வாய்பாட்டு வினைகளும் மெல்வினைப்பகுதி, வல்வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றி நிகழும் முற்றுவினைகளாகும். *வருதல், பாடுதல், ஈன்றல், தின்றல், உண்டல், காண்டல்* முதலானவை மெல்வினைப் பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். இவற்றில் நிகழும் செய்து வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் *செயுந்து (=செய்யுந்து/ தொல்.சொல்.சேனா. 292) வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியமைந்தவையாகும். *அளித்தல், கொடுத்தல், கற்றல், விற்றல், கேட்டல், நட்டல்* (= நட்பது) முதலானவை வல்வினைப் பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். இவற்றில் நிகழும் செய்து வாய்பாட்டு இறவாக்கால வினைமுற்றுக்கள் *செயுந்த்உ வாய்பாட்டு வினைகளின் திரிபாகிய *செயுத்து வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியமைந்தவையாகும். *அளித்தல், கற்றல், கேட்டல், நட்டல்* ஆகியவற்றில் நிகழும் *அளித்து, கற்று, கேட்டு, நட்டு* ஆகிய இறவாக்காலப்பொது வினைமுற்றுக்களின் அமைப்பு கீழே (76)-இல் ஆராயப்பட்டுள்ளது.

76(1) *அளியுந்த்உ > *அளியுத்து > *அளிய்த்து > அளித்து-

(2) *கலுந்த்உ > *கலுத்து > *கல்த்து > *கல்ற்று > *கற்ற்று > கற்று -

(3) *கேளுந்த்உ > *கேளுத்து > *கேள்த்து > *கேள்ட்டு > *கேட்ட்டு > கேட்டு-

(4) *நளுந்த்உ > *நளுத்து > *நள்த்து > *நள்ட்டு > *நட்ட்டு > நட்டு -

இந்த ஆய்வின் விளைவாகிய *அளித்து-, கற்று-, கேட்டு-, நட்டு-* ஆகியவை இறந்தகாலப் பொதுவினைமுற்றுக்களினின்றும் முற்றிலும் வேறுபட்டவையாகும். அது மட்டுமன்று; *கேளுத்தானெ* (=கேட்கிறான்), *கேளுத்தாளெ* (=கேட்கிறாள்), *கேளுத்தாரெ* (=கேட்கின்றனர்), *கேளுத்ததெ* (=கேட்கிறது) முதலான கன்னட நிகழ்கால வினைமுற்றுக்கள் செய்யுத்து (*<செயுந்த்உ) வாய்பாட்டு இறவாக்காலப் பகுதிகளின் அடியாகத் தோன்றியமைந்தவை என்பதும் இங்கே கருத்தில் கொள்ளத்தக்கது. கன்னடக் கிளை மொழிகளில் *கேளுத்து/கேள்த்உ* (<கேள்த்து) என்ற வடிவம் ஒன்றன்பால் நிகழ்கால வினைமுற்றாகவோ, ஒன்றன்பால்- பெண் பால் இரண்டையும் குறிக்கும் நிகழ்கால வினைமுற்றாகவோ நிகழும் நிலையும் காணப்படுகிறது. தெலுங்கில் நிகழும் *பாடுத்ஆனு* (Pa:Dut-a:nu = *பாடுகிறேன்) / பாடுத்உனு* (Pa:Dut-unu= *பாடுவேன்)* முதலான வினைமுற்றுக்களும் **செயுந்த்உ* வாய்பாட்டு வினைகளின் திரிபாகிய *செயுத்உ* வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றியமைந்தனவாகும்.

*20.2* செய்தல் வாய்பாட்டு வினைகளின் மீது மேலே நிகழ்த்திய பன்முக ஆய்வானது செய்வது வாய்பாட்டுப் பொது வினைகளுக்கும், அதாவது *வருவது, பாடுவது, உண்பது, தின்பது, அளிப்பது, கற்பது, கேட்பது* முதலானவற்றுக்கும் பொருந்தும். இந்த ஆய்வில் செய்வது வாய்பாட்டு வினைகள் பற்றி விரிவாகப் பேச வாய்ப்பில்லை; ஆயினும் ஒன்றை இங்கே குறிப்பிட்டாக வேண்டும். கன்னடத்தில் செய்வது வாய்பாட்டு வினைமுற்றுக்கள் ஒன்றன்பால் பயனிலை வினைமுற்றுக்களாகச் செயல்படுவதைப் போல் (R. Narasimhacharya 1969:130) தமிழில் இந்த வினைகள் செயல்படுவதில்லை. செய்வது வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் வினைகளாக நிகழவேண்டிய இடத்தில் செய்யும் வாய்பாட்டு வினைகளே தமிழில் பொதுவினைமுற்றுக்களாக நிகழ்ந்து ஒன்றன்பால், பலவின்பால் இரண்டுக்கும் உரியனவாகின்றன. பழந்தமிழில் உயர்திணை ஆண்பால், பெண்பாலுக்கும் செய்யும் வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள் உரியவை ஆகின்றன. எ-டு: *அவன்/அவள்/அது/அவை வரும்* (பழந்தமிழ்); *அது/ அவை வரும்* (இக்காலத்தமிழ்). இன்னொரு செய்தியையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். செய்வது வாய்பாட்டு வினைகள் தனிவாக்கியங்களில் பயனிலையாகத் தமிழில் நிகழ்வது இல்லை. எடுத்துக்காட்டாக, *மழை வரும்* என்பதற்கு மாற்றாக *மழை வருவது* என்ற தனி வாக்கிய நிகழ்ச்சிக்குத் தமிழில் வாய்ப்பு இல்லை. ஆனால் *மழை வருவது உறுதி* என்பது ஏற்புடைய

வாக்கியமாகும். இந்த வாக்கிய அமைப்பில் *மழை வருவது* என்பது வாக்கியப் பெயர்த்தொடராக அமைந்து *உறுதி* என்ற பயனிலைக்கு எழுவாயாகச் செயல்படுகிறது. இந்த வாக்கியப் பெயர்த்தொடரில் நிகழும் *வருவது* என்பது *மழை* என்பதன் பயனிலையாகச் செயல்பட்டாலும் அதனை ஒன்றன் பால் சிறப்பு வினையாகக் கருத முடியாது. அப்படிக் கருதினால் *அமைச்சர் வருவது உறுதி* என்ற வாக்கிய அமைப்பு இலக்கணப் பிழையுள்ளதாகக் கருதப்பட்டு விடும். ஆனால் இந்த வாக்கிய அமைப்பு ஏற்புடைய ஒன்றாகும். இதில் எழுவாயாக நிகழும் *அமைச்சர் வருவது என்பதில்* உள்ள பயனிலையைப் போன்றே *மழை வருவது உறுதி* என்ற அமைப்பில் நிகழும் *வருவது* என்பதும் பொதுவினை முற்றாகவே கொள்ளப் படும். ஆயினும் *தண்ணென வருவதாகிய வாடை* என்ற பெயர்த்தொடரில் நிகழும் *வருவது* என்பது ஒன்றன்பால் சிறப்பு வினையாகக் கொள்ளத்தக்கதாகும். இதற்கு இரண்டு காரணங்களைக் குறிப்பிடலாம். ஒன்று, *தண்ணென வருவதாகிய வாடை* என்ற அமைப்பில் வாக்கியப் பெயர்த்தொடரின் நிகழ்ச்சிக்கு இடமில்லை. இரண்டு, இந்தத் தொடரில் *வாடை* என்ற ஒன்றன்பால் பெயரின் பயனிலையாக அமைந்து *வருவது* என்பது சிறப்பு வினைமுற்றாகும் தகுதியைப் பெறுகின்றது. இந்த வாக்கிய அமைப்பு *உண்மை பேசுபவனாகிய அரிச்சந்திரன்* என்ற தொடரமைப்பைப் போன்றதாகும். *அரிச்சந்திரன்* என்பதன் பயனிலையாகிய *பேசுபவன்* என்பதைப் போன்றே, *தண்ணென வருவதாகிய வாடை* என்ற தொடரமைப்பில் நிகழும் *வாடை* என்பதன் பயனிலையாகிய *வருவது* என்பதும் சிறப்புவினை முற்றாகக் கொள்ளப்படும்.

## *21.0 செய்கின்று வினைகள்*

*21.1* இனி, செய்கின்று மற்றும் செய்கின்றது ஆகிய வாய்பாட்டு வினைமுற்றுக்களைப் பற்றிச் சுருக்கமாகச் சிந்திக்கலாம். இவற்றுள் செய்கின்று வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தனி முற்று வாக்கியங்களில் இக்காலத் தமிழில் நிகழ்வதில்லை. எடுத்துக் காட்டாக, *ஆடு மழையில் நனைகின்று* என்ற தனிமுற்று வாக்கிய அமைப்பின் நிகழ்ச்சி தமிழில் காணப்படவில்லை. இடைக்காலத் தமிழில் செய்கின்று வாய்பாட்டு வினைமுற்றுக்கள் பயனிலையாக நிகழும் போக்கு பரவலாகக் காணப்படுகின்றது (மு. இராக வையங்கார் 1964:305-307). செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்ச வினைமுற்றுக்களின் அடிநிலை வினைப் பயனிலையாகச் செய்கின்று வாய்பாட்டு வினைமுற்றுக்கள் நிகழ்வதை நக்கீரரின் இறையனார்

களவியல் உரையில் காணலாம் (மு. இராகவையங்கார் 1964:305). எடுத்துக்காட்டாக, *குழவி அழுகின்று எனக்குப் பால் தம்மின், நீராட்டுமின் என்றழாது......* என்ற அமைப்பில் நிகழும் *குழவி அழுகின்று* என்பது *அழுகின்ற குழவி* என்ற பெயர்த்தொடரின் அடிநிலை அமைப்பாகும். இதே அமைப்பில் *அழுகின்று* என்பது *குழவி* என்பதன் பயனிலையாகச் செயல்படுகின்றது.

21.2 செய்கின்று, செய்கின்றது ஆகிய வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் சிறப்புவினைகளாகக் கருதப்படுமாயின், இவற்றின் அமைப்புகள் செய்கின் (<செய்கு-இன்) +து, செய்கின்று (< செய்கு-இன்ற்)+அது எனக் கொள்ளப்படும். இந்த அமைப்புக்களில் நிகழும் துகரக்கிளவியும், அதுவென்கிளவியும் ஒன்றன்பால் விகுதி களாகும். இந்த விகுதிகள் வெற்றுறுப்புகளாகிய சாரியை களாக நிகழ்வதும் உண்டு. *அங்கே மழையில் நனைகின்ற பெண்* என்ற தொடரில் உள்ள *நனைகின்ற* என்பதில் நிகழும் *நனைகின்று* என்பது ஒரு பொதுவினைமுற்றாகும். இந்த வினைமுற்றில் நிகழும் துகரக்கிளவி சாரியையாகக் கருதத்தக்க தாகும். *அங்கே மழையில் நனைகின்றது யார்* என்ற கவை வாக்கிய அமைப்பில் காணப்படும் *நனைகின்றது* என்பதும் ஒரு பொதுவினை முற்றாகும். இந்த வினைமுற்றில் நிகழும் அதுவென் கிளவியும் சாரியையாகக் கொள்ளத்தக்கதாகும். செய்கின்று, செய்கின்றது ஆகிய வாய்பாட்டு வினைமுற்றுக்கள் சிறப்புவினை முற்றுக்களா யினும் பொது வினைமுற்றுக்களாயினும் இவற்றின் காலப் பகுதிகளாகிய **(Tense Bases)** செய்கின், செய்கின்று ஆகிய வாய்பாட்டு வினைகள் தொடக்கத்தில் பொதுவினைமுற்றுக்களாக நிகழ்ந்தவை என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். செய்கின் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றிய *செய்கின்று* வாய்பாட்டு வினைகள் முதலில் ஒன்றன்பால் சிறப்பு வினைமுற்றுக்களாகச் செயல்பட்டு வாக்கியச் சூழலுக்கு ஏற்ப, பின்னர்ப் பொதுவினைமுற்றுக்களாகவும் செயல்படத் தொடங் கினவாகக் கொள்ளுதல் ஒரு நிலை. ஆயினும் செயல், செய்யும், செய்கின், செய்கின்ற ஆகிய வாய்பாட்டு வினைகள் அடிப்படை யிலேயே பொதுவினைமுற்றுக்களாகும். செய்யும், செய்கின் ஆகிய வாய்பாட்டு வினைகள் மீதமைந்த செய்யுந்து, செய்கின்று வாய்பாட்டு வினைமுற்றுக்கள் முதலில் பொது வினைமுற்றுக் களாக நிகழ்ந்து பின்னர் ஒன்றன்பாற் சிறப்பு வினைகளாகச் செயல்படத் தொடங்கின என்று கொள்ளுதல் இன்னொரு நிலை. செய்யுந்து, செய்கின்று வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-உந்து, -இன்று* ஆகியவற்றில் உள்ள துகரக்கிளவி முதலில் இலக்கணப் பொருண்மையற்றதாக நிகழ்ந்து, பின்னர் ஒன்றன்பால் விகுதியாக

இனங்காணப்பட்டது என்ற முடிவுக்கு இரண்டாவது நிலை துணைபோகிறது. மேலே குறிப்பிட்ட இரண்டு நிலைப்பாடு களில் பிந்தியது ஏற்புடையதாகத் தோன்றுகிறது. துகரக்கிளவியை வெற்றுறுப்பாகவோ சாரியையாகவோ கொள்ளுதல் நெருடலாக உள்ளது. எனவே இதன் உண்மையான இலக்கணத் தன்மை ஆய்வுக்குரியது.*

21.3 மெல்வினைகளைப் பொறுத்தவரையில் செய்கின்று வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் பழைய மலயாளத்தில் செய்யின்று வாய்பாட்டினவாக நிகழ்கின்றன (L.V. Ramaswamy Ayyar 1936:62). எ-டு: *செய்யின்ற* (<செய்யின்று+அ), *அருளின்று, கொள்ளின்றவர்* (<கொள்ளின்று-). இவற்றில் காணப்படும் வினைப்பகுதிகளாகிய செய், அருள், கொள் ஆகியவை மெல் வினைப் பிரிவைச் சேர்ந்த முதன்மை (Primary) வினைப்பகுதிகளாகும். வல்வினைப் பகுதிகளாயின் அளிக்கின்று-, கொடுக்கின்று- என்ற காலப்பகுதிகளின் நிகழ்ச்சி போற்றப்படும். எனவே செய்யின்று, அருளின்று ஆகியவற்றைச் **செய்கின்ற, *அருள்கின்று* ஆகியவற்றின் திரிபாகக் கொள்ளுதல் பொருந்தும். இதனைக் கருத்தில் கொண்டு மலயாளத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் செய்யின்று வாய்பாட்டு நிகழ்கால வினைகளைச் செய்கின்று வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கொள்ள முடியும். காணிக் கார மொழியில் செய்கின் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் மெல்வினையாயின் செயினி (< *செயினு) வாய்பாட்டினவாகவும் வல்வினையாயின் செய்க்இனி (< *செய்க்இனு) வாய்பாட்டின வாகவும் அமைகின்றன (S. Agesthialingom 1976:67-94). எ-டு: *குனிய்னி* (< *குனியினு) (=குனிகின்), *கொடுக்னி* (< *கொடுக்கினு) (= கொடுக்கின்). இந்த மொழியிலும் செயினி வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களைச் செய்கின் வாய்பாட்டு வினை முற்றுக்களின் திரிபாகவே கருதலாம்.

## 22.0 தண்வரல் வாடை - மாற்றிலக்கண ஆய்வு முறை

22.1 *தண்வரல் வாடை* (குறுந். 76.5) என்ற பெயர்த் தொடரில் நிகழும் *வரல்* என்னும் பெயரெச்ச வினைமுற்றோடு *வரும்,*

---

* செய்கின்று வாய்பாட்டு வினைகளில் நிகழும் - இன்று என்பதைப் பாடின்று வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினை முற்றுக்களில் காணப்படும் -இன்று என்பதன் விரிவாக்கம் எனக் கருதலாம். செய்கின்று வினைகளின் பகுதியாகிய செய்கு வாய்பாட்டு வினைகள் தொடக்கத்தில் இறவாக்காலப் பொதுவினை முற்றுக்களாக நிகழ்ந்தவையாகும். எனவே இத்தகைய வினைப்பகுதிகளையடுத்து விரிவாக்கம் செய்யப்பட்ட -இன்று என்பது இறப்புப் பொருண்மையை உணர்த்தாமல் நிகழ்வுப் பொருண்மையை உணர்த்த வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டதாகக் கருதலாம்.

*வருகின்ற, வருதலாகிய, வருவதாகிய, வருகின்றதாகிய* என்ற வினையமைப்புகள் பொருண்மை நிலையில் ஒன்றுபட்டும், தொடரனியல் அமைப்பு நிலையில் தொடர்புடையனவாகவும் அமைந்தவையாகும். இந்த வினையமைப்புகள் அனைத்தும் பொருண்மை நிலையிலும் தொடரன் நிலையிலும் தொடர்புடையன வாகலின் இந்தத் தொடர்பை இலக்கணமானது ஒருங்கிணைந்த ஆய்வின் (Integrated Analysis) மூலம் புலப்படுத்தியாக வேண்டும். ஏனெனில் இத்தகைய தொடர்பானது தாய்மொழியாளனின் உள்ளார்ந்த மொழிஅறிதிறனை (Internalized Linguistic Competence) உணர்த்துவதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *தண்வரல் வாடை* என்ற பெயர்த் தொடரையும் பொருண்மை மற்றும் தொடரனியல் அமைப்பு நிலைகளில் அதனோடு தொடர்புடைய பிற பெயர்த்தொடர்களையும் ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படுத்தியாக வேண்டும். இதற்கு வாய்ப்பாக, *தண்வரல் வாடை* என்ற பெயர்த்தொடருடன் பொருந்திய பிற தொடர்கள் மீண்டும் கீழே நினைவுகூரப்படுகின்றன.

77 (1) தண்வரல் வாடை
(2) தண்ணென வரும் வாடை
(3) தண்ணென வருகின்ற வாடை
(4) தண்ணென வருதலாகிய வாடை
(5) தண்ணென வருவதாகிய வாடை
(6) தண்ணென வருகின்றதாகிய வாடை

இந்தத் தொடர்களின் புதைநிலை அமைப்பும் சமபெயர் நீக்க விகாரத்தின் (Equi-NP Deletion Transformation) மூலம் பெறப்பட்ட அமைப்பும் கீழே முறையே (78) (79)-இல் குறிக்கப்பெற்றுள்ளன.

(78) [[வாடை தண்ணென வர்#ஆகு+[இருப்பு+[-இறப்பு]] ] வாடை]
 1 2 3 3 2 1

(79) தண்ணென வர்#ஆகு+[இருப்பு+[-இறப்பு]] வாடை

புதைநிலை அமைப்பில் 1 என்ற எண்களின் எல்லைக்குள் இருப்பது பெயர்த்தொடரையும் 2 என்ற எண்களின் எல்லைக்குள் இருப்பது வாக்கியத்தையும், அதாவது **வாடை தண்ணென வரல்* என்பதையும் உணர்த்துவனவாகும். சமபெயர் நீக்கல் விகாரத்தின் மூலம் பெறப்பட்ட (79) -இல் உள்ள அமைப்பின்மீது பின்வரும் விகாரங்கள் ஒன்றன்பின் ஒன்றாகச் செயல்படும்.

80 (1) பொருள் கோட் கிளவி பிரதியாக்க விகாரம் (Semantic Absorber Copying Transformation)
(2) காலப் பிரதியாக்க விகாரம் (Tense Copying Transformation)

*(3) காலப் பெயர்ச்சி விகாரம்* **(Tense Movement Transformation)**
*(4) இயைபு விகாரம்* **(Agreement Transformation)**
*(5) இருப்புப் பெயர்ச்சி விகாரம்* **(Copula Movement Transformation)**

இந்த விகாரங்களுள் பொருள்கோட்கிளவி பிரதியாக்க விகாரம் என்பது *ஆகு* என்னும் பொருள்கோட்கிளவியையும், காலப் பிரதியாக்க விகாரம் என்பது *நிகழ்வு* என்ற இலக்கணப் பொருண்மையையும், வருவிக்க வேண்டிய வரிவடிவங்களின் எண்ணிக்கைக்கு ஏற்பப் பிரதிகள் எடுக்கின்றன. காலப் பெயர்ச்சி விகாரமும் இருப்புப் பெயர்ச்சி விகாரமும் [-இறப்பு], [இருப்பு] ஆகிய பொருண்மைக் கூறுகளைப் பொருத்தமான பொருள் கோட்கிளவிகளின் பின் கொண்டு சேர்க்கின்றன. இயைபு விகாரம் என்பது *வரல்* என்பதன் எழுவாயாக நிகழும் தலைமைப்பெயரின் திணை-பால்-எண்-இடப் பொருண்மைகளைப் பிரதி செய்து பொருத்தமான வினையோடு கொண்டு சேர்க்கிறது. இந்த விகாரங்கள் அனைத்தும் செயல்பட்ட பிறகு கிடைக்கும் அமைப் பானது (இடப்பற்றாக் குறையின் காரணமாகப்) பல மடக்கு களாகக் கீழே (81)இல் குறிக்கப்பெற்றுள்ளது.

(81)தண்ணென வர்#ஆகு+[இருப்பு]+[-இறப்பு]#
ஆகு$_4$+[-இறப்பு]#
ஆகு$_3$+[+ஒன்றன்பால்]#
ஆகு$_2$+[இருப்பு]#
ஆகு$_1$+[-இறப்பு] வாடை

மேலே குறிக்கப்பெற்றுள்ள அமைப்பானது பின்வரும் கிளவியாக்க விதிகளுக்கு உட்படுத்தப்படும்.

82 (1) ஆகு+(இருப்பு+நிகழ்வு) > [ {அல் / உம்} / அ ] / [ வர் / **இன்ற் ] —

குறிப்பு: **இந்தக் குறியீட்டைச் சார்ந்த வடிவம் கிளவியாக்க விதியின் மூலம் பின்னர் வருவிக்க வேண்டிய ஒன்றாகும்.

(2) ஆகு$_4$+[-இறப்பு] > [ த் / {வ் / இன்ற்} ] / வர் — [ **அல் / **அது ]

(3) ஆகு$_3$+[+ஒன்றன்பால்] > [ அல் / அது ] / [ {த் / வ் / இன்ற்} ] —

(4) ஆகு$_2$+[இருப்பு] > ஆகு ...... {அல் / அது / இன்ற்} –

(5) ஆகு$_1$+[-இறப்பு] > இய/ஆகு –

இந்தக் கிளவியாக்க விதிகள் செயல்பட்ட பிறகு பின்வரும் அமைப்புகள் கிடைக்கும்.

83 (1) தண்ணென வர்# {அல்,உம்} வாடை

(2) தண்ணென வர்#இன்ற்#அ வாடை

(3) தண்ணென வர்#த்#அல்#ஆகு#இய வாடை

(4) தண்ணென வர்# {வ், இன்ற்} #அது#ஆகு#இய வாடை

இந்த அமைப்புகள் மீது சேர்க்கை விகாரம் (Adjunction Transformation) செயல்பட்டு விட்டிசையாகிய # என்ற குறியீட்டைத் தவிர்க்கும். அதாவது இந்த விகாரம் விட்டிசையை நீக்கி விகுதிகளை/சொற்களை ஒன்றன்பின் ஒன்றாகச் செறிந்து நிற்கச் செய்யும். இதனைத் தொடர்ந்து பின்வரும் சந்தி விதிகள் செயல்படும்.

84 (1) என > ø /– வரல்

(2) வர் > வரு/{த் / வ்} –

(3) வர் > வருகு/–இன்ற்+{அ, அது}

(4) -உ > ø /– உயிர்

இவற்றுள் முதல் துணை விதியைத் தவிர்த்து நீக்கல் விகாரத்தின் மூலமும் எனவென் கிளவியைத் தவிர்க்கலாம். எது ஏற்புடையதென்பது கோட்பாட்டு ஆய்வுக்கு உரியதாகும். சந்தி விதிகள் செயல்பட்ட பிறகு (77)-இல் குறிக்கப் பெற்றுள்ள தொடரமைப்புக்கள் கிடைக்கும்.

## 23.0 மாறுபட்ட விதிகள்

மேலே நிகழ்த்தப்பெற்ற ஒருங்கிணைந்த ஆய்வானது மாற்றிலக்கணக் கோட்பாட்டின் பின்னணியில் அமைந்ததாகும். இந்த ஆய்வில் கிளவியாக்க விதிகள் சந்தி விதிகளினின்றும் மாறுபட்டவையாகும். ஒரு பொருண்மைக் கூறினை நேரடியாக வரிவடிவமாக மாற்றும் ஆய்வினைச் சந்தி விதியின்கீழ்க் கொண்டு வர முடியாது. சந்தி விதிகள் ஒருவகையான விகார விதிகளே யாகும். இந்த விதிகள் ஒரு வரிவடிவம் ஒரு குறிப்பிட்ட

சூழலில் எப்படி மாறி அமைகிறது என்பதை விளக்குவனவாகும். பொருண்மைக் கூறு என்பது வரிவடிவமன்று. எனவே எடுத்துக் காட்டாக, *[+இறப்பு]> த்/கொய்-* என்ற விதியைச் சந்திவிதியாகக் கொள்வதைத் தவிர்த்து இந்த ஆய்வில் இத்தகைய விதி கிளவியாக்க விதியாகக் கொள்ளப்படுகிறது. ஒரு பொருண்மைக் கூறினைச் சந்தி விதியின் மூலம் வரிவடிவமாக மாற்றி அமைப்பது, இந்த ஆய்வில் தவிர்க்கப்பட்டுள்ளது. இந்தப் பணியைக் கிளவியாக்க விதிகள் செய்து முடிக்கின்றன. எனவே கிளவியாக்க விதிகள் சந்தி விதிகளும் அல்ல; விகார விதிகளும் அல்ல. இந்த விதிகளைத் தொடர்ந்து சேர்க்கை விகாரம் செயல்படுவது தவிர்க்க முடியாததாகும். இந்த விகாரம் செயல்படாமல் சந்தி விதிகள் செயல்பட வாய்ப்பு இல்லை.



# 6. பொது வினைமுற்றுக்கள்

## 1.0 தொல் வினைமுற்று

திராவிட மொழிக் குடும்பத்தில் மலயாளம் தவிர பிற மொழிகள் எழுவாய்-பயனிலை இயைபைக் கொண்டனவாகக் கருதப்படுகின்றன. மலயாளத்திலும் தொடக்கத்தில் எழுவாய்-பயனிலை இயைபு (Subject-Predicate Agreement) போற்றப்பட்டு, பின்னர் அது வீழ்ந்துபட்டது என்று திராவிட மொழியியலார் கருதுகின்றனர். இந்தக் கருத்து நமக்கு உடன்பாடில்லை. தொல் திராவிட நிலைக்கு இயைபு விகுதிகளை மீட்டுருவாக்கம் செய்வதும் மலயாளத்தில் உள்ளது போன்ற பொது வினை முற்றுக்களைத் தொன்மை நிலையில் இனங்காண்பதும் வெவ் வேறானவையாகும். எடுத்துக்காட்டாக, *அறிந்தான்* என்பதில் *-ஆன்* என்பதைத் தொல்திராவிட விகுதியாகக் கருத நேர்ந்தாலும் அது வண்ணனை நிலையில் செய்து வாய்பாட்டுப் பொதுவினை முற்றின் மீது அமைந்த நிகழ்ச்சியாகவே கொள்ளப்படும். எனவே, எடுத்துக்காட்டாக *அறிந்தான், அறிகம், அறிவான், *பாடியான்/ பாடினான்* ஆகிய சிறப்பு வினைமுற்றுக்களை முறையே *அறிந்து, அறிகு, அறிவு, பாடி *பாடின்* ஆகிய தொன்மையான பொது வினைமுற்றுக்களின் மீது தோன்றியனவாகக் கொள்ளப்படும். இந்தப் பின்னணியில் திராவிட மொழிகளில் எழுவாய்-பயனிலை இயைபு என்பது பிந்திய வளர்ச்சியாகக் கருதத்தக்கதாகும். தொடக்கத்தில் அதாவது, தொல் திராவிடத்துக்கும் முந்தைய திராவிடத்தில் இத்தகைய இயைபு போற்றப்படவில்லை என்பதும், இந்த வகையில் மலயாளம் தொன்மையான மரபை நிலை நிறுத்திக்கொண்டது என்பதும் வலியுறுத்தப்படவேண்டிய உண்மைகளாகும்.

## 2.0 வினைமுற்றுக்கள் - பொதுவும் சிறப்பும்

தமிழில் நிகழும் வினைமுற்றுக்கள் இரு பெரும் பிரிவுகளாகக் கொள்ளத்தக்கனவாகும். அவை பொது வினைமுற்றுக்கள்

(Impersonal Finite Verbs) என்றும் சிறப்பு வினைமுற்றுக்கள் (Personal Finite Verbs) என்றும் வழங்கப் பெறுவனவாகும். *செய்தான்* என்ற வினைமுற்று திணை-பால்-எண்-இடப் பொருண்மைகளை உணர்த்தும் இயைபு விகுதியைக் கொண்டதாகும். இத்தகைய வினைமுற்றுக்கள் சிறப்பு வினை முற்றுக்களாகும். எழுவாய்-பயனிலை இயைபு என்பது சிறப்பு வினைகளைக் கருத்தில் கொண்டதாகும். திணை-பால்-எண்-இடப் பொருண்மைகளை உணர்த்தும் விகுதிகள் அமையப் பெறாத முற்றுவினைகள் பொது வினை முற்றுக்களாகக் கொள்ளத்தக்கனவாகும். பொதுவினை முற்றுக்களின் தாக்கம் உள்ளீடாக உணரப்படுவதால்தான் தமிழில் அஃறிணை வினைமுற்றுக்களில் ஒருமை-பன்மை இயைபு மயங்கும் நிலை ஏற்படுகிறது. எழுவாய்-பயனிலை இயைபு தொல்திராவிடத்துக்கு முந்தைய நிலையிலேயே போற்றப்பட்டிருந்தால் தமிழில் இயைபு மயக்கம் நிகழ வாய்ப்பு ஏற்பட்டிருக்காது. மலயாளத்தில் *குதிரைகள் வந்தது* என்பது போன்ற இயைபு மயக்கம் நிகழ வாய்ப்பு இல்லை. ஏனெனில், இந்த மொழியில் செய்து (இறப்பு), செய்யுந்நு (நிகழ்வு), செய்யும் (எதிர்வு) ஆகிய வாய்பாட்டு வினைகள் பயனிலையாகச் செயல்படவல்ல பொது வினை முற்றுக்களாகும்.

### 3.0 எது பொது வினைமுற்று?

பொது வினைமுற்று என்பதன் இலக்கணத்தை முதலில் வரையறை செய்து கொள்வது இன்றியமையாததாகும். இரு திணைக்கும் பொதுவாகவோ, ஐம்பால்களுள் ஒன்றுக்கு மேற்பட்ட பால்களுக்குப் பொதுவாகவோ, மூவிடங்களுள் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களுக்குப் பொதுவாகவோ அமைந்து பயனிலையாக நிகழும் வினைமுற்றானது பொது வினை முற்றாகக் கருதப்படும். இந்த வகையில் பழந்தமிழிலும் இக்காலத் தமிழிலும் பயின்று வழங்கும் செய்யும் வாய்பாட்டு வினை முற்றுக்கள் பொது வினைமுற்றுக்களாகக் கொள்ளத்தக்கன வாகும். தன்மை, படர்க்கை இடங்களுக்கு உரியனவாகப் பழந்தமிழில் நிகழும் செய்திசின், செய்திகும் வாய்பாட்டு இறந்தகால வினைமுற்றுக்களும் பொது வினை முற்றுக்களாகவே கருதப்படும். எனவே, முற்றுவிகுதி என்ற குறிப்பானது சிறப்பு வினைமுற்றுக்கே உரிய ஒரு வரையறை அன்று. பொது வினை முற்றுக்களும் முற்று விகுதிகளைக் கொண்டவையே. எடுத்துக்

காட்டாக மலயாளத்தில் செய்து வாய்பாட்டு வினைமுற்றுக்களில் நிகழும் துகரக் கிளவியும், செய்யுந்நு வாய்பாட்டு வினைமுற்றுக் களில் நிகழும் *-உந்நு* என்ற கிளவியும், செய்யும் வாய்பாட்டு வினைமுற்றுக்களில் நிகழும் உம்மைக் கிளவியும் முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு, ஆகிய காலப்பொருண்மைகளை உணர்த்தி நிற்கும் பொது முற்று விகுதிகளாகும்.

## 4.0 பொது வினைமுற்றுக்களின் நிகழ்ச்சிக் கட்டுப்பாடு

4.1 தமிழைப் பொறுத்தவரையில் பொதுவினைமுற்றுக்களின் நிகழ்ச்சி தொடரனியற் சூழல்களுக்குக் கட்டுப்பட்டதாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

*(1) (அ) நான் அவரைப் பார்த்ததுண்டு*
*(ஆ) நான் அவரைப் பார்த்திருக்கிறேன்*

*(2) நான் அவரைப் பார்த்ததில்லை*

*(3) அவனை அடித்தது யார்?*

*(4) அமுதன் அங்கே நின்றது உண்மை*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பார்த்தது, அடித்தது, நின்றது* ஆகியவையும் *பார்த்து* என்பதும் தொடரனியற் சூழல்களால் (Syntactic Contexts) கட்டுண்ட பொது வினைமுற்றுக் களாகும். பழந்தமிழில் வாக்கியவினையெச்சங்களில் (Adverbial Complement Clauses) செய்து வாய்பாட்டுப் பொது வினைமுற்று பயனிலையாகச் செயல்படும் நிலை அருகிய வழக்காகக் காணப் படுகிறது. இதைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

*(5) கல்வரை அயலது தொல்வழங்கு சிறுநெறி*
*நல்லடி பொறிப்பத் தாஅய்ச்*
*சென்றெனக் கேட்டநம் ஆர்வலர் பலரே (குறுந். 207. 5-7)*

இந்த எடுத்துக்காட்டில் *தலைவன்* என்பது தோன்றா எழுவாயாகவும் *சென்று* என்ற செய்து வாய்பாட்டுப் பொது வினைமுற்று அதன் பயனிலையாகவும் செயல்படுவதைக் காணலாம். *'சென்றாரென வென்பது சென்றென விகாரப் பட்டு நின்றது'* (உ.வே.சா. பதிப்பு) என்ற உரைக்குறிப்பும் இங்கே கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

4.2 செய்து, செய்தற்று, செய்திசின் ஆகிய வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களைக் கொண்ட செய்தென (=செய்ததுபோல்/ செய்ததால்), செய்தாங்கு(= செய்தது போல்), செய்தற்றாங்கு (= செய்ததுபோல்), செய்திசினாங்கு (= செய்ததுபோல்) ஆகிய

வாய்பாட்டு வினைத்தொடர்களின் நிகழ்ச்சி பழந்தமிழில் போற்றப்படுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

*(6)* விருப்பொன்று பட்டவர் உளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை *(பரி. 6. 21,22)*

*7(1)* தண்ணந் துறைவன் வந்தெனப்
பொன்னினும் சிவந்ததன்று கண்டிசின் நுதலே *(ஐங். 105. 3,4)*

*(2)* சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்
மடத்தகை ஆயம் கைதொழு தாஅங்கு *(நற். 300. 1,2)*

*(3)* ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
ஏலாது கவிழந்தவென் இரவன் மண்டை
மலர்ப்போர் யாரென...... *(புறம். 179. 1-3)*

*(4)* கண்டிகும் அல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே *(ஐங். 122)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் *உள(ம்) நிறை உடைத்து, துறைவன் வந்து, கோமகள் சினந்து, வள்ளியோர் மாய்ந்து, ஒள்ளிழை வீழ்ந்து* ஆகியவை எனவென் காரணஉருபின் முன் நிகழும் கட்டுண்ட (Bound) முற்று வாக்கியங்களாகும். இவற்றில் நிகழும் செய்து வாய்பாட்டு வினைமுற்றுக்கள் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்தவையாகும்.

*8(1)* கண்ணில் ஊமன் கடற்பட் டாங்கு *(புறம். 238. 16)*

*(2)* நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர் *(குறள். 908)*

*(3)* அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாஅங்கு *(நற். 9. 1,2)*

*(4)* கொழுநிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு *(புறம். 58.3)*

*(5)* தாதுண் தும்பி போதுமுரன் றாங்கு
ஓதல் அந்தணர் வேதம் பாட *(பத்துப். 6. 655, 656)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் *ஊமன் கடற்பட்டு, (மாந்தர்) பெட்டு, மாக்கள் கண்டு, வீழ் (=விழுது) பொறுத்து, தும்பி முரன்று* ஆகியவையும் கட்டுண்ட முற்று வாக்கியங்களாகும்.

*9(1)* தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி
தென்புல மருங்கிற் சென்றற் றாங்கு *(நற். 153. 4,5)*

*(2)* இருநிலம் மிளிர்ந்திசி னாங்கு ஒருநாள்
அருஞ்சமம் வருகுவ தாயின் *(புறம். 139. 13,14)*

*(3)* தீம்பெரும் பொய்கை யாமை இளம்பார்ப்பு
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாங்கு *(ஐங். 44. 1, 2)*

(4) கண்டிகும் அல்லமோ கொண்க நின் கேளே (ஐங். 122.1)

(5) புகழ்ந்திகும் அல்லரோ பெரிதே (தொல்.சொல்.சேனா. 275 உரை)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *எழிலி சென்றற்று, இருநிலம் மிளிர்ந்திசின், பார்ப்பு வளர்ந்திசின், (யாம்) கண்டிகும், (பலர்பாற் பெயர்)* +புகழ்ந்திகும் ஆகியவையும் கட்டுண்ட முற்று வாக்கியங்களாகும்.

## 5.0 செய்திசின் வினைகள் – ஒரு குறிப்பு

செய்திசின் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் தனி வாக்கியங்களில் பயனிலையாகப் பழந்தமிழில் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்

10 (1) கண்ணும் படுமோ என்றிசின் யானே (நற். 61.10)

(2) காப்பும் பூண்டிசின் கடையும் போகலை (அகம்.7.5)

(3) பாடல்சான்ற விறல்வேந்தனும்மே
வெப்புடை வரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற்றிசினே (புறம். 11. 7-9)

(4) மறம்பாடிய பாடினியும்மே
ஏருடை விழுக்கழஞ்சிற்
சீருடை விழைபெற்றிசினே (புறம். 11. 11-13)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் யான், வேந்தன், பாடினி ஆகியவற்றின் பயனிலையாகச் செய்திசின் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் செயல்படுவதைக் காணலாம். இந்த வாய்பாட்டு வினைகளின் தோற்றம் ஒரு சிறுகுறிப்பாக இங்கே கருத்தில் கொள்ளப்படுகிறது. ஆடிற்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள் ஆடிச்சு வாய்பாட்டினவாகவும் பின்னர் ஆடிசு வாய்பாட்டினவாகவும் திரிந்து *இன்* விகுதி ஏற்று ஆடிசின் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் தோன்றியமைகின்றன. இந்த வினைகள் பிறழ் பிரிப்பாக ஆராயப்பட்டு *இசின்* என்பது செய்து வாய்பாட்டு வினைகளுக்கும் ஒப்புமையாக்கத்தின் தாக்கத்தால் விரிவுபடுத்தப்பட்டு, செய்திசின் வாய்பாட்டு வினைகள் பயிலத் தொடங்கினவாதல் வேண்டும்.

## 6.0 குமரித்தமிழில் பொதுவினைமுற்றுக்கள் – ஓர் இடைப்பிறவரல்

இக்காலத் தமிழில் குமரி மாவட்டக் கிளை மொழி ஒன்றில் செய்வினு/செய்கினு வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களின்

நிகழ்ச்சி போற்றப்படுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணமுடிகிறது (பொன்னீலன். 1979).

11 (1) ஏன் பிலே நீ அழுவினு (பக். 164)
(2) ஏன் இந்தத் தம்பி இங்ஙன சொல்லினு (பக். 20)
(3) ஆண்டவரு சிலுவயில தொங்குவினு (பக். 32)
(4) அரி (= அரிசி) போவுனு (பக். 41)
(5) ஏடி, நாறப் புலயாடி மொவளே, லாறி மறிச்சவா (= மறிக்கவா) போவினு (பக். 123)
(6) யாரெல்லாம் வருவினு (பக். 88)
(7) முன்னூறு பேரு வருவினு (பக். 89)
(8) லாறி வருவினு (பக். 155)
(9) அங்ஙனயா நீ நெனைக்கினு? (பக். 87)
(10) ஒங்க ஏதுவாலதான் ஆண்டவரு சிலுவையில கெடந்து அந்த மாதிரிப் பரிதாபமா பாக்குவினு (பக். 45)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *அழுவினு* (= அழுகிறாய்), *சொல்லினு* (= சொல்கிறான்/சொல்லுது), *தொங்குவினு* (= தொங்குகிறார்), *போவுனு* (= போகிறது), *போவினு* (= போகிறாய்), *வருவினு* (=வருகிறார்கள்/வருகிறது), *நெனைக்கினு* (= நினைக்கிறாய்), *பாக்குவினு* (= பார்க்கிறார்) ஆகியவை நிகழ்காலப் பொதுவினை முற்றுக்களாகக் கருதத்தக்கவையாகும். இந்த வினைமுற்றுக்களில் நிகழும் *-இனு* என்னும் நிகழ்காலப் பொதுமுற்று விகுதியானது செய்கின்று வாய்பாட்டு நிகழ்கால வினைகளில் நிகழும் *-இன்று* என்றும் விகுதிக்கு நிகரானதாகும்.

## 7.0 எதிர்மறையில் பொது வினைமுற்றுக்கள்

7.1 இனி மீண்டும் இறந்தகாலப் பொதுவினைக்கு வருவோம். செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் எதிர்மறை வினை முற்றுக்களில் நிகழுமாற்றினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

12 (1) அறிந்திலேன் (பரி. 8.60) (*யான் அறிந்து)
(2) கண்டிலம் (சிலம்ப. 15.144) (*யாம் கண்டு)
(3) நினைந்திலை (நற். 297.5) (*நீ நினைந்து)
(4) கற்றிலன் (குறள். 414) (*(ஒருவன்) கற்று))
(5) மெலிந்திலள் (குறள்.1827) (*(தலைவி) மெலிந்து))
(6) காத்தன்று (மணி. 2317) (*(நின்மகன்) காத்து))
(7) கொண்டன்று (மணி. 2317) (*(நின்மகன்) கொண்டு))

*காத்தன்று, கொண்டன்று* ஆகியவற்றின் நிகழ்ச்சியைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(13) தன்மண் காத்தன்று பிறர்மண் கொண்டன்று
என்னெனப் படுமோ நின்மகன் மடிந்தது (மணி. 23. 17,18)

இந்த எடுத்துக்காட்டில் *காத்தன்று, கொண்டன்று* ஆகியவை *காத்தது இல்லை. கொண்டது இல்லை* ஆகியவற்றோடு பொருண்மை நிலையில் ஒன்றுபடுகின்றன. மேலும், *காத்து, கொண்டு* ஆகியவை முறையே *காத்தது, கொண்டது* ஆகியவற்றுடன் துணைநிலை வழக்கில் நிகழ்வதால் முன்னவை இரண்டும் செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களாகக் கொள்ளத்தக்கன வாகின்றன. செய்து வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களின் அடியாகத் தோன்றிச் சிறப்பு வினைகளும், செய்தது வாய்பாட்டுப் பொதுவினைகளும் எதிர்மறை வினைமுற்றுக்களில் நிகழ்வதையும் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

14(1) இசைத்தேன் அல்லேன் (கரா.3268) (=இசைத்திலேன்)
(2) மறந்தான் அல்லன் (க.ரா. 4354) (=மறந்திலன்)
(3) உடலினென் அல்லேன் (ஐங். 66.1) (=உடன்றிலேன்)
(4) மருண்டனென் அல்லேன் (பதி.74.23) (=மருண்டிலேன்)
(5) ஒத்தனெம் அல்லேம் (நற். 380.6) (=ஒத்திலம்)
(6) வேட்டனை அல்லை (நற். 395.10) (=வேட்டிலை)
(7) கைத்தாயும் அல்லை (சிலம்பு. 9.55) (=கைத்திலை)
(8) அறிந்தனிர் அல்லிரோ (நற். 376. 12) (=அறிந்திலிர்)
(9) உய்ந்தனர் அல்லர் (புறம். 100.9) (=உய்ந்திலர்)

(15) மணிநா வோசை கேட்டதும் இலனே (சிலம்பு. 22.32) (=கேட்டிலன்)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் சிறப்பு வினைமுற்றுக்களும் செய்தது வாய்பாட்டுப் பொதுவினைமுற்றும் செய்திலன், செய்திலள், செய்திலர் முதலான வாய்பாட்டு எதிர்மறை வினைகளில் காணப்படும் செய்து வாய்பாட்டு வினைகளுடன் துணைநிலை வழக்கில் **(Complementary Distribution)** நிகழ்கின்றன. இந்த வழக்கு நிலையானது எதிர்மறை வினைமுற்றுக்களில் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகளைப் பொது வினைமுற்றுக் களாகக் கொள்ள வகை செய்கிறது.

7.2 எடுத்துக்காட்டு (12)-இல் குறிக்கப்பெற்றுள்ள செய்து வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களைக் கொண்ட எதிர்மறை வினைமுற்றுக்களுக்கு எதிரான உடன்பாட்டு வினைமுற்றுக்கள்

எத்தகையனவாக இருக்கும்? பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக:

16) (1) கண்டிலன் என்னை என்பார்
கண்டனன் என்னை என்பார் (க.ரா. 805)

(2) மாதர் வெள்ளமே கண்டனர்
கண்டிலர் மலையினும் பெரியாரை (க.ரா. 7592)

(3) ...அருகு ஆரும், நின்றார் நின்றிலர் (க.ரா. 5698)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *கண்டிலன், கண்டிலர், நின்றிலர்* ஆகிய இறந்தகால எதிர்மறை வினைமுற்றுக்களுக்கு நிகராக முறையே *கண்டனன், கண்டனர், நின்றார்* ஆகிய உடன்பாட்டு வினைமுற்றுக்களின் நிகழ்ச்சியைக் காணலாம். இதனைக் கருத்தில் கொண்டு, எடுத்துக்காட்டாக, *நினைத்திலை* (நற். 297.5) என்பதற்கு நேரான உடன்பாட்டு வினைமுற்றாக *நினைத்தனை* என்பதைக் கொள்ளலாம்; *நினைத்தாய்* என்பதையும் கொள்ள முடியும். *நினைத்தனை, நினைத்தாய்* ஆகிய சிறப்பு வினைமுற்றுக்கள் முறையே **நினைத்தன், *நினைத்து* என்ற பொதுவினை முற்றுக்களின் அடியாகத் தோன்றியமைந்தனவாகக் கோட்பாட்டு நிலையில் கொள்ள முடியும். (*நினைத்தனை* என்பதில் அன்னென் கிளவியைச் சாரியையாகக் கொள்வது வண்ணனை ஆய்வின்பாற்பட்டதாகும். இத்தகைய ஆய்வு நமது கோட்பாட்டினைப் பாதிக்காது). இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கையில் *நினைத்திலை* என்பதில் நிகழும் *நினைத்து* என்னும் பொதுவினைமுற்று *நினைத்தனை* என்பதில் நிகழும் **நினைத்தன்* என்னும் கோட்பாட்டுப் பொது வினைமுற்று, *நினைத்தாய் இல்லை* என்ற அமைப்பில் நிகழும் *நினைத்தாய்* என்ற சிறப்பு வினைமுற்றில் உள்ள *நினைத்து* என்னும் இறந்தகாலப் பகுதி ஆகிய மூன்றும் துணை நிலை வழக்கில் நிகழ்வது தெளிவாகிறது. இத்தகைய வழக்கு நிலையானது செய்து வாய்பாட்டு வினைகள் பொது வினைமுற்றுக்களாகக் கொள்ளத்தக்கவை என்பதை மீண்டும் உறுதிப்படுத்துகிறது.

7.3 பொது வினைமுற்றுக்களில் ஒரு பிரிவினதாகிய *செய்தன்று* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியைப் பழந்தமிழில் பயின்று வழங்கும் எதிர்மறை வினைமுற்றுக்களில் காணலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளற்பாலனவாகும்.

17 (1) மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்
மிகுதிகண் டன்றோ விலனே (அகம். 379. 15,16)

(2) கேட்டன்றோ விலமே (நற். 239. 9)

(3) வாழ்தல் இனிதென்று மகிழ்ந்தன்றும் இலமே (புறம். 192. 4, 5)

(4) தாலி களைந்தன்று மிலனே (புறம். 77.7)

(5) அன்னை, தானறிந் தன்றோவிலளே (நற். 175. 5,6)

(6) பிறர் அறிந்தன்று மிலரே (நற். 27. 6)

இந்த எடுத்துக்காட்டுக்களில் செய்தன்று வாய்பாட்டு வினை முற்றுக்களையடுத்து நிகழும் -ஓ, *-உம்* ஆகிய விகுதிகள் இந்தக் கட்டுரையில் நிகழ்த்தப்பெறும் ஆய்வுக்கு எந்த வகையிலும் இடையூறானவையல்ல.

### 8.0 எதிர்மறையில் பாடிற்றும் பாடின்றும்

செய்தன்று வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களைப் போலவே பாடிற்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களும் எதிர்மறை வினைமுற்றுக்களில் நிகழற்பாலனவாகும்.

18 (1) சுனைபாய்ந்து ஆடிற்றும் இலன் (நற். 147.9)

(2) பாடிற் றிலேன் பணியேன் மணி
நீயொளித் தாய்க்குப் பச்சூன்
வீடிற் றிலேனை விடுதிகண்
டாய்வியந் தாங்கு அலறித்
தேடிற் றிலேன் சிவனெவ் விடத்
தான்எவர் கண்டன ரென்று
ஓடிற் றிலேன் கிடந் துள்ளுரு
கேன்நின்று உழைத் தனனே (திருவா. நீத். விண். 45)

(3) ஓடிற்றில்லை... கங்கை வெள்ளம் (க.ரா. 2306)

பாடிற்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களைப் போலவே பாடின்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களின் நிகழ்ச்சி யையும் பழந்தமிழில் எதிர்மறை வினைகளில் காணமுடிகிறது.

19 (1) பேணின்றோ விலமே (அகம். 346.12)

(2) புலவி, உட்கொண்டு ஊடின்று மிலையே (நற். 237. 4,5)

(3) மறுமை நோக்கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே (புறம். 141. 14,15)

*நோக்கின்று* என்னும் வினையானது 19(3)-இல் *அன்று* என்பதன் முன்(னும்) சிறப்பு வினைமுற்றாக நிகழ்வது குறிப்பிடத்தக்க

தாகும். ஆயினும் அமைப்பு நிலையில் பொது வினைமுற்றும் சிறப்பு வினைமுற்றும் ஒரு திறத்தனவல்ல என்பதும் கருத்தில் கொள்ளப்பட வேண்டிய உண்மையாகும். இதுபற்றிப் பின்னர்ச் சிந்திக்கப்படும்.

## 9.0 பிற தொடரனியற் சூழலில் பாடிற்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள்

பாடிற்று வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் பயனிலை நிகழ்ச்சியை வாக்கியப் பெயர்த் தொடர்களிலும் (Sentential Noun Phrases) காணலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

*20 (1)* யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்
*(தொல். சொல். சேனா. 106)*

*(2)* உலகில் அன்பர் கருதிற்று உதவு சேவடி *(க.ரா. 2560)*

*(3)* வேண்டிற்று, எவ்வரமும் தந்தேன் *(க.ரா. 10147)*

*(4)* எந்தைநீ இயம்பிற் றென்னை *(க.ரா. 3534)*

*(5)* கேயத் தீங்குழல் ஊதிற்றும் நிரை மேய்த்ததும் கெண்டை
ஒண்கண் வாசப்பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும்
*(நாலா. 3485. நம். திருவாய்)*

*(6)* நோவ ஆய்ச்சி உரலொடு ஆர்க்க இரங்கிற்றும்
வஞ்சப் பெண்ணை
சாவப்பால் உண்டதும் ஊர்சகடம் இறச்சாடியதும்
*(நாலா. 3487. நம். திருவாய்)*

மேலே *(17)*-இல் உள்ள எடுத்துக்காட்டுகளில் நிகழும் செய்தன்று வாய்பாட்டுப் பொது வினைகள் செய்தது வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களோடும் *(18)*, *(19)*, *(20)*-இல் உள்ள எடுத்துக் காட்டுகளில் நிகழும் பாடிற்று, பாடின்று ஆகிய வாய்பாட்டுப் பொது வினைகள் பாடியது வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக் களோடும் பொருந்துவனவாகும்.

## 10.0 எதிர்மறையில் பொதுவினைமுற்றும் சிறப்பு வினைமுற்றும்

10.1 பொது வினைமுற்றுக்கள் தொடர்பாக மேலே நிகழ்த்திய சிற்றாய்வினின்றும் ஓர் உண்மை தெளிவாகின்றது. பொது வினை முற்றுக்களானவை *இலன், இலள், இலர்* முதலான எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுக்களின் முன்பும் (*காத்தன்று, கொண்டன்று* மணி. 23.17, விதிவிலக்கு) (எ-டு: *கற்றிலன்*/குறள். 414, *நினைந்திலை*/

நற். 297.5, *அறிந்திலேன்*/பரி. 8.60) சிறப்பு வினைமுற்றுக்களானவை *அ(ல்)லன், அ(ல்)லள், அ(ல்)லர்* முதலான எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுக்களின் முன்பும் (எ-டு: *உடலினென் அல்லேன்*/ஐங். 66, *உய்ந்தனர் அல்லர்*/புறம். 100.9) நிகழ்கின்றன. இந்த உண்மை இறவாக்காலப் பொது மற்றும் சிறப்பு வினைமுற்றுக்களுக்கும் பொருந்தும் (எ-டு : *அறிகிலேன்*/கலி. 47.17) (பாடபேதம் : *அறிகிலன்*), *அறிகிலர்*/குறுந். 152.1, *உண்குவம் அல்லேம்*/பதி. 58.7 (= உண்கிலம்), *வருவை அல்லை*/ஐங். 233. (= வருகிலை), *செல்வர் அல்லர்*/நற். 208.5 (= செல்கிலர்), *நோன்மார் அல்லர்*/நற். 208.6 (= *நோல்கிலர்/நோற்கிலர்), *இரக்குவென் அல்லேன்*/ஐங். 159.4 (= இரக்கிலென்), *புலக்குவம் அல்லேம்*/ஐங். 80.1 (= புலக்கிலம்), *துறக்குவன் அல்லன்*/கலி. 41.35 (= துறக்கிலன்), *துறக்குநர் அல்லர்*/கலி. 13.26 (= துறக்கிலர்), *பெயர்க்குநர் அல்லர்*/புறம். 124.3 (= பெயர்க்கிலர்), *அறிகலென்*/நற். 206.11 (= அறிகிலேன்), *அமைகலன்*/நற். 260.10 (= அமைகிலேன்), *தருகல்லாய்*/கலி. 148.17 (= தருகிலை) ஆகியவற்றில் *அலேன், அலன், அல்லாய்* இவற்றின் முன் நிகழும் *அறிகு, அமைகு, தருகு* ஆகியவை வினைப்பகுதி களாகவும் *இலேன், இலை* இவற்றின் முன் நிகழும் *அறிகு, அமைகு, தருகு* ஆகியவை இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களாகவும் கொள்ளத்தக்கனவாகும். *துயிலலள்*/கலி. 45.18 (= துயிலாள்), *கொள்ளலர்*/புறம். 182.6 (= கொள்ளாள்), *தாரலன்* /புறம். 109.13 (= தாரான்), *மொழியலன்*/புறம். 138.7 (=மொழியான்), *வாழலேன்*/கலி. 47.15 (= வாழேன்), *செல்லலம்*/புறம். 101.1 (செல்லேம்), *பிரியலம்*/நற். 224.7 (=பிரிகிலேம்/பிரியேம்), *தேறலை*/புறம். 10.2 (= தேறாய்) ஆகிய எடுத்துக்காட்டுக்கள் இந்த உண்மையைப் புலப்படுத்தும். இந்த ஆய்வின் அடிப்படையில் *யான் கண் துஞ்சிலன்* (நற். 319.11) என்பதில் நிகழும் *துஞ்சிலன்* என்பதைத் *துஞ்சலன்* என்று மூலபாட மீட்டுருவாக்கம் செய்யலாம். கருதுக: *அஞ்சலை* (பதி. 63.3), *அல்கலர்* (நற். 329.9), *முயங்கலள்* (நற். 200.11). செயல், செய்தல் வாய்பாட்டு இறவாக்காலப் பொது வினை முற்றுக்களைப் பொறுத்தவரையில் அவற்றை அடுத்து *இலம், இலர்* முதலான எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுக்களின் நிகழ்ச்சி பழந்தமிழில் போற்றப்படுகிறது (எ-டு: *துஞ்சலோவிலள்* (குறுந். 292.8), *துஞ்சலும் இலர்* (புறம். 182.4), *வியத்தலும் இலம்* (புறம். 192.12), *உண்டலும் இலர்* (புறம். 182.4), *பெயர்தலோ இலர்* (நற். 289.3).

10.2 இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களைப் பொறுத்த வரை ஒரு சிக்கலுக்கு விடை கண்டாக வேண்டும். *அறிகிலன், அறியலன், அறியான்* ஆகிய மூன்று வகையான எதிர்மறை வினை முற்றுக்களின் பொருண்மை பற்றி நாம் இந்த ஆய்வில் சிந்திக்க

முற்படவில்லை. இந்த ஆய்வுக்கு இங்கே வாய்ப்பில்லையாதலின் அது விடப்பட்டுள்ளது. ஆயினும், பொருண்மைத் தொடர்பான இந்த ஆய்வு மேற்கொள்ளப்படவேண்டிய ஒன்றாகும்.

### 11.0 ஒன்றன்பால் வினைமுற்றுக்களாகச் செய்து வினைமுற்றுக்கள்

செய்து, செய்திசின், செய்திகும், செய்தன்று, செய்தற்று, செய்தது, பாடிற்று, பாடின்று ஆகிய வாய்பாட்டுப் பொது வினை முற்றுக்கள் பல்வேறு வாக்கிய அமைப்புக்களில் பயனிலையாக நிகழும் போக்கானது பல எடுத்துக் காட்டுக்கள் வாயிலாக மேலே தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. செய்து வாய்பாட்டு வினைமுற்றுக் களைப் பொறுத்தவரை, அவை ஒன்றன்பாற் சிறப்பு வினைகளாய் அமைந்து வாக்கிய வினையெச்சங்களில் (Adverbial Complement Clauses) பயனிலையாகச் செயல்படும் போக்கினையும் பழந்தமிழில் காணமுடிகிறது. பின்வரும் செய்யுட் பகுதியில் செய்து வாய்பாட்டுப் பயனிலையுடன் நிகழும் வாக்கிய அமைப்புக்களைக் கருத்தில் கொள்க.

(21) கவிழ்ந்த புனலிற் கயந்தண் கழுநீர்
அவிழ்ந்த மலர்மீ துற்றென வொருசார்
மாதர் மடநல்லார் மணலின் எழுதிய
பாவை சிதைத்த தெனவழ வொருசார்
அகவய லிளநெல் அரிகாற் சூடு
தொகுபுனல் பரந்தெனத் துடிபட வொருசார்
ஓதஞ் சுற்றிய தூரென வொருசார்
கார்தூம் பற்றது வானென வொருசார்
பாடுவார் பாக்கங் கொண்டென
ஆடுவார் சேரி யடைந்தெனக்
கழனிவந்து கால் கோத்தெனப்
பழன வாளை பாளை யுண்டென
வித்திடு புலம் மேடா யிற்றென (பரி. 7.23-35)

இந்தச் செய்யுட் பகுதியில் செய்து, செய்தது ஆகிய இரண்டு வகை வாய்பாடுகளில் அமைந்த வினைமுற்றுக்கள் யாப்பமைதிக் கேற்ப விரவி நிகழ்வதைக் காணலாம். இந்த வாய்பாட்டு வினைமுற்றுக்கள் பயனிலையாக நிகழும் வாக்கியங்கள் கீழே சுட்டப்பெற்றுள்ளன.

22 (1) கயம்... மலர்மீது உற்று (உற்று = உற்றது)
(2) தொகுபுனல் பரந்து (பரந்து = பரந்தது)

(3) ஓதம் பாடுவார் பாக்கம் கொண்டு (கொண்டு = கொண்டது)

(4) தொகுபுனல்/ஓதம் ஆடுவார் சேரி அடைந்து (அடைந்து = அடைந்தது)

(5) தொகுபுனல்/ஓதம் கழனிவந்து கால் கோத்து (கோத்து = கோத்தது)

(6) பழன வாளை பாளை உண்டு (உண்டு = உண்டது)

23 (1) (கவிழ்ந்த புனலிற்) கயம் பாவை சிதைத்தது (சிதைத்தது = சிதைத்து)

(2) ஓதம் ஊர் சுற்றியது (சுற்றியது = சுற்றி)

(3) வான் கார் தூம்பு அற்றது (அற்றது = அற்று)

!4) வித்திடு புலம் மேடாயிற்று (ஆயிற்று = *ஆயின்)

மேலே (22), (23)-இல் உள்ள வாக்கியங்களில் பயனிலையாக நிகழும் வினைமுற்றுக்கள் ஓர் உண்மையை வலியுறுத்துவனவாக உள்ளன. ஒரு குறிப்பிட்ட வினையானது பொதுவினைமுற்றாகவும், சிறப்பு வினைமுற்றாகவும் நிகழ்கையில் அதன் சொல்லியல் அமைப்பானது (Morphological Structure) ஒரே தன்மையதாக இருக்க வாய்ப்பில்லை. எடுத்துக்காட்டாக ஓடின்று, ஓடிற்று வினைகள் பொது வினைமுற்றுக்களாக நிகழ்கையில் அவை முறையே *ஓடு-இன்று* (குற்றுகரத்தகரம், அலையொலி/Voiced Phone), *ஓடு-இன்ற்உ* (குற்றுகரத்தகரம், நிலையொலி (Voiceless Phone) என்றும் ஒன்றன்பாற் சிறப்பு வினைமுற்றுக்களாக நிகழ்கையில் முறையே ஓடு-இன்+து (ஒன்றன்பால் விகுதியாகிய குற்றுகரத் தகரம், அலையொலி), ஓடு-இன்+த்உ (மேற்படி விகுதியாகிய குற்றுகரத் தகரம், நிலையொலி) எனவும் ஆராயப்படும். இவ்வாறே செய்து வாய்பாட்டு வினைகள் பொது வினைமுற்றுக்களாக நிகழ்கையில் ஓர் அமைப்பினவாகவும், சிறப்பு வினைகளாக அமைகையில் பிறிதோர் அமைப்பினவாகவும் ஆராயப்படும். இதனால் செய்து வாய்பாட்டு வினைமுற்றுக்களின் அடிப்படைக் கட்டமைப்பு மறு ஆய்வுக்கு உரியதாகின்றது. இந்த ஆய்வு விரிவாக மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும்.



# 7. பெயரிடப் பெயர்ச்சியும் பெயரெச்ச வினைகளும்

## *1.0 வினையெனப்படுவது*

*1.1 வினைமுற்று வேற்றுமையுருபு ஏற்காது என்பதாலும், வினையாலணையும் பெயரானது பெயரின் இயல்பினது என்பதாலும், பெயரெச்சம் தலைமைப் பெயரைத் தழுவி நிற்கும் என்பதாலும் இம்மூன்றும் மரபிலக்கணிகளால் வெவ்வேறு இலக்கண வகையினதாகக் கருதப்படுகின்றன. புறநிறைவை* (External Adequacy) *அடிப்படையாகக் கொண்ட இந்தக் கருதுகோள் நமக்கு உடன்பாடில்லை. செய்தான், செய்தவன், செய்த ஆகிய மூன்று இறந்தகால வினைகளும் மாறுபட்ட சொல்லியல் அமைப்பினைக் கொண்டவை என்பது உண்மையாயினும் அகநிறைவை* (Internal Adequacy) *அடிப்படையாகக் கொண்ட இலக்கணம் இவற்றை மாறுபட்ட இலக்கண வகையினதாகக் கருதுவதில்லை. மாறாக இவை மூன்றனையும் அந்த இலக்கணம் ஒரு வினைமுற்றின் திரிபன்களாகவே* (Alternants) *கருதும். அவ்வாறு கருதுவதற்குக் காரணம் செய்தான், செய்தவன், செய்த ஆகிய மூன்றும் வரையறுக்கப்பட்ட தொடரனியற் சூழல்களில்* (Syntactically Defineable Contexts) *நிகழ்வதேயாகும். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கன வாகும்.*

*(1) முருகன் வள்ளியை மணந்தான்.*

*(2) வள்ளியை மணந்தவன் முருகன்.*

*(3) வள்ளியை மணந்த முருகன்.*

இந்த மூன்றனுள் *மணந்தான்* என்பது தனிவாக்கியமாகிய முற்றுத் தொடரனிலும் (Matrix Syntax), *மணந்தவன்* என்பது கவைத் தொடரனிலும் (Cleft Syntax), *மணந்த* என்பது பெயரெச்சத் தொடரனிலும் (Relative Clause), நிகழ்கின்றன. துணை நிலை வழக்கில் (Complementary Distribution), அமைந்த இந்த நிகழ்ச்சியானது *மணந்தான், மணந்தவன், மணந்த* ஆகிய மூன்றும்

ஒரு வினைமுற்றின் திரிபன்கள் என்பதை வலியுறுத்துகின்றன. இம்மூன்றனுள் *மணந்தான், மணந்தவன்* என்பவை சிறப்பு வினைமுற்றுக்களாகவும் (Personal Finite Verbs), *மணந்த* என்பது பொது வினைமுற்றாகவும் (Impersonal Finite Verb), கொள்ளத்தக் கனவாகும்.

1.2 செய்தான் என்பதும், செய்தவன் என்பதும் வேறுபட்ட சொல்லியல் அமைப்பின என்பதால் அவற்றை வினை, பெயர் என்ற மாறுபட்ட இலக்கண வகையினவாகக் கருதமுடியாது. இந்த உண்மையானது செய்வான், செய்பவன் ஆகிய வாய்பாட்டு வினைகளுக்கும் பொருந்தும். தவிரவும் வினைமுற்றே பெயரின் இயல்பினதாய் நிகழுமாயின் அந்த வினை முற்றும் வினை யாலணையும் பெயராகவே கொள்ளத்தக்கதாகும். இந்த வகையில் பின் வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கன வாகும்.

*4(அ)* அழும்பில் அன்ன நாடிழந் தனரும்
கொழும்பல் பதிய குடியிழந்த தனரும் *(பத்துப். 6.345, 346)*

(ஆ) சாய்ப்பறிக்க நீர்திகழும் தண்வயல் ஊரன்மீது
ஈப்பறக்க நொந்தேனும் யானேமன் - தீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந்து அணியகலம்
நோக்கி யிருந்தேனும் யான் *(நாலடியார் 39.9)*

(இ) செந்தா மரைமலரும் செய்வயல் நல்லூர
நொந்தால் மற்றுன்னைச் செயல்படுவ தென்னுண்டாம்
தந்தாயும் நீயே தரவந்த நன்னலம்
கொண்டாயும் நீயாயக் கால் *(திணைமொழி ஐம்பது 36)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *இழந்தனர், நொந்தேன், இருந்தேன், தந்தாய், கொண்டாய்* ஆகிய வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயரினவாய் நிகழ்வதைக் காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களையும் கருத்தில் கொள்க.

5 *(அ)* நின்யான் பிழைத்தது நோவாய் என்னினும்
நீபிழைத் தாய்போல் நனிநா ணினையே *(புறம். 43.16, 17)*

*(ஆ)* கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை.... *(கலி. 128.6, 7)*

*(இ)* அலந்தாங் கமையலென் என்றானைப் பற்றியென்
நலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவும்
கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென அளிப்பான் போலவும்
முலையிடைத் துயிலும் மறந்தீத் தோயென

நிலையழி நெஞ்சத்தேன் அழிவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்
கோதை கோலா இறைஞ்சி நின்ற
ஊதையஞ் சேர்ப்பனை அலைப்பேன் போலவும்
யாதென் பிழைப்பென நடுங்கி யாங்கே
பேதையைப் பெரிதெனத் தெளிப்பான் போலவும்
ஆங்கு,
கனவினாற் கண்டேன் தோழி (கலி. 128.10-23)

(ஈ) தன்னுயிர் கொண்டவன் உயிர்தே டினள்போல் (சிலம்பு. 25.85)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *போல், போல* ஆகியவற்றின் முன் நிகழும் வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாகவே கொள்ளத்தக்கனவாகும். இவற்றுள் *தொடுப்பேன், அழிவேன், அலைப்பேன்* ஆகியவை தன்மை வினையாலணையும் பெயர் களாகவும் *பிழைத்தாய், கண்டாய்* ஆகிய வினைமுற்றுக்கள் முன்னிலை வினையாலணையும் பெயர்களாகவும் கருதத்தக்கன வாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களிலும் வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயரின் இயல்பினதாய் நிகழ்வதைக் காணலாம்.

6(அ) அலந்தாங் கமையலென் என்றானைப்பற்றியென்
நலந்தா ராயோவெனத் தொடுப்பேன் போலவும் (கலி. 128.10, 11)

(ஆ) கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிரும் தொழும் (குறள். 260)

(இ) மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாராயணா வென்னா நாவென்ன நாவே (சிலம்பு. 17.37)

(ஈ) வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான் என தென்றவரரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே (திருவா. திருச். 19)

(உ) சிறையிருந் தேனையப் புனிதன் தீண்டுமோ (க.ரா. 5238)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *என்றான், மறுத்தான், கடந்தான், நடந்தான், நின்றாய், இருந்தேன்* ஆகிய வினைமுற்றுக்கள்

வேற்றுமை உருபேற்ற வினையாலணையும் பெயர்களாய்க் கருதத்தக்கவையாகின்றன.

1.3 மேலே (4), (5), (6) ஆகியவற்றில் பெயரின் இயல்பினதாய் நிகழும் வினைமுற்றுக்களினின்றும் மூன்று உண்மைகள் புலனாகின்றன. ஒன்று, வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாகக் கொள்ளத்தக்கவை. இரண்டு, செய்தவன், செய்தவள், செய்பவன், செய்பவள் முதலான வாய்பாட்டு வினையாலணையும் பெயர்கள் தொடரனியற் சூழலால் *கட்டுண்ட* (Bound) வினைமுற்றுக்களாகும். மூன்று, சொல்லியல் அமைப்பு வினைமுற்றையும் வினையாலணையும் பெயரையும் வேறுபடுத்துவதில்லை. ஏனெனில், செய்தான் என்பது எடுத்துக் காட்டாகப் பயனிலையாக மட்டுமின்றி, வேற்றுமையுருபேற்கும் பெயரின் இயல்பினதாயும் நிகழவல்லதாகும். மேலே (4), (5), (6)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்கள் இந்த உண்மையை வலியுறுத்துவதை அறியலாம். எனவே வினைமுற்று, வினையாலணையும் பெயர் என்று மரபிலக்கணிகள் கொண்ட பாகுபாடு எந்த வகையிலும் பொருத்தமற்றதாகும். வினைமுற்றுக்களானவை அமைப்பு நிலையில் பல திறத்தனவாகும். எல்லா வகை வினைமுற்றுக்களும் வேற்றுமை உருபேற்க வேண்டுமென்ற நியதியோ கடப்பாடோ இல்லை. செய்யும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் எடுத்துக் காட்டாக இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

## 2.0 வினையெல்லாம் வினையாலணையும் பெயரே

2.1 இனி, எடுத்துக்காட்டாகச் செய்தான் என்ற வினை முற்று எந்த அடிப்படையில் வினையாலணையும் பெயராகக் கொள்ளப் படும் தகுதியைப் பெறுகின்றது என்பதை ஆராயலாம். அமைப்பு நிலையில் செய்தான் என்பது செய்-த்-ஆன் என்று ஆராயப்படும். வினைமுற்றை வினையாலணையும் பெயராகக் கொள்வதற்கான எந்த அமைப்பியல் தடயமும் செய்-த்-ஆன் என்ற சொல்லியல் அமைப்பில் இல்லை. இந்த அமைப்பில் தகரக் கிளவியானது காலப்பொருண்மையையும், *ஆன்* என்பது பெயரின் இயல்போடு கூடிய இயைபுப் பொருண்மையையும் உணர்த்துகின்றன. எனவே, இந்த விகுதிகள் வினைமுற்றை வினையாலணையும் பெயராகக் கருத வகை செய்வனவாகக் கொள்ள முடியாது. எஞ்சி நிற்பது வினைப்பகுதி மட்டுமே. இதனின்றும் வினைப்பகுதியே பெயரின் தன்மையதாக, அதாவது வினைப்பெயராகக் கருதத்தக்கதாகிறது என்ற உண்மை பெறப்படுகின்றது. வினைப்பகுதியே வினைப் பெயராகக் கொள்ளப்படும் நிலையில் அதனடியாகத் தோன்றி நிகழும் எவ்வகை வினைவடிவமும் வினையாலணையும் பெயராகக்

கொள்ளப்படும் தகுதியைப் பெறுகின்றது. வாக்கியத்தில் இலக்கணச் செயற்பாட்டுக்கேற்ப ஒரு வினைவடிவம் வேற்றுமை உருபு ஏற்பதும் ஏற்காததும் அமையும். எடுத்துக்காட்டாக, பெயரெச்ச, வினையெச்ச வினைமுற்றுக்கள் அவற்றின் இலக்கணச் செயற் பாட்டினால் வேற்றுமை உருபேற்க வாய்ப்பில்லை. ஒரு வினை வடிவத்தின் அமைப்பும் அதனை வேற்றுமை உருபு ஏற்பதினின்றும் கட்டுப்படுத்துகிறது. எடுத்துக்காட்டாக, மலயாளத்தில் செய்து, செய்யுந்நு, செய்யும் வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் எந்தத் தொடரனியற் சூழலிலும் வேற்றுமை உருபேற்க வாய்ப் பில்லை. பழந்தமிழில் காணப்படும் செய்யும், செய்கு, செய்தும், செய்கம், செய்கும் முதலான வாய்பாட்டு வினைமுற்றுக்களுக்கும் இது பொருந்தும்.[1]

2.2 பெயர் நிலைக்கிளவிகள் வேற்றுமை உருபு ஏற்கும் என்பது பொதுவான மரபு. ஆனால் வேற்றுமை உருபு ஏற்காதவற்றை யெல்லாம் பெயர்நிலைக்கிளவிகள் அல்ல என்று துணிய முடியாது. பழந்தமிழில் நிகழும் செய்தென (=செய்ததால்/ செய்ததுபோல்), செய்தாங்கு (=செய்தது போல்), செய்தன்ன (=செய்தது போன்ற), செய்பன்ன (=செய்வது போன்ற) முதலான வாய்பாட்டுத் தொடர்களில் காணப்படும் செய்து, செய்பு வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் வேற்றுமை உருபேற்கும் செய்தது, செய்வது வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களோடு துணைநிலை வழக்கில் நிகழ்வனவாகும். *பாட வந்தான், பாடுதற்கு வந்தான்* ஆகிய தொடரமைப்புக்களில் நிகழும் *பாட* என்பது வேற்றுமை உருபு ஏற்காததும் *பாடுதல்* என்பது வேற்றுமை உருபு ஏற்பதும் அவற்றின் சொல்லியல் அமைப்புக்களால் கட்டுப்படுத்தப் படுகின்றன. *பாட, பாடுதல்* இரண்டும் துணைநிலை வழக்கில் நிகழ்வதால் *பாடுதல்* என்பதைப் போன்றே *பாட* என்னும் எதிர்வெச்சப் பொது வினைமுற்றும் (Future Impersonal Finite Participle) வினையாலணையும் பெயராகக் கொள்ளத்தக்கதாகின்றது. எனவே, வினைப்பகுதிகள் வினைப்பெயர்களாகக் கொள்ளத் தக்கவை என்பதும், அவற்றினடியாகத் தோன்றி நிகழும் எச்சப் பொது வினைமுற்றுக்கள் (Impersonal Finite Participles) உட்பட எவ்வகை வினைமுற்றும் வினையாலணையும் பெயராகக்

1. ஆயினும் ஒரு சிறப்பு வினைமுற்று வேற்றுமையுருபேற்பதற்கு வினையடியைக் காரணமாகக் கொள்ளமுடியாது என்று தோன்றுகிறது. *ஆன், ஆன், ஆர்* முதலான இயைபு விகுதிகளையும் தன்மை, முன்னிலை விகுதிகளையும் பெயராகக் கொண்டால் வினைமுற்றானது வேற்றுமை உருபு ஏற்பதற்கான காரணம் விளங்கும். இயைபு விகுதிகளும் தன்மை, முன்னிலை விகுதிகளும் இந்த ஆய்வில் பொதுவினைமுற்றுக்களையடுத்து நிகழ்வனவாகும்.

கொள்ளத்தக்கவை என்பதும், வினையின் சொல்லியல் அமைப்பு, அதன் இலக்கணச் செயற்பாடு ஆகியவற்றைப் பொறுத்து அது உருபு ஏற்பதும் ஏற்காததும் அமையும் என்பதும் கருத்தில் கொள்ளப்பட வேண்டிய உண்மைகளாகும்.

2.3 வினை வகைகள் அனைத்தும் வினையாலணையும் பெயர்களாகக் கொள்ளத்தக்கவை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இனி, பெயரெச்ச வினைமுற்றைப் பற்றிச் சிந்திக்கலாம். சுருக்கம் கருதி, பெயரெச்ச வினைமுற்று என்பது இந்த ஆய்வில் இனிப் பெயரெச்சம் என்றே வழங்கப்படும். பெயரெச்சம் என்பது ஒரு வினைமுற்றின் செயற்பாடாகும். திராவிட மொழிகளில் பெயரெச்சம் என்பது பெயர்த்தொடரில் தலைமைப் பெயரைத் தழுவி நிற்கும் பொதுவினை முற்றாகும். எடுத்துக்காட்டாக, *வள்ளியை மணந்த/மணக்கின்ற/மணக்கும் முருகன்* என்ற பெயரெச்சத் தொடர்களில் நிகழும் *மணந்த, மணக்கின்ற, மணக்கும்* ஆகிய பெயரெச்சங்கள் பொது வினைமுற்றுக்களாக கொள்ளத்தக்கவையாகும். பெயரெச்சம் என்பது தொடரனியற் சூழலால் கட்டுண்ட ஒருவகைப் பொது வினைமுற்று (Impersonal Finite Verb) ஆகும். எல்லாவகைப் பெயரெச்சங்களும் தனிவாக்கியங்களில் பயனிலையாகச் செயற்பட வேண்டுமென்ற கடப்பாடு இல்லை. செய்த, செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் தமிழில் தனி வாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படுவதில்லை. ஆனால், செய்யும் வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் தமிழிலும் மலயாளத்திலும், பழங்கன்னடத்திலும் தனி வாக்கியங்களில் பயனிலையாகவும் செயல்படுகின்றன. இதனடிப்படையில் பிற வாய்பாட்டுப் பெயரெச்சங்களும் வினைமுற்றுக்களாகக் கொள்ளத்தக்கவையா கின்றன. இதனை அகச்சான்றாகக் கொண்டு **முருகன் வள்ளியை மணந்த* (=மணந்து/மணந்தான்), **முருகன் வள்ளியை மணக்கின்ற* (=மணக்கின்று/மணக்கின்றான்) என்ற தனி வாக்கியங்களை மீட்டுருவாக்கம் செய்ய முடியும். மலயாளத்தில் நிகழும் செய்த, செய்யுந்ந வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் முறையே செய்து, செய்யுந்நு வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றி நிகழ்கின்றன. இத்தகைய நிகழ்ச்சியானது மேலே குறிப்பிட்ட மீட்டுருவாக்கங்களை உறுதி செய்வதாக உள்ளது.

## 3.0 பெயரெச்சங்களாகச் சிறப்பு வினைமுற்றுக்கள்

3.1 பெயரெச்சங்கள் பொதுவாகத் திராவிட மொழிகளிலும் சிறப்பாகத் தமிழிலும் பொதுவினை முற்றுக்களே. ஆயினும், தலைமைப் பெயரின் நிகழிடத்துக் கேற்பப் பெயரெச்சங்கள்

சிறப்பு வினைமுற்றுக்களாகவும் அமையற்பாலனவாகும். எடுத்துக் காட்டாக, *மாதவியைப் பிரிந்த கோவலன் (மதுரைக்குச் சென்றான்), கோவலன் மாதவியைப் பிரிந்தவன் (மதுரைக்குச் சென்றான்)* என்பவற்றில் நிகழும் பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயராகிய *கோவலன்* வலப்புறத்தில் நிகழ்கையில் பெயரெச்சமாகிய *பிரிந்த* என்பது பொதுவினைமுற்றாகவும், இடப்புறத்தில் நிகழ்கையில் பெரெச்சமாகிய *பிரிந்தவன்* என்பது சிறப்பு வினைமுற்றாகவும் அமைவது கருத்தில் கொள்ளத்தக்க தாகும். சிறப்புப் பெயரெச்சங்களின் நிகழ்ச்சியைத் தலைமைப் பெயரின் இடப்புறப் பெயர்ச்சி (Leftward Movement) கட்டுப் படுத்துவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம். கூடுதல் எடுத்துக்காட்டுகள் பிற்சேர்க்கையில் கொடுக்கப்பட்டுள்ளன.

7 (அ) நீநீங்கக் கருதியாய்க்கு (கலி. 136.15)
(ஆ) [நீங்கக் கருதிய உனக்கு]

8 (அ) யாரிவன் எங்கூந்தல் கொள்வான் (கலி. 89.1)
(ஆ) [எம் கூந்தல் கொள்ளும் இவன்] யார்?

9 (அ) யாரிவன் என்னை விலக்குவான் (கலி. 112.1)
(ஆ) [என்னை விலக்கும் இவன்] யார்?

10(அ) ஆய்த்தியர்,
நீமருட்டும் சொற்கண் மருள்வார்க்கு உரை (கலி. 108.46,47)
(ஆ) [நீமருட்டும் சொற்கண் மருளும் ஆய்த்தியர்க்கு] உரை

11(அ) (கடையழிய) நீண்டகன்ற கண்ணாளைக் காளை
(படையொடும்) கொண்டு பெயர்வானை (பரி.11.46,47)
(ஆ) [நீண்டகன்ற கண்ணாளைக் கொண்டு பெயரும் காளையை]

12(அ) சிறுபட்டி, (மேலோர்நாள் இல்லிரே,)
உண்ணுநீர் வேட்டேன் எனவந் தாற்கு (கலி. 51.4-6)
(ஆ) மேலோர் நாள்
[உண்ணுநீர் வேட்டேன் எனவந்த சிறுபட்டிக்கு]

13(அ) இளம்பல் கோசர் விளங்குபடை கன்மாரர்
(இகலினர் எறிந்த அகலிலை முருக்கு) (புறம். 169.9, 10)
(ஆ) [விளங்குபடை கற்கும் இளம்பல் கோசர்]

இந்த எடுத்துக்காட்டுக்களில் அகர ஆகாரப் பிரிவுகளில் குறிக்கப் பெற்றுள்ள பெயரெச்சத் தொடர்கள் ஒரே பொருண்மையை உணர்த்தும் மாறுபட்ட தொடரனியல் அமைப்புக்களாக நிகழ்வதைக் காணலாம். (ஆ) பிரிவில் பெயரெச்சத் தொடரில்

வலப்புறமாக நிகழும் தலைமைப் பெயர் அகரப் பிரிவில் இடப் புறமாக நகர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலைகொள்கிறது. ஒரு பெயர்த் தொடருக்குள் நிகழும் இத்தகைய நிகழ்ச்சியானது அகப் பெயர்ச்சி (Flip Movement) எனப்படும். தலைமைப்பெயர் இடம்பெயர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலை கொள்ளும் போது பெயரெச்சமானது பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த சிறப்பு வினைமுற்றாகத் திரிந்து அமைகிறது. இதனின்றும் மேலே (ஆ) பிரிவில் பொது வினையாக நிகழும் பெயரெச்சமும் அகரப் பிரிவில் சிறப்பு வினையாக நிகழும் பெயரெச்சமும் தொடரனியற் சூழல்களால் கட்டுண்டு துணைநிலை வழக்கில் நிகழ்வதை அறியலாம். இத்தகைய நிகழ்ச்சியானது மரபிலக்கணிகள் பெயரெச்சம் எனச்சுட்டும் வினையையும் வினைமுற்றாகக் கொள்ள வகைசெய்கிறது. இவ்வாறு வினைமுற்றாக இனங் காணப்படும் பெயரெச்சமானது திராவிட மொழிகளில் பொது வினைமுற்றாகக் கொள்ளத்தக்கதாகின்றது.

## 4.0 தெரிநிலையும் குறிப்புமாகிய தலைமைப் பெயர்

4.1 பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயரின் இருவகை நிகழிடம் பற்றிய ஆய்வானது வினைமுற்றுக்கள் பற்றிய மேலும் பல உண்மைகளை அறிந்துகொள்ள வகை செய்கிறது. தலைமைப் பெயரைப் பொறுத்தவரை பெயரெச்சத் தொடரில் அது இடம் பெயர்ந்து எழுவாயாக நிலைகொள்கையில் அதன் நிகழ்ச்சி தெரிநிலையாகவும் குறிப்பாகவும் அறியப்படும். மேலே(7) முதல் (13) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் அமைந்த பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரின் நிகழ்ச்சியானது தெரி நிலையாக, அதாவது வெளிப்படையாகக் காணப்படுகிறது. தலைமைப்பெயரின் நிகழ்ச்சியானது அதாவது வெளிப்படையாக இல்லாத நிலையில் சிறப்பு வினைமுற்றின் துணைகொண்டு தலைமைப்பெயர் இன்னது என்று கண்டறியலாம். தலைமைப் பெயர் எழுவாய் நிகழும் இடத்தில் நிலை கொள்ளும் போது அமையும் வினைமுற்றானது தன்மை இடத்ததாகவோ முன்னிலை இடத்ததாகவோ அறியப்பட்டால் தலைமைப்பெயரை இனங் காண்பதில் இடர்ப்பாடு ஏதுமில்லை. ஆனால், அந்த வினை முற்றானது ஐம்பால் பிரிவைச் சார்ந்ததாயின் தலைமை பெயரானது இன்ன பாலுக்கு உரியது என்ற அளவில்தான் அதனை இனங்காண முடியும். ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம். *கெடுவான் கேடு நினைப்பான்* என்ற பழ மொழி வாக்கியத்தில் *கேடு நினைப்பான்* (=கேடு நினைப்பவன்) என்பது ஒரு பெயரெச்சத் தொடராகும். *நினைப்பான்* என்பது

ஆண்பால் வினையாகலின் தலைமைப் பெயரானது ஆண்பாற் பெயராக இனங்காணப்படும். தலைமைப் பெயர் இன்னது என்று அறியப்படாத நிலையில் ஆண்பால் என்ற குறிப்பைக் கொண்டு தலைமைப் பெயரை *ஒருவன்* என்று குறிக்கலாம். இதன் அடிப்படையில் **கேடு நினைக்கும் ஒருவன்* என்ற பெயரெச்சத் தொடரை மீட்டுருவாக்கம் செய்யலாம். இதில் தலைமைப் பெயராக நிகழும் *ஒருவன்* என்பது இடம் பெயர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலை கொள்கையில், *நினைக்கும்* என்ற பெயரெச்சப் பொது வினைமுற்றானது *நினைப்பான்* என்ற பெயரெச்சச் சிறப்பு வினைமுற்றாகத் திரிந்தமைகிறது. இந்த மாற்றங்களைத் தொடர்ந்து *கேடு நினைக்கும் ஒருவன்* என்ற பெயரெச்சத் தொடரானது **ஒருவன் கேடு நினைப்பான்* என்று திரிந்தமைகிறது. இறுதியில் *ஒருவன்* என்னும் தலைமைப் பெயர் தவிர்க்கப்பட்டு *கேடு நினைப்பான்* என்ற பெயரெச்சத் தொடர் தோற்றம் கொள்கிறது. *கேடு நினைப்பான்* என்பதும் *கேடு நினைப்பவன்* என்பதும் ஒரு நிகரனவாதலின் *நினைப்பவன்* என்னும் வினையாலணையும் பெயர் வினைமுற்றாகவும், *நினைப்பான்* என்னும் வினைமுற்று வினையாலணையும் பெயராகவும் இவை இரண்டனொடும் தொடரனியல் நிலையில் தொடர்புடைய *நினைக்கும்* என்ற பெயரெச்சமானது வினைமுற்றாகவும் வினையாலணையும் பெயராகவும் கொள்ளத்தக்கனவாகின்றன. தலைமைப் பெயரைக் குறிப்பாக அறியும் வகையில் அமைந்த பெயரெச்சத் தொடர்கள் பற்றிய ஆய்வைத் தொடர்வதற்கு முன், தலைமைப் பெயர் எழுவாயாய் நிகழும் இடத்தில் நிலை கொள்கையில் அமையும் சிறப்பு வினைமுற்று வகைகளைப் பற்றி இங்கே சிந்திக்கலாம்.

## 5.0 பெயரைத் தழுவும் சிறப்புப் பெயரெச்சங்கள்

5.1 *[கோவலனைப் பிரிந்த மாதவி] துறவு பூண்டாள்* என்ற வாக்கிய அமைப்பில் காணப்படும் பெயரெச்சத் தொடரைக் கருத்தில் கொள்க. இந்தப் பெயரெச்சத் தொடரில் நிகழும் *மாதவி* என்னும் தலைமைப் பெயரானது எழுவாய் நிகழும் இடத்தில் நிலைகொள்கையில் *கோவலனைப் பிரிந்த மாதவி* என்ற பெயரெச்சத் தொடரானது *மாதவி கோவலனைப் பிரிந்தாள்/ பிரிந்தோள்/பிரிந்தவள்/பிரிந்திசினோள்* என்று பலவகை வினைமுற்றுக்களைக் கொண்டதாக அமையும். இவ்வாறு அமைந்த பெயரெச்சத் தொடர்களைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் அகரப் பிரிவில் காணலாம்.

14 (அ) நீயார் மகனையெம் பற்றியோயே (ஐங். 79)
(ஆ) [எம்மைப்பற்றிய நீ] யார் மகனை?
(இ) பற்றியோய் (அ) /பற்றிய (ஆ)

15 (அ) யாரை நீ என்பின் வருவோய் (சிலம்பு.23.19)
(ஆ) [என்பின் வரும் நீ] யாரை?
(இ) வருவோய் (அ) /வரும் (ஆ)

16 (அ) நீவா ழியர் நின் தந்தை
தாய்வா ழியர் நிற் பயந்திசினோரே (புறம். 137.14, 15)
(ஆ) [நிற்பயந்த நின் தந்தை தாய்] வாழியர்
(இ) பயந்திசினோர் (அ) /பயந்த (ஆ)

17 (அ) நாஞ்சிற் பொருநன், மடவன் மன்ற
பெருங்களிறு நல்கி யோனே (புறம். 140.1, 2, 8)
(ஆ) [பெருங்களிறு நல்கிய நாஞ்சிற் பொருநன்] மடவன் மன்ற
(இ) நல்கியோன் (அ) /நல்கிய (ஆ)

18 (அ) அமுதம் உண்கநம் அயலி லாட்டி
பெருமலை நாடனை வரூஉம்என் றோளே (நற். 65.1,9)
(ஆ) [பெருமலை நாடனை வரூஉம் என்ற நம்
அயலிலாட்டி] அமுதம் உண்க
(இ) என்றோள் (அ) /என்ற (ஆ)

19 (அ) .......... குன்ற நாடன்
இல்வந்து நின்றோற் கண்டனள் அன்னை
வல்லே என்முகம் நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே (அகம். 248.10, 14-16)
(ஆ) [இல்வந்து நின்ற குன்ற நாடனை] அன்னை கண்டு-
(இ) நின்றோன் (அ) /நின்ற (ஆ)

20 (அ) நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்று
ஆற்றா ராயினும் ஆண்டுவாழ் வோரே (புறம். 26.16-18)
(ஆ) [ஆண்டு வாழும் நின்பகைவர்] நோற்றோர் மன்ற
(இ) வாழ்வோர் (அ) / வாழும் (ஆ)

21 (அ) முதியோள்,
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ (புறம். 278.2, 7, 8)
(ஆ) [செங்களந் துழவும் முதியோள்] படுமகன் கிடக்கை காணூஉ
(இ) துழவுவோள் (அ) / துழவும் (ஆ)

இந்த எட்டு எடுத்துக்காட்டுகளிலும் அகர ஆகாரப் பிரிவுகளில் காணப்படும் இருவகைப் பெயரெச்சத் தொடர்களில் நிகழும் இரு

வகைப் பெயரெச்சங்கள் இகரப்பிரிவில் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் அகரப் பிரிவில் அமைந்த பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றுக்களின் ஆகார இயைபு விகுதிகள் ஓகார விகுதிகளாகத் திரிந்து நிகழ்வதைக் காணலாம். இதனின்றும் எடுத்துக்காட்டாக, *வந்தான்* என்பதும் *வந்தோன்* என்பதும் ஒரு நிகரன என்ற உண்மை பெறப்படுகின்றது. *வந்தோன்* மற்றும் *வந்தவன்* ஆகியவை ஒரு நிகரன என்பதும் தெளியப்பட்ட உண்மையாகும். இதனின்றும் *வந்தான், வந்தோன், வந்தவன், வந்த* ஆகிய வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாகக் கொள்ளத்தக்கவையாகின்றன.

## 6.0 தலைமைப்பெயர் மீட்பு

*6.1* பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் அகரப் பிரிவில் நிகழும் பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயர் வெளிப்படையாகக் குறிக்கப்படவில்லை. ஆயினும், தலைமைப்பெயரைத் தழுவி நிற்கும் தன்மை, முன்னிலை வினைகளின் துணைகொண்டு தலைமைப் பெயரானது தன்மை அல்லது முன்னிலை இடத்தது என்று அறுதியிட்டுக் கூறமுடியும்.

*22 (அ)* விரிபூங் கானல் ஒருசிறை நின்றோய்
யாரை யோநிற் றொழுதனம் வினவுதும் *(நற். 155.3, 4)*
*(ஆ)* [* (நீ) விரிபூங் கானல் ஒருசிறை நின்றோய்] யாரையோ?
*(இ)* [விரிபூங் கானல் ஒருசிறை நின்ற நீ] யாரையோ?

*23 (அ)* வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே *(நற். 34.9-11)*
*(ஆ)* [* (நீ) வெறிமனை வந்தோய்] மடவை மன்ற
*(இ)* [வெறிமனை வந்த நீ] மடவை மன்ற

*24 (அ)* நோவினி வாழிய நெஞ்சே...
குறுமகள்
சின்மொழித் துவர்வாய் நகைக்குமகிழ்ந் தோயே *(நற். 190.1, 8, 9)*
*(ஆ)* [* (நீ) சின்மொழித் துவர்வாய் நகைக்கு மகிழ்ந்
தோய்] வாழிய நெஞ்சே
*(இ)* [சின்மொழித் துவர்வாய் நகைக்கு மகிழ்ந்த நீ] வாழிய நெஞ்சே

*25 (அ)* ஊரீர் போலச் சுரத்திடை இருந்தனிர் யாரீரோ...*(புறம். 141.4, 5)*
*(ஆ)* [* (நீவிர்) சுரத்திடை இருந்தனிர்] யாரீர்
*(இ)* [சுரத்திடை இருந்த நீவிர்] யாரீர்

26 (அ) மலை வேங்கை நறுநிழலின் வள்ளி போல்வீர்
முலையிழந்து வந்துநின்றீர் யாவிரோ (சிலம்பு. 24.1.3, 4)
(ஆ) [* (நீவிர்) முலையிழந்து வந்து நின்றீர்] யாவிர்
(இ) [முலையிழந்து வந்து நின்ற நீவிர்] யாவிர்

27 (அ) மயங்குவேன் முன்னரோர் மாதெய்வந் தோன்றி (மணி. 28.192)
(ஆ) [* (யான்) மயங்குவேன்] முன்னரோர் மாதெய்வந் தோன்றி
(இ) [மயங்கும் என்] முன்னரோர் மாதெய்வந் தோன்றி

28 (அ) வல்வில் வேட்டுவன்,
தொழுதனன் எழுவேற் கைகவித் திரீஇ (புறம். 150.7, 8)
(ஆ) [* (யான்) (தொழுதனன்) எழுவேனை]...
(இ) [ (தொழுதனன்) எழும் என்னை]...

29 (அ) அருவியாடியும் சுனைகுடைந்தும் அலவுற்று வருவேம் முன்
(சிலம்பு. 24.1, 2)
(ஆ) [* (யாம்)... அலவுற்று வருவேம்] முன்...
(இ) [அலவுற்று வரும் எம்] முன்...

30 (அ) கோனாகி யான் எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே
(திருவா. திருச். 19)
(ஆ) [* (நீ)... நின்றாயை] என் சொல்லி வாழ்த்துவனே
(இ) [... நின்ற உன்னை] என் சொல்லி வாழ்த்துவனே

31 (அ) சிறையிருந் தேனையப் புனிதன் தீண்டுமோ (க.ரா. 5238)
(ஆ) [* (யான்)சிறையிருந் தேனை] அப்புனிதன் தீண்டுமோ
(இ) [* சிறையிருந்த என்னை] அப் புனிதன் தீண்டுமோ

32 (அ) யாரீ ரோவெம் விலங்கி யீஇர் (அகம். 390.14)
(ஆ) [* (நீவிர்) (எம்) விலங்கியீர்] யாரீர்?
(இ) [எம் விலங்கிய நீவிர்] யாரீர்?

இந்தப் பதினோரு எடுத்துக்காட்டுக்களிலும் அகரப்பிரிவில் தலைமைப் பெயரைத் தழுவும் தன்மை, முன்னிலைச் சிறப்பு வினைமுற்றுக் களைச் சான்றாகக் கொண்டு (ஆ) பிரிவில் பொருத்தமான தன்மை, முன்னிலை இடத்தனவாகிய தலைமைப் பெயர்கள் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ளன. (ஆ) பிரிவில் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ள பெயரெச்சத் தொடர்களும் (இ) பிரிவில் குறிக்கப் பெற்றுள்ள பெயரெச்சத் தொடர்களும் ஒரு நிகரனவாகும். தலைமைப் பெயர் இன்றியும் பெயரெச்சத் தொடர்கள் அமையவல்லன என்பதை (22) முதல் (32) வரையுள்ள பதினோரு எடுத்துக்காட்டுக்களும் தெளிவுபடுத்துகின்றன. ஆயினும், இத்தகைய பெயரெச்சத் தொடர்களில் நிகழும் தலைமைப் பெயர்கள் அகரப்பிரிவில் காணப்படும் சிறப்புப் பெயரெச்சங்

களின் துணைகொண்டு அறியற்பாலனவாகும். மேலே (ஆ) பிரிவில் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ள பெயரெச்சத் தொடர்கள் ஏற்புடையவை என்பதை (14) முதல் (21) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் அகரப்பிரிவில் அமைந்துள்ள பெயரெச்சத் தொடர்கள் உறுதிப்படுத்துகின்றன.

## 7.0 அன்றுபோல் இன்றும்; ஆனால் ஒரு வேறுபாடு

7.1 இக்காலத் தமிழிலும் பெயரெச்சத் தொடர்களில் நிகழும் தலைமைப்பெயர் இடம் பெயர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலைகொள்ளும் போக்கு இயல்பாகக் காணப்படுகிறது. ஒரு குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில் அன்றும் சரி இன்றும் சரி இடம் பெயரும் தலைமைப் பெயரும் பெயரெச்சமும் எழுவாய்-பயனிலை இலக்கண உறவையே கொண்டுள்ளன. தலைமைப் பெயர் இடம்பெயர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலை கொள்வதற்கு இந்த இலக்கண உறவும் ஒரு காரணமாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

33 (அ) [பேச்சி பூட்டைத்திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவள்] கதவைச் சாத்தித் தாழிட்டுக் கொண்டாள் (விட்டல்ராவ் 1977.64)
(ஆ) [பூட்டைத்திறந்து கொண்டு உள்ளே நுழைந்த பேச்சி]...

34 (அ) [சவுரி முதலில் மறுத்தவன்] ஏதோ நினைத்துக்கொண்டு கிளம்பிவிட்டான் (இமையம் 1994. 51)
(ஆ) [முதலில் மறுத்த சவுரி]...

35 (அ) [பெரியான் அங்கு வந்தவன்] விஷயமறிந்து ஆரோக்கியத்தை மடக்கிப் பேசி ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தான். (இமையம் 1994. 87)
(ஆ) [அங்கு வந்த பெரியான்]...

36 (அ) யார் [அந்த வீரன், (அனாயாசமாகத் தன்னையும் தனது வீரர்களையும் சாய்த்துவிட்டு) இளவரசியை மீட்டவன்] (விஷ்வக்கேசன் 1994. 5)
(ஆ) (அனாயாசமாகத் தன்னையும் தனது வீரர்களையும் சாய்த்துவிட்டு) [இளவரசியை மீட்ட அந்த வீரன்] யார்

இந்த நான்கு எடுத்துக்காட்டுக்களிலும் அகரப்பிரிவில் பகர அடைப்புக்குள் காணப்படும் பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரானது எழுவாய் நிகழும் இடத்தில் நிலை கொண்டுள்ள தானது பழந்தமிழ் மற்றும் இடைக்காலத் தமிழின் தொடர்ச்சி

யாகும். ஒரு வேறுபாடு என்னவெனில் இத்தகைய பெயரெச்சத் தொடர்களில் தலைமைப்பெயரைத் தழுவி நிற்கும் வினைமுற்றுக்கள் செய்தவன், செய்தவள் முதலான வாய்பாட்டினவாகவே இக்காலத் தமிழில் அமைகின்றன. பழந்தமிழ்ப் பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரைத் தழுவி நிற்கும் செய்தான், செய்தோன் முதலான வாய்பாட்டுச் சிறப்பு வினை முற்றுக்களின் இன்னொரு வகையே இக்காலப் பெயரெச்சத் தொடர்களில் காணப்படும் செய்தவன், செய்தவள் முதலான வாய்பாட்டுச் சிறப்பு வினைமுற்றுக் களாகும். இத்தகைய வினைமுற்றுக்களையே மரபிலக்கணிகள் வினையாலணையும் பெயர் எனக் குறிப்பிட்டு செய்தான், செய்தாள் முதலிய வினைமுற்றுக்களினின்றும் தனிமைப்படுத்தினர். இது ஒரு தவறான, ஏற்றுக்கொள்ள முடியாத, உண்மைக்கு மாறான நிலைப்பாடாகும். உண்மை என்னவெனில், வினையாலணையும் பெயர்கள் என மரபிலக்கணிகள் குறிக்கும் வினைகள் அனைத்தும் பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயரானது எழுவாய் நிகழும் இடத்தில் நிலைகொள்ளும்போது அதனைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றுகளேயாகும்.[2] கவை வாக்கியங்களில் நிகழும் செய்தவன், செய்தவள் முதலான வாய்பாட்டு வினை முற்றுக்கள் இதற்கு விதிவிலக்கானவையாகும். ஆயினும், இங்கும் கூடச் செய்தவன், செய்தவள் முதலான வாய்பாட்டு வினைமுற்றுக்கள் செய்தான், செய்தாள் முதலான வாய்பாட்டு வினைகளுடன் துணை நிலை வழக்கில் நிகழ்பவை என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். எ-டு. *முருகன் வள்ளியை மணந்தான்* (இயல்பு வாக்கியம்), *வள்ளியை மணந்தவன் முருகன்* (கவை வாக்கியம்). எடுத்துக் காட்டுக்கள் *(33)* முதல் *(36)* வரையுள்ளவற்றில் தலைமைப்

---

2. பெயரெச்சத் தொடரனில் தலைமைப் பெயரின் இடப்பெயர்ச்சி, அதன் விளைவாகப் பெயரெச்ச வினை வடிவம் மாறுபடுதல், வினையாலணையும் பெயர் விளக்கம் ஆகியவை தொடர்பான இந்த ஆய்வில் ஒரு சிக்கலைத் தீர்த்தாக வேண்டும். *முருகன் வள்ளியை மணந்தான்* என்ற வாக்கியமும் *முருகன் வள்ளியை மணந்தவன்* என்ற வாக்கியமும் தொடரனியல் அடிப்படையில் தொடர்புள்ள வாக்கியங்கள் (Syntactically Related Sentences) ஆகும். *முருகன் வள்ளியை மணந்தான்* என்ற வாக்கியத்தின் கவை வடிவம் (Cleft Version) *வள்ளியை மணந்தவன் முருகன்* என்று அமையும். இந்த வாக்கியம் *வள்ளியை மணந்தது முருகன்* என்றும் நிகழும். இந்த வாக்கியத்தில் காணப்படும் *மணந்தது* என்ற வினையானது பொது வினைமுற்றாகும். கவை வாக்கியத்தில் நிகழும் *மணந்தவன்* என்பதும் அதன் தாய் வாக்கியத்தில் நிகழும் மணந்தான் என்பதும் துணைநிலை வழக்கில் நிகழ்வனவாகும். *வள்ளியை மணந்தவன் முருகன்* என்ற கவை வாக்கியத்தின் பயனிலையாகிய (?) *முருகன்* என்ற உறுப்பானது எழுவாய் நிலைக்கு மாறுகையில் *முருகன் வள்ளியை மணந்தவன்* என்ற வாக்கியம் தோற்றம் கொள்கிறது. இந்தக் காரணங்களால் மேற்படி வாக்கியத்தில் நிகழும் *மணந்தவன்* என்பதைப் பெயரெச்சத் தொடரனின் உறுப்பாகக் கொள்ள முடியாது.

பெயரைத் தழுவி நிற்கும் *நுழைந்தவன்/நுழைந்த, மறுத்தவன்/மறுத்த, வந்தவன்/வந்த, மீட்டவன்/மீட்ட* ஆகிய இணை வினைகள் துணை நிலை வழக்கில் நிகழ்கின்றன. இந்த வழக்கு நிலையானது வினையாலணையும் பெயர் என மரபிலக்கணிகள் சுட்டும் வினை வடிவங்களை வினைமுற்றுக்களின் ஒரு வகையாகக் கொள்ள வகை செய்கிறது. அத்துடன் மரபிலக்கணிகள் சுட்டும் பெயரெச்சங்களையும் ஒருவகைப் பொது வினைமுற்றுக்களாகக் கொள்ளவும் இந்த வழக்கு நிலை துணைபுரிகின்றது.

## 8.0 உரை நிகழ் சூழல் ஒரு தடயம்

8.1 உயர்திணை மற்றும் அஃறிணைத் தலைமைப் பெயர்கள் பெயரெச்சத் தொடர்களில் தெரிநிலையாக அமையாத நிலையில் உரைநிகழ்சூழலின் (Discourse Context) பின்னணியில் அவற்றை மீட்க முடியும். இத்தகைய மீட்சிக்குத் தலைமைப்பெயர் எழுவாயாக நிலைகொள்ளும் பெயரெச்சத் தொடர்களில் நிகழும் சிறப்பு வினைமுற்றுக்கள் ஓரளவுக்குத் துணைபுரிகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(37) நன்மாண் ஆகம் புலம்பத் துறந்தோர்
அருளிலர்... (அகம். 247.2, 3)

(38) அருளிலர்,
கோடுயர் பிறங்கல் மலையிறந் தோரே (அகம். 247.3, 13)

அகத்துறைப் பின்னணியில் அமைந்த இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *துறந்தோர், இறந்தோர்* (= கடந்தோர்) ஆகிய வினைமுற்றுக்கள் பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரைத் தழுவி நிற்பவையாகும். ஆனால் தலைமைப்பெயர் இன்னதெனத் தெரியாத நிலையில் வினைமுற்றின் துணை கொண்டு அது உயர்திணைக்குரியது என்று மட்டுமே கண்டறிய முடியும். ஆயினும், உரைநிகழ் சூழலையும் கருத்தில் கொண்டால் மேலே குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக்காட்டுக்களில் உள்ள பெயரெச்சத் தொடரின் தலைமைப் பெயரைத் *தலைவர்* அல்லது *காதலர்* என்று துணியலாம். இதனைக் கருத்தில் கொண்டு *துறந்தோர், இறந்தோர்* ஆகியவை நிகழும் பெயரெச்சத் தொடர்களைப் பின்வருமாறு மீட்டுருவாக்கம் செய்யமுடியும்.

39 (அ) [*தலைவர்/*காதலர் (ஆகம் புலம்பத்) துறந்தோர்] அருளிலர்
(ஆ) [ஆகம் புலம்பத் துறந்த தலைவர்/காதலர்] அருளிலர்

40 (அ) [*தலைவர்/*காதலர் மலையிறந்தோர்] அருளிலர்
(ஆ) [மலையிறந்த தலைவர்/காதலர்] அருளிலர்

82 தலைமைப் பெயரைத் தெற்றென அறியமுடியாத நிலையில் அதனைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றின் துணைகொண்டு தலைமைப் பெயர் இன்ன பாலுக்குரியது என்பதைக் கண்டறிய முடியும். *கெடுவான் கேடு நினைப்பான்* என்பதில் நிகழும் *கேடு நினைப்பான்* என்ற பெயரெச்சத் தொடரின்மீது முன்னதாக நிகழ்த்தப்பெற்ற ஆய்வானது இங்கே நினைவுகூரத் தக்கதாகும். தலைமைப் பெயரின் பகுதி மீட்சியினை (Partial Recovery) விளக்கு வதற்குப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

(41) கல்யாணியை மணந்தவன் அவளைக் கைவிட்டான்.

(42) காலையில் வேலைக்குச் சென்றவள் இன்னும் வீடு திரும்பவில்லை.

(43) அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவர் தமிழ்ப் பெண்ணை மணந்தார்.

இந்த மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *மணந்தவன், சென்றவள், (பிறந்து) வளர்ந்தவர்* ஆகியவை பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றுக்களாகும். ஆனால், இவை தழுவி நிற்கும் தலைமைப் பெயர்கள் இன்னவை என்பதை முழுமையாகக் கண்டறிய முடியவில்லை. இந்த நிலையில் மேலே குறிப்பிட்ட சிறப்பு வினைமுற்றுக்களின் துணைகொண்டு தலைமைப் பெயர்களின் ஒரு பகுதியை மீட்கமுடியும். இத்தகைய மீட்சியானது கீழே குறிக்கப் பெற்றுள்ள பெயரெச்சத் தொடர்களில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

44(அ) [[+பெயர், +ஆண்பால்] + கல்யாணியை மணந்தவன்]

(ஆ) [கல்யாணியை மணந்த + [+பெயர், +ஆண்பால்]]...

45(அ) [[+பெயர், -ஆண்பால்] +காலையில் வேலைக்குச் சென்றவள்]...

(ஆ) [காலையில் வேலைக்குச் சென்ற + [+பெயர், -ஆண்பால்]]...

46(அ) [+பெயர், +உயர்வு, +ஆண்பால்] +அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவர்]...

(ஆ) [அமெரிக்காவில் பிறந்து வளர்ந்த + [+பெயர், +உயர்வு, +ஆண்பால்]]...

உயர்திணையில் தலைமைப்பெயர் முற்றிலுமாக இனங்காணப்பட முடியாத நிலையில் ஆண்பாலாயின் *ஒருவன்* என்றும், பெண் பாலாயின் *ஒருத்தி* என்றும், உயர்பாலாயின் *ஒருவர்* என்றும் தலைமைப் பெயரைக் குறிப்பிடலாம். தெளிவு கருதி எடுத்துக் காட்டுக்கள் (40) முதல் (42) வரையுள்ள இருவகைப் பெயரெச்சங் களின் தலைமைப் பெயர்களை முறையே *அமுதன், சுந்தரி, வில்சன்* எனக் கற்பிதமாகக் கொண்டு அவற்றில் நிகழும் பெயரெச்சத் தொடர்களைப் பின்வருமாறு அமைக்கலாம்.

47 (அ) [அமுதன் கல்யாணியை மணந்தவன்] அவளைக் கைவிட்டான்
(ஆ) [கல்யாணியை மணந்த அமுதன்] அவளைக் கைவிட்டான்

48(அ) [சுந்தரி காலையில் வேலைக்குச் சென்றவள்] இன்னும் வீடு திரும்பவில்லை
(ஆ) [காலையில் வேலைக்குச் சென்ற சுந்தரி] இன்னும் வீடு திரும்பவில்லை

49(அ) [வில்சன் அமெரிக்காவில் பிறந்து வளந்தவர்] தமிழ்ப்பெண்ணை மணந்தார்
(ஆ) [அமெரிக்காவில் பிறந்து வளர்ந்த வில்சன்] தமிழ்ப் பெண்ணை மணந்தார்

ஆயினும், பொதுக்கூற்றாக அமையும் *எய்தவன் இருக்க அம்பை நோவான் ஏன், கெடுவான் கேடு நினைப்பான்* முதலான வாக்கியங்களில் நிகழும் *எய்தவன், கேடு நினைப்பான்* ஆகிய பெயரெச்சத் தொடர்களின் தலைமைப் பெயர்களை (43)-இல் உள்ளதுபோல்தான் இனங்காண முடியும். இத்தகைய பெயரெச்சத் தொடர்களின் தலைமைபெயரை *ஒருவன்* என்று பொதுவாகச் சுட்டுவதும் மரபாகும்.

## 9.0 தலைமைப் பெயரின் வீழ்ச்சியும் மீட்சியும்

9.1 உயர்திணை மற்றும் அஃறிணைத் தலைமைப் பெயர்கள் பெயரெச்சத் தொடர்களில் தெரிநிலையாக இடம்பெறாத நிலையில் உரைநிகழ்சூழலைக் கொண்டு அவற்றை மீட்கலாம் என்று முன்னர் உணர்த்தப்பட்டது. வினையாலணையும் பெயராகிய சிறப்பு வினைமுற்றானது பெயரெச்சத் தொடரில் தலைமைப்பெயரை இழப்பதற்குக் காரணம் பிந்தியது இடம் பெயர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலைகொள்வதேயாகும். உரை நிகழ் சூழலானது இவ்வாறு வீழ்ந்துபடும் தலைமைப் பெயரைக் கண்டறிய எங்ஙனம் துணைபுரியும் என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டின்மூலம் தெளியலாம்.

(50) மாறவர்மன் கூடத்திலேயே நின்று கொண்டிருந்தான். பிறகு சற்று நேரம் அங்குமிங்குமாக உலவினான். பின் இடதுபக்க அறைக்குள் நுழைந்தவன் கைகளில் மதுவும் குவளையுமாகத் திரும்பினான். கூடத்தின் நடுவில் இருக்கை யொன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தவன் குவளையில் மதுவை ஊற்றி உறிஞ்சத் தொடங்கினான். நிமிர்ந்தவன் கண்களில் அதிர்ச்சி பரவியது
(விஷ்வக்சேனன். 1994: 18)

இந்த எடுத்துக்காட்டில் *நுழைந்தவன், அமர்ந்தவன், நிமிர்ந்தவன்* ஆகியவை பெயரெச்சத் தொடர்களின் தலைமைப் பெயரைத்

தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றுக்களாகும். உரை நிகழ் சூழலைக் கருத்தில் கொண்டு இவற்றின் தலைமைப் பெயரை *மாறவர்மன்* என்று சுட்டலாம். தலைமைப் பெயரும் அதனைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றும் துண்டிக்கப்பட்டு வெவ்வேறு இடங்களில் நிகழ்வதை எடுத்துக்காட்டு (49)-இல் காணலாம். இவ்வாறு துண்டிக்கப்பட்ட உறுப்புக்களை இணைத்துப் பின்வரும் பெயரெச்சத் தொடர்களை மீட்டுருவாக்கம் செய்யலாம்.

51 (அ) [*மாறவர்மன் அறைக்குள் நுழைந்தவன்].....
(ஆ) [அறைக்குள் நுழைந்த மாறவர்மன்].....

52(அ) [*மாறவர்மன் (இருக்கையொன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு) அமர்ந்தவன்]....
(ஆ) [(இருக்கையொன்றை இழுத்துப்போட்டுக் கொண்டு) அமர்ந்த மாறவர்மன்].......

53(அ) [*மாறவர்மன் நிமிர்ந்தவன்] கண்களில்......
(ஆ) [நிமிர்ந்த மாறவர்மன்] கண்களில்......

வினையாலணையும் பெயர்களாகிய வினைமுற்றுக்கள் தனிமைப் படுத்தப்பட்டாலும் அவை பெயரெச்சத் தொடர்களில் நிகழும் தலைமைப் பெயரைத் தழுவி நிற்பவையே என்பதை (49)-இல் நிகழும் *நுழைந்தவன், அமர்ந்தவன், நிமிர்ந்தவன்* ஆகியவற்றின் மீதான ஆய்வு தெளிவுபடுத்துகின்றது. தலைமைப் பெயர் வெளிப்படையாகக் குறிக்கப்படாத நிலையிலும் இதுதான் உண்மை.

9.2 பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயர் துண்டிக்கப் பட்ட நிலையில் அதனைக் கண்டறிந்து பெயரெச்சத் தொடர்களை மீட்டுருவாக்கம் செய்யமுடியும் என்பது எடுத்துக் காட்டு (49) மூலம் உணர்த்தப்பட்டது. இத்தகைய மீட்டுரு வாக்கத்துக்கு உரை நிகழ் சூழல் கருவியாகக் கொள்ளப்பட்டது. இந்த வகையில் மேலும் ஓர் எடுத்துக்காட்டினைக் கருத்தில் கொள்ளலாம். தினமணி கதிர் 17-12-1995 தேதியிட்ட இதழில் 13-ஆம் பக்கத்தில் மலர்விழி எழுதிய *கண்ணை நம்பாதே* என்ற தலைப்பிலான ஒரு பக்கச் சிறுகதையிலிருந்து எடுக்கப்பட்டவை யாகும் பின்வரும் எடுத்துக்காட்டுகள். இந்தக் கதையின் நாயகன் *மாதவன்;* நாயகி *விஹாசினி;* இன்னொரு பாத்திரம் ஆபீஸ் *மானேஜர்*. பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் இந்த மூன்று பாத்திரங்களும் தலைமைப் பெயருக்கு உரியவை ஆகின்றன. அடைப்புக் குறிகளுக்குள் இருப்பவை தெளிவு கருதி நம்மால் குறிக்கப்பெற்றவையாகும்.

54(அ) ["இளம் மனைவி வீட்டில் தனியாக இருந்தா இந்த மாதிரி தலைவலியெல்லாம் அடிக்கடி வருமே" என்றவர் (= என்ற மேனேஜர்)] நமுட்டுச் சிரிப்புடன் அனுமதி வழங்கினார்.

(ஆ) [மேனேஜர் + வாக்கியம் + என்றவர்]...... அனுமதி வழங்கினார்.

(இ) [வாக்கியம் + என்ற மானேஜர்]......

55(அ) [விஹாசினியிடம் விஷயத்தைச் சொல்ல நினைத்தவன்] (= நினைத்த மாதவன்) 'சட்' டென நின்றான்.

(ஆ) [மாதவன் விஹாசினியிடம் விஷயத்தைச் சொல்ல நினைத்தவன்]_

(இ) [விஹாசினியிடம் விஷயத்தைச் சொல்ல நினைத்த மாதவன்].....

56(அ) [காலிங்பெல்லை அழுத்தப் போனவன் (=அழுத்தப் போன மாதவன்)] திடுக்கிட்டான்

(ஆ) [மாதவன் காலிங்பெல்லை அழுத்தப் போனவன்] திடுக்கிட்டான்

(இ) [காலிங்பெல்லை அழுத்தப் போன மாதவன்] திடுக்கிட்டான்

57(அ) [கதவைத் திறந்தவள் (கதவைத் திறந்த விஹாசினி)] கணவனைக் கண்டதும் பதறினாள்

(ஆ) [விஹாசினி கதவைத் திறந்தவள்] கணவனைக் கண்டதும் பதறினாள்

(இ) [கதவைத் திறந்த விஹாசினி] கணவனைக் கண்டதும் பதறினாள்.

58(அ) [கதவைத் திறக்க முற்பட்டவனை (=முற்பட்ட மாதவனைத்)] தடுத்து நிறுத்தினாள் விஹாசினி

(ஆ) [மாதவன் கதவைத் திறக்க முற்பட்டவனைத்] தடுத்து நிறுத்தினாள் விஹாசினி

(இ) [கதவைத் திறக்க முற்பட்ட மாதவனைத்] தடுத்து நிறுத்தினாள் விஹாசினி

59(அ) [ஆள்காட்டி விரலை உதட்டின் மேல் வைத்தவள் (=உதட்டின் மேல் வைத்த விஹாசினி)] மாதவனைத் தள்ளிக்கொண்டு ஹாலுக்குள் வந்தாள்

(ஆ) [விஹாசினி ஆள்காட்டி விரலை உதட்டின் மேல் வைத்தவள்] மாதவனைத் தள்ளிக் கொண்டு ஹாலுக்குள் வந்தாள்.

(இ) [ஆள்காட்டி விரலை உதட்டின் மேல் வைத்த விஹாசினி] மாதவனைத் தள்ளிக் கொண்டு ஹாலுக்குள் வந்தாள்

மேலே அகரப் பிரிவில் தலைமைப் பெயரும் அதனைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றுக்களும் துண்டிக்கப்பட்டுள்ளன. உரை நிகழ் சூழலைக் கருத்தில் கொண்டு (ஆ) பிரிவில் பெயரெச்சத் தொடர்கள் தலைமைப் பெயருடன் மீட்டுருவாக்கம் செய்யப் பட்டுள்ளன. மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட பெயரெச்சத் தொடர்களின் தொடரனியல் தொடர்பிலான இயல்பான பெயரெச்சத் தொடர்கள் (Syntactically Related Unmarked Relative Clause Constructions) இகரப் பிரிவில் குறிக்கப்பெற்றுள்ளன. இதனின்றும் வினையாலணையும் பெயர் என்பது பெயரெச்சத் தொடரின் ஒருங்கிணைந்த உறுப்பு என்பதும், தலைமைப்

பெயரும் அதனைத் தழுவி நிற்கும் சிறப்பு வினைமுற்றும் இடையீடுபட்டும் நிகழலாம் என்பதும் புலனாகின்றன.

## 10.0 இறவாக்கால்ப் பெயரெச்சங்கள்

10.1 தமிழில் செய்த, செய்கின்ற, செய்யும், செயல், செய்தல் முதலான வாய்பாட்டு வினைமுற்றுக்கள் பெயரெச்சத் தொடர்களில் வலப்புறமாக நிகழும் தலைமைப் பெயரைத் தழுவி நிற்கின்றன. இவற்றுள் செய்த, செய்கின்ற வாய்பாட்டுவினைகள் தனிவாக்கியங்களில் பயனிலையாக நிகழ்வதில்லை. ஏனையவை பெயரெச்சமாக மட்டுமின்றிப் பயனிலையாகவும் நிகழவல்லவை யாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

60(அ) உருபியல் நிலையும் மொழி (தொல். எழுத்து. இளம். 295)
(ஆ) சார்ந்து வரல் மரபு (தொல். எழுத்து. 01)
(இ) முயங்கல் விருப்பு (அகம். 86.23)
(ஈ) தினற் பொருட்டு (குறள். 256)
(உ) உண்டல் வேட்கை (மணி. 17.35)
(ஊ) காண்டல் விருப்பு (பதி. 12.10)
(எ) நகுதற் பொருட்டு (குறள். 784)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *நிலையும், வரல், முயங்கல், தினல், உண்டல், காண்டல், நகுதல்* ஆகியவை பெயரெச்சமாகச் செயல் படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களையும் கருத்தில் கொள்க.

61(அ) பலவற் றிறுதி உருபியல் நிலையும் (தொல். எழுத்து. இளம். 22)
(ஆ) மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் (மேற்படி. 16)
(இ) முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலை
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீடல் ஆவயின் ஆன (மேற்படி. 455)
(ஈ) ழகர வுகரம் நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயின் ஆன (மேற்படி. 262)

இந்த எடுத்துக்காட்டுகளில் செய்யும், செயல், செய்தல் ஆகிய வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் பயனிலையாகச் செயல்படுகின்றன. இதனின்றும் ஓர் உண்மை புலனாகின்றது. பொதுவினைமுற்றுக்கள் தொடரனியற் சூழலுக்கு (Syntactic Context) ஏற்றவாறு எச்சமாகவும் (Modifier) பயனிலையாகவும் செயல்படவில்லை என்பதே அந்த உண்மை. ஆனால், செய்த, செய்கின்ற வாய்பாட்டு வினைகளைப் பொறுத்தவரை இந்த நிலை போற்றப்படவில்லை. இது சற்று விரிவாக ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும்.

10.2 மலயாளத்தில் செய்த (இறப்பு), செய்யுந்ந (நிகழ்வு) ஆகிய வாய்பாட்டுப் பெயரெச்சங்களின் பயனிலை வினைகள் செய்து, செய்யுந்நு வாய்பாட்டினவாகும். இந்தப் பயனிலை வினைகள் பொதுவினைமுற்றுக்களாகும். தமிழில் செய்த, செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்சங்களின் பயனிலை வினைகள் சிறப்பு வினைமுற்றுக்களாக அமைகின்றன. இங்கே ஒரு கோட்பாட்டுச் சிக்கலை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. திராவிட மொழிகளில் சிறப்பு வினைமுற்றுக்களின் தோற்றம் (வரலாற்று நிலையில்) பிந்தியதாகும். அப்படியானால் செய்த, செய்கின்ற வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தமிழில் சிறப்பு வினைமுற்றுக்கள் தோன்றிய பிறகுதான் பெயரெச்சமாகச் செயல்படத் தொடங்கினவா? மலயாளத்தில் செய்த, செய்யுந்ந வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் செய்து, செய்யுந்நு வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றியவையாகலின் தமிழிலும் செய்த, செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் செய்து, செய்கின்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றியனவாதல் வேண்டும். சிறப்பு வினைமுற்றுக்கள் தமிழில் தோற்றம் கொண்ட நிலையில் செய்த, செய்கின்ற வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தொடரனியற் சூழலால் கட்டுண்டு பெயரெச்சமாகவே தொடர்ந்து செயல்படுவதில் எவ்விதக் கோட்பாட்டு இடர்ப்பாடும் நேரிடவில்லை. மலயாளத்தில் செய்த, செய்யுந்ந வாய்பாட்டுப் பெயரெச்சங்களின் பயனிலை வினைகள் செய்து, செய்யுந்நு வாய்பாட்டினவாக அமைவதைக் கருத்தில் கொண்டு தமிழிலும் செய்த, செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்சங்களின் பயனிலை வினைகளைக் கோட்பாட்டு நிலையில் செய்து, செய்கின்று வாய்பாட்டினவாக மீட்டுருவாக்கம் செய்யலாம்.

## 11.0 தமிழிலும் செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள்

11.1 பழந்தமிழில் செய்து வாய்பாட்டுப் பொது வினை முற்றுக்கள் பயனிலையாகச் செயல்படுவதைக் கட்டுண்ட வாக்கிய அமைப்புக்களில் காணலாம். இத்தகைய வாக்கிய அமைப்புகளைச் செய்தென, செய்தாங்கு, செய்தன்ன ஆகிய வாய்பாட்டுத் தொடர்களினின்றும் மீட்டுருவாக்கம் செய்யலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் செய்தென வாய்பாட்டுத் தொடர்கள் நிகழும் அமைப்பு அகரப்பிரிவிலும், அவற்றினின்றும் மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட தனி வாக்கியங்கள் (ஆ) பிரிவிலும் குறிக்கப்பெற்றுள்ளன.

62(அ) இந்நோய்
படுகதில் அம்ம யான்நினக் குரைத்தென (நற். 277.1, 2)

(ஆ) *யான் நினக்கு உரைத்து (=உரைத்தனென்/உரைத்தேன்)

63(அ) புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து அவ்வரித்
திதலை யல்குல் முதுபெண் டாகித்
துஞ்சுதி யோ (மெல் அஞ்சில் ஓதி) (நற். 370.5-7)

(ஆ) * (நீ) புதல்வன் ஈன்று (= ஈன்றனை/ஈன்றாய்)

64(அ) பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே (புறம். 246.13-15)

(ஆ) *பெருந்தோட் கணவன் மாய்ந்து (=மாய்ந்தனன்/மாய்ந்தான்)

65(அ) சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்
மடத்தகை ஆயம் கைதொழு தாஆங்கு (நற். 300.1, 2)

(ஆ) *கோமகள் சினந்து (= சினந்தனள்/சினந்தாள்)

66(அ) தொடியோர் மடிந்தெனத் துறைபுலம் பின்றே (நற். 49.2)

(ஆ) *தொடியோர் மடிந்து (= மடிந்தனர்)

67(அ) சாந்தமை மார்பி னெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர் (புறம். 63.9, 10)

(ஆ) *மார்பில் நெடுவேல் பாய்ந்து (= பாய்ந்தது)

68(அ) அறிவும் உள்ளமும் அவர்வயிற் சென்றென
வறிதால் இகுளையென் யாக்கை (நற். 64.8, 9)

(ஆ) *அறிவும் உள்ளமும் அவர் வயிற்சென்று (= சென்றன)

மேலே குறிப்பிட்டுள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் செய்தென வாய்பாட்டுத் தொடர்கள் காரணத் தொடர்களாகும். இத்தொடர்கள் எழுவாயாக நிகழும் பெயர்நிலைக் கிளவியைப் பொறுத்துப் பலவாறாக விரிந்தமையும். *காதலர் அகன்றெனக் கலங்கி* (நற். 109.2) என்ற எடுத்துக் காட்டின் மூலம் இதனை விளக்கலாம். இந்த எடுத்துக்காட்டுடன் பொருண்மை நிலையில் ஒன்றுபடுவதுடன் தொடரனியல் நிலையிலும் தொடர்புள்ள காரணத் தொடர்கள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

69(அ) காதலர் அகன்றெனக் கலங்கி (நற். 109.2)
(ஆ) காதலர் அகன்றதால் கலங்கி
(இ) காதலர் அகன்றாராகக் கலங்கி
(ஈ) காதலர் அகன்றாராதலால் கலங்கி
(உ) காதலர் அகன்றார். ஆதலால் கலங்கி

இந்த ஐந்து வகையான அமைப்புக்களில் நிகழும் காரண வாக்கியத்தின் எழுவாய் *காதலர்* என்பதாகும். இந்த எழுவாய்க் குரிய பயனிலையாக *அகன்று, அகன்றது, அகன்றார்* ஆகிய வினைமுற்றுக்கள் அமைகின்றன. துணை நிலை வழக்கில் நிகழும் இந்த மூன்று வினைமுற்றுக்களில் *அகன்று* என்பதும் *அகன்றது* என்பதும் பொதுவினைமுற்றுக்களாகும். இவற்றை வினைமுற்றுக் களாகக் கொள்வதற்குக் காரணம் பயனிலையாக நிகழும் *அகன்றார்* என்ற சிறப்பு வினைமுற்றுடன் இவை துணை நிலை வழக்கில் நிகழ்வதேயாகும்.[3] இதனின்றும் செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் பழந்தமிழுக்கு முந்தைய தமிழில் மலயாளத்தில் உள்ளதுபோல் தனிவாக்கியங்களில் பயனிலையாக நிகழ்ந்தன என்பதும், பழந்தமிழில் இத்தகைய தனிவாக்கியங்கள் கட்டுண்ட வாக்கியங்களாக (Bound Sentences) நிகழலாயின என்பதும் பெறப்படுகின்றன.

11.2 செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் தமிழில் கட்டுண்ட வாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படும் நிலையினைக் கருத்தில் கொண்டு பெயரெச்சத் தொடர்களில் நிகழும் செய்த வாய்பாட்டு வினை முற்றுக்கள் தொடக்கத்தில் மலயாளத்தில் உள்ளதுபோல் தனிவாக்கியங்களில் பயனிலையாக நிகழ்ந்த செய்து வாய்பாட்டு வினைமுற்றுக்களோடு துணைநிலை வழக்கில் நிகழ்ந்தனவாகத் துணியலாம். இத்தகைய தனி வாக்கியங்கள் தமிழில் வழக்கற்றுப்போன நிலையில் பெயரெச்சத் தொடர்களில் நிகழும் செய்த வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தனி வாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படும் சிறப்பு வினை முற்றுக்களோடு (எ-டு. செய்தான், செய்தாள், செய்தார் முதலியன) ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் துணைநிலை வழக்கில் நிகழலாயின. தொல்திராவிடத்தில் அல்லது அதற்கு முந்தைய திராவிடத்தில் தனி வாக்கியங்களில் பொதுவினை முற்றுக்கள் பயனிலையாகச் செயல்பட்டன என்பதற்குப் பெயரெச்ச வினைகளே வலுவான சான்றாக அமைகின்றன. தொடக்கத்தில் சிறப்பு வினை முற்றுக்கள் தனிவாக்கியங்களில் பயனிலையாகச் செயல்பட்டிருந் தால் பெயரெச்சவினைகளும் சிறப்பு வினைகளாகவே அமைந் திருக்கும். ஆனால், நிலைமை அதற்கு மாறாக இருப்பதால் சிறப்பு

3. இதேபோல், *தன்மண் காத்தன்று பிறர்மண் கொண்டன்று, என்னெனப் படுமோ நின்மகன் மடிந்தது* (மணி. 23.17, 18) என்ற எடுத்துக்காட்டில் காணப்படும் *காத்தன்று* (= காத்திலன்), *கொண்டன்று* (= கொண்டிலன்) ஆகிய எதிர்மறை வினைமுற்றுக்களில் நிகழும் *காத்து, கொண்டு* ஆகியவையும் இறந்தகாலப் பொது வினைமுற்றுக்களாகும்.

வினைமுற்றுக்களின் தோற்றத்தைப் பிந்தியதாக நாம் கருதுகிறோம். இதனைக் கருத்தில் கொண்டு இனி, செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்சத்தை ஆராயலாம்.

## 12.0 செய்கின்று வாய்பாட்டுப் பொது வினை முற்றுக்கள்

12.1 செய்த வாய்பாட்டுப் பெயரெச்ச வினைகளைப் போலவே செய்கின்ற வாய்பாட்டுப் பெயரெச்ச வினைகளும் தமக்குப் பொருந்திய செய்கின்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக் களுடன் துணைநிலை வழக்கில் நிகழ்வனவாகக் கோட்பாட்டு நிலையில் கருதலாம். ஆனால், வரலாற்று நிலையில் மிகப் பிந்தியதாகிய செய்கின்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள் தமிழில் தனி வாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படும் நிலை காணப்படவில்லை. இடைக்காலத்தமிழில் குறிப்பாக நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரங்களிலும், திருமங்கை யாழ்வாரின் பாசுரங்களிலும், கொங்குவேளிர் பெருங்கதையிலும், சுந்தரர் தேவாரத்திலும் செய்கின்று வாய்பாட்டு வினைமுற்றுக் களின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. (மு. இராக வையங்கார் 1964:304-307). இறையனார் களவியலுக்கு அமைந்த நக்கீரர் உரையில் செய்கின்று வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியானது பின்வரும் வாக்கிய அமைப்புக்களில் காணப்படுகின்றது (மு. இராகவையங்கார் 1964:305).

(70) தவளைப் பாய்த்து என்பது, தவளைப் பாய்கின்று
இடைநிலங் கிடப்பப் பாய்வதுபோல

(71) பருந்தின் வீழ்க்காடு என்பது, பருந்து வீழ்கின்று நடுவே
வீழ்ந்து தான் கருதின பொருள் கொண்டுபோம்

(72) குழவி அழுகின்று எனக்குப்பால் தம்மின் நீராட்டுமின்
என்றழாது தூக்கம் வந்ததாக அழும்.

(73) (தலைமகன்) இவளுழைச் செல்கின்று ஆயங்கள்
ஐயுறாவோ எனின்

(74) ஓதல் காவல்...... முதலியவற்றுக்குப் பிரிகின்று தலை
மகளும் தோழியும் அறியச் சொல்லிப் பிரியவும் உரியன்

இந்த ஐந்து எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் செய்கின்று வாய்பாட்டு வினைகளை நுணுகி ஆராய்ந்த இராகவையங்கார் இவ்வினைகள் செயின், செய வாய்பாட்டு வினைகளுடன் பொருந்துவனவாகக் கருதுவார். இவ்வினைகளைப் பற்றி மேலும் குறிப்பிடுகையில் "அறியாமையால் *பாய்கின்று, அழுகின்று* முதலியவற்றைப் *பாய்கின்றுழி, அழுகின்றுழி* என்றிவ்வாறே

திருத்திக் களவியலுரையைப் பதிப்பித்தாரும் உளர்' (மேற்படி பக். 307) என்று வேறு பதிப்புகளில் நேர்ந்த பிழைகளையும் சுட்டுகிறார் இராகவையங்கார். ஆயினும், மேலே குறிப்பிட்டுள்ள எடுத்துக்காட்டுக்கள் ஐந்திலும் நிகழும் செய்கின்று வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாடு பற்றிய இராகவையங்காரின் கருதுகோளுக்கு எந்தவிதத் தொடரனியல் சான்றும் இல்லை. பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயரின் இருபுடை நிகழ்ச்சியைக் கருத்தில்கொண்டு மேற்படி எடுத்துக்காட்டுக்களில் காணப்படும் செய்கின்று வாய்பாட்டு வினைகள் நிகழும் தொடரனியல் அமைப்புக்களை அணுகவேண்டும். இந்த அடிப்படையில் (70) முதல் (74) வரையுள்ள செய்கின்று வாய்பாட்டு வினைகள் அமைந்த தொடர்கள் அகரப்பிரிவிலும், அவற்றுக்கு நிகரான பெயரெச்சத் தொடர்கள் (ஆ) பிரிவிலும் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

75 (அ) [தவளை பாய்கின்று] இடைநிலங்கிடப்பப் பாய்வது போல்
(ஆ) [பாய்கின்ற தவளை] இடைநிலங்கிடப்பப் பாய்வது போல்

76 (அ) [பருந்து வீழ்கின்று] நடுவே வீழ்ந்து.....
(ஆ) [வீழ்கின்ற பருந்து] நடுவே வீழ்ந்து.....

77 (அ) [குழவி அழுகின்று] எனக்குப் பால் தம்மின்... என்றாழாது....
(ஆ) [அழுகின்ற குழந்தை] எனக்குப் பால் தம்மின்... என்றழாது

78 (அ) [(தலைமகன்) இவளுழைச்செல்கின்று] ஆயங்கள் ஐயுறவோ எனின்
(ஆ) [இவளுழைச் செல்கின்ற தலைமகன்] ஆயங்கள் ஐயுறவோ எனின்

79 (அ) [(தலைமகன்) ஓதல், காவல்..... முதலியவற்றுக்குப் பிரிகின்று] தலைமகளும் தோழியும் அறியச் சொல்லிப் பிரியவும் உரியன்
(ஆ) [ஓதல், காவல்...... முதலியவற்றுக்குப் பிரிகின்ற தலைமகன்] தலைமகளும் தோழியும் அறியச் சொல்லிப் பிரியவும் உரியன்

இவற்றுள் (79)-இல் *தலைமகன்* என்பது இந்த ஆய்வில் தோன்றா எழுவாயாகக் கொள்ளப்பட்டுள்ளது. 78(அ) பிரிவில் உள்ள பெயரெச்சத் தொடர் நெருடலாக உள்ளது. இதனின்றும் (73)-இல் உள்ள வாக்கிய அமைப்பானது தொடரனியல் நிலையில் குறைபாடு உள்ளதாகக் கருதத் தோன்றுகிறது.

12.2 மேலே (75) முதல் (79) வரையுள்ள தலைமைப் பெயரின் இருபுடை நிகழ்ச்சியைக் கொண்ட பெயரெச்சத் தொடர்களில்

அகரப் பிரிவில் காணப்படும் செய்கின்று வாய்பாட்டு வினை முற்றுக்களும் (ஆ) பிரிவில் காணப்படும் செய்கின்ற வாய்பாட்டு வினைமுற்றுக்களும் துணைநிலை வழக்கில் நிகழ்கின்றன. இதனின்றும் மேற்படி எடுத்துக்காட்டுக்களில் நிகழும் செய்கின்று வாய்பாட்டு வினைகள் பொது வினைமுற்றுக்களாகக் கொள்ளத் தக்கவை என்பதும் இந்த வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாடு பற்றிய இராகவையங்காரின் கருதுகோள் ஏற்புடையதன்று என்பதும் தெளிவாகின்றது.[4] பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயரின் இருபுடை நிகழ்ச்சியானது பழந் தமிழ் முதல் இக்காலத் தமிழ் வரை போற்றப்பட்டு வருவதைக் கருதுகையில் செய்கின்று வாய்பாட்டு வினைகள் நக்கீரர் தமிழில் தலைமைபெயரைத் தழுவி நிற்பனவாகக் கொள்வது பொருத்த மாகவே தோன்றுகிறது.

12.3 செய்கின்று வாய்பாட்டுப் பொதுவினைகள் பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயரைத் தழுவி நிற்பது போல் செய்து வாய்பாட்டு வினைகள் பெயரைத் தழுவி நிற்பதில்லை. மலயாளத்திலும் இதே நிலை தான். காரணம், செய்து வாய்பாட்டுப் பொது வினைகள் இந்த இரு மொழிகளிலும் வினையெச்சங்களாகச் செயல்படுகின்றன. தமிழில் செய்கின்று வாய்பாட்டு வினைகளும் மலயாளத்தில் செய்யுந்து வாய்பாட்டு வினைகளும் வினையைத் தழுவும் எச்சங்களாகச் செயல்படு வதில்லை. ஆயினும், தமிழில் செய்துழி (= செய்தவிடத்து), செய்புழி (= செய்யுமிடத்து), செய்கின்றுழி (= செய்கின்றவிடத்து) ஆகிய வாய்பாட்டுத் தொடர்களில் செய்து, செய்பு, செய்கின்று வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் *உழி* என்னும் தலைமைப். பெயரைத் தழுவி நிற்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

## 13.0 குமரித் தமிழில் நிகழ்வுப் பெயரெச்சங்கள்

13.1 குமரி மாவட்டக் கிளை மொழிகளில் இரண்டு வகை யான நிகழ்காலப் பெயரெச்சத் தொடர்கள் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கவையாகும்.

---

4. செய்கின்று வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களின் நிகழ்ச்சியை *அழைக்கின்றிலேன்* (திருவா. திருச். 45), *கருதுகின்றிலேன்* (மேற்படி, 92), *தேறுகின்றிலம்* (மேற்படி 33), *தேடுகின்றிலை* (மேற்படி 31), *அறிகின்றிலர்* (கரா. 80(1) முதலான இறவாக்கால எதிர்மறை வினைமுற்றுக்களில் காணலாம்.

| வினைவகை | நிகழ்காலப் பெயரெச்சத் தொடர்களின் வகை | |
|---|---|---|
| | செய்க + பெயர் | செய்த + பெயர் |
| மெல்வினை | சீதையைத் தேடுக ராமன் | சீதையைத் தேடுத ராமன் |
| வல்வினை | பாடம் படிக்க அமுதன் | பாடம் படிக்குத அமுதன்[5] |

இந்த அட்டவணையில் முதல் பிரிவில் உள்ள பெயரெச்சத் தொடர்களில் நிகழும் *தேடுக* (=தேடுகிற), *படிக்க* (=படிக்கிற) ஆகிய பெயரெச்சங்கள் *செய்கு* (<*செயுகு) வாய்பாட்டு நிகழ் காலப் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றியவை யாகும்.[6] இரண்டாவது பிரிவில் உள்ள பெயரெச்சத்தொடர்களில் நிகழும் *தேடுத* (=தேடுகிற), *படிக்குத* (=படிக்கிற) ஆகிய பெயரெச்சங்கள் செயுது வாய்பாட்டு நிகழ்காலப் பொதுவினை முற்றுக்களின் அடியாகத் தோன்றியவையாகும். செய்கு, செயுது வாய்பாட்டு வினைகள் குமரித் தமிழில் ஒன்றன் பால் எழுவாய்க் குரிய நிகழ்காலப் பயனிலைகளாகவும் நிகழ்கின்றன. எ-டு. *மழை வருகு, ஆடு தண்ணி குடிக்கி* (<குடிக்கு); *மழை வருது, ஆடு தண்ணி குடிக்குது*. இதனின்றும் ஒரு குறிப்பிட்ட வாய்பாட்டில் அமைந்த ஒன்றன் பால் வினைமுற்றுக்களும் அதே வாய்பாட்டில்

---

5. *பாடம் படிக்குத அமுதன்* என்பதில் நிகழும் *படிக்குத* என்ற பெயரெச்ச வினையை உண்மையில் வல்வினை சார்ந்ததாகக் கொள்ள முடியாது. ஏனெனில் இது *படிக்கு* என்னும் செய்கு வாய்பாட்டு வினையடியின் மீது தோன்றியதாகும். *படி* என்னும் வினையானது வல்வினை சார்ந்ததாகும். இதன் அடியாகத் தோன்றும் இறவாக்காலப் பெயரெச்சம் *படிக்குத* என்று அமையாமல் *படித்த* (<*படியுத்த) என்றே அமையும். பழந்தமிழில் நிகழும் *அறிதும்* (நற். 209.6), *அறிதி* (கலி. 56.8), *அறிதிர்* (அகம். 8.18) ஆகியவற்றின் இறவாக்காலச் சிறப்பு வினைமுற்றுக்களின் பெயரெச்சம் **அறித* என்று அமையும். இதேபோல் *பூத்தி* (புறம். 242.6) (=பூப்பாய்), *இசைத்தும்* (மணி. 21.99) (=இசைப்போம்), *இழத்தும்* (குறள். 1250) (=இழப்போம்) ஆகிய இறவாக்காலச் சிறப்பு வினைமுற்றுக்களின் பெயரெச்சங்கள் **பூத்த*, **இசைத்த*, **இழத்த* என்றே அமையும். இவை இறந்தகாலப் பெயரெச்சங்களின் வடிவங்களுடன் ஒத்திருப்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இந்த வடிவொப்புமை அமைப்பியல் குழப்பத்தை ஏற்படுத்தியதால் *படிக்குத, பூக்குத, இசைக்குத, இழக்குத* முதலான பெயரெச்சங்கள் தோற்றம் கொள்ளலாயின. இதே காரணத்தால் *பூத்தி* என்பதும் எடுத்துக்காட்டாக, *பூக்குதி* என்று மாறியமைந்தது. இது தொடர்பான ஆய்வு இங்கே மேற்கொள்ளப்படவில்லை.

6. *அறிகிலர்* (குறுந். 152.1), *உரைக்கிலேன்* (மணி. 27.278); *நினைக்கிலேன்* (திருவா. அதி.2) ஆகிய இறவாக்கால எதிர்மறை வினைமுற்றுக்களில் (Non-Past Negative Finite System) நிகழும் *அறிகு, உரைக்கு, நினைக்கு* ஆகியவை இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்கள் என்பது கருத்திற்கொள்ளற்பாலதாகும்.

அமைந்த ஒன்றன்பால் பொதுவினை முற்றுக்களும் தொடர் புடையவை என்பது புலனாகின்றது. பெயரெச்ச வினைகள் பொதுவினை முற்றுக்களின் அடியாகத் தோன்றியவை என்ற கருதுகோளின் அடிப்படையில் சிறப்பு வினைமுற்றுக்களும் பொது வினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றியவை என்று கருதலாம். இதனின்றும் *வருகான்* (=வருகிறான்), *எடுக்கான்* (=எடுக்கிறான்) ஆகியவை *வருகு, எடுக்கு* ஆகிய பொது வினை முற்றுக்களின் அடியாகவும் *வருதான், எடுக்குதான்* ஆகிய சிறப்பு வினைமுற்றுக்கள் *வருது, எடுக்குது* ஆகிய பொது வினைமுற்றுக் களின் அடியாகவும் *வந்தான், எடுத்தான்* ஆகிய சிறப்பு வினை முற்றுக்கள் *வந்து, எடுத்து* ஆகிய பொது வினைமுற்றுக்களின் அடியாகவும் *வருகின்றான், எடுக்கின்றான்* ஆகியவை *வருகின்று, எடுக்கின்று* ஆகிய பொது வினைமுற்றுக்களின் அடியாகவும் *கொய்வான், உண்பான், நிற்பான், கொடுப்பான்* ஆகியவை **கொய்பு, *கொய்ம், *உண்பு, *நிற்பு, *கொடுப்பு* ஆகியவற்றின் அடியாகவும் *உண்மர்* (பதி. 24.18), *தின்மர்* (பதி. 24.18), *அறியுமோன்* (புறம். 137.4) ஆகியவை *உண்ம், தின்ம், அறியும்* ஆகியவற்றின் அடியாகவும் தோன்றியனவாகக் கொள்ளலாம்.[7] செய்கு (<செயுகு), செயுது, செய்து, செய்கின்று ஆகிய வாய்பாட்டுப் பொது வினைகள் ஒன்றன்பால் வினைகளாகவும் நிகழற்பாலனவாகும்.

---

7. சிறப்பு வினைகள் பொதுவாகப் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றி நிகழ்பவை என்பதை ஒரு கோட்பாடாகக் கொள்ள முடியும். இதனைக் கருத்தில் கொண்டு *அறிதும்* (நற். 299.6), *அறிதி* (கலி. 56.18), *அறிதிர்* (அகம். 8.18) ஆகிய இறவாக்காலச் சிறப்பு வினைமுற்றுக்கள் *அறிது* (<*அறியுது <*அறியுந்து) என்ற பொதுவினைமுற்றின் அடியாகவும், *இசைத்தும்* (மணி. 21.99), *இழத்தும்* (குறள். 1250), *அளித்தி* (பதி. 79.3), *உரைத்தி* (பரி. 11.92), *மறத்தி* (குறுந். 306.3), *கேட்டி* (அகம். 68.4) ஆகிய இறவாக்கால வல்வினைச் சிறப்பு வினைமுற்றுக்கள் முறையே *இசைத்து* (<*இசையுத்து <*இசையுந்த்உ), *இழத்து* (<*இழயுத்து <*இழயுந்த்உ) *அளித்து* (<*அளியுத்து <*அளியுந்த்உ), *உரைத்து* (<*உரையுத்து <*உரையுந்த்உ), *கேட்டு* (<*கேள்த்து <*கேளுத்த்உ <*கேளுந்த்உ) ஆகிய பொது வினைமுற்றுக்களின் அடியாகவும் *செய்குவர், செய்குவள், செய்குவன்* ஆகிய வாய்பாட்டுச் சிறப்பு வினைமுற்றுக்கள் *செய்குவ* (<*செய்குபு/செய்கும்) என்ற வாய்பாட்டுப் பொது வினை முற்றின் அடியாகவும் தோன்றியனவாகக் கொள்ளலாம்.

இங்கே இன்னொரு உண்மையையும் நினைவில் கொள்ள வேண்டும். சில சிறப்பு வினைகளின் பகுதியாகிய பொது வினைமுற்றுக்களின் அடிநிலை வடிவங்கள் வாய்பாட்டினவாக மேலே குறிக்கப் பெற்றுள்ளன. வல்வினையாயின் *செய்யுந்த்உ* வாய்பாட்டு வினைகளின் ஈற்று மெய்யாகிய தகரமானது நிலையொலி யாகவும் (Voiceless Phone) மெல்வினையாயின் மேற்படி தகரமெய் அலையொலி யாகவும் (Voiced Phone) நிகழற்பாலதாகும். வல்வினை சார்ந்த செய்யுந்த்உ வினைகள் கன்னடத்தில் செய்யுத்து வாய்பாட்டினவாகத் திரிகின்றன. இந்த வினைகள் ஒடுங்கிய நிலையில் *அளித்தி, உரைத்தி, கேட்டி* முதலானவற்றின் பொது வினைமுற்றுப் பகுதிகளாகத் தமிழில் நிகழ்கின்றன.

## 14.0 பொதுப் பேச்சுத் தமிழில் குமரிவினைத் திரிபு

14.1 குமரி மாவட்டப் பெயரெச்சத் தொடர்களைப் பொறுத்தவரையில் கோட்பாட்டு நிலையில் தலைமைப் பெயரானது எழுவாயாக நிலைகொள்ள வாய்ப்புள்ளது. இதன் அடிப்படையில் *சீதையைத் தேடுக ராமன், பாடம் படிக்க அமுதன்* ஆகிய பெயரெச்சத் தொடர்களினின்றும் *ராமன் சீதையைத் தேடுகவன், அமுதன் பாடம் படிக்கவன்* என்ற பெயரெச்சத் தொடர்களைத் தோற்றுவிக்கலாம். அதே போல் *சீதையைத் தேடுத ராமன், பாடம் படிக்குத அமுதன்* ஆகிய பெயரெச்சத் தொடர்களினின்றும் *ராமன் சீதையைத் தேடுதவன், அமுதன் பாடம் படிக்குதவன்* ஆகிய பெயரெச்சத் தொடர்களைத் தோற்றுவிக்கலாம். இவை குமரித்தமிழுக்குப் பொருந்திய வழக்குகளாகும்.

14.2 இடைப் பிறவரலாக இங்கே ஒரு செய்தியைக் குறிப்பிட வேண்டும். *தேடுத, படிக்குத, தேடுதவன், படிக்குதவன்* ஆகிய வினையமைப்புகள் பொதுப் பேச்சுத் தமிழில் (Standard Spoken Tamil) முறையே *தேடுர, படிக்குர, தேடுரவன், படிக்குரவன்* எனத் திரிந்து நிகழ்கின்றன. இவை மிகைத்திருத்தம் (Hyper Correction) காரணமாக *தேடுற, படிக்குற, தேடுறவன், படிக்குறவன்* என்று எழுதப்படுகின்றன. செவ்வியல் தமிழில் செய்கு வாய்பாட்டு வல்வினையடியாகத் தோன்றி நிகழும் *செய்கிற, செய்கிறான்* முதலான வாய்பாட்டு வினைகள் *செய்குத, செய்குதவன்* முதலான வாய்பாடடு வினைகளின் திரிபாகும். எ-டு: *படிக்குத > படிக்குர, படிக்குதான் > படிக்குரான்*. செவ்வியல் தமிழில் நிகழும் செய்கின்ற, செய்கின்றான் முதலான வாய்பாட்டு வினைகளின் தாக்கத்தால் *படிக்குர, படிக்குரான்* ஆகியவை *படிக்கிற, படிக்கிறான்* எனத்திரிந்தன. செய்கு வாய்பாட்டு மெல்வினையடியாகத் தோன்றி நிகழும் *வருகிற, வருகிறான்* போன்ற வினைகளுக்கும் இந்த உண்மை பொருந்தும். குமரித் தமிழில் *படிக்குத, படிக்குதான்* போன்ற வல்வினையடியாகத் தோன்றிய வினைகளின் நிகழ்ச்சி இயல்பானது. ஆனால் *வருகுத, வருகுதான்* போன்ற செய்கு வாய்பாட்டு மெல்வினையடியாகத் தோன்றிய வினைகளுக்கு இடமில்லை. மாறாக *வருத, வருதான்* போன்ற வினையமைப்புகள் குமரித்தமிழில் இயல்பாக நிகழ்கின்றன.

## 15.0 எதிர்மறைப் பெயரெச்சம்

15.1 உடன்பாட்டுப் பெயரெச்சத்தில் தலைமைப் பெயரின் இருபுடை நிகழ்ச்சியும் அதன் நிகழிடத்துக்கேற்ப அதனைத் தழுவி

நிற்கும் பெயரெச்ச வினையானது பொது வினைமுற்றாகவும் சிறப்பு வினைமுற்றாகவும் நிகழும் போக்கும் ஆராயப்பட்டன. இத்தகைய நிலையை எதிர்மறைப் பெயரெச்சத் தொடர்களிலும் காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

80 (அ) (1) .... .... ..... யானே
ஆதி மந்தி போலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லோ.....
அஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே (அகம். 45.12, 14, 15, 19)

(2) [யான் துஞ்சாதேன்] அலந்தனென் உழல்வென் கொல்லோ

(ஆ) [துஞ்சாத யான்] அலந்தனென் உழல்வென் கொல்லோ

81 (அ) (1) சினைக்கயன் மாய்க்குந் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
அருந்தவ முயறல் ஆற்றா தேமே (ஐங். 111. 3-5)

(2) [நாம் அருந்தவம் முயறல் ஆற்றாதேம்] துறைவன் கேண்மை பிரிந்தும் வாழ்துமோ

(ஆ) [அருந்தவம் முயறல் ஆற்றாத நாம்] துறைவன் கேண்மை பிரிந்தும் வாழ்துமோ

82 (அ) (1) பண்பிலை மன்ற பாண விவ்வூர்
அன்பில கடிய கழறி
மென்புலக் கொண்கனைத் தாரா தோயே (ஐங். 138)

(2) பாண! [(நீ) கொண்கனைத் தாராதோய்] பண்பிலை

(ஆ) பாண! [கொண்கனைத் தாராத நீ] பண்பிலை

83 (அ) (1) மடவை மன்ற கொண்க.......
வாழாள் ஆதல் சூழா தோயே (நற். 183.6,11)

(2) கொண்க! [(நீ) வாழாள் ஆதல் சூழாதோய்] மடவை

(ஆ) கொண்க! [வாழாள் ஆதல் சூழாத நீ] மடவை

84 (அ) (1) புன்னை யரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்
என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வ முடைய ராகி
மார்பணங் குறுநரை அறியா தோனே (நற். 94. 6-9)

(2) [சேர்ப்பன் மார்பணங்குறுநரை அறியாதோன்] என்ன மகன் கொல்?

(ஆ) [மார்பணங்குறுநரை அறியாத சேர்ப்பன்] என்ன மகன் கொல்?

85 (அ) (1) அன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே (ஐங். 119.3, 4)

(2) [மென்புலக் கொண்கன் வாராதோன்] அன்பிலன்

(ஆ) [வாராத மென்புலக் கொண்கன்] அன்பிலன்

86 (அ) (1) எவன்குறித் தனள்கொல் அன்னை
சிறுபா சடைய நெய்தல்
குறுமோ சென்றெனக் கூறா தோளே (நற். 27.7, 11, 12)

(2) [அன்னை..... நெய்தல் குறுமோ சென்றெனக் கூறாதோள்] எவன் குறித்தனள் கொல்?

(ஆ) [நெய்தல் குறுமோ சென்றெனக் கூறாத அன்னை] எவன் குறித்தனள் கொல்?

87 (அ) (1) அம்ம வாழி தோழி யன்னைக்கு
உயர்நிலை யுலகமும் சிறிதால் அவர்மலை
மாலைப் பெய்த மணங்கமழ் உந்தியோடு
காலை வந்த காந்தள் முழுமுதல்
மெல்லிலை குழைய முயங்கலும்
இல்லுய்த்து நடுதலுங் கடியா தோளே (குறுந். 361)

(2) [அன்னை கடியாதோளுக்கு] உயர்நிலை யுலகமும் சிறிதால்

(ஆ) [கடியாத அன்னைக்கு] உயர்நிலை யுலகமும் சிறிதால்

88 (அ) (1) மண்ணிய சென்ற வொண்ணுதல் அரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றோ டவணிறை
பொன் செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ வன்னை
ஒருநாள்,
நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே (குறுந். 292)

(2) [அன்னை துஞ்சல் இலள்] வரையா நிரையத்துச் செலீஇயர்

(ஆ) [துஞ்சல் இலாத/துஞ்சாத அன்னை] வரையா நிரையத்துச் செலீஇயர்

இந்த எடுத்துக்காட்டுக்களில் அ (1)இல் குறிக்கப்பெற்றுள்ள மூலபாடத்தில் நிகழும் எதிர்மறைப் பெயர்த்தொடர்கள் கண்டறியப்பட்டு அவை அ(2)-இல் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளன. இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ள அமைப்புகளில் தலைமைப்பெயர் இடம்பெயர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலை கொண்டுள்ளது. இதன் விளைவாக அதனைத் தழுவி நிற்கும் வினையானது எதிர்மறைச் சிறப்பு வினைமுற்றாக அமைகிறது. எ-டு: *[அன்னை கூறா தோள்] (எவன் குறித்தனள்?)* (ஆ) பிரிவில் தலைமைப் பெயர் வலப்புறத்தில் நிகழ்வதால் அதனைத் தழுவி நிற்கும் வினையானது எதிர்மறைப் பொது வினைமுற்றாக அமைகிறது. எ-டு. *[கூறாத அன்னை] (எவன்*

*குறித்தனள்?).* இதேபோல் [*நேற்று வராத முருகன்*] (*இன்றும் வரவில்லை*) என்பதில் அமைந்த பெயரெச்சத் தொடரும் அதன் திரிபாக [*முருகன் நேற்று வராதவன்*] (*இன்றும் வரவில்லை*) என்பதில் அமைந்த பெயரெச்சத் தொடரும் இன்றைய தமிழில் இயல்பான நிகழ்ச்சிகளேயாகும்.

15.2 பழந்தமிழில் சிறப்பு எதிர்மறைப் பெயரெச்சங்களால் தழுவப்படும் தலைமைப் பெயர்களைக் கொண்டும் பெயரெச்சத் தொடர்களை அகச் சான்றாகக் கொண்டும் பின்வரும் எதிர்மறை முற்று வாக்கியங்களை அ(2)-இல் உள்ளவற்றுக்கு நிகராகக் (கோட்பாட்டு நிலையில்) மீட்டுருவாக்கம் செய்யலாம்.

89(அ) *யான் துஞ்சாதேன்
(ஆ) *நாம் அருந்தவம் முயறல் ஆற்றாதேம்
(இ) *நீ கொண்கனைத் தாராதோய்
(ஈ) *நீ (அவள்) வாழாள் ஆதல் சூழாதோய்
(உ) *சேர்ப்பன் (மார்பணங்குறுநரை) அறியாதோன்
(ஊ) *கொண்கன் வாராதோன்
(எ) *அன்னை குறுமோ சென்றெனக் கூறாதோள்
(ஏ) *அன்னை (என்னைக்) கடியாதோள்
(ஐ) *அன்னை துஞ்சல் இலள்

இத்தகைய எதிர்மறை வாக்கியங்களை இக்காலத் தமிழில் காணமுடியவில்லை. ஆயினும், *முருகன் நேற்று வராதவன்* (⇐ *நேற்று வராத முருகன்*) என்ற பெயரெச்சத் தொடரைக் கருத்தில் கொண்டு பின்வரும் எதிர்மறை முற்று வாக்கியங் களைக் கோட்பாட்டு நிலையில் மீட்டுருவாக்கம் செய்யலாம்.

90(அ) *நான்/நீ/அவன் (நேற்று) வராதவன் (ஆண்பால்)
(ஆ) *நான்/நீ/அவள் (நேற்று) வராதவள் (பெண்பால்)

இக்காலத் தமிழில் (90)-இல் உள்ளது போன்ற வாக்கியங்கள் கவை வாக்கியங்களாகக் கருதப்படும். இயல்பான எதிர்மறை முற்று வாக்கியங்கள் இன்றைய தமிழில் எடுத்துக்காட்டாக *நான் வரவில்லை, நான் வர மாட்டேன்* என்றே அமையும். பழந்தமிழைப் பொறுத்தவரையில் (89)-இல் குறிக்கப்பெற்றுள்ள எதிர்மறை முற்று வாக்கியங்கள் கவை வாக்கியங்களாகவே தோன்றுகின்றன. ஏனெனில் பழந்தமிழில் எடுத்துக்காட்டாக *அவள் வந்திலள்/ வருகிலள்/வாரலள்* என்பது போன்ற வாக்கியங்களே இயல்பான எதிர்மறை முற்று வாக்கியங்களாகக் காணப்படுகின்றன. இதனை உறுதிப்படுத்தும் வகையில் *அன்னை துஞ்சல் இலள்* என்ற இயல்பான எதிர்மறை முற்று வாக்கியம் எடுத்துக்காட்டு (88)-இல்

நிகழ்வதைக் கருத்தில் கொள்ளலாம். எத்தகைய எதிர்மறைமுற்று வாக்கியமாயினும் அது எதிர்மறைப் பெயரெச்சத் தொடர்களில் தலைமைப் பெயரின் முன்நிகழும் எதிர்மறைப் பெயரெச்ச வினையைக் கருத்தில் கொண்டதாயின் அதனை இயல்பானதாகவே கொள்ளத் தோன்றுகிறது. தமிழில் எதிர்மறை வினைமுற்றுக்கள் பொதுவாகக் குறிப்பு வினைமுற்றுக்களாகக் கொள்ளத்தக்கன வாகும். எனவே, இவற்றோடு தொடர்புடைய பெயரெச்ச வினைகளும் குறிப்புப் பெயரெச்சங்களாகவே கொள்ளப்படும். உரை நிகழ் சூழலைக் கொண்டே இவற்றின் காலம் முடிவு செய்யப்படும். செய்திலன், செய்கிலன், செய்கின்றிலன், பாடிற்றிலன் முதலான வாய்பாட்டு எடுத்துக்காட்டுக்களில் கூட *இலன்* என்பது குறிப்பு வினைமுற்றே. அதன் முன் நிகழும் செய்து, செய்கு, செய்கின்று, பாடிற்று[8] ஆகிய வாய்பாட்டுப் பொது வினைகளைக் கொண்டே எதிர்மறை வினைமுற்றின் காலம் அறியப்படுகிறது. இக்காலத் தமிழில் செய்யவில்லை வாய்பாட்டு எதிர்மறை வினைகளும் குறிப்பு வினைமுற்றுக்களே. செய்ய மாட்டேன் என்பது பயிற்சி காரணமாக எதிர்காலம் குறித்த தாயினும் இதனுடைய எதிர்மறைப் பெயரெச்சமும் செய்ய வில்லை வாய்பாட்டு வினைகளின் எதிர்மறைப் பெயரெச்சமும் செய்யாத வாய்பாட்டினவாகவே அமையும். செய்யமாட்டேன் என்பதன் நிகழ்ச்சி பழந்தமிழில் காணப்படவில்லை. இடைக்காலத் தமிழில் அது எதிர்வைக் குறிக்காமல் இயலாமையைக் குறிக்கிறது. *யான் செய்யமாட்டேன்* என்பது எடுத்துக்காட்டாக *என்னால் செய்ய இயலவில்லை* என்ற பொருளில் வழங்குவதாகக் கருதலாம். கருதுக: *நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேம்* (சிலம்பு. 7.32.4) இன்றைய தமிழில் செய்ய மாட்டேன் என்பது அமைப்பு நிலையில் எதிர்காலம் குறிக்கவில்லையாயினும் இயலாமைப் பொருண்மையானது எதிர்வுப் பொருண்மையதாகப் பிறழ உணரப்பட்டு அவ்வாறே வழங்கவும் படுகிறது. எனவேதான், இதனது எதிர்மறைப் பெயரெச்சமும் செய்யாத வாய்பாட்டினதாக அமைகிறது.

---

8. பாடிற்று வாய்பாட்டு வினைகள் பொதுவினைமுற்றாக நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(1) கேயத்தீங்குழல் ஊதிற்றும் நிரைமேய்த்ததும் கெண்டை ஒண்கண்
வாசப்பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் (நாலா. (நம். திருவாய்.) 3485)

(2) நோவஆய்ச்சி உரலோடு ஆர்க்க இரங்கிற்றும் வஞ்சப்பெண்ணை
சாவப்பால் உண்டதும் ஊர்சகடம் இறச்சாடியதும் (மேற்படி 3487)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஊதிற்று* (= ஊதியது), *இரங்கிற்று* (= இரங்கியது) ஆகியவை இறந்தகாலப் பொதுவினைமுற்றுக்களாகும்.

# பிற்சேர்க்கை

பெயரெஞ்சு கிளவியும், தலைமைப்பெயரும் எழுவாய்-பயனிலை என்ற இலக்கண உறவில் அமையும் போதுதான் தலைமைப் பெயரானது பெயர்ச்சி விவகாரத்துக்கு உள்ளாகிப் பெயர்த்தொடரின் முதல் உறுப்பாக அமைகின்றது. பெயரெஞ்சு கிளவியும் தலைமைப் பெயரும் எழுவாய்-பயனிலை இலக்கண உறவில் அமையாமல் வேறு வகையான இலக்கண உறவில் அமைந்தால் தலைமைப் பெயரானது பழந்தமிழில் பெயர்ச்சி விவகாரத்துக்குட்படாது. புறநானூற்றிலிருந்து கீழே தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக்கள் இந்த உண்மையை வலியுறுத்துவனவாகவே உள்ளன. கீழே கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக்கள் பாடலின் கீழ், திணை-துறை பற்றிய செய்திகளை அடுத்து, பாடியோர்-பாடப்பட்டோர் பற்றிய செய்தியாகக் குறிக்கப்பெற்றுள்ளவையாகும். இவ் எடுத்துக் காட்டுக்கள் உ.வே. சாமிநாதய்யரின் பதிப்பில் இருந்து எடுக்கப் பட்டவையாகும். ஒவ்வொரு எடுத்துக்காட்டிலும் பெயர்த் தொடருக்கு நிகரான பெயரெச்சத் தொடர் இடைச்செருகலாக அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ளது.

(1) [சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி கருவூரிடம் செல்வானை] ⇐ (கருவூரிடம் செல்லும் சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியைக்) கண்டு சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையோடு வேண் மாடத்து மேலிருந்து உறையூர் ஏணிச்சேரி முடமோசிரியார் பாடியது (புறம். 13).

(2) பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணியிருந்த [யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் வலிதிற்போய்க் கட்டில் எய்தினானை] (⇐ வலிதிற்போய்க் கட்டில் எய்திய யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலைக்) குறுங் கோழியூர் கிழார் பாடியது (புறம். 17).

(3) [அவன் கருவூர் முற்றியிருந்தானை] (⇐ கருவூர் முற்றியிருந்த அவனை) ஆலத்தூர் கிழார் பாடியது (புறம். 36).

(4) [அவன் எம்முள்ளீர் எந்நாட்டீர் என்றாற்கு] (⇐ எம்முள்ளீர் எந்நாட்டீர் என்ற அவற்கு) ஆவூர் மூலங்கிழார் பாடியது (புறம். 38).

(5) [சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றியிருந்தானையும்] (⇐ உறையூர் முற்றியிருந்த சோழன் நலங்கிள்ளியையும்) அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்கிழார் பாடியது (புறம். 45).

(6) [சோழன் குராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெரு வழுதியும் ஒருங்கிருந்தாரை] (⇐ ஒருங்கு இருந்த சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனையும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியையும்) காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியது (புறம். 58).

(7) [சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப் புறத்து பொருது வீழ்ந்தாரை] (⇐ போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்த சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனையும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியையும்) கழாத்தலையார் பாடியது (புறம். 62).

(8) [சேரமான் பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற் பெரு வளத்தானோடு பொருது புறப்புண் நாணி வடக்கிருந் தானை] (⇐ சோழன் கரிகாற் பெருவளத்தானோடு பொருது புறப்புண் நாணி வடக்கிருந்த சேரமான் பெருஞ் சேரலாதனைக்) கழாத்தலையார் பாடியது (புறம். 65).

(9) [சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி முக் காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்றானை] (⇐ முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்ற சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியைச்) சாத்தந்தையார் பாடியது (புறம். 80).

(10) [அவன் பொருது புண்பட்டு நின்றோனை] (⇐ பொருது புண்பட்டு நின்ற அவனை) அவர் பாடியது (புறம். 93).

(11) [அவன் கோவலூர் எறிந்தானை] (⇐ கோவலூர் எறிந்த அவனை) அவர் பாடியது (புறம். 99).

(12) [அதியமான் தவமகன் பிறந்தவனைக் கண்டானை] (⇐ தவமகன் பிறந்தவனைக் கண்ட அதியமானை) அவர் பாடியது (புறம். 100).

(13) [அவர் வெளிமானுழைச் சென்றார்க்கு] (⇐ வெளிமான் உழைச்சென்ற அவர்க்கு) வெளிமான் [துஞ்சுவான் தம்பியை] (⇐ துஞ்சும் தம்பியைப்) பரிசில் கொடு என.... (புறம். 162).

(14) [கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தான் உழை] (⇐ வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன் உழைச்) சென்ற பிசிராந்தையாரை......... (புறம். 191)

(15) [பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறன் பரிசில் நீட்டித்தானை] (⇐ பரிசில் நீட்டித்த பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன் மாறனை) ஆவூர் மூலங்கிழார் பாடியது (புறம். 196).

(16) [சோழன் (குராப்பள்ளித்துஞ்சிய) பெருந்திருமாவளவன் பரிசில் நீட்டித்தானை] (⇐ பரிசில் நீட்டித்த சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனைக்) கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது (புறம். 197).

(17) [கடிய நெடுவேட்டுவன் பரிசில் நீட்டித்தானை] (⇐ பரிசில் நீட்டித்த கடிய நெடுவேட்டுவனைப்) பெருந்தலைச் சாத்தனார் பாடியது (புறம். 205).

(18) [அதியமான் நெடுமானஞ்சி பரிசில் நீட்டித்தானை] (⇐ பரிசில் நீட்டித்த அதியமான் நெடுமானஞ்சியை) ஔவையார் பாடியது (புறம். 206).

(19) [மூவன் பரிசில் நீட்டித்தானை] (⇐ பரிசில் நீட்டித்த மூவனைப்) பெருந்தலைச்சாத்தனார் பாடியது (புறம். 209).

(20) [சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை பரிசில் நீட்டித்தானை] (⇐ பரிசில் நீட்டித்த சேரமான் குடக் கோச் சேரல் இரும்பொறையைப்) பெருங்குன்றூர் கிழார் பாடியது (புறம். 210).

(21) [அவன் வடக்கிருந்தான்] (⇐ வடக்கிருந்த அவன்) பிசிராந்தையார்க்கு இடன் ஒழிக்க என்றது (புறம். 216).

(22) [அவன் வடக்கிருந்தான் உழை] (⇐ வடக்கிருந்த அவனுழைச்) சென்ற பிசிராந்தையாரைக் கண்டு பொத்தியார் பாடியது (புறம். 217).

(23) [பிசிராந்தையார் வடக்கிருந்தாரை] (⇐ வடக்கிருந்த பிசிராந்தையாரைக்) கண்ட கண்ணகனார் பாடியது (புறம். 218).

(24) [அவன் வடக்கிருந்தானை] (⇐ வடக்கிருந்த அவனைக்) கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப்பூதநாதனார் பாடியது (புறம். 219).

(25) [அவன் வடக்கிருந்தான் உழை] (⇐ வடக்கிருந்த அவனுழைச்) சென்று மீண்டு வந்து உறையூர் கண்ட பொத்தியார் அழுது பாடியது (புறம். 220).

(26) [வெளிமானுழைச் சென்றார்க்கு] (⇐ *வெளிமானுழைச் சென்ற பெருஞ்சித்திரனார்க்கு) அவன் துஞ்ச இளவெளிமான் சிறிது கொடுப்பக் கொள்ளாது பெருஞ் சித்திரனார் பாடியது (புறம். 237).

(27) [பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு தீப்பாய்வாள்] (⇐ தீப்பாயும் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு) சொல்லியது (புறம். 246).

(28) [அவள் தீப்பாய்வாளை] (⇐ தீப்பாயும் அவளைக்) கண்டு மதுரை பேராலவாயர் பாடியது (புறம். 247).

(29) [சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப் பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை] (⇐ ஒருங்கிருந்த .........வெண்கோவையும், ......... உக்கிரப் பெருவழுதியையும், .........பெருநற்கிள்ளியையும்) ஔவையார் (* பாடியது) (புறம். 367).

(30) [சேரமான் முடக்கோ நெடுஞ்சேரலாதன்... உயிர் போகாது கிடந்தானை] (⇐ உயிர்போகாது கிடந்த சேரமான்

முடக்கோ நெடுஞ்சேரலாதனை) கழாத் தலையார் (*பாடியது) (புறம். 368).

(31) [சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன் கருவூர் எறிந்தானை] (⇐ கருவூர் எறிந்த சோழன் குராப் பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவனைக்) கோவூர் கிழார் (*பாடியது) (புறம். 373).

பின்வரும் எடுத்துக்காட்டு தெளிவு குன்றியிருப்பது போல் காணப்படுகின்றது. ஆகவே பெயரெச்சத்தொடர் இடைச் செருகலாகக் கொடுக்கப்படவில்லை.

(32) சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும் தாமப் பல் கண்ணனும் வட்டுப் பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக் கொண்டு எறிந்தானைச் சோழன் மகன் அல்லை என நாணி இருந்தானைத் தாமப்பல் கண்ணனார் பாடியது (புறம். 43).



# 8. பயனிலை - அகமும் புறமும்

## 1.0 வினையெல்லாம் வினைப்பெயரே

1.1 தமிழ்ப் பயனிலையின் அமைப்பைப் பற்றி ஓரளவு இந்த ஆய்வுரையில் சிந்திக்கப்படுகிறது. இந்தச் சிந்தனை வினைப் பயனிலையையே மையமாகக் கொண்டதாயினும், இதன் முடிவுகள் பெயர்ப்பயனிலைக்கும் பொருந்தும். வினையடிகள் அனைத்தும் பெயராகக் கருதத்தக்கவை என்பது நமது கொள்கை (Kothandaraman, R. 1978b:47-53, கோதண்டராமன், இரா. 1979:39). ஆதலின் வினைப்பயனிலைகள் என்பனவும் பெயர்ப்பயனிலை களாகக் குறிக்கத்தக்கனவேயாகும். வினையென்பது பெயரில் ஒருவகையாதலின் வினைப்பயனிலைகளை வினைப் பெயர்ப் பயனிலைகள் எனக்கொள்வது மிகவும் பொருத்தமாகும். இக்கட்டுரையில் வினைப்பயனிலைகள் என்ற ஆட்சி வினைப் பெயர்ப் பயனிலைகள் என்ற பொருளிலேயே கொள்ளப்படு கின்றது. இவ்வாறே முற்றெச்சங்களாகிய வினைமுற்றுக்கள் என்பனவும் வினைப்பெயரின் வகைகளுள் ஒன்றாக இக் கட்டுரையில் கருதப்படுகின்றது. இந்தப் பின்னணியில் தமிழில் அமைந்த பயனிலைகள் யாவும் பெயர்ப்பயனிலைகளாகக் கொள்ளத்தக்கவை என்பதும், வினைப்பயனிலைகள் அவற்றுள் ஒருவகை என்பதும் பெறப்படும். இதனைப் பின்புலமாகக் கொண்டு பின்வரும் வாக்கிய வகைகளைச் சற்றுக் கவனத்தில் கொள்ளவும்.

1 (1) முருகன் வள்ளியைக் கண்டான்.

(2) முருகன் கண்டதுவள்ளியை ஆகும்.

(3) முருகன் கண்டதாவது வள்ளியை

மேலே (1)-இல் நிகழும் மூன்று வாக்கியங்களும் பொருண்மைத் தொடர்புடையனவாகும். இவற்றுள் 1(2), (3) இல் உள்ள வாக்கியங்களில் நிகழும் *ஆகும், ஆவது,* ஆகிய உறுப்புக்கள் சிதறிய வழக்கினவாகும். இதன் மூலம் 1(3)-இல் நிகழும் *ஆவது,* என்னும் உறுப்பு, 1 (2)இல் நிகழும் *ஆகும்* என்னும் உறுப்பு உணர்த்தும் இருப்புப்பொருண்மைக்கும், அதன் இலக்கணச்

செயற்பாட்டிற்கும் உரியது என்பது தெளிவாகின்றது. *ஆகும், ஆவது* ஆகிய இரண்டு உறுப்புக்களும் சிதறிய வழக்கினவாதலின் பின்வரும் வாக்கியம் இலக்கணத் தன்மை அற்றதாகின்றது.

*1 (4) *முருகன் கண்டதாவது வள்ளியை ஆகும்*

இந்த வாக்கியத்தின் அடியாகத் தோன்றும் பெயரெச்சத் தொடர் பின்வருமாறு இருக்கும்.

*(2) *முருகன் கண்டதாவதாகிய வள்ளி*

இப்பெயரெச்சத் தொடர் ஏற்புடையதல்லவாகலின் 1(4)-இல் அமைந்த வாக்கியமும் ஏற்புடையதல்லவாகின்றது. இதன் மூலம் *ஆகும், ஆவது* ஆகிய இரண்டு உறுப்புக்களும் ஒரே வாக்கியத்தில் நிகழும் பெற்றியன அல்ல என்பது தெளிவாகின்றது.

## 2.0 வாக்கிய மீட்டுருவாக்கம் – ஒரு தடயம்

2.1 *ஆகும், ஆவது* ஆகிய இரண்டு உறுப்புக்களும் வாக்கியங்கள் 1(2), (3)-இல் சிதறிய வழக்கினவாதல் கண்டோம். இவ்விரண்டு வாக்கியங்களையும் பெயரெச்சத் தொடராக மாற்றுகையில் இரண்டுக்கும் பொதுவாகப் பின்வரும் ஒன்றே பெயரெச்சத் தொடராய் அமைகின்றது.

*(3) முருகன் கண்டதாகிய வள்ளி*

வாக்கியம் 1(2)-இல் *கண்டது* என்னும் உறுப்பும் *ஆகும்* என்னும் உறுப்பும் விலகிக் கிடந்தாலும், பெயரெச்சத் தொடரில் அவை இரண்டும் அண்மை உறுப்புக்களாய் அமைவதைக் காண்கிறோம்.[1] இதன் மூலம் வாக்கியம் 1(2)-இல் நிகழும் *கண்டது* என்பதும் *ஆகும்* என்பதும் அண்மை உறுப்புக்களாகக் கருதத்தக்கவை என்பதும், அவை ஓர் உயிர்நிலை **(obligatory)** விகாரத்தின் மூலம் மேற்படி வாக்கியத்தில் பிரிக்கப்பட்டுள்ளன என்பதும் தெளிவாகின்றது. வாக்கியம் 1(3)-ஐப் பொறுத்தவரை சிக்கல் ஏதும் இல்லை. இங்கே *கண்டது* என்பதும் *ஆவது* என்பதும் அண்மை உறுப்புக்களாகவே நிகழ்கின்றன. இந்த நிலை பெயரெச்சத்

---

1. *முருகன் கண்டதாகிய வள்ளி* என்னும் பெயரெச்சத் தொடரில் காணப்படும் *ஆகிய* என்னும் உறுப்பு, *முருகன் கண்டது வள்ளியை ஆகும்* என்ற வாக்கியத்தில் நிகழும் *ஆகும்* என்னும் உறுப்பின் விகார வடிவமாகும். இந்த இரண்டு உறுப்புக்களின் நிகழ்ச்சியும் மொழியில் வரையறுக்கப்பட்ட சூழல்களில் அமைந்ததாகும். ஆகவே இவ்விரண்டினையும் மாற்று வடிவங்களாகக் கொள்வது பொருத்தமாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டே *ஆகிய* என்பதைப் போல் *ஆகும்* என்பதும் *கண்டது* என்னும் உறுப்பின் அண்மைக் கிளவியாகக் கொள்ளத்தக்கது என்று நாம் வாதிடுகிறோம்.

தொடரிலும் போற்றப்படுகின்றது. (3)-இல் அமைந்த பெயரெச்சத் தொடரைக் கருத்தில் கொண்டால் கீழே (4)-இல் குறிக்கப்பெற்றுள்ளது போன்ற ஓர் வாக்கிய வகையை மீட்டுருவாக்கம் செய்ய வேண்டியது இன்றியமை யாததாகின்றது.

(4) *முருகன் வள்ளியைக் கண்டதாகும்.

ஓர் உயிர்நிலை (obligatory) விகாரத்தின் மூலம் வாக்கியம் (4), 1(2)-இல் உள்ளது போல் *முருகன் கண்டது வள்ளியை ஆகும்* என்று மாற்றப்படுகின்றது. ஆயினும் (3)-இல் உள்ள *முருகன் கண்டதாகிய வள்ளி* என்ற பெயரெச்சத் தொடரைப் பொறுத்தவரையில் அதனுடைய மிக நெருங்கிய மூல வாக்கியம் (4)-இல் உள்ளதாகத் தான் இருக்குமேயொழிய, 1(2)-இல் உள்ளதாக இருக்க முடியாது. காரணம், (3)-இல் உள்ள *கண்டது, ஆகிய* இவற்றுக்கிடையில் இயல்பாக அமைந்த அண்மை உறுப்பு நிலையானது (4)-இல் சிறப்பாகப் போற்றப்படுகின்றது.

### 3.0 சிக்கலும் தீர்வும்

3.1 *ஆகும், ஆவது* இரண்டும் *கண்டது* என்பதன் அண்மை யுறுப்புக்கள் ஆகும் நிலையை மேலே கண்டோம். இதனைக் கருத்தில் கொண்டு நோக்குகையில் இந்த இரண்டு உறுப்புக் களுக்கு நிகராக வாக்கியம் 1(1)-இலும் ஓர் உறுப்பு *கண்டான்* என்பதை அடுத்துக் குறிக்கப்பெற வேண்டும் என்பது புலனாகிறது. இது ஒரு சிக்கலான நிலை. இதை இரண்டு வகைகளில் தீர்க்க முற்படலாம். முதல் வகைத் தீர்வானது *கண்டான்* என்ற பயனிலைக்குள்ளேயே *ஆகும், ஆவது* என்பவற்றுக்கு நிகரான ஓர் உறுப்பைச் சுட்டுவதாகும். இரண்டாம் வகைத் தீர்வு, மேற்படி பயனிலையை அடுத்து *ஆகும், ஆவது, ஆவான்* ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைக்குறிப்பதாகும்.[2] இந்த இரண்டு வகைத் தீர்வுகளில் எது சிறப்பானது? எது தவிர்க்கற்பாலது? இரண்டுமே சிறப்பான தீர்வுகளாகத் தான் நமக்குத் தோன்றுகிறது. ஆகவே இந்தச் சிக்கலை இரண்டு வகைகளில் நாம் தீர்க்க முற்படலாம்.

3.2 முதல்வகைத் தீர்வை முதலில் கருத்தில் கொள்ளலாம். எடுத்துக்காட்டு (1)-இல் நிகழும் வாக்கியங்களுக்கு நிகராகப் பின்வரும் பெயரெச்சத் தொடர்கள் அமையும்.

---

2. *ஆகும், ஆவது* இரண்டும் பொதுவினைகளாகவும், *ஆவான்* என்பது சிறப்பு வினையாகவும் கொள்ளத்தக்கவையாகும். *முருகன் வள்ளியைக் கண்டான்* என்ற வாக்கியத்தில் *கண்டான்* என்பது ஓர் சிறப்பு வினையாதலின், இதனையடுத்து *ஆவான்* என்னும் சிறப்புவினை நிகழ்தல் இலக்கணத்தன்மையதாகவே கொள்ளப்படும்.

*5(1) முருகன் கண்ட வள்ளி ( ⇐1 (1) )*
*(2) முருகன் கண்டதாகிய வள்ளி ( ⇐1(2), (3) )*

இந்தப் பெயரெச்சத் தொடர்களில் நிகழும் *கண்ட*, *கண்டதாகிய* ஆகிய இரண்டு அமைப்புக்களையும் சற்றுச் சிந்தித்துப் பார்க்கலாம். இவ்விரு அமைப்புக்களுமே ஒரே பொருண்மையினவாகும். *கண்டதாகிய* என்பதில் நிகழும் *ஆகிய* என்னும் உறுப்புக்கு நிகராகக் *கண்ட* என்பதில் நிகழும் அகரக்கிளவி அமைகின்றது. அதாவது இவ்விரு அமைப்புக்களிலும் *ஆகிய* என்பது *கண்டது* என்பதை அடுத்தும், அகரக்கிளவியானது *கண்டு* என்பதை அடுத்தும் சிதறிய அதாவது, துணைநிலை வழக்கினவாகின்றன.[3] *கண்ட*, *கண்டதாகிய* இரண்டும் முறையே *கண்டான்*, **கண்டதாகும்/கண்டதாவது* ஆகியவற்றின் விகார வடிவங்களாகும். *கண்ட* என்பதில் உள்ள அகரக் கிளவியானது *கண்டான்* என்பதில் உள்ள *ஆன்* என்பதன் விகாரக் கிளவியாகவும் *கண்டதாகிய* என்பதில் உள்ள *ஆகிய* என்பது *ஆகும்/ஆவது/ஆவான்* என்பதன் விகார உறுப்பாகவும் அமைவதாகின்றன. இதன் மூலம் *கண்டான்* என்பதில் நிகழும் *ஆன்* என்னும் உறுப்பு, *ஆகும்/ஆவது/ஆவான்* என்பதுடன் தொடர்புடையதாதல் புலனாகின்றது. சற்று விளக்கமாகக் கூறவேண்டுமாயின், *கண்ட* என்பதில் உள்ள அகரக் கிளவியும், *கண்டதாகிய* என்பதில் உள்ள *ஆகிய* என்னும் உறுப்பும் சிதறிய வழக்கினவாதல் போன்றே *கண்டான்* என்பதில் நிகழும் *ஆன்* என்னும் உறுப்பும், *ஆகும்/ஆவது/ஆவான்* என்பதும் சிதறிய வழக்கினவாகின்றன. இந்த வழக்கு நிலையானது *ஆன்* என்னும் பால் (Gender) விகுதியானது *ஆகும்/ஆவது/ஆவான்* என்பதன் செயற்பாட்டுடன் பொருந்தியது என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

3.3 இனி இரண்டாம் வகைத் தீர்வினைக் காண்போம். *1(1)*-இல் உள்ள *முருகன் வள்ளியைக் கண்டான்* என்னும் வாக்கியம் பின்வருமாறு மீட்டுருவாக்கம் செய்யப்படும்.

*6(1)* *முருகன் வள்ளியைக் கண்டான் ஆகும்
*(2)* *முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது
*(3)* *முருகன் வள்ளியைக் கண்டான் ஆவான்

---

3. இந்த வழக்கு நிலையானது. *கண்டு* என்பதனை வினைமுற்றாகக் கொள்வதற்கு வகைசெய்கின்றது. ஏனெனில் இது *கண்டது* என்னும் ஒரு பொது வினைமுற்றுடன் சிதறிய வழக்கில் நிகழ்கின்றது. இதன் மூலம் செய்து வாய்பாட்டு வினைகள் பொது வினைமுற்றுகளுள் ஒருவகையாகக் கொள்ளத்தக்கன என்பது தெளிவாகின்றது.

இந்த மீட்டுருவாக்கம் 1(2), (3)-இல் நிகழும் *ஆகும், ஆவது* ஆகிய வற்றின் நிகழ்ச்சியைப் பின்புலமாகக் கொண்டதாகும். 6(3)-இல் அமைந்த மீட்டுருவாக்கம் இயைபு கருதி அமைந்த ஒன்றாகும். இந்த மீட்டுருவாக்கத்துக்கு வகை செய்வது பின்வரும் வாக்கிய வகையாகும்.

*(7) வள்ளியைக் கண்டவன் முருகன் ஆவான் (= 1 (1))*

இந்த வாக்கியத்தில் நிகழும் *கண்டவன்* என்பது *கண்டான்* என்பதன் மாற்றுவடிவமாகும். இந்த மாற்று வடிவத்துக்கு இயைபாகி நிற்பது *ஆவான்* என்னும் வினையாகும்.[4] மீண்டும் இங்கே *கண்டவன், ஆவான்* ஆகியவை அண்மை உறுப்புக்களாகக் கொள்ளத்தக்கவையாகும். காரணம், *கண்டவன்* என்பதும் *ஆவான்* என்பதன் விகாரவடிவமாகிய *ஆகிய* என்பதும் பின்வரும் பெயரெச்சத் தொடரில் அண்மையுறுப்புக்களாகின்றன.

*(8) வள்ளியைக் கண்டவனாகிய முருகன்*

இப்பெயரெச்சத் தொடர் வாக்கியம் (7)-உடன் தொடர்புடைய தாகும். இதனைக் கருத்தில் கொண்டு (7)-இல் உள்ள வாக்கியம் பின்வரும் வாக்கியத்தின் திரிபாகக் கருதத்தக்கதாகின்றது.

*(9) *வள்ளியை முருகன் கண்டவன் ஆவான்.*

மேலே (9)-இல் குறிக்கப்பெற்றுள்ள வாக்கியம், 6(3)-இல் அமைந்த **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவான்* என்ற வாக்கிய வகையை மீட்டுருவாக்கம் செய்ய வகை செய்கின்றது.[5]

---

4. *வள்ளியைக் கண்டவன் முருகன் ஆவான்* என்ற வாக்கியமும் *வள்ளியைக் கண்டது முருகன் ஆகும்* என்ற வாக்கியமும் ஒரே செய்தியை உணர்த்துவனவாகும். இவ்வாக்கியங்களில் அமைந்த *ஆவான், ஆகும்* உறுப்புக்களின் நிகழ்ச்சி முறையே *கண்டவன்* என்னும் சிறப்புவினையாலும் *கண்டது* என்னும் பொதுவினையாலும் கட்டுப்படுத்தப்படுகின்றன.

5. இதனை அடிப்படையாகக் கொண்டு கீழே உள்ள வாக்கிய அமைப்பினை அதனை அடுத்து உள்ளது போல் மாற்றியமைக்கலாம்.

   (அ) (உப்பூரிகுடி கிழார் மகனாவான்) உருத்திரசன்மன் ஆவான் செய்தது இந்நூற்கு உரை (இறையனார் அகப்பொருள், நூற்பா. 1. உரை)

   (ஆ) *(உப்பூரிகுடி கிழார் மகனாவான்) உருத்திரசன்மன் இந்நூற்கு உரை செய்தான் ஆவான்.

   மேலே (ஆ)பிரிவில் நிகழும் மாற்றியமைக்கப்பட்ட வாக்கியத்தினை நியாயப் படுத்துவற்கு இதன் அடியாகத் தோன்றிய *இந்நூற்கு உரை செய்தவன் ஆகிய (உப்பூரிகுடிகிழார் மகனாவான்)* உருத்திரசன்மன் என்ற பெயரெச்சத் தொடரும் ஒரு காரணமாகின்றது. இப்பெயரெச்சத் தொடரில் *ஆவான்* என்பதன் விகார வடிவமாகிய *ஆகிய* என்பது *உரை செய்தவன்* என்பதற்கு அண்மை உறுப்பாக நிகழ்வதைக் காணலாம். (அ) பிரிவில் உள்ள *உருத்திரசன்மன் ஆவான்* என்பதில் நிகழும் *ஆவான்* என்பது *ஆனவன்* என்பதற்கு நிகரானதாயின் (அ)பிரிவில் காணப்படும் வாக்கிய மாற்றம் அடிபட்டுப் போய்விடும்.

*முருகன் வள்ளியைக் கண்டான் ஆகும் (6(1)), *முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது (6(2)) ஆகிய மீட்டுருவாக்கங் களை நியாயப்படுத்துவதற்குப் போதுமான தடயங்கள் தமிழில் தென்படுகின்றன. இந்தத் தடயங்கள் எத்தகையன என்பது பற்றி இனிச் சிந்திக்கலாம்.

## 4.0 மீண்டும் மீட்டுருவாக்கத் தடயங்கள்

4.1 *ஆகும்* என்னும் பொதுவினை *ஆம்* என்று ஒடுங்கி, சிறப்பு வினைமுற்றுக்களை அடுத்து நிகழும் போக்கு பழந்தமிழிலும் உரையாசிரியர்கள் தமிழிலும் இயல்பாகக் காணப்படுகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் தெளிவுபடுத்தும்.

(10) புணராத முன் சொல் நிகழும் என்பாரை மறுத்தாராம்
(இறையனார் அகப்பொருள், நூற்பா. 15, உரை)

(11) தலைமகன்...ஆற்றாமை வாயிலாற் கூடினான் ஆம்
(இறையனார் அகப்பொருள் நூற்பா, 4, உரை)

(12) தலைமகன் கேட்பின் வரைவானாம்
(இறையனார் அகப்பொருள், நூற்பா, 30 உரை)

(13) பணியுமாம் என்றும் பெருமை (குறள் 978)

(14) இவை முதலாயின நினைந்து ஆற்றானாம்
(இறையனார் அகப்பொருள், நூற்பா.3. உரை)

(15) தலைமகள் ஆற்றாளாம் என்று தோழி ஆற்றாளாம்
(இறையனார் அகப்பொருள், நூற்பா 14, உரை)

4.2 இக்காலத்தமிழில் இத்தகைய வாக்கிய அமைப்புக்கள் அறிவிப்புச் சூழலில் (Reportive Context) இயல்பாக நிகழ்கின்றன. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டின் மூலம் அறியலாம்.

16 (1) மாதவி (மல்லிகாவிடம்): முருகன் வள்ளியைக் கண்டான்
(2) மல்லிகா (உமாவிடம்) : முருகன் வள்ளியைக் கண்டானாம்
(3) உமா (மல்லிகாவிடம்) : யார் சொன்னது?
(4) மல்லிகா (உமாவிடம்) : மாதவி சொன்னாள்.

மேலே (16)-இல் அமைந்த வாக்கியங்கள் உரையாடற் சூழலில் அமைந்தவையாகும். இச்சூழலில் ஓர் வாக்கியம் அல்லது அந்த வாக்கியம் உணர்த்தும் செய்தி 16(2)-இல் உள்ளதுபோல் இரண்டாம் கூற்றாக அமைகையில் *ஆம்* என்னும் உறுப்பு பயனிலையை அடுத்து நிகழ்கின்றது. இவ்வாறு இரண்டாம் கூற்றுவாக்கியம் பின்வரும் மீட்டுருவாக்க அமைப்பின் திரிபாக அல்லது அதனுடன் பொருந்திய ஒன்றாகக் கொள்ளத்தக்கதாகும்.

*(17) *எழுவாய் + ................... + பயனிலை - ஆகும்.*

*(17)*-இல் உள்ள இந்த அமைப்பானது இரண்டாம் கூற்றுத் தன்மையற்றதாய் *(10)* முதல் *(15)* வரையுள்ள வாக்கிய அமைப்புக் களுக்கும் பொருந்தும். இதனைக் கருத்தில் கொண்டு *6(1)*-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டான் ஆகும்* என்ற வாக்கிய அமைப்பை ஏற்றுக் கொள்வதில் தடையொன்றும் இருக்கமுடியாது. இவ்வாக்கிய அமைப்பின் ஏற்புடைமையைப் பின்வரும் வாக்கிய நிகழ்ச்சிகள் மேலும் உறுதிப்படுத்துகின்றன.

*(18) (அரசன் பொருளதிகாரம் இன்மையிற் கவல்கின்றான் என்பது கேட்டுச் செல்லா நின்றது உணர்ந்து) நம் பெருமான் அருளிச் செய்தான் ஆகும் (இறையனார் அகப்பொருள். நூற்பா. 1. உரை)*

*19 (1) முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்*
*மன்னா தாகும் வியங்கோட் கிளவி (தொல். சொல். சேனா. 226)*

*(2) நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை*
*கோடை யொற்றினும் வாடா தாகும் (குறுந்தொகை 388.1, 2)*

இவ்வெடுத்துக்காட்டுக்களில் *ஆகும்* என்னும் உறுப்பு *அருளிச் செய்தான், மன்னாது, வாடாது* ஆகிய வினைமுற்றுக்களை யடுத்து நிகழ்ந்து *6(1)*-இல் அமைந்த **முருகன் வள்ளியைக் கண்டான் ஆகும்* என்ற மீட்டுருவாக்கத்தை நியாயப்படுத்துவதைக் காணலாம்.

## 5.0 அது நெருடலன்று

5.1 இனி *6(2)*-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* என்ற மீட்டுருவாக்கத்தின் ஏற்புடைமையை ஆராயலாம். இது உள்ளபடியே சற்று நெருடலான மீட்டுருவாக்கம்தான். இந்த மீட்டுருவாக்கத்துக்கு உந்துதலாக நமக்கு அமைந்தது யாதெனில் *1(3)*-இல் உள்ள *முருகன் கண்டதாவது வள்ளியை* என்ற வாக்கிய அமைப்பாகும். *(6)*-இல் நிகழும் **முருகன் வள்ளியைக் கண்டான் ஆகும், *முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* ஆகிய மீட்டுரு வாக்கங்களின் ஏற்புடைமையைக் கருதுகையில் *6(2)*-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* என்ற மீட்டுருவாக்கம் ஏற்புடையதாகவே தோன்றுகிறது. ஆயினும் இந்த மீட்டுரு வாக்கத்தினை ஏற்றுக்கொள்ள *(6)*-இல் நிகழும் ஏனைய இரண்டு மீட்டுருவாக்கங்களை நாம் சார்ந்திருக்க முடியாது. **முருகன் வள்ளியைக் கண்டானாவது* போன்ற வாக்கிய அமைப்புக்களைச் செல்லுபடியாக்குவதற்கு முன்பு தமிழில் வாக்கிய நிகழ்ச்சிகளின் சூழல்களை நாம் ஓரளவுக்குப் புரிந்து கொள்ள வேண்டும்.

## 6.0 நிகழ்ச்சிக் கட்டுப்பாடுகள்

6.1 தமிழில் அமையும் வாக்கியங்களைத் தனிநிலை வாக்கியங்கள் எனவும் பிணைநிலை அல்லது கட்டுண்ட வாக்கியங்கள் (Bound Sentences) எனவும் இருவகையாகக் கொள்ளலாம். தனிநிலை வாக்கியங்கள் எந்தச் சூழலிலும் நிகழ வல்லனவாகும். எடுத்துக்காட்டாக, *முருகன் வந்தான், வள்ளி பாடினாள்* முதலான வாக்கியங்கள் எந்தச் சூழலிலும் நிகழ்வன வாகும். அதுமட்டுமல்ல இவற்றின் பொருண்மை விளக்கம் எந்தச் சூழலுக்கும் கட்டுப்பட்டதும் அல்ல. அதாவது, எல்லாச் சூழல் களிலும் தனிநிலை வாக்கியங்கள் உணர்த்தும் பொருண்மையானது மாறாத ஒன்றாகும். பிணைநிலை வாக்கியங்களின் போக்கு வித்தியாசமானது. இவற்றின் நிகழ்ச்சி குறிப்பிட்ட தொடரியற் சூழல்களால் கட்டுப்படுத்தப்பட்டதாகும். எடுத்துக்காட்டாக, *[முருகன் வந்தான் என்று] வள்ளி சொன்னாள்* என்ற வாக்கியத்தில் நிகழும் *[முருகன் வந்தான் என்று]* என்பது ஓர் பிணைநிலை வாக்கியமாகும். இது குறிப்பிட்ட சூழலில் மட்டுமே நிகழவல்லது. இவ்வாறே 16(2)-இல் உள்ள *முருகன் வள்ளியைக் கண்டானாம்* என்பதும் ஓர் பிணைநிலை வாக்கியமாகும். இதன் பொருண்மை விளக்கமும்கூட (16)-இல் குறிக்கப் பெற்றுள்ளது போன்ற ஓர் சூழலுக்குக் கட்டுப்பட்ட தாகின்றது. பிணை நிலை வாக்கியங்கள் மொழிவளர்ச்சியில் நேர்ந்த விளைவுகளாகும். உண்மையில் இந்த வாக்கியங்களும் மொழி வரலாற்றின் ஒரு கட்டத்தில் தனி நிலை வாக்கியங்களே. மொழியின் வளர்ச்சியானது முனைப்பாகும் போது, சில தனி நிலை வாக்கியங்கள் புதிய மொழியியற் சூழலில் இயங்க முடியாமற் போகின்றன. மொழியானது இதனால் அத்தகைய வாக்கியங்களைத் தனது கட்டுக்கோப்பினின்றும் ஒட்டுமொத்தமாகத் தவிர்த்து விடுவதில்லை. சில குறிப்பிட்ட மொழியியற் சூழல்களில் இயங்குமாறு அவற்றுக்கு வாழ்வளித்து அவற்றைப் பிணை நிலை வாக்கியங்களாக மொழி ஏற்றுக்கொள்கிறது. இந்தப் பின்னணியில்தான் 6(2)-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டானாவது* என்ற மீட்டுருவாக்கத்தினை நாம் அணுக வேண்டும். இந்த வகையில் பின்வரும் உரையாடற் சூழலில் *ஆவது* என்னும் உறுப்புடன் பொருந்திய வாக்கிய அமைப்புகளைக் கருத்தில் கொள்ளலாம்.

20 (1) மாதவன்: அனுமன் இலங்கைக்குச் சென்றானா?

(2) மாதவி: (அனுமன் இலங்கைக்குச்) சென்றானாவது. சென்று இலங்கையையே கலக்கிவிட்டல்லவா வந்திருக்கிறான்.

(3) மாதவன்: போன காரியம் என்னவாயிற்று; சீதையைக் கண்டானா?

(4) மாதவி: (சீதையைக்) கண்டானாவது. தான் ராம தூதன் என்பதை மெய்ப்பித்துவிட்டு அல்லவா வந்திருக்கிறான்.

மேலே (20)-இல் நிகழும் *அனுமன் இலங்கைக்குச் சென்றானாவது, (அனுமன் சீதையைக்) கண்டானாவது* ஆகியவை வினவுதற் பொருண்மையினவாய் அமைந்த பிணை நிலை வாக்கியங் களாகும். பிணை நிலை வாக்கியங்களானவை தனி நிலை வாக்கியங்கள் என்ற நிலையைக் கடந்து வந்தவையாகும். இதனைக் கருத்தில் கொண்டு நோக்குகையில் (20)-இல் உள்ள *சென்றானாவது, கண்டானாவது* ஆகியவை அமைந்த பிணை நிலை வாக்கியங்களுக்கு முன்னோடியாய் அமைந்தவை 6(2)-இல் நிகழும் **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* போன்ற வாக்கிய அமைப்புக்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில் 6(2)-இல் உள்ள இந்த வாக்கியம் வினவற் பொருண்மையை உணர்த்துவதன்று. 6(2)-இல் உள்ளது போன்ற தனி நிலை வாக்கிய வகைகளுக்கு மொழியில் இடமில்லையென்றால், (20)-இல் நிகழும் *(அனுமன் இலங்கைக்குச் சென்றானாவது), (அனுமன் சீதையைக்) கண்டானாவது* போன்ற வினவற் பொருண்மையை உணர்த்தும் பிணைநிலை வாக்கியங்களின் நிகழ்ச்சிக்கு மொழியில் இடமில்லாமல் போய்விடும். ஆகவே 6(2)-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* என்ற மீட்டுருவாக்கத்தை நாம் ஏற்றுக்கொள்ளாமல் இருக்க முடியாது. இது பிணைநிலை வாக்கியக் கோட்பாட்டின் மீது அமைந்த முடிபாகும். இதனைத் தவிர வேறொரு வகையிலும் 6(2)-இல் உள்ள மீட்டுருவாக்கத் தினை ஏற்புடையதாக்கலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

(21) பாங்கன்... அவன் சொன்ன இடம் நோக்கி செல்வான் ஆவது (இறையனார் அகப்பொருள், நூற்பா. 3 உரை)

(22) நகா நின்றன்றே சொல்லியது. அந்நகை ஒன்றுடைத்து என ஆற்றுவான் ஆவது (இறையனார் அகப்பொருள், நூற்பா, 12 உரை)

(23) தலைமகன் மாட்டுச் சென்று இக்குறை முடிக்கும் உபாயம் ஆராய்வாள் ஆவது (இறையனார் அகப்பொருள், நூற்பா, 9 உரை)

(24) இக்குலத்துக்கு வடுவுண்டு போலும் என உணர்வார் ஆவது (இறையனார் அகப்பொருள், நூற்பா, 28 உரை)

(25) அவர் குறித்த திங்களது வரவுகண்ட தாம் எடுத்துக்கொண்ட பொருள் முடியாது பெயர்வர் கொல்லோ என ஆற்றேன் ஆவது (இறையனார் அகப்பொருள், நூற்பா, 41 உரை)

இந்த ஐந்து எடுத்துக்காட்டுக்களில் முதல் நான்கும் உடன்பாட்டு வாக்கியங்களாயும், ஐந்தாவது எதிர்மறை வாக்கியமாகவும் அமைந்தவையாகும். இவ்விருவகை வாக்கிய வகைகளையும் கருத்தில் கொண்டு பின்வரும் வாக்கிய வகைகளை நாம் படைத்துக்கொள்ளலாம்.

*(26) *முருகன் வள்ளியைக் காண்பான் ஆவது*
*(27) *முருகன் வள்ளியைக் காணான் ஆவது*

இவற்றுடன் தொடர்புடையனவாகும் கீழே குறிக்கப் பெற்றுள்ள வாக்கியங்கள்.

*(28) முருகன் காண்பதாவது வள்ளியை*

*(29) முருகன் {காணாமை / காணாதது} ஆவது வள்ளியை*

இவற்றுள் (28)-இல் உள்ளது நிகழ்வுப் பொருண்மையையும் உணர்த்தவல்லது. இது நமது ஆய்வுக்கு ஒரு பிரச்சினையல்ல. (29)-இல் உள்ள வாக்கிய அமைப்பு இறப்பு, எதிர்வு இரண்டுக்கும் பொதுவானது. (28)-இல் உள்ளதை (26)-உடன் தொடர்புபடுத்த முடியும் என்றால் 1(3)-இல் உள்ள *முருகன் கண்டதாவது வள்ளியை* என்ற வாக்கிய அமைப்பையும் 6(2)-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* என்ற வாக்கிய அமைப்புடன் தொடர்புபடுத்த முடியும். இதன் மூலம் 6 (2)-இல் உள்ள இந்த மீட்டுருவாக்கம் நேரியது என்பது பெறப்படுகின்றது. மீண்டும் பார்ப்போம். (29)-இல் உள்ள அமைப்பு, இறப்பு, எதிர்வு இரண்டுக்கும் பொதுவானது என்று கண்டோம். இதன் மூலம் (27)-இல் உள்ள வாக்கியத்துக்கு மட்டுமல்லாமல் பின்வரும் வாக்கிய அமைப்புக்கும் (29)-இல் உள்ள வாக்கியம் உரிமையுடன் எதிர்மறையாகின்றது.

*(30) *முருகன் வள்ளியைக் கண்டிலன் ஆவது.*

எடுத்துக்காட்டு (27)-இல் உள்ள எதிர்மறைக்கு (26)-இல் உள்ள உடன்பாட்டு வாக்கியம் பொருந்துவது போல் (30)-இல் உள்ள எதிர்மறைக்கும் இணையான ஓர் உடன்பாட்டு வாக்கியம் வேண்டியதாகின்றது. இந்த உடன்பாட்டு வாக்கியம் எத்தகைய அமைப்பினதாய் இருக்கும்? நிச்சயமாக அது 6(2)-இல் உள்ள வாக்கிய அமைப்பினதாகத்தான் இருக்கும். இந்தச் சிந்தனைப் போக்கு 6(2)-இல் உள்ள **முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது* என்ற மீட்டுருவாக்கத்தை ஏற்புடையதாக்குகின்றது.

## 7.0 மீட்டுருவாக்கம் உணர்த்துவது என்ன?

7.1 இரண்டாம் வகைத் தீர்வின் அடிப்படையிலான ஆய்வு இத்துடன் முடிகின்றது. இந்த ஆய்வு (6)-இல் குறிக்கப்பெற்றுள்ள மீட்டுருவாக்கங்கள் அனைத்தையும் ஏற்புடையதாக்குகின்றது. (6)-இல் குறிக்கப்பெற்றுள்ள வாக்கிய அமைப்புகளை மேலும் ஆய்வு வசதிக்காக மீண்டும் இங்கே குறித்துக் கொள்ளலாம்.

6(1) *முருகன் வள்ளியைக் கண்டான் ஆகும்
(2) *முருகன் வள்ளியைக் கண்டான் ஆவது
(3) *முருகன் வள்ளியைக் கண்டான் ஆவான்

மேலே (6)-இல் நிகழும் வாக்கிய வகைகளில் *கண்டான் ஆகும், கண்டான் ஆவது, கண்டான் ஆவான்* ஆகியவை பயனிலைகளாகும். இப்பயனிலைகள் ஒவ்வொன்றும் இரண்டு உறுப்புக்களால் அமைந்திருத்தலைக் காணலாம். இதனைக் கருத்தில் கொண்டு பயனிலையின் அமைப்பினை *பயனிலைப் பகுதி + பயனிலை விகுதி* என்று வரையறை செய்து கொள்ளலாம். இங்கே குறிக்கப்படும் பகுதி, விகுதி என்ற சொற்கள் மரபிலக்கணங்களும், அமைப்பிலக்கணங்களும் குறிக்கும் பகுதி விகுதியினின்றும் முற்றிலும் மாறுபட்டவையாகும். சுருக்கம் கருதி, பயனிலைப் பகுதியைப் *பயன்பகுதி* என்றும் பயனிலை விகுதியைப் *பயன்விகுதி* என்றும் குறிக்கலாம். ஆக, (6)-இல் உள்ள பயனிலைகள் *பயன் பகுதி+பயன்விகுதி* என்ற அமைப்பினவாகும். இவ்வமைப்பில் *கண்டான்* என்பது பயன்பகுதியாகவும், *ஆகும், ஆவது, ஆவான்* என்பவை பயன்விகுதிகளாகவும் குறிக்கப்பெறும். இப்பயன் பகுதிகள் வினைமுற்றுக்களாயின் அவை பொதுவினைமுற்றுக்களாகவோ, சிறப்பு வினைமுற்றுக்களாகவோ அமையலாம். *முருகன் கண்டது வள்ளியை ஆகும்.* 1(3), *முருகன் கண்டதாவது வள்ளியை* 1(3) ஆகிய வாக்கிய வகைகளில் நிகழும் *கண்டது* என்னும் பயன்பகுதியானது பொது வினைமுற்றின் பாற்படும். பயன்பகுதிகளைப்போலவே பயன்விகுதிகளும் பொது, சிறப்பு என இருவகைப்படும். 6(1), (2)-இல் காணப்படும் *ஆகும், ஆவது* ஆகிய பயன்விகுதிகள் பொதுவினையின்பாற்படும். 6(3)-இல் உள்ள *ஆவான்* என்னும் பயன்விகுதி சிறப்பு வினையின் பாற்படும். பயனிலையின் அமைப்பு பற்றிய இந்தப் புதிய சிந்தனை 1(1)-இல் உள்ள *முருகன் வள்ளியைக் கண்டான்* என்ற வாக்கியத்தில் நிகழும் *கண்டான்* என்ற பயனிலைக்கும் பொருந்தும். இப்பயனிலையில் *கண்டு* என்பது பொது வினைத்தன்மையதாகிய பயன்பகுதியாகவும், அதனையடுத்து நிகழும் *ஆன்* என்பது சிறப்புப் பயன்விகுதியாகவும் குறிக்கப்பெறும். முதல் வகைத் தீர்வின் மீது அமைந்த ஆய்வினை

நினைவுகூர்ந்தால் 1(1)-இல் நிகழும் கண்டான் என்பதும் பயன்பகுதி+ பயன்விகுதி என்ற அமைப்பினது என்பது தெளிவாகும். செய்கு மற்றும் செய்யும் வாய்பாட்டுப் பயனிலைகளைப் பொறுத்தவரையில் செய் என்பது பயன்பகுதியாகவும், கு மற்றும் உம் ஆகியவை பயன்விகுதிகளாகவும் கொள்ளத்தக்கனவாகும்.

## 8.0 இருவகைப் பயன்விகுதிகள்

8.1 பயன்விகுதிகள் பயன்பகுதியுடன் பொருந்துமாற்றினைக் கருத்தில்கொண்டு அவற்றைப் புறநிலைப் பயன்விகுதிகள் எனவும் அகநிலைப் பயன்விகுதிகள் எனவும் இரண்டு பிரிவினவாகக் கொள்ளலாம். எடுத்துக்காட்டுக்கள் (6)-இல் உள்ளது போன்ற *ஆவான், ஆவது, ஆகும்* முதலிய பயன்விகுதிகள் புறநிலைப் பயன் விகுதிகளாகக் கருதத்தக்கனவாகும். இத்தகைய பயன்விகுதிகள் பொதுவாக விருப்ப (optional) உறுப்புக்களாய் அமையும். இவற்றுடன் பொருந்தும் பயன்பகுதிகள் இவையின்றியும் இயங்க வல்லனவாகும். புறநிலைப் பயன்விகுதிகளுடன் பொருந்தும் பயன்பகுதிகளில் நிகழும் வினைமுற்றுக்களில் பயன்விகுதிகட்கு இடமில்லை. ஆகவே அத்தகைய வினைமுற்றுக்களில் அமைந்த முற்று விகுதிகளை இருப்புப் பொருண்மைக்கு உரியனவாகக் கருத முடியாது.

8.2 அகநிலைப் பயன்விகுதிகள் என்பவை வினைமுற்றினின்றும் பிரிக்க முடியாத உயிர்நிலை (obligatory) உறுப்புக்களாகும். எடுத்துக்காட்டாக, *முருகன் வந்தான்* என்ற வாக்கியத்தில் உள்ள *வந்தான்* என்னும் பயனிலையில் நிகழும் *ஆன்* என்னும் பயன் விகுதி ஓர் உயிர்நிலை உறுப்பாகும். இத்தகைய பயன்விகுதிகள் இருப்புப் பொருண்மைக்குரியனவாகும். ஆக, முற்றுவினைகளில் நிகழும் முற்றுவிகுதிகளானவை அகநிலைப் பயன்விகுதிகளாக நிகழ்கையில் இயைபுப்பொருண்மையுடன் இருப்புப் பொருண்மையை உணர்த்தியும், புறநிலைப் பயன்விகுதிகளின் முன் நிகழ்கையில் இருப்புப் பொருண்மையை இழந்து இயைபுப்பொருண்மையை மட்டுமே உணர்த்தியும் நிகழும் என்பது தெளிவாகின்றது. இதனை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் கருதுகோளினை நாம் அமைத்துக் கொள்ளலாம்.

(31) இருப்பு வினைகளானவை தமக்குரிய இருப்புப் பொருண்மையை இழந்தும், இழக்காமலும் பிற பொருண்மைகளை உணர்த்தும் திறத்தனவாகும்.

புறநிலைப் பயன்விகுதிகள் இருப்புப் பொருண்மையை அடிப்படையாகக் கொண்டவையாகும். இப்பயன்விகுதிகள்

விருப்பநிலை உறுப்புக்களாய் நிகழும் பான்மையின எனக் குறித்தோம். இதனைக் கருத்தில் கொண்டு மேலும் ஓர் கருதுகோளை உருவாக்கிக் கொள்ளலாம்

(32) புறநிலைப் பயன்விகுதிகளாகிய இருப்பு வினைகள் விருப்ப உறுப்புக்களாயும் நிகழும் திறத்தினவாகும்

புறநிலைப் பயன்விகுதிகளின் இயல்புபற்றி மேலும் சிறிது பேச வேண்டியுள்ளது. இன்னும் சற்று தொலைவு சென்ற பிறகு இதனைப் பற்றிச் சிந்திக்கலாம். இப்போது பெயர்ப் பயனிலையில் அமையும் பயன்விகுதிகளைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கலாம்.

## பகுதி - 2

## 9.0 அல்வழி - வேற்றுமைப் பயன்விகுதிகள்

9.1 பெயர்ப் பயனிலைகளிலும் அகநிலை மற்றும் புறநிலைப் பயன்விகுதிகளின் நிகழ்ச்சியைச் சுட்டலாம். பெயர்ப் பயனிலைகளில் அமையும் பயன்விகுதிகளை இருவகையினவாகக் கொள்ளலாம். முதல்வகைப் பயன்விகுதிகள் எழுவாயைக் குறித்து நிற்கும் பயன்பகுதிகளை அடுத்து நிகழ்வனவாகும். இப்பயன்பகுதிகள் வேற்றுமை உருபு ஏலாதவை. இத்தகைய பயன்பகுதிகளை அடுத்து நிகழும் பயன்விகுதிகளை அல்வழிப் பயன்விகுதிகள் எனக் குறிப்பிடலாம். அல்வழிப் பயன்விகுதிகள் அசைநிலை உறுப்புக்களாய் (Optional Contituents) நிகழும் பெற்றியனவாகும். இரண்டாம் வகைப் பயன்விகுதிகள் இடப்பெயர்களை அடுத்தும் உடைமை அல்லது உரிமைப்பெயர்களையடுத்தும் நிகழ்வனவாகும். இப்பயன்பகுதிகளை வேற்றுமைப் பயன்விகுதிகள் எனக் குறிப்பிடலாம். வேற்றுமைப் பயன்விகுதிகளானவை பயன்பகுதியினின்றும் தவிர்க்க முடியாத உயிர்நிலை உறுப்புக்களாகும். வேற்றுமைப் பயன்விகுதிகளும் இடவேற்றுமையை அடுத்து நிகழும் பயன்விகுதிகளும் இருப்புப் பொருண்மையையும் இயைபுப் பொருண்மையையும் குறித்து நிற்க, ஐ வேற்றுமையை அடுத்து நிகழும் பயன்விகுதிகளானவை உடைமை, இருப்பு, இயைபு ஆகிய பொருண்மைகளை உணர்த்துவனவாய் அமையும். இதனைக் கருத்தில் கொண்டு வேற்றுமைப் பயன்விகுதிகளை இடப்பயன்விகுதிகள் (Locative Predicate Markers) எனவும் கிழமைப் பயன்விகுதிகள் (Possessive Predicate Markers) எனவும் இரண்டு வகைகளாகக் கொள்ளலாம். இக்காலத் தமிழில் அல்வழிப் பயன்விகுதிக்கு *முருகன் ஒரு மாணவன் (ஆவான்)* என்பதையும், இடப்பயன்விகுதிக்கு *முருகன் மதுரையில் இருக்கிறான்* என்பதையும், கிழமைப் பயன்விகுதிக்கு *முருகன் வேலினை உடையவன்* என்பதையும் எடுத்துக்காட்டுக்களாகக்

கொள்ளலாம். இனி, பழந்தமிழில் இம்மூன்று வகையான பயன் விகுதிகளும் பொருந்திய பயனிலைகளுக்குரிய எடுத்துக்காட்டுக் களைக் காண்போம். இக்கால வடிவங்கள் அடைப்புக்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

## 9.2 அல்வழிப் பயன்விகுதிகள் அமைந்த பயனிலைகள்

*33 (1) நீயும் தாயை (=தாயாவாய்) இவற்கு (அகம். 16.13)*

*(2) நீயே, தண்புனற் காவிரிக் கிழவனை (=கிழவனாவாய்) (புறம். 58.1)*

*(3) யாரை (=யாராவாய்) எலுவ யாரே நீயெமக்கு, யாரையும் அல்லைநொதும லாளனை (=நொதுமலாளன் ஆவாய்) (நற்றிணை. 395.1, 2)*

*(4) யாரீரோ (=யாராவீரோ) எம்விலங்கி யீர் (அகம். 390.14)*

*(5) எல்லுறு மௌவனாறும்
பல்லிருங் கூந்தல் யாரளோ (=யார் ஆவாளோ) நமக்கே
(குறுந்தொகை 19.4, 5)*

9.2.1 அல்வழிப் பயன்விகுதிகள் பொருந்திய பயனிலைகள் எழுவாயும் வேற்றுமை உருபேற்று நிகழும் பெற்றியனவு மாகும். இவ்வகையில் பின்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

*(6) இருவேம் (=இருவர் ஆவேம்) ஆய்ந்த மன்றல் இது (பத்துப்பாட்டு. 8.21)*

*(7) இருவேம் (=இருவர் ஆவேம்) நீந்தும் பருவரல்
வெள்ளம் அறிந்தனள் போலும் அன்னை (நற்றிணை. 399.4, 5)*

*(8) ஒருவீர் (=ஒருவராவீர்) ஒருவீர்க்கு (=ஒருவராவீர்க்கு)
ஆற்றுதிர் இருவீரும் (=இருவராவீரும்),
உடனிலை திரியீர் ஆயின்..... (புறம். 58. 20, 21)*

இந்த மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *இருவேம், ஒருவீர், இருவீர்* ஆகிய தொடர்களை முறையே **யாம் இருவேம், *நீவிர் ஒருவீர், *நீவிர் இருவீர்* என எழுவாய் பெய்தும் விளக்கலாம். இவ்வாறே *அரசனேன் (=அரசன் ஆவேன்) வந்தேன்* என்னும் வாக்கியத்தில் நிகழும் *அரசனேன்* என்பது **யான் அரசனேன்* என்ற வாக்கியத்தில் பயனிலையாய் நிகழ்தலைக் காண்கிறோம். *அரசனேன்* என்பது பயனிலை தவிர ஏனைய இலக்கணச் செயற்பாடுகளை மேற்கொள்கையில் அதனை *அரசன் ஆவேன்* என விரிப்பதுடன் *அரசன் ஆகிய யான்* எனவும்

விரிக்கலாம். *இருவேம், ஒருவீர், இருவீர்* ஆகியவற்றையும் இத்தகைய விரிவுகளால் விளக்கலாம்.

*9.2.2* அல்வழிப் பயன்விகுதிகள் விருப்ப உறுப்புக்களாகும் தன்மையன என முன்னர் நாம் குறிப்பிட்டிருந்தோம். இக்குறிப்பு *(33)*-இல் உள்ள முதல் ஐந்து எடுத்துக்காட்டுக்களுக்கு மட்டுமே பொருந்தும். இறுதியில் அமைந்த *இருவேம், ஒருவீர், இருவீர்* ஆகியவற்றுக்கு இது பொருந்துமாறில்லை. காரணம், இவற்றில் அமைந்த பயன்பகுதிகள் சிறப்பின்பாற்பட்டனவாய் அமையவில்லை. **இருவரேம், *ஒருவரீர், *இருவரீர்* ஆகிய அமைப்புக்களில் பயன்பகுதிகள் சிறப்பின்பாற்பட்டனவாய் உள்ளன. இத்தகைய அமைப்புக்களில் மட்டுமே பயன்விகுதிகள் விருப்பக்கிளவிகளாய் நிகழும் பெற்றியனவாகின்றன. அல்வழிப் பயன்விகுதிகள் பொதுப் பயன்பகுதிகளை (Impersonal Predicate Bases)யடுத்து நிகழ்கையில் அவை உயிர்நிலை உறுப்புக்களாகவே நிகழும்.

## 9.3 இடப்பயன்விகுதிகள் அமைந்த பயனிலைகள்

34 (1) யானே ஈண்டை யேனே யென்னலனே
ஆனா நோயொடு கான லஃதே
துறைவன் நம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே (குறுந்தொகை 97)

*ஈண்டையேன்* = ஈண்டு உள்ளேன்; *கானலஃது* = கானலில் உள்ளது; *(தம்) ஊரான்* = (தம்) ஊரில் உள்ளான்; *மன்றத் தஃது* = மன்றத்தில் உள்ளது. இவ்வெடுத்துக்காட்டில் பயன்விகுதிகளாய் அமைந்தவை *-ஏன், -அஃது, -ஆன்* ஆகியனவாகும். இவ்வாறே பின்வரும் ஒவ்வோர் எடுத்துக் காட்டிலும் கண்டு கொள்ளவும்.

(2) .....யாமே,...... துணையிலேம் தமியேம் பாசறை யேமே (நற்றிணை 341. 6, 10)

(3) ஆயமும் யானும் அறியாது அவணம் (நற்றிணை 323. 3)

(4) இன்றே இவணம் ஆகி (அகம். 225.4)

(5) அவ்வாய்த் தட்டையொடு அவணை யாகென (நற்றிணை 134. 5)

(6) இன்று நீ இவணை யாகி (நற்றிணை 215.8)

(7) நீர் அவணிர் ஆகி (அகம் 271. 9)

(8) நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோவென.......... (அகம். 390.8, 9)

(9) நெருநலும் இவணர் மன்னே (நற்றிணை 84.3)

(10) இவணும் வாரார் எவணரோ (குறுந்தொகை. 126.2)

(11) மலையிடை யிட்ட நாட்டரும் அல்லர்
மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர் (குறுந்தொகை 203.1, 2)

(12) நோயேம் ஆகுதல் அறிந்தும்
சேயர் தோழி சேய்நாட் டோரே (குறுந்தொகை 64. 4, 5)

(13) ..... இருள் யாவண தோநின் நிழல்வாழ் வோர்க்கே
(புறம். 102. 7, 8)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *-ஏம்* (பாசறையேம்), *-அம்* (அவணம்/இவணம்), *-ஐ* (அவணை/இவணை), *-இர்* (அவணிர்), *-ஈர்* (ஊரீர்), *-அர்* (இவணர்/எவணர்/நாட்டர்/ ஊரர்/சேயர்), *-அது* (யாவணது) ஆகியவை இடப்பயன்விகுதிகளாய் அமைகின்றன. இவற்றின்முன் நிகழும் பயன்பகுதிகள் இடவேற்றுமைப் பெயர்களாகும். முன்னர்க் குறித்தவாறு இடப்பயன்விகுதிகள் உயிர்நிலை உறுப்புக்கள் ஆகும்.

## 9.4 கிழமைப் பயன்விகுதிகள் அமைந்த பயனிலைகள்

35(1) மடவை மன்ற நீ (குறுந்தொகை 252.5)

(2) நோயை நெஞ்சே (குறுந்தொகை 128.5)

(3) தவிர்த்த தேரை விளர்த்த கண்ணை (புறம்.353.5)

(4) பெருவரை யடுக்கத்துக் கிழவன் என்றும்
அன்றை யன்ன நட்பினன்
புதுவோர்த்து அம்மஇவ் வழுங்க லூரே
(குறுந்தொகை. 385-5, 7)

(5) கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்
குவவுமென் முலையள் கொடிக் கூந்தலளே
(குறுந்தொகை. 132. 1, 2)

(6) இளையள் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் கையள்எம் அணங்கி யோளே
(குறுந்தொகை 119. 3, 4)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் கிழமைப்பயன்விகுதிகள் அமைந்த பயனிலைகள் பின்வருமாறு விரிக்கற்பாலனவாகும்.

36(1) மடவை = மடத்தினை/மடப்பத்தினை உடையை ஆவாய்
(2) நோயை = நோயை உடையை ஆவாய்
(3) தேரை = தேரை உடையை ஆவாய்
(4) கண்ணை = கண்ணை உடையை ஆவாய்
(5) நட்பினன் = நட்பை உடையன் ஆவான்
(6) புதுவோர்த்து = புதுவோரை உடைத்து ஆகும்
(7) வனப்பினள் = வனப்பை உடையள் ஆவாள்

(8) முலையள் = முலையை உடையள் ஆவாள்
(9) கூந்தலள் = கூந்தலை உடையள் ஆவாள்
(10) இளையள் = இளமையை உடையள் ஆவாள்
(11) எயிற்றள் = எயிற்றினை உடையள் ஆவாள்
(12) கையள் = கையை உடையள் ஆவாள்

மேலே (36)-இல் அமைந்த விரிவுகள் கிழமைப் பயன்விகுதிகளை [உடைமை+இருப்பு+இயைபு] என்ற பொருண்மையமைப்புக்கு உரியவையாக்குகின்றன. (36)-இல் பயனிலைகள் *மடவை ஆவாய்*, *நோயை ஆவாய்* என்பது போலவும் விரிக்கற்பாலனவாகும். இத்தகைய விரிவுகள் அமைகையில் *மடவை*, *நோயை* ஆகியவற்றினுள் உள்ள ஐயென்னும் கிழமைப் பயன்விகுதி [உடைமை+இயைபு] என்ற பொருண்மையமைப்புக்கு மட்டுமே உரியதாகும். காரணம், இருப்புப் பொருண்மையானது *ஆவாய்* என்பதில் நிகழும் *ஆகு* என்னும் கிளவியால் குறிக்கப்பட்டுவிடுகின்றது. இந்த விளக்கத்துக்கு மாறாக இருப்புப்பொருண்மையை *மடவை ஆவாய்* என்பதில் உள்ள ஐயென்கிளவிக்குச் சேர்ப்போமாயின் மேற்படி தொடரானது **மடப்பத்தினை உடையை ஆவாய் + ஆவாய்* என விரிக்கற்பாலதாகி விடும். இதனைத் தவிர்க்கும் வகையில் *மடவை ஆவாய்* என்பதில் அமைந்த ஐயென் கிளவிக்கு [உடைமை+ இயைபு] என்ற பொருண்மை அமைப்பை மட்டுமே உரியதாக்கப்படுகின்றது.

## 10.0 புதிய நோக்கில் உயர்திணைப் பெயர்கள்

10.1 கிழமைப்பயன்விகுதிகள் அமைந்த பயனிலைகள் பற்றிய சிந்தனையானது தமிழில் அமைந்த ஒருசார் உயர்திணைப் பெயர்களை ஒருபுதிய கோணத்தில் பார்க்க வகை செய்கின்றது. நண்பன், பகைவன், கிழவன், புலவன், துறைவன், வீரன், துணைவன் முதலான உயர்திணைப் பெயர்கள் அடிப்படையில் கிழமைப் பயன்விகுதிகளைக் கொண்ட அமைப்பினவாகக் கருதத் தோன்றுகின்றது. காரணம் இவை பின்வரும் அமைப்புக்களுடன் பொருண்மையில் ஒன்றுபடுகின்றன.

37 (1) (அ) நண்பன்
(ஆ) நண்பினன் (= நண்பு உடையன்/உள்ளவன்)
(2) (அ) பகைவன்
(ஆ) பகையினன் (= பகை உடையன்/உள்ளவன்)
(3) (அ) கிழவன்
(ஆ) கிழமையன் (= கிழமை உடையன்/உள்ளவன்)
(4) (அ) புலவன்
(ஆ) புலமையன் (= புலமை உடையன்/உள்ளவன்)

(5) (அ) துறைவன்
(ஆ) துறையினன்/துறையன் (=துறை உடையன்/உள்ளவன்)
(6) (அ) வீரன்
(ஆ) வீரத்தினன் (= வீரம் உடையன்/உள்ளவன்)
(7) (அ) துணைவன்
(ஆ) துணைமையன் (= துணை(மை) உடையன்/உள்ளவன்)

மேலே (37)-இல் குறிக்கப்பெற்றுள்ள அமைப்புக்களைக் கருதுகையில் (அ) பிரிவில் குறிக்கப்பெற்றுள்ள *நண்பன் பகைவன்* முதலான பெயர்கள் தொடக்கத்தில் குறிப்பு வினைமுற்றுப் பயனிலைகளாய்ச் செயற்பட்டவை என்பது புலனாகின்றது. இத்தகைய பெயர்கள் மேலும் ஓர் பயன்விகுதியை ஏற்று அல்வழிப் பயனிலைகளாகவும் செயல்படவல்லனவாகும். (அல்வழிப் பயனிலை எனக் குறிப்பதன் காரணம் இரண்டாவதாக அமையும் பயன்விகுதியானது அல்வழிப்பயன்விகுதியாகும்). பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் காணவும்.

38 (1) யான் நண்பனேன் ( = நண்பன் ஆவேன்)
(2) நீ பகைவனை ( = பகைவன் ஆவாய்
(3) யான் கிழவனேன் ( = கிழவன் ஆவேன்)
(4) யாம் புலவரேம் ( = புலவர் ஆவேம்)
(5) நீ துறைவனை ( = துறைவன் ஆவாய்)
(6) யான் வீரனேன் ( = வீரன் ஆவேன்)
(7) நீ துணைவனை ( = துணைவன் ஆவாய்)

மேலே (38)-இல் அமைந்த *நண்பனேன், பகைவனை* முதலான பயனிலைகள் (36)-இல் இடப்புறம் குறிக்கப் பெற்றுள்ள *மடவை, நோயை* முதலான பயனிலைகளுக்கு ஒப்பானதாகும். ஆயினும் ஒரு சிறு வேறுபாடு உண்டு. *மடவை, நோயை* போன்றவற்றில் அவை இன்ன பாலுக்குரியன என்ற குறிப்பு காணப்படவில்லை. காரணம் இவை **மடவு, நோய்* போன்ற பால்குறிக்கப் பெறாத பெயர்களைப் பயன்பகுதிகளாய்க் கொண்டுள்ளன. இவற்றை முறையே **மடவன், *நோயன்* என ஒரு குறிப்பிட்ட பாலுக்கு உரியனவாய் அமைத்தால் (38)-இல் உள்ளது போன்ற பாணியில் **மடவனேன்* (=மடவன் ஆவேன்), **நோயனை* (=நோயன் ஆவாய்) போன்ற பயனிலைகள் நமக்குக் கிடைக்கும். இப்பயனிலைகள் முற்றிலும் இலக்கணத் தன்மை பொருந்தியனவாகும். இதில் குறிப்பிடத்தகுந்த செய்தியாதெனில் **மடவனேன், *நோயனை* ஆகிய பயனிலைகளின் பயன்பகுதிகளாகிய **மடவன், *நோயன்* ஆகியவை, (38)-இல் நிகழும் *நண்பனேன், பகைவனை* ஆகிய

*பயனிலைகளின்* பயன்பகுதிகளாகிய *நண்பன், பகைவன்* ஆகியவற்றுடன் பொருந்துவனவாகின்றன. *மடவை, நோயை* ஆகியவை எங்ஙனம் முன்னிலைக்கு உரிய பயனிலைகளாய் அமைகின்றனவோ, அங்ஙனமே **மடவன் *நோயன்* ஆகியவை ஆண்பாற்குரிய பயனிலைகளாய் அமைகின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு *நண்பனேன், பகைவனை* ஆகிய வற்றில் நிகழும் *நண்பன், பகைவன்* ஆகியவற்றையும் ஆண்பாற் குரிய பயனிலைகளாகக் கொள்ளலாம். வளர்ச்சி நிலையில் *நண்பன், பகைவன்* முதலான பயனிலைகளை முந்தியனவாகவும் **மடவன், *நோயை* முதலானவற்றைப் பிந்தியனவாகவும் துணியலாம். காரணம் **மடவு* என்பதன் அடியாக *மடவம்* (குறுந்தொகை 20.4), *மடவை* (குறுந்தொகை 252.5) என்ற பயனிலைகள் அமைவதுபோல, *நண்பு* என்பதனடியாக **நண்பேன், *நண்பம்/*நண்பேம், *நண்பை* போன்ற பயனிலைகள் அமைவதில்லை. இவ்வாறே **பகைவன் *பகைவம்/*பகைவேம்* போன்ற பயனிலைகளும் மொழியில் அமைவதாகத் தோன்ற வில்லை. இவ்வாறு அமையாமைக்குக் காரணம் *நண்பனேன், நண்பனை, பகைவனேன், பகைவனை* ஆகிய பயனிலைகள் நமக்கு இயல்பாகத் தோன்றுகின்றன. **மடவன், *நோயை* ஆகியவற்றுக்கு **மடவு, *நோய்* ஆகியவை இயல்பான பயன்பகுதிகளாய் அமைவது போல், *நண்பனேன், பகைவனை* ஆகிய பயனிலைகளுக்கு *நண்பன், பகைவன்* ஆகியவை இயல்பான பயன்பகுதிகளாய் அமைகின்றன. இதன்மூலம் பால்குறித்த கிழமைப் பயன்விகுதிகள் பொருந்திய பயனிலைகள் காலத்தால் முந்தியவை, பிந்தியவை என இருவகையினவாய்க் கொள்ளத்தக்கனவாகின்றன. *நண்பன், தோழன்* முதலானவை காலத்தால் முந்தியவையாகும். *தேரன், கரியன்* ஆகியவை காலத்தால் பிந்தியவையாகும். மீண்டும் நினைவில் கொள்ளவும். *தீயன் ஆவேன், தீயன் ஆவாய்* ஆகியவற்றை முறையே *தீயனேன்/தீயேன், தீயனை/தீயை* என இருவகையாக ஒடுக்குவதைப் போல *நண்பன் ஆவேன், நண்பன் ஆவாய்* ஆகியவற்றை ஒடுக்க முடிவதில்லை. இவற்றை முறையே **நண்பனேன், *நண்பனை* என ஒடுக்க முடியுமே தவிர, **நண்பேன், *நண்பை* என ஒடுக்க முடியாது. காரணம், *நண்பன்* என்ற சொல்லும் *தீயன்* என்ற சொல்லும் சமகாலத் தோற்றம் கொண்டவையல்ல.

## 11.0 மாறுபட்ட பார்வை

11.1 அல்வழி, இடம், கிழமை ஆகிய பயன்விகுதிகளைக் கொண்ட பயனிலைகள் பற்றிய ஆய்வு மரபிலக்கணப் புலவர்

களால் குறிப்புவினை என்ற தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட ஒன்றேயாகும். ஆயினும் அவர்களுக்கு நமக்கும் பார்வையில் வித்தியாசமுண்டு. பயன்விகுதிகளை இருப்புப் பொருண்மைக்கு உரியனவாக நாம் கருதுகிறோம். இருப்புப் பொருண்மையை உணர்த்தும் பயன்விகுதிகள் கிழமைப்பயனிலைகளில் நிகழ்கையில் கிழமைப் பொருண்மையையும் சேர்த்து உணர்த்துவனவாகின்றன. அல்வழிப் பயனிலைகளில் (பார்க்கவும்: எ-டு. *(33)*) பயன்விகுதி யானது ஒரு சாரனவற்றில் விருப்ப உறுப்புக்களாயும், இன்னொரு சாரனவற்றில் உயிர்நிலை உறுப்புக்களாகவும் நிகழும் என்று கண்டோம். இவையெல்லாம் குறிப்புவினை பற்றிய நமது பார்வையானது மரபிலக்கணப் புலவர்களின் பார்வையினின்றும் மாறுபட்டது என்பதை உணர்த்துவனவாகும். அல்வழி, இடம், கிழமை ஆகிய பயன்விகுதிகள் பயனிலையாக்கத்தில் மேற்கொள்ளும் செயற்பாட்டினைக் கூர்ந்து நோக்கினால் வினை விகுதிகளையும் பெயர் விகுதிகளையும் ஏற்கும் சொற்கள் அனைத்தும் அடிப்படையில் பயன்பகுதி+பயன்விகுதி என்ற அமைப்புக்குரியனவாக இருக்குமோ என்று கருதத் தோன்றுகிறது. *நண்பன், பகைவன்* முதலான சொற்களின் மீது நாம் நிகழ்த்திய ஆய்வு இந்தக் கருதுகோளுக்கு வித்திடுகின்றது. பயன்விகுதிகளுக்கு நாம் சுட்டும் பண்புகளின் அடிப்படையில் இந்தக் கருதுகோளை ஓர் கோட்பாடாக நாம் மாற்றமுடியும். பயன்விகுதிகளின் பண்புகளை விட்டேற்றியாக நாம் இதுவரை பேசிவந்துள்ளோம். இனி இப்பண்புகளைக் கருதுகோள்களாகப் பின்வருமாறு அமைத்துக் கொள்ளலாம். இரண்டு கருதுகோள்கள் ஏற்கனவே *(31), (32)*-இல் சுட்டப் பெற்றுள்ளன. இவையும் இங்கே கருத்தில் கொள்ளப்படுகின்றன.

*39* *(1)* பயன்விகுதிகள் அடிப்படையில் இருப்பு வினைகளாகும்.

*(2)* பயன்விகுதிகள் விருப்ப உறுப்புக்களாயும் உயிர்நிலை உறுப்புக் களாயும் நிகழவல்லனவாகும்.

*(3)* பயன்விகுதிகள் தமக்குரிய இருப்புப்பொருண்மையை இழந்தும் இழக்காமலும் பிற பொருண்மைகளை உணர்த்தவல்லனவாகும்.

*(4)* பயன்விகுதிகள் இருப்புப்பொருண்மையை இழந்து வெற்றுறுப்புக் களாய் அமைகையில் பயன்பகுதிகளுடன் ஒருங்கிணைந்து அவற்றை ஒரு சொல் நீர்மையனவாக்குகின்றன.

மேலே *(39)*-இல் குறிக்கப்பெற்றுள்ள நான்கு கருதுகோள்களின் முதல் மூன்றிற்கான தடயங்களை இதுகாறும் நிகழ்த்திய ஆய்வில் கண்டோம். இறுதியில் உள்ள கருதுகோள் பற்றி நாம் ஏற்கனவே ஒரு தனி ஆய்வில் சிந்தித்துள்ளோம் (**Kothandaraman, R. 1979b:**

107-112) இந்தக் கருதுகோள் ஓரசைச் சொற்கள் அல்லாதவற்றின் உள்ளமைப்பை ஆராயத் துணைபுரியும். இதற்கான ஓர் அணுகுமுறையை நாம் இப்படி அமைத்துக் கொள்ளலாம்.

## *12.0 ஓர் இடைப்பிறவரல்*

*12.2* தமிழில் நடப்பு நிலையில் (Synchronic) உள்ள பல்வேறு விகுதிகளை முதலில் தொகுத்துக் கொள்ள வேண்டும். உயிர் மற்றும் மெய்ம்முதல் விகுதிகளாகிய இவை இயைபு, காலம், பன்மை, வேற்றுமை ஆகிய பொருண்மைகளை உணர்த்துவன வாயும் எச்சநிலையில் நிகழ்வனவாயும் அமையும். இவ்விகுதி களின் அனைத்தையும் *39(1)*-இல் உள்ள கருதுகோள்படி இருப்பு வினைகளாகக் கொள்வோம். பின்னர் இந்த இருப்பு வினைகளை *39(2),(3)*-இல் குறிக்கப்பெற்றுள்ள கருதுகோள்களின் பண்புகளுக்கு உரியனவாக்குவோம். ஒரு குறிப்பிட்ட விகுதி இந்த இரண்டு கருதுகோட்கும் இணங்காமல் தனித்து நிற்குமாயின் அதனை *39(4)*-இல் உள்ள கருதுகோளுக்கு உட்படுத்தலாம். எடுத்துக் காட்டாக *நண்பன்* என்ற சொல்லில் அமைந்த *நண்பு* என்னும் வடிவத்தைக் கருத்தில் கொள்வோம். இந்த வடிவம் *நண்+பு* என்ற அமைப்பினதாகும். இவ்வமைப்பில் நிகழும் புகரக் கிளவியானது செய்பு வாய்பாட்டு வினைகளில் நிகழும் ஒன்றாகும். *உண்பான், காண்பான்* முதலான வினைகளில் அது கால இடைநிலையாகவும் நிகழ்கின்றது. ஆனால் *நண்பு* என்ற வடிவத்தில் அதன் பொருண்மையையும் செயற்பாட்டினையும் சுட்டமுடியவில்லை. இந்த நிலையில் *39(4)*இல் உள்ள கருதுகோள் இதன்மீது செயற்படும். அதாவது *நண்பு* என்பதில் நிகழும் புகரக் கிளவி தனது இருப்புப்பொருண்மையை இழந்து *நண்* என்னும் பகுதியுடன் இணைந்துவிட்டது. இவ்வாறே *ஏழை* என்ற சொல்லையும் நாம் ஆராயலாம். *ஏழ்+ஐ* என்ற அமைப்பை யுடைய இந்தச் சொல்லில் நிகழும் ஐகாரம் பிற இடங்களில் முன்னிலை விகுதியாகவும், வேற்றுமை உருபாகவும் நிகழ்கின்றது. ஆனால் *ஏழை* என்னும் வடிவத்தில் அதன் இலக்கணப் பொருண்மையையும், செயற்பாட்டினையும் சுட்ட முடியவில்லை. இவ்வாறு இலக்கணப்பொருண்மையும், செயற்பாடும் இன்ன தென்று அறியமுடியாத நிலையில் அமையும் விகுதிகளை *39 (4)*இல் உள்ள கருதுகோளின் கவனத்துக்கு விட்டுவிடலாம். இதில் முக்கியமான வரையறை என்னவெனில், *39(4)*-இல் உள்ள கருதுகோளுக்கு இலக்காகும் விகுதிகள் நடப்பில் ஏதாவது ஓர் அமைப்பில் நிகழ்வதாக இருக்க வேண்டும். இந்த ஆய்வு *நண்பு,*

*ஏழை* ஆகியவற்றை வரலாற்று நிலையில் பயன்பகுதி+பயன்விகுதி என்ற அமைப்பிலான பயனிலைகளாகக் கொள்ளும். மேலும் ஈரசை மற்றும் மூவசைச் சொற்களை இந்த ஆய்வானது துளைத்துச் சென்று அவை தோன்றுவதற்கு நிலைக்களனாய் அமைந்த ஓரசைச்சொற்கள் யாவை என்பதைச் சுட்டும். இத்தகைய ஆய்வில் நாம் பல இடர்ப்பாடுகளைச் சந்தித்தாக வேண்டித்தான் இருக்கும். நடைமுறையில் உள்ள மீட்டுருவாக்கக் கோட்பாடுகள் ஓரளவுக்குத்தான் நமக்குத் துணைபுரியும். ஆகவே புதிய சிந்தனைகளின் அடிப்படையில் மேலும் தேவையான கருதுகோள்களை உருவாக்கிக் கொண்டாலொழிய நமது சிந்தனையில் தென்பட்ட இந்த ஆய்வு முறையைச் செயல்படுத்த முடியாது.

## 13.0 பகுதிப்பொருள் விகுதி

13.1 இனி, பெயர்ப் பயனிலைகளில் நிகழும் பயன்பகுதிகள் அமைப்பைப் பற்றிச் சற்றுச் சிந்திப்போம். *நாயினேன், பகையினேம்* ஆகிய பயனிலைகள் *நாயேன், பகையேம்* எனவும் அமையற் பாலனவாகும். *நாயினேன் பகையினேம்* ஆகியவற்றில் நிகழும் *இன்* என்னும் உறுப்பு *நாயேன், பகையேம்* ஆகியவற்றில் இடம்பெறவில்லை. இப்போது சிக்கல் என்னவெனில் *நாயினேன், பகையினேம்* இவற்றில் நிகழும் இன்னென் கிளவி பயன்பகுதிக் குரியதா, பயன்விகுதிக்குரியதா என்பதாகும். மரபிலக்கணங்கள் இக் கிளவியைச் *சாரியையாகக்* குறிக்கும். சாரியை பொருண்மை யிழந்த ஓர் உறுப்பாகும். 39(4)-இல் உள்ள கருதுகோளின்படி இன்னென் *சாரியை* இருப்புக் கிளவியாய் அமைந்து பொருண்மை யிழந்த வடிவமாகும். ஆனால் இந்தக் கருதுகோளின்படி இவ்வுறுப்பானது *நாய், பகை* ஆகியவற்றுடன் இணைந்து முறையே **நாயின், *பகையின்* என ஒரு சொல் நீர்மையனவாய் அமைய வேண்டும். ஆனால் அவ்வாறு நேரவில்லை. *நாயேன், பகையேன்* ஆகியவற்றில் இவ்வுறுப்பின் நிகழ்ச்சியே காணப்பட வில்லை. இதன்மூலம் இந்த உறுப்பானது விருப்பக் கிளவி என்பது பெறப்படுகின்றது. 39(2)-இல் உள்ள கருதுகோள் மூலம் பயன்விகுதிகள் விருப்ப உறுப்புக்களாகவும் நிகழவல்லவை என்பது பெறப்படுகின்றது. இன்னென் கிளவி *நாயேன், பகையேம்* ஆகியவற்றுள் நிகழாமையைக் கருதுகையில் ஓர் விருப்பப் பயன்விகுதியின் பண்புக்கு அது உரியதாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு இன்னென் கிளவியை *நாய், பகை* ஆகியவற்றுக் குரியதாக்கி **நாயின், *பகையின்* என்ற வடிவங்களை அமைத்துக்

கொள்ளலாம். இத்தகைய வடிவங்களைத் தொன்னிலையில் அமைந்த பயனிலைகளாகக் கருதலாம். மரபிலக்கணச் சிந்தனையை ஒட்டி இவற்றில் நிகழும் இன்னென் கிளவியைப் பகுதிப்பொருள் விகுதியாகச் சுட்டலாம். பகுதிப்பொருள் விகுதிகள் வரலாற்று நிலையில் இருப்புப்பொருண்மையை உணர்த்திய பொதுப் பயன் விகுதிகளாகக் கருதத்தக்கனவாகும். பொருண்மையை இழந்து பகுதிப்பொருள் விகுதியாகிய இன்னென் கிளவியின் நிகழ்ச்சியைப் பின்வரும் தொல்காப்பிய நூற்பாவில் காணலாம்.

(40) இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே (சொல். சேனா. 200)

இந்நூற்பாவில் நிகழும் *இறப்பின், நிகழ்வின், எதிர்வின்* ஆகிய வற்றில் அமைந்த இன்னென் கிளவியின் நிகழ்ச்சியை எப்படி விளக்குவது?[6] (39)-இல் அமைந்த கருதுகோளின் துணையின்றி இதனை விளக்கமுடியாது. *இறப்பின், நிகழ்வின், எதிர்வின்* ஆகியவற்றில் நிகழும் இன்னென்கிளவி *நாயினேன், பகையினேம்* என்பவற்றுள் உள்ள இன்னென் கிளவியைப் போன்றே ஓர் விருப்ப உறுப்பாகும். பொருண்மையை இழந்தும் இவ்வுறுப்பு தான்சார்ந்த பகுதியுடன் ஒன்றுபடாமல் சாரியையாகத் தனித்து நிற்கின்றது. இதனைக் கருத்தில் கொண்டு 39(4)-இல் உள்ள கருதுகோளைப் பின்வருமாறு செப்பம் செய்து கொள்ளலாம்.

(41) பயன்விகுதிகள் இருப்புப்பொருண்மையை இழந்து வெற்றுறுப்புக் களாய் அமைகையில் இவை பயன்பகுதிகளுடன் இணைந்து புதிய பயன்பகுதிகளை உருவாக்கவோ அல்லது விருப்பத் தன்மையன வாகிய பகுதிப்பொருள் விகுதிகளாய் அமையவோ செய்யும்.

---

6. தற்செயலாக நாயது வந்தது என்ற வாக்கிய வகை நமக்கு நடைமுறையில் கிடைக்கின்றது. இவ்வாக்கியத்தில் நிகழும் *நாயது* என்னும் தொடர் *நாயானது* என்பதுடன் பொருந்தியதாகும். *நாயானது* என்பதில் நிகழும் *ஆனது* என்னும் உறுப்பு *ஆகு* என்னும் இருப்பு வினையடியாகத் தோன்றியதாகலின் *ஆனது* என்பதைப் பயன்பகுதியாகக் கொள்ள வழி பிறக்கின்றது. *நாயது* என்பதில் உள்ள அதுவென் கிளவி *நாயானது* என்பதில் உள்ள *ஆனது* என்பதுடன் பொருந்துதலின் அதுவும் பயன்பகுதியாகக் கொள்ளத்தக்கதாகின்றது. *நாயது* என்னும் தொடரானது வேற்றுமையுருபுகளின் முன்னரும் நிகழவல்லது. எ-டு. *நாயதை. நாயதை* என்னும் வேற்றுமைத் தொடருடன் *நாயினை* என்பதும் பொருட் பொருத்தமுடையதாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டால் *நாயதை* என்பதில் நிகழும் அதுவென் கிளவியைப் போல *நாயினை* என்பதில் நிகழும் இன்னென் கிளவியும் பயன்பகுதியாகக் கொள்ளத்தக்கதாகின்றது.

இக்கருதுகோள்படி *நாயினேன், பகையினேம்* ஆகிய பயனிலைகள் தமக்குள் **நாயின் *பகையின்* என்ற அல்வழித் தன்மையனவாகிய வரலாற்றுப் பயனிலைகளைக் கொண்டுள்ளனவாகக் கருதப் படும். இத்தகைய வடிவங்கள் வேற்றுமை உருபுகளின் முன்னரும் நிகழற்பாலனவாகும். எ-டு: *நாயினை, பகையினால்.* (41)-இல் உள்ள கருதுகோள் *குன்றம், மார்பு, வளையல்* ஆகியவற்றில் நிகழும் *-அம், -பு, அல்* ஆகிய பகுதிப்பொருள் விகுதிகளையும் தழுவ வல்லதாகும். மேலும் (41)-இல் உள்ள கருதுகோள் தமிழில் காணப்படும் *அன், உம், அம், அற்று, இற்று, ஏ* முதலான சாரியைகளுக்கும் பொருந்தும்.

13.2 **நாயின், *பகையின்* போன்ற வரலாற்றுப் பயனிலைகள் நடைமுறையில் வேற்றுமையுருபுகளின் முன்னரும், இயைபுப் பண்புகளைக் குறிக்கும் அகநிலைப் பயன்விகுதிகளின் முன்னரும் மட்டுமே நிகழும் நிலை காணப்படுகின்றது. இத்தகைய பயனிலை களைக் கருத்தில் கொண்டு **அது நாயின்* (=அது நாய்); **நாயின் வரும்* (=நாய்வரும்) என்பன போன்ற வாக்கியங்களை வரலாற்று நிலையில் மீட்டுருவாக்கம் செய்யமுடியும். இந்த வாக்கியங்களுக்கு நிகரான இக்கால வாக்கியங்களாக *அது நாய் ஆகும், நாயானது வரும்* ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.



# 9. ஒப்பில் போலியும் ஒப்புடைப் போலியும்

## 1.0 இயல்பு வினையும் இலக்கண வினையும்

தமிழில் வழங்கும் பலவேறு வகையான வினைகளுள் இயல்பு வினைகள் (Natural or Lexical Verbs), இலக்கண வினைகள் Grammatical Verbs) ஆகியவையும் அடங்கும். இயல்பு வினைகள் மூன்று காலங்களிலும், இருதிணை ஐம்பால் மூவிடத்தும் வினைத் திரிபுகளை மேற்கொள்வதுடன், இருவகை எச்சவினைகளைக் குறைவின்றிப் படைத்துக் கொள்ளும் தன்மையனவும் ஆகும். இலக்கணவினைகள் இத்தன்மையன அல்ல என்பதை இக்கட்டுரையின் போக்கில் உணரலாம்.

## 2.0 போல் – ஓர் இலக்கண வினை

2.1 தமிழில் நிகழும் *போல்* என்னும் வினையடி இலக்கண வினையின் பாற்பட்டதாகும். இந்த வினையடியாக அமையும் வினைத்திரிபுகளை ஒப்பில் போலி வினைகள் என்றும் ஒப்புடைப் போலி வினைகள் என்றும் இருவகையாகக் கொள்ளலாம். ஒப்புடைப் போலி ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துவதாகும். பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் நிகழும் போலி வினைகள் ஒப்புமைப் பொருண்மையனவாகும்.

(1) கயல்விழி கனிமொழியைப் போல் இனிமையாகப் பாடினாள்

(2) கயல்விழி அழகில் கனிமொழியைப் போன்றவள்

(3) கயல் விழியைப் போன்ற நல்ல மாணவி

2.2 முதல் எடுத்துக்காட்டில் *போல்* என்னும் வினையடி வினையெச்சமாகச் செயல்படுகின்றது. அதன் இடத்தில் *போல, போன்று* ஆகிய வினையெச்ச வினைகளும் நிகழற்பாலனவாகும். இரண்டாம் எடுத்துக்காட்டில் நிகழும் *போன்றவள்* என்ற வினையமைப்பும், மூன்றாம் எடுத்துக்காட்டில் நிகழும் *போன்ற* என்ற பெயரெச்ச வினையும் செய்தவள், செய்த என்ற வாய்பாட்டில் அமைந்தவை போலத் தோன்றினும் அவை இறந்தகாலப் பொருண்மையினை உணர்த்துவன அல்ல. மூன்றாம்

எடுத்துக்காட்டில் உள்ள *போன்ற* என்னும் பெயரெஞ்சு கிளவி நிகழும் இடத்தில் *போலும்* என்னும் பெயரெஞ்சு கிளவியும் செம்மை வழக்கில் (Free Variation) நிகழவல்லதாகும். மேல் எடுத்துக் காட்டுக்கள் மூன்றிலும் *போல்* என்பதன் மீதமைந்த போலி வினைகளின்கண் காணப்படும் இப்பண்புகள் மேற்படி வினைகளை இலக்கணவினைகளாகக் கொள்ள வகை செய்கின்றன. இத்தகைய பண்புகளை இயல்புவினைகளின்பால் காணமுடியாது.

### 3.0 ஒப்பில் போலி

3.1 போலி வினைகள் ஒப்பில் போலியாகச் செயல்படுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(4) அமைச்சர் நேற்று இங்கு வந்தார் போலும்

(5) இவள்தான் முருகன் சொன்ன மாணவி போலும்

இந்த இரண்டு எடுத்துக்காட்டுகளும் இக்காலத் தமிழில் பின் வரும் பொருண்மை விளக்கத்தை ஏற்பனவாய் அமைவனவாகும்.

(6) அமைச்சர் நேற்று இங்கு [ வந்தார் { என்று / போல் } / வந்தாற் போல் ] தோன்றுகிறது ( = (4) )

(7) இவள்தான் முருகன் சொன்ன மாணவி என்று தோன்றுகிறது.

எடுத்துக்காட்டுக்கள் (4), (5)-இல் நிகழும் *போலும்* என்னும் ஒப்பில் போலி ஊகப் பொருண்மையை உணர்த்துவதாகும். இப் பொருண்மையை உணர்த்தும் ஒப்பில் போலியைப் பழந்தமிழிலும் காப்பியத் தமிழிலும் இடைக்காலத்தனவாகிய பக்தி இலக்கியங் களிலும் காணமுடியும். ஆயினும் எல்லா இடங்களிலும் ஒப்பில் போலியானது ஊகப் பொருண்மையை உணர்த்துவதாகக் கருத முடியாது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் சிந்தனைக் குரியனவாகும்.

(8) வாரார் போல்வர் நம் காதலர்
வாழேன் போல்வல் தோழி யானே (குறுந்தொகை 103- 5, 6)

(9) உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்று
அமிழ்த மூறும் அம் செவ்வாய்க் கமழகில்
ஆர நாறும் அறல்போற் கூந்தல்
பேரமர் மழைகட் கொடிச்சி
மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே (குறுந்தொகை 286)

(10) நெய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி அத்தை

பெருங்கல் நாடன் வரைந்தென அவனெதிர்
நன்றோ மகனே என்றனென்
நன்றே போலும் என்றுரைத் தோனே (குறுந்தொகை 389)

(11) ஆய்ப்பொன் அரிச்சிலம்பும் சூடகமும் மேகலையும்
ஆர்ப்ப வார்ப்ப
மாயஞ்செய் வாளவுணர் வீழநங்கை மரக்கான்மேல்
வாளமலை யாடும் போலும்
மாயஞ்செய் வாளவுணர் வீழநங்கை மரக்கான்மேல்
வாளமலை யாடு மாயின்
காயா மலர்மேனி ஏத்தி வானோர் கைபெய் மலர்
மாரி காட்டும் போலும் (சிலம்பு, வேட்டுவவரி 12:11)

(12) அந்நாள் ஆங்கவன் இட்ட சாபம்
இந்நாள் போலும் இளங்கொடி கெடுத்தனை
(மணிமேகலை 17.47, 48)

(13) நடுவுநின் றுலகமோம்பல் நல்லதே போலு
மென்றான் (சீவகசிந்தாமணி 211.4)

(14) அமரவோர் அங்கமாறும் வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவராய சாதியந் தணர்க ளேலும்
நுமர்களைப் பழிப்ப ராகில் நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள் தாம் புலையர் போலும் அரங்கமா நகருளானே
(தொண்டரடிப் பொடியாழ்வார், திருமாலை 43)

(15) அடிமூன்றில் இவ்வுலகம் அன்றளந்தாய் போலும்
(பூதத்தாழ்வார், 2-ம் திருவந்தாதி 5)

(16) பகலும் இரவும் தானேயாய்ப் பாரும் விண்ணும் தானேயாய்
நிகரில் சுடராய் இருளாகி நின்றார் நின்றஊர் போலும்
துகிலின் கொடியும் தேர்த்துகளும் துன்னிமாதர் கூந்தல்வாய்
அகிலின் புகையால் முகிலேய்க்கும் அணியார் வீதி அழுந்தூரே
(திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி. 7. 5.5)

(17) நச்சழல் பொய்கையில் நாகத்தினோடு
பிணங்கிநீ வந்தாய் போலும்
(திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி. 10.7.12)

(18) ஞானத்தின் ஒண்சுடராய் நின்றார் போலும்
நன்மையும் தீமையும் ஆனார் போலும்
தேனொத்து அடியார்க்கு இனியார் போலும்
திருச்சாய்காட் டினிதுறையும் செல்வர் தாமே
(அப்பர் தேவாரம். 6.82.1)

(19) கானிரிய வேழம் உரித்தார் போலும்
காவிரிப்பூம் பட்டினத்து உள்ளார் போலும்
வானிரிய வருபுரமூன் றெரித்தார் போலும்

வடகயிலை மலையதுதம் இருக்கை போலும்
ஊனிரியத் தலைகலனா வுடையார் போலும்
உயர்தோணி புரத்துறையும் ஒருவர் போலும்
தேனிரிய மீன்பாயும் தெண்ணீர்ப் பொய்கைத்
திருச்சாய்காட் டினிதுறையும் செல்வர் தாமே
(அப்பர் தேவாரம். 6.82.3)

(20) தொண்டர் பரவச் சுடர்சென் றணவ
அண்டத் தமரும் அடிகள் ஊர்போல்
வண்டல் அலையுள் கெண்டை மிளிர
கொண்டல் அதிரும் கூட லூரே
(திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி. 5.2.5)

(21) ......தன் தாள் அடைந்தார் கட்கு
வானம் காட்டுவர்போல் வள்ளியூரரே(அப்பர் தேவாரம். 5.26.3)

(22) பல்லில் ஓடுகை ஏந்திப் பலிதிரி
செல்வர்போல் திருநாகேச் சுரவரே (அப்பர் தேவாரம். 5.52.1)

(23) எந்தம் அடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்தம் திரைவாய் ஒற்றியூரே (சுந்தரர் தேவாரம் 91.2)

(24) தவழு மதிசேர் சடையாற் கிடம்போல்
உகளும் திரைவாய் ஒற்றி யூரே (சுந்தரர் தேவாரம் 91.3)

மேலே (8) முதல் (24) வரை குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக்காட்டுக் களில் நிகழும் ஒப்பில் போலி வினைகள் ஊகப் பொருண்மை யினை உணர்த்தவனவாகக் கொள்வதற்கில்லை. இந்த எடுத்துக் காட்டுகளில் நிகழும் ஒப்பில் போலி வினைகள் உணர்த்தும் பொருண்மையை மரபிலக்கணங்களும் அவற்றின் உரையாசிரியர் களும் தெளிவுபடுத்தியதாகத் தோன்றவில்லை. தொல்காப்பியர் ஒப்பில் போலியை உரையசைக் கிளவி என்று குறிப்பதுடன் அமைந்துவிடுகிறார் (சொல். சேனா. 278). எடுத்துக்காட்டு (8)-இல் நிகழும் *போல்வர், போல்வல்* ஆகிய ஒப்பில் போலிகளை அசை நிலை என்று குறிப்பார் உரையாசிரியர். ஒப்பில் போலி உறுதிப் பொருண்மையைக் குறிப்பதாகவும் சிலர் கருதுவர்.[1] இக்கருது கோளை வலியுறுத்துவதற்கான போதிய மொழியியற்சான்றுகள் இன்மையால் இதனை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

---

1. *அடி மூன்றில் இவ்வுலகம் அன்றளந்தாய் போலும்* (பூதத்தாழ்வார், 2-ஆம் திருவந்தாதி 5), *நடுவுநின் றுலகம் ஓம்பல் நல்லதே போலும் என்றான்* (சீவக சிந்தாமணி 211.4) ஆகிய எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *போலும்* என்னும் வினை ஒப்பில் போலியாகிய உறுதிப் பொருண்மையை உணர்த்துவதாகச் சிலர் கூற இக்கட்டுரையாசிரியர் கேட்டதுண்டு. இதை ஏற்பதற்குச் சான்று ஏதும் இல்லை.

ஒப்பில் போலிகளை உரையசைக்கிளவி என்றும், அசைநிலைக் கிளவி என்றும் சுட்டுவது அவற்றின் உண்மையான இலக்கணத் தன்மையை விளக்குவதாகாது.

3.2 வாக்கிய அமைப்பில் ஒப்பில் போலியின் இலக்கணச் செயற்பாடு எத்தகையது என்பதைக் கண்டறிவது இன்றியமை யாத ஒன்றாகும். மேலே (8) முதல் (24) வரையுள்ள எடுத்துக் காட்டுக்களில் நிகழும் *போல்வர்* (8), *போல்வல்* (8), *போல்வன்* (9), *போலும்* ((10)-(19)), *போல்* ((20)-(24)) ஆகிய ஐந்து ஒப்பில் போலிகளின் நிகழிடத்தைக் கூர்ந்து நோக்கினால் ஓர் உண்மை புலனாகும். இந்த ஐந்து ஒப்பில் போலிகளும் வாக்கிய அமைப்பில் பயனிலையாகச் செயல்படும் உறுப்பையடுத்து நிகழ்வது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். தமிழில் பயனிலை உறுப்பையடுத்து நிகழ்வது உள்வினையாகவோ (Copula Verb) அல்லது சில குறிப்பிட்ட இலக்கண உருபன்களாகவோதான் அமையும். இவற்றுள் உள்வினை நிகழ்ச்சி ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

## 4.0 போல் – ஓர் உள்வினை

4.1 உள்வினை என்று நாம் இங்கே குறிப்பிடுவது Copula என்று ஆங்கிலத்தில் குறிக்கப்படும் வினைக்கு நிகரான ஒன்றையாகும். John is a student என்பதில் is என்பது உள்வினையாகக் கருதப் பெறும். மலையாளத்தில் *ஆணு* என்பது உள்வினையாகும். எ-டு: *அவன் முருகனாணு.* உள்வினையானது உளதாதல் பொருண்மையை உணர்த்தும் ஓர் இருப்புவினை (Be Verb) ஆகும். *உள்* என்னும் வினையடியாய் அமைந்த *உளன், உளர், உளது* முதலான வினைகளில் இப்பொருண்மையின் நிகழ்ச்சியினை அறியலாம். உள்வினை என்ற தொடர் இங்கு Copula வினையைக் குறிக்கும் ஓர் கலைச் சொல்லாகப் பயன்படுத்தப்படுகிறது. முன்னர்க் குறிப்பிட்டது போல் தமிழில் உள்வினையானது வாக்கியத்தில் பயனிலை உறுப்பினையடுத்து நிகழ்வதாகும்.[2] பின்வரும் எடுத்துக் காட்டுகள் இதனைத் தெளிவுபடுத்தும்.

(25) ஆழ்வார்கள் வைணவர்கள் ஆவர்
(26) நாயன்மார்கள் சைவர்கள் ஆவர்
(27) மாதவி ஓர் கணிகையின் மகள் ஆவாள்
(28) கோவலன் கண்ணகியின் கணவனாவான்

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஆவர், ஆவாள், ஆவான்* ஆகிய மூன்றும் உள்வினைகள் ஆகும். பெயர்ப் பயனிலையை

2. இது ஏனைய திராவிட மொழிகளுக்கும் பொருந்தும்.

யடுத்து நிகழும் உள்வினையானது, வினைப்பயனிலையையடுத்தும் நிகழவல்லது என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் வாயிலாக அறியலாம்.

(29) மாலனாம் மங்கையோர் பங்கன் ஆகும்
மன்றாடியாம் வானோர் தங்கட் கெல்லாம்
காலனாம் காலனைக் காய்ந்தான் ஆகும்
கண்ணாம் கருகாவூர் எந்தை தானே
(அப்பர் தேவாரம். 6.15.6)

(30) துடியாம் துடியின் முழக்கம் தானாம்
சொல்லுவார் சொல்லெல்லாம் சோதிப் பானாம்
படிதானாம் பாவம் அறுப்பான் ஆகும்
பால்நீற்றனாம் பரஞ்சோதி தானாம்
கொடியனாம் கூற்றை யுதைத்தான் ஆகும்
கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும்
கடியனாம் காட்சிக்கு அரியன் ஆகும்
கண்ணாம் கருகாவூர் எந்தை தானே
(அப்பர் தேவாரம். 6.15.8)

இந்த எடுத்துக்காட்டுக்களில் பயனிலையை அடுத்து நிகழும் *ஆம்* என்னும் உள்வினையைப் போலவே *ஆகும்* என்னும் உள்வினையும் *காய்ந்தான், அறுப்பான், உதைத்தான்* ஆகிய வினைப்பயனிலைகளையடுத்து நிகழ்வதைக் காணலாம்.[3]

4.2 வாக்கியத்தில் உள்வினையின் நிகழிடத்தைக் கருத்தில் கொண்டு (8) முதல் (24) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் பயனிலை உறுப்பை அடுத்து நிகழும் *போல்வர், போல்வல், போல்வன், போலும், போல்* ஆகிய ஒப்பில் போலிகளை உள்வினைகளாகத் துணியலாம். இந்த எடுத்துக்காட்டுகளில் உள்வினையாகச் செயல்படும் ஒப்பில் போலிகள் ஊகப் பொருண்மையினை உணர்த்துவனவல்ல. ஆகவே இவற்றில் பயனிலையை அடுத்து நிகழும் இவ்வினைகளைத் தவிர்த்து விட்டாலும் வாக்கியம் உணர்த்தும் பொருண்மை சிதைவதில்லை. தமிழில் உள்வினையின் நிகழ்ச்சி வாக்கியத்தின்

3. இவை வினைப்பயனிலைகள் அல்ல. வினையாலணையும் பெயராய் அமைந்த பெயர்ப்பயனிலைகளே என்று சிலர் வாதிடக்கூடும். இத்தகைய வினையாலணையும் பெயர்கள் அமைப்பில் வினைமுற்றுக்களினின்றும் வேறுபட்டவையல்ல. வினையாலணையும் பெயர்கள் ஒருவகையான வினைமுற்றுக்களே என்று வேறோர் கட்டுரையில் விரிவாகப் பேசப்பட்டுள்ளது. காண்க: (Kothandaraman, R. 1990).

பொருண்மை விளக்கத்துக்கு வேண்டப்படுவதில்லை. ஆனால் உள்வினையானது இலக்கணப் பொருண்மையை உணர்த்துமாயின் வாக்கியத்தில் அதன் நிகழ்ச்சி தவிர்க்கமுடியாத ஒன்றாகிறது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் உணரலாம்.

(31) அமைச்சர் நேற்று இங்கே வந்தாராம்

(32) அமைச்சர் நேற்று இங்கே வந்தார் போலும்

இவ்வெடுத்துக்காட்டுக்களில் *ஆம், போலும்* இரண்டும் *வந்தார்* என்னும் பயனிலையை அடுத்து நிகழ்வதால் இவை உள்வினைகளாகக் கொள்ளப்படும் தகுதியைப் பெறுகின்றன. இக்காலத் தமிழில் இந்த இரண்டு உள்வினைகளும் முறையே கூற்று (Reportive) ஊகம் (Assumptive) ஆகிய இலக்கணப் பொருண்மைகளை உணர்த்துவதால் இவற்றின் நிகழ்ச்சியை மேற்படி எடுத்துக்காட்டுக்களில் குறிக்கப்பெற்றுள்ள வாக்கியங் களினின்றும் தவிர்க்க முடியாது. ஆனால், *பணியுமாம் என்றும் பெருமை சிறுமை, அணியுமாம் தன்னை வியந்து* (குறள். 978), *அடிமூன்றில் இவ்வுலகம் அன்றளந்தாய் போலும்* (பூதத்தாழ்வார், 2-ஆம் திருவந்தாதி 5) ஆகிய எடுத்துக்காட்டுக்களில் *பணியும்/அணியும், அளந்தாய்* ஆகிய பயனிலை வினைகளையடுத்து நிகழும் *ஆம், போலும்* ஆகிய இரண்டு உள்வினைகளும் எந்த ஓர் இலக்கணப் பொருண்மையையும் உணர்த்தவில்லையாகலின் மேற்படி வாக்கிய அமைப்புக்களில் அவற்றின் நிகழ்ச்சி தவிர்க்கற் பாலதாகும்.

## 5.0 ஒப்பில் போலியின் பண்புகள்

5.1 மேலே நிகழ்த்திய ஆய்வின் மூலம் பின்வரும் மூன்று உண்மைகள் பெறப்படுகின்றன.

33 (அ) பயனிலையுறுப்பை அடுத்து நிகழ்வதால் ஒப்பில் போலி உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது.

(ஆ) ஒப்பில்போலி இலக்கணப் பொருண்மையை உணர்த்த வில்லையாயின் வாக்கியத்தில் அதன் நிகழ்ச்சிக்கு முக்கியத் துவம் இல்லை.

(இ) ஒப்பில்போலி இலக்கணப் பொருண்மையை உணர்த்து மாயின் வாக்கியத்தின் பொருண்மை விளக்கத்துக்கு அதன் நிகழ்ச்சி இன்றியமையாத ஒன்றாகும்.

5.2 ஒப்பில் போலியானது அடிப்படையில் உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்பதை மேலும் சில சான்றுகள் மூலம் உறுதிப்படுத்திக்கொள்ளலாம்.

5.2. முதல் சான்று எடுத்து மொழிதல் (Focusing) பற்றியதாகும். வாக்கியத்தில் ஏதேனும் ஓர் உறுப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கையில் அவ்வுறுப்பு எடுத்து மொழியப்படுகின்றது. இவ்வாறு எடுத்து மொழியப்படும்போது எடுத்து மொழியப்படும் உறுப்பினையடுத்து நிகழும் உறுப்பாக உள்வினை அமைகின்றது.[4] உள்வினையானது பின்தொடர ஓர் உறுப்பு எடுத்து மொழியப் படும்போது வாக்கியத்தில் அமைந்த சிறப்பு வினைப்பயனிலை யானது (Personal Predicate Verb) பொதுவினைப்பயனிலையாக (Impersonal Predicate Verb) மாறுகின்றது. பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் முதல் எடுத்துக்காட்டு இயல்பான ஒன்றாகும். ஏனையவை எடுத்து மொழிதலுக்கு உள்ளானவையாகும்.

(34) முருகன் நேற்று வகுப்பில் பாடினானாம்

35 (அ) முருகனாம் நேற்று வகுப்பில் பாடியது
(ஆ) முருகன் நேற்றாம் வகுப்பில் பாடியது
(இ) முருகன் நேற்று வகுப்பிலாம் பாடியது

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஆம்* என்னும் கிளவி கூற்றுப் பொருண்மையை உணர்த்துவதாயினும் அடிப்படையில் அது *ஆகும்* என்னும் உள்வினையின் ஒடுங்கிய வடிவமாகும். எடுத்துக்காட்டு (35)-இல் அமைந்த வாக்கிய அமைப்புக்களைக் கூர்ந்து நோக்கினால், சிறப்புவினைப் பயனிலையானது பொது வினைப்பயனிலையாக மாறுவதற்குக் காரணமாய் அமைவது உள்வினையின் இடப்பெயர்ச்சி என்பது புலனாகும். இதனை வேறு வகையில் குறிப்பிட வேண்டுமாயின், சிறப்புப் பயனிலை யானது பொதுப் பயனிலையாக மாறுவதற்குரிய காரணங்களுள் உள்வினையின் இடப்பெயர்ச்சியும் ஒன்றாகும். இதனைக் கருத்தில்கொண்டு பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் காண லாம். இவற்றுள் முதல் எடுத்துக்காட்டு இயல்பான ஒன்றாகும். ஏனையவை எடுத்து மொழிதலுக்கு இலக்கானவையாகும்.

(36) முருகன் நேற்று வகுப்பில் பாடினான் போலும்

37 (அ) முருகன் போலும் நேற்று வகுப்பில் பாடியது

---

4. மலயாள மொழியில் இதனைத் தெளிவாகக் காணலாம். எடுத்துக்காட்டாக, *முருகன் ராமெனெ கண்டு* (= முருகன் ராமனைக் கண்டான்) என்ற மலயாள வாக்கியத்தில் எழுவாயும், செயப்படுபொருளும் எடுத்து மொழியப்படும்போது பின்வரும் வாக்கிய அமைப்புக்கள் பெறப்படும்.

(அ) முருகனாணு ராமனெ கண்டது (= முருகனாகும் ராமனைக் கண்டது)
(ஆ) முருகன் ராமனெயாணு கண்டது (= முருகன் ராமனையாகும் கண்டது)

இவ்வாக்கிய அமைப்புக்களில் *முருகன், ராமனை* இவற்றையடுத்து நிகழும் *ஆணு* என்னும் உறுப்பு உள்வினையாகும்.

(ஆ) முருகன் நேற்று போலும் வகுப்பில் பாடியது
(இ) முருகன் நேற்று வகுப்பில் போலும் பாடியது

எடுத்துக்காட்டு (36)-இல் நிகழும் *போலும்* என்னும் ஒப்பில் போலி ஊகப்பொருண்மையை உணர்த்துமாயினும், பயனிலையை அடுத்து நிகழ்வதால் அது உள்வினையாகக் கொள்ளத்தக்க தாகின்றது. அடிப்படையில் அது உள்வினையாக இருப்பதால் தான் (37)-இல் உள்ளது போல் இடம்பெயரும் போது சிறப்பு வினைப்பயனிலையாகிய *பாடினான்* என்பதை, *பாடியது* என்ற பொது வினைப்பயனிலையாக அது மாற்றிவிடுகின்றது. இதனைக் கருத்தில்கொண்டு பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் அகரப்பிரிவில் நிகழ்பவை (ஆ)பிரிவில் குறிக்கப்பெற்றுள்ள வாக்கிய அமைப்புக் களின் திரிபுகள் என்பதைத் தெளிவுபடுத்திக் கொள்ளலாம்.

38 (அ) இவன் இரந்துபின்னின்றது அவள் காரணமாகப் போலும்
(இறையனார் அகப்பொருள், பக்கம் 89,
பவானந்தர் பதிப்பு (1939))
(ஆ) இவன் அவள் காரணமாக இரந்து பின்னின்றான் போலும்

39 (அ) யாய்.. இவரை இற்செறிக்க வேண்டும் என்று போலும் அவ்வாறு நோக்கியது
(இறையனார் அகப்பொருள், பக்கம் 133,
பவானந்தர் பதிப்பு)
(ஆ) யாய் இவரை இற்செறிக்க வேண்டும் என்று அவ்வாறு நோக்கினாள் போலும்

இந்த எடுத்துக்காட்டுக்களில் (ஆ) பிரிவில் நிகழும் வாக்கிய அமைப்புக்களில் *போலும்* என்னும் ஒப்பில் போலி பயனிலை உறுப்பையடுத்து நிகழ்வதைக் காணலாம்.

5.2.2 இரண்டாவது சான்று, உள்வினைகள் என்று திட்ட வட்டமாக அறியப்பட்டவற்றுடன் ஒப்பில் போலி ஒரு குறிப்பிட்ட வழக்கு நிலையில் (Distribution) தொடர்புடையதாய் அமைவது பற்றியதாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கவையாகும்.

40 (அ) அமைச்சர் நேற்று இங்கு வந்தாற்போல் கேள்விப்பட்டேன்
(ஆ) அமைச்சர் நேற்று இங்கு வந்தார் என்று கேள்விப்பட்டேன்
(இ) அமைச்சர் நேற்று இங்கு வந்ததாகக் கேள்விப்பட்டேன்

இந்த எடுத்துக்காட்டுக்களில் வினையெச்சங்களாய் அமைந்த *போல், என்று, ஆக* ஆகிய மூன்று வாக்கியச் சாரியைகளும் (Sentential Complementizers) முறையே *வந்தால், வந்தார், வந்தது*

ஆகிய பயனிலை வினைகளையடுத்து, துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்வதைக் காணலாம்.[5] *போல், என்று,* ஆக ஆகியவற்றின் வழக்கு நிலையை ஆழ்ந்து நோக்கும் போது இம்மூன்றும் ஒரு வினைக்குடும்பத்தைச் சேர்ந்த வினைகளாகக் கொள்ளத்தக்கவை என்பது புலனாகின்றது.[6] இவற்றுள் ஆக என்பது உள்வினைப் பயனிலையின் எச்சத் திரிபாகலின் *போல், என்று* ஆகிய இரண்டும் உள்வினைகளாய் அமைந்து, எடுத்துக்காட்டு (40)-இல் எச்சவினைகளாய் நிகழ்வதாகத் துணியலாம். *போல்* என்னும் வினையடி உள்வினைப் பயனிலையாக நிகழ்வதை (20) முதல் (24) வரையுள்ள எடுத்துக் காட்டுக்களில் காணலாம். இவ்வாறே *என்று* என்பதன் வினையடி யாகிய *என்* என்பதும் உள்வினைப்பயனிலையாக நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(41) இது, பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்
(சிலப்பதிகாரம், பாயிரம் 90)

(42) மலர் கொய்யப் புகுந்தனள் மணிமே கலையென்
(மணிமேகலை 3. 171)

எடுத்துக்காட்டு (42)-இல் அமைந்த வாக்கியம் பின்வரும் வாக்கியத்தின் திரிபாகக் கொள்ளத்தக்கதாகும்.

(43)* மணிமேகலை மலர் கொய்யப் புகுந்தனள் என்

எடுத்துக்காட்டுக்கள் (41), (43) ஆகியவற்றில் *என்* என்னும் வினையானது பயனிலை உறுப்பையடுத்து நிகழ்கின்றதாகலின் மேற்படி வினையானது உள்வினையாகக் கொள்ளதக்கதாகின்றது. எடுத்துக்காட்டு 40(ஆ) பிரிவில் நிகழும் *என்று* என்பது *என்* என்னும் உள்வினையின் எச்சத்திரிபு ஆகும்.

5.3. ஒப்பில் போலியை உள்வினையாகக் கொள்வதற்குப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களும் துணை நிற்கின்றன.

(44) அமைச்சர் நேற்று இங்கு வந்தாற் போல் கேள்விப்பட்டேன்
(45) அமைச்சர் நேற்று இங்கு வரவில்லையென்று கேள்விப்பட்டேன்

---

5. எடுத்துக்காட்டு (40)-இல் நிகழும் *வந்தால், வந்தது* ஆகிய இரண்டு வினைகளும், (ஆ) பிரிவில் நிகழும் *வந்தார்* என்னும் வினைப் பயனிலையுடன் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்வதால் அவையும் வினைப்பயனிலை களாய்க் கொள்ளத்தக்கவையாகின்றன.

6. இக்குடும்பம் உள்வினைக் குடும்பம் (Copula Family) என்று கொள்ளப்படும்.

எடுத்துக்காட்டுக்கள் (44), (45)-இல் உள்ள எச்ச வாக்கியங்கள் முறையே உடன்பாடு, எதிர்மறைத் தன்மையவாய் அமைந்தவை யாகும். எச்சவாக்கியம் உடன்பாடாயின் *போல்* என்னும் வினையும், எதிர்மறையாயின் *என்று* என்னும் வினையும் பயனிலை உறுப்புகளை அடுத்து நிகழ்கின்றன. இந்த வகையில் *போல், என்று* ஆகிய இரண்டும் துணைநிலை வழக்கின வாகின்றன. *என்று* என்பது உள்வினையாகலின், அதனுடன் துணைநிலை வழக்கில் நிகழும் *போல்* என்பதும் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது.

5.4 மூன்றாவது சான்று, செம்மை வழக்கின் (Free Variation) மீது அமைந்ததாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் (ஆ) பிரிவில் நிகழ்வன அகரப் பிரிவில் நிகழ்வனவற்றின் பொருண்மையுடன் ஒன்றுபடுவனவாகும்.

46 (அ) ........ தலைமகன் வண்டிற்கு உரைப்பானாய்த் தலைமகள் கேட்பத்தன் நயப்பு உணர்த்தியது
(இறையனார் அகப்பொருள், பக்.45 பவானந்தர் பதிப்பு)

(ஆ) தலைமகன் வண்டிற்கு உரைப்பான் போல் தலைமகள் கேட்பத் தன் நயப்பு உணர்த்தியது

47 (அ) வெறியாடுமிடத்து வேலற்குச் சொல்லுவாளாய்ச் சொல்லும்
(இறையனார் அகப்பொருள், பக்.122, பவானந்தர் பதிப்பு)

(ஆ) வெறியாடு மிடத்து வேலற்குச் சொல்லுவாள் போல் சொல்லும்

இந்த எடுத்துக்காட்டுக்களில் அகரப் பிரிவில் எச்ச வாக்கியத்தில் பயனிலை வினையை அடுத்து நிகழும் *ஆய்* என்னும் எச்சவினை யானது உள்வினைப் பயனிலையின் எச்சத்திரிபாகும். (ஆ) பிரிவில் எச்ச வாக்கியத்தில் பயனிலையை அடுத்து நிகழும் *போல்* என்னும் ஒப்பில் போலியும் அகரப்பிரிவில் நிகழும் *ஆய்* என்னும் உள் வினையும் செம்மை வழக்கில் நிகழ்வதால் முந்தையது உள்வினை யாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இந்த எடுத்துக்காட்டுக்களில் *ஆய், போல்* ஆகிய இரண்டும் உள்வினையின் பொருண்மையை உணர்த்தாமல், ஓர் இலக்கணப் பொருண்மையை உணர்த்தி நிற்கின்றன. *போல்* என்பது ஓர் உள்வினையாகலின் உள்வினையின் இயல்புகளைத் தானும் பகிர்ந்துகொள்வதில் வியப்பில்லை. உள்வினையின் பல்வேறு இயல்புகளுள், தனக்குரிய பொருண்மையை இழந்து இலக்கணப் பொருண்மையை மேற் கொள்வதும் ஒன்றாகும். (விரிவான ஆய்வுக்கு இத்தொகுதியில் இடம்பெற்றுள்ள *மன்னர் கையதை கூர்வாள், பயனிலை-அகமும்*

*புறமும்* என்ற கட்டுரைகளைப் பார்க்கவும்). எடுத்துக்காட்டுக்கள் (46), (47)-இல் இந்த நிலையைக் காண்கிறோம். மேலே குறிப்பிட்டுள்ள மூன்று சான்றுகளும் ஒப்பில் போலியை உள்வினையாகக் கொள்வதற்குப் பெரிதும் துணைபுரிவனவாகும்.

5.5. *ஆம்* ( = ஆகும்), *போலும்* ஆகிய உள்வினைகள் முறையே கூற்றுப் பொருண்மையையும் ஊகப் பொருண்மையையும் உணர்த்தவல்லன என்று முன்னர்க் குறிப்பிட்டோம். (காண்க: எடுத்துக்காட்டுக்கள்: (34), (36)). இதனின்றும், உள்வினைகள் தம் பொருண்மையை இழந்து இலக்கணப் பொருண்மைகளையும் ஏற்க வல்லன என்பது தெளிவாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு இலக்கணப் பொருண்மையை உணர்த்தும் கிளவிகள் பெரும்பாலும் அடிப்படையில் உள்வினைகளாகக் கொள்ளத் தக்கவை என்று ஓர் கருதுகோளை அமைத்துக் கொள்ள வாய்ப்பு இருக்கின்றது. இது பற்றிய விரிவான ஆய்வைக் கோதண்டராமனில் (R. Kothandaraman 1990: 45-88) காணலாம். உள்வினைகள் பயனிலை உறுப்பையடுத்தே நிகழவல்லன. எனினும் இலக்கணப் பொருண்மையை உணர்த்தும் நிலையில் அவை பயனிலை உறுப்பையடுத்து நிகழ வேண்டும் என்ற கடப்பாடு இல்லை. காரணம், இலக்கணப் பொருண்மையை உணர்த்துகையில் உள்வினைகள் தமது தனித்தன்மையை இழந்து இலக்கண உருபன்களாக (Grammatical Morphemes) அமைந்து விடுகின்றன. இந்த நிலையில் அவற்றை நாம் உள்வினைகளாகப் பார்க்க முடியாது.

## 6.0 ஓர் இடைப்பிறவரல்

உரையாசிரியர்கள் அசைநிலைக் கிளவிகள் என்று குறிக்கும் சில வடிவங்கள் பயனிலை உறுப்பையடுத்து நிகழ்வனவாகவே காணப்படுகின்றன. பழந்தமிழில் நிகழும் *அத்தை* என்னும் அசை நிலைக் கிளவியானது ஏவல், வியங்கோள் மற்றும் தெரிநிலை வினைப்பயனிலை, பெயர்ப் பயனிலை ஆகியவற்றை அடுத்து நிகழ்கிறது. எ-டு.: *கேளாய் அத்தை* (குறுந். 129.2), *நிலீஇயர் அத்தை நீயே* (புறம். 375.16), *செல்வல் அத்தை யானே* (புறம். 211.17), *பகடே யத்தையான் வேண்டி வந்தது* (புறம். 399.28). இந்த அசைநிலைக் கிளவி நிகழும் வாக்கிய வகைகள் பிற்சேர்க்கையில் தொகுத்து கொடுக்கப்பட்டுள்ளன. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக் களில் நிகழும் *ஆல், அன்று, ஆர், அரோ, தாம்* ஆகியவையும் சிந்தனைக்குரியனவாகின்றன.

*48 (1)* உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி
கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்
(சீவகசிந்தாமணி 248.1, 2)

*(2)* பற்றா மன்னன் நகர்ப்புறமால்
பாயல்பிணஞ்சூழ் சுடுகாடால்
உற்றார் இல்லாத் தமியேனால்
ஒதுங்க லாகாத் தூங்கிருளால்
மற்றிஞ் ஞால முடையாய் நீ
வளரு மாறும் அறியேனால்
எற்றே யிதுகண் டேகாதே
இருத்தியால் என் இன்னுயிரே *(சீவகசிந்தாமணி 310)*

*49* *(1)* உப்பமை காமத் துப்பின் அவரிடம் உரைத்தும் அன்றே
*(சீவகசிந்தாமணி 248. 1, 2)*

*(2)* ......... எழுநாளிடைச் செல்வதோர் மாமயில்
செய்தனன் அன்றே *(சீவகசிந்தாமணி 235. 3, 4)*

*(3)* தம்பெரு மானடி சார்ந்தனள் அன்றே
*(சீவகசிந்தாமணி 221. 4)*

*(4)* பொருசுடர் பருதி போலப் பொன்னனான்
பிறந்த போழ்தே
மருளுடை மாத ருற்றமம்மர் நோய் மறைந்ததன்றே
*(சீவகசிந்தாமணி 304. 3, 4)*

*(5)* கூனிய துருவம் கொண்டோர் தெய்வதம்
குறுகிற்றன்றே *(சீவகசிந்தாமணி 314.4)*

*(6)* வாசநற் பொடிகள் மாலை வண்டுற வீழ்ந்த முற்றம்
ஆசைபட் டரசுவைக வருங்கடி கமழும் அன்றே
*(சீவகசிந்தாமணி 109. 3, 4)*

*(50)* வாரி நடந்தது நன்றரோ?[7] *(சீவகசிந்தாமணி 37.4)*

*(51)* உம்உந் தாகும் இடனுமார் உண்டே[8] (தொல். சொல். சேனா. 292)

*(52)* அல்லும் பகலுமாய் நின்றார் தாமே
அந்தியும் சந்தியும் ஆனார் தாமே
சொல்லும் பொருளெலாம் ஆனார் தாமே
தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே
பல்லுரைக்கும் பாவெலாம் ஆனார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே
திருவாலங் காடுறையும் செல்வர் தாமே
*(அப்பர் தேவாரம் 6. 79:5)*

7. இவ்வாக்கியம் *வாரி நன்று நடந்தது அரோ* என்பதன் திரிபாகலாம்.

8. இவ்வாக்கியம் *உம் உந்தாகும் இடனும் உண்டு ஆர்* என்பதன் திரிபாகலாம்.

இந்த ஐந்து வகையான எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *ஆல், அன்று, அரோ, ஆர், தாம்* ஆகியவை அசைநிலைக் கிளவிகளாக உரையாசிரியர்களால் கருதப்பட்டபோதிலும், இவை பயனிலை உறுப்பையடுத்து நிகழ்வதைக் கருதுகையில் அசைநிலைக் கிளவிகள் எனக் கருதப்பெறும் வடிவங்கள் தொடக்கத்தில் உள்வினைகளாக நிகழ்ந்திருக்க வேண்டும் என்று துணியத் தோன்றுகிறது. இத்துணிபு உண்மையாயின், உள் வினைகள் தம் பொருண்மையை இழந்து வெற்றுறுப்புக்களாகவும் நிகழற் பாலன என்று கொள்ளலாம். ஆனால் இத்தகைய நிகழ்ச்சி வரலாற்று நிலையில் நிகழ்ந்ததாகக் கொள்ள முடியுமே தவிர வண்ணனை நிலையில் (Synchronic Level) அமைந்ததாகக் கொள் வதற்கில்லை. வண்ணனை நிலையில் அசைநிலைக் கிளவிகள் யாப்பமைதிக்குப் பயன்படும் கருவிகளாகவே அமைகின்றன.

## 7.0 ஒப்புடைப் போலி

இதுகாறும் ஒப்பில் போலி பற்றிப் பேசப்பட்டது. இனி, ஒப்புடைப் போலி பற்றிச் சற்றுச் சிந்திக்கலாம். ஒப்புடைப்போலி உணர்த்தும் ஒப்புமைப் பொருண்மையைச் சொற் பொருண்மை (Lexical Meaning)யாகக் கொள்வதா அல்லது இலக்கணப் பொருண்மை (Grammatical Meaning)யாகக் கொள்வதா என்பதை முதலில் தெளிவுபடுத்திக்கொள்ள வேண்டும். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

53 (1) கரும்பெனக் கவினிய பெருங்குரல் ஏனல் (அகநானூறு 302. 10)
(2) குன்றெனத் திரண்ட தோளான் (சீவகசிந்தாமணி 954)

54 (1) அவள் மாடாக உழைத்து ஓடாகத் தேய்ந்தாள்
(2) அவன் வேலை தேடி நாயாக அலைந்தான்

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *என, ஆக* ஆகிய இரண்டும் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துமாயினும், அடிப்படையில் அவை உள்வினைக் குடும்பத்தைச் சேர்ந்தவையாகும். இதனின்றும் உள்வினைகள் மீது நிகழும் ஒப்புமைப் பொருண்மையானது இலக்கணப் பொருண்மையாகக் கொள்ளத்தக்கது என்பது தெளிவாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு ஒப்புடைப் போலி அடிப்படையில் உள்வினைத்தன்மையதாய் அமைந்து பின்னர் இலக்கணப் பொருண்மையதாகிய ஒப்புமைப் பொருண்மையை மேற்கொண்டது எனத் துணியலாம். இத்துணிபு, ஒப்புடைப்போலி அமைந்த வாக்கியங்களையும், தொடர்களையும் ஒரு புதிய கோணத்தில் ஆராயவகை செய்கின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டினை ஆராய்வதன் மூலம் விளக்கலாம்.

*(55) கயல்விழி கனிமொழியைப்போல் இனிமையாகப் பாடினாள் (= (1) )*

இந்த எடுத்துக்காட்டில் அமைந்த முற்றெச்ச வாக்கியம் (Complex Sentence) பின்வரும் வாக்கியங்களின் பிணைப்பில் தோன்றியதாகும்.

*56(அ)* *கனிமொழி இனிமையாகப் பாடினாள் போல்
*(ஆ)* கயல்விழி இனிமையாகப் பாடினாள்

இவ்வாக்கியங்களின் பிணைப்பு பின்வருமாறு குறிக்கத்தக்கதாகும்.

*(57)* [கயல்விழி [கனிமொழி இனிமையாகப் பாடினாள் போல்] இனிமையாகப் பாடினாள்]

இந்த அமைப்பில் காணப்படும் *போல்* என்னும் வினையானது கிளவியாக்க விதியின்மூலம் பெறப்பட்ட ஒப்புடைப்போலியாகும். உள்ளீடாக (57)-இல் உள்ள எச்சத்தன்மையதாகிய உள் வாக்கியத்தில் நிகழும் *இனிமையாகப் பாடினாள்* என்ற வினைத்தொடர் தவிர்க்கப்படுகையில் பின்வரும் அமைப்பு பெறப்படுகின்றது.

*(58)* [கயல்விழி [கனிமொழி......போல்] இனிமையாகப் பாடினாள்]

## 8.0 இரண்டு குறைபாடுகள்

8.1 இந்த ஆய்வில் இரண்டு குறைபாடுகள் உண்டு. ஒன்று: வாக்கியம் (55)-இல் *போல்* என்பதன் முன் நிகழும் ஐயென் கிளவியின் நிகழ்ச்சி குறிக்கப்பெறவில்லை. இரண்டு: 56(அ) பிரிவில் ஒப்பில்போலியாக உள்ள *போல்* என்னும் கிளவி, (58)-இல் எங்ஙனம் ஒப்புடைப் போலியாக மாறுகின்றது என்பதற்குரிய விளக்கம் இல்லை. இந்த இரண்டு குறைபாடுகளையும் பின்வருமாறு தவிர்க்கலாம்.

8.2 முதல் குறைபாடு ஐயென் கிளவி பற்றியது. எடுத்துக்காட்டு (55)-இல் உள்ள ஐகாரக்கிளவியை வேற்றுமை உருபாகக் கொள்வதற் கில்லை. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் தெளிவுபடுத்தும்.

*(59)* வேறிடத்துப் பிறந்த வுயிரே போன்று
பண்டறி கிளையொடு பதியும் காணாள் (மணிமேகலை 8.14, 15)

*(60)* வலையிடைப் பட்ட மானே போன்றாங்கு
அஞ்சிநின் றழைக்கும் ஆத்துயர் கண்டு
(மணிமேகலை 13. 32, 33)

*(61)* .................. கோதை
பஞ்சிமேல் வீழ்வ தேபோல் பல்பொறிக் குடுமி நெற்றிக்
குஞ்சிமா மஞ்ஞை வீழ்ந்து கால்குவித் திருந்ததன்றே
(சீவகசிந்தாமணி 301. 2-4)

(62) தன் ஆயங்கள் புடைபெயருமாறு புடைபெயர்ந்து வருகின்றாள், நெருநலை நாளால் தலைமகனை வழிபட்ட இடம் எதிர்ப் படும், எதிர்ப்பட்டுத் தலை மகனைக் கண்டாளே போன்றாள், என்னை? இனி யாரோடு தலைப்பட்ட இடம் கண்டாலும் அவ்வினி யாரைக் கண்டாலே போல்வது உலகத் தன்மை

(இறையனார் அகப்பொருள், பக்.64, பவானந்தர் பதிப்பு)

இந்த நான்கு எடுத்துக்காட்டுக்களிலும் *போல்* வினைகளின் முன்னே நிகழும் *உயிரே, மானே, வீழ்வதே, கண்டாளே, கண்டாலே* ஆகியவற்றில் உள்ள ஏகாரக் கிளவியை வேற்றுமை யுருபாகக் கொள்ள முடியுமோ? முடியாது. இக்கிளவியானது ஐகாரத்தின் திரிபாகும். ஒப்புடைப் போலியின் முன்னர் நிகழும் ஐயென்கிளவி வேற்றுமையுருபாயின் அது ஏகாரமாகத் திரிய வாய்ப்பில்லை. ஆகவே எடுத்துக்காட்டு (55)-இல் *போல்* என்பதன் முன் நிகழும் ஐகாரம் வண்ணனை நிலையில் இலக்கணப் பொருண்மையை உணர்த்தாத ஓர் வெற்றுறுப்பாகும். பயனிலை வினையை அடுத்து ஐகாரத்தின் நிகழ்ச்சியினைப் பரிபாடல், கலித்தொகை ஆகிய தொகை நூல்களில் அங்குமிங்குமாகக் காணலாம்.[9] சீவகசிந்தாமணியில் அமைந்த பின்வரும் வாக்கியங் களில் நிகழும் வினைப்பயனிலையைக் கருத்தில் கொள்க.

63 (1) பன்னரு மாலையாற்குப் பட்டதை எவன்கொல் (1085.2)
(2) வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே (219.4)

இந்த எடுத்துக்காட்டில் *விடிந்ததை* என்பதில் நிகழும் ஐகாரம் வெற்றுறுப்பாகும்.[10] இந்த ஐகாரக்கிளவியே (55)-இல் *கனிமொழியைப் போல்* என்ற தொடரில் நிகழும் ஐகாரக்கிளவியாகும். இது வண்ணனை நிலையில் வெற்றுறுப்பாகலின் இதனை ஆய்வினின்றும் தவிர்க்கலாம்; அல்லது *போல்* என்பதனோடு சேர்த்து *ஐப்போல்* என்று ஒற்றை உறுப்பாக வண்ணனை ஆய்வில் கொள்ளலாம். ஒப்புடைப் போலியானது ஓர் கிளவியாக்க விதியின் (Lexicalization Rule) மூலம் வருவிக்கப்படும் உறுப்பாகும். இவ்விதியானது *போல், ஐப்போல்* இரண்டையும் ஒரு சேரப் படைத்துக் கொடுக்கும்.

---

9. இத்தொகை நூல்களில் செய்தது, செய்வது ஆகிய வாய்ப்பாட்டு வினைப் பயனிலைகளையடுத்தே ஐகாரக்கிளவி பெரும்பாலும் நிகழ்கிறது.

10. பயனிலையை அடுத்து நிகழ்வதால் வரலாற்று நிலையில் இந்த ஐகாரக் கிளவியும் உள்வினையாகக் கொள்ளத்தகும் பெற்றியதாகும் பழந்தமிழில் இதன் நிகழ்ச்சியானது செய்தது, செய்வது வாய்பாட்டுப் பொது வினைகளை அடுத்தே அமைகிறது. இது பற்றிய விரிவான ஆய்வை இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள *மள்ளர் கையதை கூர்வாள்* என்ற ஆய்வுரையில் காணலாம்.

8.3 இனி இரண்டாவது குறைபாட்டினைக் கருதுவோம். இக்குறைபாடானது உள்வினையாகிய ஒப்பில்போலி எங்ஙனம் உள்வினைத்தன்மையை இழந்து ஒப்புடைப்போலியாக அமைகின்றது என்பது பற்றியதாகும். இக்குறைபாட்டினை 56(அ) பிரிவில் உள்ள வாக்கிய அமைப்பினைப் பின்வருமாறு மாற்றி அமைப்பதன் மூலம் தவிர்க்கலாம்.

(64) [ஒதொ [ஒப்புமை] [கனிமொழி இனிமையாகப் பாடினாள் + ஆகு]]

இவ்வமைப்பில் *ஒதொ* என்பது ஒப்புமைத் தொடரனையும் [ஒப்புமை] என்பது ஒப்புமைப் பொருண்மையையும் உணர்த்தும். *ஆகு* என்பது பொருள்கோட் கிளவியாகும். [ஒப்புமை] என்ற இலக்கணப் பொருண்மையானது பின் வரும் கிளவியாக்க விதியின் மூலம்உரிய வடிவத்தைப் பெறும்.

(65) [ஆகு+ஒப்புமை] > {போல், ஐப்போல்}

இதனைத் தொடர்ந்து பின்வரும் அமைப்பு கிடைக்கும்.

(66) [கயல்விழி [கனிமொழி.......... {போல், ஐப்போல்}...]

சேர்க்கை விகாரத்தின் மூலம் விட்டிசை கெட *போல்/ஐப்போல்* என்னும் ஒப்புடைப்போலி *கனிமொழி* என்னும் உறுப்பினை யடுத்து சேர்க்கப்பட்ட நிலையில் *கயல்விழி கனிமொழி போல்/ கனிமொழியைப் போல் இனிமையாகப் பாடினாள்* என்ற வாக்கிய அமைப்பு பெறப்படுகின்றது.

## 9.0 ஒப்புடைத் தொடரன்

ஒப்புடைப் போலியமைந்த வாக்கியங்களையும், பெயர்த் தொடர்களையும் மேலே குறிப்பிட்டவாறு ஆராயலாம். இவ்வாய்வின் மூலம் ஒப்புடைப் போலியானது உள் வினையாகிய ஒப்பில் போலியின் மீது அமைந்த ஒன்று என்பதும், ஒப்புடைப் போலியைச் சார்ந்து நிகழும் ஐயென் கிளவி வேற்றுமையுருபு அல்ல என்பதும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. ஒப்பில் போலி அடிப்படையில் உள்வினையாயினும், இக்காலத் தமிழில் பயனிலையை அடுத்து அது நிகழ்கையில் உள்வினையாக அமையாமல் ஊகப் பொருண்மையை உணர்த்தும் ஓர் இலக்கண உருபனாகவே செயல்படுகிறது.

## பிற்சேர்க்கை

1(1) புலவர் தோழ! [கேளாய் அத்தை.] (குறுந். 129.2)
(2) ஆர்பதம் [பெறுக] தோழி [அத்தை.] (குறுந். 389.2)
(3) நடுக்கின்றி [நிலியரோ வத்தை] (புறம் 2.20)
(4) [பணியியர்அத்தை] (புறம்.6.17)
(5) [செலியர் அத்தை] (புறம்.6.23)
(6) அதன்றிறம் [அத்தை] யான் உரைக்க [வந்தது] (புறம் 28.7)
(7) [நாடெனப்படுவது] நினதே [யத்தை] (புறம். 35.11)
(8) பிறகலம் செல்கலா தனையேம் அத்தை (புறம். 126.16)
(9) விடுதல் [வேண்டுவல் அத்தை] (புறம். 160.28)
(10) [செல்வல் அத்தை] யானே (புறம். 166.31)
(11) [நிலீஇயர் அத்தை] நீ (புறம். 166.34)
(12) புரப்போர் புகழ்குறை படூஉம் [வாயில் அத்தை] (புறம். 196.6,7)
(13) [செல்வல் அத்தை] (புறம். 196.15)
(14) [செல்வல் அத்தை] யானே (புறம். 211.17)
(15) [பொலிக அத்தை] நின் பணை.... (புறம். 373.27)
(16) [நிலீஇயர் அத்தை] நீயே (புறம். 375.16)
(17) மிகப் [பொலியர்] தன்சேவடி [யத்தை] (புறம். 387.14)
(18) [பகடே யத்தை] யான் வேண்டி வந்தது (புறம். 399.28)
(19) ஆன்று [விட்டனன் அத்தை] (புறம். 399. 30)

2(1) [பெரிதால் அத்தை] யென் கடும்பினது இடும்பை (புறம். 169.7)
(2) [பலரால் அத்தை] நின்குறியிருந் தோரே (புறம். 219.4)

3(1) வல்லே [களைமதி யத்தை] (புறம். 266.10)
(2) நீயும் [கேண்மதி யத்தை] (புறம். 363.7)
(3) [விடுமதி யத்தை] கடுமான் தோன்றல்! (புறம். 382.16)

4(1) அதனால் [ஒழிகதில் அத்தை] நின் மறனே (புறம். 213.19)

பயனிலைகளை அடுத்து நேரடியாகவும் அல், மதி, தில் ஆகிய அசைநிலைக் கிளவிகளைக் கொண்ட பயனிலைகளை அடுத்தும் அத்தை என்னும் அசைநிலைக் கிளவி நிகழும் நிலை பழந்தமிழில் காணப்படுகிறது.



# 10. பெயரெச்சத் தொடரனில் இடம்மாறும் தலைமையும் உருமாறும் வினையும்

## *1.0 பெயரெச்சத் தொடரனும் அதன் உறுப்புக்களும்*

தமிழில் தொடரனியல் (Syntax) பற்றிய ஆய்வில் மாற்றிலக்கணக் கோட்பாட்டின் பின்னணியில் சிந்திக்கப் பெற்ற தலைப்புகளுள் பெயரெச்சத்தொடரனும் (Relative Clause) ஒன்றாகும். பெயரெச்சத் தொடரன் பல்வேறு முகத்தோற்றங்களைக் கொண்டதாகும். பெயர்த்தொடர்களின் ஒரு பிரிவாகிய பெயரெச்சத் தொடரன்கள் பற்றிய ஆய்வில் பெயரெச்சத் தொடர் (எ-டு. கல்லூரியில் படித்த) மற்றும் தலைமைப் பெயர் ஆகிய வற்றின் இடப்பெயர்ச்சி பற்றிய ஆய்வு தமிழில் முனைப்பாக மேற்கொள்ளப்படவில்லை. இத்தகைய ஆய்வு ஓர் அறிமுக நிலையில் இங்கே மேற்கொள்ளப் படுகிறது.

## *2.0 பெயரெச்ச வினை வகைகள்*

2.1 பெயரெச்ச வினை தமிழில் தெரிநிலை, குறிப்பு என இருவகைப்படும். *வள்ளியை மணந்த முருகன்* என்பதில் நிகழும் *மணந்த (<*மணந்தவ்)* என்பது தெரிநிலைப் பெயரெச்சம். *நல்ல பையன், பல பெண்கள் எனது வீடு(கள்), கரும்புகை, பைம்பொழில், பைம்பொான், செம்பொன்* முதலான பெயர்த் தொடர்களில் நிகழும் *நல்ல, பல எனது, கரும், பைம், செம்* முதலானவை குறிப்புப் பெயரெச்சங்களாகும். தமிழில் பெயரெச்ச வினைகள் தலைமைப் பெயரின் திணை-பால்-எண்-இடப் பொருண்மைகளை உணர்த்துவதில்லை. இது பொதுவான நிலையென்றாலும் தமிழ்மொழியானது தனது வரலாற்றுப் போக்கில் தலைமைப்பெயரின் முன் சிறப்பு முற்றுவினை களையும் முற்றெச்சப் பெயரெச்ச வினைகளாகச் செய்யுள் வழக்கில் ஏற்று நிகழாமல் இல்லை. இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

(1) பூத்தன வேங்கைமேற் பொலிந்து கார்நினைந்து
ஏத்தரும் மயிற்குழாம் ...... *(சீ.சி. 87)*

(2) உலக்கையால் உதிர்ந்தன தெங்கின் ஒண்பழம்
நிலத்தவை சொரிதலின் வெரீஇய மஞ்ஞை (சீ.சி. 92)

(3) கொணர்ந்தன பண்டம்விற்ற கொழுநிதிக் குப்பையெல்லாம்
உணர்ந்துதன் மதலையேற்றி யொருப்படுத் தூர்க்குமீள்வான்
(சீ.சி. 505(2))

(4) உடுப்பன துகில்களும் உரைக்கும் நானமும்
தொடுத்தன மாலையும் குழையும் சாந்தமும் (சீ.சி. 831(3))

இந்த எடுத்துக்காட்டுக்களில் *பூத்தன வேங்கை, உதிர்ந்தன தெங்கின் ஒண்பழம், கொணர்ந்தன பண்டம், உடுப்பன துகில்கள், தொடுத்தன மாலை* ஆகிய பெயர்த்தொடர்களில் அஃறிணைப் பன்மை முற்றுவினைகள் பெயரைத் தழுவிய முற்றெச்சங்களாகச் செயல்படுகின்றன. அஃறிணைப் பன்மை வினைமுற்றுக்களைப் போல் பிற வினைமுற்றுக்கள் பெயரெச்சங்களாக நிகழும் போக்கு தமிழில் மிகுதியாகக் காணப்படவில்லை என்றாலும் பின்வரும் எடுத்துக்காட்டு கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

(5) [அப்பொழில் வாழ்வாய் நீயும்] அத்தன்மையை அன்றே
(இறையனார் அகப்பொருள். நூற்பா. 2 நக்கீரர் உரை)

இந்த எடுத்துக்காட்டில் *வாழ்வாய்* என்னும் முற்றுவினை முற்றெச்சமாக அமைந்து பெயரெச்ச வினைக்கு நிகராகச் செயல் படுகின்றது. *பூத்தன வேங்கை* (1), *உடுப்பன துகில்கள்* (4) முதலானவற்றை *ஆகிய* என்னும் உள்வினைப் பெயரெச்சம் **(Copula Relative Participle)** கரந்த பெயர்த் தொடர்களாகக் கருதுவார் நச்சினார்க்கினியர். எடுத்துக் காட்டு (5)-இல் நிகழும் *[அப்பொழில் வாழ்வாய் நீயும்]* என்ற பெயரெச்சத் தொடரனையும் *[அப்பொழில் வாழ்வாய் ஆகிய நீயும்]* என்று விரிவுபடுத்தலாம். இதனின்றும் வினைமுற்றுக்கள் என்று கருதப் படுபவை வினைமுற்றுப் பெயர்கள் எனக் கொள்ளத்தக்கன வாகின்றன. ஆனால் வினைமுற்று வகைகள் எல்லாம் வேற்றுமை உருபேற்க வேண்டும் என்ற நியதியோ கட்டுப்பாடோ இல்லை. எதிர்வெச்சங்களாகவும் **(Infinitives)**, இறப்பெச்சங் களாகவும் **(Past Verbal Modifiers)**, பெயரெச்சங்களாகவும் **(Noun Modifying Verbals)** நிகழ்பவையும் வினைமுற்றுக்களே. செய்தனள், செய்வனள் முதலானவையும் வினைமுற்றுக்களே. ஆனால் இந்த வினைமுற்று வகைகள் வேற்றுமை உருபு ஏற்பதில்லை. இதேபோல் மலயாளத்தில் அமைந்துள்ள செய்து, செய்யுந்நு, செய்யும் வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களும் வேற்றுமையுருபு

ஏற்கவில்லை. இத்தகைய ஆய்வுமுறையைப் பற்றிய சிந்தனைக்கு இந்தக் கட்டுரை ஏற்புடையதன்றாகலின் இதனை விடுத்து நாம் மேலே செல்வோம்.

*2.2* தெரிநிலை வினைமுற்றுக்களைப்போல் குறிப்பு வினை முற்றுக்களும் பழந்தமிழில் முற்றெச்சங்களாக அமைந்து பெய ரெச்சங்களாகச் செயல்படும் நிலை இயல்பாகக் காணப்படு கின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

(6) *அறுசில் கால அஞ்சிறைத் தும்பி* (ஐங். 20)

(7) *குறும்பல் பொறைய நாடு* (ஐங். 404)

(8) *கழிய காவி குற்றும் கடல*
*வெண்டலைப் புணரி யாடியும்* (குறுந். 144. 1,2)

(9) *இட்டுவாய்ச் சினைய பகுவாய்த் தேரை* (குறுந். 20)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *கால* (6), *பொறைய* (7), *கழிய* (8) *கடல* (8), *சினைய* (9) ஆகிய அஃறிணைப் பன்மைக் குறிப்பு வினைமுற்றுக்கள் பெயரெச்சச் செயற்பாட்டினவாகிய முற்றெச்சங்களாகும். அஃறிணை ஒன்றன்பாற் குறிப்பு வினை முற்றுக்களும் இவ்வாறு அமைவதுண்டு.

(10) *பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
இருங்கழி மருங்கின் அயிரை ஆரும் (ஐங். 164)

இந்த எடுத்துக்காட்டில் *பெருங்கடற் கரையது* என்பதில் உள்ள *கரையது* என்பது முற்றெச்சமாய் அமைந்த குறிப்புப் பெயரெச்ச மாகும். ஆனால் *முருகனது வேல்* என்ற தொடரில் *முருகனது* என்பதில் நிகழும் *அது* என்பது பொதுக் குறிப்புப் பெயரெச்சமாகும். கன்னடத்தில் *சோமன துடி* (=சோமனது துடி) என்பதற்கு இணையானதாகும் *முருகனது வேல்* என்ற தொடர்.

## 3.0 பெயரெச்சத் தொடரனில் நிகழும் இருவகைத் திரிபுகள்

இக்கட்டுரை பெயரெச்சத் தொடரன்களில் நிகழும் தலைமைப் பெயரின் இடப்பெயர்ச்சியைப் பற்றியதாகையால் இனி இதுபற்றிச் சிந்திக்க முற்படலாம். பெயரெச்சத் தொடரன் களில் அமைந்த தலைமைப் பெயரும் பெயரெச்சத் தொடரும் தமிழில் இடம்பெயர்ந்து நிகழவல்லவை. இரண்டு வகையான இடப்பெயர்ச்சிகள் இந்த வகையில் கருதற்பாலனவாகும். ஒன்று, பெயர்த்தொடரின் வரம்புக்குள் தலைமைப் பெயரானது இடம் பெயர்தல். இதனை *அகப்பெயர்ச்சி* **(Flipping or Local Movement)**

என்று குறிப்பிடலாம். இன்னொன்று, பெயரெச்சத் தொடர் இடது கோடிக்கு இடம்பெயர்ந்து தான் நிகழ்ந்த பெயர்த்தொடரின் எல்லையைக் கடந்து வினைப்பயனிலையை அடுத்து நிகழ்தல். இதனைப் புறப்பெயர்ச்சி (Extraposition) என்று குறிப்பிடலாம். அகப்பெயர்ச்சியிலாகட்டும் புறப்பெயர்ச்சியிலாகட்டும் பெய ரெச்சத் தொடரனில் அமைந்த பொதுவினைமுற்று (Impersonal Finite Verb) வடிவு திரிந்து வினையாலணையும் பெயர் எனப்படும் வினைமுற்றின் வடிவமாகவோ சிறப்பு வினைமுற்றாகவோ (Personal Finite Verb) நிகழ்கின்றது. பெயரெச்சத் தொடரன்களில் நிகழும் தலைமைப் பெயரின் இருவகைப் பெயர்ச்சிகளும் வாய்பாட்டு முறையில் பின்வரும் வாக்கிய அமைப்புகள் மூலம் குறிக்கற்பாலனவாகும்.

*(11)* [முருகன் சூரனை வென்றவன்] வள்ளியை மணந்தான்.

*(12)* [முருகன்] வள்ளியை மணந்தான் [சூரனை வென்றவன்]

இந்த இரண்டு வகையான வாக்கிய அமைப்புகளுக்கும் அடிப் படையாகப் பின்வரும் வாக்கிய அமைப்பு அமைகின்றது.

*(13)* [சூரனை வென்ற முருகன்] வள்ளியை மணந்தான்

இந்த வாக்கிய அமைப்பில் நிகழும் *சூரனை வென்ற முருகன்* என்ற பெயரெச்சத் தொடரனில் நிகழும் *முருகன்* என்ற தலைமைப்பெயர் இடம் பெயர்ந்து (11)-இலும், *சூரனை வென்ற* என்ற பெயரெச்சத் தொடரானது வினைப்பயனிலையை அடுத்து (12)-இலும் உள்ளதுபோல் நிகழ்கின்றன. இந்த இடப் பெயர்ச்சியின் விளைவாக (13)-இல் நிகழும் *வென்ற* என்னும் பெயரெச்சம் *வென்றவன்* என (11) மற்றும் (12)-இல் உள்ளதுபோல் திரிந்தமைகின்றது.

## 4.0 தலைமைப் பெயரின் அகப் பெயர்ச்சி

4.1 பெயரெச்சத் தொடரனின் இருவகைப் பெயர்ச்சிகளுள் முதலில் தலைமைப் பெயரின் அகப்பெயர்ச்சியானது (Flipping of Head Noun) கருத்தில் கொள்ளப்படும். பொதுவாக, சங்கப் பாடல்களிலும் அகநானூறு, புறநானூறு ஆகிய சங்கத் தொகை நூல்களில் பாடல்களையடுத்துக் காணப்படும் துறைவிளக்கக் குறிப்புக்கள் சிலவற்றிலும் நிகழும் வாக்கிய அமைப்புக்களில் பெயரெச்சத் தொடரனில் நிகழும் தலைமைப் பெயரின் அகப்பெயர்ச்சி காணப்படுகிறது. *நீ நீங்கக் கருதியாய்க்கு* (கலி. 136.15) (⇐ *நீங்கக் கருதிய நினக்கு*) என்ற எடுத்துக்காட்டு இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இறையனார் அகப்

பொருளுக்கு அமைந்த நக்கீரர் உரையிலும், சீவகசிந்தாமணி பாடல்களிலும் இத்தகைய அகப்பெயர்ச்சி போற்றப்படுகின்றது. இக்காலத் தமிழிலும் இந்த நிலை காணப்படுகின்றது. கருதுக: *[நான் ஒரு ஜோலியா உடன்குடிக்குப் போனவன்] நேரா இங்கே வந்துட்டேன்.* (தாமரை மணாளன். 2003. சில்லுக் கருப்பட்டி), கல்கி இணைப்பிதழ் (பக். 75), 13-04-2003) பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் இந்த வகையில் கருதற்பாலனவாகும். இயல்பான பெயரெச்சத் தொடரன்கள் அடைப்புக் குறிகளுக்குள் குறிக்கப் பெற்றுள்ளன.

14 (அ) [தலைவன் இரவுக்குறி வருவானை]......... பகற்குறிக்கண் வருக என்று தோழி கூறியது (அகம்.80. துறை விளக்கம்) [⇐ இரவுக்குறி வருகின்ற/வரும் தலைவனைப்] பகற்குறிக்கண்......

(ஆ) [தலைவன்......... மீண்டு வருபவன்] தலைவியை நினைந்து விதுப்புறுகின்ற தன் நெஞ்சிற்குச் சொல்லியது (அகம். 93. துறை விளக்கம்)[⇐ மீண்டு வருகின்ற/வரும் தலைவன்] தலைவியை நினைந்து......

(இ) [தலைவி அக்கார்ப்பருவ வரவு கண்டு பெரிதும் வருந்துவாளைத்] தோழி ஆற்றியிருந்திடுக என வற்புறுத்திக் கூறியது (அகம். 85. துறை விளக்கம்) [⇐ அக்கார்ப் பருவ வரவுகண்டு பெரிதும் வருந்துகின்ற/வருந்தும் தலைவியைத்]-

(ஈ) [தலைவி பிரிவாற்றாது அவனையே நினைந்து.... பெரிதும் வருந்துபவள்] தோழிக்குச் சொல்லியது (அகம். 40. துறை விளக்கம்) [⇐ பிரிவாற்றாது அவனையே நினைந்து பெரிதும் வருந்துகின்ற/வருந்தும் தலைவி] தோழிக்குச் சொல்லியது

15 (அ) [தழைவிழைதக்கன] தொடுத்தும் (இறையனார் அகப்பொருள். நூற்பா. 3. நக்கீரர் உரை) [⇐ விழை தக்க தழை] தொடுத்தும்

(ஆ) [போது மேதக்கன கொய்தும்] (இறையனார் அகப்பொருள். நூற்பா. 3. நக்கீரர் உரை) [⇐ மேதக்க போது] கொய்தும்

குறிப்பு: இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *தொடுத்தும், கொய்தும்* ஆகிய முற்று வினைகள் *தொடுப்போம், கொய்வோம்* என்பவற்றுக்கு இணையான தன்மைப்பன்மை வினைகளாகும்.

16 (அ) [அருவி தாழ்ந்து வீழ்ந்தவை] முழவிற்றதும்பின (சீ.சி. 1560)
[⇐ தாழ்ந்து வீழ்ந்த அருவி] முழவிற்றதும்பின

(ஆ) பொருங்களத் தாடவர் பொருவில் [பைந்தலை
அரும்பெறற் கண்ணியோ டற்று வீழ்வன]
கருங்கனிப் பெண்ணையங் கானம் கால்பொர
இருங்கனி சொரிவன போன்ற வென்பவே (சீ.சி. 2227)

இந்த எடுத்துக்காட்டில் நாம் கருத்தில் கொள்ளவேண்டிய பெயர்த் தொடர் [பைந்தலை அற்று வீழ்வன] என்பதாகும். இதன் இயல்பான அமைப்பு [அற்று .வீழும்/வீழ்கின்ற பைந்தலை] என்பதாகும்.

(இ) [புள்ளி நீர் வீழ்ந்தது] பெருகி (சீ.சி. 2933)[⇐ வீழ்ந்த புள்ளி நீர்] பெருகி

(ஈ) [கன்னியம் மடந்தைமார் அணிநலம் முற்றினாரை] (சீ.சி. 1998)
[⇐ அணிநலம் முற்றிய கன்னியம் மடந்தைமாரை....]

(உ) [வீழ்ந்து மயில்போல் விசயை கிடந்தாளை] (சீ.சி. 1810)
[⇐ வீழ்ந்து மயில்போல் கிடந்த விசயையை]

(ஊ) [குணமாலை குஞ்சரத்தால், அல்லல் நோய் உற்றாளுக்கு] (சீ.சி. 2957) [⇐ குஞ்சரத்தால் அல்லல் நோய் உற்ற குணமாலைக்கு]..........

குறிப்புப் பெயரெச்சங்கள் அகப்பெயர்ச்சிக்கு உட்படுவது தமிழில் மிக அரிதாகவே காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டு இந்த வகையில் கருதற்குரியதாகும்.

(17) [கண்ணி தண்ணறு நாற்றத்தன] செய்தும் (இறையனார் அகப்பொருள். நூற்பா. 3. நக்கீரர் உரை) [⇐ தண்ணறு நாற்றத்த கண்ணி] செய்தும் (செய்தும்=செய்வோம்)

மேலே (14) முதல் (17) வரை குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக் காட்டுக்கள் அனைத்தும் (11)-இல் குறிக்கப்பெற்றுள்ள *[முருகன் சூரனை வென்றவன்] வள்ளியை மணந்தான்* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகும். தலைமைப் பெயரை அடுத்து வேற்றுமையுருபு நிகழ்ந்தால் அது தலைமைப் பெயரானது அகப்பெயர்ச்சிக்கு உட்படுகையில் திரிந்தமையும் பெயரெச்ச வினைமுற்றுப் பெயரை அடுத்து நிகழும். வேற்றுமையுருபு தலைமைப்பெயருடன் இடம் பெயர்வதில்லை. *[வீழ்ந்த மயில்போல் கிடந்த விசையையை]* என்ற பெயர்த்தொடர், 16(உ)-வில், *[வீழ்ந்த மயில்போல் விசையை கிடந்தாளை]* என அகப்பெயர்ச்சியின் விளைவாக அமைதல் இதற்கு எடுத்துக்காட்டாகும். *விசையையை* என்பதில் நிகழும் வேற்றுமையுருபு *கிடந்த* என்பதன் சிறப்பு வினைமுற்றுப் பெயராகிய *கிடந்தாள்* என்பதையடுத்து நிகழ்வதை இந்த

எடுத்துக்காட்டில் காணலாம். [நீ நீங்கக் கருதியாய்க்கு] (கலி. 136.15) என்ற எடுத்துக்காட்டிலும் இந்த நிலையைக் காணலாம்.

4.2 ஒரே தலைமைப் பெயரைக் கொண்ட ஒன்றுக்கு மேற்பட்ட பெயரெச்சத் தொடர்கள் அகப் பெயர்ச்சிக்கு உட்படும் நிலையும் தமிழில் காணப்படுகின்றது. இத்தகைய பெயரெச்சத் தொடர்கள் அமைந்த வாக்கியங்களின் அமைப்பு விளக்கம் சற்றுச் சிக்கல் உள்ளதாகக் காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கன வாகின்றன.

(18) [தலைவன் பொருள்வயிற் பிரிபவன்] யாம் கார்ப்பருவம் தொடங்குமுன்னே [மீண்டு வருகுவம் என்று கூறிச் சென்றவன்] அப்பருவம் வந்துழியும் வந்திலனாக........

(அகம். 85. துறை விளக்கம்)

(19) [தலைவன் பொருள் தேடுதற்குத் தலைவியைப் பிரிந்து செல்கின்றவன்] யான் கார்ப்பருவத்துத் தொடக்கத்தே மீண்டு வருகுவன்.......... அது காறும் [நீ ஆற்றி இருந்திடுக என்று கூறிப் போனவன்] குறித்த பருவத்து வாராமையின்......

(அகம். 97. துறை விளக்கம்)

இத்தகைய (எண்ணும்மைப்) பெயரெச்சத் தொடரன்கள் அமைந்த வாக்கிய அமைப்புகள் தமிழில் இயல்பாக அமைந்தவையாகத் தோன்றவில்லை. ஆயினும், இலக்கணக் குறைபாடுள்ள அமைப்புகளாகவும் இவற்றைக் கருத முடிய வில்லை. இத்தகைய அமைப்புக்களில் நிகழும் ஒரே தலைமைப் பெயரைக் கொண்ட எண்ணும்மைப் பெயரெச்சத் தொடரன்களின் நிகழ்ச்சியானது ஓலைச் சுவடியில் எழுத்தாணிகொண்டு எழுதிய ஒரு காலக்கட்டத்துக்கு உரியதாகும். ஓலைச் சுவடியில் அடித்துத் திருத்தி எழுதும் வாய்ப்பு இன்மையால் எழுதியதை எழுதிய படியே நாம் கைவரப்பெற்றுள்ளோம். மேலே (18), (19)இல் உள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் எண்ணும்மைப் பெயரெச்சத் தொடரன்கள் பின்வரும் அமைப்புக்களின் திரிபுகளாகும்.

(20) பொருள்வயிற் பிரிபவனும்/பிரிவானும்/பிரிவோனும் கார்ப் பருவம் தொடங்குமுன்னே மீண்டு வருகுவம் என்று கூறிச் சென்றவனும்/சென்றானும்/சென்றோனும் ஆகிய தலைவன்

(21) பொருள் தேடுதற்குத் தலைவியைப் பிரிந்து செல்கின்றவனும்/ செல்கின்றானும்/செல்கின்றோனும் யான் கார்ப்பருவத்துத் தொடக்கத்தே மீண்டு வருகுவன்...... அது காறும் நீ ஆற்றி இருந்திடுக என்று கூறிப்போனவனும்/ போனானும்/ போனோனும் ஆகிய தலைவன்

தலைமைப்பெயர் இடம்பெயராத நிலையிலும் அது எண்ணும்மைப் பெயரெச்சத் தொடரன்களுக்கு உரியதாயின் பெயரெச்சப் பொது வினைமுற்றானது சிறப்பு வினைமுற்றாகத் திரிந்து *ஆகிய* என்ற குறிப்புப் பெயரெச்ச வினையின் முன் நிகழும் நிலையை (20), (21) ஆகிய எடுத்துக்காட்டுக்களில் காணலாம். இதனின்றும் மரபிலக்கணிகளால் பெயரெச்ச வினைகள் எனக் கருதப்படுபவை வினைமுற்றுக் குடும்பத்தைச் சார்ந்த பொதுவினைமுற்றுக்கள் என்ற உண்மை புலனாகின்றது.

4.3 பெயர்த்தொடர்களில் இடப்புறமாக அமையும் பெயரெச்சத் தொடர்கள் புறப்பெயர்ச்சிக்கு உட்பட்டு (12)-இல் குறிக்கப்பெற்றுள்ள *[முருகன்] வள்ளியை மணந்தான் [சூரனை வென்றவன்]* என்ற வாய்பாட்டில் அமைந்த வாக்கிய அமைப்புக்கள் தமிழில் அருகிய வழக்காகவே காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுகள் இரண்டும் பெயரெச்சத் தொடரானது புறப்பெயர்ச்சிக்கு உட்பட்டதன் விளைவாகும்.

(22) நீவா ழியர்நின் தந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே (புறம். 137. 14,15)

*[நிற்பயந்த நின் தந்தை தாய்] வாழியர்* என்ற இயல்பான வாக்கிய அமைப்பு *[நின் தந்தை தாய் நிற்பயந்திசினோர்] வாழியர்* என்று திரிவதுடன் மேற்படி எடுத்துக்காட்டில் *[நின் தந்தை தாய்] வாழியர் [நிற் பயந்திசினோர்]* என்றும் திரிந்து நிகழ்வதைக் காணலாம்.

(23) நீயார் மகனையெம் பற்றி யோயே (ஐங். 79. 4)

*[எம் பற்றிய (= எம்மைப் பற்றிய) நீ] யார் மகனை* என்று இருக்கவேண்டிய வாக்கிய அமைப்பு இந்த எடுத்துக்காட்டில் தலைமைப் பெயராகிய *நீ* என்பது ஓரிடத்திலும் அதனைத் தழுவிய *பற்றிய* என்ற பொதுவினைமுற்று *பற்றியோய்* என்ற சிறப்பு வினைமுற்றாகத்திரிந்து பிறிதோரிடத்திலுமாக அமைந்து *[நீ]யார் மகனை [எம் பற்றியோய்]* என்று நிகழ்கின்றது.

## 5.0 தலைமைப்பெயர் இடப்பெயர்ச்சிக்கான காரணம்

5.1 பெயரெச்சத்தொடரன்களில் தலைமைப் பெயரின் இரண்டு வகையான இடப்பெயர்ச்சிகளின் காரணத்தை இலக்கண அடிப்படையில் இப்போதைக்கு விளக்கமுடியவில்லை. தலைமைப் பெயரானது இடப்புறமாக நகர்ந்து எழுவாய் நிகழும் இடத்தில் நிலைகொள்வதை நோக்கும்போது தொடக்கத்தில் திராவிட

வாக்கிய அமைப்பானது செயப்படுபொருள் + வினைப்பயனிலை + எழுவாய் (OVS) என்ற வைப்புமுறையில் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கருதத்தோன்றுகிறது. *சூரனை வென்றவன்* என்ற தொடரனில் *அவன்* என்பதை எழுவாயாகக் கொண்டால், அது தமிழில் பிரதி செய்யப்பட்டு இடப்புறமாக நகர்த்தப்பட்ட நிலையில் *அவன் சூரனை வென்றவன்* என்ற வாக்கிய அமைப்பும், பிரதிசெய்யப்படாமல் மேற்படி உறுப்பாகிய *அவன்* என்பது இடப்புறமாக நகர்ந்த நிலையில் மலயாளத்தில் *அவன் சூரனை வென்று* என்ற வாக்கிய அமைப்பும் தோற்றம் கொண்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. இது மேலும் ஆய்வுக்குரியது.

*5.2* தலைமைப்பெயரின் இடப்பெயர்ச்சிக்கான இன்னொரு விளக்கமும் இங்குக் கருதற்பாலதாகும். அதாவது விரைந்த உரை நிகழ்ச்சியின்போது எதிர்பாராமல் நிகழும் அமைப்பியல் பிறழ்ச்சியின் காரணமாக இந்த இடப்பெயர்ச்சி நிகழ்வதாகக் கருதலாம். இந்தோ ஐரோப்பிய மொழிகளில் ஒன்றாகிய ஆங்கிலத்திலும் இத்தகைய பெயர்ச்சியை, குறிப்பாகப் புறப் பெயர்ச்சியைக் காணமுடிகின்றது. [Robert who won the Presidential Election] was assassinated என்ற வாக்கிய அமைப்பு [Robert] was assassinated [who won the Presidential Election] என்று அமையும் போக்கு ஆங்கிலத்தில் காணப்படுகின்றது. இந்தியிலும் இத்தகைய நிலை காணப்படுகின்றது. (Subbarao, K.V. 1974:139) எ-டு. [vah kita:b jo/ jise ma:la: -ne kal khari:di: hai] bahut mahãgi: hai *(=மாலா நேற்று வாங்கிய புத்தகம் விலை மிக்கது)* என்ற வாக்கிய அமைப்பு இந்தி மொழியில் [vah kita:b] bahut mahãgi: hai [jo / jise ma:la: -ne kal khari:di: hai] என்றும் திரிந்தமைகின்றது. பெயரெச்சத் தொடரும் தலைமைப்பெயரும் அமைந்த பெயரெச்சத் தொடரன் பொருந்திய வாக்கியத்தை அதாவது *[சூரனை வென்ற முருகன்] வள்ளியை மணந்தான்* என்ற வாக்கிய அமைப்பைப் பயன்படுத்தக் கருதுபவர் மறதியில் இயல்பான பெயரெச்சத் தொடரை அதாவது *சூரனை வென்ற* என்ற தொடரை விடுத்துத் தலைமைப் பெயருடன் வாக்கியத்தைத் தொடங்க நேர்ந்து, பின்னர் விடுபட்டுப் போன பெயரெச்சத்தொடர் நினைவுக்கு வருமாயின் பேசுபவர் அதனை வாக்கியத்தில் பொருத்தமான இடத்தில் அமைக்க முயல்கிறார். இதனைத் தொடர்ந்து, பேசுபவர் விடுபட்டுப் போன பெயரெச்சத்தொடரைத் தலைமைப் பெயரை அடுத்தோ *(11)*, வினைப்பயனிலையை அடுத்தோ *(12)* அமைத்துப் புதிய வாக்கிய அமைப்புக்களைப் படைத்துக் கொள்கிறார். பழந்

தமிழிலும், காப்பியத் தமிழிலும், பக்தி இலக்கியங்களிலும் இத்தகைய புதிய பெயர்த்தொடர் அமைப்புக்கள் நிகழ்வதைக் கருதுகையில், பழமையான பேச்சுத்தமிழில் இவற்றின் நிகழ்ச்சி ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும் என்று கருதமுடிகிறது. ஆயினும், தமிழைப் பொறுத்தவரையில் பெயரெச்சத் தொடரன்களின் அகப்புறப் பெயர்ச்சிகள் நினைவுப் பிறழ்ச்சியின் விளைவாக இருக்கலாம் என்பது ஒரு மாற்றுச் சிந்தனைதான்.

5.3. தலைமைப் பெயரானது இடப்புறமாக இடம்பெயர்தல் தொடர்பாக இங்கே கருத்தில்கொள்ள வேண்டிய உண்மையும் ஒன்று உண்டு. பெயரெச்ச வினையும் தலைமைப்பெயரும் எழுவாய்-பயனிலை என்ற இலக்கண உறவில் அமையாமல் வேறுவகையான இலக்கண உறவில் அமைந்தால் தலைமைப் பெயரானது பழந்தமிழிலும் பிற்காலத்தமிழிலும் இடம்பெயரும் நிகழ்ச்சி காணப்படவில்லை. ஆயினும் இக்காலத் தமிழில் *[முருகன் படித்த கல்லூரி] சென்னையில் உள்ளது* என்ற வாக்கியத்தில் நிகழும் பெயரெச்சத் தொடரனில் உள்ள *கல்லூரி* என்ற தலைமைப்பெயர் இடம்பெயர்ந்து *[கல்லூரி முருகன் படித்தது] சென்னையில் உள்ளது* என்று அமையும் நிலையும் காணப்படுகிறது. இந்த எடுத்துக்காட்டில் பெயரெச்ச வினையும் தலைமைப் பெயரும் இடவேற்றுமை - பயனிலை (Locative - Predicative) என்ற இலக்கண உறவைக் கொண்டுள்ளது. இந்த எடுத்துக்காட்டில் *படித்தது* என்பதில் *படித்து* என்ற வினையமைப்பு *முருகன்* என்ற எழுவாய்க்குரிய பயனிலையாகும். மேற்படி வினையமைப்பை அடுத்து நிகழும் *-அது* என்பது *கல்லூரி* என்பதன் இயைபு விகுதியாக (Agreement Marker) அமைந்துள்ளது. இந்த வகையில் *படித்தது* என்பது இரண்டு எழுவாய்களைக் கொண்டதாகக் காணப்படுகின்றது. *முருகன் படித்து* என்பது வினைத்தொடரின் பகுதியாக நிகழ, *கல்லூரி* என்பது எழுவாய் நிலைக்கு உயர்த்தப் படுகிறது. இதன் விளைவாக, *கல்லூரி* என்பதன் இயைபு விகுதியாக *-அது* என்பது *படித்து* என்பதை அடுத்து நிகழ்கிறது. இரண்டு எழுவாய்களைக் குறிக்கும் இத்தகைய வினையமைப்புக்கள் அமைந்த பெயரெச்சத் தொடரன்கள் மேலும் ஆய்வுக்கு உரியனவாகும்.



# 11. இலக்கியத்தில் இரட்டை வழக்கு

## 1.0 மணிப்பிரவாளமும் மணிமிடைபவளமும்

*1.1* இடைக்காலத்தில் தமிழில் வடமொழி கலந்து ஒரு புதிய மொழி வழக்கு தோன்றியது. இது மணிப்பிரவாளவழக்கு எனப்பட்டது. மாணிக்கமும் பவழமும் விரவிய நிலையே மணிப்பிரவாளம். அகநானூற்றில் *மணிமிடை பவளம்* (304.13) என்றொரு தொடர் காணப்படுகிறது. மணிப்பிரவாளம் என்பதுதான் மணிமிடைபவளம். ஒரு மொழியில் செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் இனங்காணக் கூடிய வகையில் அமையுமாயின் அந்த மொழி இரட்டை வழக்கு மொழி (Diglossic Language) எனப்படும். நீண்ட இலக்கியப் பாரம்பரியம் உள்ள வாழும் மொழிகள் இரட்டை வழக்கு மொழிகளாக அமைய வாய்ப்புண்டு. கிரேக்கம் ஓர் இரட்டை வழக்கு மொழி. இந்தியாவில் தமிழ் ஓர் இரட்டை வழக்கு மொழி. இரட்டை வழக்கு மொழிகளில் படைக்கப்படும் இலக்கியங்களில் செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் மயங்கு வதற்கு வாய்ப்பு உள்ளது. தமிழைப் பொறுத்தவரை தொல்காப்பியர் தொடங்கி இக்கால இலக்கியம் வரை செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் இலைமறை காயாக மயங்கும் நிலை காணப்படுகிறது. இலக்கியங் களில் இப்படி இருவகை வழக்கும் மயங்கும் நிலையை மணிமிடை பவளத்துக்கு ஒப்பிடலாம். ஒருமொழியில் இன்னொரு மொழி மயங்குவது மணிப்பிரவாள வழக்கு.

*1.2* செவ்வியல் வழக்கில் பேச்சுவழக்கு மயங்குவது மொழியைக் கொச்சைப்படுத்துவதாக ஒரு கருத்து நிலவுகிறது. பொதுவாக எங்கும் எக்காலத்திலும் பழமையைப் போற்றுவோரிடமிருந்து சோதனை முயற்சிகளுக்கு எதிர்ப்பு இருந்து கொண்டுதான் இருக்கிறது. தமிழிலக்கியங்களில் செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் மயங்குவது ஒரு மரபாகத் தோன்றியமைந்தது இன்று நேற்றல்ல; பழந்தமிழிலேயே இந்த வழக்கு மயக்கத்தைப் போற்றும் மரபு நிலைகொண்டுவிட்டது. செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் இலக்கியத்தில் தத்தமக்குரிய சூழலில் நிகழும் வரை பிரச்சினையேதுமில்லை. ஆனால் செவ்வியல் வழக்கில் பேச்சு

வழக்கு ஊடுருவ முற்படும் போதுதான் அது மரபு மீறிய செயலாகக் கருதப்படுகிறது. எடுத்துக்காட்டாக, *மிக நல்லாக முன்னேறி வந்த கம்பனி காரணமின்றி படபடவென்று சரியத் தொடங்கிவிட்டது.* (அ. முத்துலிங்கம் 1996:170) என்ற வாக்கியத்தில் நிகழும் *நல்லாக* என்பது செவ்வியல் வழக்கில் நிகழ்ந்த ஊடுருவல். பழமையைப் போற்றுவோர் இதனை ஓர் மரபு மீறலாகக் கருதுவர். ஆனால் இத்தகைய மரபு மீறல் தொல்காப்பியர் காலத்திலேயே தொடங்கி (பார்க்க 14.2), சங்க இலக்கியங்களில் அதுவே ஒரு மரபாக அமைந்துவிட்டது. இந்தக் கட்டுரையில் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் மணிமிடை பவளமாக மயங்கும் நிலை முதன்மைப்படுத்திப் பேசப்படுகிறது. செய்கும், செய்தும் (< *செ(ய்)யுதும்), செய்கம் ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி சங்க இலக்கியங்களில் அழுத்தமாகப் பதிவாகியுள்ளது. இந்த மூன்று வாய்பாட்டு வினைகளும் மூன்று வகையான வட்டார வழக்குகளுக்கு உரியவையாகும். இதனைக் கருத்தில் கொண்டு பழந்தமிழில் பேச்சு மொழியின் தாக்கத்தினைப் பற்றி இனிச் சிந்திக்கலாம்.

## 2.0. இரட்டைவழக்கில் நிகழ்வினைகள்

2.1. மொழி வழக்குகள் இருவகைப்படும். ஒன்று, நேர் வழக்கு; பிறிதொன்று, திரிபு வழக்கு. ஒரு மொழியில் ஒன்றுக்கு மேற்பட்ட நேர் வழக்குகளை வண்ணனை நிலையில் சுட்டலாம். நெல்லை-குமரி மாவட்டப் பேச்சுத் தமிழில் நிகழும் பாடுகான், பாடுதான் என்ற ஆண்பால் நிகழ்கால வினைமுற்று வழக்குகள் இருவகைப்பட்ட நேர்வழக்குகளாகும். சங்கத் தமிழில் நிகழும் செய்கும், செய்தும் (< செய்யுதும்) ஆகிய வாய்பாட்டுத் தன்மைப் பன்மை நிகழ்வெதிர்வு வினைமுற்றுகளும் செய்கம், செய்குவம் ஆகிய வாய்பாட்டுத் தன்மைப் பன்மை நிகழ்வெதிர்வு வினைமுற்றுகளும் நேர் வழக்கின்பாற்படுவனவாகும். இக்காலத் தமிழில் பயின்று வழங்கும் செய்கிறான், செய்கின்றான் ஆகிய வாய்பாட்டு ஆண்பால் நிகழ்வினைகளும் வண்ணனை நிலையில் நேர் வழக்கினவாகும். நேர் வழக்குகள் என்பவை இணை வழக்கு களாகக் கருதத்தக்கவையாகும். இணைவழக்குகள் (Parallel Usages) வட்டார வழக்கினவாகவோ செவ்வியல் வழக்கின வாகவோ நிகழ்வனவாகும். இவற்றை ஒன்றினின்றும் ஒன்று திரிந்தனவாகக் கருத முடியாது. எடுத்துக்காட்டாக பாடுகான், பாடுதான், பாடுகிறான் ஆகிய வினைவகைகளை ஒன்றினின்றும் ஒன்று

திரிந்தனவாகக் கொள்ள முடியாது. இணை வழக்குகள் மயங்கும்போது பேசுபவர் இரட்டை வழக்கு நிலையைத் தம்மை அறிந்தோ அறியாமலோ மேற்கொள்கிறார். இத்தகைய மயக்கத்துக்கான காரணங்கள் ஆராயத்தக்கனவாகும்.

2.2. திரிபு வழக்கு என்பது நேர்வழக்கின் திரிபாகும். பாடுகான் என்பது குமரி மாவட்டத்தில் பெரும்பாலும் நாஞ்சில் நாட்டுப் பகுதியிலும், நிகழ்கால விகுதியாகிய ககர இடைநிலை யகரமாகத் திரிந்து பாடுயான் என்று விளவங்கோடு வட்டத்திலும் அதனைச் சார்ந்த பகுதிகளிலும் வழங்குகிறது. இது ஒரு கிளைமொழிக்குள் நிகழ்ந்த திரிபாகும். இவ்வாய்வாளரின் தாய்மொழியாகிய தெலுங்கில் ககரத்தின் திரிபாகிய யகரம் கெட்டு பாடே (னு) (=பாடுகிறேன்), பாடேமு (=பாடுகிறோம்) ஆகிய தன்மை நிகழ்கால வினைவடிவங்கள் தோன்றியமைகின்றன. இவற்றின் தோற்றத்தை இவ்வாறு விளக்கலாம். *பாடுகேன் > *பாடுயேன் > *பாடேனு; *பாடுகேம் > *பாடுயேம் > *பாடேமு. பாடேனு, பாடேமு ஆகிய வினையமைப்புகள் தொல்திராவிடக் கிளைமொழியொன்றில் நிகழ்ந்த *பாடுகேன், *பாடுகேம் என்ற தொல்திராவிட வினைகளின் திரிபுகளாகும். *பாடுகேன், *பாடுகேம் ஆகிய தொல்திராவிட நேர் வழக்குகள் தெலுங்கு மொழியாகத் தோற்றம் கொண்ட தொல் திராவிடக் கிளை மொழியில் பாடேனு, பாடேமு என்று திரிபு வழக்காயின. வரலாற்று நிலையில் தோன்றியமையும் திரிபு வழக்குகள் பொதுவாக இரட்டை வழக்கு நிலைக்கு ஆட்படுவதில்லை. அதிலும் நேர்வழக்கும் திரிபு வழக்கும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த இருவேறு மொழிகளில் நிகழுமாயின் இரட்டைவழக்கு நிகழ்ச்சிக்கு வாய்ப்பில்லை.

2.3. இனி, பாடுதான் என்ற நேர்வழக்கு வினையைக் கருதுவோம். இந்த வினையில் காணப்படும் நிகழ்கால விகுதியாகிய தகர இடைநிலை ரகரமாகத் திரிந்து பாடுரான் என்ற திரிபு வழக்கு தோற்றம் கொள்கிறது. இந்தத் திரிபு வழக்கானது பாடுறான் என்று மிகைத் திருத்தம் (Hyper Correction) செய்யப்பட்டுப் பொதுப் பேச்சுத் தமிழில் (Standard Spoken Tamil) வழங்கும் நிலை காணப்படுகிறது. இவ்வாறே செய்யாத வாய்பாட்டு எதிர்மறைப் பெயரெச்சங்கள் செய்யாற (=செய்யார) வாய்பாட்டினவாய்த் திரிந்தமையும் நிலையும் தமிழ்க் கிளைமொழி ஒன்றில் காணப்படுகிறது. (பூமணி 1979, 1982). எ-டு: அழுகாற (< அழுகாத) 'அழாத', தேடாற (< தேடாத), செய்யாற (< செய்யாத), அலையாற (< அலையாத). பூமணியின் பள்ளர் தமிழில் (1979, 1982) செய்யாதவன், செய்யாதது ஆகிய வாய்பாட்டு

வினைகள் செய்யாறவன், செய்யாறது ஆகிய வாய்பாட்டின வாகவும் இல்லாத, இல்லாதது ஆகியவை இல்லாற, இல்லாறது எனவும் திரிந்து வழங்கும் நிலை இயல்பாகக் காணப்படுகின்றது. ஒரு தனிமொழியில் நேர்வழக்கும் திரிபு வழக்கும் இரட்டை வழக்காக மயங்குவதைப் படைப்பிலக்கியங்களில் பெருவழக்காகக் காணலாம். பாடுகான், பாடுதான், பாடுயான், பாடுரான் என்ற வாய்பாட்டினவாகிய பேச்சுவழக்கு வினைகளின் நிகழ்ச்சியைப் பொன்னீலனின் (1995) *புதிய தரிசனங்கள்* என்ற புதினத்தில் பரக்கக் காணலாம்.

2.4. செவ்வியல் வழக்கில் காணப்படும் பாடுகிறான், படிக்கிறான், எடுக்கிறான், கேட்கிறான், நிற்கிறான், தின்கிறான், உண்கிறான் முதலான நிகழ்கால வினைகள் நேர்வழக்கைச் சார்ந்தவையாக இருந்தாலும், வரலாற்று நிலையில் இவை திரிபு வழக்கு வினைகளாகக் கருதத்தக்கவையாகும். பழந்தமிழில் நிகழும் *மறைகுவென்* (நற். 362.10), *அறிகுவேன்* (கலி. 79.9), *வருகுவை* (குறு. 379.5), *செய்குவம்* (ஐங். 288.2), *வருகுவன்* (நற். 119.8), *வருகுவள்* (குறு. 113.6), *வருகுவர்* (கலி. 28.24), *அளிக்குவை* (அகம். 192.5), *கொடுக்குவென்* (புறம். 73.4), *தூர்க்குவன்* (பத்துப். 9.271), *கொடுக்குவர்* (புறம். 182.5) முதலான முற்றுவினைகள் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளின் மீது அமைந்தவையாகும். இந்த வாய்பாட்டு வினைப்பகுதிகளே பாடுகிறான், படிக்கிறான், எடுக்கிறான், கேட்கிறான், நிற்கிறான் முதலான வினைகளின் பகுதிகளாகவும் அமைகின்றன. இதனைக் கருத்தில் கொண்டு இந்த வினைமுற்றுக்களின் காலப்பகுதிகள் பாடுகு+ற், படிக்கு+ற், எடுக்கு+ற், கேட்கு+ற், நிற்கு+ற் என்று ஆராயப்படும். இந்த அமைப்பு களில் காணப்படும் றகர இடைநிலையானது உண்மையில் தகர நிகழ்விகுதியின் திரிபாகிய ரகரத்தின் மிகைத்திருத்தமாகும்.

2.5. மேலே குறிப்பிட்ட மிகைத் திருத்தத்துக்குக் காரணமாக அமைந்தது செய்கின்று வாய்பாட்டு நிகழ்காலப் பகுதிகளில் காணப்படும் றகரமேயாகும். செய்கிறான் வாய்பாட்டு வினையும் செய்கின்றான் வாய்பாட்டு வினையும் மாறுபட்ட வெவ்வேறு வளர்ச்சிப் போக்கின் வெளிப்பாடுகளாகும். செய்கிறான் என்பதைச் செய்கின்றான் என்பதன் திரிபாகக் கருதமுடியாது; கருதவும் கூடாது. செய்கின்றன என்ற முற்றுவினை *செய்கிறன எனத் திரியாமையே இதற்குத் தகுந்த அகச் சான்றாக அமைகின்றது. செய்கின்று என்பது செய்கு+இன்+து அமைப்பின தாகும். செய்கிறு- என்பது செய்கு+று (=ரு<து) என்ற அமைப்பின தாகும். செய்கின்று என்ற அமைப்பில் றகரத்தின் நிகழ்ச்சியானது சந்தியின் விளைவாகும். இன்+து>இன்று. இந்த றகரமே *செய்குது

என்பதன் திரிபாகிய செய்கிரு என்பதைச் செய்கிறு என்று பிறழ உணரச் செய்தது. செய்கின்று என்ற அமைப்பில் நிகழும் இன் சாரியையில் உள்ள இகரத்தின் தாக்கத்தால் *செய்குதான் என்பதன் திரிபாகிய செய்குரான் என்பது செய்கிரான் எனத் திரிந்து பின்னர் மிகைத்திருத்தம் காரணமாகச் செய்கிறான் என்ற வினைவடிவம் தோற்றம் கொண்டது. இதனின்றும் பாடுகிறான், படிக்கிறான், எடுக்கிறான், கேட்கிறான், நிற்கிறான் முதலானவை முறையே *பாடுகுதான், *படிக்குதான், *எடுக்குதான், *கேட்குதான், *நிற்குதான் முதலானவற்றின் திரிபு வழக்குகளாகக் கருதத்தக்கன என்பது புலனாகின்றது.[1] செவ்வியல் வழக்கில் காணப்படும் நிகழ்கால வினைகளாகிய செய்கிறான், செய்கின்றான் ஆகிய

---

1. தென்மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில் வலிமிகு நிகழ் வினைகள்-வல்வினை நிகழ் முற்றுவினைகள் - செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றியமைவதைக் காணலாம். எ-டு:

**1. ஹெப்சிபா ஜேசுதாஸ் (1964)**

(அ) படிக்கிதி - (பக். 10) 'படிக்கிறாய்'
(ஆ) அறுக்குதி- (பக். 73) 'அறுக்கிறாய்'
(இ) சிரிக்கிதி- (பக். 17) 'சிரிக்கிறாய்'

**2. நீல. பத்மநாபன் (1968)**

(அ) பாக்குதேன் (பக். 351) 'பார்க்கிறேன்'
(ஆ) கொடுக்குதான் (பக். 271) 'கொடுக்கிறான்'

**3. ஆ. மாதவன் (1980)**

(அ) சிரிக்கிதியோ (பக். 16) 'சிரிக்கிறீர்கள்'
(ஆ) நிக்கிதியோ (பக். 34) 'நிற்கிறீர்கள்'

**4. ஜெயமோகன் (1990)**

(அ) கேக்குதேன் (பக். 29) 'கேட்கிறேன்'
(ஆ) நெனக்குதேன் (பக். 161) 'நினைக்கிறேன்'
(இ) பாக்குதேன் (பக். 191) 'பார்க்கிறேன்'
(ஈ) படிக்குதான் (பக். 137) 'படிக்கிறான்'
(உ) நெனைக்குதாரு (பக். 218) 'நினைக்கிறார்'

**5. தோப்பில் முகமது மீரான் (1993)**

(அ) கறக்குதான் (பக். 202) 'கறக்கிறான்'
(ஆ) நடக்குதேன் (பக். 113) 'நடக்கிறேன்'
(இ) நிக்குதேன் (பக். 275) 'நிற்கிறேன்'

6. கேக்குதோம் (கொ.மா.கோ. 1991:44) 'கேட்கிறோம்'

**7. பொன்னீலன் (1995)**

(அ) குதிக்கிதி (பக். 1136) 'குதிக்கிறாய்'
(ஆ) கேக்குதி (பக். 18) 'கேட்கிறாய்'
(இ) நிக்குதி (பக். 490) 'நிற்கிறாய்'
(ஈ) பாக்குதி (பக். 296) 'பார்க்கிறாய்'
(உ) படிக்கிதி (பக். 1175) 'படிக்கிறாய்'

**8. செல்சேவிஸ் (1996)**

(அ) பாக்குதேன் (பக். 43) 'பார்க்கிறேன்'
(ஆ) இருக்குதோம் (பக். 5) 'இருக்கிறோம்'

வாய்பாட்டு வினைமுற்றுக்கள் வரலாற்று நிலையில் இரட்டை வழக்கு நிலையைப் பிரதிபலிப்பனவாகும். **செய்கிறான், செய்கின்றான்** ஆகிய வாய்பாட்டு வினைகளின் வரலாற்றை அறியாமல் இலக்கியத்தில் அவற்றின் வழக்கு நிகழ்ச்சியைப் புரிந்துகொள்ள முடியாது. இதனைக் கருத்தில் கொண்டே இந்த வாய்பாட்டு வினைகளின் வரலாறு சுருக்கமாக மேலே குறிக்கப் பெற்றது.

## 3.0. அஃறிணையும் ஒத்திசைவும்

3.1. பழந்தமிழில் அஃறிணையைப் பொறுத்தவரை எழுவாய்-பயனிலை ஒத்திசைவு என்பது இன்றைய தமிழிலிருந்து மாறுபட்டதாகும். அஃறிணை இயற்பெயரானது எழுவாயாக நிகழ்கையில் பன்மை விகுதியின்றியே பன்மையாகவும் அறியப் படும். எழுவாயாக நிகழும் இந்தப் பெயரானது ஒருமையா பன்மையா என்பதைப் பயனிலையாக நிகழும் வினையைக் கொண்டுதான் முடிவுசெய்ய முடியும். இதில் செய்யும் வாய்பாட்டு வினைகள் வராது. *குதிரை வந்தது* என்பதைப் போலவே *குதிரை வந்தன* என்ற வாக்கியமும் பழந்தமிழில் ஏற்புடையதாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(1) களவும் புளித்தன விளவும் பழுநின (அகம். 394.1)

(2) புள்ளும் புலம்பின பூவும் கூம்பின (குறுந். 310.1)

(3) பல்லியும் (பாங்கு ஒத்து) இசைத்தன (கலி. 11.21)

இத்தகைய வாக்கியங்கள் பேச்சு வழக்கில் நிகழாமல் செவ்வியல் வழக்கில் இடம்பெற வாய்ப்பில்லை. பழந்தமிழில் பெரு வழக்கினவாக அமைந்த இத்தகைய வாக்கியங்களைக் கருத்தில் கொண்டே தொல்காப்பியரும் பின்வரும் நூற்பாவை வகுத்தார்.

(4) தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே
(சொல். சேனா. 171)

இக்காலப் பேச்சுத் தமிழில் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. *குதிரை வந்தது* என்பதைப் போலவே *குதிரைங்க வந்தது* என்பதும் இக்காலப் பேச்சுத் தமிழில் இயல்பாகக் காணப் படுகிறது. இதன் தாக்கம் இக்கால இலக்கியங்களிலும் உணரப் படுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும்.

(5) காலடிகள் முந்திரிக்குள் நுழைந்தது (தபா. 1994:44)

(6) அந்த மலைகள்ல கொஞ்சத்த மூலிகைகளா குவிஞ்சுருக்குது
(சூர். 1989: 164)

பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த திரிகூடராசப்பக் கவிராயர் இயற்றிய திருக்குற்றாலக் குறவஞ்சியிலும் இந்த எழுவாய்-பயனிலை ஒத்திசைவுக் கோளாறு காணப்படுகிறது. பின்வரும் வாக்கியங்களைக் கருதுக.

(7) மாடப்புறாவும் மயிலும் வருகுது (திருக்கு. பக். 103)
(8) பறவைகளெல்லாம் பரந்தேறி மேயுது (திருக்கு. பக்.113)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் எழுவாய்ப் பெயர்கள் அஃறிணைப் பிரிவினவாகும். அஃறிணை வினைமுற்று ஒருமையா பன்மையா என்பதை முடிவு செய்ய வேண்டியுள்ளது. இன்னொரு வகையான சிக்கலையும் நாம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இக்காலப் பேச்சுத் தமிழில் உயர்திணையாகக் கருதப்படும் பெயர்கள்கூடச் சில சூழல்களில் அஃறிணைக்குரியனவாகக் கருதப்படும் வினைகளைப் பயனிலையாகக் கொள்கின்றன. இலக்கியத்திலும் இந்தத் தாக்கம் பதிவாவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும்.

(9) அந்த சீனியம்மா சத்தம் போடுது (அழகு 1985:100)
(10) அப்பன் என்ன சொல்லுது (ஹெப். 1964:135)
(11) அய்யன் வித்துச்சு (சூர். 1989:23)
(12) பிள்ளைகள்... பாடுகு (விசா. 1994:175)

எழுவாயாக நிகழும் பெயருக்கும் பயனிலையாக நிகழும் வினைகளுக்கும் ஒத்திசைவு இல்லாமற் போவதற்குக் காரணம் பொதுவாகத் திராவிட வினைமுற்றுக்களும் சிறப்பாகத் தமிழ் வினைமுற்றுக்களும் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றியமைந்தவைதான். இதனைக் கருத்தில் கொண்டு இக்காலப் பேச்சு வழக்கில் காணப்படும் ஒன்றன்பால் வினைகளைப் பொது, சிறப்பு, என்று பிரித்து ஆராய வேண்டும். மேலே (5) முதல் (12) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் வினைமுற்றுக்களைப் பொதுவினை முற்றுக்கள் என்று கருதலாம்.

3.2. இலக்கியத்தில் பொதுவினை முற்றுக்கள் இடம்பெறுவதற்குக் காரணம் பேச்சுத் தமிழ்தான். பொதுவினை, சிறப்புவினை என்ற பாகுபாடு பகுப்பாய்வுச் சிக்கல்களைத் தோற்றுவிக்கும் என்றாலும் இது ஒரு கோட்பாடு தொடர்பான பிரச்சினையாகும். சங்க இலக்கியங்களில் காணப்படும் செய்கு வாய்பாட்டுத் தன்மை ஒருமை வினைமுற்றுக்களும் இப்படி ஒரு கோட்பாட்டுப் பிரச்சினைக்குரியனவாகவே தோன்றுகின்றன. இப்படிக் கோட்பாட்டுச் சிக்கலைத் தோற்றுவிக்கும் மொழி வழக்குகள் எல்லாம் வட்டார வழக்கிலிருந்து செவ்வியல்

வழக்கில் இடம்பெற்றனவாகக் கருதலாம். மேலே தொடர் வதற்கு முன் ஓர் அடிப்படையான மொழிவழக்கு பற்றிய உண்மையைப் புரிந்துகொள்வது அவசியமாகிறது.

## 4.0. ஒரு வினையின் தேய்வு

4.1. தமிழில் இடம் (Person), பால் (Gender) உணர்த்தும் விகுதிகள் கொண்ட வினைமுற்றுக்கள் (எ-டு: செய்தேன், செய்தான் முதலியன) சிறப்புவினை முற்றுக்கள் (Personal Finite Verbs) எனப்படும். இத்தகைய விகுதிகள் இல்லாமல் மலயாளத்தில் உள்ளது போல் அமைந்த வினைமுற்றுக்கள் பொதுவினை முற்றுக்கள் (Impersonal Finite Verbs) எனப்படும். *செய்திகள் வாசிப்பது கிறிஸ்டி, அங்கே தூங்கறது யாரு?* போன்ற கவை வாக்கியங்களில் (Cleft Sentences) நிகழும் *வாசிப்பது, தூங்கறது* ஆகியவை பொதுவினைமுற்றுக்களாகும். தமிழில் காணப்படும் சிறப்பு வினைமுற்றுக்களும், கவைவினைகளும் செய்து, செய்கு, செய்பு ஆகிய வாய்பாட்டுத் தொல்திராவிடப் பொதுவினை முற்றுக்களின் அடியாகத் தோன்றியவை என்பது நமது கருதுகோள். சங்க இலக்கியங்களில் நிகழும் செய்வேன் என்ற பொருளைக் குறிக்கும் செய்கு வாய்பாட்டு வினைகள் இந்தக் கருதுகோளுக்குத் தடையாகவும் எதிராகவும் இருக்கின்றன. இந்த வினைகளின் பன்மை வடிவம் செய்கும் (= செய்வோம்) என்ற வாய்பாட்டில் அமையும். சங்க இலக்கியங்களில் செய்கும் வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படுகிறது. இவற்றையும் செய்தேன், செய்வேன், செய்யேன் ஆகிய வாய்பாட்டு வினைகளில் நிகழும் முற்று விகுதியையும் கருத்தில் கொண்டு செய்கு வாய்பாட்டுப் பழந்தமிழ் வினைமுற்றுக்களை *செய்குன் வாய்பாட்டினவாக மீட்டுருவாக்கம் செய்யலாம். இந்த மீட்டுருவாக்கம் நமது கருதுகோளுக்கு எதிரான தடையை நீக்கி விடுகிறது, *செய்குன் வாய்பாட்டுத் தன்மை ஒருமை இறவாக்கால வினைகள் செய்கு வாய்பாட்டினவாகப் பேச்சுவழக்கில் திரிந்து பிறகு செவ்வியல் வழக்கில் இடம்பெற்றிருக்க வேண்டும். இதனின்றும் செய்கும் வாய்பாட்டுத் தன்மைப்பன்மை வினைகளும் ஒரு குறிப்பிட்ட வட்டார மொழிவழக்கிலிருந்தே செவ்வியல் வழக்கில் இடம்பெற்றிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

## 5.0 இல்லை வழியில் அல்ல

5.1. பேச்சு மொழியின் தாக்கம் அவ்வப்போது செவ்வியல் வழக்கில் உணரப்படத்தான் செய்கிறது. *அல்ல* என்பது இதற்கு

ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. அடிப்படையில் இது ஒரு பலவின் பால் எதிர்மறைக் குறிப்புவினைமுற்றாகும். இதன்படி *அது குதிரை அல்ல* என்பது பிழையான வழக்காகவும் *அவை குதிரைகள் அல்ல* என்பது மட்டுமே சரியான பிரயோகமாகவும் தமிழ்ப் பண்டிதர்களால் வலியுறுத்தப்பட்டுவருகிறது. ஆனால் நடந்தது என்ன? *இல்லை* என்பதைப் போலவே *அல்ல* என்பதும் பொதுக்குறிப்பு வினைமுற்றாக இப்போது எல்லோராலும் பயன்படுத்தப்படுகிறது. மு. வரதராசனின் வாடாமலர் (1978) புதினத்திலிருந்து சில எடுத்துக்காட்டுகள்:

*(13) என்வயிற்றில் பிறந்தவர்கள் யாரும் நல்லவர்கள் அல்ல(பக். 256)*

*(14) அது எனக்கு அல்ல (பக். 200)*

*(15) நாம் கிள்ளுக்கீரை அல்ல (பக். 199)*

இந்த மாற்றத்துக்குக் காரணம் பேச்சுத் தமிழே. பேச்சுவழக்கில் *அல்ல* என்பதன் இடத்தில் *இல்லை* என்ற சொல்லே பயன்படுகிறது. இந்தச் சொல் எல்லா இடத்திலும் பேச்சுத் தமிழில் பயன்படுகிறது. *அல்ல, இல்லை* ஆகியவற்றின் நிகழ்ச்சி இக்காலச் செவ்வியல் வழக்கில் கட்டுப்படுத்தப்படுவது ஓரளவு உண்மை என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும்.

*(16) அது உண்மை அல்ல*

*(17) அதில் உண்மை இல்லை*

5.2. ஆனால் பேச்சு தமிழில் இரண்டிலும் *இல்லை* என்பதே நிகழ்கிறது. இதன் விளைவாகச் செவ்வியல் வழக்கில் *அல்ல* என்பது கொஞ்சம் கொஞ்சமாகத் தவிர்க்கப்பட்டு அது நிகழும் இடங்களில் எல்லாம் *இல்லை* என்பதே வழங்கத் தொடங்கிவிட்டது. *அது உண்மை இல்லை* என்பதும் இக்காலச் செவ்வியல் தமிழில் ஏற்புடையதே. பேச்சு வழக்கின் தாக்கம் செவ்வியல் வழக்கில் உணரப்படுவதற்கு *அல்ல* என்பதன் மாட்சியும் வீழ்ச்சியும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## 6.0 அன்னையும் யானும் இருந்தேமா

6.1 கதை சொல்லும் போதும், ஒரு நிகழ்ச்சியை விவரிக்கும் போதும் பேச்சுத்தமிழில் ஒரு பாணி கையாளப்படுகிறது. கதை சொல்லிகளிடம் இந்தப் பாணி இயல்பாகக் காணப்படுகிறது. *ஒரு ஊர்ல ஒரு ராஜா இருந்தாரு. இருந்தாரா; அவர் ஒரு நாள் மந்திரியோட காட்டுக்கு வேட்டையாடப் போனரு. போனாரா; போன எடத்துல அவங்க ரண்டு பேரும் ஒரு புலிய பாத்தாங்க.*

*பாத்தாங்களா; பாத்ததும்....* கதை இப்படிப் போய்க் கொண்டிருக்கும். ஒரு வாக்கியத்தின் வினைப்பயனிலை அடுத்த வாக்கியத்துக்குத் தோற்றுவாயாக அமைவதை இந்த எடுத்துக் காட்டில் காணலாம். இதில் நிகழும் *இருந்தாரா, போனாரா, பாத்தாங்களா* ஆகிய வினைகளை ஆ-வினைகள் என்று குறிப்பிடலாம். இந்த ஆ-வினைகளில் காணப்படும் ஆ விகுதி வினா விகுதியல்ல. பழந்தமிழிலும், பின் பழந்தமிழிலும் (Late Early Tamil) தோன்றிய இலக்கியங்களில் இந்த ஆ-வினைகள் அடுத்த வாக்கியத்தின் தோற்றுவாயாக அமையாமல் நேரடியாக வாக்கியத்திலேயே அமைந்துவிடுகின்றன. பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

*(18) அன்னையும் யானும் இருந்தேமா (கலி. 51.5)*

*(19) அன்னாய்! இவன் ஒருவன் செய்தது காண் என்றேனா (கலி. 51.11)*

*(20) யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்*
*யாரினும் யாரினும் என்று (குறள். 1314)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *இருந்தேமா, என்றேனா* ஆகியவை பேச்சுத் தமிழின் தாக்கத்தால் செவ்வியல் வழக்கில் இடம்பெற்றவையாகும். செவ்வியல் வழக்கில் வட்டார வழக்கின் ஊடுருவலை விமர்சிப்பவர்கள் இந்த எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்வார்களாக.

## 7.0. பேச்சில் திரிந்த வினைகள்

7.1. தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தவரை அதில் கையாளப்படும் செவ்வியல் தமிழுக்கும், பேச்சுத் தமிழுக்கும் சங்க இலக்கியந்தொட்டே ஓர் இணக்கமான நல்லுறவு இருந்து வருகிறது. செய்யுள் மொழி எப்படி அமையலாம் என்று ஆக்க பூர்வமான சிந்தனை சங்கப்புலவர்கள் காலத்திலேயே இருந்திருக் கிறது. அக்காலச் செய்யுள் மொழியை ஆராய்ந்து இலக்கியத்தில் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் நான்கும் இடம் பெறலாம் என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர் (சொல். சேனா. 397). திரி சொல்லாகவும் திசைச் சொல்லாகவும் தொல்காப்பியர் எவற்றைக் கருதினார் என்பதை உரையாசிரியர்கள் திட்ட வட்டமாகத் தெளிவுபடுத்தவில்லை. *அடிச்சு* (<*அடியத்து) என்பதைத் திரிசொல்லாகவும், இதே சொல் ஒரு வட்டாரத்துக்கு உரியதாக இருந்தால் திசைச்சொல்லாகவும் கருதலாம் என்று தோன்றுகிறது. பழந்தமிழில் *அடைச்சு, தொலைச்சு, பழிச்சு, மிலைச்சு* ஆகிய வினைகளின் அடியாகத் தோன்றிய

வினையமைப்புக்கள் பரவலாகக் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

21 (1) *அடைச்சி (அகம். 188.9; குறுந். 80.1; நற். 204.3; பதி. 27.2; புறம். 370.24; பத்துப். 6.588)*

(2) *அடைச்சிய (அகம். 41.4; கலி. 51.2; நற். 337.5)*

22 (1) *தொலைச்சி (அகம். 3.7; ஐங். 365.1; நற். 43.3; புறம். 29.15; பத்துப். 4.141; 6.153)*

(2) *தொலைச்சிய (அகம். 389.20; நற். 205.3; புறம். 150.5; பத்துப். 4.70, 10.176)*

(3) *தொலைச்சினன் (புறம். 239.16)*

(4) *தொலைச்சும் (அகம். 182.8)*

23 (1) *பழிச்ச (பதிற். 41.6; பத்துப். 6.476, 10.201)*

(2) *பழிச்சி (நற். 398.6; புறம். 113.6; பத்துப். 4.463; 6.466)*

(3) *பழிச்சிய (அகம். 115.9; பத்துப். 10.538)*

(4) *பழிச்சினிர் (பத்துப். 10.360)*

(24) *மிலைச்சி (ஐங். 367.2; பத்துப். 8.116; பதி. 41.10)*

மேற்காட்டிய எடுத்துக்காட்டு வினையமைப்புக்களில் நிகழும் வினைகளாகிய *அடைச்சு, தொலைச்சு, பழிச்சு, மிலைச்சு* ஆகியவை முறையே **அடைக்கு, *தொலைக்கு, *பழிக்கு, *மிலைக்கு* ஆகியவற்றின் திரிபுகளாகும்.மொழியானது பேசப்படும்போது தான் அதில் மாற்றங்களும் திரிபுகளும் நிகழும். ஒரு வட்டார வழக்கில் திரிந்தமைந்த *அடைச்சு, தொலைச்சு, பழிச்சு, மிலைச்சு* ஆகியவை பழந்தமிழ் இலக்கியங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இவற்றுள் *பழிச்சு* என்ற வினை 'வழிபடுதல்/போற்றுதல்' என்ற பொருளில் பழந்தமிழில் வழங்குகிறது. மேலே குறிப்பிட்ட (21) முதல் (24) வரையிலான எடுத்துக்காட்டுகள் அக்காலத் தமிழ்வாணர்கள் இலக்கியத்தில் பேச்சு மொழிப் பயன்பாடு பற்றி ஒரு முற்போக்கான சிந்தனையைக் கொண்டிருந்தனர் என்பதைப் புலப்படுத்துவனவாக உள்ளன. இங்கே ஒரு செய்தியை நாம் முக்கியமாகக் குறிப்பிட்டாக வேண்டும்.

7.2. செய்கு வாய்பாட்டுத் தொல்திராவிடப் பொதுவினை முற்றுக்கள் தமிழிலும் தெலுங்கிலும் சில மாற்றங்களுக்கு உட்பட்டு வினையடிகளாக மாறின. பழந்தமிழில் காணப்படும் செய்குவம், செய்குவை முதலான வாய்பாட்டு வினைகளிலும், செய்கின்று வாய்பாட்டுப் பகுதிகளிலும் நிகழும் வினையடிகள்

செய்கு வாய்பாட்டினவாகும். இவற்றையே நாம் தொல்திராவிடப் பொதுவினை முற்றுக்களின் திரிபுகள் என்று கருதுகிறோம். *அடைக்கு, தொலைக்கு, பழிக்கு, மிலைக்கு* ஆகிய வினைகள் சகர ஈற்றினவாகத் திரிந்து சங்க இலக்கியங்களில் இடம்பிடித்தன. பல செய்கு வாய்பாட்டுத் தொல்திராவிடப் பொதுவினை முற்றுக்கள் சுகர ஈற்று வினையடிகளாகத் தெலுங்கில் இடம் பெற்றன. எ-டு: நடச்உ (தமிழ்: நடக்கு), பறச்உ (தமிழ்: பறக்கு), கடச்உ (தமிழ்: கடக்கு), குடிச்உ (தமிழ்: குடிக்கு) இதுபோல் அமைந்தவையே சங்க இலக்கியங்களில் காணப்படும் வினை யமைப்புகளின் வினையடிகளாகிய *அடைச்சு, தொலைச்சு, பழிச்சு, மிலைச்சு* ஆகிய நான்கும்.

## 8.0. சிங்கன் தமிழ்

8.1. படைப்பிலக்கியங்களில் செவ்வியல் மொழிக்கும் வட்டார மொழியாகிய பேச்சு மொழிக்கும் உள்ள இடம் பற்றிப் பொதுவாகப் படைப்பாளிகள் உணர்ந்தேயுள்ளனர். திரிகூட ராசப்பக் கவிராயர் சிங்கன் என்ற பாத்திரத்தின்மூலம் இருபத்தெட்டு செய்யுது வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ் வினைகளைத் திருக்குற்றாலக் குறவஞ்சியில் நுழைத்துள்ளார். இந்த நூலில் செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு ஆகியவற்றின் நிகழ்ச்சிச் சூழல்கள் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன. ஆனால் பாரதியின் *செந்தமிழ் நாடென்னும் போதினிலே* என்ற பாடலில் *பாயுது, பிறக்குது* ஆகிய பேச்சு வழக்கு வினைகள் செவ்வியல் வழக்கில் ஊடுருவிச் செவ்வியல் தன்மையனவாகின்றன. இரட்டை வழக்கு (Diglossic) மொழிகளில் இத்தகைய மேனிலையாக்கம் இலைமறை காயாக நிகழ்ந்து கொண்டுதான் இருக்கும். இந்திய மொழிகளில் தமிழ் ஒரு குறிப்பிடத்தக்க இரட்டை வழக்கு மொழி என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இக்காலத் தமிழுக்குப் பாரதி என்றால் அக்காலத் தமிழுக்குக் கலித்தொகைப் புலவர்களைக் குறிப்பிடலாம்.

## 9.0. ஒத்தனும் ஒத்தியும்

9.1. சங்கத் தொகை நூல்களுள் ஒன்றாகிய கலித்தொகை யானது பெருங்கடுங்கோ (பாலைக்கலி), கபிலர் (குறிஞ்சிக்கலி), மருதன் இளநாகன் (மருதக்கலி), நல்லுருத்திரன் (முல்லைக்கலி), நல்லந்துவன் (நெய்தற்கலி) ஆகிய ஐவரால் புனைந்து தொகுக்கப் பட்டதாகும். இந்தத் தொகை நூலில் ஒத்தன் (=ஒருவன்) என்ற பெயர்ச்சொல்லை நான்கு பாடல்களில் கபிலரும், இரண்டு

பாடல்களில் மருதன் இளநாகனும், மூன்று முறை ஒரே பாடலில் நல்லுருத்திரனும் பயன்படுத்தியுள்ளனர். ஒத்தி (=ஒருத்தி) என்ற சொல்லை இரண்டு பாடல்களில் நல்லந்துவன் பயன்படுத்தி யுள்ளார். இந்த இரண்டு சொற்களின் நிகழ்ச்சியும் கீழே தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

*ஒத்தன் (< ஓர்த்தன் < ஒருத்தன்)*

*(25) எல்லா! இஃதொத்தன் என்பெறான் (கலி. 61.1. கபிலர்)*

*(26) பிறன்பெண்டிர், ஈத்தவை கொள்வானாம் இஃதொத்தன்*
*(கலி. 84.17, 18. கபிலர்)*

*(27) என்செய்தான் கொல்லோ இஃதொத்தன் (கலி. 60.9. கபிலர்)*

*(28) ஏஎ! எல்லா, மொழிவது கண்டை இஃதொத்தன்*
*(கலி. 64.8. கபிலர்)*

*(29) ஈத்தவை கொள்வானாம் இஃதொத்தன்*
*(கலி. 84.18. மருதன் இளநாகன்)*

*(30) இஃதொத்தன் புள்ளிக் களவன் (கலி. 88.10. மருதன் இளநாகன்)*

*(31) இகுளை இஃதொன்று கண்டை இஃதொத்தன்*
*கோட்டினத்து ஆயர் மகனன்றோ (கலி. 103.32. நல்லுருத்திரன்)*

*ஒத்தி (< ஓர்த்தி < ஒருத்தி)*

*(32) அஞ்சா அழாஅ அரற்றா இஃதொத்தி*
*என்செய்தாள் (கலி.143. 8, 9. நல்லந்துவன்)*

*(33) நன்னுதால் காண்டை, நினையா நெடிதுயிரா*
*என்னுற்றாள் கொல்லோ இஃதொத்தி*
*(கலி. 144.1, 2. நல்லந்துவன்)*

பாலைக்கலி பாடிய பெருங்கடுங்கோவின் பாடல்களிலும், பிற சங்கத் தொகை நூல்களிலும் இந்த *ஒத்தன், ஒத்தி* சொற்களின் நிகழ்ச்சி காணப்படவில்லை. இவற்றின் செவ்வியல் வடிவங்கள் பெருங்கடுங்கோவின் பாலைக்கலியில் 'என் மகள் ஒருத்தியும் பிறண் மகன் ஒருவனும்' (9.6) என்ற அடியில் பதிவாகியுள்ளன.

9.2 *ஒத்தன், ஒத்தி* இரண்டும் இக்காலத் தமிழில் பார்ப்பன வழக்கில் காணப்படுகின்றன. இவற்றை வட்டார வழக்குச் சொற்களாகக் கொள்ள முடியுமா என்று தெரியவில்லை. *ஒத்தன், ஒத்தி* இரண்டும் முறையே *ஒருத்தன், ஒருத்தி* ஆகியவற்றின் திரிபுகளாகும். இக்காலத் தமிழில் பார்ப்பனர் அல்லாத பிறர் பேச்சு வழக்கில் *ஒருத்தன், ஒருத்தி* இரண்டும் வழங்குகின்றன. செவ்விய வழக்கில் *ஒருத்தன்* என்பதற்கு *ஒருவன்* **என்பது** காணப் பட்டாலும் *ஒருத்தன்* என்பதும் சமநிலையில் வழங்குகிறது. *ஒருத்தன்* என்பது செவ்வியல் வழக்கில் ஏற்றுக்கொள்ளப்

பட்டாலும் அதை *ஒருவன்* என்று திருத்தும் தமிழ்ப் பண்டிதர் களும் உண்டு. பண்டிதர்களை விடுவோம். அவர்கள் உருவாக்கப் பட்ட விதம் அப்படி. இலக்கிய விமர்சகர்கள் என்ற பெயரில் சிலர் இருக்கிறார்கள். இவர்களும் இந்தப் பண்டிதப் போக்கைப் பிடித்துக்கொண்டிருப்பதுதான் விசித்திரமாக உள்ளது. வட்டார மொழியை முதன்மைப்படுத்தி எழுதும் படைப்பாளிகளைச் சமயம் கிடைக்கும்போதெல்லாம் குத்திக் கிளறிச் சீண்டிப் பார்ப்பதில் இவர்கள் மொழிப் பண்டிதர்களையும் மிஞ்சியவர்கள். ஆனால் எந்தப் படைப்பாளியும் இவர்களை ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்வதில்லை என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

*9.3.* மீண்டும் கலித்தொகைக்கு வருவோம். இதில் பயன்படுத்தப் பட்டுள்ள *ஒத்தன், ஒத்தி* பல மரபுகளை உடைத்தெறிந்திருக்கிறது. இரண்டும் பேச்சு வழக்கிலிருந்து செவ்வியல் வழக்கில் இடம் பெற்றுள்ளது மட்டுமல்ல, இவை நிகழும் தொடரே பழமையைப் போற்றும் தமிழ்வாணர்களுக்கு விடப்பட்ட ஓர் அறைகூவலாகும். *ஒத்தன், ஒத்தி* என்ற உயர்திணைப் பெயர்களின் முன் *இஃது* என்ற அஃறிணைப் பெயர் நிகழக்கூடாது. ஆனால் நிகழ்கிறது. *இவன் ஒருத்தன், இவள் ஒருத்தி* ஆகிய தொடர்களில் காணப்படும் இலக்கண அமைதி *இஃதொத்தன், இஃதொத்தி* என்பவற்றில் காணப்படவில்லை. பார்ப்பனர் பேச்சுத்தமிழ் அல்லாத பிறபேச்சுத் தமிழில் *இது ஒருத்தன், இது ஒருத்தி* என்ற தொடர்கள் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. கபிலனும், இளநாகனும், நல்லுருத்திரனும், நல்லந்துவனும் அடங்கிய ஒரு சமுதாயத்தில் *இஃதொத்தன், இஃதொத்தி* ஆகியவை ஏற்றுக் கொள்ளப்பட்டதுமல்லாமல், செய்யுள் வழக்கிலும் இவை குடிகொண்டுவிட்டன. இலக்கியத்தில் வட்டாரமொழிப் பயன் பாட்டைப் பற்றிக் கவலைப்படும் இக்கால இலக்கிய விமர்சகர் களுக்குக் கலித்தொகையில் காணப்படும் வழக்குகள் ஓர் அறைகூவல்தான்.

## 10.0. எடுப்ப எழாஅய்

*10.1.* சங்க இலக்கியத்தில் பேச்சு வழக்கும் செவ்வியல் வழக்கும் ஊடாடுவதற்கு *எடுப்பு* என்ற சொல்லின் ஆட்சியைக் குறிப்பிடலாம். இந்தச் சொல் *எழுப்பு* என்பதன் திரிபாகும். பழந்தமிழ் இலக்கியங்களில் இதன் அடியாகத் தோன்றிய வினையமைப்புகள் பரவலாக நிகழ்கின்றன. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(34) எடுப்ப எழாஅய் (புறம். 254.2)

(35) ஒண்பொறிச் சேவல் எடுப்ப ஏற்றெழுந்து (புறம். 383.1)

(36) அமர்க்கண் ஆமான் அஞ்செவிக் குழவி
கானவர் எடுப்ப வெரீஇ.... (குறுந். 322.1, 2)

(37) ஏமவி ன்றுயில் எடுப்பி யோயே (குறுந். 107.7)

(38) இன்றுயில் எடுப்புதி கனவே! (குறுந். 147.4)

(39) சுடர்துயர் எடுப்பும் புன்கண் மாலை (குறுந். 398.5)

(40) வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்

..................................................................

துஞ்சுகளி றெடுப்பும் (நற். 125.9, 12)

(41) எல்லாந் துயிலோ எடுப்புக (நின்பெண்டிர்) (கலி. 70.21)

(42) புணர்துயில் எடுப்பும் புனல்தெளி காலை (அகம். 279.13)

(43) கோழிமுழங்கு இமிழிசை எடுப்பும்
பீடுகெழு செல்வ(ம்) மரீஇய கண்ணே (பதிற். 50.25, 26)

(44) கருவிரல் மந்தி கல்லா வன்பறழ்
அருவரை தீந்தேன் எடுப்பி (ஐங். 272.1, 2)

(45) திருந்துதுயில் எடுப்ப இனிதின் எழுந்து (பத்துப். 6.714)

தொல்திராவிட ழகரம் தமிழில் நிலைபெற்றும் தெலுங்கில் டகரமாகத் திரிந்தும் அமைகின்ற போக்கைத் திராவிட மொழியியலாளர் சுட்டியுள்ளனர். தெலுங்கில் இந்தத் திரிபு பரவலானதாகும். எ.டு: *கோடி* (கோழி), *ஏடு* (ஏழு), *கூடு* (கூழ்), *ஈடுவு* (இழு), *கடுவு* (கழுவு). தமிழில் ழகரம் டகரமாகத் திரிவது வியப்புக்குரியதாகும். மேல் எடுத்துக்காட்டுக்களில் *எடுப்பு* என்பதன் நிகழ்ச்சி பேச்சு வழக்கிலிருந்து செவ்வியல் வழக்கில் இடம்பெற்றதைத் தெளிவுபடுத்துகிறது. தொல்காப்பியத்தில் *துயிலெடை நிலை* (பொருள். இளம். 88) என்று ஒரு தொடர் காணப்படுகிறது. *துயிலெடை மாக்கள்* (பெருங். 4.5.81) என்ற தொடரும் இங்கே கருதத்தக்கது. இந்தத் தொடர்களில் நிகழும் *எடை* என்பது *எழை என்பதன் திரிபாகும். *எழுப்பு* என்பது இதன் பொருளாகும். இந்தச் சொல்லும் ஒரு வட்டார வழக்கி லிருந்தே செவ்வியல் மொழியில் இடம்பெற்றிருக்க வேண்டும். *எடுப்பு* (< *எழுப்பு), *எடை* (<*எழை) ஆகிய இரண்டும் தமிழில் எந்த வட்டார வழக்குக்கு உரியவை என்பது ஆய்வுக்குரியதாகும்.

## 11.0. கம்பனில் பேச்சுத் தமிழ்

11.1. எதுகையைப் போற்றும் வகையில் கம்பன் தான் புனைந்த இராமாயணத்தில் பேச்சுத் தமிழைப் பயன்படுத்தச் சிறிதும்

தயங்கவில்லை. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். *நிறைஞ்ச* (க.ரா. 1106) < நிறைந்த; *மஞ்சர்* (க.ரா. 1135) < மைந்தர்; *மஞ்சன்* (க.ரா. 1180) < மைந்தன்; *செய்ஞ்ஞர்* (க.ரா. 423) < *செய்ந்தர் -(செய்தர்-); *மடிஞ்சபின்* (க.ரா. 2354) < மடிந்தபின்; *உஞ்ச* (க.ரா. 2316) < உய்ந்த; *விரஞ்சு* (க.ரா. 2415) < விரைந்து; *உய்ஞ்சனம்* (க.ரா. 4379) < உய்ந்தனம், *போச்சு* (க.ரா. 3442) < *போய்த்து; *தச்சு* (க.ரா. 3014) < தைத்து. *ஞாயிறு* என்ற சொல் நாயிறு என்பதன் திரிபாகும். கம்பனில் நாயிறு (1163, 1977) அங்குமிங்குமாக நிகழும் நிலை காணப்படு கிறது. ஆழ்வார் பாசுரங்களிலும் *நாயிறு* பரவலாக வழங்குகிறது. மனிதன்/மனிதர் என்பதும் மனிசன்/மனிசர் என்ற பேச்சு வழக்குச் சொல்லின் திரிபாகும். இந்தப் பேச்சு வழக்குச் சொற்களும் கம்பராமாயணத்திலும், ஆழ்வார் பாசுரங்களிலும் பயின்று வழங்குகின்றன. *ஓதை* (புறம். 65.4) (< ஓசை), *நீதன்* (அப்பர் 6.11.5) (< நீசன்) முதலானவையும் பேச்சு வழக்கினவாகக் கருதற்பாலன வாகும்.

11.2. கலித்தொகையில் செய்யாதி வாய்பாட்டில் அமைந்த எதிர்மறை ஒருமை ஏவல் வினைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. எ.டு: *அழியாதி* (12.24), *உரையாதி* (28.21), *அஞ்சாதி* (83.36), *வருந்தாதி* (106.30), *சொல்லாதி* (107.19). இந்தியப் பேச்சுத் தமிழிலும் செவ்வியல் தமிழிலும் இவை முறையே செய்யாதெ, செய்யாதே என்ற வாய்பாடுகளிலும், இலங்கைத் தமிழில் செய்யாதை என்ற வாய்பாட்டிலும் நிகழ்கின்றன. செய்யாதி, செய்யாதெ, செய்யாதே ஆகிய வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்களாக அமைபவை இலங்கைத் தமிழில் காணப்படும் செய்யாதை வாய்பாட்டு எதிர்மறை ஏவல் வினை களாகும். செய்யாதை என்ற அடிநிலை வடிவம் முதலில் ஒரு வட்டார வழக்கில் செய்யாதி எனத் திரிந்து பிறகு கலித்தொகைத் தமிழிலும் இடம்பெற்றுள்ளது. இந்தத் திரிபு தமிழகத்தின் தென் மாவட்டங்களில் நிகழ்ந்திருக்கலாம். இப்படி நாம் கருதுவதற்கு ஒரு காரணம் உண்டு. செய்யாதை வாய்பாட்டு எதிர்மறை ஏவல்வினைகளின் நேர் உடன்பாட்டு வினைகள் செய்தை வாய்பாட்டில் அமைந்தவையாகும். இந்த வாய்பாட்டு வினைகள் செய்தி (< செய்யுதி) வாய்பாட்டினவாகப் பழந்தமிழிலும் இடைக் காலத் தமிழிலும் வழங்குகின்றன. இக்காலத் தமிழில் இவை வட்டார வழக்காகத் தென் மாவட்டங்களில் முன்னிலை ஒருமை நிகழ்வினைகளாக நிகழ்கின்றன. இவை செய்தி (< செய்யுதி) வாய்பாட்டினவாகப் பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும்

வழங்குகின்றன. செய்தி (< செய்யுதி) என்பதன் நேர் எதிர்மறை வடிவம் செய்யாதி என்பதாகும். கருதுக: *வருந்துதி* (பத்துப். 8.8), *வருந்தாதி (கலி. 107.29), காய்தி (குறள். 1246), *காயாதி (கலி. 89.7), ஒத்தி (கலி. 86.14), *ஒவ்வாதி (கலி. 86.14), செய்யாதி என்பதில் நிகழும் தகரம் செய்தி என்பதில் காணப்படும் தகரமாகும். செய்தி வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி தென்மாவட்டங்களில் காணப்படு வதால் [எ-டு: சொல்லுதி- (ராநா, 1976:88); பேசுதி- (வநி. 1996:25)] செய்யாதி வாய்பாட்டு எதிர்மறை வினைகள் இந்தப் பகுதியில் வழங்கும் வட்டார மொழியிலிருந்து தோன்றி யிருக்கலாம்.

## 12.0. பாடிய–பாடின மயக்கம்

12.1. இரட்டை வழக்கு மொழிகளில் பேச்சு வழக்கில் ஒரு மொழிப் பதிவு மறைந்துபோனால் இந்தத் தாக்கம் செவ்வியல் வழக்கிலும் உணரப்படுமா? இது பற்றித் திட்டவட்டமாக எதுவும் இப்போதைக்குச் சொல்வதற்கு இல்லையென்றாலும் ஒருவகை மொழிப்பதிவு தமிழில் பேச்சு வழக்கிலும், செவ்வியல் வழக்கிலும் நிலைகொள்ளாமல் போன நிகழ்ச்சியை இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

12.2. பாடிய, பாடின என்று இரண்டு வகையான வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் இக்காலத் தமிழில் காணப் படுகின்றன. இவற்றுள் பாடிய வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் செவ்வியல் தமிழிலும், பாடின வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் பேச்சுத் தமிழிலும் நிகழ்கின்றன. பொதுவாகச் செவ்வியல் வழக்குப் பெயரெச்சங்கள் பேச்சு வழக்கிலும், பேச்சுவழக்குப் பெயரெச்சங்கள் செவ்வியல் வழக்கிலும் ஊடுருவும் நிலை காணப்படுவதில்லை. பெரும்பாலும் ஆசிரியர் கூற்றிலேயே அமைந்த வண்ணநிலவனின் (1981) *ரெயினீஸ் ஐயர் தெரு* என்ற புதினத்தில் பாடின வாய்பாட்டுப் பேச்சு வழக்குப் பெயரெச்சங்கள் செவ்வியல் வழக்கில் ஊடுருவியிருக்கின்றன.

(46) பேசின பேச்சும் அப்படியொன்றும் பிரமாதமொன்றுமில்லை (பக். 41)

(47) பாவாடை கட்டின இடத்தில் விழுந்திருந்த பளபளப்பான கருப்புக்கோடு (பக். 53)

(48) ஏற்கனவே பழகின ஆண்களைப் பார்த்தாலும் அப்பெண் கூச்சப்படுகிறாள் (பக். 74)

பாடியது என்ற வாய்பாட்டில் செவ்வியல் வழக்கில் அமைய வேண்டிய பொது வினைகள்கூடப் பாடினது என்ற வாய் பாட்டுப் பேச்சு வழக்குப் பொதுவினைகளின் ஊடுருவலால் செவ்வியல் வழக்கில் தவிர்க்கப்பட்டுள்ளன.

(49) குளிர்ந்த காற்று வீசினதும் மழை வந்தது (பக். 10).

(50) முதல்முதலாகக் காட்டினது இருதம் டீச்சர் வீட்டில்தான் (பக். 33).

வினையாலணையும் பெயர்களைப் பொறுத்த வரையிலும் கூட இதே நிலைதான். பாடியவள் என்பது செவ்வியல் வழக்கு; பாடினவள் என்பது பேச்சு வழக்கு. செவ்வியல் வழக்கில் பேச்சு வழக்கு ஊடுருவியிருப்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(51) தூரப் போனதாய்க் காட்டினவள் அலிஸே தவிர வேறு யாருமில்லை (பக். 61)

(52) அவள் வீட்டுக்கு வந்து அதிகநேரம் தங்கினவள் இல்லை (பக். 53)

(53) அந்தச் சீலையை அங்கே மாட்டினவள் ரோஸம்மாளாகத்தான் இருக்குமென்று பாரதி நினைத்தாள் (பக். 103)

12.3. இப்பொழுது பிரச்சனைக்கு வருவோம். பாடின என்ற பேச்சுவழக்குப் பெயரெச்சத்துக்கு இசைந்த வினைமுற்றுக்கள் பாடினான், பாடினாள், பாடினார், பாடிற்று என அமையும். இதேபோல் பாடிய என்ற செவ்வியல் வழக்குப் பெயரெச்சத்துக்கு இசைவான வினைமுற்றுக்கள் பாடியான், பாடியாள், பாடியார், பாடியது என அமையும். இவற்றுள் பாடியது என்ற வாய்பாட்டு ஒன்றன்பால் வினையைத் தவிர, பிற வினைமுற்றுக்கள் அதாவது- பாடியான், பாடியாள், பாடியார் வாய்பாட்டின இக்காலச் செவ்வியல் தமிழில் வழக்கிழந்துவிட்டன. பழந்தமிழில் இவை பயனிலைச் செயற்பாட்டில் அமையாமல் வினையாலணையும் பெயர்களாக வழங்குகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

(54) அருந்தவம் ஆற்றியார் நுகர்ச்சிபோல் (கலி. 30.1)

(55) நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது (குறள். 124)

பாடிய என்ற வாய்பாட்டுப் பெயரெச்சம் இன்றைய செவ்வியல் வழக்கில் நிகழ்ந்தாலும் அதற்கு இசைவான வினைமுற்றுக் களுக்குப் பதில் பாடின என்ற வாய்பாட்டுப் பெயரெச்சத்துக்கு இசைந்ததும் பேச்சு வழக்கில் நிகழ்வதுமாகிய பாடினான், பாடினாள், பாடினார் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் செவ்வியல் மொழியில் இடம்பெற்றுவிட்டன. பழந்தமிழில் -இன்- என்ற கால விகுதியை அடுத்துக் குறில் முற்றுவிகுதிகள் அமைந்த வினைகள் பதிவாகியுள்ளன. எ-டு: *பாடினம்* (கலி. 106.48), *பாடினை* (பதிற். 67.23), *பாடினிர்* (புறம் 109.17), *பாடினன்* (புறம்.

*99.12), பாடினள்* (குறுந். 89.17), *நாடினர்* (கலி. 28.2). இவை பெரும்பாலும் முற்றெச்சங்களாகவே நிகழ்கின்றன. நெடில் முற்று விகுதிகொண்ட வினைமுற்றுக்களின் நிகழ்ச்சியும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றது. எ-டு: *பாடினேன்* (ஆக) (புறம். 394.9), *பாடினேம்* (ஆக) (புறம். 144.3).

12.4. வினைமுற்றுக்கள் அடிப்படையில் வினையாலணையும் பெயர்களே. ஆகவே, பழந்தமிழில் வினையாலணையும் பெயர்களாக நிகழும் பாடியான், பாடியாள் முதலான வாய்பாட்டு வினைகளை வினைமுற்றுக்களாகவே கருதலாம்.[2] பாடிய என்னும் பெயரெச்சத்தின் நிகழ்ச்சி இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது. பாடிய என்ற பெயரெச்சத்துக்கு இசைந்த வினைமுற்றுக்கள் தெலுங்கில் சற்றுத் திரிந்து வட்டார வழக்கிலும் செவ்வியல் வழக்கிலும் வழங்குகின்றன. பிற்காலத் தமிழில் பாடியான், பாடியாள் முதலான வாய்பாட்டு வினைமுற்றுக்களின் நிகழ்ச்சி இலக்கியங்களில் அருகி மறைந்து போயிற்று. ஆயினும் பாடிய, பாடியது ஆகிய வாய்பாட்டு வினைகள் இன்றும் செவ்வியல் வழக்கில் காணப்படுவதால் இவற்றுக்கு இசைவான வினைமுற்றுக்கள் பேச்சு வழக்கில் நிகழ்ந்து பிறகு செவ்வியல் மொழியில் வழங்கி இறுதியில் வழக்கற்றுப் போயினவாதல் வேண்டும். இதற்குக் காரணம் பேச்சு வழக்கிலும் இவற்றின் நிகழ்ச்சி மறைந்து போனதுதான்.

## 13. செய்யும் போய் செய்கிற வந்தது

13.1. வண்ணநிலவனின் செவ்வியல் தமிழில் இன்னொரு அம்சமும் குறிப்பிடத்தக்கதாயுள்ளது. செய்யும் வாய்பாட்டுப் பெயரெச்சங்களும், செய்வது வாய்பாட்டுப் பொது வினைகளும் செவ்வியல் தமிழுக்கு உரியவை; காலத்தால் முந்தியவை. செய்கிற வாய்பாட்டுப் பெயரெச்சங்களும், செய்கிறது வாய்பாட்டுப் பொதுவினைகளும் பொதுவாகச் செவ்வியல் வழக்கில்

---

2. பாடினான், பாடியான் ஆகிய வினைமுற்றுக்களில் நிகழும் கால விகுதிகளாகிய இன் என்பதும் இய் என்பதும் தொடர்புடையன அல்ல. தெலுங்கில் பாடினானு (=பாடினேன்), பாடேனு (-pa:ḍæ:nu) (=பாடினேன்) ஆகியவற்றில் நிகழும் -இன்-, ஏ (æ:) ஆகிய காலவிகுதிகளும் தொடர்புடையனவல்ல. -இனா- என்பது னகரத்தை இழந்து இகரமும் ஆகாரமும் இணைந்து -ஏ- (æ:) தோன்றியதாக பத்ரிராஜு கிருஷ்ணமூர்த்தி (2003: 319) கருதுகிறார். இதன்படி தமிழில் பாடியான் என்பதில் நிகழும் -இயா- என்பதும் -இனா- என்பதினின்றும் தோன்றியதாகக் கொள்ள நேரிடும். ஆனால் இதற்கு வாய்ப்பு இல்லை. கிருஷ்ணமூர்த்தியின் கருதுகோள் எனவே ஏற்புடையதல்ல.

கருதப்படுவதில்லை; இவை காலத்தால் பிந்தியவை. பேச்சுத் தமிழில் இவற்றுக்கு நிகராக வழங்குபவை செய்யற (=செய்கிற), செய்யறது (=செய்கிறது) வாய்பாட்டினவாகும். வண்ணநிலவனின் *ரெயினிஸ் ஐயர் தெரு* புதினத்தில் செய்யும், செய்வது வாய்பாட்டு வினைகள் நிகழவேண்டிய இடங்களில் செய்கிற, செய்கிறது வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகிறது.

*(56)* ஊரிலிருந்து வருகிற போதும்... ஊருக்குப் போகிற போதும் தூக்கம் வருகிறதே கிடையாது (பக். 36)

*(57)* இரண்டு பேரும் வீட்டுக்குள்ளேயே பேசுகிற சத்தங் கேட்டது (பக். 56)

*(58)* தெளிவாக இல்லை அவன் படிக்கிறது (பக். 37)

வண்ணநிலவனில் செய்வது வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் மேலே குறிப்பிட்ட புதினத்தில் அருகிய வழக்காகக் காணப் படுகிறது.

*(59)* எவ்வளவு சொன்னாலும் பெரியவர்கள் முதல் யாரும் கேட்பதே இல்லை (பக். 58).

வண்ணநிலவனின் செவ்வியல் தமிழில் செய்யும், செய்வது வாய்பாட்டு வினைகளுக்குப் பதிலாகச் செய்கிற, செய்கிறது வாய்பாட்டு வினைகள் அதிகமாகப் பயன்படுத்துவதற்குப் பேச்சுத் தமிழில் நிகழும் செய்யற, செய்யறது வாய்பாட்டு வினைகளைக் காரணமாகக் குறிப்பிடலாம். பேச்சுத் தமிழில் பாடிய வாய்பாட்டுப் பெயரெச்சத்துக்கு இசைவான வினை முற்றுக்கள் இல்லாமையால் செவ்வியல் தமிழில் அவை வழக்கொழிந்தன. இது ஒரு நிலை. பேச்சுத்தமிழில் செய்யற, செய்யறது வாய்பாட்டு வினைகள் நிலைகொண்டுள்ளன. இது இன்னொரு நிலை, இரண்டுக்குமே காரணமாக இருப்பது பேச்சுத் தமிழ்தான்.

## 14.0 பழந்தமிழ் கண்ட புரட்சி

14.1. செவ்வியல் வழக்கினின்றும் மாறுபட்டுத் திரிந்து வழங்கும் பல சொற்களின் நிகழ்ச்சி பழந்தமிழில் காணப்படுகின்றது. *குரீஇ* (குறுந். 72.5), *பரீஇ* (குறுந். 72.4) இரண்டும் *குருவி, பருவி* (=பருத்தி) ஆகியவற்றின் திரிபுகளாகும். *தழுவி, மருவி* என்பன *தழீஇ* (அகம். 6.81), *மரீஇ* (பதி. 50.23) எனத் திரிந்தன. *தழூஉகம்* (நற். 50.3) என்பது *தழுவுகம்* என்ற தன்மைப் பன்மை வினையின் திரிபாகும். *தழுவினன், தழுவினேன்* இரண்டும் *தழீஇயினன்* (குறு. 359.5),

*தழீஇயினேன்* (அகம். 49.7) எனத் திரிந்தன. *தழீஇயவன்* (கலி. 103.35) என்பதன் அடிநிலை வடிவம் *தழுவியவன்* என்பதாகும்.

14.2. தமிழின் தலைமகனாகக் கருதப்படும் தொல்காப்பியர் கூடத்திரிபு வழக்குகளைப் போற்றுவதில் பின் வ்ாங்கவில்லை. கருதுக: *தழீஇயன* (தொல். சொல். சேனா. 17), *வழீஇயினும்* (தொல். சொல். சேனா. 15), *மரீஇயது* (தொல். சொல். சேனா. 443), *மரீஇய* (தொல். சொல். சேனா. 90) ஆகிய தொல்காப்பியப் பிரயோகங்கள் முறையே *தழுவின, வழுவினும், மருவியது, மருவிய* ஆகியவற்றின் திரிபுகளாகும். தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் காணப்படும் இந்தத் திரிபு வழக்குகள் முதலில் பேச்சுத் தமிழில் தோன்றிப் பின்னர்ச் செவ்வியல் வழக்கில் இடம் பெற்றிருக்க வேண்டும். செய்யுளிசை அளபெடைச் சொற்கள் நீங்கலாக (எ.டு: பாஅல். புறம். 2.17) பழந்தமிழில் அளபெடைச்சொற்கள் எனக் கருதப்படும் ஏனைய சொற்கள் பேச்சுத் தமிழில் திரிந்து வழங்கியவையாகும்.

14.3. பேச்சு மொழி அல்லது வட்டார மொழி வழக்குகள் செவ்வியல் மொழியில் ஊடுருவும் மரபு பழந்தமிழிலேயே தொடங்கிவிட்டது. ஆகவே இக்கால இலக்கியப் படைப்புகளில் செவ்வியல் வழக்குடன் வட்டார வழக்கு மயங்குவது ஏதோ திட்டமிட்டுத் தமிழைக் கொச்சைப்படுத்தும் செயல் என்று கருதுவது நமது அறியாமையின் வெளிப்பாடு என்றுதான் கொள்ள வேண்டும். மேலே குறிப்பிட்டவையும் அவைபோன்ற ஏராளமான திரிபு வழக்குகளும் அக்காலச் செவ்வியல் இலக்கியங்களில் இடம்பெற்றதானது தமிழ்மொழி வரலாற்றில் நிகழ்ந்த ஒரு மாபெரும் புரட்சி என்றே கருத வேண்டும். இந்தப் புரட்சியானது, எதிர்ப்புக்கிடையே நடந்ததா அல்லது அமைதிப் புரட்சியா என்பதல்ல பிரச்சனை; ஒருபுரட்சியின் சுவடுகள் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் அழுத்தமாகப் பதிந்து அவை நம்மை வழிநடத்திச் செல்வனவாக உள்ளன என்பதே நாம் கருத்தில் கொள்ளவேண்டியது. அன்றும் சரி இன்றும் சரி செவ்வியல் வழக்கில் வட்டார வழக்கு அல்லது பேச்சு வழக்கின் நிகழ்ச்சியானது மணிமிடை பவளமாகவே அமைந்துள்ளது. இது மணிப்பிரவாளமாக மாறாமல் இருக்க வேண்டும்.

### 15.0. யாருக்கு யார் வாரிசு?

15.1. இரட்டை வழக்கு மொழிகளைப் பொருத்தவரை இலக்கிய மொழி என்று ஒன்றைத் தனியாக இனங்காண முடியாது.

ஏனெனில் படைப்பிலக்கியங்களில் செவ்வியல் வழக்கு, வட்டார வழக்கு, பொதுப் பேச்சு வழக்கு, சாதி வழக்கு என்று பல்வேறு மொழிவழக்குள் இடம்பெறுகின்றன. இந்த மொழி வழக்கு களைச் செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ளலாம். இந்த இரண்டு வகை வழக்குகளும் எங்கே எப்படிப் பயன்படுத்தப்பட வேண்டும் என்பது படைப்பாளிக்கு நன்கு தெரியும். ஆயினும் மொழி வழக்குகளின் நிகழ்ச்சிக் கட்டுப்பாடு நெகிழ்ந்து போகும் நிலையும் படைப்பிலக்கிங்களில் காணப்படாமல் இல்லை. இதை ஒரு குறையாகக் கருதுவோரும் உண்டு. *அகவல்* என்ற இலக்கியச் சிற்றிதழில் (இதழ் 5, மார்ச்சு 1977) இது தொடர்பாக ஒரு குறிப்பு காணப்படுகிறது. "கி.ரா.வும் அவரது வாரிசுகளும் வட்டார வழக்கு என்ற பெயரில் மொழியைக் கொச்சைப்படுத்திக் கொண்டிருக் கிறார்கள்". இதுதான் அந்தக் குறிப்பு. இந்தக் குறிப்பில் கி.ரா. என்பது கி.ராஜநாராயணனைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. அகவலின் இந்தக் கூற்று பொறுப்பும் நேர்மையும் அற்ற விமர்சனமாகத் தோன்றுகிறது. இலக்கியம், ஆய்வு இந்த இரண்டிலும் யாரும் யாருக்கும் வாரிசாக இருக்க முடியாது. படைப்பாளியாகட்டும், ஆய்வாளனாகட்டும் அவரவர் தனித் தன்மையில்தான் அவர்கள் நிலைபெற வேண்டும். கி.ரா.வின் வாரிசுகள் என்றால் சங்கப் புலவர்களிலிருந்து பட்டியலிட வேண்டும். சங்க இலக்கியத்தில் *சுளகு, எடுப்பு* (< எழுப்பு), *அடைச்சு* (< அடைக்கு) முதலான வட்டார வழக்குச் சொற்கள் மட்டுமல்ல; *இஃதொத்தன், இஃதொத்தி,* ஆ-வினைகள் முதலான வையும் அங்கே ஊடுருவியிருக்கின்றன. ஆகவே கி.ரா.வின் வாரிசுகள் என்பதைவிடக் கபிலரின் வாரிசுகள் என்று குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். கபிலர் செய்யாத எதைக் கி.ரா. செய்துவிட்டார்? *நெஞ்சு பொறுக்குதில்லையே* என்று பாடிய பாரதிகூட *பொறுக்குது* என்ற பேச்சுத் தமிழைத் தானே செவ்வியல் தமிழில் ஊடுருவச் செய்துள்ளான். புதிய கோணங்கியில் *வருகுது, தொலையுது, பெருகுது, தெரியுது, வளருது, விளையுது, குறையுது, தெளியுது, கிடைக்குது* என்று பாரதி பயன்படுத்தியுள்ள ஒன்றன்பால் நிகழ்வினைமுற்றுக்கள் அனைத்தும் பேச்சுத்தமிழில் வழங்கும் வினைகளல்லவா! கபிலரும், பாரதியும் எந்தத் தமிழைக் கொச்சைப்படுத்தினார்கள்? கபிலரும் பாரதியும் செய்தால் அது புரட்சி. எங்கோ கரிசல் காட்டுச் சீமையில் உள்ள ஒரு கி.ரா. செய்தால் அது மொழியைக் கொச்சைப்படுத்துவது. இது என்ன விமர்சனம்?

*15.2.* இலக்கியத்தில் மொழிப்பயன்பாடு பற்றிய எந்த ஆய்வும், விமர்சனமும் ஒரு நோக்கியல் அடிப்படையில் (Empirical Basis) அமைய வேண்டும். அகவலின் கி.ரா. பற்றிய விமர்சனத்துக்கு இந்தக் கட்டுரை முழுவதுமே பதிலாகும். தனது படைப்புக்களில் மொழியை எப்படியெல்லாம் பயன்படுத்த வேண்டும் என்பது படைப்பாளியின் அடிப்படை உரிமையாகும். கி.ரா.வின் மீதான தனது குற்றச்சாட்டுக்கு *அகவல்* எந்த ஆதாரத்தையும் முன்வைக்க வில்லை. ஆகவே, "கி.ரா.வும் அவரது வாரிசுகளும் வட்டார வழக்கு என்ற பெயரில் மொழியைக் கொச்சைப் படுத்திக் கொண்டிருக்கிறார்கள்" என்ற அகவலின் குற்றச்சாட்டு ஒரு தனிப்பட்ட மனிதரின் மீது தனக்குள்ள வெறுப்பையும் காழ்ப்புணர்ச்சியையும் வெளிப்படுத்துவதாகவே உள்ளது. இந்தக் கட்டத்தில் ஒன்றை நாம் இங்கே வலியுறுத்தியாக வேண்டும். இலக்கியத்தில் மொழிப் பயன்பாடு என்று வரும்போது படைப்பாளியிடம் நேர்மையும் சுயமதிப்பீட்டு உணர்வும் இருக்க வேண்டும். படைப்பிலக்கியத்தில் எத்தகைய மொழி வழக்கைப் பயன்படுத்தினாலும் அது ஒரு தரக்கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாக உள்ளதா என்பதுதான் முக்கியம். ஓர் எடுத்துக் காட்டின்மூலம் இதனை விளக்கலாம்.

> ***(60)* "நம்ம அடுத்தவன் புஞ்சையிலே செடியப் புடுங்குகிறோம். கம்மங்கருதை ஒடிக்கிறோம். அவன் நம்ம புஞ்சையிலே செடியப் புடுங்குறான். கருதை ஒடிக்கிரான்"**
>
> ***(அழகு. 1985: 47)***

இந்த எடுத்துக்காட்டில் முதலில் *புடுங்குகிறோம், ஒடிக்கிறோம்* ஆகியவற்றில் வல்லின றகரம் நிகழ்கிறது; ஆனால் *புடுங்குரான், ஒடிக்கிரான்* ஆகிய வினைகளில் இடையின ரகரம் பயன்படுத்தப் பட்டுள்ளது. இவற்றுள் எது சரி என்பதல்ல பிரச்னை. எதையாவது ஒன்றை ஒரே சீராக எல்லா இடத்திலும் பயன்படுத்த வேண்டியது படைப்பாளியின் கடமையாகும். தனக்குப் பரிச்சய மில்லாத ஒரு வட்டார மொழியை முதன்மைப்படுத்தி இலக்கியம் படைக்க முயல்வதற்கு ஒப்பானதாகும் மேல் எடுத்துக்காட்டில் நாம் சுட்டியுள்ள குறைபாடு.

*15.3.* பேச்சு மொழியை இலக்கியங்களில் மிகுதியாகப் பயன்படுத்தும் பல படைப்பாளிகளிடம் மொழிப்பயன்பாட்டைப் பற்றிய ஒரு தெளிவான தரக்கட்டுப்பாட்டுச் சிந்தனை காணப்படவில்லை. இதைச் சுட்டுவதன் மூலம் பொதுப்பேச்சு வழக்கையோ வட்டார வழக்கையோ படைப்பிலக்கியங்களில்

பயன்படுத்துவதை நாம் விமர்சிக்கவில்லை. அது நமது நோக்கமும் அல்ல. *அகவல்* கூட இந்தப் போக்கை விமர்சிக்க வில்லை என்றே தோன்றுகிறது. அதன் குற்றச்சாட்டு செவ்வியல் வழக்கில் வட்டார வழக்கு இடம்பெறுவதைப் பற்றியதுதான். கபிலரும் பாரதியும் செய்யாத எதையும் கி.ரா. செய்துவிடவில்லை. அவர்கள் கவிதைகளில் ஓரளவுக்கு மேல் தங்கள் சோதனை முயற்சிகளை மேற்கொள்ள வாய்ப்பில்லை. தான் படைப்பது உரைநடையில் அமைவதால் கபிலரும் பாரதியும் சிறிய அளவில் மேற்கொண்ட சோதனை முயற்சியைக் கி.ரா. கொஞ்சம் பெரிய அளவில் மேற்கொண்டுள்ளார் என்று தோன்றுகிறது. செவ்வியல் வழக்கில் வட்டார வழக்கை அல்லது பேச்சு வழக்கைக் கலப்பதால் இலக்கியத்தின் தரமும் கட்டமைப்பும் பாதிக்கப் படுகிறதா என்பதே விமர்சகர்கள் கவனிக்கவேண்டிய விஷயம். மற்றபடி ஒரு படைப்பாளி தனது படைப்பில் மொழி வழக்குகளை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று ஆணை விதிப்பது விமர்சகனின் வேலை இல்லை. கிரேக்கக் கலையும் இந்தியக் கலையும் இணைந்து ஒரு காந்தாரக்கலை உருவாயிற்று. இடைக்காலத்தில் தமிழும் வடமொழியும் கலந்து ஒரு மணிப்பிரவாள மொழி உருவாயிற்று. அதுபோல் படைப் பிலக்கியத்தில் செவ்வியல் வழக்கும் வட்டார வழக்கும் அல்லது பொதுப் பேச்சு வழக்கும் வட்டார வழக்கும் மயங்கி ஒரு புதிய மொழிவழக்கு உருவாகுமானால் ஆகட்டுமே! அதன் நிலைபேற்றை முடிவு செய்ய வேண்டியது காலமும் வாசகர்களும் தான். விமர்சகர்கள் அல்ல. இந்த வகையில் *அகவல்* விமர்சனம் செருப்பிடை ஒரு சிறுபரல்.



# 12. எழுவாய் ஏற்றம்

## 1.0 நிகழ்ச்சிக் களம்

1.1 எழுவாய் ஏற்றம் (Subject Raising) என்பது ஆங்கிலம், இத்தாலியம், இந்தி, ஜப்பானியம் முதலான மொழிகளில் இயல்பாகக் காணப்படும் ஒரு தொடரனியல் திரிபாகும். அகப்படும் தொடரனில் (Embedded Clause) உள்ள எழுவாய் உறுப்பு அகப்படுக்கும் தொடரனில் (Embedding Clause) சென்று சேர்வதையே மாற்றிலக்கண மொழியியலார் எழுவாய் ஏற்றம் என்று குறிப்பிடுவர். இந்த எழுவாய் ஏற்றம் ஆங்கிலத்தில் எங்ஙனம் நிகழ்கிறது என்பது பற்றி விரிவாக ஆராயப்பட்டுள்ளது (Postal 1974). இவ்வாறே இந்தி (Subbarao 1974), இத்தாலியம் (Radford 1977), ஜப்பானியம் (Susumu Kuno 1976) ஆகிய மொழிகளிலும் இது பற்றி அழுத்தமாகச் சிந்திக்கப்பட்டுள்ளது. இந்தக் கட்டுரையில் எழுவாய் ஏற்றம் என்று நாம் குறிப்பிடுவது என்றென் தொடரனில் காணப்படும் ஓர் நிகழ்ச்சியாகும். என்றென் தொடரன் (Complement Clause) என்பது பொருண்மை இழந்த *என்று/என, என்ற, என்பது* ஆகிய வாக்கியச் சாரியைகளுள் (Sentential Increments) வாக்கிய அமைப்புக்குப் பொருந்தியதை உறுப்பாகக் கொண்டு நிகழும் ஓர் தொடரனாகும். பின்வரும் எடுத்துக் காட்டுக்களை நோக்கவும்.

(1) [முருகன் வள்ளியை மணந்தான் என்று/என] ராமன் சொன்னான்.

(2) [முருகன் வள்ளியை மணந்தான் என்ற] செய்தி.

(3) [முருகன் வள்ளியை மணந்தான் என்பது] உண்மை/எனக்குத் தெரியும்.

இவ்வெடுத்துக்காட்டுக்களில் பகர அடைப்புக்களுள் நிகழும் வாக்கிய அமைப்புக்கள் என்றென் தொடரன்களாகக் கருதத்தக்கவையாகும்.[1]

---

1. என்றென் தொடரன் என்பது இங்கு ஓர் கலைச்சொல்லாகப் பயன்படுத்தப்படுகிறது. ஆகவே என்று என்னும் உறுப்பு அமைந்த தொடரன்களை மட்டுமன்றி *என்ற, என்பது* ஆகிய உறுப்புக்கள் அமைந்த தொடரன்களையும் இக்கலைச்சொல் கருத்தில் கொள்ளும்.

1.2. தமிழில் என்றென் தொடரன்கள் பற்றிச் சிந்திக்கப் படவில்லை என்று சொல்வதற்கில்லை. இதுபற்றிய முதல் சிந்தனைத் தொகுப்பு தொல்காப்பியத்தில் காணப்படுகின்றது. *என, என்று* ஆகிய இரண்டு இடைச்சொற்களும்[2] வினை, குறிப்பு, இசை, பண்பு, பெயர் ஆகிய கிளவிகளை அடுத்து நிகழும் என்று தொல்காப்பியம் குறிக்கிறது (சொல், சேனா, 258, 259)[3]. என்றென் கிளவியின் நிகழிடம் பற்றிய தொல்காப்பியக் குறிப்புக்கள் அமைப்பு மொழியியற் கோட்பாட்டின் அடியொற்றிச் செல்வன வாகையால், என்றென் தொடரன் பற்றிய தொல்காப்பிய ஆய்வினை முழுமையான ஒன்றாகக் கொள்வதற்கில்லை. மாற்றிலக்கணக் கோட்பாட்டினைக் கருத்தில் கொண்டு தமிழுக்கான என்றென் தொடரன் பற்றிய ஆய்வினைச் சிவகுமார் நிகழ்த்தியுள்ளார் (Sivakumar 1981). இந்த ஆய்வு என்றென் தொடரன்கள் அமைந்த வாக்கிய அமைப்புக்களின் மீது சற்று விரிவாக நிகழ்த்தப்பட்டிருந்தாலும், நட்கர்னி (Nadkarni 1972)

---

2. தொல்காப்பியம் *என, என்று* ஆகிய இரண்டினையும் இடைச் சொற்களாகவே கொள்ளும். *என்பது* என்னும் உறுப்பும் இடைச் சொல்லாகவே கொள்ளப்படுகின்றது (தொல்.சொல்.சேனா. 280). இவ்வமைப்பினைத் தொல்காப்பியம் பிரிவில் அசைநிலையாகக் கொள்வது குறிப்பிடத்தக்கதாகும். இந்தக் கட்டுரையில் *என/என்று* வினையெச்சச் சாரியையாகவும், *என்ற/என்னும்* பெயரெச்சச் சாரியை யாகவும், *என்பது* முற்றுச் சாரியையாகவும் கொள்ளப்படு கின்றன. இந்த சாரியைகள் அனைத்தும் பயனிலையை அடுத்து நிகழ்ந்து வாக்கிய எச்சங்களையும் (Sentential Participles), வாக்கியப் பெயர்த் தொடர்களையும் (Sentential Noun Phrases) உருவாக்குகின்றன

3. தொல்காப்பிய நூற்பாவுக்கு எடுத்துக்காட்டுக்களாகப் பின்வருவன வற்றைச் சேனாவரையர் குறிப்பிடுகிறார்.

   வினை: (அ) மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்
   (ஆ) நரை வரும் என்றெண்ணி

   குறிப்பு: (அ) துண்ணெனத் துடித்தது மனம்
   (ஆ) விண்ணென்று விசைத்தது

   இசை: (அ) ஒல்லென ஒலித்தது
   (ஆ) ஒல்லென்றொலிக்கும் ஒலிபுனல் ஊரற்கு

   பண்பு: (அ) வெள்ளென விளர்த்தது
   (ஆ) பச்சென்று பசுத்தது

   பெயர்: (அ) அழுக்காறு என ஒரு பாவி
   (ஆ) பாரி என்று ஒருவன் உளன்

   இவ்வெடுத்துக்காட்டுக்களில் *என, என்று* ஆகிய உறுப்புக்களை ஈறாகக் கொண்டு அமைந்த அமைப்புக்கள் அனைத்தையும் நாம் என்றென் தொடரன்களாகவே கொள்கிறோம்.

அவர்களின் கன்னட மொழியில் அமைந்த என்றென் தொடரன்கள் பற்றிய ஆய்வினையே சிவகுமாரின் ஆய்வு பொதுவாகப் பின்பற்றிச் செல்கின்றது. என்றென் தொடரன்களில் நிகழும் எழுவாயானது எங்ஙனம் தலைமைத் தொடரனில் (Matrix Clause) ஓர் உறுப்பாக அமைகிறது என்பது பற்றிய ஆய்வு தமிழைப் பொறுத்தவரையில் விரிவாக மேற்கொள்ளப்படவில்லை. இது தொடர்பான ஒரு செய்தி மட்டும் இச்சிறு கட்டுரையில் சற்று அழுத்தமாகப் பேசப்படுகிறது.

## 2.0. இருவகை ஏற்றம்

2.1. ஆங்கிலத்தில் நிகழும் எழுவாய் ஏற்றம் இருபுடைத் தன்மையது (Bidirectional) என்று ஒரு சாராரும், ஒருபுடைத் தன்மையது (Unidirectional) என்று இன்னொரு சாராரும் வாதிடுவர். இருபுடை ஏற்றம் (Bidirectional Raising), ஒருபுடை ஏற்றம் (Undirectional Raising) என்றால் என்ன என்பதை முதலில் விளங்கிக் கொள்வது இன்றியமையாததாகும். இந்த வகையில் Radford-இன் (1977:28) பின்வரும் ஆங்கில எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

(4) That he has failed is unlikely

(5) He is unlikely to have failed

எடுத்துக்காட்டு (4)-இல் நிகழும் That he has failed என்பது ஓர் என்றென் தொடரனாகும். இத்தொடரன் is likely என்ற பயனிலைத் தொடரின் எழுவாயாகும். இத்தகைய தொடரன்கள் Subject Complements என்று ஆங்கிலத்தில் குறிக்கப்பெறும். எழுவாய் நிலைத் தொடரன்கள் என்று இவற்றைத் தமிழில் குறிப்பிடலாம். எடுத்துக்காட்டு (4)-இல் உள்ள என்றென் தொடரனில் எழுவாயாக நிகழும் he என்னும் உறுப்பானது (5)-இல் தலைமைத் தொடரனில் எழுவாயாக உயர்த்தப் பட்டுள்ளது. இதனை Subject Raising into Subject Position என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுவர். எழுவாய் நோக்கிய எழுவாய் என்று இதனைத் தமிழில் குறிப்பிடலாம். மேலும் இரண்டு எடுத்துக் காட்டுக்களைக் கருதுக.

(6) I consider that he is a scholar

(7) I consider him to be a scholar

எடுத்துக்காட்டு (6)-இல் உள்ள that he is a scholar என்பது consider என்னும் வினைக்குச் செயப்படுபொருளாக அமைந்த ஓர் என்றென் தொடரனாகும். இதனை Object complement என்பர்

ஆங்கிலத்தில். இதனைச் செயப்படுபொருள் நிலைத் தொடரன் என்று குறிப்பிடலாம். எடுத்துக்காட்டு (6)-இல் என்றென் தொடரனில் எழுவாயாக அமைந்த he என்னும் உறுப்பு எடுத்துக்காட்டு (7)-இல் தலைமைத் தொடரனில் செயப்படு பொருளாக உயர்த்தப் பட்டுள்ளது. இதனை ஆங்கிலத்தில் Subject raising into Object position என்று குறிப்பிடலாம். செயப்படுபொருள் நோக்கிய எழுவாய் என்று இதனைத் தமிழில் குறிப்பிடலாம்.

2.2. எடுத்துக்காட்டு (4)-இல் என்றென் தொடரனில் உள்ள he என்னும் எழுவாய் எடுத்துக்காட்டு (5)-இல் தலைமை வாக்கிய எழுவாயாகவும், எடுத்துக்காட்டு (6)-இல் என்றென் தொடரனில் நிகழும் he என்னும் எழுவாய் எடுத்துக்காட்டு (7)-இல் தலைமை வாக்கியச் செயப்படுபொருளாகவும் நிகழும் போக்கினைக் கருத்தில் கொண்டு ஆங்கிலத்தில் எழுவாய் ஏற்றத்தினை இரு புடைத் தன்மையதாக ஒரு பிரிவினரால் கொள்ளப்படும். இப் பிரிவினருள் போஸ்டல் (Paul M. Postal) என்பவர் குறிப்பிடத் தகுந்தவர். எடுத்துக்காட்டு (7)-இல் நிகழும் him என்பது எழுவாய் ஏற்றத்தின் மூலம் அமைந்த செயப்படுபொருள் அல்லவென்றும், அது எச்சத்தொடரனில் (Subordinate Clause) இயல்பாய் அமைந்த எழுவாய் என்றும், அது him என்று அமைவதற்கு மேற்படி தொடரனில் முற்றுவினை இன்மையே காரணம் என்றும் சோம்ஸ்கி (Chomsky 1977) வாதிடுவார். இவர் கொள்கைப்படி ஆங்கிலத்தில் எழுவாய் ஏற்றம் என்பது ஒருபுடைத் தன்மைய தாகும். அதாவது என்றென் தொடரனில் அமைந்த எழுவாய், தலைமைத் தொடரனில் எழுவாயாக உயர்த்தப்படுவது மட்டுமே ஏற்கத்தக்கது என்பது சோம்ஸ்கியின் கருதுகோள். இதனை, போஸ்டல் (1974), சுசுமு குனோ (1976) ஆகியோர் வன்மையாக மறுப்பர். சோம்ஸ்கியின் கருதுகோளைப் புறக்கணிக்கும் வகையில் பிறமொழிகளிலும் செயப்படுபொருள் நோக்கிய எழுவாய் ஏற்றம் இயல்பாகக் காணப்படுவது குறிப்பிடத்தக்க தாகும். ஜப்பானியம், தமிழ் ஆகிய மொழிகளில் என்றென் தொடரனில் அமைந்த எழுவாய் செயப்படுபொருளாக ஏற்றம் பெற்ற பிறகும், மேற்படி தொடரனில் உள்ள வினையானது முற்றுத் தன்மையை இழக்காமல் இருப்பது சோம்ஸ்கியின் கருதுகோளுக்கு ஆதரவளிப்பதாக இல்லை. இக்கட்டுரையின் போக்கில் இதனை உணரலாம்.

### 3.0. ஜப்பானியத்தில்

3.1. ஜப்பானிய மொழியில் என்றென் தொடரனில் நிகழும் எழுவாய், ஏற்றம் பெற்றுத் தலைமைத் தொடரனில் செயப்படு

பொருளாக அமையும் நிலையினை சுசுமு குனோவின் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் நன்கு புலப்படுத்தும்.

8 (அ) Yamada Wa [Tanaka ga baka da] to omotte ita (p.23)
Y [ T fool is] that thinking was
'Yamada thought that Tanaka was a fool'

(ஆ) Yamada Wa Tanaka O [baka da] to omotte ita (p.24)
'Yamada thought Tanaka to be a fool'

9 (அ) Yamada Wa [Tanaka ga hannin da] to danteisita (p.24)
Y T culprit is that determined

(ஆ) Yamada Wa Tanaka O [hannin da] to danteisita (p.24)
'Yamada determined Tanaka to be the culprit'

மேலே (அ) பிரிவில் அமைந்த எடுத்துக்காட்டுக்களில் பகர அடைப்புக்குள் நிகழும் என்றென் தொடரனில் உள்ள Tanaka என்னும் எழுவாயானது (ஆ) பிரிவில் உயர்த்தப்பட்டுத் தலைமைத் தொடரனில் செயப்படுபொருளாக நிகழ்வதைக் காணலாம். என்றென் தொடரனிலிருந்து உயர்த்தப்பட்ட எழுவாயானது செயப் படுபொருளாகச் செயல்படுவது O-என்னும் செயப்படுபொருள் வேற்றுமை விகுதியால் தெளிவாக உணர்த்தப்படுகின்றது. மேலும், மேற்படி எடுத்துக்காட்டுக்களில் எழுவாயானது ஏற்றம் பெற்ற பிறகு, என்றென் தொடரனில் உள்ள வினையானது எச்சமாக மாறாமல் முற்றாகவே இருப்பதும் நோக்கத்தக்கது.

### 4.0. இத்தாலியத்தில்

4.1. இத்தாலிய மொழியில் என்றென் தொடரனில் அமைந்த எழுவாய், தலைமைத் தொடரனில் செயப்படுபொருளாக ஏற்றம் பெறுவதை Radford-இல் பின்வரும் எடுத்துக்காட்டுப் புலப்படுத்தும்.

(10) Giorgio vide Maria che piangeva (1977:155)
G saw M that was crying
'Giorgio saw Maria crying'

இந்த வாக்கியத்தின் புதையமைப்பினைப் பின்வருமாறு Radford குறிப்பிடுவார்.[4]

(11) S[ NP[ Giorgio] VP[ vide NP[ S[ che Maria piangeva]]]]

புதையமைப்பு (11) இல் உள்ள che Maria piangeva என்பது என்றென் தொடரனாகும். இத்தொடரனில் எழுவாயாக நிகழும்

4. Radford-இன் புதையமைப்பு கிளையமைப்பில் அமைந்திருந்தாலும், அது இங்கே சுருக்கப்பெற்றுப் படுகை அமைப்பில் குறிக்கப் பெற்றுள்ளது.

Maria என்னும் உறுப்பு உயர்த்தப்பட்டு எடுத்துக்காட்டு (10)-இல் vide என்னும் தலைமை வாக்கிய வினையின் செயப்படு பொருளாக அமைவதைக் காணலாம்.

### 5.0. இந்தியில்

5.1 இந்தியிலும் கீழ்நிலைத் தொடரனாகிய என்றென் தொடரனில் நிகழும் எழுவாயானது தலைமைத் தொடரனில் செயப்படுபொருளாக உயர்த்தப்படும் நிலை காணப்படுகின்றது (Subbarao 1974). இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் உணர்த்தும்.

12(அ) ham yah nahi: ma:nte [ki ragu cor hai] (p.105)
We it not consider that R thief is
'We do not consider that Raghu is a thief'

(ஆ) ham ragu ko cor nahi: ma:nte (p.105)
'We do not consider Raghu to be a thief'

13(அ) madhu ne dekha: [ki bha:nu kursi:par baiThi: hui: thi:]
M saw that B chair on sitting (p.96)
'Madhu saw Bhanu was seated on the chair' (p. 96)

(ஆ) Madhu ne bha:nu ko kursi: par baiThe hue dekha: (p.96)
'Madhu saw Bhanu sitting on the chair'

இவ்வெடுத்துக்காட்டுக்களில் (அ) பிரிவில் என்றென் தொடரனில் எழுவாயாக நிகழும் raghu, bha:nu ஆகிய உறுப்புக்கள் உயர்த்தப் பட்டு (ஆ) பிரிவில் தலைமைத் தொடரனில் ko என்னும் இரண்டாம் வேற்றுமை உருபுடன் செயப்படு பொருள்களாக நிகழ்வதைக் காணலாம்.

### 6.0. தமிழ் போற்றும் ஏற்றம்

6.1. இனி, தமிழில் நிகழும் எழுவாய் ஏற்றம் பற்றிச் சிந்திக்கலாம் ஆங்கிலத்தில் எழுவாய் ஏற்றம் இருபுடைத்தன்மையதாக அமையும்போக்கு தொடக்கத்தில் குறிக்கப்பெற்றது. ஆனால் தமிழில் இத்தகைய நிலை காணப்படவில்லை. செயப்படு பொருளாக நிகழும் என்றென் தொடரனில் உள்ள எழுவாய் மட்டுமே உயர்த்தப்பட்டு அது தலைமைத் தொடரனில் செயப் படுபொருளாக அமையும் நிலை தமிழில் காணப்படுகின்றது. எழுவாயாக நிகழும் என்றென் தொடரனில் உள்ள எழுவாய், தலைமைத் தொடரனில் எழுவாயாக உயர்த்தப்படும் நிலை தமிழில் இல்லை. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் புலப்படுத்தலாம்.

(14) [முருகன் வள்ளியை மணப்பான் என்பது] உறுதி

(15) [அரசியல்வாதிகள் ஊழல் பேர்வழிகள் என்று] மக்கள் கருதுகிறார்கள்.

எடுத்துக்காட்டுக்கள் (14), (15)-இல் பகர அடைப்புக்குள் இருக்கும் என்றென் தொடரன்கள் முறையே *உறுதி* என்னும் பயனிலையின் எழுவாயாகவும், *கருதுகிறார்கள்* என்னும் பயனிலையின் செயப்படுபொருளாகவும் நிகழ்கின்றன. இவற்றுள் (15)-இல் என்றென் தொடரனில் எழுவாயாக நிகழும் *அரசியல்வாதிகள்* என்னும் உறுப்பை உயர்த்திப் பின்வருமாறு தலைமைத் தொடரனின் செயப்படுபொருளாக அமைக்க முடியும்.

(16) அரசியல்வாதிகளை ஊழல் பேர்வழிகள் என்று மக்கள் கருதுகிறார்கள்.

ஆனால் (14)-இல் *உறுதி* என்பதன் எழுவாயாக நிகழும் என்றென் தொடரனில் உள்ள எழுவாயாகிய *முருகன்* என்னும் தலைமைப் பெயரின் மீது நிகழும் வாக்கியத்தில் உள்ள எந்தப் பெயர் உறுப்பையும் பிரித்துத் தலைமைத் தொடரனில் சேர்ப்பதைத் தமிழ் சட்டமாக மறுத்துவிடுகின்றது. இந்த வகையில் தமிழினின்றும் ஆங்கிலம் வேறுபடுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக:

17 (அ) That Murugan will marry Valli is certain

(ஆ) Murugan is certain to marry Valli

6.2. தமிழில் நிகழும் எழுவாய் ஏற்றம் ஒருபுடைத் தன்மையது என்பதையும் இந்த ஏற்றம் செயப்படுபொருளாக நிகழும் என்றென் தொடரனில் அமைந்த எழுவாயை மட்டுமே கருத்தில் கொள்கிறது என்பதையும் மேலே பார்த்தோம். இனி, செயப்படு பொருளாக நிகழும் எல்லா வகையான அதாவது, பல்வேறு வகையான பயனிலைகளைக் கொண்ட என்றென் தொடரன்களுமே எழுவாய் ஏற்றத்தினை முனைப்புடன் ஏற்றுக் கொள் கின்றனவா என்பது பற்றிச் சற்றுச் சிந்திக்கலாம். பின்வரும் அமைப்புக் களைக் கருத்தில் கொள்ளவும்.

18 (அ) முருகன் (தான்) வள்ளியின் கணவன் என்று ராமன் சொன்னான்.

(ஆ) முருகனை(த்தான்) வள்ளியின் கணவன் என்று ராமன் சொன்னான்.

19 (அ) முருகன்(தான்) அங்கே இல்லை என்று வள்ளி சொன்னாள்.

(ஆ) முருகனை(த்தான்) அங்கே இல்லை என்று வள்ளி சொன்னாள்.

20 (அ) முருகன்(தான்) பாடவில்லை என்று வள்ளி சொன்னாள்.
(ஆ) முருகனை(த்தான்) பாடவில்லை என்று வள்ளி சொன்னாள்.

21(அ) முருகன்(தான்) வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்.
(ஆ) ?முருகனை(த்தான்) வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்.

எடுத்துக்காட்டு (21)-இல் (ஆ) பிரிவில் உள்ள வாக்கியம் ஒன்றைத் தவிர ஏனைய மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் (ஆ) பிரிவில் அமைந்த வாக்கியங்கள் இயல்பாயும் நெருடல் இன்றியும் காணப் படுகின்றன. 21(ஆ) பிரிவில் உள்ள வாக்கியம் இயல்பற்றதுபோல் தோன்றுகிறது. இப்படித் தோன்றுவதற்கு என்ன காரணம்? எழுவாய் ஏற்றம் இயல்பாய் அமைந்த வாக்கியங்களின் பயனிலை யானது ஒன்று பெயராகவோ அன்றி எதிர்மறைக் குறிப்பு அல்லது தெரிநிலை வினையாகவோ அமைந்துள்ளது. இந்த நிலையை (18), (19), (20) ஆகிய எடுத்துக்காட்டுக்களில் காணலாம். எடுத்துக்காட்டு (21)-இல் என்றென் தொடரனில் உடன்பாட்டு வினைமுற்றானது பயனிலையாக நிகழும் நிலை காணப்படு கின்றது. அப்படியானால் பயனிலையாக நிகழும் உறுப்புக்களின் தன்மையை ஒட்டித்தான் எழுவாய் ஏற்றம் இயல்பாயும் நெருடலாயும் அமைகின்றதா? செயப்படுபொருளாக அமையும் என்றென் தொடரன்களில் நிகழும் எழுவாய் உறுப்பானது உயர்த்தப்பட்டுத் தலைமைத் தொடரனில் செயப்படு பொருளாகச் செயல்படவல்லது என்ற கோட்பாடு வலுவானது என்றால் மேலே எழுப்பிய கேள்விக்கு இடமேயில்லை. மேற்படி என்றென் தொடரன்களில் நிகழும் எழுவாய், செயப்படு பொருளாக உயர்த்தப்படுவதற்குக் காரணமாய் அமைவது தலைமைத் தொடரனில் அமைந்த செயப்படுபொருள் குன்றா வினையாகும். இந்த வினையானது, என்றென் தொடரனில் உள்ள பயினிலையானது உடன்பாட்டு வினையாக இருக்கையில் மட்டும் மேற்படி தொடரனில் உள்ள எழுவாயைத் தனக்குரிய செயப்படு பொருளாக ஈர்க்கத் தவறி விடுகிறது என்று கொள்வது பொருத்தமாகத் தோன்றவில்லை. தமிழைப் பொறுத்தவரையில் எழுவாய் ஏற்றம் என்றென் தொடரனில் நிகழும் பயனிலைக்குக் கட்டுப்பட்டது என்பதை ஏற்றுக்கொள்வதற்கில்லை. ஆகவே 21(ஆ) பிரிவில் அமைந்த வாக்கியம் கோட்பாட்டு அடிப்படையில் ஒரு பிரச்சினைக்குரிய வாக்கியமாக இருக்க முடியாது. இந்த வாக்கிய மானது இலக்கணத் தன்மையுடையது என்பதைத் தெளிவு

படுத்திவிட்டால், அது நெருடலற்ற இயல்பான வாக்கியம் என்பதை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. இந்த வகையில் இரண்டு வகையான சான்றுகளை இங்கே நாம் கருத்தில் கொள்ளலாம்.

முதல் சான்று, பின்வரும் பழந்தமிழ் வாக்கியங்களை அடிப்படையாகக் கொண்டதாகும்.

(22) ஓங்குமலை நாடனை வரும் என்றோளே (குறுந். 83.5)

(23) மலைகெழு நாடனை வரும் என்றோளே (குறுந். 201.7)

இவ்வாக்கியங்கள் பின்வரும் வாக்கியத்தினின்றும் எழுவாய் ஏற்றத்தின் மூலம் விளைந்தவையாகும்.

(24) *ஓங்குமலை நாடன்/மலைகெழு நாடன் வரும் என்றோளே.

இந்த வாக்கியத்தில் என்றென் தொடரனாக அமைவது "ஓங்கு மலை நாடன்/மலைகெழு நாடன் வரும்" என்று என்பதாகும்[5]. இத்தொடரனில், வரும் (=வருவான்) என்பது உடன்பாட்டு வினைப் பயனிலையாக இருப்பதைக் காணலாம். மேலே (22), (23), (24)-இல் அமைந்த வாக்கிய அமைப்புக்களை இக்காலத் தமிழில் பின்வருமாறு விளக்கமாகக் குறிக்கலாம்.

(25) தலைவன் வருவான் என்று தோழி சொன்னாள் (= 22/23)

(26) தலைவனை வருவான் என்று தோழி சொன்னாள் (= 24)

மேற்படி வாக்கிய அமைப்புக்களில் என்றென் தொடரனில் அமைந்த எழுவாயுடன் *தான்* என்னும் இடைச்சொல்லைச் சேர்க்கையில் (26)-இல் உள்ள வாக்கியம் கீழே (28)-இல் ஐயமின்றி இயல்பாய் அமைவதைக் காணலாம்.

(27) தலைவன்தான் வருவான் என்று தோழி சொன்னாள்.

(28) தலைவனைத்தான் வருவான் என்று தோழி சொன்னாள்.

பழந்தமிழ் எடுத்துக்காட்டுக்களும், அதன் அடிப்படையில் கொள்ளப்பட்ட இக்காலத் தமிழ் எடுத்துக்காட்டுக்களும், என்றென் தொடரனில் பயனிலையானது உடன்பாட்டு வினை யாக இருந்த போதிலும் எழுவாய் ஏற்றம் நிகழ்ந்த நெருடலற்ற வாக்கிய அமைப்புக்களைத் தோற்றுவிக்கும் என்பதை நன்கு

5. இத்தொடரனில் நிகழும் *என்று* என்னும் உறுப்பானது சொல்லுதல் அல்லது வினவுதல் என்னும் பொருண்மையைக் குறிக்கும் *என்* என்னும் வினையடியாகத் தோன்றிய வினை யமைப்புக்களின் முன்னர்த் தவிர்க்கப்படுகின்றது. ஆனால் *சொல், வினவு* ஆகிய வினைகளின் முன் *என்று* என்பதன் நிகழ்ச்சி இன்றியமையாததாகும்.

தெளிவுபடுத்துகின்றன. இதனை நோக்க, 21(ஆ) பிரிவில் அமைந்த *முருகனை(த்தான்) வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கியம் நெருடலாக இருப்பதுபோலத் தோன்றினாலும் இலக்கணச் சிதைவற்ற வாக்கியம் என்பது தெளிவாகிறது.

இரண்டாவது சான்று பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்கிறது.

*29 (அ) ராமன் வாலியை வதைத்தான்.*
*(ஆ) வாலி ராமனால் வதைக்கப்பட்டான்.*

செய்வினை வாக்கியங்கள் செயப்பாட்டினவாய் மாற்றம் பெறுகையில், முன்னதில் உள்ள செயப்படுபொருள் பின்னதில் எழுவாயாக அமையும் நிலை மொழிகளில் இயல்பாகக் காணப்படும் ஒன்றாகும். இதனைக் கருத்தில் கொண்டு பின்வரும் வாக்கிய அமைப்புக்களை நோக்கவும்.

*30 (அ) முருகன் வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்.*
*(ஆ) முருகன் வள்ளியை மணந்தான் என்று ராமனால் சொல்லப்பட்டான்.*

எடுத்துக்காட்டு (30)-இல் (ஆ) பிரிவில் அமைந்த செயப்பாட்டு வினை வாக்கியம் ஏற்புடைய ஒன்றாகும். இவ்வாக்கியத்தில் *முருகன்* என்னும் உறுப்பு எழுவாயாக நிகழ்வதை மறுப்பதற்கில்லை. இதனை நோக்குகையில், மேற்படி உறுப்பு செய்வினை வாக்கியத்தில் செயப்படுபொருளாக நிகழ்ந்தேயாக வேண்டும் என்பது தெளிவாகிறது. அதாவது, 30(ஆ) பிரிவில் உள்ள செயப்பாட்டு வினை வாக்கியத்துக்கு நிகரான செய்வினை வாக்கியம் 21(ஆ) பிரிவில் உள்ளதுபோல், அதாவது பின்வருமாறு இருக்க வேண்டும்.

*30 (இ) முருகனை வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்.*

இந்த வாக்கியத்தில் *முருகன்* என்னும் பெயர்நிலைக் கிளவி *சொன்னான்* என்னும் பயனிலை வினைக்குச் செயப்படுபொருளாய் அமைகின்றது. இத்தகைய வாக்கியம் நமக்குக் கிடைக்கவில்லையெனில் 30(ஆ) பிரிவில் உள்ள செயப்பாட்டு வினை வாக்கியத்தை வருவிக்க முடியாமல் போய்விடும். *முருகன் வள்ளியை மணந்தான் என்று ராமனால் சொல்லப்பட்டான்* என்ற செயப்பாட்டு வினை வாக்கியத்தை *முருகன் வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கியத்திலிருந்து நேரடியாக வருவிக்க முடியாது. ஏனெனில் *முருகன் வள்ளியை மணந்தான் என்று*

*ராமன் சொன்னான்* என்ற இந்த வாக்கியத்தில் *முருகன்* என்னும் உறுப்பானது *சொன்னான்* என்னும் பயனிலைக்குச் செயப்படு பொருளாய் அமையவில்லை. மேற்படி உறுப்பானது அவ்வாறு அமைந்தாலன்றி *முருகன் வள்ளியை மணந்தான் என்று ராமனால் சொல்லப்பட்டான்* என்ற செயப்பாட்டு வினை வாக்கியத்தை வருவிக்க முடியாது. இதனைக் கருத்தில் கொண்டு, எழுவாய் ஏற்றத்தின்மூலம் *முருகனை வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கியத்தினை நாம் இலக்கணச் சிதைவற்ற வாக்கியமாக ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். இதனை அரண் செய்வதுபோல், *வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னது முருகனை* என்ற கவை வாக்கியமும் (Cleft Sentence) ஏற்புடையதாய் அமைகிறது. எழுவாய் ஏற்றம் நிகழவில்லை என்றால் இந்தக் கவை வாக்கிய நிகழ்ச்சிக்கு வாய்ப்பில்லை. ஆகவே, என்றென் தொடரனில் அமையும் உடன்பாட்டு வினைப் பயனிலை எழுவாய் ஏற்றத்தைக் கட்டுப்படுத்துகிறது என்ற ஓர் நிலையை நாம் மேற்கொள்வதற் கில்லை.

## 7.0. நெருடல் ஒரு மாயை

*7.1.* அப்படியானால் *21(ஆ)* பிரிவில் உள்ள *முருகனை வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கியத்தில் நெருடல் ஏதும் இல்லையா? உறுதியாக இல்லை[6]. இத்தகைய வாக்கிய அமைப்புக்களை நாம் தவிர்க்கிறோம் என்பது என்னவோ உண்மைதான். ஆனால் தவிர்க்கப்படுகிற காரணத்தாலேயே இதுபோன்ற வாக்கிய அமைப்புக்கள் இலக்கணத் தன்மையற்றவையாக ஆகிவிடுவதில்லை. தமிழில்

6. மேற்போக்காக, ஒரு வாக்கியத்தில் இரண்டு செயப்படுபொருள் உறுப்புக்கள் இணைந்து நிகழலாமா என்று ஓர் தடை எழலாம். *முருகனை வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கியத்தில் இரண்டு செயப்படுபொருள் உறுப்புக்கள் இணைந்து நிகழ்வது என்னவோ உண்மைதான். ஆனால் இந்த இரண்டும் ஒரு முற்று வாக்கியத்தில் (Simple Sentence) நிகழ்வனவல்ல. முற்றெச்ச வாக்கியத்தில் (Complex Sentence) நிகழ்வனவாகும். எடுத்துக்காட்டில் உள்ள வாக்கியத்தில் எழுவாய் ஏற்றத்தின் மூலம் அமைந்த செயப்படு பொருளாகிய முருகன் என்னும் உறுப்பு தலைமைத் தொடரனிலும், இரண்டாவதாக நிகழும் செயப்படு பொருளாகிய *வள்ளி* என்னும் உறுப்பு, எழுவாய் துண்டிக்கப்பட்ட என்றென் தொடரனிலும் நிகழ்வதை மறுக்க முடியாது. எழுவாய் துண்டிக்கப்பட்ட என்றென் தொடரன் தலைமைத் தொடரனிலிருந்து வேறுபட்டே நிற்கிறது என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

எழுவாய் ஏற்றம் என்பது ஓர் விருப்பு விதியின் (Optional Rule) மூலம் நிகழ்வதுதான். ஆகவே, *முருகனை வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கிய அமைப்பின் மூலம் செய்திப் பரிமாற்றத்தை நிகழ்த்த முடியும். அதே சமயத்தில் *முருகனை வள்ளியை மணந்தான் என்று ராமன் சொன்னான்* என்ற வாக்கியமும் இலக்கணச் சிதைவற்றது என்பதனை மேலே நாம் குறிப்பிட்ட இரண்டு வகையான சான்றுகள் தெளிவுபடுத்து வதனையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

*7.2.* ஆங்கிலம், இத்தாலியம், இந்தி, ஜப்பானியம், தமிழ் முதலான மொழிகளில் எழுவாய் ஏற்றமானது ஒரு தொடரனியல் நிகழ்ச்சியாக அமைவதை மேலே பார்த்தோம். ஆங்கிலம், இத்தாலியம், இந்தி ஆகியவை இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை. இவற்றுள் ஆங்கிலம், இத்தாலியம் இரண்டும் எழுவாய்-பயனிலை-செயப்படுபொருள் என்ற வைப்பு முறையிலும், இந்தியானது திராவிட மொழிகளில் உள்ளதுபோல் எழுவாய்-செயப்படுபொருள்-பயனிலை என்ற வைப்பு முறையிலும் வாக்கிய அமைப்புக்களைக் கொண்டவையாகும். ஜப்பானிய மொழியின் வாக்கிய அமைப்பானது, திராவிட மொழிகளின் வாக்கிய அமைப்புடன் பொருந்திச் செல்வதாகும். இத்தகைய முரண்பட்ட வாக்கிய அமைப்புக்களைக் கருத்தில் கொண்டு Subject raising is a common syntactic device in SVO Languages, but its presence is not conspicuous in SOV Languages *(1976:17)* என்று குறிப்பிடுவார் சுசுமு குனோ என்னும் ஜப்பானிய மொழியியல் அறிஞர். எழுவாய்- பயனிலை-செயப்படுபொருள் என்ற வைப்பு முறையில் வாக்கிய அமைப்புக்களைக் கொண்ட மொழிகளில் பயின்று வழங்குவது போல், எழுவாய்-செயப்படுபொருள்-பயனிலை என்ற வைப்பு முறையில் வாக்கிய அமைப்புக்களைக் கொண்ட மொழிகளில் எழுவாய் ஏற்றம் பயின்று வழங்கவில்லை என்ற சுசுமு குனோவின் கருத்து ஓரளவுக்கு ஏற்புடையதாகும். ஏனெனில் ஆங்கிலத்தில் இருபுடைத் தன்மையதாய் அமையும் எழுவாய் ஏற்றம் ஜப்பானியம், தமிழ் போன்ற மொழிகளில் ஒருபுடைத் தன்மையதாகவே அமைந்து குறைந்த பரப்பில் அதன் நிகழ்ச்சி போற்றப்படுகின்றது. எந்த வகையான எழுவாய் ஏற்றத்தினை ஆங்கிலத்தில் சோம்ஸ்கி தவிர்க்க முற்படுகிறாரோ, அதுவே ஜப்பானிய மொழியிலும் தமிழிலும் முதன்மையாக அமைந்து அவரது கருதுகோளை முறியடித்துவிடுகின்றது.



# 13. எச்சவினைக் கோட்பாடு

## *1.0 இருட்செறிவில் ஓர் ஒளிக்கீற்று*

*1.1* தமிழில் தொடரனியல் நிலையில் (Syntactic Level) வினை கொண்டு முடியும் அல்லது வினையைத் தழுவி நிற்கும் வினைகள் வினையெஞ்சு கிளவிகள் அல்லது வினையெச்சங்கள் எனவும், பெயர் கொண்டு முடியும் அல்லது பெயரைத் தழுவி நிற்கும் வினைகள் பெயரெஞ்சு கிளவிகள் அல்லது பெயரெச்சங்கள் எனவும் குறிக்கப்பெறும். இந்த இருவகை எச்சங்கள் பற்றியும் மரபிலக்கணங்களில் இயன்ற அளவு தெளிவாகவே பேசப்பட்டிருக்கிறது. ஆயினும் முற்றுவினைகளின் ஒரு வகையினவாகிய எச்சவினைகள் பற்றிய ஒரு திட்டவட்டமான கோட்பாட்டுச் சிந்தனையை மரபிலக்கணங்களில் காணமுடியவில்லை. பின்னால் வந்த சிவஞான முனிவர் எச்சவினைகளையும் முற்றுவினைகளையும் ஒருங்கிணைக்கும் வகையில் சிந்தித்த போதிலும் அவரை யாரும் முனைப்பாக எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. ஆயினும் இந்த வகையில் அவரது சிந்தனை இருட்செறிவில் ஓடும் ஒளிக் கீற்று என்பதை யாரும் மறுக்க முடியாது. எச்சம்-முற்று ஆகியவை பற்றிய சிவஞான முனிவரின் சிந்தனை இக்கட்டுரையின் இறுதி நிலையில் கருத்தில் கொள்ளப்பெறும். எச்சவினைக் கோட்பாடு பற்றிய இக்கட்டுரையில் முதலில் வினையெச்சங்களும், பின்னர்ப் பெயரெச்சங்களும் பற்றிப் பேசப்படும். இறுதியில், எச்சங்களும் முற்றுக்களும் ஒரு நிகரன என்பது வலியுறுத்தப்பெறும்.

## 2.0. மரபிலக்கணிகளின் பார்வையில் எச்ச வினைகள்

*2.1.* வினையெச்சங்களைப்பற்றிப் பேசுகையில் மரபிலக்கணிகளும் உரையாசிரியர்களும் பொதுவாக இரண்டு செய்திகளைப் பெரிது படுத்தி அல்லது அழுத்தம் கொடுத்துப் பேசிச் செல்கின்றனர். ஒன்று, எச்சவினைகள் உணர்த்தும் காலம் பற்றியது; பிறிதொன்று, அவ்வினைகள் ஏற்கும் எழுவாயும் அவ்வினைகளை முடிக்கும் பயனிலை வினைகள் ஏற்கும் எழுவாயும் பற்றியது. எச்சவினைகள் உணர்த்துவதாகக் கருதப்பெறும் காலம் சொல்லியல் மட்டத்தில் அமைந்த ஒன்றாகக் கொள்வதற்கில்லை. ஆயினும் செய்தென்

வாய்பாட்டு வினையெச்சங்கள் இதற்கு விதிவிலக்காகும். தமிழில் அமைந்த முதல் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் செய்து வாய்பாட்டு எச்சங்களைத் தவிர பிறவாய்பாட்டு வினையெச்சங்கள் உணர்த்தும் காலப்பொருண்மையைச் சுட்டவில்லை. தொல்காப்பிய உரையாசிரியர்களும், பிந்திய இலக்கணிகளும் எல்லா வகையான வாய்பாட்டு வினையெச்சங்களுக்கும் காலப் பொருண்மையைச் சுட்ட முற்படுகின்றனர். பவணந்தியாரில் இப்போக்கு பிரதிபலிப் பதைப் பின்வரும் நூற்பாவில் காணலாம்.

(1) செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச்செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்குஇன வினையெச் சம்பிற
ஐந்து ஒன்று ஆறுமுக் காலமும் முறைதரும் (நன்னூல் 343)

இந்நூற்பாவின் மூலம் முதல் ஐந்து வகை வினையெச்சங்கள் இறந்த காலத்தையும், செயவென் எச்சம் நிகழ்வையும், ஏனைய ஆறும் எதிர்வையும் உணர்த்துவனவாக அறியப்படுகின்றது. இவற்றுள் செய்தென்பது இடைநிலையானும், ஏனைய இறுதி நிலையானும் காலம் காட்டின என்பார் சங்கர நமச்சிவாயர். வினை யெச்சங்களைக் காலப்பொருண்மையுடன் தொடர்புபடுத்த வேண்டிய அவசியம் பற்றி எந்த இலக்கணியும் உரையாசிரியரும் சிந்தித்துப் பார்க்கவில்லை.

2.2. வினையெச்சங்களின் காலத்தைச் சுட்டும் முயற்சியில் மரபிலக்கணிகளும் உரையாசிரியர்களும் ஒருமித்த கருத்தினராகக் காணப்படவில்லை. எடுத்துக்காட்டாக, செய்பு வாய்பாட்டு வினையெச்சங்கள் நிகழ்வுப் பொருண்மையை உணர்த்துவதாகச் சேனாவரையரும் (தொல். சொல். 228), இறப்பு நிகழ்வு இரண் டையும் உணர்த்துவதாக நச்சினார்க்கினியரும், முக்காலமும் உணர்த்துவதாகத் தெய்வச்சிலையாரும் குறிப்பிடுவதைக் கருத்தில் கொள்ளலாம். இந்தத் தடுமாற்றத்துக்குக் காரணம் செய்பு வாய் பாட்டு எச்சங்கள் இவர்கள் காலத்தில் வழக்கற்றுப் போயினமை யாகும்.[1] செயவென் எச்சம் முக்காலத்துக்கும் உரியது என்று இந்த

---

1. தொல்காப்பியர் காலத்தில்கூட இந்த வாய்பாட்டு வினையெச்சங்கள் வழக்கில் இருந்தனவா என்பது ஐயப்பாடே. இலக்கிய வழக்கு என்பது பேச்சு வழக்கின் ஒளிப்பதிவே. ஆயினும் செய்பு வாய்பாட்டு வினைகள் தொல்வழக்கில் இறவாக்கால வினைகளாக நிகழ்ந்து பிறகே எச்சவினைகளாகச் செயல்படத் தொடங்கியிருக்கவேண்டும். செய்பவன், செய்பவள், செய்பவர், செய்ப (< *செய்பவ்) ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி இதனை உறுதிப்படுத்துகின்றது. எச்சமாக நிகழ்கையில் செய்பு வாய்பாட்டு வினைகள் செய்து வாய்பாட்டு எச்சங்களோடும் செயல் நிலையில் பொருந்தியும் பொருந்தாமலும் நிகழ வாய்ப்புள்ளது. பொருந்தி நிகழ்வது பெரும்பான்மையாகப் பழந்தமிழில் காணப்படுகின்றது.

மூன்று உரையாசிரியர்களும் கருதுகின்றனர். ஆனால் பவணந்தியார் (நன்னூல். 343) இதனை நிகழ்வுக்கு மட்டுமே உரிமையாக்குகின்றார்.

2.3. தொல்காப்பியர் குறிப்பிடும் செய்து, செய்யூ, செய்பு, செய்தென, செய்யிய, செய்யியர், செயின், செய, செயற்கு (சொல். சேனா. 228) ஆகிய ஒன்பது வாய்பாட்டு வினையெச்சங்களுள் செய்து வாய்பாட்டு எச்சத்தின் காலம் பற்றிய செய்தி மட்டுமே *செய்தென் எச்சத்து இறந்த காலம், எய்திடன் உடைத்தே வாராக் காலம்* (தொல்.சொல்.சேனா. 239) என்ற நூற்பாவில் பேசப் படுகின்றது. ஏனைய வினையெச்சங்களின் காலம் பற்றிய செய்தி தொல்காப்பியத்தில் காணப்படவில்லை.[2] வினையெச்சங்களுக்குக் காலத்தைச் சுட்ட முற்படாத தொல்காப்பியரை இந்த வகையில் நாம் முழுமையாகப் புரிந்துகொள்ளவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

### 3.0. தொடரனியல் கட்டுப்பாட்டில் வினையெச்சங்களின் காலம்

வினையெச்சங்கள் உணர்த்துவதாகக் கருதப்பெறும் காலப் பொருண்மையை எந்த அடிப்படையில் வரையறை செய்வது என்பதை மரபிலக்கணிகளும், உரையாசிரியர்களும் கோட்பாட்டு நிலையில் உணர்த்த முற்படவில்லை. வினையெச்சங்களின் காலத்தைச் சொல்லியல் நிலையில் (Morphological Level) சுட்டமுடியாது. எச்ச வினையும், அதனை முடிக்கும் பயனிலை வினையும் உணர்த்தும் தொழில்களின் முன் பின்னாகிய நிகழ்ச்சிப்பாட்டினைப் பொறுத்தே முந்தியதன் காலம் உணரப்படும்.[3] எச்சவினை உணர்த்தும் தொழில் முன்னும், பயனிலை வினை உணர்த்தும் தொழில் பின்னுமாக நிகழுமாயின் எச்சவினை இறந்தகால வினையின் வடிவினதாய்க் குறிக்கப் பெறும். மாறாக, பயனிலை வினை உணர்த்தும் தொழில் முன்பும், எச்சவினை உணர்த்தும் தொழில் பின்பும் நிகழும் பெற்றியன வாயின், எச்சவினையின் காலம் எதிர்வினதாக அறியப்படும். இந்த அடிப்படையில் செய்து, செயின் ஆகிய இருவாய்பாட்டு வினையெச்சங்களும் இறந்த

2. செய்தென வாய்பாட்டு எச்சங்கள்/தொடர்கள் செய்ததால், செய்தது போல் என்ற வாய்பாட்டு அமைப்புக்களுடன் பொருண்மை நிலையில் பொருந்துவதால், இந்த எச்சவினைகளை இறந்தகாலத்தனவாகக் கருதற்பாலனவாகும்.

3. இந்த நிலையில்கூட எச்சங்களின் பொருண்மையைக் குறிக்க வேண்டிய கடப்பாடில்லை.

காலத்தை உணர்த்துவனவாகக் கொள்ளப்படும்.[4] ஆனால் சொல்லி வைத்ததுபோல் உரையாசிரியர்களும், மரபிலக்கணிகளும் செயின் வாய்பாட்டு எச்சங்களை எதிர்காலப் பொருண்மையை உணர்த்து வதாகக் கொள்கின்றனர். மரபிலக்கணச் சிந்தனையில் விழுந்த ஓர் முடிச்சாகவே இதனைக் கருதவேண்டும். இத்தகைய சிந்தனைக்குக் காரணம் மரபிலக்கணிகள் தொடரனியலைப் பின்னணியாகக் கொண்டு கோட்பாட்டு நிலையில் வினையெச்சங்களை அணுகாமை யேயாகும்.

## 4.0. எச்சத்தொடரனில் எழுவாயின் நிகழ்ச்சி

வினையெச்சங்கள் தொடர்பாக மரபிலக்கணிகளும் உரையாசிரியர்களும் குறிப்பிடும் இரண்டாவது செய்தி எச்சங் களின் எழுவாயும், கொண்டு முடியும் வினைகளின் எழுவாயும் பற்றியதாகும். தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் குறிப்பிடும் ஒன்பது வகையான எச்சவினைகளுள் செய்து, செய்யூ, செய்பு ஆகிய மூன்றும், கொண்டு முடியும் வினையின் எழுவாயையே தம் எழுவாயாகக் கொள்ளும் என்றும் ஏனைய எச்சங்களின் எழுவாயானது கொண்டு முடியும் வினையின் எழுவாயினின்றும் மாறுபட்டும் மாறுபடாமலும் அமையும் என்றும் அறியப்படு கின்றது (தொல்.சொல்.சேனா. 230, 232). தொல்காப்பியத்தில் காணப்படும் வினையெச்சங்களின் எழுவாய் பற்றிய இந்த வரை யறையான்து பின்னர்த் தோன்றிய மரபிலக்கணங்களிலும் பொதுவாகப் பின்பற்றப்படுகின்றது. தொல்காப்பியத்தில் குறிக்கப் படாத வான், பான், பாக்கு வினையெச்சங்களும் இந்த வரை யறைக்கு உட்படுத்தப்படும் நிலையைப் பிந்திய இலக்கணங்களில் காணலாம் (நன்னூல். 344). எழுவாய் வரையறை பற்றிய சிந்தனைக்கு இந்தக் கட்டுரையில் நாம் முக்கியத்துவம் கொடுக்க வில்லையாதலின், இதுபற்றி நாம் விரிவாகப் பேச முற்படவில்லை.

## 5.0. முற்றெச்சம் – ஒரு கூடுதல் தடயம்

5.1. மரபிலக்கண நெறியில் அமைந்த ஆய்வில் ஒரு குறிப்பிடத் தக்க நிகழ்ச்சியாக அமைவது முற்றெச்சம் பற்றிய சிந்தனையாகும். இந்தச் சிந்தனைக்கு முதன்முதலாக வித்திட்டவர் தொல்காப்பியர் என்றாலும் எச்ச வாக்கியங்களில் முற்றெச்ச நிகழ்ச்சியினைப்

---

4. செய்பு, செய்யூ, செய்யா ஆகிய வாய்பாட்டு வினையெச்சங்களையும் இந்த அடிப்படையில் இறந்தகாலத்தனவாகக் கொள்ள வாய்ப்பு உண்டு. ஆனால் சொல்லியல் நிலையில் (Morphological Level) அவ்வாறு கொள்ள முடியாது.

பற்றி அழுத்தமாகச் சிந்தித்த பெருமை சேனாவரையரையும், நச்சினார்க்கினியரையே சாரும். இவர்களின் முற்றெச்ச ஆய்வுக்குப் பின்புலமாகத் தொல்காப்பியரின் பின்வரும் இரண்டு நூற்பாக்கள் அமைகின்றன.

(2) அவற்றுள்,
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர்
(தொல்.சொல்.சேனா. 204)

(3) வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய
(தொல்.சொல்.சேனா.457)

வினைகொண்டு முடியும் செய்கு வாய்பாட்டு வினைகள் பற்றி சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் நேர் எதிரான கருத்துக் களைக் கொள்கின்றனர். தமது விளக்கவுரையில் இது தொடர்பான செய்திகளைப் பூவராகம்பிள்ளை சுருக்கமாகப் பின்வருமாறு குறிப்பிடுவார்.

"வினையெச்சம் நிற்கவேண்டிய இடத்தில் வினைமுற்று நின்றால் அது எச்சமாகத் திரிந்து பொருளுணர்த்தும் என்பது சேனாவரையர் முதலிய சிலர் கொள்கை. இவர்கள் முற்றெச்சம் என்பர். அவ்விடத்து நிற்கவேண்டிய எச்சம் முற்றாகத் திரிந்து நின்றது என்பது உரையாசிரியர் முதலிய சிலர் கொள்கை. இவர்கள் வினையெச்சமுற்று என்பர் (தொல்.சொல்.சேனா. 457- விளக்கவுரை)."

சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இந்த வகையில் முரணி நிற்கும் போக்கினைக் கோபாலய்யர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"முற்றே எச்சமாய்த் திரியும் என்பது சேனாவரையர் முதலாயினர் கருத்து... எச்சமே முற்றாயிற்று என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இருவகையினருக்கும் சான்றுகள் உள. இருவர் மதமும் மறுக்கப்படா" (இலக்கண விளக்கம், சொல்லதிகாரம். 384. உரைவிளக்கம்).

கோபாலய்யரின் இந்தக் குறிப்பு இருவரையும் அணைத்துச் செல்வதாகக் காணப்படுகிறது. ஆனால் உண்மை என்பது எப்போதும் ஒன்றாகத்தான் இருக்கமுடியுமே தவிர பலவாக இருக்க முடியாது. ஒன்று, இருவரில் ஒருவரது கருத்து உண்மையாதல் வேண்டும்; அல்லது உண்மை என்பது இருவர் கருத்துக்கும் அப்பாற்பட்டதாக இருக்கவேண்டும். இந்த வகையில் சேனாவரையர், நச்சினார்க்கினியர் இருவரையும் நேரில் அறிந்துகொள்வது தவிர்க்க முடியாததாகின்றது.

5.2. வினைகொண்டு முடியும் செய்து வாய்பாட்டு வினையைப் பற்றிச் சேனாவரையர் பின்வருமாறு குறிப்பிடுவார்:

"காண்கு வந்தேன் என்ற வழிச் செய்கென் கிளவி வினை யெச்சமாய்த் திரிந்ததாயின் செய்தென் எச்சமாதற்கு ஏலாமையின் செயவென் எச்சமாய்த் திரிந்ததெனல் வேண்டும். வேண்டவே செயவென் எச்சத்திற்குரிய வினைமுதல்வினையும், பிறவினையும் இதுகொள்வான் செல்லும். வினைமுதல் வினையல்லது கொள்ளாமையிற் செயவென் எச்சமாய்த் திரிந்தது என்றல் பொருந்தாது. பிறிதாறு இன்மையின் முற்றுச் சொல்லாய் நின்றதெனவே படும். அதனால் அவ்வியல் (= முற்றாதல் தன்மை) திரியாதென்றார் என்பது. அல்லதூஉம் செய்கென் கிளவி சிறுபான்மையல்லது பெயர் கொள்ளாமையின் பெரும்பான்மை யாகிய வினைகோடல் அதற்கு இயல்பேயாம். ஆகவே அது திரிந்து வினை கொள்ளுமெனல் வேண்டாவாம். அதனாலும் முற்றாய் நின்று வினைகொண்டது என்றலே முறைமை என்றுணர்க. முற்றுச் சொற்றாம் வினையொடு முடியினும், முற்றுச் சொல் என்னும் முறைமையின் இறவா என்றார் பிறரும் எனக்கொள்க." (தொல்.சொல்.204.உரை).

5.3. சேனாவரையரின் இக்கூற்றினை நச்சினார்க்கினியர் பின்வருமாறு மறுப்பார்:

"முற்று எச்சமாய்த் திரிந்து அடுக்கியும் தனித்தும் வந்து வினைகோடல் ஆசிரியர்க்குக் கருத்தாயின், சிறுபான்மையாய் வினைகொள்ளும் முற்றிற்குச் சூத்திரம் செய்தாற்போல, முற்றுச் சொல் அடுக்கியும் அடுக்காதும் வந்து பெயரொடு முடிதற்கு அவைதாம், தத்தம் கிளவி என்று சூத்திரம் செய்தாற்போல முற்றுச் சொல்லே எச்சமாகி அடுக்கியும் தனித்தும் வினை கொள்ளும் என்றாற்போல ஒரு சூத்திரம் செய்திலராம். அங்ஙனம் பெரும்பான்மையும் வழங்குவதோர் இலக்கணத்திற்குச் சூத்திரம் செய்யாமையின் அவர்க்கு அது கருத்தன்மை உணர்க. அன்றியும், வினையெச்சம் முற்றாய்த் திரிந்து பின்னும் அதன் பொருள் உணர்த்தி நிற்றல் 'இன்றி என்னும் வினையெஞ்சிறுதி' என்னும் சூத்திரத்தாலும் உணர்க. இவ்விலக்கணத்தினது நுண்மையை உணர்தலாற்றாப் பின்னுள்ளோர் 'முற்றே எச்சம் ஆகலும் உரித்தே' எனச் சூத்திரம் செய்தார். அவர் கருத்தைப் பற்றிச் சேனாவரையரும் 'முற்றெச்சமாம்' என்றார். அது பொருந்தாமை இக்கூறிய வாற்றானும், சான்றோர் செய்யுட்கு முன்னுள்ளோர் கூறிய உரைகளாலும் உணர்க" (தொல்.சொல். 457).

5.4. சேனாவரையர், நச்சினார்க்கினியர் இருவர் கருத்துக்களின் ஏற்புடைமை பற்றி இங்கே சற்று விரிவாய்ச் சிந்திப்பது இன்றி யமையாததாகின்றது.

5.41. வினைகொண்டு முடியும் செய்கென் கிளவியைச் செயவென் எச்சத்தின் தன்மையதாகக் கொள்வதற்கில்லை என்பதற்குச் சேனாவரையர் அமைக்கும் அரண் வலுவுள்ளதாகத் தோன்ற வில்லை. செய்கு வாய்பாட்டு வினையானது தன்மை ஒருமை வினையாதலால் அதன் எழுவாயும், அதனை முடிக்கும் வினையின் எழுவாயும் ஒன்றாகவே இருத்தல் தவிர்க்க முடியாத ஒன்றாகின்றது. செயவென் எச்சம் பொது வினையாய் அமைவதால் அதன் எழுவாயும், அதனை முடிக்கும் வினையின் எழுவாயும் ஒன்றாகவோ மாறுபட்டோ இருக்கலாம். ஆகவே வினைகொண்டு முடியும் செய்கென் வினையை முற்றாகக் கொள்வதற்கு இந்த வாதத்தில் அழுத்தம் இருப்பதாகக் கருதமுடியாது. செய்கு வாய்பாட்டு வினை சிறப்பு வினை என்பதில் ஐயமில்லை. சிறப்பு வினையாதல் பற்றி அது பயனிலையாக நிகழவல்லது என்பதிலும் ஐயமில்லை. ஆனால் சிறப்பு வினையானது பயனிலையாகத்தான் நிகழவேண்டும் என்று கடப்பாடில்லை. எச்சமாகவும்அது நிகழவல்லது. அவ்வாறு நிகழும்போது அதைப் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த முற்றுவினையாகக் கொள்வதற்கு வாய்ப்பில்லை. எச்சவினையின் இடத்தில் நிகழும் சிறப்புவினை எச்சவினையாகவே கருதப் பெறும். அவ்வாறின்றி அங்கேயும் அதனை முற்று வினையாகக் கொண்டால் வினையடைக்கும் பயனிலைக்கும் உள்ள செயற் பாட்டு வேறுபாடு (Functional Contrast) பொருளற்றதாகிவிடுகின்றது.

5.4.2. வினைகொண்டு முடியும் செய்கென் வினையானது முற்றுத் தன்மையை இழந்த சிறப்புவினை என்பதே உண்மை. *அவ்வியல் திரியாது* என்ற தொல்காப்பியர் கூற்றை வினைகொண்டு முடியும் செய்கென் கிளவி முற்றாதல் தன்மையினின்றும் திரியாது என்று விளக்குவதைவிட, வினைகொண்டு முடியும் செய்கென் கிளவி சிறப்பு வினையாதல் தன்மையினின்றும் மாறுபடாது என்று விளக்குவதே பொருத்தமாகப்படுகின்றது. இதனை அரண் செய்யும் வகையில் *செய்கென்* **கிளவி வினையொடு முடியினும் அவ்வியல் திரியாது...** (தொல். சொல். சேனா. 204) என்ற நூற்பாவுக்கு முந்திய நூற்பா தன்மை ஒருமை விகுதிகளைத் தொகுத்துக்கூறி, *தன்வினையுரைக்கும் தன்மைச் சொல்லே* என்று முடிகிறது. இதனின்றும் அவ்வியல் திரியாது என்பது தன்வினை யுரைக்கும்

தன்மைச் சொல்லாதல் இயல்பினின்றும் திரியாது என்று விளக்கம் பெறுவதே பொருத்தமாய் அமையும்.[5] செய்கென் கிளவி முற்றாய் நிகழ்கையில் பயனிலையாகவும், வினைகொண்டு முடிகையில் எச்சமாகவும் அதாவது வினையடையாகவும் நிகழ வல்லது என்று கொள்வதில் சிக்கல் ஏதுமில்லை. வினை கொண்டு முடியும்போதும் பயனிலையாகச் செயல்படும்போதும் செய்கு வினைகள் முற்றாகவே அமையும் என்று வாதிட முற்படுவது இலக்கணச் செயற்பாடுகளின் முக்கியத்துவத்தை நாம் எந்த அளவுக்குப் புறக்கணிக்கிறோம் என்பதையே காட்டுகின்றது.

5.5. இந்தக்கட்டத்தில் முற்று, எச்சம் பற்றிய சேனாவரையரின் சிந்தனையும் கருத்தில் கொள்ளத்தக்கதாகின்றது. இவை இரண்டினையும் அவர் இவ்வாறு விளக்குவார்:

"முற்றுச் சொல்லிற்கும் எச்சத்திற்கும் வேற்றுமை யாதெனின் பிறிதோர் சொல்லோடு இயையாது தாமே தொடராதற்கு ஏற்கும் வினைச்சொல் முற்றாம். பிறிதோர் சொற் பற்றியல்லாது நிற்றல் ஆற்றா வினைச்சொல் எச்சமாம். இதுதம்முள் வேற்றுமை என்க." (தொல்.சொல். 235. உரை).

5.6. முப்பது நூற்பாக்களுக்கு முன்னால் வினைகொண்டு முடியும் செய்கென் கிளவியை முற்றாக நிறுவமுயலும் சேனாவரையரின் முயற்சியை, "பிறிதோர் சொற்பற்றியல்லது நிற்றல் ஆற்றா வினைச்சொல் எச்சமாம்" என்ற கூற்றின் மூலம் சேனாவரையரே முறியடித்துவிடுகிறார். வினைகொண்டு முடியும் செய்கென் கிளவியைச் சேனாவரையர் சிறப்புவினையாகக் கொள்கிறார் என்று கொண்டால் முற்றெச்சம் பற்றிய அவர் கருத்து உடன்படக்கூடிய ஒன்றேயாகும்.

---

5. *அவ்வியல் திரியாது* என்பதை இவ்வாறு விளக்குவதற்கு இன்னொரு காரணமும் உண்டு. எச்சங்கள் அனைத்தும் தமிழில் பொதுவினை களாகவே அமைகின்றன. பயனிலையாகச் செயல்படும் சிறப்பு வினைகள் எச்சங்களாகச் செயல்படும்போது அவை சிறப்புவினைத் தன்மையை இழந்துவிடுகின்றனவா இல்லையா என்பதைத் தெளிவுபடுத்தியாக வேண்டும். எச்சங்களாகச் செயல்படும்போதும் அவை சிறப்புவினைத் தன்மையைத் தக்கவைத்துக் கொள்கின்றன என்பதையே *அவ்வியல் திரியாது* என்பது தெளிவுபடுத்துகிறது என்று கொள்வது பொருத்தமாய் அமைகின்றது. இதனைக் கருத்தில்கொண்டு, *வினைமுற்றே வினையெச்ச மாகலும், குறிப்பு முற்று ஈரெச்சமாகலும் உளவே* (நன்னூல் 351) என்ற நூற்பாவில் நிகழும் வினைமுற்று, குறிப்புமுற்று ஆகிய இரண்டினையும் சிறப்பு வினைமுற்று, சிறப்புக் குறிப்பு முற்று என்று விளங்கிக் கொள்வது பொருத்தமாக இருக்கும்.

5.7. இனி நச்சினார்க்கினியரைப் பார்ப்போம். இவரும் இலக்கணச் செயற்பாடுகளைப் புறக்கணித்துவிட்டே தமது கருத்தை நிறுவ முற்படுகின்றார். தொல்காப்பியர், முற்று எச்சமாய்த் திரியவல்லது என்று சூத்திரம் செய்யவில்லை என்பதைக் காரணம் காட்டி எச்சம் முற்றாய்த் திரியவல்லது என்று தம்கருத்தை நச்சினார்க்கினியர் நிலைநாட்ட முற்படுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. சேனாவரையரின் கருத்துக்கு இசைவாகத் தொல்காப்பியர் சூத்திரம் செய்யவில்லை என்பது நச்சினார்க்கினியரின் அணுகுமுறையை நியாயப்படுத்துவதாகாது. *இன்றி* என்னும் வினையெச்சம் *இன்று* எனத்திரிந்து எச்சமாகச் செயல்படும் என்ற தொல்காப்பியச் செய்தியைக் கொண்டு நச்சினார்க்கினியர் தம் கருத்தை வலியுறுத்த முற்படுவதும் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. *இன்றி* என்னும் வினையெச்சம் நிகழும் இடத்தில் *இன்று* என்பது உறழ்ந்து எச்சமாக நிகழ வல்லது என்றும் ஏன் கொள்ளக்கூடாது என்ற வினா எழுமாயின் அதற்கு நச்சினார்க்கினியத்தில் பதில் இல்லை. தொல்காப்பியர் *இன்றி* என்னும் கிளவி *இன்று* எனத்திரியும் என்று கூறுவதாலேயே அது வரலாற்று உண்மையாக இருக்க வேண்டும் என்று நியதியில்லை. தவிரவும், பழந்தமிழில் பெருவாரியாக எச்சங்கள் நிகழுமிடத்தில் சிறப்பு வினைகளும் நிகழும் நிலையே காணப் படுகின்றது. இங்கெல்லாம் எச்சம் சிறப்புவினையாகத் திரிந்தது என வாதிட முற்படுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. இந்த வகையில் சேனாவரையரின் அணுகுமுறை ஏற்புடையதாகத் தோன்றுகிறது. *அவ்வியல்திரியாது* என்னும் தொடருக்குச் சேனாவரையரைப் போலவே நச்சினார்க்கினியரும் முந்தைய நூற்பாவின் ஈற்றடியைக் கருத்தில்கொண்டு உரை வகுக்க முற்படாமையே இந்தக் குழப்பத்திற்குக் காரணம்.

## 6.0. பெயரெச்சத் தொடரனில் முற்றெச்ச நிகழ்ச்சி

6.1. எச்சவினைகள் பற்றிய ஒரு தெளிவான சிந்தனையைக் கோட்பாட்டு அடிப்படையில் மேற்கொள்வதற்கு முன் பெயரெஞ்சு கிளவிகள் பற்றியும் ஓரளவுக்குச் சிந்திப்பது வேண்டற்பாலதாகும். வினையெஞ்சு கிளவிகளைப் பற்றி விரிவாகப் பேசிய அளவுக்கு இலக்கணிகளும் உரையாசிரியர்களும் பெயரெஞ்சு கிளவிகளைப் பற்றிப் பேசவில்லை. பெயரெஞ்சு கிளவிகள் பற்றிய சிந்தனை ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள்ளேயே நின்றுவிட்ட போதிலும் நன்னூலார் குறிப்பு முற்றானது வினையெச்சமாகவும் பெயரெச்சமாகவும் செயல்படும் பெற்றியது என்ற உண்மையை

முதன்முதலாக உணர்த்துகிறார் (நூற்பா. 351). தெரிநிலை வினைமுற்றும் இவ்வாறே ஈரெச்சமாக நிகழும் பெற்றியது என்ற செய்தியை மரபிலக்கணிகளாகட்டும், உரையாசிரியர்களாகட்டும் உணர்ந்ததாகவோ, உணர்த்தியதாகவோ தெரியவில்லை. இடைக்கால இலக்கியங்களில் சிறப்பு வினைகளாகிய தெரிநிலை வினைகளும் குறிப்பு முற்றுக்களைப் போல் பெயரைக்கொண்டு முடியும் எச்சங்களாய் நிகழும் போக்கு காணப்படுகின்றது. பின் வரும் எடுத்துக்காட்டுகள் இந்த வகையில் கருத்தில் கொள்ளற் பாலனவாகும்.

(4) பூத்தன வேங்கைமேற் பொலிந்து கார்நினைந்து
ஏத்தரு மயிற்குழாம்.... (சீவகசிந்தாமணி 87. 3, 4)

(5) கொணர்ந்தன பண்டம் விற்ற கொழுநிதிக் குப்பையெல்லாம்
உணர்ந்துதன் மதலையேற்றி யொருப்படுத் தூர்க்கு மீள்வான்
(சீவகசிந்தாமணி 505. 3, 4)

(6) உலக்கையால் உதிர்ந்தன தெங்கின் ஒண்பழம்
நிலத்தவை சொரிதலின் வெரீஇய மஞ்ஞை...
(சீவகசிந்தாமணி 92. 2, 3)

(7) மைந்தரைப் பார்ப்பன மாமகண் மாக்குழாம்
சந்தன மேய்வன தவழ்மதக் களிற்றினம்
அந்தழைக் காடெலாம் திளைப்பவா மானினம்
சிந்தவால் வெடிப்பன சிங்கமெங் கும்உள
(சீவகசிந்தாமணி 1902)

(8) கொம்மை யார்ந்தன கொடிபட வெழுதின குவிந்த
அம்மை யார்ந்தன வழகிய மணிவட முடைய
வெம்மை செய்வன விழுத்தகு முலைத்தட முடைய
பொம்மெல் ஓதியர் பொழிமின்னுக் கொடியென விழிந்தார்
(சீவகசிந்தாமணி 2364)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பூத்தன, கொணர்ந்தன, உதிர்ந்தன, மேய்வன, ஆர்ந்தன, செய்வன* ஆகிய சிறப்பு வினைகள் பெயர்கொண்டு முடியும் எச்சவினைகளாகும்.

6.2. பெயரெஞ்சு கிளவிகள் தலைமைப் பெயரையடுத்து நிகழும்போது அவற்றின் பொதுவினைத்தன்மை மாறி, சிறப்பு வினையாக அமையும் போக்கும் தமிழில் காணப்படுகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(9) அருவி, தாழ்ந்து வீழ்ந்தவை முழவிற் றதும்பின
(சீவகசிந்தாமணி 1560. 2, 3)

(10) வீழ்ந்து மயில்போல் விசயை கிடந்தாளை
(சீவகசிந்தாமணி 1810. 1)

*(11) பொருங்களத் தாடவர் பொருவில் பைந்தலை*
*அரும்பெறற் கண்ணியோ டற்று வீழ்வன*
*கருங்கனிப் பெண்ணையங் கானங் கால்பொர*
*இருங்கனி சொரிவன போன்ற வென்பவே*
*(சீவகசிந்தாமணி 2227)*

பெயரெஞ்சு கிளவிகளின் இந்த இருவகை நிலைகளைப் பற்றியும் மரபிலக்கணிகளும் உரையாசிரியர்களும் ஏதும் பேசியதாகக் குறிப்புக்கள் காணப்படவில்லை. பெயரைத் தழுவி அடையாகச் செயல்படும் வினைகள் சிறப்புவினைகளாக அமையும் போக்கினையும், தலைமைப் பெயரையடுத்து நிகழ்கையில் பெயரெஞ்சு கிளவிகள் சிறப்புவினைகளாக நிகழும் பாங்கினையும் பார்க்கும்போது பொதுவினைகளும், சிறப்பு வினைகளும் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) அமைந்து ஒரு நிகரனவாய்க் கொள்ளத்தக்கனவாகின்றன.

## *7.0. பெயரெச்சம் பற்றிய ஒரு புதிய சிந்தனை*

7.1. தொல்காப்பியம் செய்த, செய்யும் (சொல்.சேனா.234) ஆகிய இருவகை வாய்பாட்டுப் பெயரெஞ்சு கிளவிகளைக் குறிப்பிடு கின்றது.[6] பின்னர் வந்த மரபிலக்கணிகளும், உரையாசிரியர்களும் செய்கின்ற என்ற வாய்பாட்டுப் பெயரெஞ்சு கிளவிகளையும் சேர்த்துக் கொண்டனர். இதைத்தவிர பல நூற்றாண்டுகள் வரை புதிய சிந்தனை ஏதும் பெயரெச்சம் பற்றி மரபிலக்கண உலகில் அரும்பவில்லை. பதினேழாம் நூற்றாண்டில் ஒரு புதிய வாய்பாட்டுப் பெயரெச்சம் பற்றிய சிந்தனை தளிர்விடுகின்றது. பிரயோக விவேகம் என்ற இலக்கண நூலின் ஆசிரியராகிய சுப்ரமணிய தீட்சிதர் முதன்முதலாக ஒரு புதிய வாய்பாட்டுப் பெயரெச்சத்தினைத் தம் உரைச் சூத்திரத்தில் பின்வருமாறு அறிமுகப்படுத்துகிறார்.

“பொருள் செயல் வகை, வினைசெயல் வகை, தோன்றலாறே, உயிர்த்தலாறே என்பனவற்றுள் செயல், தோன்றல், உயிர்த்தல் என்பன பெயரெச்சமாம். அவை பொருள் செய்யும் வகை, வினை

---

6. *உம்முந் தாகும் இடனுமா ருண்டே* (தொல். சொல். சேனா. 292) என்ற நூற்பா உணர்த்தும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளை உரை யாசிரியர்கள் பெயரெச்ச வினைகளாகக் கொள்கின்றனர். இந்நூற் பாவுக்கு உரைவகுக்கையில் ‘இடனுமாருண்டே யென்றது, இத்திரிபு பெயரெச்சத்திற்கீறாய வழியென்பது கருதிப்போலும்’ என்று சேனாவரையர் குறிப்பிடுவார். ஆனால் பெயரெச்ச வாய்பாடுகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் செய்யுந்து வாய்பாட்டு வினைகளைத் தொல்காப்பியர் கருத்தில் கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்க தாகும்.

செய்யும் வகை, தோன்று நெறி, உயிர்க்கு நெறி எனப் பொருள் விரிதலின் என்க" (பிரயோகவிவேகம், 38, உரைச்சூத்திரம்).

7.2. சுப்ரமணிய தீட்சிதரால் சுட்டப்பெறும் இந்தச் செயல் வாய்பாட்டுப் பெயரெச்சங்களைப் பற்றி அவரது சமகாலத் தவராகிய இலக்கணக்கொத்து ஆசிரியர் சாமிநாத தேசிகரும் குறிப்பிடுகிறார். பெயரெச்சம் பற்றிய கோட்பாட்டு அடிப்படை யிலான சிந்தனையைச் செம்மைப்படுத்திக்கொள்ள பெயரெச்சம் பற்றிய இந்தப் புதிய வாய்பாடு பெரிதும் துணைபுரிகிறது.

## 8.0. பயனிலையாகும் செயல் வாய்பாட்டு வினைகள்

8.1. செயல் வாய்பாட்டு வினைகள் பெரும்பாலும் வியங்கோட் பொருண்மையை உணர்த்தும் பயனிலைகளாகவும் பழந்தமிழில் நிகழ்கின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இதனைப் புலப்படுத்தும்..

(12) இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்

(தொல்.சொல்.சேனா. 19)

(13) செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்

(தொல்.சொல்.சேனா. 20)

வியங்கோட் பொருண்மையை உணர்த்தாமல் சிறப்பு வினைக்கு நிகரான பொதுவினைப் பயனிலைகளாகவும் இந்த வாய்பாட்டு வினைகள் செயல்படுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களின் வாயிலாக அறியலாம்.

(14) அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்

(தொல். சொல். சேனா. 442)

(15) எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்

(சொல். சொல். சேனா. 284)

செயல்வாய்பாட்டு வினைகள் பயனிலையாகவும், பெயரடை யாகவும் செயல்படும் தன்மையினைக் கருத்தில் கொண்டு, வினைகளின் செயற்பாடு சொல்லியல் மட்டத்தில் அல்லாமல் தொடரனியல் மட்டத்தில் குறிக்கத்தக்கது என்று துணியலாம். இக்கூற்றானது செய்தல் வாய்பாட்டு வினைகளுக்கும் பொருந்தும்.

## 9.0. சிவஞான முனிவரின் நேரிய சிந்தனை

9.1. வினைகொண்டு முடியும் வினைகளும், பெயர்கொண்டு முடியும் வினைகளும் நிகழும் இடங்களில் பயனிலையாக நிகழவல்ல வினைகளும் நிகழ்ந்து அவற்றின் செயற்பாட்டினை மேற்கொள்ளும் தன்மையினைக் கருத்தில் கொண்டுதான்

போலும் நன்னூலின் உரையாசிரியராகிய சிவஞான முனிவர் எச்சங்களைப் பற்றிப் பின்வருமாறு பேசுகிறார்.

"உண்டான் சாத்தன் ஊர்க்குப் போனான் என்புழி உண்ட சாத்தன் ஊர்க்குப் போனான் எனப் பொருள்படுதலின் வினைமுற்றுப் பெயரெச்சமாதலும் உளவெனவும், வெறுத்த ஞானி வீட்டையடைந்தான், சாத்தன் உழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி, சாத்தன் உழுதான் எனப் பொருள்பட்டு ஈரெச்சம் முற்றாதல் உளவெனவும்... கொள்க" (நன்னூல். 351 உரை).

9.2. இதனைக் கருத்தில் கொண்டே சாமிநாத தேசிகரும் *இருவகை முற்றும் ஈரெச்சம் ஆகலும், இருவகை எச்சமும் முற்றே யாகலும், உளவென மொழிப ஒரோவழிப் புலவர்* (இலக்கணக் கொத்து 82) என்று சூத்திரம் செய்துப் போந்தார். எச்சங்கள் முற்றுக்களின் விகாரம் என்றும் கொள்வர் சிலர் என்று சாமிநாத தேசிகர் பிறிதோரிடத்தில் குறிப்பிடுகிறார் (இலக்கணக்கொத்து 84). இதனை விளக்குகையில் 'உண்டான் சாத்தன், உழுதான் வந்தான் என்பன விகாரப்பட்டு உண்ட சாத்தன், உழுது வந்தான் என நிற்றலால் எச்சம் என்று ஒன்று இல்லை, விகார முற்றே' என்பர் எனக் குறிப்பிடுவார் தேசிகர். இதன்மூலம் மரபிலக்கண நெறியில் எச்சவினைகளையும் பயனிலைகளாக நிகழும் வினை களையும் ஒருங்கிணைக்க ஓரளவுக்கு முயன்றிருப்பது புலனாகின்றது.

## 10.0. எச்ச வினையும் முற்று வினையே

10.1. வினையெச்சங்களும் பெயரெச்சங்களும் நிகழுமிடத்தில் பயனிலையாக நிகழவல்ல வினைகளும் நிகழும் போக்கு கோட் பாட்டு நிலையில் ஓர் அரிய உண்மையைப் புலப்படுத்துவதாய் உள்ளது. எச்சவினைகள், பயனிலை வினைகளின் விகாரங்கள் என்பதே இவ்வரிய உண்மையாகும். இவ்விருவகை வினைகளும் துணைநிலை வழக்கினவாய் நிகழ்தல் இதனை மேலும் வலுப் படுத்துகிறது. இந்த வகையில் சிவஞான முனிவரின் எச்சவினைக் கோட்பாடு தமிழ் இலக்கண வரலாற்றில் ஒரு புதிய சிந்தனையாகக் கருதத்தக்கதாகும். ஆயினும், பயனிலை வினைகள் வினையெச்சங் களாய் அமைகையில் நிகழும் பின்விளைவுகளைப் பற்றி அவர் கருத்தில் கொள்ளவில்லை. பயனிலை வினைகள் வினையெச்சங் களாய்த் துணைநிலை வழக்கில் நிகழ்கையில் ஏற்படும் பாதிப்பை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் தெளிவுபடுத்தலாம்.

10.2. செய்யியர், செய்யிய ஆகிய இரண்டு வாய்பாட்டு வினைகளும் பய்னிலைச் செயற்பாட்டில் நிகழ்கையில் அவை வியங்கோட் பொருண்மையை உணர்த்துகின்றன. ஆனால் எச்ச

வாக்கியங்களில் நிகழும்போது இவ்வாய்பாட்டு வினைகள் மேற்படி பொருண்மையை இழந்துவிடுகின்றன. இதனின்றும் ஓர் உண்மை பெறப்படுகின்றது. பயனிலை வினைகள் வினையெச்சச் செயற்பாட்டில் நிகழ்கையில், பயனிலைச் செயற்பாட்டில் போற்றப்படும் இலக்கணப் பண்புகள் பிந்திய செயற்பாட்டில் போற்றப்படுவதில்லை. செயின் வாய்பாட்டு எச்சவினைகள்இந்த வகையில் கருத்திற் கொள்ளற்பாலனவாகும். இவ்வாய்பாட்டு வினைகளின் இலக்கணப் பொருண்மை இவற்றுக்கு நிகரான பயனிலை வினைகளில் காணமுடியாத ஒன்றாகும். பயனிலை வினைகளில் இறந்தகாலப் பொருண்மையை உணர்த்தும் இன்னென் கிளவி செயின் வாய்பாட்டு வினைகளில் நிபந்தனைப் பொருண்மையைக் குறிப்பதாகின்றது.[7] அடிப்படையில் இந்த வாய்பாட்டு வினைகள் இறந்தகால வினைகளாகும். இதனை ஓர் தொடரனியற் சான்றின் மூலம் உறுதிப்படுத்திக் கொள்ளலாம். ஓர் முற்றெச்ச வாக்கியத்தில் (Complex Sentence) எச்சவினை உணர்த்தும் தொழில் முன்னும் அவ்வெச்ச வினையை முடிக்கும் வினை உணர்த்தும் தொழில் பின்னுமாக நிகழும் பெற்றியனவாயின் முந்தியது தொழில் நிகழ்ச்சி வகையில் இறந்தகாலத்தினதாகின்றது. செயின் வாய்பாட்டு வினைகள் உணர்த்தும் தொழில் அவற்றை முடிக்கும் வினைகள் உணர்த்தும் தொழிலுக்கு முன்னதாக நிகழத்தக்கவையாகலின் மேற்படி எச்ச வினைகள் இறந்தகாலத் தன்மையனவாகக் கருதப்பெறும். இந்த அடிப்படையில்தான் செய்து வாய்பாட்டு எச்சங்களும் இறந்தகால வினைகளாகக் கொள்ளத்தக்கவையாகின்றன.

---

7. இந்தப் பொருண்மையை இன்னென் கிளவி உணர்த்துவதாகக் கொள்வதைவிடத் தொடரனியற் சூழல் (Syntactic context) இப் பொருண்மைக்குக் காரணமாகிறது என்று கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. இது உண்மையாயின், செயின் வாய்பாட்டு வினைகளில் அமைந்த இன்னென் கிளவி இறப்புப் பொருண்மையை உணர்த்து வதாகவே கொள்ளப்பெறும். ஆயினும் *இன்* என்பதில் இகரம் மட்டுமே இறந்தகாலப் பொருண்மையை உணர்த்துவதாகத் தோன்றுகிறது. தெலுங்கில் நிகழும் பாடெனு என்ற வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினைகள் **பாடியென்(உ)* என்ற வாய்பாட்டு வினைகளின் திரிபாகும். தெலுங்கிலும் தமிழிலும் பால் மற்றும் தன்மை முன்னிலை விகுதிகள், அகரவிகுதி ஆகியவற்றின் முன் நிகழும் *பாடின்* – வாய்பாட்டு இறந்தகால விகுதிகள் *பாடியெனு என்ற வாய்பாட்டு வினைகளினின்றும் தோன்றி அமைந்தவையாகும் அதனால்தான் பாடி வாய்பாட்டு வினையெச்சங்களைப்போல் பாடின் வாய்பாட்டு வினைகள் செயல்படவில்லை. கருதுக. *தேடி வந்தேன்* – இது ஏற்புடையது. **தேடின் வந்தேன்* – இது ஏற்புடையதல்ல.

10.3. தொழில் நிகழ்ச்சி அடிப்படையில் எச்சவினைகளின் காலம் அமையப்பெறுவதால் அவ்வினைகளின் அடிப்படைக் காலப் பொருண்மை சொல்லியல் மட்டத்தில் உள்ளவாறே குறிக்கப் பெறும். பயனிலை வினைகள் துணைநிலை வழக்கில் எச்ச வினைகளாய் அமைகையில் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த காலத்துக்கேற்ப எச்சவினைச் செயற்பாட்டினை அமைத்துக் கொள்கின்றன. இதனை இப்படி விளக்கலாம்: பயனிலை வினை யுணர்த்தும் தொழில் முன்னும், எச்சவினையின் தொழில் பின்னுமாக நிகழுமாயின் பிந்தியது எதிர்வு அல்லது ஏவல் கண்ணிய வியங்கோட் பொருண்மையை உணர்த்தும் சொல்லியல் வினைகளினின்றும் தருவிக்கப்படும். செய, செய்யிய(ர்) வாய்பாட்டு எச்சவினைகள் இந்த வகையில் தோன்றி நிகழ்பவை யாகும். மாறாக, எச்சவினையின் தொழில்முன்னும் பயனிலை வினையின் தொழில்பின்னுமாக நிகழுமாயின், முந்தியது இறந்த காலம் உணர்த்தும் சொல்லியல் வினைகளினின்றும் தருவிக்கப் படும். இந்த வகையில் அமைந்தவையே செய்து மற்றும் செயின் வாய்பாட்டு எச்சவினைகள். வினையெச்சங்கள் அனைத்தும் தொடரனியல் வினைகள் (Syntactic Verbs) ஆகும். ஆனால் பயனிலை வினைகள் சொல்லியல் வினைகள். எச்சவினைகளாகிய தொடரனியல் வினைகள் மொழியில் திடுதிப்பென்று தோன்றியவை அல்ல. அவை அடிப்படையில் சொல்லியல் வினைகளாய் அமைந்து, பயனிலைச் செயற்பாட்டில் நிகழ்ந்து காலவெள்ளத்தில் சிக்கித் தொடரனியல் வினைகளாக மாறியவை என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். சங்கர நமச்சிவாயரின் நன்னூல் உரையைச் செப்பம் செய்த சிவஞான முனிவர் ஒருவர் மட்டுமே இந்த உண்மையை முதன்முதலாக இலைமறைகாயாக உணர்ந்ததாகத் தோன்றுகிறது. சொல்லியல் வினைகள் தொடரனியல் வினைகளாக அமைகையில் இலக்கண நிலையில் ஏற்படும் மாறுதல்கள் எச்சவினைக் கோட்பாட்டுக்குப் புறம்பானவையல்ல. மரபிலக்கணிகளும், உரையாசிரியர்களும் எச்சவினைகளின் இந்தப் பரிமாணத்தைக் கோட்பாட்டு நிலையில் சிந்திக்க முற்படவில்லை. ஆனால் இத்தகைய சிந்தனைக்குத் தேவையான அடிப்படைத் தரவுகளைப் போதுமான அளவுக்கு இவர்கள் திரட்டித் தந்துள்ளனர் என்பதை மறுப்பதற்கில்லை.



# 14. ஒரு பொதுவினையும் ஒரு கருதுகோளும்

## *1.0* ஆய்வுக்களம்

*1.1* பழந்தமிழில் செய்த வாய்பாட்டு வினைகள் சிறப்பு வினைகளாய் அமைந்து பயனிலையாகவும், பொது வினைகளாய் அமைந்து பெயரெச்சமாகவும் செயல்படவல்லவையாகும். பயனிலையாகச் செயல்படுகையில் இவ்வாய்பாட்டு வினைகள் அஃறிணைப் பன்மைக்கு உரியனவாகின்றன. எ-டு: *யானைகள் மெல்ல நடந்த* 'யானைகள்மெல்ல நடந்தன'. இக்காலத்தமிழில் மேற்படி வாய்பாட்டு வினைகள் இருவகைச் செயற்பாட்டில் அமையும் நிலை காணப்படவில்லை. செய்த வாய்பாட்டு வினைகள் பெயரெச்சமாகச் செயல்படுதலே இன்றைய தமிழில் காணப்படும் நிலையாகும். எ-டு. *மெல்ல நடந்த யானைகள்*. இது ஒரு தெளிவான நிகழ்ச்சியாக இருந்தபோதிலும் பின்வரும் வாக்கிய அமைப்புக்களில் காணப்படும் செய்த வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாடு திகைப்பூட்டுவதாய்த் தோன்றுகிறது.

(1) வள்ளுவர் *நினைத்த மாதிரி* இன்றைய சமுதாயம் அமையவில்லை.

(2) அமைச்சர் *வந்த பிறகு* விழா தொடங்கியது

இந்த இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் நிகழும் *நினைத்த, வந்த* ஆகிய செய்த வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாடு (Grammatical Function) மயக்கந்தருவதாய் உள்ளது. முதல் பார்வையில் இவ்வினைகள் பெயரெச்சச் செயற்பாட்டில் நிகழ்வதுபோல் தோன்றுகின்றன. முதல் எடுத்துக்காட்டில் இது ஓரளவு உண்மை போலவும் தோன்றலாம். ஏனெனில், *மாதிரி* என்னும் கிளவி பெயராய் அமையும் நிலையைத் தமிழில் காணலாம். இரண்டாம் எடுத்துக்காட்டில் நிகழும் *பிறகு* என்னும் கிளவியைப் பெயராகக் கொள்வதற்கு வாய்ப்பில்லை. காரணம், *அமைச்சர் வந்த வண்டி* என்பதுபோல் *அமைச்சர் வந்த பிறகு* என்பது பெயர்த்தொடராக அமைவதில்லை. தவிரவும், இலக்கணச் செயற்பாடு என்று எடுத்துக்கொண்டால்,

*பிறகு* என்னும் கிளவி வினையெச்சமாகவே செயல்படுகின்றது (தொல். சொல். சேனா. 229). தமிழ் வாக்கிய அமைப்பில் பெய ரெச்சம் வினையெச்சத்தை அவாவி நிற்பதில்லை. எடுத்துக் காட்டாக, *முருகன் வரைந்த கொடுத்து ஓவியம்* என்ற வாக்கிய அமைப்பு இலக்கண அமைதியுடையதன்று. மாறாக, *முருகன் வரைந்து கொடுத்த ஓவியம்* என்ற அமைப்பு ஏற்புடையதாகின்றது.

1.2. பெயரெச்சம் தமிழில் வினையெச்சத்தை அவாவி நிற்ப தில்லை என்ற கூற்று, முதல் எடுத்துக்காட்டுக்கும் பொருந்தும். இந்த எடுத்துக்காட்டில், *மாதிரி* என்னும் கிளவியானது வினை யெச்சச் செயற்பாட்டில்நிகழ்வதாகக் கொள்வதே பொருத்த மாகும். ஏனெனில், இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *வள்ளுவர் நினைத்த மாதிரி* என்ற அமைப்பினை *வள்ளுவர் நினைத்த சமுதாயம்* என்ற பெயர்த்தொடரின் இலக்கணப் பண்புகளுக்கு உரியதாகக் கொள்ள முடியாது. அதாவது, பிந்தியது எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய இலக்கணச் செயற்பாடுகளை மேற்கொள்வதைப்போல், முந்தியது இத்தகைய செயற்பாடுகளை மேற்கொள்வதில்லை. வேறு சில சான்றுகளும் முதல் எடுத்துக் காட்டில் நிகழும் *மாதிரி* என்னும் கிளவியை வினையெச்சச் செயற்பாட்டினதாகக் கொள்ள வகை செய்கின்றன. பொருண்மை நிலையில் முதல் எடுத்துக்காட்டில் அமைந்த வாக்கிய அமைப்பும் கீழே குறிக்கப்பெற்றுள்ள வாக்கிய அமைப்புக்களும் ஒரு நிகரனவாகின்றன.

(3) வள்ளுவர் நினைத்தது மாதிரி இன்றைய சமுதாயம் அமையவில்லை.

(4) வள்ளுவர் நினைத்தது போல் இன்றைய சமுதாயம் அமையவில்லை.

எடுத்துக்காட்டு (3)-இல் நிகழும் *நினைத்தது* என்னும் வினை யமைப்பானது பெயரெச்சமாகக் கொள்ளத்தக்கதன்று. எனவே, அதனையடுத்து நிகழும் *மாதிரி* என்னும் கிளவியைப் பெயராகக் கொள்ள வாய்ப்பில்லை. எடுத்துக்காட்டு (4)-இல் நிகழும் போலென் கிளவியானது *போல, போன்று* ஆகிய வினையெச்சக் கிளவிகளுடன் செம்மை வழக்கில் நிகழத்தக்கதாகும். இவ் வழக்கு நிலை மேற்படி எடுத்துக்காட்டில் அமைந்த போலென் கிளவி யானது வினையெச்சச் செயற்பாட்டினது என்பதைத் தெளிவு படுத்துகின்றது. இந்த எடுத்துக்காட்டில் நிகழும் போலென்கிளவி (3)-இல் நிகழும் *மாதிரி* என்பதுடன் செம்மை வழக்கிலும், முதல்

எடுத்துக்காட்டில் நிகழும் *மாதிரி* என்பதுடன் துணைநிலை வழக்கிலும் (Complementary Distribution) அமைகின்றது. இத்தகைய வழக்கு நிலைகளில் அமையும் உறுப்புக்களின் இலக்கணச் செயற்பாடு ஒன்றுக்கொன்று முரண்படுவதில்லை. எடுத்துக்காட்டு (4)-இல் நிகழும் போலென்கிளவி வினையெச்சச் செயற்பாட்டில் அமைவதால் அதனுடன் துணைநிலை வழக்கிலும், செம்மை வழக்கிலும் நிகழும் *மாதிரி* என்னும் கிளவியும் வினையெச்சச் செயற்பாட்டினதாகக் கொள்ளத்தக்கதா கின்றது.

1.3. இந்த ஆய்வினின்றும், முதல் எடுத்துக்காட்டில் நிகழும் *நினைத்த* என்னும் வினையமைப்பினைப் பெயரெச்சமாகக் கொள்வதற்கான வாய்ப்பு அடிபட்டுப் போகின்றது. இந்த வினையமைப்பும் எடுத்துக்காட்டு (3)-இல் நிகழும் *நினைத்தது* என்ற வினையமைப்பும் செம்மை வழக்கினவாகின்றன. இந்த வழக்கு நிலையானது *நினைத்த, நினைத்தது* ஆகிய இரண்டினையும் ஒரே வகையான இலக்கணச் செயற்பாட்டுக்கு உரியதாக்குகின்றது. எடுத்துக்காட்டு (3)-இல் *நினைத்தது* என்பதைப் பெயரெச்சமாகக் கொள்வதற்கில்லையாதலால் முதல் எடுத்துக்காட்டில் நிகழும் *நினைத்த* என்பதையும் பெயரெச்சமாகக் கொள்வதற்கில்லை. இதனின்றும், முதல் இரண்டு எடுத்துக்காட்டுக்களில் உள்ளது போன்ற வாக்கிய அமைப்புக்களில் அமைந்த எச்ச வாக்கியங் களில் நிகழும் செய்த வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாடு சிந்தனைக்குரியதென்பது புலனாகின்றது. *மாதிரி/ போல்* மற்றும் *பிறகு* ஆகிய வினையெச்சங்களைத் தழுவி நிற்கும் செய்த வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாட்டினைச் சுட்டுவதும், எச்ச வாக்கியங்கள் பற்றிய ஒரு பொதுவான கருது கோளை உருவாக்க முற்படுவதும் இக்கட்டுரையின் நோக்கங் களாகும்.

1.4. எடுத்துக்காட்டுக்கள் (1), (3), (4) ஆகியவற்றில் நிகழும் *மாதிரி, போல்* இரண்டும் சிதறிய வழக்கிலும், செம்மை வழக்கிலும் அமைவதால் போலென் கிளவியினைப் பற்றுக் கோடாகக் கொண்ட எச்சவாக்கியங்கள் பொருந்திய வாக்கிய அமைப்புக்களைப் பின்புலமாகக் கொண்டு நமது ஆய்வைத் தொடங்கலாம்.

## 2.0. சிறப்பும் பொதுவும் உறழ்தல்

தமிழில் போலென் கிளவியானது ஒப்புடைப் போலியாகவும், ஒப்பில் போலியாகவும் நிகழவல்லதாகும். இரண்டு நிலைகளிலும்

இக்கிளவியின் முன் நிகழும் வினைகளுள் *செய்தது* மற்றும் *செய்வது* வாய்பாட்டுப் பொது வினைகளும் அடங்கும். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(5) ஆசிரியர் செய்தது போல் மாணவர்களும் செய்தனர்.

(6) நாம் நினைப்பது போல் எதுவும் நடப்பதில்லை

பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் *போல* மற்றும் *போலென்* கிளவிகளின் முன் சிறப்பு வினைகளின் நிகழ்ச்சியை இயல்பாகக் காணமுடிகின்றது. இந்த வகையில் பழந்தமிழில் அமைந்த பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத் தக்கனவாகும்.

(7) ஊதையம் சேர்ப்பனை அலைப்பேன் போலவும் (கலி. 128. 19)

(8) கானலம் சேர்ப்பனைக் கண்டாய்போல
புதுவது கவினினை (கலி. 128. 6, 7)

(9) கடைக்கணால் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தானக் கள்வன் மகன் (கலி. 51. 15, 16)

(10) அவனை, மறந்தாள்போல் ஆலிநகூஉம் (கலி. 145. 8, 9)

(11) நீர்மலி கரகம்போல் பழம்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்கும் துறைவ! (கலி. 133. 4, 5)

(12) நொந்து நகுவனபோல் நந்தின கொம்பு (கலி. 33.16)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *போல, போல்,* இவற்றின் முன் நிகழும் *அலைப்பேன், கண்டாய், கொல்வான், மறந்தாள், மலர்ந்தவை* ஆகிய சிறப்பு வினைகள் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்தனவாகும். இச்சிறப்பு வினைகள் நிகழுமிடத்தில் முறையே *அலைப்பது, கண்டது, கொல்வது, மறந்தது, மலர்ந்தது* ஆகிய பொதுவினைகளும் (Impersonal Verbs) நிகழற்பாலனவாகும். இதனை வேறு வகையில் கூறவேண்டுமானால் போலென் கிளவியின் முன் நிகழும் வினைகள் சிறப்பு வினைகளாகவோ அல்லது பொதுவினைகளாகவோ அமையலாம். அதாவது, இவ்விருவகை வினைகளும் மேற்படிச் சூழலில் செம்மை வழக்கினவாய் நிகழவல்லவையாகும். போலென் கிளவியின் முன் அமையும் சிறப்பு வினைகள் பயனிலைச் செயற்பாட்டினவாய் அமைவதால், அவற்றுடன் செம்மை வழக்கில் நிகழும் பொதுவினைகளும் பயனிலைச் செயற்பாட்டினவாகின்றன. இதனின்றும் எடுத்துக் காட்டு (4)-இல் எச்சவாக்கியத்தில் நிகழும் *நினைத்தது* என்பது பொதுவினைத் தன்மையதாய் அமைந்து பயனிலையாகச் செயல்படுவதாகக் கொள்ள முடிகின்றது. இக்காலத் தமிழில் போலென் கிளவியின் முன் சிறப்பு வினைகளின் நிகழ்ச்சி

வழக்கற்றுப் போய்விட்டது.[1] மேலே (7) முதல் (12) வரையுள்ள எடுத்துக்காட்டுக்கள் இக்காலத் தமிழில் அமையுமாயின் போலென் கிளவியின் முன் நிகழும் சிறப்பு வினைகள் தவிர்க்கப் பட்டு அவ்விடத்தில் பொதுவினைகளின் நிகழ்ச்சியே போற்றப்படும்.

## 3.0. வழிகாட்டும் வழக்கு நிலைகள்

3.1. எடுத்துக்காட்டு (4)-இல் நிகழும் எச்சவாக்கியத்தில் *வள்ளுவர்* என்னும் எழுவாய்க்கு *நினைத்தது* என்னும் பொது வினையானது பயனிலையாக அமைகின்றது. எடுத்துக்காட்டு (1)-இல் நிகழும் *நினைத்த* என்னும் வினையானது, (4)-இல் நிகழும் *நினைத்தது* என்னும் பொதுவினையுடன் துணைநிலை வழக்கில் அமைவதால், முந்தியதும் பிந்தியதைப் போன்றே பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த பொதுவினையாகக் கொள்ளப்படும்.

3.2. இந்தக் கட்டத்தில், எடுத்துக்காட்டு (2)-இல் நிகழும் வாக்கிய அமைப்பும் சிந்தனைக்குரியதாகின்றது. மீண்டும் கீழே நினைவுக்கூரப்படும் இந்த வாக்கிய அமைப்பினைப் பொருண்மை சிதையாமல் (14)-இல் உள்ளவாறு பிளவுபடுத்தலாம்.

(13) அமைச்சர் வந்த பிறகு விழா தொடங்கியது. (= (2))

(14) அமைச்சர் வந்தார். பிறகு விழா தொடங்கியது.

மேலே (13)-இல் நிகழும் *வந்த* என்னும் பொதுவினையும், (14)-இல் பயனிலையாகச் செயல்படும் *வந்தார்* என்னும் சிறப்பு வினையும் முறையே எச்சவாக்கியத்திலும் முற்று வாக்கியத்திலும் அமைந்து துணைநிலை வழக்கினவாகின்றன. இதன்மூலம் *வந்தார்* என்னும் சிறப்பு வினையைப் போன்றே, *வந்த* என்னும் பொதுவினையும் பயனிலைச் செயற்பாட்டினதாய்க் கொள்ளத்தக்கதாகின்றது. வழக்கு நிலைகள் (Distributions) மீதமைந்த சான்றுகள் எடுத்துக் காட்டுக்கள் (1), (2)-இல் உள்ளதுபோன்ற எச்சவாக்கியங்களில் நிகழும் *செய்த* வாய்பாட்டு வினைகளைப் பயனிலைச் செயற்

1. ஆயினும் சிறப்பு வினைகளுள் ஒரு பிரிவினவாகிய *அவ்* என்னும் சாரியை பெற்ற வினைகள் போலென்கிளவியின் முன் நிகழும் நிலையை இக்காலத் தமிழில் காணமுடிகிறது. பின்வரும் எடுத்துக்காட்டினைக் கருத்தில் கொள்க.

அவர் எல்லாம் தெரிந்தவர் போல் பேசினார்.

இந்த வாக்கியத்தில் நிகழும் போலென்கிளவி ஒப்பில் போலியாகும். ஒப்புடைப்போலி அமைந்த வாக்கியங்களில் நிகழும் எச்சவாக்கியங்களில் சிறப்பு வினைகளின் நிகழ்ச்சியை இக்காலத்தமிழில் காண முடியவில்லை. பழந்தமிழிலும் இத்தகைய நிகழ்ச்சி ஐயத்திற்குரியதாகவே உள்ளது.

பாட்டில் அமைந்த பொதுவினைகளாய்க் கொள்ள வகை செய்கின்றன. தவிரவும் பயனிலையாகச் செயற்படும் வினைகள் முற்று வாக்கியத்தில் (Simple Sentence) நிகழவேண்டும் என்ற நம்பிக்கையையும் வழக்கு நிலைச் சான்றுகள் தகர்த்துவிடுவதை இங்கே காண்கிறோம். எச்சவாக்கியங்களை (Subordinate Clauses) முற்றுவாக்கியங்களின் விகாரங்களாக அல்லது மாற்றியங்களாகக் (Alternants) கொள்ளும் ஆய்வில் இத்தகைய முடிபு தவிர்க்க முடியாத தாகின்றது.

## 4.0. வாக்கிய மீட்டுருவாக்கம்

இக்காலத்தமிழில் முற்றுவாக்கியங்களில் (Simple Sentences) செய்த வாய்பாட்டுப் பொதுவினைகள் பயனிலையாகச் செயல் படுவதில்லை. பழந்தமிழில்கூட இத்தகைய நிலை இல்லை.[2] ஆயினும் மேலே நிகழ்த்திய ஆய்வினின்றும் செய்த வாய்பாட்டுப் பொதுவினைப் பயனிலைகள் அமைந்த முற்றுவாக்கியங்களை மீட்டுருவாக்கம் செய்யலாம். ஆனால் இத்தகைய வாக்கியங்கள் மீது தமிழ் உரிமை பாராட்ட முடியாது. உண்மை என்னவெனில், செய்த வாய்பாட்டுப் பொதுவினைகளைப் பயனிலையாகக் கொண்ட முற்றுவாக்கியங்கள் தமிழானது தனிமொழியாகத் தோற்றம் கொள்வதற்கு முன் வழக்கில் இருந்த ஒரு தொன் மொழியில் வழங்கியவையாகும். இந்தத் தொன்மொழியினின்றும் தனிமொழியாகப் பிரிந்தபோது மேற்படி வகையான முற்று வாக்கியங்களைத் தமிழானது தன்னுள் எச்சவாக்கியங்களாகத் தக்கவைத்துக் கொண்டது. இந்த வகையில் தொன்மொழியில் நிகழ்ந்து வழக்கற்றுப் போன பல்வேறு வகையான முற்று வாக்கியங்களின் அருங்காட்சியகமாகத் தமிழினைக் கருதலாம். இந்தச் சிறப்பு தமிழுக்கு மட்டுமல்ல; ஒவ்வொரு திராவிட மொழியும் வழக்கற்றுப் போன தொன்மொழியின் ஏதோ ஒரு அமைப்பினைப் போற்றிப் பாதுகாக்கும் அருங்காட்சியகமாகத் திகழ்வதை நுண்ணிய ஆய்வுகள் நன்கு புலப்படுத்தக் கூடுமாதலால் அவற்றுக்கும் இச்சிறப்பு உண்டு. மேற்கொள்ளப்படும் ஆய்வு முறைகளைப் பொறுத்துமேலே குறிப்பிட்டது போன்றே தொன்மொழியின் வாக்கிய அமைப்புக்கள் புலனாகும்.

---

2. கன்னியாகுமரி மாவட்டத்தில் வழங்கும் காணிக்காரர் மொழியில் **செய்தெ** வாய்பாட்டுப் பொதுவினைகள் முற்றுவாக்கியங்களில் பயனிலையாக அமையும் நிலை காணப்படுகின்றது (Agesthialingom, S. 1976: 62-65). இவ்வினைகள் ***செய்தய்** வாய்பாட்டுப் பொது வினைகளின் திரிபுகளாகும். **செய்த** வாய்பாட்டுப் பொதுவினை களையும் **செய்தய், *செய்தவ்* வாய்பாட்டுப் பொதுவினைகளின் திரிபுகளாகக் கொள்ளலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

### 5.0. வழக்கற்றுப்போன வாக்கிய வகைகள்

எச்சவாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படும் செய்த வாய்பாட்டுப் பொதுவினைகள் இக்காலத்தில் போலென் கிளவியின் முன் நிகழ்வதில்லை. **வள்ளுவர் நினைத்த போல் இன்றைய சமுதாயம் அமையவில்லை* என்பது போன்ற வாக்கியங்களை இக்காலத்தில் இலக்கிய வழக்கில்கூடக் காண முடியவில்லை. பேச்சு வழக்கிலும் இத்தகைய வாக்கியங்களின் நிகழ்ச்சியைப் பற்றித் திட்டவட்டமாக ஏதும் சொல்ல முடிய வில்லை. நாமறிந்த இக்காலப் பேச்சுத் தமிழில் இதுபோன்ற வாக்கியங்களின் நிகழ்ச்சி காணப்படவில்லை.[3] இடைக்காலத் தமிழில் போலென் கிளவியின் முன் செய்த மற்றும் செய்வ வாய்பாட்டுச் சிறப்பு வினைகளின் நிகழ்ச்சியைக் காண முடிகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கவையாகும்.

*(15) சிங்க வேறுகள் கிடந்தபோற் சிறுவர் தேர்மிசைத் துஞ்சினார் (சீவக. 2309)*

*(16) நிலத்திருந் திருசுடர் நிமிர்ந்து செல்வபோல்... (சீவக. 2893)*

பழந்தமிழில், *போலும்* என்பதன்முன் செய்த, செய்வ வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியைக் காண முடிகின்றது.

*(17) பொறித்த போலும் புள்ளி யெருத்திற்*
*புன்புற வெருவைப் பெடைபுணர் சேவல் (பதி. 36. 8, 9)*

*(18) எள்ளி, தொகுபுடன் ஆடுவ போலும் மயில் (கலி.33. 17, 18)*

இந்த நான்கு எடுத்துக்காட்டுகளிலும் ஒரு குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில், *போல்* மற்றும் *போலும்* ஆகியவற்றின் முன் நிகழும் செய்த வாய்பாட்டு வினைகளும், செய்வ வாய்பாட்டு வினைகளும் சிறப்பு வினைகளாகச் செயல்படுகின்றன. எடுத்துக்காட்டு (17)-இல் நிகழும் *பொறித்த போலும் புள்ளி யெருத்து* என்னும் பெயர்த் தொடரானது, *பொறிக்கப்பட்டன போன்ற புள்ளிகளுடைய கழுத்து* (உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு. 94:1941) என்று உரை விளக்கம் பெறுவது குறிப்பிடத்தக்கதாகும். ஆனால், பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மயக்கந்தருவனவாய்க் காணப்படுகின்றன.

*(19) பொறித்த போலும் வானிற எருத்தின்*
*அணிந்த போலும் செஞ்செவி எருவை (அகம். 193. 5, 6)*

*(20) நட்ட போலும் நடாஅ நெடுங்கல்*
*அகலிடம் குயின்ற பல்பெயர் மண்ணி (அகம். 269. 7, 8)*

---

3. மலயாளத்தில் இத்தகைய வாக்கிய வகை காணப்படுகிறது (Michail S. Andronov 1996: 128). எ-டு: அது ஞான் வெச்ச போலெ இரிக்கட்டே, வந்ந/பாடிய போலே தோணுன்னு.

*(21) வீறுசால் ஞாலத்து வியலணி காணிய*
*யாறுகண் விழித்த போல் கயம்நந்திக் கவின்பெற (கலி. 33.1, 2)*

*(22) விற்சிறை கொண்ட போலும் புருவத்து விளங்கு வேற்கண்*
*(சீ.சி. 2612)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் *போல், போலும்* ஆகியவற்றின் முன் நிகழும் செய்த வாய்பாட்டு வினைகளைச் சிறப்பு வினைகளாகக் கொள்வதா அல்லது பொதுவினைகளாகக் கொள்வதா என்பது தெளிவின்றி உள்ளது. அஃறிணைப் பயனிலை வினைகள் பன்மை எண்ணில் அமைகையில், அவற்றின் எழுவாய்ப் பெயர்கள் பன்மையை உணர்த்த வேண்டும் என்ற கடப்பாடு இல்லை. எ-டு. *வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர் சென்ற, நாளொற்றித் தேய்ந்த விரல்* (குறள். 1261); *அணையரும் வெம்மைய காடு* (கலி. 20.20); *காலன புனைகழல்* (புறம். 100.1). மேலே குறிப்பிட்ட நான்கு எடுத்துக்காட்டுக்களிலும் காணப்படும் தெளிவின்மைக்கு இதுவே காரணம். எடுத்துக்காட்டுக்கள் (19), (20)-இல் நிகழும் *பொறித்த, அணிந்த, நட்ட* ஆகிய வினைகளை முறையே *பொறித்தது, அணிந்தது, நட்டது* என்று விளக்கப்படும் நிலை தற்கால உரையில் காணப்படுகின்றது. இந்த விளக்கம் ஏற்புடைய தாயின் (19), (20)-இல் நிகழும் *பொறித்த, அணிந்த, நட்ட* ஆகியவை பொதுவினைகளாகக் கொள்ளப்படும். எப்படி இருந்த போதிலும் முதல் எடுத்துக்காட்டில் காணப்படும் *வள்ளுவர் நினைத்த மாதிரி* என்பதுபோன்ற எச்சவாக்கியங்கள் பழந் தமிழிலும், இடைக்காலத் தமிழிலும் நிகழும் *செய்தபோல்* என்னும் வாய்பாட்டுத் தொடர்கள் அமைந்த எச்சவாக்கியங்களின் தொடர்ச்சியாகக் கொள்ளத்தக்கவை என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். ஒரு குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில், *செய்தபோல்* என்ற வாய்பாட்டு அமைப்புக்கள் இக்காலத் தமிழில் வழக்கிழந்து அவற்றின் இடத்தில் *செய்த மாதிரி* என்ற வாய்பாட்டு அமைப்புக்கள் நிகழும் நிலை ஏற்பட்டுவிட்டது. இந்த மாற்றம் தமிழில் எப்பொழுது தொடங்கியது என்பதைத் திட்டவட்டமாகச் சொல்லமுடியவில்லை.

### 6.0. உள்வினையாகப் போலென் கிளவி

இனி, வினையெச்ச வாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படும் வினைகளையடுத்து நிகழும் போலென் கிளவியின் உண்மை நிலையைப் பற்றியும் சற்றுச் சிந்திக்கலாம். இச்சிந்தனை வினையெச்ச வாக்கியங்கள் பற்றிய ஒரு பொதுவான கருதுகோளை உருவாக்குவதற்குப் பெரிதும் துணைபுரியும். இடைக்காலத் தமிழில் *போல், போலும்* ஆகிய இரண்டும் முற்று வாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படும் உறுப்பையடுத்து

நிகழும் நிலை காணப்படுகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

**போல்**

(22) தொண்டர் பரவச் சுடர்சென் றணவ
அண்டத் தமரும் அடிகள் *ஊர்போல்*
வண்டல் அலையுள் கெண்டை மிளிர
கொண்டல் அதிரும் கூட லூரே (நாலாயிரம். 1362)

(23) தவழு மதிசேர் சடையாற் *கிடம்போல்*
உகளும் திரைவாய் ஒற்றி யூரே (சுந்தரர் தேவாரம். 91.3)

**போலும்**

(24) அடிமூன்றில் இவ்வுலகம் *அன்றளந்தாய் போலும்*
(நாலாயிரம். 3288)

(25) அமரவோர் அங்கமாறும் வேதமோர் நான்கும்ஓதி
தமர்களில் தலைவராய சாதியந் தணர்களேலும்
நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோர் அளவிலாங்கே
அவர்கள்தாம் *புலையர்போலும்* அரங்கமா நகருளானே
(நாலாயிரம். 914)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *போல், போலும்* இரண்டும் ஒப்பில் போலிகளாகும். பயனிலையாகச் செயல்படும் உறுப்பு களையடுத்து நிகழ்வதால் இவையிரண்டும் உள்வினைகளாகக் (Copula Verbals) கொள்ளத்தக்கனவாகின்றன. *போல், போலும்* இரண்டும் ஒப்புமைப் பொருண்மையையும் உணர்த்த வல்லன வாகும். உள்வினையானது இலக்கணப் பொருண்மையையும் உணர்த்தவல்லதாகையால், உள்வினையாகிய *போல்/போலும்* ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துவதில் வியப்பில்லை. இதனைக் கருத்தில் கொண்டு ஒப்புடைப் போலியானது அடிப்படையில் உள்வினைக் குடும்பத்தைச் சார்ந்தது என்று துணிதல் தவிர்க்க முடியாததாகின்றது.

## 7.0. தொடரனியல் கட்டுப்படுத்தும் இலக்கணச் செயற்பாடு

7.1. முற்றுவாக்கியங்களில் பயனிலைத் தொடர்களில் உள் வினையாக நிகழும் *போல், போலும்* ஆகிய இரண்டும் ஒப்பில் போலிகளாகவும், ஒப்புடைப் போலிகளாகவும், முறையே வினையையும் பெயரையும் அவாவி நிற்கும் எச்சங்களாகவும் தமிழில் செயல்படுகின்றன. இதனின்றும் ஓர் உண்மை பெறப்படு கின்றது. எச்சம், முற்று ஆகிய இரண்டு தன்மையையும் ஒரே வினையமைப்பு உணர்த்துகையில் சொல்லியல் (Morphology) மட்டத்தில் அல்லாமல் தொடரனியல் (Syntax) மட்டத்திலேயே அவ்வினையமைப்பின் இலக்கணச் செயற்பாடு வரையறுக்கப்

படுகிறது.[4] இதனைக் கருத்தில்கொண்டு எச்சவாக்கியங்கள் எனப்படுபவை அடிப்படையில் முற்றுவாக்கியங்களாகக் கொள்ளத் தக்கவை என்று துணியலாம். இதனைத் தொடர்ந்து, முற்று வாக்கியங்கள் எப்போது எச்சவாக்கியங்களாகக் கருதப்படு கின்றன என்ற வினா எழுகின்றது. முற்றுவாக்கியங்கள் வாக்கிய எல்லைகளுக்குள் நிகழ்பவை. இதனை # வா # என்ற குறியீட்டின் மூலம் உணர்த்தலாம். முற்றுவாக்கியங்கள் வலப்புறத்தில் உள்ள எல்லையை இழக்கும்போது எச்சவாக்கியங்களாக உணரப்படுகின்றன.[5] ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனைத் தெளிவுப்படுத்திக் கொள்ளலாம். *நொந்து நகுவனபோல் நந்தின கொம்பு* (கலி. 33.16) என்ற அமைப்பில் *கொம்பு நொந்து நகுவன போல்* என்பது எச்சவாக்கியமாகும். எடுத்துக்காட்டுக்கள் (22), (23)-ஐக் கருத்தில் கொண்டு இதனை முற்றுவாக்கிய நிலைக்குக் கொண்டு

---

4. முற்றாகவும் எச்சமாகவும் நிகழும் வினைகள் வடிவில் வேறுபட்டு நிற்கும் நிலை தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் காணப்படு கின்றது. இது வரலாற்றுப் போக்கில் நேர்ந்த ஓர் விபத்தாகும். முற்றும் எச்சமும் வேறுபட்ட வடிவினவாய் இருப்பதாலேயே இவை சொல்லியல் மட்டத்தில் இனங்கண்டு கொள்ளத்தக்கவை என்று வாதிடமுடியாது. வண்ணனை நிலையில் வேண்டுமானால் இந்த வாதம் பொருந்தலாம். வண்ணனை நிலையில் அமைந்த வடிவ வேறுபாடு மொழியின் வளர்ச்சிப் போக்கில் நேர்ந்த ஒன்றாகும். முற்றும் எச்சமும் தமிழில் துணைநிலை வழக்கினவேயன்றி முரணிய (Contrastive) வழக்கினவல்ல.

5. இந்த வாக்கிய எல்லை இழப்பினால் பயனிலையாகச் செயற்பட்ட வினைகள் பொருண்மையமைப்பிலும் மாற்றத்துக்குள்ளாகின்றது. *செயின்* மற்றும் *செய்யிய(ர்)* வாய்பாட்டு வினைகள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கவையாகும்.செயின் வாய்பாட்டு வினைகள் பயனிலையாகச் செயற்பட்ட நிலையைத் தமிழில் சுட்ட முடியவில்லை. ஆகவே பயனிலைச் செயற்பாட்டில் இவ்வாய்பாட்டு வினைகளின் பொருண்மையமைப்பினைத் திட்டவட்டமாகச் சுட்டமுடியவில்லை. தெலுங்கில் பாடெனு (< *பாடியெனு) வாய்பாட்டு இறந்தகால வினைகள் படர்க்கையில் பொதுவினைமுற்றுக்களாய் அமைந்து பயனிலைச் செயற்பாட்டினவாய் நிகழ்கின்றன. எடுத்துக்காட்டாகப் பழந்தெலுங்கில் பா'டெனு என்னும் இறந்தகால வினைமுற்றின் எழுவாயாக அவன், அவள், அது, அவை ஆகியவை அமையும். செயின் வினைகள் இத்தகைய பொது வினைமுற்றின் திரிபாக இருக்கலாம். *செய்யிய(ர்)* வாய்பாட்டு வினைகளைப் பொறுத்தவரையில் அவை பழந்தமிழில் பயனிலையாகவும், எச்சமாகவும் செயல்படும் நிலை காணப்படுகின்றது. பயனிலையாகச் செயல் படுகையில் வியங்கோட் பொருண்மையை உணர்த்தும் இவ்வாய்பாட்டு வினைகள், எச்சமாகச் செயல்படுகையில் மேற்படி பொருண்மையை இழந்து விடுகின்றன. *செய்யிய(ர்)* வாய்பாட்டு எச்சங்கள் செயவென் வாய்பாட்டு எச்சங்களுடன் பொருந்துவனவாகும்.

செல்லலாம். இந்த நிலையில் இந்த வாக்கியமானது, *கொம்பு நொந்து நகும்* என்ற முற்றுவாக்கியத்திற்கு நிகராய் அமையும். முற்றுவாக்கியமாகக் கொள்ளப்படுகையில் *கொம்பு நொந்து நகுவனபோல்* என்ற இந்த அமைப்பின் வலப்புறத்தில் வாக்கிய எல்லை குறிக்கப்பெறும். இந்த வலப்புற வாக்கிய எல்லை தவிர்க்கப் படும்போது மேற்படி வாக்கியமானது முற்றுத்தன்மையை இழந்து எச்சத்தன்மையைப் பெறுகின்றது. இந்த மாற்றத்தினைப் பின்வரும் விதியின் மூலம் புலப்படுத்தலாம்.

(26)**#வாக்கியம்$_1$ #>#வாக்கியம்# - #வாக்கியம்$_2$#**

இந்த விதியில் *வாக்கியம்*$_1$ என்னும் முற்றுவாக்கியம் எச்ச வாக்கியமாக மாறியமையும் சூழல் புலப்படுத்தப்பட்டுள்ளது. ஓர் வாக்கியம் முற்றுவாக்கியமா அல்லது எச்சவாக்கியமா என்பதைத் தெளிவுபடுத்துவது வாக்கியம் நிகழும் சூழலேயன்றி வேறெதுவும் இல்லை என்பதையே இந்த விதியின் மூலம் மீண்டும் நாம் தெளிவுபடுத்த விரும்புகிறோம். எச்சவாக்கியங்கள் எனக் கருதப்படுபவை அடிப்படையில் முற்றுவாக்கியங்களே என்னும் நமது கருதுகோள் வண்ணனை நிலையில் எச்சவினைகளாகச் சுட்டப்படுவனவற்றை அடிப்படையில் பயனிலையாகச் செயல் படத்தக்க முற்றுவினைகளாகக் கொள்ள வகை செய்கின்றது. எச்சவாக்கியங்களைப் பற்றி இதற்குமேல் இக்கட்டுரையில் நாம் பேசுவதற்கில்லை. முற்று வாக்கியங்கள் எச்ச வாக்கியங்களாக அமைகையில் ஏற்படும் விளைவுகள் பற்றிப் பிறிதொரு கட்டுரையில் விரிவாகப் பேசப்படும். எச்சவாக்கியங்கள் தொடர்பாக ஒரே ஒரு செய்தியை மட்டும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். ஒரு முற்றுவாக்கியமானது எச்சவாக்கியமாக அமைகையில் அவ்வாக்கியம் அடுத்துள்ள முற்றுவாக்கியத்தில் நிகழும் பயனிலைத் தொடருக்கு வினையடையாக அமைகின்றது. ஆனால் பெரும்பாலும் எச்சவாக்கியங்கள் முற்றுவாக்கியங்களின் பயனிலைத் தொடருடன் அண்மை உறுப்புகளாகச் செறிந்து நிற்பதில்லை. முற்றெச்ச வாக்கியங்களில் (Complex Sentences) எச்சவாக்கியங்கள் முன்னும், முற்றுவாக்கியங்கள் பின்னும் அமையும் நிலையே இயல்பான நிலையாகத் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் காணப்படுகின்றது. காரணம், முற்று வாக்கியங்கள் வினையடை வாக்கியங்களாக, அதாவது எச்ச வாக்கியங்களாக மாறிய பின்னரும் தாம் நிகழ்ந்த இடத்தில் நின்று செயல்படுவதைத் தவிர்க்க அவை முற்படுவதில்லை. எச்ச வாக்கியங்கள் அடிப்படையில் முற்று வாக்கியங்கள் என்பதற்கு அவற்றின் இடப்பேறும் (Placement) ஒரு சான்றாக அமைகின்றது.



# 15. தமிழ்த் தொடரனில் உள்வினைகள்

## பகுதி - 1

### *1.0 உள்வினை என்பது*

*1.1* தமிழில் உள்வினை என நாம் குறிப்பிடுவது copula என ஆங்கிலத்தில் குறிக்கப்பெறும் வினையையாகும். சொற்களின் அமைப்பு, தொடரனியல் அமைப்பு ஆகியவை பற்றிய ஆய்வுகளில் உள்வினையின் பங்கு வியக்கத்தக்க அளவுக்கு அமைந்துள்ள போதிலும் இதுபற்றிய ஆய்வு தமிழில் இன்னும் முனைப்பாக மேற்கொள்ளப்படவில்லை. இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள *மள்ளர் கையதை கூர்வாள், பயனிலை: அகமும் புறமும்* ஆகிய கட்டுரைகளில் உள்வினை பற்றிய சிந்தனைகள் தோற்றுவாய் நிலையில் காணப்படுகின்றன. திராவிட மொழியியலைப் பொறுத்தவரையில் மிக விரிவாக மேற்கொள்ளப்படவேண்டிய ஆய்வுகளில் உள்வினை பற்றிய ஆய்வும் ஒன்றாகும். இந்தக் கட்டுரை இந்த வகையில் மேற்கொள்ளப்பட்ட ஒரு சிறு முயற்சியாகும்.

*1.2.* உள்வினை (Copula Verb) என்பது இருப்புப் பொருண்மையைக் குறிக்கும் ஓர் வினையாகும். *உள்ளது, உள்ளன, உள்ள* முதலான வினைத்திரிபுகளில் பகுதியாக அமைந்த *உள்* என்னும் வினையைக் கருத்தில் கொண்டு *உள்வினை* என்னும் கலைச்சொல் படைக்கப் பெற்றுள்ளது. உள்வினையானது செவ்வினை (Lexical verb) அன்று. அது ஓர் அல்வினை (Nonlexical Verb) யாகக் கொள்ளத் தக்கதாகும். இவ்வினையின் பண்புகள் பற்றிக் கோதண்டராமனில் (கட்டுரைகள்: மள்ளர் கையதை கூர்வாள், பயனிலை: அகமும் புறமும்) சற்று விரிவாகப் பேசப்பட்டுள்ளது. அல் வினையாகிய உள்வினையின் திரிபுகள் செவ்வினைகளைப் போல் சொல்லியல் ஆய்வுக்கு (Morphological Analysis) உட்பட்டவையல்ல. பின்வரும் எடுத்துக்காட்டுக்களை இவ்வகையில் கருத்தில் கொள்ளலாம்.

(1) மாதவி ஓர் நடிகை ஆவாள்

(2) நடிகையாகிய மாதவி

(3) மாதவி வருவாள் {ஆனால் / ஆயின்} கோவலனும் வருவான்

இந்த மூன்று எடுத்துக்காட்டுகளிலும் நிகழும் *ஆவாள், ஆகிய, ஆனால்/ஆயின்* ஆகிய மூன்றும் உள்வினைகளாகும். இவ் வினைகளைச் செவ்வியல் வினையமைப்புக்களைப்போல் ஆராய முடியாது. இவை பின்வரும் கிளவியாக்க விதிகள் (Lexicalization Rules) மூலம் வருவிக்கத்தக்கனவாகும்.

4(அ) ஆகு +[+இருப்பு,-ஆண்பால்] > ஆவாள்#

(ஆ) ஆகு +[+இருப்பு,+நிபந்தனை] > {ஆனால், ஆயின்}

(இ) ஆகு +[+இருப்பு] > ஆகிய/-பெயர்

மேலே (4)-இல் குறிக்கப்பெற்றுள்ள விதிகளின் உட்கிடையில் (Input) நிகழும் ஆகு என்னும் வடிவம் பொருள்கோட்கிளவியாய் (Semantic Absorber) அமைந்த ஓர் வெற்றுருப்பாகும். இதனை ஆகு என்னும் உள்வினையுடன் குழப்பிக் கொள்ளக்கூடாது. கிளவியாக்க விதிகள் மூலம் பெறப்படும் பல்வேறு வகையான வடிவங்கள் உள்வினைக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்பதை உணர்த்தவே, ஆகு என்னும் ஓர் கற்பித வடிவம் உட்கிடையில் குறிக்கப் பெறுகிறது. இதுபற்றி, *மள்ளர் கையதை கூர்வாள்* என்ற கட்டுரையில் விரிவாகப் பேசப்பட்டுள்ளது. உள்வினை பற்றிய ஒரு சிறுகுறிப்பே மேலே நாம் தந்துள்ளது. தொடரனியல் ஆய்வில் இந்த உள்வினையின் பங்கு எத்தகையது என்பதுபற்றி இனிச் சற்று முனைப்பாகச் சிந்திக்கலாம்.

13. உள்வினையின் திரிபுகளும், வடிவங்களும் பலவாகும். எல்லாவற்றையும் இந்த ஆய்வில் குறிப்பிடுவதற்கு வாய்ப்பில்லை. ஒரு சிலவற்றை மட்டுமே நாம் இங்குச் சிந்திக்க முடியும். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

5(அ) வள்ளியை மணந்த முருகன்

(ஆ) வள்ளியை மணந்தவனாகிய முருகன்

6(அ) முருகன் மணந்த வள்ளி

(ஆ) முருகன் மணந்தவளாகிய வள்ளி

எடுத்துக்காட்டுக்கள் (5), (6)-இல் இணைகளாக அமைந்த பெயரெச்சத் தொடர்கள் ஒரே பொருண்மையினவாகும். தமிழில் இதுவரை நிகழ்ந்துள்ள பெயரெச்சத் தொடர்கள் பற்றிய ஆய்வில் மேலே (அ) பிரிவில் குறிக்கப்பெற்றுள்ள அமைப்புக்கள் மட்டுமே சிந்திக்கப் பெற்றுள்ளன. (ஆ) பிரிவில் நிகழும்

அமைப்புக்களைப் பற்றிய சிந்தனையோ, நினைவோ நமக்கு இல்லாமல் போய்விட்டது. இதன் விளைவு பெயரெச்சத் தொடர்களை நாம் செம்மையாகப் புரிந்துகொள்ள முடியாமல் போனதுதான் மிச்சம். எனவே உள்வினைகள் பற்றிய இந்தக் கட்டுரையில் பெயரெச்சத் தொடர்கள் பற்றியும் நாம் சிந்திக்க முற்படுவது உள்வினைகளை நன்கு அறிந்துகொள்ளத் துணைபுரியும்.

## *2.0. கண்டெடுத்த புதையல்*

*2.1.* மேலே *(5), (6)*-இல் அமைந்த எடுத்துக்காட்டுக்களைக் கூர்ந்து நோக்கினால் பல உண்மைகள் புலனாகும். இவற்றுள் ஒன்று: *(அ)* பிரிவில் நிகழும் மணந்த என்பதில் உள்ள பெயரெச்ச விகுதியாகிய அகரக் கிளவியும், (ஆ) பிரிவில் நிகழும் மணந்தவனாகிய/ மணந்தவளாகிய என்பதில் நிகழும் *ஆகிய* என்னும் பெயரெச்ச வினையும் சிதறிய வழக்கினவாய் (Complementary Distribution) அமைந்துள்ள தன்மையாகும். இதன்மூலம் இரண்டு உண்மைகள் பெறப்படுகின்றன. ஒன்று: ஆகிய என்பது ஓர் உள்வினைப் பெயரெச்சமாதலால், அதனுடன் சிதறிய வழக்கில் அமைந்த *மணந்த* என்பதில் நிகழும் பெயரெச்ச விகுதியாகிய அகரக்கிளவியும் உள்வினைத் தன்மையதாகின்றது. இந்த உண்மையானது பெயரெச்ச விகுதியாகிய அகரக் கிளவியையும், உள்வினைப் பெயரெச்சமாகிய *ஆகிய* என்பதனையும் பின்வரும் கிளவியாக்க விதியின் மூலம் பெறவேண்டிய சூழ்நிலையை உருவாக்கிவிடுகின்றது.

*(7)* ஆகு + [இருப்பு] > [அ / ஆகிய] // [மணந்து / {மணந்தவன் / மணந்தவள்}] – பெயர்

இரண்டு: *(5), (6)*-இல் *(அ)* பிரிவில் நிகழும் *மணந்த* என்பதில் அமைந்த *மணந்து* என்ற வினையமைப்பும், (ஆ) பிரிவில் நிகழும் *மணந்தவன்/மணந்தவள்* என்ற வினையமைப்பும், துணைநிலை வழக்கினவாய் அமைவதால் செய்த, செய்கின்ற வாய்பாட்டு வினைகளில் கண்டெடுத்த புதையலாய் அமைந்த செய்து, செய்கின்று வாய்பாட்டு வினைகள் முற்று வினைகளாகக் கொள்வதற்கான ஓர் வாய்ப்பு ஏற்படுகின்றது. இக்கட்டுரையின் வளர்ச்சிப் போக்கில் இந்த உண்மை விளக்கமுறும்.

*2.2.* மேலே *(7)*-இல் அமைந்த விதியின் மூலம் *(5), (6)*-இல் அமைந்த தொடர்களின் முந்தைய அமைப்பு பின்வருமாறு இருக்கும்:

8(அ) வள்ளியை மணந்து # அ முருகன்
(ஆ) வள்ளியை மணந்தவன் # ஆகிய முருகன்

9(அ) முருகன் மணந்து # அ வள்ளி
(ஆ) முருகன் மணந்தவள் # ஆகிய வள்ளி

இந்த அமைப்புக்களில் (ஆ) பிரிவில் உள்ள *ஆகிய* என்னும் பெயரெச்சத்தைப் போலவே (அ) பிரிவில் அமைந்த அகரக் கிளவியும் விட்டிசையை (Pause) அடுத்து நிகழ்கின்றது. இந்த விட்டிசை இங்கே சொல்லின் எல்லையாக (Word Boundary) அமைந்துள்ளது. அகரக்கிளவி விட்டிசையை அடுத்து நிகழ்வதில்லை யாதலால் அதனை விகுதி நிலைக்கு மாற்றியமைக்க வேண்டும். இப்பணியினை விகுதியாக்க விதி (Cliticization Rule) செய்து முடிக் கின்றது. விகுதியாக்க விதி என்பது ஓர் விகார விதி (Transformational Rule)யாகும். இவ்விதியானது இரண்டு பணிகளைச் செய்கின்றது. ஒன்று: ஓர் உள்வினையை விகுதியாக மாற்றியமைக் கின்றது. இரண்டு: விட்டிசையைத் தவிர்க்கின்றது. விகுதியாக்க விதி செயல்படும்போதே விட்டிசையும் தவிர்க்கப்பட்டுவிடுகின்றது. விகுதியாக்க விதியானது (8), (9)-இல் (ஆ) பிரிவில் உள்ள அமைப்புக்களில் செயல்படுவதில்லை. இதனின்றும் விகுதிகள் எனப்படுபவை விகுதியாக்க விகாரத்தின் மூலம் அமையும் என்பதுடன், வரலாற்று நிலையில் விகுதிகள் தனிநிலை உருபன் களாக நிகழ்ந்திருக்க வேண்டும் என்ற உண்மையும் பெறப்படு கின்றது. இந்த வகையில் விகுதியாக்க விதியானது வரலாற்று அமைப்பினையும், வண்ணனை அமைப்பினையும் இணைக்கும் ஓர் கருவியெனக் கருதத்தக்கதாகும்.

### 3.0. பெயரெச்சத் தொடர்கள் – ஒரு புதிய பார்வை

3.1. பெயரெச்சத் தொடரன்கள் பற்றிய முந்தைய ஆய்வுகளில் (5), (6) இவற்றில் (அ) பிரிவில் அமைந்த தொடர்கள் மட்டுமே கருத்தில் கொள்ளப் பெற்றன என்று முன்னர்க் குறிக்கப் பெற்றது. இந்த ஆய்வுகள் மேற்படி பிரிவில் அமைந்த இரண்டு பெயரெச்சத் தொடர்களையும், அதாவது: *வள்ளியை மணந்த முருகன், முருகன் மணந்த வள்ளி* என்ற இரண்டினையும் பின்வரும் ஒரே வாக்கியத்துடன் தொடர்புபடுத்தும் போக்கினைக் கொண்டவையாகும்.

(10) முருகன் வள்ளியை மணந்தான்

3.2. ஒரே வாக்கியத்தினின்றும் ஒன்றுக்கு மேற்பட்ட தலைமைப் பெயர்கள் அமைந்த பெயரெச்சத் தொடரன்களைப் பெற்றுத்தரும் ஆய்வினை ஓர் முழுமையான ஆய்வாகக் கருத முடியாது. இதற்கு இரண்டு காரணங்களைக் கூறலாம். ஒன்று:

பின்வரும் பெயரெச்சத் தொடரன், (12)-இல் உள்ள வாக்கியத் துடன் தொடர்புடையதாக முந்தைய ஆய்வுகள் கருதுகின்றன.

(11) முருகன் பார்த்த பெண்
(12) முருகன் ஒரு பெண்ணைப் பார்த்தான்

வாக்கியம் (12)-இல் உள்ள செயப்படுபொருளாகிய பெயர்த் தொடரில் நிகழும் *ஒரு* என்னும் கிளவி (11)-இல் அமைந்துள்ள பெயரெச்சத் தொடரனில் தவிர்க்கப்பட்டுள்ளது. இதற்கான காரணத்தை முந்தைய ஆய்வுகள் விளக்க முற்படவில்லை. இரண்டு: ஒரு வாக்கியத்திலிருந்து ஒன்றுக்கு மேற்பட்ட தலைமைப் பெயர்கள் அமைந்த பெயரெச்சத் தொடரன்களை வருவிக்கும்போது, தலைமைப் பெயர்களைத் தேர்ந்தெடுக்கும் போக்கு முந்தைய ஆய்வுகளில் தான்தோன்றித்தனமாக (Arbitrary) உள்ளது. ஒரு வாக்கியத்தினின்றும் ஒரு குறிப்பிட்ட பெயரெச்சத் தொடரனுக்குமேல் வருவிக்கும் போக்கினைக் கட்டுப்படுத்தும் நெறி, முந்தைய ஆய்வுகளில் கருத்தில் கொள்ளப்படவில்லை. இரண்டாவது காரணம் ஓர் அடிப்படைக் கருத்தினை வலியுறுத்துவதாகும். எடுத்துக்காட்டாக (11)-இல் அமைந்த பெயரெச்சத் தொடரனானது, (12)-இல் உள்ள வாக்கியத்துடன் தொடர்புடைய தானால், இந்தத் தொடர்பு பாட்டனுக்கும் பேரனுக்கும் உள்ள தொடர்பைப் போன்றதாகும். இங்கே பேரன் நிலையில் நாம் குறிப்பிடுவது பெயரெச்சத் தொடரனையாகும். முதல் தலை முறைக்கும், மூன்றாம் தலைமுறைக்கும் இடையிலான இந்தத் தொடர்பினைத் தகப்பனுக்கும் மகனுக்கும் உள்ள தொடர்பாக மாற்றியமைத்தாலன்றி, மேலே நாம் எழுப்பிய இரண்டு சிக்கல் களையும் விடுவிக்க முடியாது.

3.3. ஒரு பெயரெச்சத் தொடரனில் ஒன்றுக்கு மேற்பட்ட தலைமைப் பெயர் நிகழ்வதற்கு எப்படி வாய்ப்பில்லையோ, அப்படியே அத்தொடரன் சார்ந்து நிற்கும் வாக்கியமும் ஒன்றுக்கு மேற்படாத பெயரெச்சத் தொடரனை வருவிப்பதற்கு மட்டுமே வாய்ப்பளிப்பதாக அமைய வேண்டும். இந்த வாய்ப்பினை (10), (12)-இல் அமைந்த வாக்கியங்கள் ஏற்படுத்திக் கொடுக்கத் தவறி விடுகின்றன. ஆகவே, பெயரெச்சத் தொடரன்களின் நேரடித் தொடர்புள்ள வாக்கியங்களாக இத்தகையவற்றைக் கொள்வதற் கில்லை. இந்தச் சிக்கலைத் தீர்க்கும் வகையில் (5), (6)-இல் (ஆ) பிரிவில் நிகழும் பெயரெச்சத் தொடரன்கள் அமைந்துள்ளன. இத்தொடரன்களில் தலைமைப் பெயர்களான *முருகன், வள்ளி*

இரண்டும் *ஆகிய* என்னும் உள்வினைப் பெயரெச்சத்துடன் எழுவாய்-பயனிலை என்ற இலக்கண உறவில் அமைந்துள்ளன. இதன் மூலம் மேற்படி பிரிவில் அமைந்த பெயரெச்சத் தொடரன்கள் பின்வரும் வாக்கியங்களுடன் தொடர்புடையனவாகின்றன.

(13) முருகன் வள்ளியை மணந்தவன் ஆவான்

(14) வள்ளி முருகன் மணந்தவள் ஆவாள்

இந்த வாக்கியங்கள் (5), (6)-இல் (ஆ) பிரிவில் அமைந்த பெயரெச்சத் தொடரன்களுடன் நேரடித் தொடர்பு கொண்டவை யாகும். இங்கே தலைமுறையானது தலைமைப்பெயர் அமைந்த பெயரெச்சத் தொடரன்களை வருவிப்பதற்குத் துணைபுரிவதில்லை. இதன் மூலம் (5), (6)-இல் (அ) பிரிவில் அமைந்த பெயரெச்சத் தொடரன்கள் கீழே குறிப்பிட்டுள்ள இரண்டு வகையான வாக்கியங்களுடன் நேரடித் தொடர்புடையனவாதல் தெள்ளிதின் விளங்கும்.

(15) முருகன் வள்ளியை மணந்தவன்

(16) வள்ளி முருகன் மணந்தவள்

இதன்மூலம் மேலே (5), (6)-இல் அமைந்த பெயரெச்சத் தொடரன்கள் (10)-இல் குறிக்கப்பெற்றுள்ள வாக்கியத்துடன் தொடர்புடையன அல்ல என்பதும், அவை இரண்டு வகையான வாக்கிய அமைப்புகளுடன் தொடர்புடையன என்பதும் பெறப் படுகின்றன. இந்த உண்மையானது பெயரெச்சத் தொடரன்களை (10)-இல் குறிக்கப் பெற்றுள்ளது போன்ற வாக்கியங்களினின்றும் வருவிக்க முடியாது என்பதைத் திட்டவட்டமாக வலியுறுத்து வதைக் காணலாம்.

### 4.0. அண்மை நோக்கில் உள்வினைகள்

4.1. இனி, உள்வினைகளுக்கு வருவோம். மேலே (5), (6)-இல் (ஆ) பிரிவில் நிகழும் *ஆகிய* என்னும் வடிவமும், (அ) பிரிவில் அமைந்த *மணந்த* என்பதில் நிகழும் அகரக் கிளவியும் உள்வினைக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்று முன்பு கண்டோம். இவற்றுள் *ஆகிய* என்னும் பெயரெச்சத்துக்கு நிகரான உள்வினைப் பயனிலைகளாக *ஆவான், ஆவாள்* அமைவதை (13), (14)-இல் அமைந்த வாக்கிய அமைப்புக்களில் காணலாம். இவ்வாறே, *மணந்த* என்பதில் நிகழும் அகரக் கிளவிக்கு நிகரான பயனிலை வடிவங்களாக (15), (16)-இல் உள்ள *மணந்தவன், மணந்தவள்* என்பவற்றில் நிகழும் *-அவன், -அவள்* என்னும்

வடிவங்கள் அமைகின்றன.[1] அகரக் கிளவியாகிய உள்வினை எங்ஙனம் விகுதியாக்க விதியின் மூலம் விகுதியாக மாற்றப்படு கின்றதோ அங்ஙனமே (15), (16)-இல் நிகழும் *-அவன், -அவள்* என்ற உள்வினைகளும் விகுதியாக்க விதியின் மூலம் விகுதிகளாக மாற்றப்படுகின்றன. இவ்விதி செயல்படுவதற்கு முன்னதாக, *ஆவான், ஆவாள்* உள்வினைகளும் *-அவன், -அவள்* உள்வினைகளும் பின்வரும் கிளவியாக்க விதிகளின் மூலம் வருவிக்கப்படுகின்றன.

17 (அ) ஆகு+[[+இருப்பு][+ஆண்பால்]] > [ஆவான் / அவன்] / [மணந்தவன் / மணந்த்]–

(ஆ) ஆகு+[[+இருப்பு]+[-ஆண்பால்] > [ஆவாள் / அவள்] / [மணந்தவள் / மணந்த்]–

இக்கிளவியாக்க விதிகளைத் தொடர்ந்து அமையும் அமைப்புக்கள் பின்வருமாறு இருக்கும்.

18 (அ) முருகன் வள்ளியை மணந்தவன் # ஆவான்
(ஆ) முருகன் வள்ளியை மணந்து # அவன்

19 (அ) வள்ளி முருகன் மணந்தவள் # ஆவாள்
(ஆ) வள்ளி முருகன் மணந்து # அவள்

மேலே (ஆ) பிரிவில் நிகழும் **மணந்த் # அவன்/அவள்** என்ற அமைப்பு விகுதியாக்க விகாரத்துக்கு உட்பட்டு விட்டிசையை இழக்கின்றது. இவ்விகாரம் (அ) பிரிவில் அமைந்த அமைப்புக் களின் மீது செயல்படுவதில்லை.

### 5.0. உள்வினைக்கிளவிகள்

5.1. இந்த ஆய்வில் இதுவரை நாம் நான்கு வகையான உள் வினைகளைச் சந்தித்துள்ளோம். அவை: *ஆவான் / ஆவாள்;* இவற்றுக்கு நிகரான பெயரெச்ச வடிவினதாகிய *ஆகிய, அவன்/ அவள்,* இவற்றுக்கு நிகரான பெயரெச்ச உள்வினையாகிய அகரக் கிளவி. தற்செயலாக *மணந்தவன்/மணந்தவள், மணந்து* என்று இரண்டு வகையான வினைப்பயனிலைகளையும் இந்த ஆய்வில் காண்கிறோம். இவற்றுள் *மணந்தவன், மணந்தவள்* என்பவை *ஆவான், ஆவாள்* ஆகிய என்ற உள்வினைகள் முன் நிகழும் சிறப்பு வினைப்பயனிலைகளாகவும் (Personal Predicate Verbals) *மணந்து*

---

1. -அவன், -அவள் ஆகியவற்றைத் தவிர்த்து **-அன், -அள்** என்பவற்றை மட்டும் உள்வினைகளாகக் கொள்ளமுடியும். இந்த மாற்று ஆய்வின்படி **-அவ்=** என்பது சாரியையாகக் கொள்ளலாம். அல்லது அவ் என்பதைச் செய்து வாய்பாட்டு வினைகளின் ஒருங்கிணைந்த உறுப்பாகக் கொள்ளலாம். இத்தகைய ஆய்வில் ***செய்தல்** என்ற வாய்பாட்டு வினைகள் இனங்காணப் படும். இந்த வாய்பாட்டு வினைகள் ***செய்தம்** வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களின் திரிபுகளாகக் கருதற்பாலனவாகும்.

என்பது *அவன், அவள், அ* ஆகிய உள்வினைகள் முன் நிகழும் பொதுவினைப் பயனிலைகளாகவும் (Impersonal Predicate Verbals) கொள்ளத்தக்கவையாகும். தமிழ்ப் பயனிலைகள் பற்றிய ஆய்வில் இதுவரை பொதுவினைப் பயனிலைகள் பற்றிய செய்திகள் உள் வினை நிகழ்ச்சிகளின் அடிப்படையில் சிந்திக்கப்படவில்லை. உள்வினைகளை மையமாகக் கொண்டு அமைந்த இந்த ஆய்வில் பொதுவினைப் பயனிலைகள் தமிழில் நிகழுமாற்றினைத் தெளிவாக அறியமுடிகின்றது. இது பற்றி மேலும் பின்னர்ப் பேசப்படும்.

**6.0. பெயரெச்சத் தொடரனும் அண்மை, சேய்மை வாக்கியங்களும்**

6.1. மேலே குறிப்பிட்ட செய்திகளின் அடிப்படையில் பெயரெச்சத் தொடரன்களுடன் தொடர்புள்ள வாக்கியங்களின் தன்மை அறியப்பட்டது. இத்தகைய வாக்கியங்கள் (13) முதல் (16) வரை குறிக்கப்பெற்றுள்ளவை போன்றவையாகும். இதனைக் கருத்தில் கொண்டு, (11)-இல் அமைந்துள்ள *முருகன் பார்த்த பெண்* என்ற பெயரெச்சத் தொடரன் பின்வரும் வாக்கியத்துடன் நேரடித் தொடர்புடையதாகக் கொள்ளப்படுகின்றது.

(20) பெண் முருகன் பார்த்தவள்

பெயரெச்சத் தொடரன்கள் பற்றிய நமது சிந்தனை ஓர் அடிப்படைக் கருத்தினை வலியுறுத்துவதாக அமைகின்றது. பெயரெச்சத் தொடரனில் அமையும் தலைமைப் பெயர்கள் நேரடித் தொடர்புள்ள வாக்கியங்களில் எழுவாயாக மட்டுமே நிகழத் தக்கனவாகி உள்வினைப் பயனிலைகளைக் கொள்கின்றன. இதன்மூலம், பெயரெச்சத் தொடரன்களுடன் நேரடித் தொடர்புடைய வாக்கியங்களிலிருந்து ஒன்றுக்கு மேற்பட்ட பெயரெச்சத் தொடரனை வருவிக்க முடியாது என்பதும், அவ்வாறு வருவிக்கப் பெற்ற பெயரெச்சத் தொடரனில் அமைந்த தலைமைப் பெயரானது வாக்கியங்களில் உள்வினைப் பயனிலைக்குரிய எழுவாயாக மட்டுமே நிகழவல்லது என்பதும் பெறப்படுகின்றன. இந்த உண்மையினை (13) முதல் (16) வரை அமைந்துள்ள வாக்கியங்கள், மற்றும் (20)-இல் உள்ள வாக்கியம் இவற்றின்மூலம் நன்கு அறியலாம். இந்த வாக்கியங்களில் எழுவாயாக நிகழும் உறுப்பைத் தவிர வேறு எந்த உறுப்பினையும் பெயரெச்சத் தொடரனில் தலைமைப் பெயராகக் கொண்டுவர முடியாது. இத்தகைய வரையறையை முந்தைய ஆய்வுகள் நமக்கு அளிக்க வில்லை. இந்த வரையறைதான் வாக்கியம் (12)-இல் செயப்படு பொருள் பெயர்த்தொடரில் நிகழும் *ஒரு* என்னும் பெயரடையானது (11)-இல் அமைந்த பெயரெச்சத் தொடரனின் தலைமைப் பெயரில் ஏன் நிகழவில்லை என்பதைத் தெளிவுபடுத்தும். ஏனெனில் *முருகன் பார்த்த பெண்* (11) என்னும் பெயரெச்சத்தொடரன்

நேரடியாகத் தொடர்புகொள்ளும் வாக்கியம் *பெண் முருகன் பார்த்தவள்* என்பதாகத்தான் இருக்க முடியுமே தவிர, *முருகன் ஒரு பெண்ணைப் பார்த்தான்* என்பதாக இருக்க முடியாது. பெயரெச்சத்தொடரன்களுடன் நெருங்கிய தொடர்புடைய நேரடி வாக்கியங்களை அண்மை வாக்கியங்கள் என்று குறிப்பிடலாம். இந்த வகையில் *பெண் முருகன் பார்த்தவள்* என்பது ஓர் அண்மை வாக்கியமாகும். *முருகன் ஒரு பெண்ணைப் பார்த்தான்* என்ற வாக்கியம் *முருகன் பார்த்த பெண்* என்ற பெயரெச்சத் தொடரனுடன் நேரடித் தொடர்புடையதல்ல. இத்தகைய வாக்கியங்களைச் சேய்மை வாக்கியங்கள் என்று குறிப்பிடலாம். பெயரெச்சத்தொடரன்கள் அண்மை வாக்கியங் களினின்றும் வருவிக்கப்படுவனவாகும். இவ்வாறே அண்மை வாக்கியங்கள் சேய்மை வாக்கியங்களினின்றும் நேரடியாக வருவிக்கப் படுபவையாகும். நேரடியாகச் சேய்மை வாக்கியங்களைப் பெயரெச்சத்தொடரன்களுடன் தொடர்புபடுத்துவதை இந்த ஆய்வு அடியோடு மறுத்துவிடுகின்றது. சேய்மை வாக்கியங்கள் அண்மை வாக்கியங்களாக மாற்றப்பட்டாலன்றி, பெயரெச்சத் தொடரன்களை வருவிக்க இயலாது.

*6.2.* சேய்மை வாக்கியத்தில் நிகழும் எந்த ஒரு பெயர்நிலைக் கிளவியும் பெயரெச்சத் தொடரனில் தலைமைப் பெயராக இடம் பெறவேண்டுமானால், அது முதலில் அண்மை வாக்கியத்தில் எழுவாய் நிலைக்கு உயர்த்தப்படவேண்டும். எடுத்துக்காட்டாகப் பின்வரும் இரண்டு வாக்கியங்களைக் கருத்தில் கொள்ளவும்.

*(21)* முருகன் ஒரு பெண்ணைப் பார்த்தான். *(சேய்மை வாக்கியம்)*

*(22)* பெண் முருகன் பார்த்தவள். *(அண்மை வாக்கியம்)*

மேலே சேய்மை வாக்கியத்தில் செயப்படுபொருளாக நிகழும் *ஒரு பெண்* என்னும் பெயர்த்தொடர் அண்மை வாக்கியத்தில் எழுவாய் நிலைக்கு உயர்த்தப்பட்டு *அவள்* என்னும் உள்வினைப் பயனிலையைத் தனக்குரியதாகக் கொள்கின்றது. இவ்வாறு உயர்த்தப்படும்போது உயர்த்தப்படும் பெயர்த்தொடரில் *ஒரு/ ஓர்* என்னும் பெயரடை இருக்குமாயின் அது அண்மை வாக்கியத்தில் தவிர்க்கப்பட்டுவிடுகின்றது. ஏனெனில் அண்மை வாக்கியத்தில் எது பெயரெச்சத்தொடரனில் தலைமைப் பெயராக வரமுடியும் என்ற செய்தி வரையறை செய்யப்பட்டுவிடு கின்றது. ஆகவே அண்மை வாக்கியங்களில் எழுவாயாக நிகழும் பெயர்த்தொடரில் *ஒரு/ஓர்* என்ற பெயரடையின் நிகழ்ச்சிக்கு வாய்ப்பில்லாமல் போய்விடுகின்றது.

6.3. அண்மை வாக்கியங்கள், சேய்மை வாக்கியங்களினின்றும் வருவிக்கற்பாலன என்று மேலே குறிப்பிட்டோம். பிந்தியவற்றி னின்றும் முந்தியவற்றை வருவிக்குமாற்றினைப் பற்றிச் சிந்திப்பதற்கு முன் உள்வினைகள் பற்றிய மேலும் சில செய்திகளை இங்கு அறிந்துகொள்வது அவசியமாகின்றது. அண்மை வாக்கியத்தில் உள்வினைகள் விகுதிகளாக மாற்றம் செய்யப்பட்டு எழுவாயுடன் இசைந்து சிறப்பு வினைப் பயனிலைகளாக நிகழ்கின்றன. இத்தகைய உள்வினைகள் சேய்மை வாக்கியங்களிலும் குறிக்கத் தக்கவையாகின்றன. அண்மை வாக்கியங்கள் சேய்மை வாக்கியங் களினின்றும் வருவிக்கற்பாலனவாதலால், பிந்தியவற்றிலும் உள் வினைகள் சுட்டப்பட வேண்டியது தவிர்க்க முடியாததா கின்றது. அண்மை வாக்கியங்களில் உள்வினைகள் விகுதி நிலையில் செயல்படுவதால், சேய்மை வாக்கியங்களிலும் இவ்வினைகள் விகுதி நிலையிலேயே சுட்டப்பெறும். தவிரவும் அண்மை வாக்கியங்களில் விகுதி நிலையில் அமைந்த உள்வினைகள் செய்து, செய்கின்று, செய்பு[2] ஆகிய வாய்பாட்டுப் பொது வினைகளை (Impersonal Verbs) அடுத்து நிகழ்வதால், சேய்மை வாக்கியங் களிலும் விகுதிநிலையில் அமைந்த உள்வினைகளை மேற்படி வாய்பாட்டுப் பொதுவினைகளையடுத்துச் சுட்டப்பெறுவது தவிர்க்கமுடியாததாகின்றது. இந்த உண்மைகளைக் கருத்தில் கொண்டு *முருகன் ஒரு பெண்ணைப் பார்த்தான்* என்ற சேய்மை வாக்கியத்தில் *பார்த்தான்* என்பதில் *பார்த்து* என்பதையடுத்து நிகழும் *ஆன்* என்னும் ஆண் பால் விகுதி உள்வினையாகக் கொள்ளப்பெறும். ஆக, பொது வினைகளையடுத்து நிகழும் உள்வினைகள் மூன்று வகையினவாகும். அவை, பெயரெஞ்சு கிளவியில் நிகழும் அகரக்கிளவியும், அண்மை வாக்கியங்களில் நிகழும் *-அவன், -அவள், -அவர்கள், -அவை, -அது* ஆகிய சிறப்பு உள்வினைகளும் (Personal Copula Verbs), சேய்மை வாக்கியங்களில் வினைப் பயனிலைகளில் நிகழும் பல்வேறு வகையான இயைபு விகுதிகளாகிய சிறப்பு உள்வினைகளும் ஆகும். இம்மூன்றும் மூன்று வகையான தொடரனியல் சூழலில் நிகழ்வனவாகும்.

## 7.0. உள்வினையின் நிலைக்களன்

7.1. உள்வினைகள் பயனிலைத் தொடரில் பெயர்த் தொடரை யடுத்து நிகழ்வனவாகும். இந்த உண்மைகளைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

---

2. செய்பு என்னும் வாய்பாட்டுப் பொது வினையானது செய்பவன்/செய்வான், உண்பவன்/உண்பான், படிப்பவன்/படிப்பான் ஆகியவற்றில் நிகழும் செய்பு/ செய்வு, உண்பு, படிப்பு ஆகியவற்றை உணர்த்துவதாகும்.

(23) மாதவி ஓர் நடிகை ஆவாள்

(24) மாதவி ஓர் நடிகையும் பாடகியும் ஆவாள்

இந்த எடுத்துக்காட்டுகளைக் கருத்தில் கொண்டு உள்வினைகளின் நிகழ்ச்சியைப் பொதுமைப்படுத்திப் பின்வருமாறு வரையறுக்கலாம்.

(25) உள்வினைகள் பெயர்த் தொடர்களையடுத்து நிகழ்வனவாகும்.

இந்த வரையறையானது, உள்வினைகளை மேற்கொள்ளும் செவ்வினைகளாகிய செய்து, செய்கின்று, செய்பு வாய்பாட்டுப் பொது வினைகளைப் பெயர்த்தொடர் உறுப்பினவாகக் கொள்ளும். இதன் விளைவு, பெயர்ப்பயனிலைகளும் வினைப்பயனிலைகளும் ஓர் ஒருங்கிணைக்கப்பட்ட தொடரனியல் ஆய்வுக்கு உட்படுத்தப் பட்டுவிடுகின்றன. இந்த வகையில் வினைப் பயனிலைகள் பெயர்ப் பயனிலைகளின் ஓர் உட்பிரிவாய் அமைகின்றன. உள்வினையும், அதனைச் சார்ந்து நிற்கும் பெயர்நிலைக் கிளவியும் சேர்ந்து உள்வினைத் தொடர் (Copula Phrase) அமைகின்றது. இத்தகைய உள்வினைத் தொடர்கள் பயனிலைத் தொடர்களின் ஆதிக்கத்தின் கீழ் நிகழ்வனவாகும். உள்வினைத் தொடரில் பெயர்நிலைக் கிளவியாக அமையும் உறுப்பு ஒரு வாக்கியமாகக் கூட இருக்கலாம். இது இக்கட்டுரையின் வளர்ச்சிப் போக்கில் புலனாகும்.

### 8.0. அண்மை நோக்கில் சேய்மை

8.1. உள்வினைத் தொடரின் அமைப்பைக் கருத்தில் கொண்டு, சேய்மை வாக்கியங்களினின்றும் அண்மை வாக்கியங்கள் வருவிக்கப்படும் முறையினைப் பற்றி இனிச் சிந்திக்கலாம். இந்த ஆய்வுக்குப் பின்வரும் சேய்மை வாக்கியத்தினைக் கருத்தில் கொள்ளலாம்.

(26) முருகன் வள்ளியை மணந்தான்.

இவ்வாக்கியத்தின் புதைநிலை அமைப்பு பின்வருமாறு இருக்கும்.

(27) [முருகன் [வள்ளியை [மணந்த்] ஆகு]]

8.2. இந்த அமைப்பில் நிகழும் ஆகு என்னும் பொருள் கோட்கிளவி இருப்பு விகாரமும் (Copula Transformation), இயைபு விகாரமும் (Agreement Transformation) செயல்பட்ட பிறகு, பின்வரும் கிளவியாக்க விதியின்மூலம் ஓர் உள்வினையைத் தோற்றுவிக்கும்.

(28) ஆகு + [+ இருப்பு, + ஆண்பால்] > ஆன் #

இவ்வாறு வருவிக்கப்பெற்ற உள்வினையானது பின்னர் விகுதியாக்க விகாரத்தில் மூலம் விகுதியாக மாற்றப்பட்டு (26)-இல் உள்ள அமைப்பாகின்றது.

8.3. மேலே (27)-இல் உள்ள அமைப்பு (26)-இல் உள்ள சேய்மை வாக்கியத்தை வருவிப்பதுடன், பின்வரும் அண்மை வாக்கியங்களின் தாயகமாகவும் அமைகின்றது.

29(அ) வள்ளி முருகன் மணந்தவள்
(ஆ) வள்ளி முருகன் மணந்தவள் ஆவாள்

30(அ) முருகன் வள்ளியை மணந்தவன்
(ஆ) முருகன் வள்ளியை மணந்தவன் ஆவான்

இந்த அண்மை வாக்கியங்கள் (27)-இல் குறிக்கப் பெற்றுள்ள அமைப்பினின்றும் வருவிக்கத்தக்கனவாகும். முதலில் (29)-இல் உள்ள அண்மை வாக்கியங்கள் எவ்வாறு வருவிக்கப்படுகின்றன என்பதைக் காணலாம்.

8.4. அண்மை வாக்கியங்களாக (29)-இல் குறிக்கப்பெற்றுள்ள இரண்டு வகை வாக்கியங்களையும் வருவிக்கும் வகையில், (27)-இல் உள்ள அமைப்பு முதலில் செயப்படுபொருளாகிய *வள்ளி* என்னும் பெயர்நிலைக் கிளவியானது எழுவாயாக உயர்த்தப் பெற்றுப் பின்வருமாறு மாற்றம் பெறுகிறது.

(31) வள்ளி [ [ [ [ முருகன் மணந்த் ] ] ஆகு ] ]
1234 43 21

இந்த அமைப்பில் [முருகன் மணந்த்] என்ற பகுதி உள்வினைத் தொடரின் பெயர்நிலைக் கிளவியாகும். இப்பகுதி ஒரு வாக்கியமாக அமைந்து பெயர்நிலைக் கிளவியாகச் செயல்படுகின்றது. அடைப்புக் குறிகளின் கீழ் உள்ள 1,2,3,4 என்ற எண்கள் முறையே பயனிலைத் தொடர், உள்வினைத் தொடர், பெயர்த்தொடர், வாக்கியம் ஆகியவற்றை உணர்த்துவனவாகும். இருப்பு விகாரம், இயைபு விகாரம், கிளவியாக்கம், விகுதியாக்கம் ஆகியவை நிகழ்ந்த பிறகு *மணந்த்+ஆகு* என்ற பகுதி *மணந்தவள்* என்று வடிவம் பெற்று *வள்ளி முருகன் மணந்தவள்* என்ற அண்மை வாக்கியம் உருவாகின்றது.

8.4.1. இரண்டாவதாக, 29(ஆ) பிரிவில் உள்ள அண்மை வாக்கியத்தை வருவிப்பதற்கு, (31)-இல் உள்ள அமைப்பில் காணப்படும் ஆகு என்னும் பொருள்கோட்கிளவி பிரதியாக்கம் (Copying) செய்யப்படுகின்றது. இதன் விளைவாகப் பின்வரும் அமைப்பு உருவாகின்றது.

(32)வள்ளி [ [ [ [ முருகன் மணந்த் ஆகு ] ] ஆகு ] ]
1234 43 21

8.4.2. அடைப்புக்குறிகளின் கீழ் உள்ள எண்கள் முந்தைய செய்திகளையே உணர்த்துகின்றன. இயைபு விகாரம் இருமுறை செயல்படுகின்றது. முதலில் நிகழும் பொருள்கோட் கிளவியாகிய *ஆகு* இயைபு விகாரம், கிளவியாக்க விதி, விகுதியாக்க விகாரம் ஆகியவை நிகழ்ந்த பிறகு *அவள்* என்ற வடிவம் பெற்று *மணந்த்* என்பதுடன் போய்ச் சேர்கின்றது. இரண்டாவதாக உள்ள *ஆகு* இருப்பு மற்றும் இயைபு விகாரங்கட்கு உட்பட்டுக் கிளவியாக்க விதியின் மூலம் *ஆவாள்* என்று வடிவம் பெறுகின்றது. இந்த ஆய்வில் ஒரு குறிப்பிடத்தக்க செய்தி உண்டு. முதலில் நிகழும் *ஆகு* என்பது *அவள்* என்று வடிவம் பெற்றாலும் அது உள் வினையாகக் கொள்ளப்படமாட்டாது. ஓர் இயைபு விகுதி யாகவே அது கருதப் பெறும். காரணம், அதன் பொருண்மை யமைப்பில் உள்வினைக்குரிய இருப்புப் பொருண்மையின் நிகழ்ச்சி குறிக்கப்படவில்லை. இவ்வாறு மேற்படி பொருண்மை குறிக்கப் பெறாமல் போவதற்குக் காரணம் இரண்டாவதாக நிகழும் *ஆகு* என்பது அப் பொருண்மையை உணர்த்துவதே யாகும். ஒரு முற்றுவாக்கிய (Simple Sentence) அமைப்பில் இரண்டு உள்வினைகளின் நிகழ்ச்சிக்கு வாய்ப்பில்லை. *வள்ளி முருகன் மணந்தவள்* என்ற வாக்கியத்தில் **மணந்தவள்** என்ற வினை யமைப்பில் நிகழும் -*அவள்* என்னும் வடிவம் உள்வினையாக நிகழ, அதே வடிவம் *வள்ளி முருகன் மணந்தவள் ஆவாள்* என்ற வாக்கியத்தில் உள்வினையாகக் கொள்ளப்பெறும் தகுதியை இழந்துவிடுகின்றது. இதன்மூலம், உள்வினையானது குறிப்பிட்ட தொடரனியற் சூழலில் தனது பொருண்மையை இழந்து, இலக்கணப் பொருண்மையை மட்டுமே உணர்த்தவும் வல்லது என்ற உண்மை புலனாகின்றது. இவ்வாறு அமைவது உள்வினையின் பண்புகளுள் ஒன்றாகும்.

8.5. இனி, (30)-இல் உள்ள அண்மை வாக்கியங்கள் எங்ஙனம் (27)-இலிருந்து வருவிக்கப்படுகின்றன என்பதைச் சிந்திக்கலாம். இத்தகைய அண்மை வாக்கியங்களில் எழுவாயாக எந்த ஒரு பெயர் நிலைக் கிளவியும் ஏற்றம் பெறும் வாய்ப்பில்லை. ஏனெனில் சேய்மை வாக்கியத்தில் எழுவாயாக உள்ள உறுப்பே, அண்மை வாக்கியத்திலும் எழுவாயாக உள்ளது. ஆனால் இரண்டிலும் பயனிலைத் தொடர்கள் ஒரே வடிவினவாக இல்லை. எனவே, (30)-இல் அமைந்த பயனிலைத் தொடர்களைப் பெறுவதற்கு (26)-இல் உள்ள *முருகன் வள்ளியை மணந்தான்*

என்ற சேய்மை வாக்கியம் பின்வருமாறு மாற்றியமைக்கப்பட வேண்டியதாகின்றது.

*(33) வள்ளியை மணந்தவன் முருகன்*

இத்தகைய வாக்கியங்கள் தொடரனியற் பரப்பில் கவை வாக்கியங்கள் (Cleft Sentences) எனக் குறிக்கப்பெறும். சேய்மை வாக்கியமாகிய (26)-இல் *முருகன்* என்னும் பெயர்நிலைக் கிளவி எழுவாயாக இருந்தபோதிலும், (33)-இல் **வள்ளியை மணந்தவன்** என்ற பயனிலைத் தொடரே எழுவாயாகச் செயல்படுவதுபோல் தோன்றுகிறது. இதனை அரண் செய்வதுபோல் உள்ளன பின்வரும் வாக்கிய அமைப்புகள்.

*34(அ) வள்ளியை மணந்தவன் முருகன் ஆவான்.*

*(ஆ) வள்ளியை மணந்தது முருகன் ஆகும்.*

இந்த இரண்டு வாக்கிய அமைப்புக்களிலும் *ஆவான், ஆகும்* ஆகிய உள்வினைகள் முறையே *வள்ளியை மணந்தவன், வள்ளியை மணந்தது* ஆகிய பெயர்த்தொடர்களுடன் இசைந்த சிறப்பு வினைப் பயனிலைகளாகச் செயல்படுவதைக் காணலாம். சேய்மை வாக்கியத்தில் உள்ள பயனிலைத் தொடர் முழுதும் எழுவாய் நிலைக்கு உயர்த்தப்பட்டுள்ள உண்மையைக் குறிப்பனவாக அமைந்துள்ளன (34)-இல் உள்ள வாக்கிய அமைப்புக்கள். இதனைக் கருத்தில் கொண்டு, (33)-இல் *வள்ளியை மணந்தவன்* என்ற பெயர்த்தொடர் எழுவாயாகவும், *முருகன்* என்னும் உறுப்புப் பானது பயனிலையாகவும் செயல்படுவதாகத் துணியலாம். ஆனால் எழுவாய் நிலையை இழந்து (33), (34)-இல் பயனிலையாக நிகழும் *முருகன்* என்னும் பெயர்நிலைக்கிளவியானது தன் பழைய நிலையை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. இந்த நிலையில் (33), (34)-இல் உள்ள வாக்கிய அமைப்புக்களும் எழுவாய் ஏற்றத்துக்கு (Subject Raising) உள்ளாகின்றன. இதன் விளைவாக, பயனிலையாகச் செயல்படும் *முருகன்* என்ற உறுப்பு எழுவாய் நிலைபெற்று (30)-இல் உள்ள *முருகன் வள்ளியை மணந்தவன், முருகன் வள்ளியை மணந்தவன் ஆவான்* என்ற வாக்கிய அமைப்புக்கள் தோற்றம் கொள்கின்றன. இந்த மாற்றங்களைப் பின்வருமாறு தொகுத்துக் காட்டலாம்.

*(35) முருகன் வள்ளியை மணந்தான் (=26)*

*(36) வள்ளியை மணந்தவன் முருகன் (=33)*

*(37) முருகன் வள்ளியை மணந்தவன் (=(30)(அ))*

இந்த மாற்றங்களை (27)-இல் குறிக்கப்பெற்றுள்ள *[முருகன் [வள்ளியை [மணந்த்]ஆகு]]* என்ற அமைப்பினை அடிப்படையாகக்

கொண்டு ஆராயலாம். முதலில் இருப்பு மற்றும் இயைபு விகாரங்களும், தொடர்ந்து பயனிலைத் தொடர் எழுவாயாக ஏற்றம் பெறும் விகாரமும், (27)-இன் மீது செயல்பட்டு, பின்வரும் அமைப்பு தோற்றம் கொள்கிறது.

(38)[[வள்ளியை மணந்த்] + ஆகு + [இருப்பு, + ஆண்பால்]] முருகன்

இதனைத் தொடர்ந்து கிளவியாக்க விதி செயல்பட்டு ஆகு + [+இருப்பு, + ஆண்பால்] என்னும் பகுதி **முருகன்** என்ற பயனிலையின் முன்னர் **–அவன்** என்னும் உள்வினையாகத் தோற்றம் கொள்கின்றது. இந்த உள்வினை பின்னர் விகுதியாக்க விகாரத்துக்கு உட்படுகின்றது. **–அவன்** என்னும் உள்வினைத் தோற்றத்துக்கு, பெயர்ப் பயனிலைச் சூழல் இன்றியமையாதது என்பதை நினைவில் கொள்ளவேண்டும். இந்தப் பயனிலை உறுப்பு, முன்னர் எழுவாயாக நிகழ்ந்த ஒன்று என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். உள்வினையைத் தோற்றுவிக்கும் கிளவியாக்க விதியினை, பயனிலைத் தொடர் எழுவாயாக ஏற்றம் பெற்ற பிறகும், (38)-இல் உள்ள பெயர்ப் பயனிலையானது எழுவாயாக ஏற்றம் பெறுவதற்கு முன்பும் செயல்படுத்திவிட வேண்டும். இல்லையெனில், **–அவன்** என்னும் உள்வினை தோன்று வதற்கான தொடரனியற் சூழல் கிடைக்காமற் போய்விடும். மேலே (38)-இல் உள்ள அமைப்பு உடனடியாகத் தோற்றுவிப்பது (36)-இல் உள்ள வாக்கிய அமைப்பினையாகும். இங்ஙனம் பெறப்பட்ட *வள்ளியை மணந்தவன் முருகன்* என்ற அமைப்பானது எழுவாய் ஏற்றம் பெற்று (37)-இல் உள்ள *முருகன் வள்ளியை மணந்தவன்* என்ற அமைப்பினைத் தோற்றுவிக்கிறது. ஆக *வள்ளியை மணந்த முருகன்* என்ற பெயரெச்சத் தொடரை வருவிக்க (35), (36)-இல் உள்ள இரண்டு வகையான சேய்மைத் தொடரன்களைச் சந்தித்தாக வேண்டியுள்ளது. *முருகன் வள்ளியை மணந்தவன் ஆவான்* (30)(ஆ) என்ற வாக்கிய அமைப்பின் வருவிப்பு முறை கிட்டத்தட்ட மேலே குறிப்பிட்டது போன்றதாயினும் (27)-இல் உள்ள அமைப்பில் நிகழும் *ஆகு* என்னும் பொருள்கோட்கிளவி முதலில் பிரதியாக்கம் செய்யப்படுகிறது. இதனைத் தொடர்ந்து பயனிலைத் தொடர் எழுவாயாக ஏற்றம் பெறுகிறது. பயனிலைத் தொடரானது எழுவாய் நிலைக்கு உயர்த்தப்படும்போது, ஏற்கெனவே எழுவாயாக உள்ள உறுப்பு பயனிலை நிலைக்குத் தள்ளப்படுகின்றது. இதன் விளைவாகப் பின்வரும் அமைப்பு கிடைக்கின்றது.

(39)[[வள்ளியை மணந்த் + ஆகு + [+ ஆண்பால்]] முருகன் ஆகு]

எழுவாய் ஏற்ற விகாரம் (முதல் கட்டம்) இரண்டு பொருள் கோட்கிளவிகளுள் முதலாவதை (39)-இல் காட்டியுள்ளது போல் பயனிலைத் தொடருடன் கொண்டு சென்றுவிடுகின்றது. (39)-இல் உள்ள அமைப்பு பின்வரும் அமைப்பினைத் தோற்றுவிக்கத் துணை புரிகின்றது.

(40)[வள்ளியை மணந்தவன்] முருகன் ஆகு

இந்த அமைப்பில் *வள்ளியை மணந்தவன்* என்ற தொடர் எழுவாய் ஆகலின் இருப்பு மற்றும் இயைபு விகாரங்கள் செயல்பட்டுப் பின்வரும் அமைப்பு தோற்றம் கொள்ள வகை ஏற்படுகின்றது.

(41)[வள்ளியை மணந்தவன்] முருகன் ஆவான்

இந்த அமைப்பில் பயனிலையாக நிகழும் *முருகன்* என்பது எழுவாய் ஏற்றம் பெறுகையில் 30(ஆ) பிரிவில் உள்ள *முருகன் வள்ளியை மணந்தவன் ஆவான்* என்ற வாக்கிய அமைப்பு தோற்றம் கொள்கின்றது. இந்த வாக்கியத்தினை (40)-இல் உள்ள அமைப்பினின்றும் நேரடியாகவும் வருவிக்கலாம். எழுவாய் ஏற்றத்தினை (40)-இல் உள்ள அமைப்பின்மீது செயல்படுத்தி *முருகன் [[வள்ளியை மணந்தவன்] ஆகு]* என்ற அமைப்பினை வருவித்துக் கொண்டு, பின்னர் ஆகு என்னும் பொருள்கோட் கிளவியை இருப்பு மற்றும் இயைபு விகாரங்களைச் செயல்படுத்தி, கிளவியாக்க விதியின் மூலம் *ஆவான்* என மாற்றுவதன்மூலம் (41)-இல் உள்ள அமைப்பினைப் பெறலாம். இந்த மாற்று வழி மேலானதாகத் தோன்றுகிறது. ஏனெனில் *முருகன்* என்னும் எழுவாய் உறுப்பு *ஆவான்* என்னும் உள்வினைப் பயனிலையுடன் நேர்முகமாக இசைந்து நிற்கிறது.

## 9.0. செயல்விளக்கம்

9.1. பெயரெச்சத் தொடரன்கள் பற்றிய ஆய்வில் அண்மை வாக்கியங்கள், சேய்மை வாக்கியங்கள் என்று இருவகை வாக்கியங்களை மேலே குறிப்பிட்டோம். முந்தைய ஆய்வுகளில் பெயரெச்சத் தொடரன்கள் சேய்மை வாக்கியங்களுடன் தொடர்புபடுத்தப்படும் போக்கே நிலவுவது சுட்டப்பெற்று, அந்தப் போக்கு ஏற்புடையதல்லவென்றும், சேய்மை வாக்கியங் களினின்றும் வருவிக்கப் பெற்ற அண்மை வாக்கியங்களே பெயரெச்சத் தொடரன்களுடன் நேரடித் தொடர்புடையவை என்றும் மேலே நாம் வலியுறுத்தினோம். இந்த உண்மைகளைக் கருத்தில் கொண்டு (5)-இல் உள்ள பெயரெச்சத் தொடரன்களை வருவிப்பது பற்றி இனிச் சிந்திக்கலாம். இப்பெயரெச்சத்

தொடரன்களும், இவற்றுடன் தொடர்புள்ள அண்மை வாக்கியங்களும் ஆய்வுக்காக வேண்டி மீண்டும் கீழே நினைவு கூரப்படுகின்றன.

42(அ) வள்ளியை மணந்த முருகன்
(ஆ) வள்ளியை மணந்தவனாகிய முருகன்

43(அ) முருகன் வள்ளியை மணந்தவன் (....... => 43(அ))
(ஆ) முருகன் வள்ளியை மணந்தவன் ஆவான் => (....43 (ஆ))

9.2. அண்மை வாக்கியங்களாக (43)-இல் குறிக்கப்பெற்றுள்ளவை எவ்வாறு சேய்மை வாக்கியங்களினின்றும் வருவிக்கப்படுகின்றன என்பது பற்றி முன்பே நாம் சிந்தித்துள்ளபடியால், நேரடியாக (42)-இல் குறிக்கப்பெற்றுள்ள அமைப்பினின்றும் வருவிப்பதைப் பற்றி இனிச் சிந்திக்கலாம்.

(44)




இந்த அமைப்பில் வா(க்கியம்) என்ற கணுவின் கீழ்க் குறிக்கப் பெற்றள்ள வாக்கியம் அண்மை வாக்கியம் என்பதும், இவ்வாக்கியத்தில் நிகழும் எழுவாய் உறுப்பு மட்டுமே தலைமைப் பெயராக நிகழவல்லது என்பதும் மீண்டும் இங்கு நினைவுபடுத்தப் படுகின்றது.

9.3. முதலில் 42(அ)-வில் குறிக்கப்பெற்றுள்ள *வள்ளியை மணந்த முருகன்* என்ற பெயரெச்சத்தொடரன் (44)-இலிருந்து எங்ஙனம் வருவிக்கப்படுகின்றது என்பதைக் காணலாம். இந்த வருவிப்பில் பின்வரும் விதிகள் செயல்படுகின்றன.

45(அ) சமபெயர் நீக்க விகாரம்.
(இது அண்மை வாக்கியத்திலுள்ள எழுவாயை நீக்குகின்றது).

(ஆ) இருப்பு விகாரம் (இது உள்வினைப் பொருண்மையை *ஆகு* என்னும் பொருள்கோட்கிளவியுடன் சேர்க்கின்றது).

(இ) கிளவியாக்கம் (இது *ஆகு* + [+*இருப்பு*] என்பதனைத் தலைமைப்பெயரின்முன் அகரக் கிளவியாக மாற்றுகின்றது).

(ஈ) விகுதியாக்க விகாரம் (இது *மணந்த்#அ* என்ற அமைப்பினை *மணந்த* என்று மாற்றுகின்றது).

9.4. தமிழில் கீழே குறிக்கப் பெற்றுள்ளவற்றில் (அ) பிரிவில் உள்ள பெயரெச்சத் தொடரனைப் போலவே (ஆ) பிரிவில் உள்ளதும் ஏற்புடையதாகும்.

46(அ)[வள்ளியை மணந்த முருகன்] அங்கே நிற்கிறான்.
(ஆ)[முருகன், வள்ளியை மணந்தவன்] அங்கே நிற்கிறான்.

46(அ)-வில் தலைமைப்பெயரின் முன் நிகழும் **வள்ளியை மணந்த** என்னும் பெயரெச்சத் தொடரன், 46(ஆ)-வில் தலைமைப் பெயரை அடுத்து நிகழ்கின்றது. தலைமைப் பெயரை நீங்கிக் கீழே குறிப்பிட்டுள்ளது போல் பயனிலைத் தொடரையடுத்தும் பெயரெச்சத் தொடரன் நிகழவல்லது.

46(இ)முருகன், அங்கே நிற்கிறான், வள்ளியை மணந்தவன்

9.5. இந்த எடுத்துக்காட்டுகளுள் (ஆ), (இ) இரு பிரிவிலும் நிகழும் அமைப்புக்களைப் பழந்தமிழிலும் காணலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருதற்பாலனவாகும்.

(47) மூவன் பரிசில் நீட்டித்தானை (=பரிசில் நீட்டித்த மூவனை) பெருந்தலைச் சாத்தனார் பாடியது (புறம். 209. துறைக் குறிப்பு)

(48) தலைமகன் வினைமுற்றினான் (=வினைமுற்றிய தலைமகன்) தேர்ப்பாகற்குச் சொல்லினவும்... (இறையனார் களவியல், நூற்பா 59, நக்கீரர் உரை)

(49) ...நின் தந்தை, தாய் வாழியர் நிற்பயந்தசினோரே (புறம். 137)

*நிற்பயந்த நின் தந்தைதாய் வாழியர்* என்ற அமைப்பின் பொருண்மையுடன் பொருந்துவதாகும் (49)-இல் உள்ள அமைப்பு.[3]

---

3. பெயரெச்சத் தொடர் தலைமைப் பெயரின் முன் நிகழ்கையில் மேற்படி தொடரில் நிகழும் பெயரெச்ச விகுதியாகிய உள்வினை பொது உள்வினையாக (Impersonal Copula) இருப்பதையே நாம் வழக்கில் காண்கிறோம். ஆனால் சில உரையாசிரியர்கள் தமிழிலும், காப்பியத் தமிழிலும் ஒரோ வழி இந்த உள்வினைப் பெயரெச்சமானது தலைமைப் பெயரின் முன் சிறப்பு உள்வினை (Personal Copula) -யாக நிகழும் போக்கினையும் காணமுடிகின்றது. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

(1) இக்கனவிய குழையை உடையாள் இப்பொழிற்கண் உறைவாள் (=உறையும்/உறைகின்ற) ஒரு தெய்வ மகளோ (திருக்குறள் 1081, பரிமேலழகர் உரை)

(2) அப்பொழில் வாழ்வாய் (=வாழும்/வாழ்கின்ற) நீயும் அத்தன்மையை அன்றே (இறையனார் களவியல் நூற்பா 2, நக்கீரர் உரை)

(3) உலக்கையால் உதிர்ந்தன (=உதிர்ந்த) தெங்கின் ஒண்பழம் நிலந்தவை சொரிதலின் வெரீஇய அஞ்ஞை (சீவகசிந்தாமணி 92)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் பெயரெச்சத் தொடர்களை வருவிக்கையில் சமபெயர் நீக்க விகாரம் நிகழ்வதற்கு முன் இருப்பு விகாரத்துடன் இயைபு விகாரமும் நிகழ்ந்துவிட வேண்டும். இல்லையெனில் உறைவாள் (**=உறையும்/உறைகின்ற**), வாழ்வான் (=**வாழும்/வாழ்கின்ற**), உதிர்ந்தன (உதிர்ந்த) ஆகியவற்றில் நிகழும் **-ஆள், -ஆய், -அன** ஆகிய சிறப்பு உள்வினைகளைப் புற அமைப்பில் பெற வாய்ப்பில்லாமல் போய்விடும்.

9.6. பெயரெச்சத் தொடர்ன் தமிழில் தலைமைப் பெயரில் முன் நிகழ்தலே பெருவழக்கு. தலைமைப் பெயரையடுத்தும் பயனிலைத் தொடரையடுத்தும் அது நிகழ்கையில் அதன்கண் உள்ள உள்வினையானது சிறப்பு உள்வினையாக (Personal Copula) அமைகின்றது. 46(ஆ), (இ) இரண்டிலும் நிகழும் *வள்ளியை மணந்தவன்* என்ற பகுதியானது (44)-இலிருந்து பின்வரும் விதிகள் செயல்படுவதன் மூலம் கிடைக்கின்றன.

50(அ) இருப்பு மற்றும் இயைபு விகாரங்கள் (இவ்விகாரங்கள்மூலம் ஆகு +[+இருப்பு, + ஆண்பால்] என்ற அமைப்பு உருவாகின்றது)

(ஆ) சமபெயர் நீக்க விகாரம் (இயைபு விகாரம் நிகழ்ந்த பிறகே இது நிகழ வேண்டும்).

(இ) பெயரெச்சத் தொடர் அண்மைப் பெயர்ச்சி விகாரம் (இந்த விகாரம் *முருகன் வள்ளியை மணந்த்* # *ஆகு*+ *[+இருப்பு, + ஆண்பால்]* என்ற அமைப்பினைத் தோற்றுவிக்கின்றது.

(ஈ) கிளவியாக்க விதி. (இந்த விதியானது **ஆகு+ [இருப்பு, + ஆண்பால்]** என்பதனை **அவன்** என்னும் உள்வினையாக மாற்றும்).

(உ) விகுதியாக்க விகாரம் (இந்த விகாரம் *மணந்த்* # *அவன்* என்ற அமைப்பினை *மணந்தவன்* என்று **மாற்றியமைக்கும்).**

இவ்விதிகள் அனைத்தும் 46(ஆ)-வில் உள்ள **முருகன் வள்ளியை மணந்தவன்** என்ற பெயர்த்தொடரைத் தோற்றுவிப்பனவாகும். இதே விதிகள்தாம் 46(இ) பிரிவில் உள்ள சிதையுண்டு கிடக்கும் பெயர்த் தொடரையும் வருவிக்கின்றன. ஒரு வேறுபாடு: 50(இ)-யில் உள்ள விகார விதியைப் பெயரெச்சத் தொடரன் சேய்மைப் பெயர்ச்சி விகாரம் என்று மாற்றிக்கொள்ள வேண்டும். இந்தச் சேய்மைப் பெயர்ச்சி விகாரம் பெயரெச்சத் தொடரனைப் பயனிலைத் தொடரனையடுத்து நிகழுமாறு செய்கின்றது.

9.7. 43(ஆ)-வில் நிகழும் *வள்ளியை மணந்தவனாகிய முருகன்* என்ற அமைப்பினை வருவிக்க (44)-இன் மீது பின்வரும் விதிகள் செயல்படுத்தப்படும்.

51(அ) பொருள்கோட்கிளவி பிரதியாக்கம் (இந்த விகாரம் *ஆகு* என்னும் உறுப்பினைப் பிரதி செய்கின்றது).

(ஆ) இயைபு விகாரம் (இந்த விகாரம் முதல் பிரதியாகிய *ஆகு* என்னும் பொருள்கோட்கிளவியுடன் இயைபுப் பொருண்மையைக் கொண்டு சேர்க்கின்றது).

(இ) சமபெயர் நீக்க விகாரம்.

(ஈ) இருப்பு விகாரம் (இந்த விதி இருப்புப் பொருண்மையை இரண்டாவது பிரதியாகிய *ஆகு* என்பதனுடன் கொண்டு சேர்க்கின்றது).

(உ) கிளவியாக்கம். (இந்த விதி பின்வரும் அமைப்புக்களின்மீது செயல்படுகின்றது)

(1) ஆகு+ [+ஆண்பால்] > அவன் / மணந்த் # -

(2) ஆகு+ [+இருப்பு] > ஆகிய / மணந்த் # அவன் - முருகன்

(ஊ) விகுதியாக்கம் (இந்த விதி *மணந்த் # அவன்* என்ற அமைப்பை *மணந்தவன்* என்று மாற்றுகின்றது).

முன்னதாக நாம் குறிப்பிட்ட (5)/(42)-இல் நிகழும் பெயரெச்சத் தொடரன்கள் பற்றிய ஆய்வு, (6) மற்றும் (11)-இல் நிகழும் பெயரெச்சத் தொடரன்களுக்கும் பொருந்தும்.

9.8. **ஒரு மாற்றுவழி:** தமிழில் பெயரெச்சத் தொடரன்களை வருவிக்கப் பொதுவாக (44)-இல் குறிக்கப்பெற்றுள்ளது போன்ற அமைப்பினைக் கருத்தில் கொள்வது மரபாக இருந்து வருகின்றது. அண்மை வாக்கியங்கள் பற்றிய சிந்தனையின் அடிப்படையில், இந்த மரபினை விட்டு விலகி வேறொரு நெறியினை பின்பற்றலாம் என்று தோன்றுகிறது. அண்மை வாக்கியங்கள் பெயரெச்சத் தொடரன்களாக மாற்றப்படும் போது, மேற்படி வாக்கியங்களில் எழுவாயாக நிகழும் உறுப்பு ஒன்று மட்டுமே பெயரெச்சத் தொடரன்களில் தலைமைப் பெயராக அமையும் வாய்ப்பினைப் பெறுகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு (44)-இல் உள்ள அமைப்பினைப் பின்வருமாறு மாற்றி அமைக்கலாம்.

(52)




பெயரெச்சத் தொடரன்களைச் சேய்மை வாக்கியங்களிலிருந்து வருவிக்கும்போது பிந்தியவற்றில் நிகழும் எந்தப் பெயர்நிலைக் கிளவி முந்தியவற்றில் தலைமைப் பெயராக அமையும் என்பதை அறிய வாய்ப்பில்லை. இந்த நிலையைத் தவிர்க்க (44)-இல் உள்ளது போன்ற அமைப்பு தேவைப்படுகின்றது. இத்தகைய அமைப்பில் தலைமைப் பெயர் வெளிப்படையாகக் குறிக்கப் படுவதன்மூலம், சேய்மை வாக்கியத்தில் உள்ள எந்தப் பெயர்நிலைக் கிளவி பெயரெச்சத் தொடரில் தலைமைப் பெயராக நிகழ்கிறது என்பது தெளிவுபடுத்தப்படுகின்றது. இந்தச் சிக்கல் (52)-இல் இல்லை. ஏனெனில் இந்த அமைப்பில் குறிக்கப் பெற்றுள்ள வாக்கியமானது அண்மை வாக்கியமாகும். ஆகவே

எழுவாயாக நிகழும் பெயர்நிலைக் கிளவி ஒன்று மட்டுமே பெயரெச்சத் தொடரனில் தலைமைப் பெயராக நிகழும். இந்த நிகழ்ச்சி (52)-இல் உள்ளது போன்ற அமைப்பில் கண்டிப்பாக நிகழவேண்டு மாதலின், சமபெயர் நீக்க விகாரத்துக்கு இங்கே இடமில்லை. எழுவாயாக நிகழும் பெயர்நிலைக் கிளவி பயனிலைத் தொடரை யடுத்து நகர்த்தப்பெற்று, பின்னர்ப் பெயர்த் தொடர்க் கணுவின் ஓர் உறுப்பாக உயர்த்தப்படும். இந்த மாற்றங்களைப் பின்வரும் வரைபடங்கள் தெளிவுபடுத்தும்.

**53 (அ) பெ.தொ. ⇒ 53 (ஆ) பெ.தொ. ⇒ 53 (இ) பெ.தொ.**










**மு: முருகன்; வ: வள்ளியை மணந்த் # ஆகு; எ.தொ: எச்சத்தொடர்**

53(இ)-யில் வா என்ற கணுவானது எழுவாய் உறுப்பை இழந்து ஒற்றைக் கிளையாக நிற்பதால் மேற்படி கணு அகற்றப்பட்டுவிடும். விதிகளின் எண்ணிக்கை என்று பார்த்தால், (44)-இல் உள்ள அமைப்பைவிட, (53)-இல் உள்ள அமைப்பு கூடுதலாக ஓர் விதியை வேண்டுகிறது. முந்தியதில் உள்ள சமபெயர் நீக்க விகாரம் பிந்தியதில் இல்லை. அதற்கு மாறாக, பிந்தியதில் எழுவாய்ப் பெயர்ச்சி விகாரம் நடைபெறுகின்றது. (44)-இல் எழுவாய் உறுப்பினைப் பெயர்த்தொடர்க் கணுவின் நேரடி ஆதிக்கத்தில் கொண்டுவர வாய்ப்பில்லை. (53)-இல் பயனிலைத் தொடரை யடுத்து நகர்த்தப்பெற்ற எழுவாயாகிய பெயர்நிலைக் கிளவியைப் பெயர்த்தொடர்க் கணுவின் கீழ்க் கொண்டுவர வேண்டும். இந்த ஒருவிதிதான் (53)-இல் கூடுதலாக அமையும் விதி. (44)-இல் செயல்படும் மற்ற எல்லா விதிகளும் (53)-இலும் செயல்படும். பெயரெச்சத் தொடரன்களை (53)-இல் உள்ளது போன்ற அமைப்பிலிருந்து வருவிப்பது பற்றிய நமது மாற்றுத் திட்டத்தின் நிறைகுறைகளை நாம் இங்கே சிந்திக்க முயற்சி மேற்கொள்ள வில்லை. இதன் விளைவு எப்படி இருந்தாலும், உள்வினைகள் பற்றிய நமது சிந்தனையில் பாதிப்பு ஏதும் நேரப்போவதில்லை.

## பகுதி - 2

### 10.0 கோப்புத் தொடரன்களில் உள்வினைகள்

10.1. இப்பகுதியில் கோப்புத் தொடரனில் அமையும் உள்வினைகள் பற்றிச் சிந்திக்கப்படும். கோப்புத் தொடரன் என்று

இங்கே நாம் குறிப்பிடுவது ஆங்கிலத்தில் குறிக்கப்பெறும் Complement Clause என்பதையாகும். இத்தொடரனுடன் இணைந்து நிற்கும் அல்-வினைகளாகிய *என்று/என, என்ற, என்பது* ஆகியவை உள்வினைக் குடும்பத்தைச் சேர்ந்தவையாக நமது ஆய்வில் கொள்ளப்படுகின்றன. இந்த அல்-வினைவடிவங்களைச் சொல்லியல் ஆய்வுக்கு உட்படுத்த முடியாது. ஆகவே இவ் வடிவங்களை *என்* என்னும் உள்வினையின் மாற்றுருபுகளாகக் கொள்வது பொருந்தும். இந்த மாற்றுருபுகளின் நிகழ்ச்சி தொடரனியற் சூழல்களால் கட்டுப்படுத்தப்படுகின்றது. மேலே குறிக்கப் பெற்றுள்ள *என்று, என்ற, என்பது* ஆகிய மூன்றனுள், இறுதியாக உள்ள உள்வினையானது சிறப்பு உள்வினையாகவும் அமையலாம். அவ்வாறு அமைகையில் அவ்வடிவம் பின்வரும் கிளவியாக்க விதியின்மூலம் வருவிக்கப்பெறும்.

**(54) ஆகு +[+இருப்பு, +ஒருமை] > என்பது/− #**

*ஆவான், ஆவாள்* முதலான சிறப்பு உள்வினைகள் சொல்லியல் ஆய்வுக்கு உட்படாதது போன்றே, (54)-இல் நிகழும் *என்பது* என்ற சிறப்பு உள்வினையும் சொல்லியல் ஆய்வுக்கு உட்படாது.

10.2. பொதுவாக *ஆகு, என்* இவற்றின் வழிப்பட்ட உள்வினை களின் நிகழ்ச்சி தமிழ்த் தொடரனில் சில வரையறைகளுக்கு உட்பட்டதாகவே தோன்றுகின்றது. *ஆகு* என்பது தனித் தொடர்ன்களைச் சார்ந்தும் *என்* என்பது கோப்புத் தொடரன்களைச் சார்ந்தும் நிகழ்வனவாகக் கருதலாம். இவற்றின் நிகழ்ச்சி வரையறைகள் பற்றி நாம் இங்கே முனைப்பாகச் சிந்திக்கப் போவதில்லை. *என்று, என்ற, என்பது* ஆகியவற்றை உள்வினைகளாகக் கொள்வதற்கான சான்றுகளைக் குறிப்பிடு வதே இந்தப் பகுதியின் முதன்மைக் குறிக்கோளாகும். இந்த வகையில் மூன்று சான்றுகள் இங்கே சிந்திக்கப்படுகின்றன.

**முதல் சான்று**

பின்வரும் எடுத்துக் காட்டுகளைக் கருத்தில் கொள்க.

(55) முருகன் என்ற மாணவன்

(56) மாணவன் ஆகிய முருகன்

(57) மாதவி ஓர் நடிகை என்ற செய்தி

10.3. முதல் இரண்டு எடுத்துக்காட்டுக்களில், *என்ற, ஆகிய* இரண்டும் துணைநிலை வழக்கினவாய் (Complementary Distribution) அமைந்துள்ளன. இவற்றுள் *ஆகிய* என்பது

உள்வினையாதலால், அதனுடன் துணைநிலை வழக்கில் இருக்கும் *என்ற* என்னும் பெயரெச்ச வடிவமும் உள்வினையாகக் கொள்ளப்படும் தகுதியைப் பெறுகின்றது. இந்த உண்மை (57)-இல் காணப்படும் கோப்புத் தொடரனில் நிகழும் *என்ற* என்னும் பெயரெஞ்சு கிளவிக்கும் பொருந்தும். சான்று (3)-இல் இது மேலும் விளக்கம் பெறும். உருவகத் தொடர்களில் (எ-டு: **அன்பு என்ற/ஆகிய வெள்ளம்**) *என்ற, ஆகிய* இரண்டும் செம்மை வழக்கில் (Free Variation) **நிகழும் நிலை காணப்படு கின்றது. இத்தகைய நிகழ்ச்சியானது** *என்ற* என்பது **உள்வினை என்பதை மேலும் உறுதிப்படுத்துகின்றது.**

**இரண்டாவது சான்று**

*10.4* தனித்தொடரன்களில் பெயர்ப் பயனிலைகளையடுத்து நிகழும் ஒருவகை உள்வினை, மேற்படி தொடரன்கள் கோப்புத் தொடரன்களாகச் செயல்படும்போது தவிர்க்கப்பட்டு, பிறிதொரு வகை உள்வினை நிகழும் போக்கினைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் மூலம் விளக்கலாம்.

58(அ) மாதவி ஓர் நடிகை (ஆவாள்)

(ஆ) மாதவி ஓர் நடிகையும் பாடகியும் ஆவாள்

இந்த எடுத்துக்காட்டுக்களில் முந்தியதில் நிகழும் உள்வினை அசைநிலையாகவும் (Optional) பிந்தியதில் அமைந்த உள்வினை யானது உயிர்நிலையாகவும் (Obligatory) அமைந்தவையாகும்.

59(அ) [மாதவி ஓர் நடிகை] என்று { *ஆவாள் / *என்று } எல்லோருக்கும் தெரியும்

(ஆ) [மாதவி ஓர் நடிகையும் பாடகியும்] { *ஆவாள் / என்று } எல்லோருக்கும் தெரியும்.

(58)-இல் தனித் தொடரன்களாக அமைந்த வாக்கிய அமைப்புக்கள் (59)-இல் கோப்புத் தொடரன்களாகின்றன. எடுத்துக்காட்டுகளில் நிகழும் தனித்தொடரன்களிலும், கோப்புத் தொடரன்களிலும் காணப்படும் *ஆவாள், என்ற* ஆகிய இரண்டு அல் வினைகளும் துணைநிலை வழக்கினவாகின்றன. இவற்றுள் *ஆவாள்* என்பது உள்வினையாதலின், அதனுடன் துணைநிலை வழக்கில் நிகழும் என்றென் கிளவியும் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இரண்டுக்கும் இடையில் உள்ள ஒரே ஒரு வேறுபாடு முந்தையது சிறப்பு உள்வினையாக அமைய என்றென் கிளவியானது பொது உள்வினையாகத் திகழ்கின்றது.

இந்த இரு உள்வினைகளும் பின்வரும் கிளவியாக்க விதிகள் மூலம் வருவிக்கத்தக்கனவாகும்.

**60(அ) ஆகு +[+இருப்பு, ⁻ஆண்பால்] > ஆவாள்/--#**

**(ஆ) ஆகு +[+இருப்பு] > என்று/ --[.]**

தனித் தொடரன்கள் கோப்புத் தொடரன்களாக நிகழ்கையில், மேற்படி தொடரன்களின் வலப்புறம் அமைந்த வாக்கிய எல்லை தவிர்க்கப்படுகின்றது. 60(ஆ)-வில் [.] என்பது வாக்கிய எல்லை இன்மையைச் சுட்டுவதாகும்.

**மூன்றாவது சான்று**

10.5 கோப்புத் தொடரன்கள் அமைந்த பின்வரும் பெயரெச்சத் தொடர் அமைப்புக்கள் பெரிதும் சிந்தனைக்குரியனவாகும்.

**61(அ) அமைச்சர் வந்தார் என்ற செய்தி**
**(ஆ) அமைச்சர் வந்தார் என்பது ஆகிய செய்தி**
**(இ) அமைச்சர் வந்த செய்தி**
**(ஈ) அமைச்சர் வந்ததாகிய செய்தி**

மேலே (61)-இல் அமைந்த நான்கு பெயரெச்சத் தொடர்களும் ஒரே பொருண்மையினவாகும். இப்பெயரெச்சத் தொடர்களில் நிகழும் உள்வினைகளைப் பின்வரும் அமைப்புக்களின் மூலம் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

**62(அ) [[அமைச்சர் வந்தார்] என்ற] செய்தி**

**(ஆ) [[அமைச்சர் வந்தார் என்பது] ஆகிய] செய்தி**

**(இ) [[அமைச்சர் வந்து] அ] செய்தி**

**(ஈ) [[அமைச்சர் வந்தது] ஆகிய] செய்தி**

இந்த அமைப்புக்களில் *என்ற, ஆகிய, அ* என்று மூன்று வகையான பெயரெச்ச வடிவங்கள் உள்ளன. இம்மூன்றும் துணைநிலை வழக்கில் அமைந்துள்ளது கருத்தில் கொள்ளத் தக்கதாகும். இவற்றுள் *ஆகிய* என்பது பெயரெச்சமாய் அமைந்த உள்வினையாதலால், இதனுடன் துணைநிலை வழக்கில் நிகழும் *என்ற, அ* ஆகிய இரண்டும் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கன வாகின்றன. (62)-இல் உள்ள பெயரெச்சத் தொடரன்கள் பின்வரும் அண்மை வாக்கியங்களுடன் தொடர்புடையன வாகும்.

**63(அ) செய்தி [[அமைச்சர் வந்தார்] என்பது]**

**(ஆ) செய்தி [[அமைச்சர் வந்தார் என்பது] ஆகும்]**

**(இ) செய்தி [[அமைச்சர் வந்து] அது]**
**(ஈ) செய்தி [[அமைச்சர் வந்தது] ஆகும்]**

இந்த நான்கு அமைப்புக்களிலும் வாக்கியமாய் அமைந்த பெயர்ப் பயனிலைகளை அடுத்து நிகழும் **என்பது, ஆகும், அது** ஆகிய மூன்றும் துணைநிலை வழக்கினவாய் அமைகின்றன. இவற்றுள் **ஆகும்** என்பது **செய்தி** என்னும் எழுவாயுடன் இயைபு கொண்ட சிறப்பு உள்வினையாதலால், அதனுடன் துணைநிலை வழக்கில் நிகழும் **என்பது, அது** ஆகிய இரண்டும் சிறப்பு உள்வினைகளாகக் கொள்ளத்தக்கவையாகின்றன. இந்த உள்வினைகளும், இவற்றுக்கு நிகராக (62)இல் நிகழும் பெயரெச்ச உள்வினைகளும் பின்வரும் கிளவியாக்க விதிகளின் மூலம் வருவிக்கற்பாலனவாகும்.

<table>
<tr><td rowspan="5">(64) ஆகு +[+இருப்பு, +ஒன்றன்பால்] ></td><td>என்பது</td><td>வந்தார்</td><td rowspan="5">–</td></tr>
<tr><td rowspan="3">ஆகும்</td><td>{வந்தார்</td></tr>
<tr><td>என்பது</td></tr>
<tr><td>வந்தது}</td></tr>
<tr><td>அது</td><td>வந்து</td></tr>
</table>

<table>
<tr><td rowspan="5">(65) ஆகு +[+இருப்பு] ></td><td>என்ற</td><td>வந்தார்</td><td rowspan="5">– செய்தி</td></tr>
<tr><td rowspan="3">ஆகிய</td><td>{வந்தார்</td></tr>
<tr><td>என்பது</td></tr>
<tr><td>வந்தது}</td></tr>
<tr><td>அ</td><td>வந்து</td></tr>
</table>

மேலே *(63)* (ஆ)-வில் கோப்புத் தொடரனில் நிகழும் *என்பது* *(63)*(அ)-வில் நிகழும் *என்பது* என்பதினின்றும் வேறுபட்டதாகும். ஆனால் பிந்தியது உள்வினையாதலின் முந்தியதும் உள்வினையாகவே கொள்ளப்பெறும். இரண்டும் உள்வினைகள் என்றபோதிலும் (ஆ)-வில் உள்ளது பொது உள்வினைப் (Impersonal Copula) பயனிலையும், (அ)-வில் உள்ளது சிறப்பு உள்வினைப் (Personal Copula) பயனிலையும் ஆகும். முந்தியது கோப்புத் தொடரனுக்கு உரிய உள்வினைப் பயனிலையாகும். இதன் பயனிலைத் தொடர் *[வந்தார்+ என்பது]* என்பதாகும். (அ)-வில் உள்ள *என்பது* என்னும் உள்வினை *[அமைச்சர் வந்தார்]* என்பதனைப் பயனிலையாகக் கொள்கின்றது. (ஆ)-வில் உள்ள கோப்புத் தொடரனில் அமைந்த *என்பது* என்னும் உள்வினையின் நிகழ்ச்சியைக் கருத்தில் கொண்டு, *(63)*இல் நிகழும் கோப்புத் தொடரன்களின் உள்வினையமைந்த பயனிலையமைப்பினைப் பின்வருமாறு சுட்டலாம்.

**66(அ) அமைச்சர் [[வந்த்] ஆர்]**

**(ஆ) அமைச்சர் [[வந்தார்] என்பது]**

**(இ) அமைச்சர் [[வந்து] ∅ ]**

**(ஈ) அமைச்சர் [[வந்து] அது]**

இந்த அமைப்புக்களில் என்பது உள்வினையாதலால், அதனுடன் துணைநிலை வழக்கில் இருக்கும் **ஆர், அது** இரண்டும் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. 66(இ)-யில் இந்த உள்வினை உருவிலியாக (Unmarked) உள்ளது. (66)-இல் உள்வினைகளாக நிகழும் **ஆர், என்பது, அது** ஆகியவற்றுள் **ஆர்** என்பதைத் தவிர ஏனைய இரண்டும் பொது உள்வினைப் பயனிலைகளாகும்.

10.6. மேலே (63)-இல் குறிக்கப்பெற்றுள்ள வாக்கியங்கள் (62)-இல் அமைந்துள்ள பெயரெச்சத் தொடர்களுடன் தொடர்புடைய அண்மை வாக்கியங்கள் என்பது முன்னர்ச் சுட்டப் பெற்றது. இந்த அண்மை வாக்கியங்களின் வேர் பின்வரும் சேய்மை வாக்கியங்களாகும்.

**67(அ)[அமைச்சர் வந்தார் என்பது] செய்தி**

**(ஆ) [அமைச்சர் வந்தார் என்பது] செய்தியாகும்.**

**(இ) [அமைச்சர் வந்தது] செய்தி**

**(ஈ) [அமைச்சர் வந்தது] செய்தியாகும்**

இந்த அமைப்புக்களில் கோப்புத் தொடரன்கள் எழுவாயாகச் செயல்படுகின்றன. முதல் இரண்டு கோப்புத் தொடரன்களில் **என்பது** பொது உள்வினைப் பயனிலையாக நிகழ்கின்றது. இவ்வாறே பிந்திய இரண்டிலும் **வந்தது** என்பதில் உள்ள **அது** என்னும் வடிவம் பொது உள்வினைப் பயனிலையாக அமைகின்றது. இதனைக் கருத்தில்கொண்டு (67)-இல் நிகழும் கோப்புத் தொடரன்களின் பயனிலைத் தொடர் அமைப்பினைப் பின்வருமாறு விளக்கலாம்.

**68(அ)அமைச்சர் [[வந்தார்] என்பது]**

**(ஆ) அமைச்சர் [[வந்து] அது]**

**(இ) அமைச்சர் [[வந்து] ∅ ]**

**(ஈ) அமைச்சர் [[வந்து] அது]**

இந்த அமைப்பில் *என்பது, அது* இரண்டும், சிதறிய வழக்கில் நிகழ்வதால் *அது* என்பது உள்வினையாகக் கொள்ளத்தக்கதா

கின்றது. இந்த இரண்டு உள்வினைகளும் கிளவியாக்க விதியின் மூலம் வருவிக்கத்தக்கவையாகும். கோப்புத் தொடரன்கள் பொருந்திய சேய்மை வாக்கியங்கள் அண்மை வாக்கியங்களாக மாற்றப்படும்போது முந்தியவற்றில் உள்ள பயனிலை அமைப்புக்கள், பிந்தியவற்றில் போற்றப்படாமல் போகின்றன. காரணம், அண்மை வாக்கியங்களில் புதிதாக ஓர் பெயர்நிலைக் கிளவி தோன்றி எழுவாயாகச் செயல்படுவதுதான். இந்தப் புதிய எழுவாய் தனக்கு வேண்டிய உள்வினைகளைச் சேய்மை வாக்கியங் களில் அமைந்த பயனிலைத் தொடரின் அமைப்புக்களை மாற்றி யமைப்பதன் மூலம் பெற்றுக்கொள்கின்றது. எடுத்துக்காட்டாக 67(அ), (இ) இவற்றில் கோப்புத் தொடரனில் அமைந்த **என்பது, அது** ஆகிய இரு உள்வினைப் பொதுப் பயனிலைகளும் பிரிக்கப் பட்டு, 63(அ),(இ)யில் புதிய எழுவாய்க்குரிய சிறப்பு உள்வினைப் பயனிலைகளாக மாற்றப்படுகின்றன. இதன் விளைவாக 63(அ), (இ)-யில் பயனிலைத் தொடர் அமைப்பில் மாறுபட்ட இரண்டு கோப்புத் தொடரன்கள் இடம்பெறுகின்றன. சேய்மை வாக்கி யங்கள் அண்மை வாக்கியங்களாக மாறும்போது கோப்புத் தொடரனில் நிகழும் இந்த மாற்றத்தைப் பின்வருமாறு புலப்படுத்தலாம்.

| சேய்மை வாக்கியம் | அண்மை வாக்கியம் |
|---|---|
| 69(அ) அமைச்சர் [[வந்தார்] என்பது]> | அமைச்சர் [[வந்த்]ஆர்] என்பது |
| (ஆ) அமைச்சர் [[வந்த்] அது] > | அமைச்சர் [[வந்த்] ] அது |

சேய்மை வாக்கியங்களில் நிகழும் *என்பது, அது* ஆகிய இரண்டு பொது உள்வினைகளும், அண்மை வாக்கிய அமைப்பில் *செய்தி* என்னும் எழுவாய்க்குரிய சிறப்பு உள்வினைப் பயனிலைகளாக மாறியமையும் நிலையையே (69)-இல் விளக்கப் பெற்றுள்ளது.

## பகுதி - 3

### 11.0 உள்வினையே முற்று விகுதிகளாய்

11.1. மிகச் சுருக்கமாய் அமையும் இப்பகுதியில் வினைமுற்றுக் களில் உள்வினையின் சேர்மானம் பற்றி ஓரளவு சிந்திக்கப்பெறும்.

11.2. எவற்றை மரபிலக்கணங்கள் முற்றுவிகுதிகள் என்று சுட்டுகின்றனவோ அவற்றை நாம் உள்வினைகள் என்று முதல் இரண்டு பகுதிகளிலும் நிகழ்த்திய ஆய்வின்மூலம் நிறுவியுள்ளோம். மலயாளத்துக்கும் தமிழுக்கும் உள்ள வேறுபாடு உள்வினை களாகிய முற்று விகுதிகளை முந்தியது தவிர்க்க, அவற்றைப் பிந்தியது விடாமல் பற்றிக்கொண்டது. பற்றிக்கொண்டதோடு

மட்டுமல்லாமல் அவற்றை விகுதி நிலைக்கும் தமிழ் மாற்றி யமைத்துக் கொண்டுவிட்டது. இதன் விளைவு, முற்று விகுதிகள் உள்வினைகள் என்ற உண்மை மறக்கப்பட்டது.

11.3. செய்யும் வாய்பாட்டு வினைகளைப் பொறுத்தவரையில், தமிழ் மலயாளத்துடன் இசைந்து செல்கின்றது. இந்த வாய்பாட்டு வினைகளில் மலயாளத்தைப் போலவே தமிழிலும் உள்வினை நிகழ்ச்சி தவிர்க்கப்பட்டுள்ளது.

11.4. உள்வினைத் தன்மை பொருந்திய முற்று விகுதிகளை வினைமுற்றுக்களினின்றும் பிரித்து எடுத்துவிட்டால், திராவிட வினைமுற்றுக்கள், அடிப்படையில் பொது வினைமுற்றுக்கள் (Impersonal Finite Verbs) என்ற உண்மை தெள்ளிதின் விளங்கும். கோப்புத் தொடரன்கள் மீது நாம் நிகழ்த்திய ஆய்வு இந்த உண்மையை மேலும் தெளிவுபடுத்துகின்றது. 62(இ), 63(இ) ஆகியவற்றில் நிகழும் *வத்து* என்னும் பொது வினைமுற்றினை இந்த வகையில் கருத்தில் கொள்ளவும். 66(இ)யில் உள்ள வினை முற்றும் இதைப்போன்றதே.

### 12.0. உள்வினை உணர்த்தும் உண்மை

12.1. உள்வினையானது பெயரைச் சார்ந்தே நிகழும் தன்மைய தாகும். வினைமுற்று விகுதிகள் உள்வினைகளாக இந்த ஆய்வில் நிறுவப்பெற்றுள்ளதால் மேற்படி விகுதிகள் சார்ந்து நிற்கும் வினையமைப்புக்கள் பெயர்நிலைக் கிளவிகளாகக் கொள்ளத் தக்கவையாகின்றன. உள்வினை நிகழ்ச்சியால் வினைமுற்றுக்கள் பெயர்களாக மாறவில்லை. மாறாக வினைமுற்றுக்கள் பெயர் நிலைக் கிளவிகளாக இருப்பதால்தான் அவற்றையடுத்து உள்வினைகள் நிகழ்கின்றன. இதன்மூலம் வினைமுற்றுக்களின் பகுதிகளாகிய வினையடிகள் பெயராகக் கொள்ளப்படும் தகுதியைப் பெறுகின்றன. இதனைக் கருத்தில் கொண்டால், பெயராக்க விதிகள் (Nominalization Rules) என்று மொழியியல் அறிஞர்களால் குறிக்கப் பெறுவன வரலாற்று நிலையில் பொய்ம்மைத் தன்மையனவாகிய விதிகள் என்பது புலனாகும்

12.2. இங்கே இன்னொரு உண்மையையும் குறிப்பிட்டாக வேண்டும். பால் விகுதிகளும் (Gender Suffixes) தன்மை, முன்னிலை விகுதிகள் ஆகியவையும் இந்த ஆய்வில் உள்வினை களாகக் குறிக்கப் பெற்றாலும் அவற்றை விகுதி நிலையில் அமைந்த மூவிடப் பெயர்களாகவும் கொள்ள முடியும். சிறப்பு வினைமுற்றுக்கள்; செய்தேனை, செய்தோமுக்கு, செய்தாயை,

செய்தீர்க்கு, செய்தானை/செய்தவனை, செய்தாளை/செய்தவளை, செய்தாரை/செய்தவரை என வேற்றுமை விகுதி ஏற்பதன்மூலம் இந்த உண்மை தெளிவாகின்றது. தொல் திராவிடத்துக்கு முந்தைய நிலையில் பயனிலையை அடுத்து எழுவாய் நிகழ்ந்திருக்க வேண்டும் என்ற கருதுகோளை வகுப்பதற்கு இந்த நிலைப்பாடு சான்றாக அமைகிறது. பிந்திய நிலையில் எழுவாயானது பயனிலைக்கு இடப்புறத்தில் நிகழத் தொடங்கியதாகத் துணியலாம். அதாவது இடவிகுதிகளாகிய *-அவன், -அவள்* முதலான இடப்பெயர்கள் தமிழில் பிரதிசெய்யப்பட்டும், மலயாளத்தில் பிரதி செய்யப்படாமலும் பயனிலைக்கு இடப் புறமாகக் கொண்டு செல்லப்பட்டதாகல் வேண்டும். இதனைப் பின்வருமாறு புலப்படுத்தலாம்.

**தமிழ்**

**70(1) செய்த்+[+ஆண்பால்] ⇒ [+ஆண்பால்] +செய்த்+[+ஆண்பால்]**

**(2) [+ஆண்பால்] > அவன்/–செய்த்+[+ஆண்பால்]**

**(3) [+ஆண்பால்] > {அவன், ஆன்} / +செய்த்–**

முதல் விதியானது விகார விகுதியாகும். இந்த விதி உட்கிடையில் (Input) உள்ள [+ஆண்பால்] என்பதைப் பிரதியெடுத்து புறக்கிடையில் (Output) இடப்புறமாகக் கொண்டு செல்கிறது. ஏனைய இரண்டும் 71-இல் உள்ளனவும் கிளவியாக்க (Lexicalization) விதிகளாகும்.

**மலயாளம்**

**71(1) [+ஆண்பால்] > அவன்/#–செய்த்**

**(2) [+ஆண்பால்] > அவன்/செய்தி–#**



# 16. மாறீற்று ஏதுவினைகள்

## *1.0 மாறு – நிகழ்ச்சிக் களங்கள்*

சங்கத்தொகை நூல்களில் அமைந்த பாடல்களில் மாறீற்று வினைத்தொடர்கள் பரவலாகக் காணப்படுகின்றன. இவ்வினைத் தொடர்களைச் *செய்தமாறு, செயன்மாறு, செய்யாமாறு* ஆகிய வாய்பாடுகளின்கீழ்த் தொகுக்கலாம். முற்று வாக்கியங்களில் (**Independent Clauses**) நிகழாமல் சார்பு வாக்கியங்களாகிய (**Dependent Clauses**) காரண வாக்கியங்களில் மட்டுமே நிகழும் இவ்வாய்பாட்டு வினைத்தொடர்களைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

(1) பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறைப்
பல்லோ ருவந்த உவகை யெல்லாம்
என்னுட் பெய்தந் தற்றே சேணிடை
ஓங்கித் தோன்று முயர்வரை
வான்றோய் வெற்பன் **வந்த மாறே** (அகம். 42.10-14)

(2) அகன்றுறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் **பிறந்த மாறே** (நற். 40.11, 12)

(3) அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயின் என்னதூஉம்
அறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே (ஐங். 366)

(4) பாகன் நெடிதுயிர் வாழ்தல் காய்சினக்
கொல்களிற் றியானை நல்கன் மாறே (அகம். 336.13, 14)

(5) அனையை **யாகன் மாறே**
மன்னுயி ரெல்லாம் நின்னஞ் சும்மே (புறம். 20. 20, 21)

(6) புரைசான் மைந்தநீ **யோம்பன் மாறே**
உரைசான் றனவாற் பெருமைநின் வென்றி (பதிற். 35. 1, 2)

(7) தாமும் பிறரும் உளர்போற் சேறல்
முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்
**யானவண் வாரா மாறே** (அகம். 336. 15-17)

(8) சிறுவெண் காக்கை பலவுடன் ஆடும்
துறைபுலம் புடைத்தே தோழி பண்டும்
உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னைக்
கானலங் கொண்கன் தந்த
காதல் நம்மொடு நீங்கா மாறே (நற். 231. 4-9)

புறநானூற்றுப் பாடல் ஒன்றில் சிறப்பு வினையையடுத்து மாறு நிகழும் வாக்கிய அமைப்பு ஒன்றும் காணப்படுகின்றது.

(9) வேறுபுலத் திறுக்கும் தானையொடு
சோறுபட நடத்திநீ துஞ்சாய் மாறே (புறம். 22. 37, 38)

சிறப்பு வினை மீது அமைந்த மாறீற்று வினைத்தொடர் இது ஒன்றைத் தவிர சங்க இலக்கியத்தில் வேறெங்கும் நிகழ்வதாகத் தோன்றவில்லை.

## 2.0. தொன்மொழி போற்றிய தொல்வினைத் தொடர்கள்

2.1. ஏதுப்பொருண்மையை உணர்த்தும் மாறீற்று வினைத் தொடர்கள் இடைக்காலத் தமிழிலும் இக்காலத் தமிழிலும் வழக்கற்றுப் போயின. பழந்தமிழில்கூட மாறீற்று வினைத் தொடர்கள் நடைமுறையில் பயின்று வழங்கினவாகக் கருத முடியவில்லை. தொல்காப்பியத்தில் யாண்டும் மாறீறு பற்றிய செய்தியின்மையானும், சங்கத் தமிழிலும் இவ்வீற்று வினைத் தொடர்கள் அருகிய வழக்கினவாய்க் காணப்படுதலானும் மாறீற்று வினைத்தொடர்களைப் பழந்தமிழுக்குரிய வினைத் தொடர்களாகக் கொள்ள முடியவில்லை. பழமையைப் போற்றும் வகையில் தன் காலத்தில் வழக்கில் இல்லாத இவ்வினை யமைப்பைப் பழந்தமிழானது பயன்படுத்திக் கொண்டதாகத் தோன்றுகிறது. இந்த வகையில் மாறீற்று வினைத்தொடர்களை முந்துதமிழ் (Pre-Tamil) வினைகளாகத் துணியலாம்.

2.2. மாறீற்று வினைத்தொடர்கள் அமைந்த வாக்கிய அமைப்புக்கள் இக்காலத் தமிழில் பின்வரும் வாக்கிய அமைப்புக் களுடன் பொருந்தும்.

(10) மழை பெய்தமையால்/பெய்ததால் நிலம் குளிர்ந்தது
(11) மழை பெய்தலால்/பெய்வதால் நிலம் குளிரும்
(12) மழை பெய்யாமையால்/பெய்யாததால் நிலம் வறண்டது

இவ்வெடுத்துக்காட்டுக்களினின்றும் *மாறு* என்னும் இடைச் சொல் ஏதுப்பொருண்மையை உணர்த்தும் *ஆல்* என்னும் இடைச் சொல்லுடன் பொருந்துவது தெளிவாகின்றது. அதாவது *செய்தமாறு, செயன்மாறு, செய்யாமாறு* ஆகிய வாய்பாட்டு

வினைகள் முறையே *செய்ததால், செய்தமையால்/செய்தலால், செய்வதால்/செய்யாமையால்/செய்யாததால்* ஆகிய வாய் பாட்டு வினைகளின் பொருண்மையோடு பொருந்துவனவாகும்.

### 3.0. உரையாசிரியர்கள் மோதல்

தொல்காப்பியத்தில் மாறு பற்றிய செய்தி எங்கும் காணப்படவில்லை என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இதனின்றும் தொல்காப்பியமானது சங்கப் பாடல்கள் தோன்றிய காலத்துக்கு முந்தியது என்று கருதமுடியாது. ஆயினும், சங்க இலக்கியப் பயிற்சி காரணமாகத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் இவ்விடைச் சொல்லை மறக்கவில்லை. *அனையை யாகன் மாறே* (புறம். 4), *சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே* (நற். 40) ஆகிய எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொண்டு *மாறு* என்பதனை மூன்றாம் வேற்றுமைப் பொருண்மையதாகச் சேனாவரையர் கொள்வார் (தொல். சொல். நூற்பா. 250. உரை). நச்சினார்க்கினியர்க்கு இது உடன்பாடில்லை. அவர் கூறுவார்: *அனையை யாகன் மாறே, சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே* ஆகியவற்றில் "*மாறு* என்னும் இடைச்சொல் வினையையடுத்துக் காரணப் பொருள் உணர்த்தி நிற்றலின் மூன்றாம் வேற்றுமைப் பொருள் உணர்த்தி நின்றதல்லாமை உணர்க. இது மூன்றாவதன் பொருள் உணர்த்திற்றேல் *கூறாய் தோழி யான் வாழுமாறே* என்புழி வாழுமாற்றை என இரண்டாவது விரியாதாம்" (தொல்.சொல். நூற்பா. 252. உரை). ஏதுப் பொருண்மையை வேற்றுமைப் பொருண்மையாகக் கொள்வதை நச்சினார்க்கினியர் விரும்பவில்லையென்று தெரிகிறது. இதுபற்றி நமக்குக் கவலையில்லை. *புயலால் பயிர்கள் அழிந்தன* என்பதில் நிகழும் *ஆல்,* வேற்றுமைப் பொருண்மையைக் குறிக்குமாயின் *புயல் வீசியதால் பயிர்கள் அழிந்தன* என்பதில் நிகழும் ஆலென் கிளவியும் வேற்றுமைப் பொருண்மையை உணர்த்தியதாகவே கருதவேண்டும். பழந் தமிழில் மாறென் கிளவி **ஏது அல்லது காரணப்** பொருண்மையை உணர்த்தி நிற்கிறது என்பதில் ஐயமில்லை. ஆலென் கிளவி காரணப் பொருண்மையைக் குறித்து வேற்றுமை யுருபாகும் தகுதியைப் பெறுமாயின் மாறென் கிளவிக்கும் இத்தகைய தகுதியைப் பெறத் தடையில்லை. இந்த வகையில் நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுக்கும் முறை ஏற்புடையதா என்பது சிந்திக்கற்பாலது. பழந்தமிழில் ஏதுப் பொருண்மையை உணர்த்தும் மாறீற்று வினைத்தொடர்கள் செய்தமாறு, செயன்மாறு, செய்யாமாறு ஆகிய மூன்று வாய் பாடுகளில் மட்டுமே அமைவனவாயுள்ளன. செய்யுமாறு வாய் பாட்டு வினைகள் ஏதுப்பொருண்மையை உணர்த்துவதில்லை. தவிரவும், இவ்வாய்பாட்டு வினைகள் செய்யும்+ஆறு என்ற

அமைப்பினவாகும். எனவே, செய்யுமாறு வாய்பாட்டு வினைகளை மாறீற்று வினைகளாகக் கொண்டு நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுப்பது வியப்பாக உள்ளது.

### 4.0. ஏதுக்கிளவியின் நிகழ்ச்சிக்களம்

4.1. ஏதுப்பொருண்மையை உணர்த்தும் இடைச்சொல் பொதுவாகச் சிறப்பு வினைகளையடுத்து நிகழ்வதில்லை. எடுத்துக்காட்டு (9)-இல் நிகழும் *துஞ்சாய்மாறு (=துஞ்சாமையால்)* ஓர் விதிவிலக்காகும். **ஆல்** என்னும் ஏதுப் பொருட்கிளவியும் இவ்வாறு விதிவிலக்காகச் சிறப்பு வினைகளையடுத்து நிகழ்வதுண்டு. கருதுக:

(13) ...தேன் அழிக்க வருவாராலும், பழமெடுக்க வருவாராலும், பூப் பறிக்க வருவாராலும் பகற்குறியும் அரிதாம் என்று குறிப்பால் மறுத்தாளாம் (அகம். 18. உரை)

ஆனால் உள்வினை (Copula Verb) மீதமைந்த ஏதுக்கிளவி சிறப்பு வினையையடுத்து நிகழும் போக்கு தமிழில் இயல்பாகக் காணப் படுகிறது. ஒரே பொருண்மையனவாகிய பின்வரும் இரண்டு எடுத்துக்காட்டுக்களையும் கருத்தில் கொள்ளவும்.

(14) முருகன் முன்னதாகவே வந்தானாதலால் வள்ளி பெரிதும் மகிழ்ந்தாள்.

(15) முருகன் முன்னதாகவே வந்ததால் வள்ளி பெரிதும் மகிழ்ந்தாள்.

இவ்விரண்டனுள் முதல் எடுத்துக்காட்டில் **ஆதலால்** என்னும் ஏதுப்பொருட்கிளவி *வந்தான்* என்னும் சிறப்பு வினையையடுத்தும் இரண்டாம் எடுத்துக்காட்டில் **ஆல்** என்னும் ஏதுப்பொருட் கிளவி *வந்தது* என்னும் பொதுவினையையடுத்தும் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்கின்றன.[1] எடுத்துக்

---

1. *ஆதலால்* என்னும் ஏதுப்பொருட்கிளவியை *ஆதல்+ஆல்* என்று பகுப்பாய்வு செய்ய முடியாது. ஏனென்றால் இப்பகுப்பில் *ஆதல்* என்னும் உறுப்புக்குப் பொருண்மை ஏதும் குறிக்க முடியாது. அடிப்படையில் இவ்வுறுப்பானது உள்வினையாகக் கொள்ளத் தக்கதாயினும் ஆதலால் என்று ஏதுப்பொருட்கிளவி யாக அமையும்போது உள்வினைப் பொருண்மை இழந்து விடுகிறது. ஆகவே *ஆதலால்* என்னும் ஏதுப்பொருட்கிளவிகளை இன்னொரு பகுப்பில் உட்படுத்தமுடியாது. *ஆதலால்/ஆதலின், ஆகையால்* என்ற ஏதுக்கிளவிகளை இன்னொரு கோணத்திலும் ஆராயலாம். *ஆதலால்* என்பதை *ஆதல்+ஆல்* என்ற பகுப்பாய்வுக்கு உட்படுத்துவது இன்னொரு வகையான ஆய்வாகும். இந்த ஆய்வில் *ஆதல்* என்பது உள்வினையாகவும் *ஆல்* என்பது காரண விகுதியாகவும் கொள்ளப்படும். *செய்ததால்/செய்வதால்* வாய்பாட்டுக் காரண வினைகளில் நிகழும் *ஆல்* என்னும் காரணவிகுதி *ஆதலால்* என்பதனுடன் சிதறிய வழக்கில் நிகழ்வதால் அது காரணப்பொருண்மையுடன் ஆதல் என்ற உள்வினையின் இருப்புப் பொருண்மையையும் உணர்த்துவதாகக் கொள்ளவேண்டும். இதனைப் பின்வரும் விகுதியாக்க விதிகள் (Cliticization

காட்டு (14)-இல் நிகழும் *முருகன் வந்தானாதலால்* என்ற அமைப்பு எச்சவாக்கியமாக இருந்த போதிலும் எழுவாய்-பயனிலை உறுப்புக்களின் நிகழ்ச்சி செம்மையாக அமைந்துள்ளது. *ஆதலால்* என்னும் ஏதுப்பொருட்கிளவி *வந்தான்* என்னும் பயனிலையையடுத்து நிகழ்கிறது. எடுத்துக்காட்டு (15)-இல் நிகழும் *ஆல்* என்னும் ஏதுபொருட்கிளவி (14)-இல் உள்ள *ஆதலால்* என்பதனோடு துணைநிலை வழக்கில் அமைவதால் *வந்தான்* என்பதைப் போலவே *வந்தது* என்பதும் பயனிலைச் செயற் பாட்டில் அமைந்த வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இதனின்றும் ஏதுப்பொருட்கிளவிகள் பயனிலையாகச் செயற்படும் உறுப்புக்களையடுத்தே நிகழவல்லவை என்பது தெளிவாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு மாறீற்று வினைகளை நோக்கும் போது *செய்த, செயல், செய்யா* ஆகிய வாய்பாட்டு வினைகள் பயனிலைச் செயற்பாட்டில் அமைவதாகக் கொள்வது தவிர்க்க முடியாததாகின்றது. இம்முடிபினின்றும் நாம் மாறுபட முடியாது. ஏனெனில் *ஆதலால், ஆல், மாறு* ஆகிய மூன்று ஏதுப் பொருட்கிளவிகளும் துணைநிலை வழக்கினவாகும். (எ.டு.: *செய்தானாதலால், செய்ததால், செய்தமாறு; செய்யவில்லை யாதலால், செய்யாததால், செய்யாமாறு; செய்கின்றானாதலால், செய்கின்றதால்/செய்வதால்/செய்தலால், செயன்மாறு*) இவ்வழக்கு நிலையானது மேற்படி இடைச் சொற்களின் முன் நிகழும் உறுப்புக்களைப் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்தன வாகக் கொள்ள வகை செய்கின்றது.

---

1-ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

**Rules**) மூலம் உணர்த்தலாம். பகர அடைப்புக்குள் இருப்பவை பொருண்மைக்குறிகள் (**Semantic Markers**) ஆகும். தொடர்புடைய அனைத்து வடிவங்களும் இங்கே கருத்தில் கொள்ளப்படுகின்றன.

1(அ) ((இருப்பு)) > { ஆதல் / ஆகை }

(ஆ) ((காரணம்)) > [ ஆல் / இன் ] / [ { ஆதல் / ஆகை } / ஆதல் ] —

இந்த விதிகள் *ஆதலால், ஆதலின், ஆகையால்* ஆகிய வடிவங்களை வருவிக்கும்.

2 ((இருப்பு)) + ((காரணம்)) [ { ஆல் / இன் } / ஆல் ] / [ செய்தல் / { செய்வது / செய்தது } ] —

*ஆதலால்/ஆதலின்,* ஆகையால் ஆகியவற்றில் நிகழும் *ஆதல், ஆகை* ஆகிய வடிவங்கள் அடிப்படையில் உள்வினைகளாகும். இங்கே இவை விகுதிகளாகக் கொள்ளப்படுகின்றன. இவற்றை விகுதிகளாகக் கொள்வதா, தனியுருபன் களாகக் கொள்வதா என்பது கோட்பாட்டியல் ஆய்வுக்குரியதாகும்.

## *5.0. மாறு - ஒரு பிழை வழக்கு*

மாறு என்னும் இடைச்சொல்லின் முன் நிகழும் மூவகை வினைகளும் *செய்த, செயல், செய்யா* என்ற வாய்பாட்டினவாக இருந்தபோதிலும் *செய்த, செய்யா* ஆகிய வாய்பாட்டு வினைகளின் வடிவமைப்பினைப் பற்றிச் சிந்திக்கலாம். தமிழில் எதிர்மறை வினையெச்சங்களாக அமைவனவற்றுள் *செய்யாமை, செய்யாமல்* வாய்பாட்டு வினைகளும் அடங்கும். இவ்விரண்டனுள் செய்யாமை வாய்பாட்டு வினைகள் எச்சமாய் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(16) இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள (குறள். 223)

(17) கீழும் மேலும் எஞ்சாமை பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவரகு (புறம். 120.8, 9)

(10) அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி (பத்துப். 9.131, 132)

*செய்யாமை, செய்யாமல்* ஆகிய இரண்டு வாய்பாட்டு வினைகளும் *செய்+ஆம்+ஐ/அல்* என்ற அமைப்பினவாகும்.[2] இவ்வமைப்புக்களில் நிகழும் *ஐ, அல்* ஆகிய இடைச்சொற்களின் தன்மை பற்றிப் பின்னர்ச் சிந்திக்கப்படும். *செய்யாமை, செய்யாமல்* ஆகிய இரண்டு வாய்பாட்டு வினைகளும் செய்யாம் என்ற எதிர்மறை வாய்பாட்டு வினையின் மீது அமைந்தவை என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். (வேண்டாம், வேண்டாமை (<வேண்டாம்-ஐ) என்ற எதிர்மறை வினைகள் அடிப்படையில் செய்யாம் என்ற வாய்பாட்டினதாகும்). செய்யும் வாய்பாட்டு வினைகளின் எதிர்மறையாகும் செய்யாம் வாய்பாட்டு வினைகள் இதனை அடிப்படையாகக் கொண்டு செய்யாமாறு வாய்பாட்டு ஏதுவினைகளைச் *செய்யாம்+ஆறு* என்ற அமைப்பினவாகக் கொள்ளலாம். *செய்தமை* வாய்பாட்டு வினைகள் செய்யாமை வாய்பாட்டு வினைகளுக்கு நேரான உடன்பாட்டுவினைகளாதலின் பிந்தியவற்றை *செய்யாம்+ஐ* என்ற அமைப்பினவாகக் கொண்டது போலவே முந்தியவற்றையும் *செய்தம்+ஐ* என்ற அமைப்பினவாகக் கொள்ளலாம். இதனைக் கருத்தில்கொண்டு செய்தமாறு வாய்பாட்டு ஏதுவினைகளையும் *செய்தம்+ஆறு*

---

2. வண்ணனை ஆய்வில் (Synchronic Description) *செய்யாமை, செய்யாமல்* ஆகிய வாய்பாட்டு வினைகளை மையீற்றனவாகவும், மல்லீற்றனவாகவும் கொள்ளும் மரபு காணப்படுகிறது. மரபுகள் உண்மை நிலையைப் பிரதிபலிக்க வேண்டும் என்ற நியதியில்லை. இந்த ஆய்வில் மேற்படி மரபு மீறப்படுகிறது.

என்ற அமைப்பினவாகத் துணியலாம். இதன்மூலம் எவை வண்ணனை நிலையில் மாறீற்று வினைகள் என்று கருதப்படு கின்றனவோ அவை வரலாற்று நிலையில் ஆறீற்று வினைகளாகக் கொள்ளத்தக்கவை என்பது புலனாகின்றது. ஆனால் *செயன்மாறு* வாய்பாட்டு ஏதுவினைகளை மாறீற்று வினைகளாகக் கொள்ள வாய்ப்பில்லை. இவ்வாய்பாட்டு வினைகளைச் *செயல்+மாறு* என்ற அமைப்பினவாகக் கொள்வதைத் தவிர வேறுவழியில்லை. இது பிறழ்பிரிப்பால் நேர்ந்த விபத்தாகும். இப்பிறழ்பிரிப்பே *செய்தமாறு, செய்யாமாறு* வாய்பாட்டு ஏதுவினைகளையும் *செய்த+மாறு, செய்யா+மாறு* **என்ற அமைப்பினவாகக் கொள்ள வைத்திருக்கின்றது.**

## 6.0. மொழிவழக்கும் பிறழ்பிரிப்பும்

6.1. பிறழ்பிரிப்பு நிகழ்வதற்கு அடிப்படைக் காரணம் வழக்கு மொழியில் சில அமைப்புக்கள் வழக்கற்றுப் போவதாகும். எடுத்துக்காட்டாக, ***செய்தம், *செய்யாம்** ஆகிய வாய்பாட்டு வினைகள் பழந்தமிழிலாகட்டும் பிந்திய தமிழிலாகட்டும் வழக்கில் காணப்படவில்லை. ஆனால் **செய்த, செய்யா** வாய்பாட்டு வினைகள் நடைமுறையில் பயின்று வழங்குகின்றன. இந்த நிலையில் நடப்பில் இல்லாத **செய்தமாறு, செய்யாமாறு** வாய்பாட்டு வினைகள் வழக்கில் உள்ள மொழிக்குக் கொண்டு வரப்படும்போது, நடைமுறையில் உள்ள வினைவடிவங்களைக் கருத்தில் கொண்டே அவை பகுப்பாய்வுக்கு உட்படுத்தப்படு கின்றன. இதன் விளைவாக மேற்படி வாய்பாட்டு வினைகள் **செய்த/செய்யா+மாறு** என்ற அமைப்பினவாகக் கருதப்படும் நிலை ஏற்படுகின்றது. இதனைத் தொடர்ந்து மாறு ஓர் இடைச் சொல்லாகக் கருதப்பட்டுச் **செயல்** வாய்பாட்டு வினைகளை யடுத்தும் பொருத்தப்பட்டுச் **செயன்மாறு** என்ற புதிய வாய்பாட்டு வினைகள் தோற்றம் கொள்வதற்கு வாய்ப்பு ஏற்படு கின்றது. பின்னர் வரும் எடுத்துக்காட்டு ஒன்றில் **ஆறு** என்னும் இடைச்சொல்லே ஏதுப்பொருண்மையை உணர்த்துவதால் *செய்தமாறு, செய்யாமாறு* வாய்பாட்டு ஏதுவினைகளை வரலாற்று நிலையில் ஆறீற்று வினைகளாகக் கொள்வதை உறுதிப்படுத்துகின்றது.

6.2. *செய்தமாறு* வினைகளைப் பொறுத்தவரை இவற்றின் அமைப்பு பற்றிக் கூடுதல் விளக்கம் தேவைப்படுகின்றது. இவ்வினைகளை ஆறீற்றனவாகக் கொள்வதற்கு முன்னதாக நாம் மேற்கொண்ட உத்தியை மீண்டும் இங்கே நினைவு கூர்தல் தகும்.

*செய்யாமை* வாய்பாட்டு எதிர்மறை வினையெச்சங்கள் *செய்யாமல்* வாய்பாட்டு வினையெச்சங்களைப் போன்றே *செய்யாம்* என்னும் எதிர்மறை வாய்பாட்டு வினைகளின் மீது அமைந்தவையாகும். *செய்யாமை* வாய்பாட்டு வினைகளைப் போலவே *செய்தமை* வாய்பாட்டு வினைகளில் ஐயென்கிளவியைப் பிரித்துவிட்டால் எஞ்சி நிற்பது *செய்தம்* வாய்பாட்டு வினை வடிவங்களாகும். ஆனால் *செய்யாமை* வாய்பாட்டு வினைகள் எச்சமாகச் செயல்படுவதைப் போல் *செய்தமை* வாய்பாட்டு வினைகள் எச்சமாகச் செயல்படும் நிலை மொழியில் காணப்பட வில்லை. செய்தமை வாய்பாட்டு வினைகளை ஐயீற்றுவினை களாகக் கொள்வதற்கு இது ஒரு தடையாக இருக்க முடியாது. ஏனெனில் வேறொரு தொடரனியற் சூழலில் செய்யாமை வினைகளைப் போலவே செய்தமை வினைகளும் வேற்றுமை உருபுகளை ஏற்பனவாய் அமைகின்றன. ஒரு சொல்லின் அமைப்பானது சூழலுக்குத் தக்கவாறு மாறுவதில்லை. சூழல் என்று நாம் குறிப்பிடுவது தொடரனியற் சூழலாகும். இச் சூழலுக்குத் தக்கவாறு மாறுவது குறிப்பிட்ட சொல்லின் இலக்கணச் செயற்பாடே. *செய்யாமை* வினைகள் எச்சமாக நிகழும்போது எந்த அமைப்பினவாக இருந்தனவோ அதே அமைப்பினைத்தான் வேற்றுமை உருபேற்கும்போதும் பெற்றிருக்கும். இதன்மூலம் *செய்யாமை* வினைகள் எச்ச வாக்கியங்களில் நிகழும்போதும், வேற்றுமையுருபேற்கும்போதும் *செய்யாம்+ஐ* என்ற அமைப்பினவாகவே இருக்கும் என்பது வலியுறுத்தப்படுகிறது.

6.3. *செய்தமை* வாய்பாட்டு வினைகள் வேற்றுமையுருபு ஏற்கும் சூழலில் மட்டுமே நிகழற்பாலனவாகும். *செய்யாமை* வினைகளும் இத்தகைய ஒரு சூழலில் நிகழ்வதாலும், அச் சூழலிலும் அவை *செய்யாம்+ஐ* என்ற அமைப்பினவாகவே இருப்பதாலும் *செய்தமை* வாய்பாட்டு வினைகளும் *செய்தம்+ஐ* என்ற அமைப்பினவாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு *செய்தமாறு, செய்யாமாறு* வாய்பாட்டு ஏது வினைகளை *செய்தம்/செய்யாம்+ஆறு* என்ற அமைப்பினவாகக் கோடல் தகும். *செயன்மாறு* வாய்பாட்டு ஏதுவினைகளை ஆறீற்றனவாகக் கொள்ள முடியாதாகையால் அவற்றில் நிகழும் மாறு என்னும் இடைச்சொல்லும் *செய்தமாறு, செய்யாமாறு* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *ஆறு* என்னும் இடைச்சொல்லும் துணை

நிலை வழக்கினவாகக் கொள்ளப்படும்.[3] இந்த ஆய்வில் ஓர் இடர்ப்பாடு என்னவெனில் *செய்தம், *செய்யாம் ஆகிய வாய்பாட்டு வினைகள் நடைமுறையில் இல்லாமையாகும். *நடக்கல்* என்ற வினை நடைமுறையில், அதாவது இக்காலத்தில் வழக்கில் இல்லாததால் *நடக்கலாம்* என்ற வினையமைப்பை *நடக்கல்+ஆம்* என்ற அமைப்பினதாகக் கொள்ளக்கூடாது என்று வாதிடுவதைப் போன்றதாகும், *செய்தம், *செய்யாம் ஆகிய வாய்பாட்டு வினைகள் ஆய்வினின்றும் தவிர்க்கப்பட வேண்டும் என்று வாதிடுவதும். வண்ணனை ஆய்வுக் கோட்பாடு இத்தகைய ஆய்வுக்குத் தடையாக இருப்பதாக நாம் கருதவில்லை. மாறாக, இந்த ஆய்வுக் கோட்பாட்டை நாம் செம்மையாகப் பயன்படுத்திக் கொள்ளத் தவறிவிட்டோம் என்றே கருதத் தோன்றுகிறது. அவ்வாறு பயன்படுத்தியிருந்தால் *செய்யாமை* வாய்பாட்டு வினைகளையும், *செய்யலாம்* வாய்பாட்டு வினைகளையும் வண்ணனை ஆய்வில் நாம் முறையே மையீற்று வினைகளாகவும், லாமீற்று வினைகளாகவும் கொண்டிருக்கமாட்டோம். இது தொடர்பாகச் சில மொழியியல் தடயங்களை நாம் இங்குச் சிந்திப்பது பொருத்தமாக இருக்கும்.

## 7.0. இயல்பு விகுதிகள்

7.1. விகுதிகளைப் பொறுத்தவரையில் தமிழில் ஓர் ஒழுங்கு முறை காணப்படுகின்றது. பெரும்பான்மையான விகுதிகள் தமிழில் ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கணச் செயற்பாடுகளை மேற்கொள்ளவல்லனவாகும். எடுத்துக்காட்டாக *இன், ஆல், உம், ஐ* முதலான விகுதிகளைக் கருத்தில் கொள்ளலாம். சில விகுதிகள் இவ்வாறு அமைவதில்லை. *மாறு* இவற்றுள் ஒன்றாகும். இவ்வாறு அமையாமைக்கு இத்தகைய விகுதிகள் பிறழ்பிரிப்பின வாக நிகழ்வதும் ஒரு காரணமாகும்.[4] மெய்ம்முதல் விகுதிகளை

---

3. வண்ணனை ஆய்வில் *மாறு* என்ற இடைச்சொல்லையே மூன்று வாய்பாட்டு ஏது வினைகளிலும் கொள்ள வாய்ப்பு இருக்கிறது. இவ்வாறு கொள்வதால் ஆறென்றும் மாறென்றும் மாற்றுருபுகளை அமைத்துக்கொள்ளும் ஆய்வுமுறை தவிர்க்கப் படுகின்றது. இத்தகைய ஆய்வினை நாம் மறுக்கவில்லை. ஆனால் மாறு என்பது வரலாற்று நிலையில் ஆறு என்பதனின்றும் தோன்றியது என்பதை வலியுறுத்துவதே இங்கு நமது நோக்கம்.

4. மார் என்னும் விகுதி இந்த வகையில் விதிவிலக்காகக் கருதத் தோன்றும். ஆனால் உற்றுநோக்கினால் *ஆர்* விகுதியின் உயர்திணைப் பன்மைப் பொருண்மையையே *மார்* யாண்டும் பெற்று நிகழ்கிறது என்பது தெளிவாகும். *இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார், இகலினர் எறிந்த அகலிலை முருக்கின்* (புறம். 169.9, 10) என்பதில் *கன்மார்* (=கற்பார்) உயர்திணை இறவாக் கால (Non-Past) வினைமுற்றாக நிகழ்வதைக் கருதுக. இதன் அமைப்பு *கல்+ம்+ஆர்* என்பதாகும். இதில் நிகழும் ஆரென் கிளவியே செய்ம்மார் வாய்பாட்டு உயர்திணை எதிர்வெச்ச வினைகளில் நிகழ்வதாகக் கருதலாம்.

விட உயிர்முதல் விகுதிகள் தமிழில் மிகுதி. மெய்ம்முதல் விகுதி களிலும் பெருவழக்கினவாய் அமைவன கு, து, பு ஆகியவையும் அவற்றின் திரிபுகளுமேயாகும். இந்த உண்மைகளைக் கருத்தில் கொண்டால் தமிழைப் பொறுத்தவரையில் வண்ணனை ஆய்வில் பிறழ்பிரிப்பு விகுதிகளைப் பெருமளவுக்குத் தவிர்த்துவிடலாம்.[5] ஆனால் நடைமுறை ஆய்வில் இந்த நிலை காணப்படவில்லை. மரபிலக்கண ஆய்வுமுறையிலும் இத்தகைய குறைபாடு இல்லாமல் இல்லை. *என்மனார்* என்ற வினையமைப்பினை உரையாசிரியர்கள் ஒன்றுபோல என்+மன்+ஆர் என்றே பகுப்பாய்வு செய்வதைக் காணலாம். இத்தகைய ஆய்வு வரலாற்று உண்மைகளை விளக்குவதில்லை. வண்ணனை ஆய்வில் வரலாற்றுப் போக்கில் அமைந்த உண்மைகளைத் தெளிவுபடுத்த வேண்டிய கடப்பாடு இல்லை தான். ஆனால் வரலாற்றுப் போக்கை எதிரொலிக்கும் வகையில் அமைந்த வண்ணனை ஆய்வு மிகச் சிறந்த ஆய்வாகக் கருதப்படும் என்பதில் ஐயமில்லை. எடுத்துக் காட்டாக, வண்ணனை ஆய்வில் செய்ம்மார் வாய்பாட்டு வினைகளைச் செய்+மார் என்றும், செய்ம்+ஆர் என்றும் பகுப்பாய்வு செய்ய முடியும். முதல் பகுப்பாய்வில் தமிழைப் பகுதி-விகுதி என்ற அளவில் தான் புரிந்துகொள்ள முடியும். ஆனால் இரண்டாம் ஆய்வில் இந்த நிலையில்லை. செய்ம் என்ற பகுதி செய் என்பதன் மாற்றுருபாக அமைந்து நம் சிந்தனையை மேலும் தூண்டுவதாக அமைகின்றது. இதன் விளைவாக, செய்யும் வாய்பாட்டு முற்று வினைகள் செய்ம் வாய்பாட்டினவாக *ஆர்* என்பதன் முன் அமைகையில் அவை முற்றுத் தன்மையை இழக்கின்றன என்ற உண்மை புலப்படுகின்றது. இத்தகைய உண்மை தமிழை மேலும் துருவிச் சென்று ஆராய வகை செய்கிறது. செய்ம்மார் வாய்பாட்டு வினைகளைப் போன்றே செய்ம்மின், செய்ம்மதி, செய்மோ, செய்மே ஆகிய வாய்பாட்டு வினைகளும் செய்ம் என்ற வரலாற்றுப் பகுதியின் அடியாக அமைந்தவையாகும். இன்றைய வண்ணனை ஆய்வாளர்கள் விகுதிகளின் வடிவங்களை மொழியின் இயல்புக்கு ஏற்றவாறு பகுப்பதில்லை. சொல்லமைப்பில் பகுதிகள் வழக்கில் அமைவதாய்

---

5. *செயன்மாறு, செய்யன்மார்* (எ-டு: காணன்மார்/நற். 64.13, பாடன்மார்/ புறம். 375.21) ஆகிய வாய்பாட்டு வினைகளைப் பொறுத்த வரை அவற்றை மாறீற்று வினைகளாகவும், மாரீற்று வினைகளாகவும் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. பிறழ் பிரிப்பானது விகுதிகளின் உண்மை வடிவைச் சில குறிப்பிட்ட சொல்லமைப்புக்களில்தான் கண்டறிய முடியும். *செயன்மாறு, செய்யன்மார்* வாய்பாட்டு வினைகள் அத்தகைய சொல்லமைப்புக்களையுடையன அல்ல.

இருக்கவேண்டும் என்பதே அவர்களின் கொள்கையாக இருக்கின்றது.[6] இதன் விளைவாக, செய்யலாம் வாய்பாட்டு வினைகள் செய்ய+லாம் என்ற அமைப்பினவாகின்றன. மரபிலக்கணிகளும் இத்தகைய போக்கையே கடைப்பிடிக்கின்றனர். இதனை, செய்ம்மார் வாய்பாட்டு வினைகளைச் செய்+மார் என்ற அமைப்பினவாக அவர்கள் கொள்வதினின்றும் அறியலாம். இப்போக்கே செய்தமாறு, செய்யாமாறு வாய்பாட்டு வினைகளை உரையாசிரியர்கள் மாறீற்றனவாகக் கருத வகை செய்கின்றது. இதனை ஒரு கோட்பாட்டுச் சிந்தனையாக நம்மால் கருத முடியவில்லை.

### 8.0 மாறெனா மாறிய ஆறு

இனி, தொடர்ந்து மாறு ஈறு பற்றிச் சிந்திக்கலாம். இந்த இடைச் சொல்லானது பிறழ்பிரிப்பால் நேர்ந்த விபத்தின் விளைவு என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இதனை அரண்செய்யும் வகையில் பின்வரும் எடுத்துக்காட்டு அமைவதைக் காணலாம்.

*(19) யாம்கண்ணிற் காண நகுப அறிவில்லார்*
*யாம்பட்ட தாம்படா வாறு (குறள். 1140)*

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *படாவாறு* (=படாமையால்) என்னும் வினை ஆறீற்று வினையாகும். இவ்வினையமைப்பில் ஆறு என்னும் இடைச்சொல் ஏதுப்பொருண்மையை உணர்த்துவதாகின்றது. இதனின்றும் ஏதுப்பொருண்மையை உணர்த்தும் ஆறீற்று வினைகளும் மொழியில் நிகழ்வது புலனாகின்றது.[7] இந்த

---

6. இத்தகைய வினைகளின் நிகழ்ச்சி தமிழில் மிகமிக அருகியே காணப்படுகிறது. எடுத்துக்காட்டு (19)-இல் நிகழும் படாவாறு என்னும் வினையமைப்பு ஓர் வரலாற்றுண்மையைப் புலப்படுத்துவதாயுள்ளது. சங்க இலக்கியத்தில் அருகிய வழக்காயிருந்த *செய்யாமாறு* வாய்பாட்டு வினைகள் திருவள்ளுவர் காலத்தில் வழக்கிழந்து அவற்றின் இடத்தில் செய்யாவாறு வாய்பாட்டு வினைகள் ஏதுப்பொருண்மையை உணர்த்தத் தொடங்கின என்பதே அந்த வரலாற்று உண்மை. இதனை அடிப்படையாகக் கொண்டு *ஆறு* என்னும் இடைச்சொல் மாறு என்பதனின்றும் தோற்றம் கொண்டது என்று கருதிவிடக் கூடாது.

7. இக்குறிக்கோள் ஓர் நியதியை அடிப்படையாகக் கொண்டது என்பதை நாம் மறுக்கவில்லை. மொழியில் தனியுருபன்களைவிடக் கட்டுருபன்கள் எண்ணிக்கையில் குறைவானவையாகும். மாற்றுருபுகளை எண்ணிக்கை குறைவாக உள்ள பகுதிகளில் அமைத்துக் கொள்வது வண்ணனை ஆய்வுக்கு வசதியாக இருக்கிறது. அவ்வாறின்றி எண்ணிக்கையில் மிகுதியாக உள்ள தனியுருபன்கள் பகுதியில் சில மாற்றுருபுகளை அமைக்க முற்படும் போது குறிப்பிட்ட பிரிவில் அமையும் எல்லாத் தனியுருபன்களுக்கும் மாற்றுருபை அமைக்கவேண்டி வரும். ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதை விளக்கலாம். *செய்பாக்கு* என்னும் வாய்பாட்டு வினைகளைச் *செய்பு+ஆக்கு* என்றோ *செய்+பாக்கு* என்றோ பகுப்பாய்வு செய்யலாம். முந்தைய பகுப்பாய்வு மரபை மேற்கொண்டால் செய் என்னும் வாய்பாட்டு வினையடிகளுக்குச் *செய்பு*

நிகழ்ச்சியானது செய்தமாறு, செய்யாமாறு ஆகிய வாய்பாட்டு வினைகள் ஆறீற்றனவாகக் கொள்ளத்தக்கவை என்பதை உறுதிப் படுத்துகின்றது (படாவாறு என்பதைப் *படாமாறு என்பதன் திரிபாகக் கொண்டால் மேலே முன்மொழியப்பட்ட ஆய்வானது அடிபட்டுப்போகும்).

### 9.0. பன்முகம் கொண்ட ஆறு

தமிழில் பெரும்பான்மையான விகுதிகள் ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கணச் செயற்பாட்டினவாய் அமையும் என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இக்குறிப்பு, ஆறு என்னும் இடைச் சொல்லுக்கும் பொருந்தும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் இந்த நிலையைக் காணலாம்.

(20) முருகன் { பாடியவாறு / பாடிக்கொண்டு } நடந்தான்

(21) முருகன் { பாடியவாறு / பாடியதுபோல } ராமனும் பாடினான்

(22) யாரும் { காணாதவாறு / காணாமல் } நான் அங்குச் சென்றேன்

(23) அவனை { ஓடாதவாறு / ஓடாமல் } நான் பார்த்துக்கொண்டேன்

இந்த நான்கு எடுத்துக்காட்டுக்களில் முதல் இரண்டில் ஆறென் கிளவி முறையே தொடர் நிகழ்வுப் பொருண்மையையும், ஒப்புமைப் பொருண்மையையும் உணர்த்துகின்றன. ஏனைய இரண்டிலும் இந்த இடைச்சொல் இலக்கணப் பொருண்மையை உணர்த்தாமல் பொதுநிலைக் கிளவியாக இருக்கிறது.[8] இத்தகைய நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டிலும் காணலாம்.

---

7-ஆம் அடிகுறிப்பின் தொடர்ச்சி

என்னும் வாய்பாட்டு மாற்றுருபை அமைக்க வேண்டும். நன்னூலார் கொள்கைப்படி பிந்திய ஆய்வை மேற்கொண்டால் வினையடிகளில் அதாவது தனியுருபன்கள் பகுதியில் மாற்றுருபுகளை அமைக்கும் நிலை ஏற்படாது. இந்த ஏற்பாட்டை மரபிலக்கணங்களும் ஓர் மரபாகக் கொண்டுள்ளன. மொழி யியலும் இந்த வகையில் மாறுபடவில்லை. நம்முன் இரண்டு நிலைகள் உள்ளன. ஒன்று, சிந்தனையைத் தூண்டும் ஆய்வை மேற்கொள்ளும் நிலை. பிறிதொன்று, இதற்கு நேர் மாறான நிலை. பிந்திய நிலை மொழிகற்றல்-கற்பித்தலுக்கு ஏற்புடையதாகும். முந்தையது மொழியின் வளர்ச்சிப் போக்கை விளக்குவதாகும். இவற்றுள் எதை நாம் மேற்கொள்ளப் போகிறோம்?

8. பொதுநிலைக்கிளவியென்று இங்கே நாம் குறிப்பிடுவது இலக்கணச் செயற்பாடு இன்னதெனத் தெற்றென அறியமுடியாத வகையில் நிகழும் உறுப்பாகும்.

(24) யாதானும் நாடாமல் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு (குறள் 357)

இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் *கல்லாதவாறு* என்னும் வினையமைப்பானது *கல்லாதது* என்னும் வினையமைப்புடன், பொருந்துவதாகும். இறுதி மூன்று எடுத்துக்காட்டுக்களில் அதாவது (22), (23), (24)-இல் நிகழும் ஆறென்கிளவி பின்வரும் சமன்பாட்டில் அமைவதாகின்றது.

(25) ஆறு = அல்/அது

### 10.0. பொதுநிலைக் கிளவி

10.1. பொதுநிலைக்கிளவியானது இலக்கணப் பொருண்மையை மேற்கொண்டு இலக்கண உருபன்களாக அமையும் போக்கு மொழி வளர்ச்சியில் இயல்பாக நிகழ்வதாகும். ஆறென் கிளவியானது பொதுநிலைக் கிளவி நிலையிலிருந்து இலக்கண உருபனாக மாறியமையும் நிலையை எடுத்துக்காட்டுக்கள் (20), (22)-இல் காணலாம். இத்தகைய நிலையானது பொதுநிலைக் கிளவியைப் பற்றிக் கோட்பாட்டு நிலையில்அறிந்துகொள்ள வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறது.

10.2. பொதுநிலைக் கிளவியைப் பற்றிய சிந்தனையைப் பின் வரும் எடுத்துக்காட்டுக்களை மையமாகக் கொண்டு தொடங்கலாம்.

(26) முருகன் அங்கே ஏன் வந்தான்?
(27) முருகன் அங்கே வந்தது ஏன்?

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களும் ஒரே பொருண்மையினவாயினும் பயனிலையாகச் செயற்படும் வினைகள் முன்னதில் சிறப்பு வினையாகவும், பின்னதில் பொது வினையாகவும் அமைகின்றன. எடுத்துக்காட்டு (26)-இல் உள்ளது போன்றவை நேர்வாக்கியங்கள் (Normal Sentences) என்றும் (27)-இல் உள்ளது போன்றவை கவை வாக்கியங்கள் (Cleft Sentences) என்றும் குறிக்கப்படும். ஒரே பொருண்மையினவாக அமைந்த பின்வரும் எதிர்மறை வாக்கியங்களும் இவ்வாறே குறிக்கத்தக்கனவாகும்.

(28) முருகன் அங்கே ஏன் வரவில்லை? (நேர் வாக்கியம்)
(29) முருகன் அங்கே வராதது ஏன்? (கவை வாக்கியம்)

எடுத்துக்காட்டு (24)-இல் நிகழும், *என்னொருவன் சாந்துணையும் கல்லாதவாறு* (= ஏன் ஒருவன் சாந்துணையும் கல்லாதது) என்ற வாக்கியமும் கவை வாக்கியமாகும். இதனை அடியொற்றி, (29)-இல் உள்ள வாக்கியம் பின்வரும் வாக்கிய அமைப்புடன் பொருந்துவதாகக் கற்பிதமாகக் கொள்ளலாம்.

(30)*முருகன் அங்கே வராதவாறு ஏன்?

இதேபோல், (27)-இல் உள்ள வாக்கியத்தையும் பின்வரும் வாக்கிய அமைப்புடன், ஒரு சேரக் கருதலாம்.

(31) *முருகன் அங்கே வந்தவாறு ஏன்?

இங்கே (30), (31)-இல் உள்ளது போன்ற வாக்கியங்கள் இக்காலத் தமிழில் காணப்படவில்லையாயினும் அப்பர் தேவாரத்தில் இத்தகைய வாக்கியங்கள் பயின்று வழங்குவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் வாயிலாக அறியலாம்.

(32) நெல்லால் விளைகழனி நீடூரானை
நீதனேன் என்னேநான் நினையாவாறே (6.11.2.)

(33) எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்துமாகி
எழுஞ்சுடராய் மெய்யடிகள் நின்றவாறே (6.94.2)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *நினையாவாறு, நின்றவாறு* ஆகிய இரண்டு ஆறீற்று வினைகளும் முறையே *நினையாதது, நின்றது* ஆகிய அதுவீற்று வினையமைப்புக்களுடன் செம்மை வழக்கில் (Free Variation) பொருந்துவனவாகும். உரையாசிரியர் களின் தமிழில் *செய்தவாறு போல்* என்ற வாய்பாட்டுத் தொடரின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகிறது. இவ்வாய்பாட்டுத் தொடர் களில் நிகழும் செய்தவாறு வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் செய்தது வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களோடு பொருந்துவனவாகும்.

## 11.0. ஆறீற்று வினைகள்

11.1 ஆறீற்று வினைகள் பயனிலைச் செயற்பாட்டில் நிகழவல்லவை என்பதற்கு அப்பர் தமிழ் சான்றாவதை மேலே கண்டோம். இவ்வினைகள் (22), (23)-இல் எச்ச வாக்கியங்களில் நிகழ்கின்றன. இந்த எச்ச வாக்கியங்கள் முற்றுவாக்கியங்களாகவும் நிகழற்பாலன என்பதை நாம் இப்போது தெளிந்திருக்கிறோம். (காண்க: எடுத்துக்காட்டுக்கள் (24), (32), (33)) இதனின்றும் ஆறீற்று வினைகள் அமைந்த வாக்கியங்கள் முற்று வாக்கியங் களாகவும், எச்ச வாக்கியங்களாகவும் நிகழ்வது தொடரனியற் சூழலால் (Syntactic Context) கட்டுப்படுத்தப்படுகிறது என்பது தெளிவாகின்றது. முற்று வாக்கியமாக நிகழும்போது வாக்கிய எல்லை (Sentence Boundary) குறிக்கப்பெறும். எச்சவாக்கியமாக நிகழ்கையில் மேற்படி எல்லையானது தவிர்க்கப்பட்டும் ஆறீற்று வினையமைந்த வாக்கியங்கள் இருவேறு இலக்கணத் தன்மையனவாய் அமைகின்றன. இதனின்றும் ஓர் உண்மை புலனாகின்றது. எடுத்துக்காட்டுக்கள் (22), (23)-இல் உள்ள

*காணாதவாறு, ஓடாதவாறு* ஆகிய ஆறீற்று வினைகளோடு செம்மை வழக்கில் நிகழும் *காணாமல், ஓடாமல்* ஆகிய அல்லீற்று வினைகளும் முன்னையவை போலவே முற்று வாக்கியங்களில் நிகழவல்லன என்பதைத் தருக்க முறையில் நிறுவலாம். நடைமுறையில் செய்யாமல் வாய்பாட்டு வினைகள் பயனிலைச் செயற்பாட்டில் நிகழும் நிலை காணப்படவில்லை யாயினும், இவ்வினைகள் மேற்படி செயற்பாட்டில் நிகழ்கையில் ஆறீற்றனவாய் அமைகின்றன எனக் கொள்வது பொருந்தும். இதனையே மொழியியல் முறையில் சொல்ல வேண்டுமானால் ஆறீற்று வினைகளும் அல்லீற்று வினைகளும் எச்சவாக்கியங்களில் செம்மை வழக்கிலும் முந்தியவை முற்றுவாக்கியத்திலும், பிந்தியவை - அதாவது அல்லீற்று வினைகள் - எச்சவாக்கியத்திலும் துணைநிலை வழக்கிலும் நிகழ்வனவாகக் கொள்ளத்தகும். இதனை ஓர் அகச்சான்றாகக் கொண்டு *முருகன் வராமல் (= முருகன் வரவில்லை) என்று ஓர் முற்றுவாக்கியத்தை மீட்டுருவாக்கம் செய்யமுடியும்.

11.2. எடுத்துக்காட்டுக்கள் (32), (33)-இல் உள்ள ஆறீற்று வினைகள் அதுவீற்று வினைகளுடன் செம்மை வழக்கில் பொருந்துமென்று கண்டோம். இனி இத்தகைய வினைகளில் நிகழும் *ஆறு, அது* ஆகிய இடைச்சொற்களின் உண்மை இயல்புபற்றிச் சற்றுச் சிந்திக்கலாம். இந்த வகையில் முதலில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

(34) [அமைச்சர் நேற்று இங்கு வந்தார் என்பது] யாருக்கும் தெரியாது
(35) [அமைச்சர் நேற்று இங்கு வந்தது] யாருக்கும் தெரியாது

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் *தெரியாது* என்னும் பயனிலையானது வாக்கியங்களையே எழுவாயாகப் பெற்றுள்ளது. இந்த எழுவாய் வாக்கியங்கள் தனிமைப்படுத்தப்பட்டுக் கீழே குறிக்கப் பெற்றுள்ளன.

(36) அமைச்சர் நேற்று இங்கு வந்தார் என்பது
(37) அமைச்சர் நேற்று இங்கு வந்தது

இவற்றுள் முந்தியதில் *என்பது* என்னும் உறுப்பானது *வந்தார்* என்னும் பயனிலையை அடுத்து நிகழ்கின்றது. பயனிலையை அடுத்து நிகழும் தகுதி பெற்றவை இரண்டு. ஒன்று, இலக்கண உருபன், பிறிதொன்று, உள்வினை (Copula Verb). மேலே (36)-இல் பயனிலையை அடுத்து நிகழும் *என்பது* என்னும் உறுப்பினை இலக்கண உருபனாகக் கொள்வதற்கு வாய்ப்பில்லையாதலின் அதனை உள்வினையாகக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. வாக்கிய எல்லை தவிர்க்கப்படுவதன்மூலம் (36)-இல் உள்ள

வாக்கியமானது (34)-இல் எழுவாயாக நிகழும் நிலையைப் பெறுகிறது. இனி, (36)-இல் உள்வினையாக நிகழும் *என்பது* என்னும் உறுப்பும், (37)-இல் *வந்தது* என்பதில் நிகழும் அதுவென்கிளவியும் துணைநிலை வழக்கில் அமைவதால் பிந்தியதும் அதாவது அதுவென்கிளவியும் முந்தியதைப்போல் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இந்த முடிபாவது அதுவென்கிளவியுடன் பொருந்தும் ஆறென் கிளவியையும் உள்வினையாகக் கொள்ள வகைசெய்கின்றது. இதனை அரண்செய்யும் வகையில் அமையும் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் கருத்திற்கொள்ளற்பாலனவாகும்.

*38(அ) கிழவோன் விளையாட்டும் காமத்தின் மிகுதியைக் காட்டும் என்றவாறு (தொல்.பொருள்.இளம். 162 உரை)*

*(ஆ) பாட்டி என்பது பாடினி என்றவாறு*
*(தொல்.பொருள்.இளம். 191. உரை)*

*39(அ) வழக்குப் பயிற்சி நோக்கிப் பத்தென வரையறுத்தவாறு*
*(தொல்.பொருள்.சேனா. 220 உரை)*

*(ஆ) இனி அவற்றானன்றிப் பொதுவினையானும் பால்தெரிய நிற்கும் என்பது உணர்த்தியவாறு*
*(தொல்.பொருள்.சேனா. 173 உரை)*

எடுத்துக்காட்டு (38)-இல் *என்றவாறு* என்னும் உறுப்பானது பயனிலைச் செயற்பாட்டில் அமையும் உறுப்புக்களையடுத்து நிகழ்வதால் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இனி (39)-இல் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த வினைகளில் நிகழும் ஆறென் கிளவியும் (38)-இல் நிகழும் **என்றவாறு** என்னும் கிளவியும் துணைநிலை வழக்கில் நிகழ்வதால் பிந்தியதைப் போலவே முந்தியதும் உள்வினையாகும் தகுதியைப் பெறுகின்றது. இதன் மூலம் ஆறென் கிளவியுடன் பொருந்தும் அல்லென் கிளவியும் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இவ்வாறே செய்யாமை வாய்பாட்டு வினைகளில் நிகழும் ஐயென் கிளவியும் உள்வினையாகின்றது.[9]

## 12.0. உள்வினைப் பண்புகள்

12.1. உள்வினைகள் பொதுநிலைக்கிளவிகளாகவும் இலக்கண உருபன்களாகவும் நிகழற்பாலனவாகும். எடுத்துக்காட்டுக்கள்

9. செய்யாமை வாய்பாட்டு வினைகள் செய்யாமல் வாய்பாட்டு வினைகளுடன் பொருந்தி எச்சமாகவும் நிகழ்வதால் இம்முடிபு தவிர்க்கமுடியாத ஒன்றாகின்றது.

(22), (23), (24), (32), (33) ஆகியவற்றில் இந்த நிலையைக் காணலாம். எடுத்துக்காட்டுக்கள் (27), (29)-இல் நிகழும் *வந்தது*, **வராதது** ஆகியவற்றில் காணப்படும் அதுவென் கிளவியும் உள்வினையாயமைந்த பொதுநிலைக்கிளவியே. ஆனால் எடுத்துக் காட்டு (19)-இல் நிகழும் *படாவாறு* (=படாமையால்) என்பதில் நிகழும் ஆறென் கிளவி பொதுநிலைக்கிளவியன்று. அடிப்படையில் உள்வினையாகக் கொள்ளத்தக்க ஆறென்கிளவி இந்த எடுத்துக் காட்டில் ஏதுப்பொருண்மையை உணர்த்தும் இலக்கண உருபனாகச் செயல்படுகின்றது. இத்தகைய நிலையை எடுத்துக்காட்டுக்கள் (20), (21)-இலும் ,காணலாம். இங்கே ஆறென்கிளவி முறையே தொடர்நிகழ்வுப் பொருண்மையையும், ஒப்புமைப் பொருண்மை யையும் உணர்த்தி இலக்கண உருபனாய் அமைவதாகின்றது. சங்க இலக்கியங்களில் பரவலாக வழங்கும் செய்தமாறு, செய்யாமாறு ஆகிய வாய்பாட்டு வினைகள் செய்தம்/செய்யாம்+ஆறு என்ற அமைப்பினவாகக் கொள்ளத்தக்கவையாதலின் இவற்றில் ஏதுப் பொருண்மையை உணர்த்தி நிற்கும் ஆறென்கிளவி, எடுத்துக் காட்டு (19)-இல் நிகழும் *படாவாறு* என்பதில் உள்ள ஆறென் கிளவியினின்றும் வேறுபட்டதன்று. தமிழில் *ஆல்*, *இன்* ஆகிய இடைச்சொற்களும் ஏதுப்பொருண்மையை உணர்த்துமாகலின், மேற்படி பொருண்மையை உணர்த்தும் ஆறென்கிளவியைப் போன்றே இவையும் அடிப்படையில் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. ஒரு வாதத்துக்காக *செய்தமாறு*, *செய்யாமாறு* வாய்பாட்டு வினைகளை மாறீற்றனவாகக் கொண் டாலும் ஏதுப்பொருண்மையைக் குறிக்கும் மாறென்கிளவி அடிப்படையில் உள்வினையாகவே கொள்ளப்படும்.

### 13.0. செய்து, செய்தம், செய்தமை – பொது வினைமுற்றுக்கள்

மாறீற்று வினைகள் பற்றிய ஆய்வினை முடிக்குமுன் ஒரு செய்தியை இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். மேலே நிகழ்த்திய ஆய்வினின்றும் *செய்தமை*, *செய்யாமை* ஆகிய வாய்பாட்டு வினைகள் *செய்தம்/செய்யாம்+ஐ* என்ற அமைப்பின என்பது பெறப்பட்டது. இவற்றில் செய்தம், செய்யாம் ஆகிய வாய்பாட்டு வினைகள் *செய்து/செய்யா+அம்* என்ற அமைப்பினவாகும். இவ்வமைப்புக்களில் நிகழும் அம்மென்கிளவியைப் பற்றிய ஆய்வு இக்கட்டுரையில் மேற்கொள்ளப்படவில்லை. இக் கிளவியை வெற்றுறுப்பாகக் கொண்டு ஐயென்கிளவியுடன் ஒருங்கிணைத்துவிடலாம். இதனால் *செய்தமை*, *செய்யாமை* வினைகள் முறையே *செய்து+அமை*, *செய்யா+அமை* என்ற அமைப்பினவாகக் கொள்ளத்தக்கனவாகும். இந்த நிலையில் இவ்வினைகள் அமையீற்றனவாக அமையும். அவ்வாறின்றி,

அம்மென்கிளவியை து, ஆ ஆகியவற்றின் ஒருங்கிணைந்த உறுப்பாகவும் கொள்ளலாம். இந்த நிலையில் செய்தமை, செய்யாமை வினைகள் முன்குறிப்பட்டதுபோல் ஐயீற்றனவாக அமையும். இரண்டு நிலையிலும் அமையும் ஈறுகள் உள்வினைகளாகவே கொள்ளப்படும்.[10] ஆனால் ஏதுப்பொருண்மையை உணர்த்தும் இடைச் சொற்களின்முன் இந்த ஈறுகள் உள்வினைத் தன்மையை இழந்து வெற்றுறுப்புக்களாகிவிடுகின்றன: காரணம் ஏதுக் கிளவிகள் அடிப்படையில் உள்வினைகளாகும். இதன் விளைவாகச் *செய்தமை, செய்யாமை* வினைகள் முறையே *செய்து, செய்யா* ஆகிய வாய்பாட்டு வினைகளின் மாற்றுருபுகளாகக் கொள்ளப்படும். *செய்தமாறு, செய்யாமாறு* வினைகளுக்கும் இது பொருந்தும். இந்த நிலையைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

38(அ) [ செய்து / செய்யா ] > [ செய்தமை / செய்யாமை ] / - [ ஆல் / இன் ]

(ஆ) [ செய்து / செய்யா ] > [ செய்தம் / செய்யாம் ] / - ஆறு

மேலே (ஆ) பிரிவில் உள்ள விதியின்மூலம் ஆறென்கிளவியின் முன் நிகழும் செய்தம், செய்யாம் வாய்பாட்டு வினைகளில் நிகழும் அம்மென்கிளவி அடிப்படையில் உள்வினையென்பதும் மேற்படி வாய்பாட்டு வினைகளில் அது வெற்றுறுப்பாக அமைந்துள்ளது என்பதும் தெளிவாகிறது.

### பிற்சேர்க்கை

சங்கப் பாடல்களை மேல்நோக்காகப் பார்த்த அளவில் அவற்றினின்றும் நமக்குக் கிடைத்த *செய்தமாறு, செயன்மாறு, செய்யாமாறு* வாய்வாட்டு வினைகள் கீழே தொகுத்தளிக்கப் பட்டுள்ளன.

**1. செய்தமாறு வாய்பாட்டு வினைகள்**

(அ) பயந்தமாறு (ஐங். 366)

(ஆ) கேட்டமாறு (புறம். 50.16)

---

10. எடுத்துக்காட்டுக்கள் (22), (23)-இல் ஆறென்கிளவியானது அடிப்படையில் உள்வினையாகலின், செய்யாமை/செய்யாமல் வாய்பாட்டு வினைகளின் ஈறுகளும் உள்வினைகளாகவே கொள்ளப்படுவது தவிர்க்க முடியாததாகின்றது.

(இ) பட்டமாறு (புறம். 93.15)

(ஈ) பிறந்தமாறு (நற். 40.12)

(உ) புணர்ந்தமாறு (நற். 219.10)

(ஊ) வந்தமாறு (அகம். 42.14; ஐங். 120, 329, 495, 497, 498, 500; புறம் 253.3)

**2. செயன்மாறு வாய்பாட்டு வினைகள்**

(அ) அருளன்மாறு (புறம். 92.6)

(ஆ) ஆகன்மாறு (புறம். 4.17, 20.20, 153.10; பதிற். 38.16, 39.1, 54.9)

(இ) ஓம்பன்மாறு (பதிற். 34.12)

(ஈ) நல்கன்மாறு (அகம். 336.14)

**3. செய்யாமாறு வாய்பாட்டு வினைகள்**

(அ) அவியாமாறு (குறுந். 375.6)

(ஆ) உதவாமாறு (நற். 47.11)

(இ) உள்ளாமாறு (நற். 164.11)

(ஈ) எய்தாமாறு (நற். 280.10)

(உ) நீங்காமாறு (நற். 231.9)

(ஊ) வல்லாமாறு (குறுந். 309.9)

(எ) வாராமாறு (அகம். 336.17, ஐங். 222)

**4. சிறப்பு வினை + மாறு**

துஞ்சாய்மாறு (புறம். 22.38)



# 17. அற்றாங்கு

## *1.0 அற்றும் ஆங்கும் நிகழிடம்*

*1.1 பழந்தமிழில் அற்று, ஆங்கு என்னும் இரண்டு கிளவிகளும் ஒப்புமைப் பொருண்மையைக் குறிப்பனவாகி, முறையே முற்று வாக்கியங்களிலும் எச்ச வாக்கியங்களிலும் பயின்று வழங்குகின்றன. இத்தகைய வழக்குப் பயிற்சியினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.*

(1) கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று (குறள். 332)

(2) அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாஅங்கு
அலமரல் வருத்தம் தீர யாழநின்
நலமென் பணைத்தோள் எய்தினம்... (நற்றிணை. 9.14)

**அற்று, ஆங்கு** இரண்டனுள் முந்தியது பெரும்பாலும் செய்து வாய்பாட்டு வினைகளையடுத்தும், சிறுபான்மை பெயர்நிலைக் கிளவிகளையடுத்தும் நிகழற்பாலதாகும். இந்த இரண்டு நிலையினையும் மேலே முதல் எடுத்துக்காட்டில் காணலாம். **அற்று** என்னும் இடைச்சொல்லானது பெயர்நிலைக்கிளவி களையடுத்து நிகழும் போக்கினை மேலும் சில எடுத்துக் காட்டுக்களில் கீழே காணலாம்.

(3) புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே (புறம். 54.13, 14)

(4) வான்கண் அற்றவன் மலையே வானத்து
மீன்கண் அற்றதன் சுனையே (புறம். 109.9, 10)

(5) இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார் வாய்ச்சொல் (குறள். 415)

ஒப்புமைப்பொருண்மை குறித்த ஆங்கென்கிளவி பெயர்நிலைக் கிளவியினையடுத்து நிகழும் நிலையினைப் பழந்தமிழில் பொது வாகக் காணமுடியவில்லை. இக்கிளவியானது பெரும்பாலும் செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களையடுத்தும். சிறுபான்மை

செய்திசின் வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினை முற்றுக்களை அடுத்தும் செய்யா வாய்பாட்டு வினையையடுத்தும் நிகழ்கின்றது. செய்திசின் மற்றும் செய்யா வாய்பாட்டு வினைகளை யடுத்து நிகழும் நிலையினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(6) தீம்பெரும் பொய்கை யாமையிளம் பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்கு
அதுவே யையநின் மார்பே
அறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே (ஐங். 44/மருதம்.4)

(7) குணகடல் முகந்து குடக்கேர்பு இருளி
மண்திணி ஞாலம் விளங்கக் கம்மியர்
செம்புசொரி பானையின் மின்னியெவ் வாயும்
தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி
தென்புல மருங்கில் சென்றற்று ஆஅங்கு
நெஞ்சம் அவர்வயின் சென்றென... (நற். 153.1-6)

(8) கடல்வயிற் குழீஇய வண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா வாங்குத் தேரொடு
ஒளிறுமருப் பேந்திய செம்மற்
களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே (புறம். 205.10-14)

ஆங்கென் கிளவி ஒப்புமைப் பொருண்மையைக் குறிக்காத நிலையும் பழந்தமிழில் காணப்படுகின்றது. இதுபற்றிப் பின்னர்ப் பேசப்படும்.

1.2. அற்றென் கிளவிக்குரிய நிலைக்களன்களுள் பெயர்நிலைக் கிளவியும் ஒன்று என முன்னர்க் குறிக்கப் பெற்றது. இந்த நிலை யானது சிலசமயங்களில் புதைநிலை அமைப்புடன் பொருந்து வதில்லை. இதனை விளக்குதற்குமுன் மேலே முதல் எடுத்துக் காட்டில் அமைந்த குறட்பாவுக்குப் பரிமேலழகர் வரையும் உரை கருதற்பாலதாகும்.

(9) ஒருவன் மாட்டுப் பெரிய செல்வம் வருதல் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கட் காண்போர் குழாம் வந்தாற்போலும்; அதனது போக்கும் அக்கூத்தாட்டு முடிந்தவழி அக்குழாம் போயினாற் போலும்

இந்த உரைக்குறிப்பானது *கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம்* என்ற வாக்கிய அமைப்பினைப் பின்வரும் வாக்கிய அமைப்பின் சுருக்கமாகக் கொள்ள வகை செய்கின்றது.

(10) *பெருஞ்செல்வம் கூத்தாட்டவையின்கண் மக்கள் குழுவாகத் திரண்டற்று

எனவே பெயர்நிலைக் கிளவியை யடுத்தும் அற்றென் கிளவி நிகழவல்லது என்ற கூற்று எல்லாநிலையிலும் ஏற்புடையதாக

இருக்க முடியாது. *கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ் செல்வம்* என்ற வாக்கிய அமைப்பு, (10)-இல் உள்ள வாக்கிய அமைப்பின் ஒடுக்கமாதலால் இங்கே அற்றென் கிளவியைப் பெயர்நிலைக் கிளவியையடுத்து நிகழ்வதாகக் கொள்ள முடியாது.

## 2.0. துணைநிலை வழக்கில் அற்றும் ஆங்கும்

2.1. ஒப்புமை குறித்த அற்றென் கிளவியானது *போன்றது/போல்வது/போலும்* என்பதனோடும், ஆங்கென் கிளவி போல்/போல/போன்று என்பதனோடும் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்வனவாகும். இந்த நிகழ்ச்சியினைப் பின்வரும் வாய்பாட்டுத் தொடர்கள் மூலம் தெளிவுபடுத்திக் கொள்ளலாம்.

11(அ) செய்தற்று (< செய்து + அற்று)

(ஆ) செய்தது போன்றது/போல்வது/போலும்

12(அ) செய்தாங்கு (< செய்து+ஆங்கு)/செய்திசினாங்கு (<செய்திசின்+ஆங்கு) செய்யாவாங்கு < செய்யாவ் + ஆங்கு

(ஆ) செய்தது போல்/போல/போன்று

*அற்று, ஆங்கு* இரண்டும் செய்து வாய்பாட்டு வினைகளை அடுத்தும், ஆங்கு என்பது மட்டும் செய்யா மற்றும் செய்திசின் வாய்பாட்டு வினைகளையடுத்தும், போல் வினைகள் செய்தது வாய்பாட்டு வினைகளையடுத்தும் நிகழற்பாலன என்பது (11), (12)-இல் நிகழும் தொடரமைப்புக்கள் மூலம் தெளிவாகின்றது.

2.2. *செய்தற்று, செய்தாங்கு/செய்திசினாங்கு/செய்தற்றாங்கு/செய்யாவாங்கு* ஆகிய வாய்பாட்டுத் தொடர்கள் ஒப்புமை குறித்தனவேனும், இவை வாக்கியத்தில் மாறுபட்ட தொடரனியற் சூழல்களில் (Syntactic Contexts) அமைகின்றன. செய்தற்று வாய்பாட்டுத் தொடர்கள் பயனிலைச் செயற்பாட்டினவாயும், செய்தாங்கு/செய்திசினாங்கு/செய்தற்றாங்கு/செய்யாவாங்கு வாய்பாட்டுத் தொடர்கள் வினையடைச் செயற்பாட்டினவாயும் நிகழும் நிலையே மொழியில் காணப்படுகிறது. இதனின்றும் *அற்று, ஆங்கு* இரண்டும் துணைநிலை வழக்கினவாய்க் கொள்ளத்தக்கனவாகின்றன. சற்று விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், *அற்று* வினையடைச் செயற்பாட்டில் (Adverbial Function) நிகழ்கையில் *ஆங்கு* என்றும், *ஆங்கு* என்பது பயனிலைச் செயற்பாட்டில் நிகழ்கையில் *அற்று* என்றும் அமைவனவாகக் கொள்ளப்படும். இதனின்றும் *அற்றும், ஆங்கும்* பொருண்மை நோக்கிலும் இலக்கணச் செயற்பாட்டு நோக்கிலும் ஒருசேரக் கருதத்தக்கவை என்பது புலனாகின்றது. மேலும்

இவ்விரண்டும் ஒப்புமை குறித்த *போல்* என்னும் வினையுடன் துணைநிலை வழக்கில் பொருந்துவதால் அடிப்படையில் இவை வினையின் தன்மையனவாயும் கொள்ளத்தக்கனவாகின்றன. இதனைக் கருத்தில் கொண்டு *அற்று, ஆங்கு, போல்* ஆகிய மூன்றும் குறிப்பிட்ட ஓர் வினைக் குடும்பத்துக்கு உரியவை என்று துணியலாம். ஆனால் இக்குறிப்பிட்ட வினைக் குடும்பம் ஒப்புமைப் பொருண்மை குறித்த வினைக்குடும்பமாக இருக்க வாய்ப்பில்லை. ஏனெனில் ஆங்கென்கிளவியும், போலென் கிளவியும் ஒப்புமை குறியாமலும் நிகழவல்லன. இதனை இக்கட்டுரையின் போக்கில் அறியலாம்.

### 3.0. ஒப்பில் போலி வழித்துணையாக

*அற்றும், ஆங்கும்* ஒப்புடைப் போலியுடன் பொருந்துவன வாகலின், இவை வினையின் தன்மையனவாய்க் கொள்ளற்பாலன என்று மேலே துணியப்பட்டது. இதனைக் கருத்தில் கொண்டு மேற்படி கிளவிகள் அடிப்படையில் எத்தகைய வினைக் குடும்பத்தைச் சார்ந்தவை என்பதை அறிந்துகொள்வது அவசிய மாகின்றது. இதுதொடர்பான ஆய்வினைப் போலென் கிளவியைப் பின்புலமாகக் கொண்டு தொடங்கலாம். போலென் கிளவி ஒப்பில் போலியாகவும் நிகழவல்லது என்பதைப் பின்வரும் பழந் தமிழ் மற்றும் இக்காலத்தமிழ் எடுத்துக்காட்டுக்கள் உணர்த்தும்.

(13) நின்யான் பிழைத்தது நோவாய் என்னினும்
நீபிழைத் தாய்போல் நனிநா ணினையே (புறம். 43.16, 17)

(14) அமைச்சர் நேற்று இங்கு வந்தாற்போல் கேள்விப்பட்டேன்.

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் போலென் கிளவி எச்ச வாக்கியங்களில் நிகழ்கின்றது. இவ்வாறின்றி, போல் மற்றும் போலும் ஆகிய இரண்டும் முற்று வாக்கியங்களில் ஒப்புமை குறியாமல் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

15(அ) பல்லில் ஓடுகை ஏந்திப் பலிதிரி
செல்வர்+போல் திருநாகேச் சுரவரே (அப்பர் தேவாரம். 5.52.1.)

(ஆ) தவழு மதிசேர் சடையாற்கு இடம்+போல்
உகளும் திரைவாய் ஒற்றி யூரே (சுந்தரர் தேவாரம் 91.3)

(இ) கருந்தண் கடலும் மலையும் உலகும்
அருந்தும் அடிகள் அமரும் ஊர் + போல்
பெருந்தண் முல்லைப் பிள்ளை யோடி
குருந்தம் தவழும் கூட லூரே (நாலாயிரம். 1364)

16(அ) நெய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி அத்தை
பெருங்கல் நாடன் வரைந்தென அவனெதிர்
நன்றோ மகனே என்றனென்
*நன்றே + போலும்* என்றுரைத் தோனே(குறுந்தொகை. 389)

(ஆ) வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
இறுதியில் இன்பம் எனக்கீங் குரைத்தாற்
*பெறுதிர் + போலும்நீர்* பேணிய பொருள்எனும்
(சிலம்பு. 11.121–123)

(இ) நலிவிலா உலக மெய்தல் **நல்லதே + போலும்** என்றான்
(சீ.சி. 2727)

(ஈ) அடிமூன்றில் இவ்வுலகம் **அன்றளந்தாய் + போலும்**
(நாலாயிரம். 3288)

(உ) ஊரும் அரவம் உடையார் வாழும் ஊர் + போலும்
பாரின் மிசையார் பாடல் ஓவாப் பாசூரே
(சம்பந்தர் தேவாரம் 160.60.1)

மேலே (15), (16)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களில் **போல்,** **போலும்** ஆகிய இரண்டும் பயனிலையாகச் செயற்படும் உறுப்புக் களையடுத்து நிகழ்வது சிந்தனைக்குரியதாகும். பயனிலையாகச் செயற்படும் உறுப்பினையடுத்து நிகழ்வது ஒன்று இலக்கண உருபனாகவோ அன்றி உள்வினையாகவோதான் (Copula Verb) இருக்க முடியும். இங்கே (15), (16)-இல் நிகழும் **போல், போலும்** ஆகியவை ஒப்பில் போலியாகலானும் அவற்றை இலக்கண உருபன்களாகக் கொள்ளப்படுவதற்கு வாய்ப்பு இன்மையானும், பயனிலை உறுப்புக்களையடுத்து நிகழும் அவை உள்வினைகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. போலென் கிளவி ஒப்புமைப் பொருண்மையைக் குறிப்பதைக் கருத்தில் கொண்டு, உள்வினை யாகிய போலென்கிளவியானது இலக்கணப் பொருண்மையாகிய ஒப்புமைப் பொருண்மையை மேற்கொண்டு இலக்கண உருபனாகச் செயல்படுகின்றது என்று துணியலாம். இதனை அரண் செய்வது போல் ஒப்புடைப்போலி நிகழும் சில வாக்கிய அமைப்புக்களை விரிக்கும்போது மேற்படி கிளவியானது பயனிலையாகச் செயற் படும் உறுப்பினையடுத்தே நிகழ்வதைக் காணலாம். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் வாயிலாகப் புலப்படுத்தலாம்.

(17) முருகன் ராமனைப் போல் பாடினான்.
(18) முருகன் ராமன் பாடியதைப் போல் பாடினான்.

இவ்விரண்டும் ஒரே பொருண்மையினவாகும். இவற்றுள் பிந்தியது முந்தியதன் விரிவாகும். விரிவமைப்பாகிய (18)-இல்

போலென்கிளவி **பாடியது** என்னும் பொதுவினைப் பயனிலையை அடுத்து நிகழ்வதைக் காணலாம்.[1]

## 4.0. அற்றும் ஆங்கும் உள்வினையாகும்

4.1. போலென் கிளவி ஒப்பில் போலியாகவும், ஒப்புடைப் போலியாகவும் நிகழும் தன்மையானது ஒப்புமைப் பொருண்மையைக் குறிக்கும் அற்றும் ஆங்கும் அடிப்படையில் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கவை என்ற கருதுகோளுக்கு வழிவகுக்கின்றது. ஒப்புடைப் போலியினைப் போன்றே இந்த இரண்டு இடைச் சொற்களும் பயனிலை உறுப்பினையடுத்தே நிகழ்வதால் இவற்றை உள்வினைகளாகக் கொள்ளும் நமது கருதுகோள் மேலும் வலுப்படுகின்றது. இக்கருதுகோளானது *அற்று, ஆங்கு, போல்* ஆகியவற்றை உள்வினைக் குடும்பத்தைச் சேர்ந்தவையாகக் கொள்ள வகை செய்கின்றது.

4.2. உள்வினைகள் பலவாதல் போல அவற்றின்முன் பயனிலையாகச் செயற்படும் வினைகளும் பல்வேறு வாய்பாட்டினவாய் அமைதல் தவிர்க்கமுடியாததாகின்றது. போலென் கிளவியின் முன் நிகழும் வினைப்பயனிலைகளும், *அற்று* மற்றும் *ஆங்கு* ஆகியவற்றின் முன் நிகழும் வினைப்பயனிலைகளும் ஒரே வாய்பாட்டினவாய் அமைவதில்லை. *அற்றும் ஆங்கும்* முன்னர்க் குறிப்பிட்டதுபோல் செய்து வாய்பாட்டு வினைகளையடுத்து நிகழவல்லவை. செய்பு வாய்பாட்டு வினைமுற்றுக்களை அடுத்தும் இவை நிகழற்பாலன வாகும். இவற்றைத் தவிர ஆங்கென் கிளவி *செய்திசின், செய்தற்று* வாய்பாட்டு வினைகளையடுத்தும் நிகழவல்லது.[2] இதனின்றும்

---

1. *முருகன் ராமன் பாடியதைப் போல் பாடினான்* என்ற இந்த வாக்கிய அமைப்பில் உள்ள *பாடியதைப் போல்* என்ற தொடரில் நிகழும் ஐயென் கிளவி வேற்றுமை உருபாகக் கொள்ளத் தக்கதன்று. இதுபற்றி இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள *ஒப்பில்போலியும் ஒப்புடைப் போலியும்* என்ற கட்டுரையில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

2. செய்பு வாய்பாட்டு வினைகளையடுத்து ஆங்கென் கிளவியின் நிகழ்ச்சி பெருவழக்கினதன்று. தவிரவும் இவ் வாய்பாட்டு வினைகளையடுத்து நிகழ்கையில் ஆங்கென் கிளவி ஒப்புமைப் பொருண்மையை உணர்த்தும் நிலை பழந்தமிழில் காணப்படவில்லை. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

   (அ) வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
   தெய்வத்துள் வைக்கப் படும் (குறள். 50)

   (ஆ) போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடும் கொள்கையைச்
   சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மன்.. (கலித்தொகை 29.14, 15)

   பழந்தமிழில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படும் இத்தகைய எடுத்துக்காட்டுக்களில் ஆங்கென் கிளவி ஒப்புமைக் கிளவியை உணர்த்தவில்லையாயினும் மேற்படி கிளவியானது அடிப்படையில் உள்வினையாகலின் இதன்முன் நிகழும் செய்பு வாய் பாட்டு வினைகள் பயனிலைச் செயற்பாட்டினவாகவே கொள்ளப்படும்.

தமிழ் வாக்கிய அமைப்புக்களின் வரலாறு பற்றிய ஆய்வில் *செய்து, செய்பு, செய்திசின், செய்தற்று* ஆகிய நான்கு வாய்பாட்டு வினைப் பயனிலைகளும் பொதுவினை முற்றுக்கள் (Impersonal Finite Verbs) என்ற உண்மை பெறப்படுகிறது. இத்தகைய நிகழ்ச்சியானது தமிழில் சிறப்பு வினைமுற்றுக்களின் (Personal Finite Verbs) தோற்றம் வரலாற்று நிலையில் பிந்தியது என்பதை உணர்த்துவதாக உள்ளது. தொல்காப்பியம், பொது வினைகள் பயனிலையாகச் செயல்படும் நிலையைப்பற்றி யாண்டும் பேச வில்லை. இதனின்றும் *செய்தற்று, செய்தாங்கு, செய்திசினாங்கு* மற்றும் *செய்தற்றாங்கு* வாய்பாட்டுத் தொடர்கள்[3] பழந்தமிழில் பயின்று வழங்கிய போதிலும் அவை பழந்தமிழுக்கு உரிய தொடர்கள் அல்லவென்பதும், பழந் தமிழுக்கு முந்தைய மொழியில் நடைமுறையில் வழங்கிய தொடர்கள் என்பதும், பழமையைப் போற்றும் வகையில் தன் காலத்தில் வழக்கற்றுப்போன மேற்படி வாய்பாட்டுத் தொடர்களைப் பழந்தமிழானது பொன்னேபோல் போற்றிப் பயன்படுத்திக் கொண்டது என்பது தெளிவாகின்றது. மலயாளம் ஒன்றைத்தவிர ஏனைய திராவிட மொழிகளில் பெரும்பாலும் சிறப்பு வினைகளே பயனிலைச் செயற்பாட்டில் அமையும் நிலை காணப்படுகின்றது. மேலே தமிழில் காணப்படுவது போல பிற திராவிடமொழிகளிலும் பொதுவினைகள் பயனிலையாகச் செயல்படுவதைக் குறிக்கும் அகச்சான்றுகள்

---

3. இத்தொடர்களுடன் *செய்தென* வாய்பாட்டுத் தொடர்களையும் சேர்த்துக் கொள்ளலாம். பழந்தமிழில் மிகுதியாகப் பயின்று வழங்கும் செய்தென வாய்பாட்டுத் தொடர்கள் *செய்தது போல், செய்ததால்* ஆகிய வாய்பாட்டுத் தொடர்களின் பொருண்மையுடன் பொருந்துவன வாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளவும்.

(அ) விரைமலர் ஏந்தி விசும்பூ டிழிந்து
பொருவறு பூங்கொடி பூமியிற் *பொலிந்தென*
வந்து தோன்றிய மணிமே கலாதெய்வம் (மணிமேகலை 10.3-5)

(ஆ) தொடியோர் *மடிந்தெனத்* துறைபுலம் பின்றே (நற்றிணை 49.2)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பொலிந்தென, மடிந்தென* ஆகிய செய்தென வாய்பாட்டுத் தொடர்கள் முறையே *பொலிந்ததுபோல், மடிந்ததால்* ஆகிய தொடர்களின் பொருண்மையுடன் பொருந்துவனவாகும். செய்தென வாய்பாட்டுத் தொடர்களில் நிகழும் எனவென் கிளவி ஒப்புமைப் பொருண்மையையும் உணர்த்துவதாகலின் *அற்று, ஆங்கு, போல்* ஆகியவற்றைப் போன்றே இக்கிளவியும் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. மேலேயுள்ள இரண்டு எடுத்துக்காட்டுக் களிலும் எனவென்கிளவி *ஒப்புமை, ஏது* ஆகிய இலக்கணப் பொருண்மைகளை மேற்கொண்டு உள்வினைத்தன்மையை இழந்து இலக்கண உருபனாகச் செயல்படுகின்றது.

கிடைக்குமாயின்[4] *முந்துதிராவிடம்* (Pre-Dravidian) பொது வினைகளைப் பயனிலையாகக் கொண்டு செயல்பட்டது என்றும், சிறப்பு வினைகளின் தோற்றம் திராவிடமொழிகளில் வரலாற்றில் பிந்திய நிலையினதென்றும் துணியலாம். தமிழில் முற்றுவிகுதிகள் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கவை என்ற கருதுகோள் (பார்க்க: Kothandaraman, R. 1990 a, b) இத்துணிபினை மேலும் வலுவுள்ளதாக்குகின்றது.

## 5.0. அற்று – சற்று விரிவாக

5.1. இனி *அற்று, ஆங்கு* ஆகியவற்றைப் பற்றிச் சற்று விரிவாகச் சிந்திக்கலாம். இந்த வகையில் முதலில் அற்றென் கிளவியைக் கருத்தில் கொள்ளலாம்.

5.2. செய்தற்று வாய்பாட்டுத் தொடர்களில் நிகழும் அற்றென் கிளவியானது தெலுங்கில் அட்டு எனத் திரிந்து அனி (=என்று) என்பதனோடு துணைநிலை வழக்கில் அமையும் நிலை காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இந்த நிலையைக் காணலாம்.

19(அ) மீரு அக்கட வச்சினட்டு வாடு செப்பினாடு
'நீங்கள் அங்கே வந்தாற்போல் அவன் சொன்னான்'

(ஆ) மீரு அக்கட வச்சினாரு அனி வாடு செப்பினாடு
'நீங்கள் அங்கே வந்தீர்கள் என்று அவன் சொன்னான்'

20(அ) ராமுடே தானி செப்பினட்டு தெலுஸ்துந்தி
'ராமனே அதை சொன்னாற்போல் தெரிகின்றது'

(ஆ) ராமுடே தானி செப்பினாடு அனி தெலுஸ்துந்தி
'ராமனே அதைச் சொன்னான் என்று தெரிகின்றது'

21(அ) மீரு நின்ன அக்கட லேன்னட்டு ராமுடு செப்பினாடு
'நீங்கள் நேற்று அங்கே இல்லை என்றாற்போல் ராமன் சொன்னான்'

(ஆ) மீரு நின்ன அக்கட லேது/லேரு அனி ராமுடு செப்பினாடு
'நீங்கள் நேற்று அங்கே இல்லை என்று ராமன் சொன்னான்'

இந்த எடுத்துக்காட்டுக்களில் *அட்டு* (<*அற்று) *அனி* இரண்டும் துணை நிலை வழக்கில் நிகழ்வதாலும், ***அனி*** என்னும் உறுப்பு பயனிலையாக நிகழும் உறுப்பினையடுத்து நிகழ்வதாலும்

---

4. கிடைத்தற்கு வாய்ப்பு உள்ளது. இந்த வகையில் கோதண்டராமனில் (1990) காணப்படும் பெயரெச்ச வினைகள் பற்றிய ஆய்வு கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

5. *லேன்னட்டு* (*லேனின்+அட்டு) என்ற தெலுங்குத் தொடருக்கு நேரான தொடர் தமிழில் காணப்படவில்லை.

மேற்படி உறுப்புகள் இரண்டும் உள்வினைகளாகக் கொள்ளத் தக்கவையாகின்றன. தமிழில் *அற்று* என்பது முற்றுவாக்கியங்களில் மட்டுமே செய்து வாய்பாட்டுப் பயனிலைகளையும், பெயர்ப் பயனிலைகளையும் அடுத்து நிகழ்கின்றது.[6] ஆனால் அற்றின் திரிபாகிய *அட்டு* என்பது தெலுங்கில் கோப்புத் தொடரன் களாகிய (**Complementary Clauses**) எச்சவாக்கியங்களில் மட்டு மன்றி முற்றுவாக்கியங்களிலும் (எ-டு. *வாடுநின்ன வச்சினட்டு (<வச்சின் + அட்டு)* 'அவன் நேற்று வந்தாற்போல' (பேச்சுத்தமிழ்) நிகழ்வதாகின்றது. தமிழில் உள்ளதுபோல் தெலுங்கில் *அட்டு* ஒப்புமை குறிக்கும் கடப்பாடில்லை.[7] இந்த நிலையினை மேலே யுள்ள தெலுங்கு எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

5.2. செய்தற்று வாய்பாட்டுப் பயனிலைத் தொடர்களில் ஒப்புமை குறித்து நிற்கும் *அற்று* என்பதானது வல்லொலி வடிவமாகும்.[8] இதற்கு இனமான மெல்லொலி வடிவம் *அன்று* என்பதாகும். இந்த மெல்லொலி வடிவமானது தமிழில் பயனிலையாகச் செயற்படும் உறுப்பினையடுத்து நிகழும் நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(22) காதலற் காண்கிலேன் கலங்கிநோய் கைம்மிகும்
ஊதுலை தோற்க வுயிர்க்குமென் **நெஞ்சன்றே**[9]
(சிலம்பு. 18.12, 13)

(23) சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா விறைவன்கை **வேலன்றே**
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே (சிலம்பு. 24.8)

(24) தேவாதி தேவனவன் சேவடி சேர்துன்றே[10] (சீசி. கடவுள் வாழ்த்து)

---

6. அற்றென்கிளவி பெயர்ப்பயனிலைகளையடுத்தும் நிகழவல்லது என்பதைப் புறநிலை அமைப்பின்மீது அமைந்த நிகழ்ச்சியைக் கொண்டு மட்டுமே சொல்ல முடியாது.

7. இது தெளிவுபடுத்தப்பட வேண்டிய ஒன்றாகும்

8. வல்லொலி வடிவத்துக்கு இனமான மெல்லொலி வடிவமும், மெல்லொலி வடிவத்துக்கு இனமான வல்லொலி வடிவமும் திராவிடமொழிகளில் காணப்படுகின்றன. எ-டு: *நட்பு - நண்பு*, (இரண்டும் தமிழில்); *வெற்றி- வென்றி* (இரண்டும் தமிழில்); *நன்கு - நற்கு* (**இரண்டும் தமிழில்**); *சுட்டு* (**தமிழ்**) - *சுண்டு* (**மலயாளம்**).

9. இவ்வெடுத்துக்காட்டில் நிகழும் அன்றென் கிளவியை அசைநிலைக் கிளவியாகக் கொள்வார் அரும்பதவுரையாசிரியர் (சிலம்பு. உ.வே.சாமிநாதய்யர் பதிப்பு 1944).

10. நச்சினார்க்கினியர் *அன்றே* என்பதனை *அன்று* + *ஏ* என்ற அமைப்பினதாகக் கொண்டு அன்றென் கிளவியை அசையென்றும், ஏகாரம் ஈற்றசையென்றும் குறிப்பர்.

(25) அல்லனவும் அமைத்து ஆங்கெழு நாளிடைச்
செல்வதொர் மாமயில் *செய்தனன் அன்றே* (சீ.சி. 235.3, 4)

(26) தம்பெரு மானடி சார்ந்தனள் *அன்றே* (சீவகசிந்தாமணி 221.4)

(27) கின்னரரும் மெய்ம்மறந்து சோர்ந்தார் *அன்றே* (சீ.சி. 647.4)

(28) பாடுடை மயிலந் தோகை பைபய வீழ்ந்த *தன்றே* (சீ.சி. 300.4)

(29) கூனிய துருவம் கொண்டோர் தெய்வதம் குறுகிற் *றன்றே*
(சீ.சி. 314.4)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் அன்றென் கிளவி வழக்கற்றுப் போயினும் அதன் நிகழ்ச்சியானது பயனிலையாகச் செயற்படும் உறுப்பினையடுத்து அமைவதால் அடிப்படையில் அது உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது.[11] உரையாசிரியர்கள் இதனை வெற்றுறுப்பாகவே கொள்கின்றனர். காரணம், நடைமுறையில் இதன் வினைத்தன்மை செயலிழந்து போனதே யாகும். ஆயினும் பயனிலையாகச் செயல்படும் உறுப்பினையடுத்தே அன்றென் கிளவியின் நிகழ்ச்சி போற்றப்படுவதால் இது உள்வினைக் குடும்பத்தில் வைத்தெண்ணத்தக்கதாகின்றது. அன்றென் கிளவிக்கும் அற்றென் கிளவிக்கும் இடையில் உள்ள குறிப்பிடத்தக்க இரண்டு வேறுபாடுகள் முந்தியது பிந்தியதைப் போல் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துவதில்லை; இரண்டும் பெயர்ப்பயனிலைகளையடுத்து நிகழுமாயினும் வினைப் பயனிலையைப் பொறுத்தவரை அன்றென் கிளவி சிறப்பு வினைகளையடுத்தும், அற்றென்கிளவி செய்து வாய்பாட்டுப் பொது வினைகளையடுத்தும் நிகழ்வனவாகின்றன.

---

11. அன்றென் கிளவியைப் போன்றே *ஆல், ஒரும்* ஆகியவையும் பழந்தமிழில் வழக்கற்றுப் போன நிலையில் பயனிலையாகச் செயல்படும் உறுப்புக்களையடுத்து அசைநிலைக் கிளவிகளாக நிகழ்கின்றன. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(அ)... இளையோற்கு, இரண்டுளஎழுந் தனவாற் பகையே (புறம். 96.2, 3)

(ஆ) அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா (குறள். 366)

நச்சினார்க்கினியர் *ஆல், ஒரும்* ஆகியவற்றை இடைச்சொற்களாகக் கொள்வார் (தொல்.சொல். 298. பவானந்தர் கழக வெளியீடு 1941). இவை பயனிலையாகச் செயல்படும் உறுப்பினையடுத்து நிகழ்வதால் அடிப்படையில் உள்வினைகளாகக் கொள்ளத் தக்கவையாகின்றன. நடைமுறைத் தமிழில் இவை அசைநிலைக் கிளவிகளாகக் கொள்ளப்படுவதால் உள்வினையானது தன் பொருண்மையை இழந்து அல்லது தன் பொருண்மை மறக்கப்பட்டு வெற்றுறுப்பாகவும் நிலைகுலையும் தன்மையது என்பது பெறப்படு கின்றது.

### 6.0. ஆங்கு – சற்று விரிவாக

6.1. அற்றென்கிளவி ஒப்புமைப் பொருண்மையைத் தவிர, பிற பொருண்மைகளைக் குறிக்கும் நிலை பழந்தமிழில் காணப்படவில்லை. இந்த வகையில் ஆங்கென்கிளவி அற்றென் கிளவியினின்றும் வேறுபடுவதுடன் வினைத்தன்மையற்ற கிளவிகளையடுத்தும் நிகழத்தக்கதாகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்:

(30) நின்னாங்கு வருஉமென் நெஞ்சினை
என்னாங்கு வாராது ஓம்பினை கொண்மே
(கலித்தொகை 23.18, 19)

இவ்வெடுத்துக்காட்டில் ஆங்கென் கிளவியானது பெயர்நிலைக் கிளவியை அடுத்து நிகழ்வதைக் காணலாம். இங்கே *நின்னாங்கு, என்னாங்கு* என்னும் தொடர்கள் *நின்னோடு (=நின்னிடம்), என்னோடு (=என்னிடம்)* ஆகியவற்றோடு முறையே பொருந்தி ஆங்கென் கிளவி இடப்பொருண்மையை உணர்த்துவதாகின்றது.

(31) இளமையும் காமமும் *ஓராங்குப்* பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ (கலித்தொகை 18.7, 8)

(32) இன்னோர்க்கு என்னாது என்னோடும் சூழாது
*வல்லாங்கு* வாழ்தும் என்னாது நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே (புறம். 163.5-7)

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் *ஓராங்கு, வல்லாங்கு* ஆகியவை முறையே *ஒன்றாக, வன்மையாக* என்பவற்றுடன் பொருந்தி ஆங்கென் கிளவியும் ஆகவென் கிளவியும் ஒருதிறத்தனவாகின்றன.

(33) வேறுபட் டாங்கே கலுழ்தி யகப்படின்
மாறுபட் டாங்கே மயங்குதி... (கலித்தொகை 91.19, 20)

இவ்விரண்டு அடிகளுக்கும் நச்சினார்க்கினியர் பின்வருமாறு உரை வகுக்கிறார்:

> "யான் நின்னோடு லேறுபட்ட அப்பொழுதே நெஞ்சு கலங்குவை; யான் வேறுபடாமல் நின்கையிலே அகப்படுவேனாயின் அக் கலக்கத்தை மாறுபட்ட பொழுதே என்னை யிகழ்ந்து பரத்தையர் பாற் சேறற்கு மனம் மயங்குவை"

நச்சினார்க்கினியரின் இந்த உரைக்குறிப்பைக் கருத்தில் கொண்டால், (33)-இல் நிகழும் *வேறுபட்டாங்கு, மாறுபட்டாங்கு* ஆகிய தொடர்கள் முறையே *வேறுபட்ட பொழுது/ வேறுபட்டவுடன், மாறுபட்ட பொழுது/மாறுபட்டவுடன்* ஆகிய

தொடர்களுடன் பொருந்தும். ஆங்கென் கிளவி கன்னடத்தில் *ஆக* (a:ga) என வழங்குகிறது. எ-டு: band -a:ga 'வந்தபோது'

*6.2.* ஆங்கென் கிளவி பொதுநிலைக்கிளவியாக நிகழும் போக்கினைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(34) பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்கு
உற்றதும் எல்லாம் ஒழிவின் றுணர்ந்தாங்கு
என்பதிப் பெயர்ந்தேன் *(சிலம்பு. 27.84-86)*

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *உணர்ந்தாங்கு* என்னும் தொடர் *உணர்ந்தேனாய்/உணர்ந்தேனாகி* என்பதுடன் பொருந்தி ஆங்கென் கிளவியும் *ஆய்* அல்லது *ஆகி* என்னும் கிளவியும் ஒருதிறத்தனவாகின்றன. பழந்தமிழில் *சிறப்புவினை+ ஆய்/ஆகி* என்ற அமைப்பில் நிகழும் தொடர்கள் பொதுவாகச் செய்து வாய்பாட்டு வினைகளுடன் பொருந்துவனவாகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் இதனை உணரலாம்.

(35) தொடுகழன் மன்னற்குத் ***தொலைந்தன ராகி*** *(சிலம்பு. 6. 9)*

(36) மாதரி தன்னுடன் மடந்தையை யிருத்துதற்கு
ஏதம் இன்றென *எண்ணின ளாகி* *(சிலம்பு. 15.123, 124)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *தொலைந்தனராகி, எண்ணினளாகி* ஆகிய தொடர்கள் முறையே **தொலைந்து, எண்ணி** ஆகிய செய்து வாய்பாட்டு வினையெச்சங்களுடன் பொருந்தி நிற்கின்றன. இவ்வாறே பெரும்பாலான செய்தாங்கு வாய்பாட்டுத் தொடர்களும் செய்து வாய்பாட்டு வினையெச்சங்களுடன் பொருந்தும் நிலை காணப்படுகின்றது. இதனைக் கருத்திற்கொண்டு, ஆங்கென் கிளவியை உள்வினைக்கிளவியின் வினையெச்ச வடிவமாகிய *ஆய்* என்பதன் மாற்றுருபாகத் துணியலாம். இதன் மூலம் ஆங்கென் கிளவி அடிப்படையில் உள்வினை யென்பது மேலும் உறுதியாகின்றது. உள்வினைகள் இலக்கணப் பொருண்மையை மேற்கொண்டு இலக்கண உருபன்களாகவும் செயல்படத்தக்கவையாகலின் உள்வினையாகிய ஆங்கென் கிளவி மேலே சில எடுத்துக்காட்டுக்களில் இலக்கண உருபனாகச் செயல்படுவதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை. ஆனால் (34)-இல் உள்ளது போன்ற அமைப்புக்களில் ஆங்கென் கிளவியானது பொதுநிலைக்கிளவியாய் அமைந்து உள்வினைத் தன்மையைப் போற்றுவதாகவே கொள்ளத் தோன்றுகிறது.

*6.3.* அற்றென் கிளவிக்கு நேரான மெல்லொலி வடிவம் *அன்று* என அமைவதுபோல் ஆங்கென் கிளவிக்கு நேரான வல்லொலி வடிவம் *ஆக்கு* என்று அமையும். *ஆக்கு* என்றோர் உள்வினை

தமிழில் இல்லையாயினும் இதனடியாகத் தோன்றி, பேச்சுத் தமிழில் பரவலாக வழங்கும் *ஆக்கும்* என்பதனை *ஆங்கென்* கிளவிக்கு நேரான வல்லொலி வடிவமாகக் கொள்ளலாம். இவ் வடிவமானது உள்வினைப் பொருண்மையையிழந்து உறுதிப் பொருண்மையை உணர்த்தும் நிலையே தமிழில் காணப்படு கின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் தெளிவுபடுத்தும்.

(37) அது சேவலாக்கும்

(38) முருகன் நேற்று வந்தானாக்கும்

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் *ஆக்கும்* என்பது பயனிலையாகச் செயற்படும் உறுப்புக்களையடுத்தும் நிகழவல்லது என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(39) முருகனாக்கும் நேற்று வந்தது.

(40) முருகன் நேற்றாக்கும் வந்தது.

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் *ஆக்கும்* என்னும் உள் வினை உறுதிப்பொருண்மையதாகி, சிறப்பு வினையாகிய **வந்தான்** என்னும் பயனிலையை *வந்தது* என்னும் பொதுவினையாக மாற்றியமைக்கின்றது. இவ்வாறு மாற்றியமைக்கும் ஆற்றல் உறுதிப் பொருண்மையைத் தழுவிய உள்வினைக்கு மட்டுமே உண்டு. மலையாளத்தில் இந்த நிலை தெளிவாகக் காணப்படு கின்றது. இம்மொழியில் *ஆணு* என்பது உள்வினையாகும். எ-டு: *அவன் ராமனாணு* 'அவன் ராமனாவான்', இந்த உள்வினையானது வினைப்பயனிலையை அடுத்து நிகழ்வதில்லை. ஆனால் உறுதிப் பொருண்மையை மேற்கொண்டு பயனிலை நீங்க ஏனைய இலக்கண உறுப்புகளையடுத்துப் பயனிலை வினையின் வடிவமைப்பை மாற்றி விடுகின்றது. இதனைக் கீழே (42), (43)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்கள் வாயிலாக அறியலாம்.

(41) ராமன் இந்நலெ வந்நு 'இராமன் நேற்று வந்தான்'.

(42) ராமனாணு இந்நலெ வந்நது 'இராமனாக்கும் நேற்று வந்தது'.

(43) ராமன் இந்நலெயாணு வந்நது 'இராமன் நேற்றாக்கும் வந்தது'.

மலையாளத்தில் உள்வினையானது உறுதிப்பொருண்மையை உணர்த்தும் இலக்கண உருபனாகச் செயல்படும் நிலையானது, தமிழில் உறுதிப்பொருண்மையை உணர்த்தும் *ஆக்கும்* என்னும் இலக்கண உருபனை உள்வினையாகக் கொள்ள வகைசெய்கின்றது. இதனின்றும், *ஆக்கும்* என்பதற்கு நேரான மெல்லொலி வடிவ மாகிய ஆங்கென் கிளவியும் உள்வினையாகக் கொள்ளத்தகும் பெற்றியதாகின்றது.

### 7.0. வாக்கிய மீட்டுருவாக்கத்துக்கு வகை செய்யும் அற்றும் ஆங்கும்

அற்று மற்றும் ஆங்கு ஆகிய கிளவிகளின்மீது அமைந்த இந்த ஆய்வானது இக்கிளவிகளை உள்வினைக்குடும்பத்துக்கு உரியனவாகக் கொள்கின்றது; உள்வினைகள் இலக்கண உருபன்களாகச் செயல்படவல்லவை என்பதை உணர்த்துகின்றது; செய்து, செய்பு, செய்திசின் மற்றும் செய்தற்று வாய்பாட்டுப் பொதுவினைகள் பயனிலையாகச் செயல்படும் வாக்கிய அமைப்புக்களை மீட்டுருவாக்கம் செய்யத் துணை புரிகின்றது; மொத்தத்தில் தமிழ்ப் பயனிலைகளின் வரலாற்று அமைப்பினை அறிந்துகொள்ள இத்தகைய ஆய்வு ஓர் தோற்றுவாயாக அமைகின்றது.



# 18. அன்று அனையதன்று

## *1.0 தடம் புரண்ட புலமை*

*1.1* சங்கத் தொகை நூலாகிய பத்துப்பாட்டில் மலைபடு கடாம் இறுதியில் அமைந்த பாட்டாகும். இதனை இயற்றியவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் என்னும் அருந்தமிழ்ப் புலவராவார். ஐநூற்று எண்பத்து மூன்று அடிகள் கொண்ட மலைபடுகடாத்தில் நிகழும் *அனைய தன்றவன் மலைமிசை நாடே (188)* என்ற அடியில் காணப்படும் அன்றென் கிளவியைப் பற்றிய ஆய்வாகும் இச்சிறுகட்டுரை. இந்த ஆய்வுக்கு நிலைக்களனாக அமையும் அன்றென் கிளவி நிகழும் அடியானது மலைபடுகடாத்தில் பின்வரும் பகுதியில் நிகழ்கின்றது.

*(1)* ஏறித் தரூஉம் இலங்குமலைத் தாரமொடு
வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்
குறைவின்று பருகி நறவுமகிழ்ந்து வைகறைப்
பழஞ்செருக் குற்றநும் அனந்த றீர
வருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்
வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை
முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ
வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனின்
இன்புளிக் கலந்து மாமோ ராகக்
கழைவளர் நெல்லின் அரியுலை ஊழ்த்து
வழையமை சாரல் கமழத் துழைஇ
நறுமலர் அணிந்த நாறிரு முச்சிக்
குறமகள் ஆக்கிய வாலவிழ் வல்சி
அகமலி உவகை ஆர்வமொ டளைஇ
மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்
செருச்செய் முன்பிற் குரிசின் முன்னிய
பரிசின் மறப்ப நீடலும் உரியிர்
அனைய தன்றவன் மலைமிசை நாடே *(170-188)*

*1.2.* பத்தொன்பது அடிகளைக் கொண்ட இந்தப் பகுதியின் முதல் பதினெட்டு அடிகளுக்கு நமது ஆய்வில் இடமில்லை. ஆயினும் நச்சினார்க்கினியர் **அனைய தன்றவன் மலைமிசை**

*நாடே* என்ற அடிக்கு உரை வகுக்குங்கால் 170-ஆம் அடியாகிய *'ஏறித் தரூஉம் இலங்குமலைத் தாரமொடு'* என்ற அடியினை வம்புக்கு இழுப்பதால் மேலே குறிப்பிட்ட பகுதியை நாம் இங்குக் கருதவேண்டியுள்ளது. இந்தப் பகுதியில் மூன்று பயனிலைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. *பெறுகுவிர், உரியிர், அனையது அன்று* என்பனவாகிய இந்த மூன்று பயனிலைகளும் பின்வரும் மூன்று வாக்கிய அமைப்புகளில் நிகழ்கின்றன.

(2) தேறல் குறைவின்றுபருகி... குறமகள் ஆக்கிய
வாலவிழ் வல்சி... மனைதொறும் பெறுகுவிர்

(3) பரிசில் மறப்ப நீடலும் உரியிர்

(4) அனையதன்று அவன் மலைமிசை நாடு.

1.3. இங்கே (4)-இல் குறிக்கப்பெற்றுள்ள வாக்கிய அமைப்பின் பயனிலையை நச்சினார்க்கினியர் வேறொன்றாகக் குறிப்பிடுவார். இந்த வாக்கியத்துக்கு நச்சினார்க்கினியர் வகுத்துள்ள உரையைப் பொ.வே. சோமசுந்தரனார் பின்வருமாறு எடுத்துரைக்கிறார்.

(5) இனி ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'அனைய தன்றவன் மலைமிசை நாடே' (கஅஅ) என்னும் தொடரைப் பிரித்தெடுத்து, (கள0) 'ஏறித் தரூஉம்' என்னும் தொடர்க்கு முன்னாக இணைத்து "அந்நன்னனுடைய மலையினது உச்சியில் நாடு யான் முற்கூறிய தன்மைத்தன்று; மிகவும் சிறப்புடைத்து" எனப் பொருள் விரிப்பாராயினர். (பத்துப்பாட்டு, மலைபடுகடாம், பொ.வே. சோமசுந்தரனார் உரை, கழகப் பதிப்பு)

நச்சினார்க்கினியர் உரையினின்றும் *அனைய தன்றவன் மலைமிசை நாடே* என்ற வாக்கிய அமைப்பில் நிகழும் **அன்று** என்பது ஒன்றன்பால் குறித்த எதிர்மறைக் குறிப்புவினைப் பயனிலை எனக் கொள்ளத்தக்கதாகின்றது.

1.4. ஆய்வுக்குட்பட்ட அன்றென் கிளவியை நச்சினார்க்கினியர் எதிர்மறைக் குறிப்பு வினையாகக் கொள்வது கவிஞனின் உட்கிடையைப் போற்றும் வகையில் அமையவில்லை. ஒரு நாட்டின் வளத்தையும், அந்நாட்டின்கண் உறையும் மக்களின் பண்பாட்டுச் சிறப்பையும் பல நிலைகளில் பெருமித உணர்வுடன் புலப்படுத்தும் கவிஞன் இறுதியில் அந்த நாடு அத்தகைய சிறப்பினையுடையது என்று கூறி முடிக்க முற்படுவது இயல்பான செய்தித் தொடர்ச்சிக்கு இசைந்ததாக அமைகிறது. ஒன்றனைச் சிறப்பித்துக் கூறிய பிறகு 'அத்தகையதன்று அவன் மலையின்கண் உள்ள நாடு' என்று கூற முற்படுவது பிந்தியதன் சிறப்பைப் போற்றுவதாக எடுத்துக்கொள்ள முடியாது. பதினெட்டாவது அடியாகிய *அனைய தன்றவன் மலைமிசை நாடே* என்பதனைப் பதினேழு

அடிகளுக்கு முன்னதாகக் கொண்டு சென்று பொருத்தி மேற்படி அடியில் நிகழும் **அன்று** என்பதனை நச்சினார்க்கினியர் எதிர் மறைக் குறிப்புவினையாகக் கொள்வது ஆற்றொழுக்குப் போன்ற உரை நிகழ்ச்சிக்குச் சிறிதும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

## 2.0. அன்று இரண்டும் அன்று

நன்னனிடம் பரிசில் பெறக் கருதிச் செல்வான் ஒருவனிடம் மக்களின் விருந்தோம்பற் சிறப்பினை உணர்த்தி, அதன் பயனை நுகர்ந்த வறுமையாளன் நன்னனிடம் பரிசில் பெற வேண்டும் என்பதனையும் மறந்து அந்த மக்களுடன் தங்கி, தன் பரிசிற் பயணத்தை நீட்டிக்கவும் துணிவான் என்பதைச் சொல்லி, பின்னர் நன்னன் நாடு அத்தகைய சிறப்பினது என்று முடிப்பதாகக் கொள்வது பொருத்தமாக அமையும். எனவே **அனையதன்று** என்பதில் நிகழும் அன்று என்பதை எதிர்மறைக் குறிப்பு வினையாகக் கொண்டு நச்சினார்க்கினியர் உரை வகுக்க முற்படுவது ஏற்புடையதாகக் கொள்ளத்தக்கதன்று. இந்த வகையில் சோமசுந்தரனாரின் உரை நச்சினார்க்கினியர் உரையி னின்றும் முற்றிலும் மாறுபடுகின்றது. **அனைய தன்றவன் மலைமிசை நாடே** என்ற வாக்கியத்துக்குச் சோமசுந்தரனார் 'அத்தகைய மாண்புடையதாம் அவ்வள்ளற் பெருமானின் மலையின்கண் உள்ள நாடு' என்று உரை வகுப்பதுடன் அமையாது, மேற்படி வாக்கியத்தின்கண் நிகழும் '**அன்று** என்பதனை **அசைநிலையாக்குக**' என்றும் குறித்துச் செல்கிறார். நச்சினார்க்கினியர் **அன்று** என்பதனை எதிர்மறைக் குறிப்புவினை யாகக் கொள்ள, சோமசுந்தரனார் அதனை அசைநிலைக் கிளவியாகக் கொள்வார். வண்ணனை மொழியமைப்பைக் கருதுகையில் சோமசுந்தரனாரின் கருத்து நமக்கு உடன்பாடே. ஆயினும் அசைநிலைக்கிளவியாகிய அன்று என்பதன் உண்மைத் தன்மையைக் கண்டறிய சோமசுந்தரனாரின் கருத்து நமக்குத் துணைபுரியவில்லை. இதனை எங்ஙனம் கண்டறிவது?

## 3.0. பயனிலை சார்ந்த அன்றென் கிளவி

*3.1.* சீவகசிந்தாமணியில் பயனிலையை அடுத்து **அன்றே** என்பதன் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

6(அ) உப்பமை காமத்துப்பின் அவரிடம் உரைத்தும் அன்றே (107.4)

(ஆ) ...எழுநாளிடைச், செல்வதோர் மாமயில் செய்தனன் அன்றே (235.3,4)

(இ) தம்பெருமானடி சார்ந்தனள் அன்றே (221.4)

(ஈ) பொருசுடர் பருதிபோலப் பொன்னனான் பிறந்தபோழ்தே
மருளுடை மாதருற்ற மம்மர்நோய் மறைந்தது அன்றே
(304.3, 4)

(உ) கூனியதுருவம் கொண்டோர் தெய்வதம் குறுகிற்று அன்றே
(314.4)

(ஊ)வாசநற் பொடிகள்மாலை வண்டுறவீழ்ந்த முற்றம்
ஆசைபட் டரசுவைக வருங்கடி கமழும் அன்றே (109.3, 4)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *அன்றே* (அன்று+ஏ) என்பது அசைநிலைக் கிளவியாகக் கருதத்தக்கதாகும். இதனை நச்சினார்க் கினியரும் உடன்படுகின்றார். *அனைய தன்றவன் மலைமிசை நாடே* என்ற வாக்கியத்தில் நிகழும் அன்றென் கிளவியும், மேலே (6)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் அன்றென் கிளவியும் ஒன்றேயாகும். காரணம் இரண்டும் பயனிலையாகச் செயல்படும். உறுப்பினையடுத்தே நிகழ்கின்றன.

3.2. பயனிலையாகச் செயல்படும் உறுப்பினையடுத்து நிகழ வல்லவை சில குறிப்பிட்ட இலக்கண உருபன்களாகவோ (எ-டு. ஆ, ஏ, ஓ, தான் முதலியன) அல்லது உள்வினை (Copula Verb) யாகவோதான் இருக்க முடியும். உள்வினை என நாம் இங்கே குறிப்பிடுவது இருப்புப் பொருண்மையை உணர்த்தும் *ஆவான், ஆவாள், ஆவார், ஆகும்* முதலியவற்றையாகும். (எ-டு. தமிழ் நெடுங்கணக்கில் முதலெழுத்து அகரமாகும்). வினைப் பயனிலை களையடுத்து உள்வினைகளின் நிகழ்ச்சி குறிக்கப்படுவதில்லை யென்றாலும் ஓர் அகச்சான்றின் மூலம் **வினைப்பயனிலை + உள்வினை* என்ற அமைப்பினை மீட்டுருவாக்கம் செய்யமுடியும். *முருகன் வள்ளியை மணந்தான்* என்ற வாக்கியத்தை *வள்ளியை மணந்தவன் முருகன் (ஆகும்/ஆவான்), முருகன் மணந்தது வள்ளியை ஆகும்* என்ற கவை (Cleft) வாக்கியங்களாக மாற்றியமைக்கையில் இவற்றில் உள்வினைகளின் நிகழ்ச்சியைக் காணலாம். இதனைக் கருத்தில் கொண்டு *முருகன் வள்ளியை மணந்தான்* என்ற வாக்கியத்தை **முருகன் வள்ளியை மணந்தான் ஆவான்* என்று மீட்டுருவாக்கம் செய்ய முடியும். இத்தகைய வாக்கியம் இல்லை யென்றால் கவை வாக்கியங்களில் காணப்படும் உள்வினையின் நிகழ்ச்சியினை யாப்புற விளக்க முடியாது. இலக்கியங்களில் வினைப்பயனிலையை அடுத்து உள்வினை நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம்.

(7) பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. (குறள். 978)

(8) துடியாம் துடியின் முழக்கம் தானாம்
சொல்லுவார் சொல்லெல்லாம் சோதிப்பானாம்
படிதானாம் பாவம் அறுப்பானாகும்
பால்நீற்றனாம் பரஞ்சோதி தானாம்
கொடியனாம் கூற்றை உதைத்தானாகும்
கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும்
கடியனாம் காட்சிக்கு அரியன் ஆகும்
கண்ணாம் கருகாவூர் எந்தை தானே (அப்பர் தேவாரம் 6.15.8)

9(அ) அண்ட, நெடுமுகட்டு இருந்த முன்னோன்
அன்றவன் உந்தி வந்தானாம் எனத் தோன்றினான்
(கம்பராமாயணம், யுத்தகாண்டம் இ.வ. 131)

(ஆ) அந்தணர் மனையெனப் பொலிந்ததாம் அரோ
(மேலது. வீ. அ. 98)

## 4.0. பயனிலை தொடர்ந்த உள்வினை

4.1. மேலே குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக்காட்டுக்களினின்றும் பயனிலை உறுப்பினையடுத்து நிகழும் ஓர் வடிவம் இலக்கண உருபனாகக் கொள்ளப்படுவதற்கு வாய்ப்பில்லையாயின் அதனை உள்வினையாகக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.[1] அசைநிலைக் கிளவிகளை இலக்கண உருபன்களாகக் கொள்ள முடியாது. எனவே *அனைய தன்றவன் மலைமிசை நாடே* என்ற வாக்கியத்திலும் (6)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் அன்றென் கிளவியை இலக்கண உருபனாகக் கொள்வதற் கில்லை. ஆனால் இக்கிளவியானது பயனிலை உறுப்புக்களை யடுத்து நிகழ்வதால் இதனை ஓர் உள்வினையாகக் கருதலாம். இந்தக் கருதுகோளினைக் கருத்தில் கொண்டு *அனைய தன்றவன் மலைமிசை நாடே* என்ற வாக்கியத்தில் *அனையது* என்ற பயனிலையை அடுத்து நிகழும் அன்றென் கிளவியானது **ஆகும்** என்ற உள்வினைக்கு இணையானது என்று துணியலாம். மொழியின் வளர்ச்சிப் போக்கில் *அன்று* என்பதன் உள்வினைத்

1. தமிழில் *காய் கனியாகும் அன்றோ, கனி காயாகாது அன்றோ, காய் அன்றோ கனியாகும், நேற்றுவரை அவர் அமைச்சர் அன்றோ* முதலான வாக்கிய அமைப்புக்கள் காணப்படுகின்றன. இந்த அமைப்புக்களில் காணப்படும் *அன்றோ* என்பது சிக்கலுக்குரிய ஒன்றாகும். பொதுவாக மொழியியலார் இதனை எதிர்மறைக் கிளவியாகிய *அன்று* என்பத னடியாகத் தோன்றிய வினாவாகக் கருதுவர். இத்தகையவை பிற இயல்பான வினாவினின்றும் பொருண்மை நிலையில் மாறுபடுவதால் எச்சவினா (**Tag Question**) என்று மொழியியலார் குறிப்பிடுவர். எச்சவினாவில் நிகழும் **அன்று** என்பது எதிர்மறைக் கிளவியா அல்லது உள்வினையா என்பது ஆய்வுக்குரியதாகும்.

தன்மை மறக்கப்பட்டுவிட்டதால்[2] செய்யுள் இலக்கியத்தில் அதனை அசைநிலையாகப் பயன்படுத்தும் நிலை நேர்ந்துவிட்டது.

### 5.0. அசைநிலை என்பது

5.1. தமிழைப் பொறுத்தவரையில் வரலாற்றுப் போக்கில் உள்வினைத் தன்மையை இழந்து அசைநிலைக் கிளவியாகக் கருதப்படும் நிலைக்கு உள்ளாகி வழக்கற்றுப்போன வினைகள் பலவாகும். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

(10) உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே
அப்பொருள் இரட்டாது இவணை யான
(தொல்.எழுத்து.இளம். 80)

(11) ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே (புறம். 229.1, 2)

12(அ) ஊர்ந்ததை, எரிபுரையோடை யிடைஇமைக்குஞ் சென்னிப்
பொருசமம் கடந்த புகழ்சால் வேழம் (பரி. 21. 1, 2)

(ஆ) தொட்டதை...
புரிமென் பீலிப் போழ்புனை அடையல் (பரி. 21. 3, 7)

(இ) கையதை, கொள்ளாத் தெவ்வர்கொள் மாமுதல் தடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்படை திறந்தவேல்
(பரி. 21. 8, 9)

(ஈ) பூண்டதை, சுருளுடை வள்ளி இடையிடு பிழைத்த
உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடக் கமழ்தார் (பரி. 21.10, 11)

(உ) அமர்ந்ததை...
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம் (பரி. 21. 12, 15)

(13) இது, பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்
(சிலம்பு. பதிகம் 90)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *இரட்டாது (இவணை) ஆன, விழுந்தன்றால், மரபென்* ஆகிய அமைப்புக்களில் நிகழும் *ஆன,*

---

2. மறக்கப்படுதல் என்பது மொழியைப் பொறுத்தவரையில் ஒரு சிக்கலான நிகழ்ச்சியாகும். ஓர் சொல்லுறுப்பு மொழியில் மறக்கப்படுகிறது என்றால் அதற்குச் சில அடிப்படைக் காரணங்கள் இருக்க வேண்டும். கிளைமொழி வழக்குகள் ஒரு காரணமாக இருக்கலாம். கிளைமொழிகள் ஒன்றின்மீது ஒன்று செலுத்தும் ஆதிக்கம் மொழியின் வழக்கு நிலைகள் மாறி அமைய வகை செய்யலாம். *அனைய தன்றவன் மலைமிசை நாடே* என்பதில் *அன்று* என்பது ஓர் உள்வினையின் தொன்மை வழக்கினை நினைவுகூர்வதாகக் கருதலாம். *ஆகும்* என்ற உள்வினைக்குப் பதில் *அன்று* என்பதன் நிகழ்ச்சியானது இக்காலத் தமிழில் போய் என்னும் வினையெச்சத்துக்குப் பதிலாகப் *போந்து* என்ற வினையெச்சத்தை ஒருவர் பயன்படுத்துவதற்கு ஒப்பாகும்.

*ஆல், என்* ஆகியவை உரையாசிரியர்களால் அசைநிலைக் கிளவியாகக் குறிக்கப்படும். எடுத்துக்காட்டு (12)-இல் நிகழும் *ஊர்ந்ததை, தொட்டதை, கையதை, பூண்டதை, அமர்ந்ததை* ஆகியவற்றில் நிகழும் ஐயென்கிளவி பரிமேலழகரால் பகுதிப் பொருள் விகுதியாகக் கொள்ளப்படுகின்றது[3] வண்ணனை நிலையில் அசைநிலைக் கிளவிக்கும், பகுதிப்பொருள் விகுதிக்கும் பெரிதாக ஒன்றும் வேறுபாடு கிடையாது. இரண்டுமே வெற்றுக் கிளவிகள்தான். ஆகவே, இரண்டையும் ஒரு தன்மையனவாகக் கொள்வதில் இடர்ப்பாடு ஏதும் இல்லை. மேலே(10) முதல் (12) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் அசைநிலைக் கிளவிகளும், பகுதிப்பொருள் விகுதியும் பயனிலை உறுப்புக்களை அடுத்து இடம்பெறுவதால் இவை திராவிட மொழிகளின் பயனிலை வரலாற்றின் ஒரு நிலையில் உள்வினைகளாகச் செயல்

---

3. *ஊர்ந்ததை, தொட்டதை, பூண்டதை, அமர்ந்ததை* ஆகியவை கவைப் பயனிலைகள் (Cleft Predicates) ஆகும். கவைப் பயனிலைகள் பொதுப்பயனிலைகள் (Impersonal Predicates) ஆகும். இந்தப் பயனிலைகள் அமைந்த வாக்கியங்கள், சிறப்புப் பயனிலைகள் (Personal Predicates) பொருந்திய இயல்பு வாக்கியங்களினின்றும் அமைவனவாகும். *முருகன் நேற்று வந்தான்* என்பதில் நிகழும் வந்தான் என்பது சிறப்புப் பயனிலையாகும். *முருகன் வந்தது நேற்று* என்பதில் காணப்படும் *வந்தது* என்பது பொதுப்பயனிலையாக அமைந்த கவைப்பயனிலையாகும். இரண்டு பயனிலைகளுக்கும் இடையில் உள்ள வேறுபாடு கருதத்தக்கதாகும். சிறப்புப் பயனிலையானது எழுவாய்க்கு இசைந்ததாகும். பொதுப் பயனிலையானது இருதிணை ஐம்பால் மூவிடங்களின் பண்பினவாகிய எல்லாவகை எழுவாய்க்கும் இசைந்ததாகும். சிறப்புப் பயனிலையின்கண் காணப்படும் முற்றுவிகுதியும் பொதுப்பயனிலையின் கண் காணப்படும் முற்றுவிகுதியும் ஒரு தன்மையன அல்ல. பிந்தியதில் நிகழும் *அது* என்னும் பொது முற்று விகுதி (Impersonal Finite Marker) அசைநிலைக் கிளவியாகக் கருதத்தக்கதாயின் வரலாற்று நிலையில் மேற்படி வடிவமும் உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்பதும், அதன்முன் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகள் வரலாற்று நிலையில் பொது வினைமுற்றுக்களாக நிகழ்ந்தனவாகக் கொள்ளத்தக்கவை என்பதும் பெறப்படுகின்றன.

எடுத்துக்காட்டு 12(இ)-இல் நிகழும் *கையதை* என்பது கையில் உள்ளதானது என்ற அமைப்பின் பொருண்மையுடன் பொருந்தியதாகும். **வேல் கையதை* என்று வாக்கிய அமைப்பு இருக்குமாயின் *கையதை* என்பது *கையில் உள்ளதாகும்* என்ற அமைப்புடன் பொருந்தும். *கையதை* என்பதில் ஈற்றில் நிகழும் ஐயென்கிளவி *ஆவது - ஆகும்* என்ற உள்வினையின் மாற்று வடிவமாகக் கொள்ளத்தக்க தாகும். இதனைக் கருத்தில்கொண்டு 12(உ)வில் நிகழும் *அமர்ந்ததை* என்பதை *அமர்ந்ததானது* என்ற அமைப்பின் பொருண்மைக்கு இசைந்ததாகக் கொள்ளலாம். *அமர்ந்ததை* என்பதற்கு நிகரான சிறப்புப் பயனிலை *அமர்ந்தான் ஆகும் / ஆவான்* என்று அமையும்.

பட்டிருக்க வேண்டும். உள்வினை என்ற உண்மை மொழிகளின் வளர்ச்சிப் போக்கில் மறக்கப்படுகையில் அத்தகைய வடிவம் பிந்திய நிலையில் அசைநிலைக் கிளவியாகவோ, பகுதிப்பொருள் விகுதியாகவோ கருதப்படும் நிலை ஏற்படுகிறது. இதனைக் கருத்தில்கொண்டு நோக்குகையில் மலைபடுகடாத்தில் நிகழும் *அனையதன்று* என்ற தொடரில் அமைந்த அன்றெனகிளவியை நச்சினார்க்கினியர் எதிர்மறைக் குறிப்பு வினையாகக் கொண்டாலும் அது அனையதன்று என்பது பெறப்படும்.

## 6.0. உள்வினைப் பண்புகள்

*6.1.* உள்வினைக்கென்று சில பண்புகள் உண்டு. பயனிலை உறுப்புக்களையடுத்து நிகழும் உள்வினையானது வாக்கியத்தின் பொருண்மைச் சிறப்புக்கு உறுதுணை புரிவதில்லை. இதனால் இதன் நிகழ்ச்சி பொதுவாகத் தவிர்க்கப்படுகின்றது. ஆயினும் மலயாளத்தில் இதன் நிகழ்ச்சி போற்றப்படுகின்றது. எ-டு. *அவன் ராமனாணு* 'அவன் ராமனாவான்'. வாக்கியத்தின் பொருண்மைச் சிறப்பில் தனக்கு இடமின்மையால் உள்வினையானது பொருண்மை குன்றி அசைநிலையாகவோ, பகுதிப்பொருள் விகுதியாகவோ, சாரியையாகவோ கருதப்படும் நிலைக்குத் தேய்ந்து பொலிவிழந்து போகின்றது. பொருண்மை திரிந்து இலக்கண உருபனாகவும், கோப்புக்கிளவியாகவும் (Complementizer) அமைந்து கோப்பு வாக்கியங்களில் (Complement Clauses) இலக்கணச் செயற்பாட்டினைப் புலப்படுத்தும் கருவியாகவும் உள்வினை செயல்படுகின்றது. உள்வினையின் சொல்லியல் (Morphology) ஏனைய வினைகளின் சொல்லியலினின்றும் மாறுபட்டதாகும். எடுத்துக்காட்டாக *ஆவான், ஆகிய* என்ற உள்வினைகளைச் *செய்வான், செய்த* ஆகிய வாய்பாட்டு வினைகளைப் போல் பகுப்பாய்வு செய்ய முடியாது. *அனைய தன்று அவன் மலைமிசை நாடே* என்ற வாக்கியத்தில் நிகழும் **அன்று** என்னும் உள்வினையின் அமைப்பு, **நன்று** (நன்+து) என்ற குறிப்பு வினைமுற்றின் அமைப்பைப் போன்றதாகும். இதேபோல் உள்வினைத் தன்மையதாகிய *ஆவான்* என்பதன் அமைப்பும், *ஆகிய* என்பதன் அமைப்பும் முறையே *நல்லன், நல்ல* ஆகிய குறிப்பு வினைகளின் அமைப்பைப் போன்றதாகும். இனி, உள்வினையின் பண்புகளைத் தகுந்த எடுத்துக்காட்டுகள் மூலம் தெளிவுபடுத்திக் கொள்ளலாம்.

6.2. *ஒன்றன்பால்* என்ற பெயர்தொடரில் நிகழும் *அன்* என்பதும், *ஒருமை ஆகிய பால்* என்பதில் நிகழும் *ஆகிய* என்பதும் துணைநிலை வழக்கில் (Complementary Distribution)

நிகழ்வதால் முந்தியது உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு **அது காய்-அன்* (=அது காயாகும்) என்ற ஓர் வாக்கியத்தினை மீட்டுருவாக்கம் செய்யமுடியும். மொழி வளர்ச்சியில் ஒரு நிலையில் *அன்* போன்ற உள்வினைகளின் இலக்கணச் செயற்பாடுகளைத் தொடரனியற் சூழல்கள் கட்டுப்படுத்தியிருக்க வேண்டும். பயனிலையாகச் செயல்படும் வினைமுற்றுகளே பழந்தமிழில் முற்றெச்சங்களாகச் செயல்படும் போக்கு இதனை வலியுறுத்துவதாக உள்ளது. *ஒன்றன்பால்* என்ற தொடரில் நிகழும் அன்னென் கிளவி உள் வினையாகக் கருதத்தக்கது என்றாலும் *ஒன்றனை* (ஒன்று-அன்+ஐ) என்ற அமைப்பில் நிகழும் அன்னென் கிளவி தனது உள்வினைத் தன்மையை இழந்து சாரியையாகச் செயல்படுகின்றது. *முதலாவது* என்ற பொருள்படும் *ஒந்தனெ* என்ற கன்னட அமைப்பில் நிகழும் *அனெ* என்பது *அன்* என்பதன் அடியாகத் தோன்றியதாகும். *அனெ (=ஆவது)* என்பது *அன்* என்னும் உள்வினையின் திரிபாகிய இலக்கண உருபாகும். தமிழில் வழங்கும் *இரண்டன் உருபு, மூன்றன் உருபு* ஆகிய தொடர்களில் நிகழும் அன்னென் கிளவியும் *இரண்டாவது - இரண்டாம் உருபு, மூன்றாவது-மூன்றாம் உருபு* ஆகிய தொடர்களில் நிகழும் *ஆவது, ஆம்* ஆகியவையும், செம்மை வழக்கில் (Free Variation) அமைந்த இலக்கண உருபன்களாகும். *ஆவது, ஆம்* ஆகிய உள்வினை வடிவங்கள் இலக்கண உருபன்களாகத் திரிந்த நிலையானது *இரண்டன் உருபு மூன்றன் உருபு* ஆகிய தொடர்களில் நிகழும் அன்னென் கிளவியை உள்வினையின் திரிபாக அமைந்த இலக்கண உருபனாகக் கொள்ள வகை செய்கின்றது.

### 7.0. வாக்கியச் சாரியையாக உள்வினை

கோப்பு வாக்கியங்களின் இலக்கணச் செயற்பாட்டினைப் புலப்படுத்தும் கருவியாக உள்வினையானது வாக்கியச் சாரியை யாகச் செயல்படும் பாங்கினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் வாயிலாக அறியலாம்.

14(அ) முருகன் நாளை வருவான் என்று வள்ளி சொன்னாள்
(ஆ) முருகன் நாளை வருவதாக வள்ளி சொன்னாள்

15(அ) முருகன் வருவான் என்ற செய்தி
(ஆ) முருகன் வருவதாகிய செய்தி

16(அ) முருகன் வருவான் என்பது உண்மை
(ஆ) முருகன் வருவதாவது உண்மை

இந்த எடுத்துக்காட்டுக்களில் (14)-இல் நிகழும் *என்று, ஆக* ஆகியவை கோப்பு வாக்கியங்களை வாக்கியங்களாகவும், வினை

யெச்சங்களாகவும் (15)-இல் நிகழும் *என்ற, ஆகிய* இரண்டும் கோப்பு வாக்கியங்களை வாக்கிய வினையெச்சங்களாகவும், வாக்கியப் பெயரெச்சங்களாகவும் (16)-இல் நிகழும் *என்பது, ஆவது, ஆகிய* உள்வினை வடிவங்கள் மேற்படி வாக்கியங்களை வாக்கியப் பெயர்த்தொடர்களாகவும் மாற்றியமைப்பதைக் காணலாம். எடுத்துக்காட்டுக்கள் (14), (15)-இல் நிகழும் எச்சத் தன்மையனவாகிய உள்வினைகளை வாக்கிய எச்சக் கிளவிகள் (Sentential Non-Finite Markers) என்றும், (16)-இல் நிகழும் *என்பது, ஆவது* ஆகிய உள்வினைகளை வாக்கியப் பெயராக்கக் கிளவிகள் (Sentential Nominalizers) என்றும் குறிப்பிடலாம். வாக்கிய எச்சக் கிளவிகளையும், வாக்கியப் பெயராக்கக் கிளவிகளையும் வாக்கிய விகுதிகள் (Sentential Suffixes) அல்லது வாக்கியச் சாரியைகள் (Sentential Increments / Complementizers) என்று வண்ணனை ஆய்வில் கொள்வது பொருத்தமாகும்.

## 8.0 பொருண்மை திரிந்த உள்வினை

உள்வினையின் பொருண்மைத் திரிபுக்குப் பின்வரும் வாக்கியங்கள் கருத்தில் கொள்ளற்பாலனவாகும்.

*(17) மக்கள் அலையெனத் திரண்டனர்*

*(18) மாதவி மாடாக உழைத்தாள்*

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *என, ஆக* ஆகிய உள்வினைகளானவை *போல* என்ற வினையெச்சத்துடன் பொருந்தி ஒப்புமைப் பொருண்மையைக் குறிக்கின்றன.

## 9.0. அன்றும் அற்றும்

*9.1.* உள்வினைக்குரிய பண்புகளாகக் குறிக்கப்பெற்றனவற்றைக் கருத்தில் கொண்டு அன்றென் கிளவியைப் பற்றிய ஆய்வினை மேலும் சிறிது தொடரலாம். **அன்று** என்பதன் வன்மை வடிவம் *அற்று* என்பதாம். இந்த இரண்டு வடிவங்களையும் *aṉṯu என்ற மூல வடிவத்தின் திரிபுகளாகக் கொள்ளமுடியுமா என்பது சிந்திக்கத் தக்கதாகும் *aṉṯu என்பதை மூலவடிவமாகக் கொண்டால் னகரம் றகரத்தின் முன் றகரமாகத் திரிந்து *அற்று* தோற்றம் கொண்டதாகத் துணியலாம். *aṉṯu என்பதில் நிகழும் றகரத்துக்கும், *அன்று* என்பதில் நிகழும் றகரத்துக்கும் ஒலிப்பு நிலையில் வேறுபாடு உண்டு. முந்தையது நிலையொலித் தன்மை (Voiceless) பொருந்திய வல்லொற்றாகும். *அன்று* என்பதில் நிகழும் றகரம் ஒலிப்பு நிலையில் அலையொலித் தன்மை (Voiced) பெற்ற வவ்லொற்றாகும். *அற்று* என்பது தமிழில் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்தும் நிலையினைச் செய்தற்று வாய்பாட்டுப் பயனிலைகளில் காணலாம்.

(19) இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று (குறள் 100)

9.2. தனித்து நின்றும் *அற்று* இப்பொருண்மையை உணர்த்துவதைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(20) உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே
அப்பொருள் இரட்டாது இவணை யான
(தொல்.எழுத்து.இளம்.80)

இந்த எடுத்துக்காட்டில் முதல் அடியானது ஞகாரையும், புகரத்தைப் போன்றது என்று பொருள்படும். **அன்** என்ற உள்வினையின் அடியாகத் தோன்றிய **அற்று** என்பது (19),(20)-இல் பொருண்மை திரிந்து நிகழ்வதாகின்றது.

## 10.0. அற்றும் அட்டும்

10.1. *அற்று* என்பது தெலுங்கில் *அட்டு* எனத் திரிந்து பின்வரும் வாக்கிய அமைப்புக்களில் கோப்புக் கிளவியாக நிகழ்கின்றது.

(21) மீரு நின்ன வச்சினட்டு (வச்சின் + அட்டு) செப்பித்இனி
'நீங்கள் நேற்று வந்தாற்போல் சொன்னேன்'

(22) மிம்மலினி எக்கடனோ சூஸினட்டு (சூஸின் + அட்டு) உந்தி
'உங்களை எங்கோ பார்த்தாற்போல் இருக்கிறது'

(23) மீரு செப்பினட்டு (செப்பின் + அட்டு) சேஸ்தினி
'நீங்கள் சொன்னாற்போல் செய்தேன்'

(24) இப்புடு நேனு வச்சேட்உகா (வச்சே + அட்உகா) லேது
'இப்போது நான் வருகிறாற்போல் இல்லை'

இத்தகைய வாக்கிய அமைப்புக்களில் *அட்டு* என்பதனையடுத்து கா என்ற இடைச்சொல் நிகழ்தலும் உண்டு.[4] எடுத்துக்காட்டு (24)-இல் *அட்டு* என்பது அகரம் கெட்டு நிகழ்கின்றது. தெலுங்கில் *அட்டு* என்பதன் நிகழ்ச்சியானது, சேஸின் (=செய்து)

---

4. தெலுங்கில் கா என்னும் இடைச்சொல்லும் ஒரு கோப்புக் கிளவியே. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் வாயிலாக அறியலாம்.

(அ) மீரு நின்ன வஸ்திரி+அனி அதி செப்பிந்தி
'நீங்கள் நேற்று வந்தீர்கள் என்று அவள் சொன்னாள்'

(ஆ) மீரு நின்ன வச்சிந்தி+கா அதி செப்பிந்தி
'நீங்கள் நேற்று வந்ததாக அவள் சொன்னாள்'

முதல் எடுத்துக்காட்டில் *அனி* (=என்று) என்பது கோப்புக் கிளவியாகும். இரண்டாம் எடுத்துக்காட்டில் *கா* (=ஆக) என்பது *அனி* என்பதுடன் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்வதால் அதுவும் பிந்தியதைப் போலவே கோப்புக் கிளவியாகக் கொள்ளத்தக்கதாகின்றது.

என்ற இறந்தகாலப் பொது வினைப்பயனிலையையும், சேஸே என்ற நிகழ்வெதிர்வு பொதுவினைப் பயனிலையையும் அடுத்தே அமைகின்றது. சேஸின், சேஸே ஆகிய வாய்பாட்டு வினைகளை எங்ஙனம் வினைப்பயனிலைகளாகக் கொள்வது என்பதைப் பின்வரும் வாக்கிய அமைப்புக்கள் தெளிவுபடுத்தும்.

(25) மீரு நின்ன வஸ்திரி + அனி அதி செப்பிந்தி
'நீங்கள் நேற்று வந்தீர்கள் என்று அவள் சொன்னாள்'

(26) மீரு நின்ன வச்சினட்டு (வச்சின் + அட்டு) அதி செப்பிந்தி
'நீங்கள் நேற்று வந்தாற்போல் அவள் சொன்னாள்'

இந்த வாக்கிய அமைப்புக்களில் *வஸ்திரி* என்பதும் *வச்சின்* என்பதும் துணைநிலை வழக்கில் நிகழ்வதாலும், *வஸ்திரி* என்னும் வினைமுற்று பயனிலையாகச் செயல்படுவதாலும் (26)-இல் நிகழும் *வச்சின்* என்ற இறந்தகால வினையமைப்பு பயனிலையாகச் செயல்படும் பொதுவினைமுற்றாகக் (Impersonal Finite Verb) கொள்ளத்தக்கதாகின்றது. மேலே குறிக்கப் பெற்றுள்ள பல்வேறு தெலுங்கு எடுத்துக்காட்டுக்களில் *அட்டு* (< அற்று) என்பது வினைப்பயனிலைகளையடுத்தே நிகழ்கின்றது. இத்தகைய நிகழ்ச்சியானது **அன்று** என்பதனை உள்வினையாகக் கொள்வதற்குச் சிறந்த சான்றாக அமைகிறது.

## 11.0. அன்று நீண்ட ஆன்று

*அன்று* என்பதன் நெடில்வடிவம் *ஆன்று* என்பதாகும். பழந் தமிழில் *ஆன்று, ஆன்ற, ஆன்றிசின்* ஆகிய வினை வடிவங்கள் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருதத்தக்கனவாகும்.

27(அ) பாடான் றிரங்கும் அருவி (புறம் 124.4)

(ஆ) அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறு (புறம். 113.2)

(இ) பகடே யத்தையான் வேண்டி வந் ததுவென
ஒன்றியான் பெட்டா வளவை யன்றே
ஆன் று விட்டனன் அத்தை (புறம் 399: 28-20)

28(அ) பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு (குறள். 148)

(ஆ) அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு (குறள். 681)

(இ) அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்கண் இல் (குறள். 909)

(29) எமியேம் துணிந்த ஏமஞ்சால் அருவினை
நிகழ்ந்த வண்ணம் நீநனி உணரச்
செப்பல் ஆன்றிசின் சினவா தீமோ (குறிஞ்சிப்பாட்டு 32-34)

*(30) செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்*
*ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து* *(குறள். 413)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஆன்று, ஆன்ற, ஆன்றிசின், ஆன்றார்* ஆகியவற்றின் நேரான பொருண்மை தெற்றெனப் புலப்படவில்லை. *அன்று* என்ற உள்வினைக் கிளவியுடன் தொடர்புடையனவாக இவற்றைக் கொண்டால் பொருண்மைத் திரிபு என்ற உள்வினையின் பண்புக்கு இசைய இவை பொருண்மை திரிந்து வழங்குவனவாகக் கருதலாம். மலயாளத்தில் உள் வினையாக நிகழும் *ஆணு - ஆந்நு* என்பதனை *ஆகுந்து* என்பதன் திரிபாகக் கருதப்படுகிறது. இதனை ஏன் *ஆன்று* என்பதன் திரிபாகக் கொள்ளக்கூடாது? முன்னதாக எடுத்துக் காட்டு (10)-இல் *ஆன* என்பது உள்வினையாகக் கருதத்தக்கது என்ற குறிப்பினையும் இங்கே நினைவுகூர்தல் பொருந்தும் எனத் தோன்றுகிறது.

### 12.0. ஆன்றும் ஆற்றும்

12.1. ஆன்று என்பதன் வன்மை வடிவம் *ஆற்று* என்பதாகும். *அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள், சிறுகை அளாவிய கூழ்* (64) என்ற குறட்பாவில் நிகழும் *ஆற்ற* (=மிகவும்) என்பது உள்வினையுடன் தொடர்புடையதா என்பது ஆய்வுக்குரியது. *ஆற்று* என்பது வினையடியாக அமைந்து முக்கால வினை யமைப்புக்களில் நிகழ்கையில் செய்தற் பொருண்மையைக் குறிப்பதாகின்றது. எ-டு. *கடமையை ஆற்று* 'கடமையைச் செய்'. செய்தல் வினை உள்வினையாகச் செயல்படும் பாங்கினைத் தொல்காப்பியம் (சொல்) உரியியல் நூற்பாக்கள் பலவற்றில் காணலாம்.

31(அ) தடவும் கயவும் நளியும் பெருமை *(சேனா. 320)*
அவற்றுள்,
தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும் *(சேனா. 321)*
கயவென் கிளவி மென்மையும் ஆகும் *(சேனா. 322)*
நளியென் கிளவி செறிவும் ஆகும் *(சேனா. 323)*
(ஆ) கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும் *(சேனா. 351)*
(இ) நனவே களனும் அகலமுஞ் செய்யும் *(சேனா. 376)*

32(அ) அவைதாம்,
உறுதவ நனியென வரூஉ மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப *(சேனா. 299)*
(ஆ) வார்தல் போதல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள *(சேனா. 317)*

### 13.0. ஆகும், செய்யும் உறழுங்காலை

13.1. இந்த எடுத்துக்காட்டில் நிகழும் செய்யும் என்னும் வினையானது *ஆகும் - ஆகிய* என்பதனோடு பொருந்திய உள் வினையாகும். இதனைக் கருத்தில் கொண்டு செய்தற் பொருண்மையதாகிய *ஆற்று* என்னும் வினையை *ஆன்று* என்ற உள்வினையின் வன்மை வடிவமாகக் கருதலாம்.

### 14.0. ஆன என்பது

14.1. உள்வினையானது இலக்கண உருபனாகவும் திரிந்தமையும் பெற்றியது என்று முன்னர்க் குறிக்கப்பெற்றது. எடுத்துக்காட்டு (10)-இல் நிகழும் *அப்பொருள் இரட்டாது இவணை யான* என்ற வாக்கிய அமைப்பில் *இரட்டாது* என்னும் எதிர்மறைப் பயனிலையுடன் பொருந்தும் *ஆன* என்னும் கிளவியானது உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்று முன்னதாக நாம் கருதினோம். ஆனால் *ஆன* என்பதன் நிகழ்ச்சியமைந்த எல்லாத் தொல்காப்பிய நூற்பாக்களிலும் மேற்படி கிளவியானது உள்வினையாகச் செயல்படுவதாகக் கருத முடியாது. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத் தக்கனவாகும்.

(33) இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான (எழுத்து-இளம். 37)

(34) எல்லா மென்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதி யான (மேலது. 190)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஆன* என்பது வேற்றுமை உருபாக அமைந்து இடப்பொருண்மையை உணர்த்துவ தாகின்றது. *ஆன* என்பது *ஆன்* என்பதன் திரிபாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் *ஆன* என்பது இடப்பொருண்மைய தாகிய ஏழாம் வேற்றுமை உருபாக நிகழ்வதைக் காணலாம்.

35(அ) கூடுகெழீஇய குடிவயினாற்
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை (பொருநராற்றுப்படை 182-184)

(ஆ) மண்மருங்கினான் மறுவின்றி
ஒருகுடையான் ஒன்றுகூடிப்
பெரிதாண்ட பெருங்கேண்மை (மேற்படி. 227-229)

(இ) அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே (புறம். 8. 9, 10)

*14.2.* பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் *ஆன்* இலக்கண உருபனாகத் திரிந்து பல்வேறு வேற்றுமைப் பொருண்மைகளை உணர்த்தி நிற்கின்றது.

(36) தூங்குகையான் ஓங்குநடைய
உறழ்மணியான் உயர்மருப்பின
பிறைநுதலாற் செறனோக்கின
பாவடியாற் பணை யெருத்தின (புறம். 22.1-4)

(37) கோதை மார்பிற் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்
மாக்கழி மலர்ந்த நெய்த லானும்
கண்ணா றும்மே கானலந் தொண்டி (புறம் 48.1-4)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஆன்* (34)-இல் வேற்றுமைப் பொருண்மையையும், (35)-இல் ஏதுப்பொருண்மையையும் குறித்து நிற்கின்றது.

### 15.0. உள்வினையின் முகங்கள்

15.1. தமிழில் உள்வினைகள் பலதிறத்தனவாகும். இவற்றைக் கண்டறிவதற்கு வாக்கிய அளவிலான ஆய்வு இன்றியமையாததாகும். இத்தகைய ஆய்வு உள்வினையின் பண்புகளைத் தெளிவுபடுத்துவதுடன், அசைநிலைக் கிளவிகள் மற்றும் இலக்கண உருபன்கள் பற்றிய ஒரு மொழியியற் கோட்பாட்டினை வகுக்கவும் துணை புரியும். இந்த வகையில் அமைந்த ஒரு சிறு முயற்சியே இக்கட்டுரையாகும்.



# 19. உம்மை தழுவிய பயனிலை

## *1.0 பழந்தமிழ் போற்றிய பயனிலை*

*1.1* தொல்காப்பியமும் சங்கத் தொகை நூல்களும் பழந்தமிழ் பயின்று வழங்கிய காலப்பகுதியைச் சேர்ந்தவையாகும். தொன்மொழியில் வழங்கிப் பின்மொழியாகிய பழந்தமிழில் வழக்கற்றுப்போன பல தொடரனியற் கூறுகளின் அருங்காட்சியகமாக மேற்படி நூல்களும் அவற்றின் அடியாகத் தோன்றிய பிற இலக்கியங்களும் திகழ்கின்றன. வழக்கற்றுப்போன நிலையிலும் பழந்தமிழில் காணப்படும் சில தொடரனியற் கூறுகள் முந்தைய கட்டுரைகளில் ஆராயப்பட்டன. தொடர்ந்து மேலும் சில கூறுகள் இக்கட்டுரையில் சிந்திக்கப்படுகின்றன.

*1.2.* பழந்தமிழில் *பெயர்/வினைப் பயனிலை - உம் + (போல்-)* என்ற அமைப்பினதாகிய பயனிலைத் தொடர் அருகிய வழக்கில் காணப்படும் ஒன்றாகும். இவ்வாறே *வினைப்பயனிலை - உம்+ தாம்* என்ற அமைப்பில் வழங்கும் பயனிலைத் தொடரும் மிக அருகிய வழக்கினதாகும். இவற்றுள் முதல்வகைப் பயனிலைத் தொடர்களைப் பற்றி முதலில் சிந்திக்கலாம். இவ்வகைப் பயனிலைத் தொடர்களின் நிகழ்ச்சியைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

(1) எல்லா, கெழீஇத் தொடிசெறித்த தோளிணை தத்தித்
தழீஇக்கொண்டு **ஊர்ந்தாயும்** நீ **(கலித்தொகை 97. 22, 23)**

(2) கொடிற்றுப்புண் செய்யாது மெய்ம்முழுதுங் கையிற்
றுடைத்துநீ வேண்டினும் வெல்லாது கொண்டோடும்
ஒட்டியபோய் **கண்டாயும் + போறி** (கலித்தொகை 95. 19-21)

(3) கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த வேற்றின்முன்
ஆடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற வந்நூலை
முந்நூலாக் **கொள்வானும் + போன்ம்** (கலித்தொகை 103. 28-31)

(4) கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றம்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வான் எனப்பெயரும்
**மீனிமறவனும் + போன்ம்** (கலித்தொகை 104. 47-50)

மேல் எடுத்துக்காட்டுக்களுள் (முதலது நீங்கலாக ஏனையவற்றுள்) பயனிலைத் தொடரில் நிகழும் போறி, போன்ம் ஆகிய போல் வினைகள் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துவனவாகும். ஆனால் போல்-வினை யாண்டும் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துவதாகக் கொள்ள முடியாது. அது ஒப்பில் போலியாக நிகழும் இடங்களும் தமிழில் உண்டு. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

5(அ) அந்நாள் ஆங்கவன் இட்ட சாபம்
இந்நாள் போலும் இளங்கொடி கெடுத்தனை
(மணிமேகலை 14. 47, 48)

(ஆ) மலரடியை வலங்கொண்டார் வருந்தார் போலும்
(சீவகசிந்தாமணி 3017)

(இ) மொய்கழற்கு அன்புசெயும்
அடியரை யுகத்தி போலும் அரங்கமா நகருளானே
(நாலாயிரம். 910)

(ஈ) அடிமூன்றில் இவ்வுலகம் அன்றளந்தாய் போலும்
(நாலாயிரம் 32.88)

இந்த எடுத்துக்காட்டுகளில் நிகழும் *போலும்* என்னும் கிளவி ஒப்பில்போலியாகக் கொள்ளத்தக்கதாகையாலும், பயனிலையாகச் செயல்படும் உறுப்பினையடுத்து நிகழ்கின்றதாகையாலும் இது உள்வினை (Copula Verb)யாகக் கொள்ளத்தக்கதாகின்றது. உள்வினை யானது இலக்கண உருபன் (Grammatical Morpheme) அன்மை யானும், வாக்கியப் பொருண்மைக்கு இதன் நிகழ்ச்சி கடப்பாடு இன்மையானும் பயனிலைத் தொடர்கள் இதனை ஒரு பொருட்டாகக் கொள்வதில்லை. உள்வினையின்றி அமையும் பயனிலைத் தொடர்கள் அமைந்த வாக்கியங்கள் தமிழில் ஏற்புடை யனவாகவே கொள்ளப்படுகின்றன. ஆனால் உள்வினையானது இலக்கணப் பொருண்மையை மேற்கொள்ளும்போது வாக்கியத்தில் அதன் நிகழ்ச்சி தவிர்க்க முடியாத ஒன்றாகின்றது. மேலே (5)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *போலும்* என்னும் கிளவி உள்வினையாதலால் இதன் நிகழ்ச்சி இன்றியும் அங்கே உள்ள வாக்கியங்கள் சிறக்கும். ஆனால் (2)-இல் நிகழும் *போறி* (3), (4)-இல் நிகழும் *போன்ம்* (< போலும்) ஆகியவை உள்வினைப் பொருண்மையை உணர்த்தாமையால் இவற்றின் நிகழ்ச்சி மேற்படி எடுத்துக்காட்டுக்களில் அமைந்த வாக்கியங்களில். வேண்டப்படுவதொன்றாகின்றது. இதில் குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில் உள்வினையாய் அமைந்த ஒப்பில்போலியைப் போன்றே, உள்வினைத் தன்மையை இழந்த *போறி, போன்ம்* ஆகியவையும் பயனிலையாய்ச் செயற்படும் உறுப்பினையடுத்தே

நிகழ்கின்றது. காரணம், இவ்வினைகள் அடிப்படையில் உள்வினைத் தன்மையதாகிய *போல்* என்னும் வினையின் மீதமைந்த வடிவங் களாகும். உள்வினைப் பொருண்மையை இழந்து இலக்கணப் பொருண்மையை மேற்கொண்ட நிலையிலும் இக்கிளவிகள் பயனிலை உறுப்பையடுத்து நிகழும் இயல்பினை மறந்துவிடவில்லை.[1]

## 2.0. உள்வினையின் நிகழ்ச்சிக்களம்

2.1. உள்வினையானது பயனிலை உறுப்பையடுத்தே நிகழத் தக்கதாகையாலும், போலென் கிளவி உள்வினையாகக் கொள்ளத் தக்கதாகையாலும் பிந்தியதன் முன்னர் நிகழும் உறுப்புகள் பயனிலைச் செயற்பாட்டினவாய்க் கொள்ளத்தக்கனவாகின்றன. இக்கோட்பாட்டினைக் கருத்தில்கொண்டு எடுத்துக்காட்டு (2)-இல் *போறி* என்பதன் முன் நிகழும் *கண்டாயும்* என்ற வினை யமைப்பும், எடுத்துக்காட்டுக்கள்(3), (4)-இல் *போன்ம்* என்பதன் முன் நிகழும் *கொள்வானும், மறவனும்* என்ற உறுப்புக்களும் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்தனவாய்த் தெளியலாம்.[2] முதல் நான்கு எடுத்துக்காட்டுக்களுள் முதல் எடுத்துக்காட்டு ஏனைய மூன்றினின்றும் மாறுபட்டு நிற்கின்றது. இந்த எடுத்துக் காட்டில் *ஊர்ந்தாயும்* என்ற பயனிலை வினையையடுத்து உள்வினையின் நிகழ்ச்சி காணப்படவில்ல. பயனிலைத் தொடரில் உள்வினையின் நிகழ்ச்சிக்குத் தொடரனியற் சிறப்பு ஏதும் இல்லை என்று முன்னர்க் குறிக்கப்பெற்றது. முதல் எடுத்துக்காட்டில் உள்வினையின் நிகழ்ச்சி அமையாமைக்கு இதுவே காரணம்.[3]

---

1. ஆயினும், *போல்* என்னும் வினையானது ஒப்புமைப் பொருண்மையை உணர்த்துகையில் தான் சார்ந்த பயனிலை உறுப்பைக் கெடுத்துப் பின்னோக்கி நகர்ந்து வேறொர் உறுப்பைச் சார்ந்து நிற்பதும் உண்டு. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் அறியலாம்.

   (அ) முருகன் ராமன் பாடியதைப் போல் பாடினான்.
   (ஆ) முருகன் ராமனைப் போல் பாடினான்

   இரண்டாம் எடுத்துக்காட்டில் ஒப்புமைப்போலி நிகழும் இடத்தைக் காண்க. முதல் எடுத்துக்காட்டில் **பாடியதை** என்பது பயனிலைப் பொதுவினையாகக் கொள்ளத்தக்கது. இதுபற்றித் தலைமைக் கட்டுரையில் பேசப்படும்.

2. *போறி, போன்ம்* இரண்டும் உள்வினைப் பொருண்மையை உணர்த்த வில்லை என்பதை இங்கு ஒரு பொருட்டாகக் கொள்ள வேண்டிய தில்லை. இத்தகைய நிலையானது நமது முடிபுகளைப் பாதிக்கப் போவதில்லை.

3. *ஊர்ந்தாயும்* என்ற வினைப்பயனிலையையடுத்து உள்வினை நிகழாமைக்கு மேற்படி வினையமைப்பில் நிகழும் உம்மைக் கிளவியும் ஒரு காரணமாகும். இக்கிளவியின் அடிப்படைத் தன்மை பற்றித் தலைமைக் கட்டுரையில் பேசப்படும்.

ஆயினும் (2), (3), (4)-இல் நிகழும் பயனிலைத் தொடர்களையும் கருத்தில் கொண்டு முதல் எடுத்துக்காட்டில் அமைந்த பயனிலைத் தொடரை, எழுவாயையும் குறிப்பிட்டுப் பின்வருமாறு மீட்டுருவாக்கம் செய்யலாம்.

(6) *நீ ஊர்ந்தாயும் போலும்/போல்வை

இவ்வமைப்பில் *போலும்* என்பது பொது உள்வினையும் (Impersonal Copula) *போல்வை* என்பது சிறப்பு உள்வினையும் (Personal Copula) ஆகும்.

### 3.0. உம்மீற்றுப் பயனிலைகள்

3.1. செய்யும் வாய்பாட்டு வினைப்பயனிலைகளைத் தவிர ஏனைய பயனிலைகள் தமிழில் உம்மீற்றனவாய் அமைவதில்லை. ஆனால் முதல் நான்கு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் ஊர்ந்தாயும், கண்டாயும், கொள்வானும், மீளிமறவனும் ஆகிய பயனிலை உறுப்புக்கள் உம்மீற்றனவாய் அமைந்துள்ள நிலை சிந்தனைக்குரியதாகின்றது. மேற்போக்காகப் பார்க்கும்போது இவற்றில் நிகழும் உம்மைக்கிளவியை எண்ணும்மையாகக் கருதத் தோன்றலாம். கலித்தொகையில் உம்மீற்றனவாகிய வினை மற்றும் பெயர்ப்பயனிலைகள் மூன்று தாழிசைகளிலும் நிகழும் பான்மையினை இதற்குச் சான்றாகக் காட்டவும் முற்படலாம்.[4] ஆனால் இதனைக் கருத்தில் கொண்டு மேற்படி பயனிலைகளில் நிகழும் உம்மைக்கிளவியை எண்ணுப்பொருண்மையை உணர்த்துவதாகத் துணிய முடியாது. இதற்கு நான்கு காரணங்களைக் குறிப்பிடலாம். (1): தமிழில் எண்ணும்மை நிகழும் வாக்கிய அமைப்பினின்றும் உம்மீற்றுப் பயனிலை நிகழும் வாக்கிய அமைப்பு வேறுபட்டிருக்கின்றது. (2): கலித்தொகை (103)-ஆம் பாடலில் உம்மீற்று வினைப் பயனிலை ஒரே முறை நிகழும் நிலை காணப்படுகின்றது. எடுத்துக்காட்டு (3)-இல் இது குறிக்கப்பெற்றுள்ளது. ஆகவே இவ்வெடுத்துக் காட்டில் நிகழும் *கொள்வானும்* என்பதில் நிகழும் உம்மைக் கிளவியை எண்ணும்மையாகக் கொள்ள முடியாது. இத்தகைய நிலை பரிபாடலிலும் காணப்படுகின்றது.

(7) நளிர்மலைப் பூங்கொடித் தங்குபு உகக்கும்
பனிவளர் ஆவியும் போன்ம் மணிமாடத்

4. உம்மீற்றுப் பெயர் மற்றும் வினைப்பயனிலைகள் மூன்று தாழிசைகளில் நிகழும் பான்மையைக் கலித்தொகை 95, 97, 101, 104, 105 ஆகிய பாடல்களில் காணலாம்.

துண்ணின்று தூய பனிநீ ருடன்கலந்து
காவிரி வாக்கும் புகை (பரிபாடல். 10.122-125)

இவ்வெடுத்துக்காட்டில் *ஆவியும்* என்பதில் நிகழும் உம்மைக் கிளவியை எண்ணும்மையாகக் கொள்வதற்கில்லை. (3): உம்மீற்றுப் பயனிலைகளை ஐயீற்றனவாகக் கொண்டு பொருள் விளக்கம் கொடுக்க வாய்ப்பிருக்கின்றது. எடுத்துக்காட்டு (7)-இல் நிகழும் *ஆவியும் போன்ம்* என்ற தொடர் *ஆவியைப் போலும்* என்ற தொடரின் பொருண்மையையே உணர்த்துவதாகின்றது. (4): *திசையறி மீகானும் போன்ம்* (பரிபாடல் 10.55) என்ற வாக்கியத்தில் அமைந்த *மீகானும்* என்பதில் நிகழும் உம்மைக் கிளவியை இசைநிறையாகக் கொள்வார் உரையாசிரியர் பொ.வே. சோமசுந்தரனார். இதன்மூலம் *நிகழ்ச்சியும் போன்ம்* (பரிபாடல் 10.62). *களிமதரும் போன்ம்* (பரிபாடல் 10.68) ஆகியவற்றில் நிகழும் உம்மைக் கிளவியை எண்ணுப் பொருண்மையதாகக் கொள்வதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விடுகின்றது.

3.2. நச்சினார்க்கினியர் உம்மீற்றுப் பயனிலைத் தொடர்களுக்கு உரை காண்கையில் உம்மைக்கிளவியை இருந்தவாறே கொள்ளும் நிலையையும், ஐயென்கிளவிக்கு நிகராக்கும் நிலையையும், ஐயென் கிளவியை இடையிற்செருகும் நிலையையும் மேற்கொள்கிறார். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(8) ஊர்ந்தாயும் நீ (கலித்தொகை 97.25) (உரை: 'ஏறினாயும் நீ')

(9) வஞ்சினம் வாய்த்தானும் போன்ம் (கலித்தொகை 101.20) (உரை: 'வஞ்சினத்தை வாய்க்கச் செய்த வீமசேனனைப் போலும்')

(10) மீளிமறவனும் போன்ம் (கலித்தொகை 104.50) (உரை: 'கூற்றுவனையொத்த மறவனையும் ஒக்கும்')

இதனின்றும் நச்சினார்க்கினியர்க்கு இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் உம்மைக் கிளவியானது பெரிதும் தடுமாற்றத்தைக் கொடுத்திருப்பது புலனாகின்றது. இத்தகைய பயனிலைத் தொடர்களில் நிகழும் உம்மைக்கிளவியை எண்ணும்மையாகக் கொள்ள முடியாமைக்கு ஐந்தாவது காரணமும் ஒன்றுண்டு. கலித்தொகை (101)-ஆம் பாடலில் *போன்ம்* என்னும் உறுப்பு மூன்று தாழிசைகளில் நிகழ்ந்தபோதிலும், முதல் தாழிசையில் மட்டுமே இவ்வுறுப்பின் முன் நிகழும் வினைப்பயனிலை உம்மீற்றதாக அமைகிறது; ஏனைய இரண்டு தாழிசைகளிலும் இதன்முன் நிகழும் வினைப்பயனிலைகளில் உம்மீறு காணப்பட வில்லை. இந்த இருவகை நிலையும் கீழே குறிக்கப்பெற்றுள்ளது.

11(அ)வஞ்சினம் வாய்த்தானும் போன்ம் (கலித்தொகை 101.20)
(ஆ)குடர்கூளிக்கு ஆர்த்துவான் போன்ம் (மேற்படி. 101.26)

(இ) தோளிற் *திருகுவான்* போன்ம் (மேற்படி. 101.32)

இதனின்றும் *வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்* என்பதில் உள்ள *வாய்த்தானும்* என்பதில் நிகழும் உம்மைக்கிளவி எண்ணுப் பொருண்மையை உணர்த்துவதாகாது என்பது புலனாகின்றது. இதனை மேலும் உறுதிப்படுத்திக்கொள்ளும் வகையில் பின்வரும் எடுத்துக்காட்டில் பயனிலைத் தொடர்கள் அமைவதைக் காணலாம்.

(12) தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றநீ
கல்லினுள் மணியு நீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுடர் ஒளியுநீ திங்களுள் அளியுநீ (பரிபாடல் 3. 63-67)

இவ்வெடுத்துக்காட்டில் பயனிலைத் தொடர்கள் சிலவற்றில் உம்மைக் கிளவி நிகழ்ந்தும் சிலவற்றில் நிகழாமலும் இருப்பதைக் காணலாம். இந்த உம்மைக் கிளவி எண்ணுப் பொருண்மையைக் குறிக்குமாயின் ஒவ்வொரு பயனிலைத் தொடரிலும் அது நிகழ்ந்தாக வேண்டும்.[5] அத்தகைய நிலை (12)-இல் காணப்படவில்லை.

---

5. அப்படியே நிகழ்ந்தாலும் அது பயனிலைத் தொடரின் உறுப்பாய் அமைந்து ஒன்றுக்கு மேற்பட்ட பயனிலைத் தொடர்கள் இணையும் போது மட்டுமே எண்ணுப்பொருண்மையை உணர்த்துவதாகக் கருதலாம். வரலாற்று நிலையில், இத்தகைய உம்மீற்றுப் பயனிலைத் தொடர்கள் எண்ணும்மைத் தொடர்கள் தோன்றுவதற்கு முன்னோடியாக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம்.

(1) மேரி தமிழும் தெலுங்கும் கற்றாள்.

இவ்வாக்கியத்தை முதல் கட்டமாகப் பின்வரும் வாக்கியங்களின் இணைப்பாகக் கருதலாம்.

2(அ) மேரி தமிழும் கற்றாள்
(ஆ) மேரி தெலுங்கும் கற்றாள்

இந்த இணைவாக்கியங்கள் வரலாற்று நிலையில் பின்வரும் அமைப்பினவாகக் கருதற்பாலனவாகும்.

3(அ) *மேரி தமிழ் கற்றாள்-உம்
(ஆ) *மேரி தெலுங்கு கற்றாள்-உம்

இந்த வாக்கியங்கள் இரண்டிலும் பயனிலையாகச் செயல்படும் உறுப்புடன் நிகழும் உம்மைக்கிளவி எண்ணுப்பொருண்மையை உணர்த்துவதன்று. ஆனால் (2)-இல் குறிக்கப்பெற்றுள்ள வாக்கியங்களில் உம்மைக்கிளவி எண்ணுப்பொருண்மையை உணர்த்தும் நிலையில் உள்ளது. வரலாற்றுக் கண்ணோட்டத்தில் பார்க்கையில் முதல் வாக்கியத்தின் தோற்றத்தினை (3) > (2) > (1) என்று விளக்கலாம். மேலே (3)-இல் உள் வாக்கியங்கள்(2)-இல் உள்ளதுபோல் அமைகையில் உம்மைக்கிளவி இலக்கண உருபனாக மாறி எண்ணுப் பொருண்மையை உணர்த்துவதாகின்றது. இந்த நிலையில் (2)-இல் உள்ள வாக்கியங்கள் நீக்கல் விகாரங்களுக்கு (**Deletion Transformation**) உட்பட்டு (1)-இல் உள்ள வாக்கிய நிகழ்ச்சிக்கு வகை செய்கின்றன.

இதனின்றும் இந்த எடுத்துக்காட்டில் நிகழும் உம்மைக் கிளவியானது எண்ணுப் பொருண்மையைக் குறித்ததன்று என்பது தெளிவாகின்றது. இம்முடிபு பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் நிகழும் உம்மைக் கிளவிக்கும் பொருந்தும் என்றே தோன்றுகிறது.

(13) தொழுதகை அமைதியின் அமர்ந்தோயு நீயே
அவரவர் ஏவ லாளனு நீயே
அவரவர் செய்பொருட் கரணமு நீயே (பரிபாடல் 4. 71-73)

(14) புகழ்சால் சிறப்பின் இருதிறத் தோர்க்கும்
அமுது கடைய இருவயி னாணாகி
மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க
உகாஅ வலியின் ஒருதோழங் காலம்
அறாஅ தணிந்தாரும் தாம்
மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅவெதிர் பூண்டாருந் தாம்
மணிபுரை மாமலை ஞாறிய ஞாலம்
அணிபோற் பொறுத்தாருந் தாஅம் பணிவில் சீர்
செல்விடைப் பாகன் திரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி இமயவில் நாணாகித்
தொல்புகழ் தந்தாருந் தாம் (பரி. திரட்டு 1. 67-68)

மேலே (14)-இல் நிகழும் பல்வேறு உம்மீற்று வினைப்பயனிலைகள் *ஆதிசேடன்* என்னும் எழுவாய்க்கு உரியனவாகும். எடுத்துக் காட்டுக்கள் (13), (14)-இல் நிகழும் உம்மீற்றுப் பயனிலைகள் எண்ணும்மைத் தொடர்களின் தோற்றத்துக்கு முன்னோடி களாகக் கருதத்தக்கவையாகும். இவ்விரண்டு எடுத்துக்காட்டுக் களிலும் உம்மீற்றுப் பயனிலைகள் முறையே *நீ, ஆதிசேடன்* ஆகிய வற்றைப் பற்றுக்கோடாகக் கொண்டுள்ளன. இத்தகைய எடுத்துக் காட்டுக்களில் நிகழும் பயனிலைத் தொடர்களில் உள்ள உம்மைக் கிளவியின் செயற்பாடு பெரிதும் மயக்கத்தைத் தருவதாகும். ஏனெனில் இவற்றில் இக்கிளவியை எண்ணும்மையாகக் கொள்ளவும் அதே சமயத்தில் பயனிலைக்கே உரிய உறுப்பாகக் கொள்ளவும் வாய்ப்பிருக்கிறது.

3.3. பழந்தமிழில் பயனிலைத் தொடர்களில் நிகழும் உம்மைக் கிளவியை எண்ணுப் பொருண்மைக்கு உரியதாகக் கருத வாய்ப்பில்லை என்று மேலே துணியப்பட்டது. அவ்வாறாயின் இத்தகைய தொடர்களில் நிகழும் உம்மைக்கிளவியின் செயற்பாடு தான் யாது? இது தொடர்பான ஆய்வை மேற்கொள்வதற்குமுன் பின்வரும் வாக்கிய அமைப்பில் போலென் கிளவியின் முன் நிகழும் வினைகளைப் பற்றியும் நாம் சிந்தித்தாக வேண்டும்.

(15) முருகன் ராமன் {பாடியதைப் / பாடியது} போல் பாடினான்

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் ஒப்புப் பொருண்மையை உணர்த்தும் போலென் கிளவி அடிப்படையில் உள்வினையாகும். இதனை (5)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களின் வாயிலாகத் தெளியலாம். எனவே (15)-இல் நிகழும் *பாடியது* என்னும் பொது வினையும் பயனிலைச் செயற்பாட்டினதாகின்றது. இவ்வினை யுடன் *பாடியதை* என்னும் ஐயீற்று வினைசெம்மை வழக்கில் (Free Variation) நிகழ்வதால் இதுவும் பயனிலைச் செயற்பாட்டினதாய்க் கொள்ளத்தக்கதாகின்றது. ஆனால் இதில் ஓர் சிக்கல் இருக்கிறது. *பாடியதை* என்பதைப் பொதுவினைப் பயனிலையாகக் கொள் வதற்கு முன் இதில் நிகழும் ஐயென்கிளவியானது வேற்றுமைப் பொருண்மையை உணர்த்துவதாகாது என்பதை நாம் நிறுவியாக வேண்டும். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருதற்பாலனவாகும்.

(16) வேறிடத்துப் பிறந்த உயிரே போன்று
பண்டறி கிளையொடு பதியும் காணாள் (மணி. 8. 14, 15)

(17) தேங்கம ழோதி திங்கள் வெண்கதிர் பொழிவதே போல்
வீங்கிள முலைகள் விம்மித் திறந்துபால் பிலிற்ற வாற்றாள்
(சீ.சி. 305)

(18) புல்லிய கொம்பு தானோர் கருவிளை பூத்த தேபோல்
ஒல்கியோர் கொம்புபற்றி யொருகணால் நோக்கி நின்றாள்
(சீ.சி. 319)

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *உயிரேபோன்று, பொழிவதே போல், பூத்ததே போல்* ஆகிய தொடர்களின் பொருண்மை முறையே *உயிரைப் போன்று, பொழிவதைப் போல், பூத்ததைப் போல்* ஆகியவற்றின் பொருண்மையுடன் பொருந்துவதால் முதல்வகைத் தொடர்களில் நிகழும் ஏயென் கிளவியும் இரண்டாம் வகைத் தொடர்களில் நிகழும் ஐயென் கிளவியும் செம்மை வழக்கில் அமைந்து ஒருதிறத்தினவாகின்றன. இவற்றுள் இரண்டாம் வகைத் தொடர்களில் நிகழும் ஐயென் கிளவியை வேற்றுமை உருபாகக் கொண்டால் முதல் வகைத் தொடர்களில் நிகழும் ஏயென் கிளவியையும் அவ்வாறே கொள்ள வேண்டும். ஆனால் இதனை அவ்வாறு கொள்ள முடியாது. காரணம் இக்கிளவியானது தமிழில் யாண்டும் வேற்றுமைப் பொருண்மையை உணர்த்துமாறில்லை. தவிரவும் வேற்றுமை குறித்த ஐயென்கிளவியானது ஏயென்கிளவியாகத்

திரியும் நிலை செவ்வியல் தமிழில் இல்லை.[6] மேலே முதல் வகைத் தொடர்களில் நிகழும் ஏயென்கிளவியானது இரண்டாம் வகைத் தொடர்களில் நிகழும் ஐயென்கிளவியின் திரிபாகும். ஆகவே இரண்டாம் வகைத் தொடர்களில் நிகழும் ஐயென் கிளவியை வேற்றுமையுருபாகக் கொள்வதற்கில்லை. இதனின்றும் (15)-இல் நிகழும் *பாடியதை* என்னும் பொது வினைப்பயனிலையில் நிகழும் ஐயென்கிளவியானது வேற்றுமையுருபாகக் கொள்ளத்தக்கதன்று என்பது தெளிவாகின்றது.

### 4.0. உம்மைப் பயனிலைகள்

மேலே நிகழ்த்திய ஆய்வினின்றும் மொழியில் இரண்டு வகைப் பயனிலைகளின் நிகழ்ச்சி புலனாகின்றது. ஒன்று, உம்மீற்றுப் பயனிலைகள்; பிறிதொன்று, ஐயீற்றுப் பயனிலைகள். இவ்விரு வகைப் பயனிலைகளிலும் உம்மென் கிளவியும் ஐயென் கிளவியும் நிகழ்ந்தேயாகவேண்டும் என்ற கடப்பாடு இல்லை. ஆயினும் உம்மைக்கிளவியில் விழுந்த முடிச்சு ஐயென்கிளவியிலும் விழுந்து பயனிலைத் தொடரில் இவற்றின் செயற்பாட்டினைக் கேள்விக் குறியாக்குகிறது. ஒன்றில் விழுந்த முடிச்சானது அவிழ்க்கப்பட்டு விட்டால் பிறிதொன்றில் விழுந்த முடிச்சானது தானாகவே அவிழ்ந்துவிடும். இந்த வகையில் பயனிலைத் தொடர்களில் நிகழும் ஐயென்கிளவி பற்றிய ஆய்வானது பயனிலை தழுவிய உம்மைக் கிளவியின் தன்மையைப் புரிந்துகொள்ளப் பெரிதும் துணை புரிவதாய் அமைகின்றது. இதனைத் தெளிவுபடுத்திக் கொள்ளும் வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

---

6. செய்யுளில் ஐயென்னும் வேற்றுமையுருபு அகரமாகத் திரிதல் கூடும் (தொல். சொல். சேனா. 108) எ-டு. *காவ லோனக் களிறஞ் சும்மே; களிறு மஞ்சமக் காவலோன.* இவையிரண்டும் சேனாவரையர் எடுத்துக் காட்டுக்கள். இத்தகைய திரிபு அஃறிணைப் பெயர்க்கண் நிகழ்வதில்லை (மேற்படி 109). வேற்றுமையுருபாகிய ஐயென்கிளவி ஏகாரமாகத் திரியும் நிலை ஒரோவழி சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. எ-டு.

 நின்னே போலு மஞ்ஞை யாலநின்
 நன்னுத னாறு முல்லை மலர
 நின்னே போல மாமருண்டு நோக்க
 நின்னே யுள்ளி வந்தனென்
 நன்னுத லரிவை காரினும் விரைந்தே (ஐங்குறுநூறு 492)

இப்பாடலில் நான்காம் அடியில் நிகழும் நின்னே என்பதில் உள்ள ஏகாரம் ஐயென்னும் வேற்றுமையுருபின் திரிபாகும். இத்திரிபானது ஒரு பொதுவிதியாக முடியாது.

*(19) நீர்விளை யாட்டணி நின்றதை யன்றே (சீவகசிந்தாமணி 915.4)*

*(20) வல்வினை யார்வலைப் பட்டதை யன்றே (சீவகசிந்தாமணி 935.4)*

எடுத்துக்காட்டு (20)-இல் அமைந்த வாக்கியத்தின் எழுவாய் *நாய்* என்பதாகும். இந்த இரண்டு முற்று வாக்கியங்களிலும் பயனிலை வினைகளையடுத்து நிகழும் *அன்றே* என்பதனை *அன்று, ஏ* எனப்பிரிந்து இரண்டையும் அசைநிலைகளாகக் கொள்ளும் நச்சினார்க்கினியர் இவற்றின் முன்னர் அமைந்த *நின்றதை, பட்டதை* ஆகியவற்றில் நிகழும் ஐயென்கிளவியைச் சாரியை என்றும், பகுதிப்பொருள் விகுதியென்றும் கொள்வார். இவற்றுள் *அன்றே* என்பதனைப் பிரிக்க வேண்டிய கடப்பாடில்லை. *அன்று* என்பதன் விகாரமாகிய இந்த உறுப்பு அசைநிலைக் கிளவியைப் போல் நடைமுறையில் தோன்றினாலும் பயனிலை யையடுத்து நிகழ்வதால் அடிப்படையில் இதனை உள்வினையாகக் கொள்வதே பொருத்தம். பயனிலைத் தொடரில் உள்வினையின் நிகழ்ச்சிக்கு அத்துணைத் தொடரனியற் சிறப்பில்லையாதலின் இதன் நிகழ்ச்சியின்றியும் பயனிலையாகச் செயல்படும் உறுப்புக்கள் இயங்க வல்லனவாகும். இதனைத் தொடர்ந்து (19), (20)-இல் அமைந்த வாக்கியங்களின் பொருண்மையைப் பின் வரும் வாக்கியங்களின் பொருண்மையினின்றும் மாறுபட்டதாகக் கொள்வதற்கில்லை.

*(21) நீர் விளையாட்டணி நின்றதை*

*(22) (நாய்) வல்வினையார் வலைப்பட்டதை*

இந்த இரண்டு வாக்கியங்களும் மீண்டும் பின்வரும் வாக்கியங்களின் பொருண்மையுடன் பொருந்துவனவாகும்.

*(23) நீர் விளையாட்டணி நின்றது*

*(24) (நாய்) வல்வினையார் வலைப்பட்டது*

எடுத்துக்காட்டுக்கள் (19), (20)-இல் நிகழும் **அன்றே** என்னும் கிளவியானது அடிப்படையில் உள்வினையாகலின் (21), (22)-இல் அதன் நிகழ்ச்சி தவிர்க்கப்படுகின்றது. எடுத்துக்காட்டுக்கள் (21), (22)-இல் **நின்றதை, பட்டதை** ஆகியவற்றில் அமைந்த ஐயென் கிளவியின் நிகழ்ச்சியானது **அன்றே** என்பதைப் போலவே (23), (24)-இல் தவிர்க்கப்படுகின்றது. இதனின்றும் தவிர்ப்புக்கு இலக்காகும் ஐயென்கிளவியும் *அன்றே* என்பதைப் போன்றே உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இதனை அரண் செய்யும் வகையில் ஐயென் கிளவியானது (21), (22)-இல் பயனிலை வினையையடுத்து நிகழ்வதைக் காணலாம். அன்றென் கிளவியைப் போன்றே ஐயென்

கிளவியும் மொழியின் வளர்ச்சிப் போக்கில் உள்வினைத் தன்மையைப் புலப்படுத்திக்கொள்ள வகையறியாமல் சாரியையென்றும், பகுதிப் பொருள் விகுதியென்றும் கருதப்படும் நிலை ஏற்பட்டுவிட்டது.

### 5.0. ஐயீற்று வினைப் பயனிலைகள்

5.1. பழந்தமிழில் இத்தகைய ஐயென்கிளவி நேர்வாக்கியங் களில் (Normal Sentences) அமைந்த வினைப்பயனிலைகளில் மிக அருகியே காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டு இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

25(அ) காதலன், காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅம்
ஆகுலம் ஆகி விளைந்ததை (கலி. 65. 25-27)

(ஆ) விருப்பொன்று பட்டவர் உளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை (பரிபாடல் 6.21, 22)

*விளைந்ததை, உடைத்ததை* ஆகியவற்றுள் நிகழும் ஐயென் கிளவியை வழக்கம்போல் உரையாசிரியர் பகுதிப்பொருள் விகுதியாகவே கொள்வார். (காண்க: பரிபாடல் கழகப் பதிப்பு). பயனிலை வினையை அடுத்து நிகழும் இக்கிளவியானது வரலாற்று நிலையில் உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்பது நமது முடிபு. இந்த ஐயென்கிளவியானது பழந்தமிழில் கவை வாக்கியங்களில் (Cleft Sentences) அமைந்த பொதுவினைப் பயனிலைகளில் பெருவழக்கினதாகக் காணப்படுகின்றது.[7] இந்த நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(26) வண்ணவண் டிமிர்ந்தானா வையைவார் உயரெக்கர்த்
தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ
கண்ணிலா நீர்மல்கக் கலவிநாம் விடுத்தக்கால்
ஒண்ணுதால் நமக்கவர் வருதுமென் **துரைத்ததை**
(கலித்தொகை 35. 9-12)

27(அ) **ஊர்ந்ததை** (எரிபுரை யோடை யிடையிமைக்கும் சென்னிப்
பொருசமம் கடந்த புகழ்சால்) வேழம் (பரிபாடல் 21. 1, 2)

(ஆ) **பூண்டதை** (சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த
உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடக்) கமழ்தார்
(பரிபாடல் 21. 10, 11)

(இ) அமர்ந்ததை....
(தரைவிசும் புகந்த) தண்பரங் குன்றம் (பரிபாடல் 21.12, 15)

---

7. இடைக்காலத் தமிழிலும் இத்தகைய நிலை ஒரோவழி காணப்படு கின்றது. எ-டு. *பன்னரு மாலையாற்குப் பட்டதை யெவன்கொல்* (சீவகசிந்தாமணி 1085), *என்னைக் காணாது உற்றதை யெவன்கொல்* (சீவகசிந்தாமணி 1732). பிந்திய எடுத்துக்காட்டில் *உற்றதை* என்னும் பொதுப்பயனிலைக்கு எழுவாய் *குரவர்* என்பதாகும்.

எடுத்துக்காட்டு (27)-இல் அமைந்த வாக்கியங்கள் *செவ்வேள்* அல்லது *முருகன்* என்பதனை எழுவாயாகக் கொண்டவையாகும். *உரைத்ததை, ஊர்ந்ததை, பூண்டதை, அமர்ந்ததை* ஆகியவை ஐயீற்றுப் பொதுப்பயனிலைகளாகும்.[8] இப்பயனிலைகள் அமைந்த கவை வாக்கியங்கள் பின்வரும் நேர்வாக்கியங்களின் திரிபுகளாகும்.

(28) வண்டு நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதில் அன்றோ 'வருதும்' என்று அவர் உரைத்தார்.

29(அ) முருகன் வேழம் ஊர்ந்தான்
(ஆ) முருகன் கமழ்தார் பூண்டான்
(இ) முருகன் தண்பரங்குன்றம் அமர்ந்தான்

இக்காலத் தமிழில் (28), (29)-இல் அமைந்த நேர்வாக்கியங்கள் பின்வருமாறு கவை வாக்கியங்களாகத் திரியும்.

(30) 'வருவோம்' என்று அவர் உரைத்தது வண்டு நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதில் அன்றோ

31(அ) முருகன் ஊர்ந்தது வேழம்
(ஆ) முருகன் பூண்டது கமழ்தார்
(இ) முருகன் அமர்ந்தது தண்பரங்குன்றம்

மேலே (26), (27)-இல் அமைந்த கவை வாக்கியங்களின் பொருண்மையானது (30), (31)-இல் நிகழும் இக்காலக் கவை வாக்கியங்களின் பொருண்மையுடன் பொருந்தியதாகும். ஒரு வேறுபாடு என்னவெனில் (26), (27)-இல் உள்ள பொதுப் பயனிலைகளில் ஐயென்கிளவியின் நிகழ்ச்சி போற்றப்பட (30). (31)-இல் அதன் நிகழ்ச்சி தவிர்க்கப்படுகிறது. இது மொழியின் வளர்ச்சிப் போக்கில் நேர்ந்த ஓர் மாற்றமாகும். இந்த ஆய்வில் (26), (27)-இல் பொதுவினைப் பயனிலைகளையடுத்து நிகழும் ஐயென்கிளவி, (25)-இல் சிறப்பு வினைப் பயனிலையையடுத்து நிகழும் ஐயென்கிளவியின் செயற்பாட்டினின்றும் வேறுபட்டதன்று. இருவகைப் பயனிலைகளிலும் ஈற்றில் நிகழும் இந்த ஐயென் கிளவி அடிப்படையில் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகும். தமிழில் உள்வினையின் நிகழ்ச்சியானது பயனிலை உறுப்பை யடுத்ததாகலின் ஐயென்கிளவியை மேற்படி வினைகளில் உள்வினை யாகக் கொள்ளும் கோட்பாடு தவிர்க்க முடியாத ஒன்றாகின்றது.

---

8. இத்தகைய பயனிலை வினைகள் செய்து வாய்பாட்டுப் பொது வினைகளின் மாற்று வடிவங்களாகக் கொள்ளத்தக்கன வாகும். இவ்வாறே, *மாதவி நடித்ததுபோல்/நடித்ததைப்போல் செல்வியும் நடித்தாள்* என்ற வாக்கிய அமைப்பில் நிகழும் *நடித்தது, நடித்ததை* ஆகிய இரண்டு வினைவடிவங்களும் *நடித்து* என்ற பொதுவினைப் பயனிலையின் மாற்றுவடிவங்களாகக் கருதப்படும்.

5.2. பயனிலையாகச் செயல்படும் உறுப்புக்களில் நிகழும் ஐயென்கிளவி மீதான ஆய்வின் மூலம் (15)-இல் காணப்படும் *பாடியதைப்போல்* என்ற தொடரில் நிகழும் ஐயென்கிளவி யானது உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்பது புலனாகின்றது. இந்த முடிபு உம்மீற்றுப் பயனிலைகளில் நிகழும் உம்மைக் கிளவியையும் உள்வினையாகக் கொள்ள வகை செய்கின்றது. ஐயென்கிளவியைப் போன்றே உம்மைக்கிளவியும் பயனிலையாகச் செயல்படும் உறுப்பினையடுத்து நிகழ்வதால் இத்தகைய முடிபு பிந்தியதற்கும் பொருந்துவதாகின்றது. ஐயென்கிளவியைப் போன்றே உம்மைக்கிளவியின் நிகழ்ச்சியும் பயனிலைத் தொடரில் தவிர்க்கற்பாலதாகும். இவ்வாறு பயனிலைத் தொடரினின்றும் விடுபடுதல் உள்வினைக்குரிய பண்புகளுள் ஒன்றாகலின் பயனிலைத் தொடரில் நிகழும் உம்மைக்கிளவியானது உள்வினையென்பது மேலும் உறுதியாகின்றது. உம்மைக்கிளவி பயனிலைத் தொடரில் விடுபடும் நிலையைக் கலித்தொகை 101-ஆம் பாடலில் இரண்டாவது மூன்றாவது தாழிசைகளில் நிகழும் *ஆர்த்துவான் போன்ம், திருகுவான் போன்ம்* ஆகிய பயனிலைத் தொடர் களிலும், எடுத்துக்காட்டு (12)-இல் நிகழும் சில பயனிலைத் தொடர்களிலும் காணலாம்.[9]

## 6.0. உண்மையின் மறதி

பயனிலை தழுவிய ஐயென்கிளவியும் உம்மைக்கிளவியும் அடிப்படையில் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கவையாயினும் மொழியின் வளர்ச்சிப்போக்கில் இந்த உண்மை மறக்கப்பட்டு விடுகிறது. இந்த நிலையில் தொல்லமைப்பின் தாக்கத்தால் இவற்றைத் தழுவி நிற்கும் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்த உறுப்புக்கள் வழக்கில் புழங்கிக்கொண்டிருக்கும் வேறோர் உள்வினையின் நிகழ்ச்சிக்கு இடமளிக்க வாய்ப்பு ஏற்படுகின்றது. இவ்வாறு நேரும்போது வழக்கற்றுப்போன உள்வினையானது பயனிலையினின்றும் தவிர்க்கப்படுகின்றது; அல்லது தன்முன் நிகழும் உயிர்த்தன்மை பொருந்திய உருபனுடன் ஒருங்கிணைந்து பகுதிப்பொருள் விகுதியாகிவிடுகின்றது. சில சமயங்களில் வழக்கற்றுப்போன இரண்டு உள்வினைகள் ஓர் உறுப்பாய்

9. கலித்தொகை (101)-ஆம் பாடலில் முதல் தாழிசையில் நிகழும் *வாய்த்தானும் போன்ம்* என்ற பயனிலைத் தொடரில் உம்மைக் கிளவியின் நிகழ்ச்சி அமைய ஏனைய இரண்டு தாழிசைகளில் இத்தகைய பயனிலைத் தொடர்களில் அதன் நிகழ்ச்சி விடுபட்டுள்ளது. இது உள்வினைப் பண்புகள் பற்றிய நமது முடிபினை வலுப்படுத்து வதாயுள்ளது.

அமைவதும் உண்டு. எடுத்துக்காட்டாக, *அண்ணன் செய்ததைப் போல் தம்பி செய்தான்* என்ற வாக்கியத்தில் நிகழும் *செய்ததை* என்னும் பொதுவினைப் பயனிலையைக் கருத்தில் கொள்ளலாம். இப்பொதுவினைப் பயனிலையில் உயிருள்ள பகுதி *செய்து* என்பதாகும். இதனையடுத்து நிகழும் அதுவென் கிளவியும், ஐயென்கிளவியும் வழக்கற்றுப்போன உள்வினைகளாகும்.[10] இரண்டும் நடைமுறையில் உள்ள தமிழில் உயிரற்றுப் போனமையால் இவை *அதை* என்று பிரிப்பப் பிரியா உறுப்பாய் அமைந்து *செய்து* என்னும் பொது வினைப் பயனிலையின் பகுதிப்பொருள் விகுதியாகும் நிலை ஏற்படுகின்றது.[11] இவ்வாறே *வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்* (கலித்தொகை 101.20) என்ற வாக்கியத்தில் *வாய்த்தானும்* என்பதில் நிகழும் உம்மைக்கிளவி *ஆன்* என்னும் முற்றுவிகுதியின் பகுதிப்பொருள் விகுதியாகின்றது.

### 7.0. உம்மை உள்வினையே

*7.1.* உம்மைக் கிளவியானது அடிப்படையில் உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்பதைப் பிறிதொரு சான்றின் மூலமும் உறுதிப்படுத்திக் கொள்ளலாம். இந்த வகையில் ஒரே பொருண்மை யினவாகிய பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளலாம்.

*32(அ) கருங்குழல்*

*(ஆ) கருமையாகிய / கரிதாகிய குழல்*

இவ்விரண்டு பெயர்த்தொடர்களுள் பிந்தியதில் நிகழும் *ஆகிய* என்னும் பெயரெச்ச வினை உள்வினைத் தன்மையதாகும். இப்பெயரெச்சம் *கருங்குழல்* என்பதில் காணப்படும் உம்மைக் கிளவியுடன் துணைநிலை வழக்கில் (Complementary Distribution)

---

10. *செய்தது, செய்வது* ஆகிய வாய்பாட்டுப் பொதுவினை களில் நிகழும் அதுவென்கிளவி அடிப்படையில் உள்வினையாகக் கொள்ளத்தக்கது என்பது *ஆறும் படியும் அதுவும்* என்ற கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது. உள்வினையாகக் கொள்ளத்தக்க உம்மைக்கிளவியும் ஐயென்கிளவியும் பயனிலை உறுப்பினின்றும் தவிர்க்கப்படுவதற்குள்ள வாய்ப்பு, அதுவென்கிளவிக்கு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

11. இந்த *அதை* (= *அதய்) என்னும் உறுப்பானது தெலுங்கில் *அதி* எனத் திரிந்தமைகின்றது. எ-டு. *நுவ்வு சூசினதி நேனு/நன்னு* 'நீ பார்த்தது நான்/என்னை', *'நேனு அக்கட பாடினதி லேது* 'நான் அங்கே பாடிய தில்லை', இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *சூசினதி*, 'பார்த்தது', *பாடினதி* 'பாடியது' ஆகியவற்றில் நிகழும் **அதி** என்பதில் உள்ள இகரக் கிளவி உள்வினையாகிய ஐயென்கிளவியின் திரிபாகும். இதனின்றும் தெலுங்கில் நிகழும் *அதி* என்பதை **அதய்* (=அதை) என மீட்டுருவாக்கம் செய்யலாம்.

நிகழ்கின்றது. இதனின்றும் உம்மைக்கிளவியானது உள்வினைத் தன்மையது என்பது பெறப்படுகின்றது.[12]

7.2. உம்மீற்றுப் பயனிலைகளைப் பொறுத்தவரை பொதுவாக ஒன்றை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். செய்யும் வாய்பாட்டு வினைப்பயனிலைகளைப் போல் ஏனைய உம்மீற்றுப் பயனிலை களைத் தமிழில் இயல்பான அமைப்புக்களாகக் கருத முடிய வில்லை. பழந்தமிழில் உம்மீற்றுப் பயனிலைகள் காணப்பட்ட போதிலும் அவற்றின் நிகழ்ச்சியை வரலாற்றுக்கு முற்பட்ட நிலையில் அமைந்த வேறு வகையான உம்மீற்றுப் பயனிலைகளை நினைவுகூரும் முயற்சியாகவே கருதத்தோன்றுகின்றது. வேறு வகை யான உம்மீற்றுப் பயனிலைகள் என்று நாம் குறிப்பிடுவது வழக்கற்றுப்போன மொழியில் நிகழ்ந்த பயனிலைகளேயாகும். *அருஞ்செயல், பெருங்குன்று, கருங்குழல், கடுந்தண்டனை* ஆகியவற்றில் நிகழும் *அரும், பெரும், கரும், கடும்* ஆகிய அமைப்புக்கள் வரலாற்றுக்கு முற்பட்ட நிலையில் பயனிலை களாக நிகழ்ந்திருக்கக்கூடும். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணம் செய்யும் வாய்பாட்டு வினைகள் பயனிலைகளாகவும், எச்சமாகவும் செயல்படுவதாகும். எது எப்படியிருந்தபோதிலும் பழந்தமிழில் காணப்படும் உம்மீற்றுப் பயனிலைகளில் நிகழும் உம்மைக்கிளவி வரலாற்றுக்கு முற்பட்ட மொழியில் வழங்கிய வேறொரு வகையான உம்மீற்றுப் பயனிலைகளில் வழங்கிய உம்மைகிளவியாகவே கருதத் தோன்றுகிறது.[13] இதனின்றும் ஓர்

---

12. *கார்குழல்* என்ற பெயர்த்தொடரில் உள்வினையின் நிகழ்ச்சி காணப்பட வில்லை. இது உள்வினைக்குரிய பண்புகளில் ஒன்றாகும்.

13. இக்காலப் பேச்சுத் தமிழில் நிகழும் பன்மை சுட்டிய பயனிலைத் தொடர்கள் உம்மீற்றுப் பயனிலைகளை மீட்டுருவாக்கம் செய்யத் துணைபுரிவனவாகத் தோன்றுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளற்பாலனவாகும்.

    (1) அதுங்க கோலுங்க 'அவை கோல்கள்'

    (2) அவனுங்க நேத்து வந்தானுங்க '*அவன்கள் நேற்று வந்தான்கள்'

    (3) அவளுங்க போன வாரம் *வந்தாளுங்க* '*அவள்கள் போன வாரம் வந்தாள்கள்'

    இந்த மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் பயனிலைத் தொடர்களை முறையே **கோலுங்கள், *வந்தானுங்கள், *வந்தாளுங்கள்* என்ற வடிவினவாகக் கருதலாம். இப்பயனிலைத் தொடர்களை வரலாற்று நிலையில் **கோலும்+க(ள்), *வந்தானும்-க(ள்), *வந்தாளும்+க(ள்),* என்ற அமைப்பினவாகக் கொள்ளக்கூடுமாயின் பேச்சுத்தமிழில் நிகழும் பன்மை சுட்டிய பயனிலைத் தொடர்கள் உம்மீற்றுப் பயனிலை உறுப்புக்கள் மீது அமைந்தனவாகத் துணியலாம். இத்துணிபு மேலும் ஆய்வுக்குரிய தாகும்.

உண்மை புலனாகின்றது. மொழியில் நிகழும் மாற்றங்கள் அம் மொழியின் தொன்மை வடிவங்களை அடியோடு அழித்துவிடுவ தில்லை. இவ்வடிவங்களின் சாயல் வளர்ந்துவிட்ட மொழியில் குறிப்பிட்ட அமைப்புக்களில் பிரதிபலித்து மொழியின் தொல்லமைப்பினை நினைவுகூர்வனவாகின்றன. பழந்தமிழில் பயனிலையாகச் செயல்படும் உறுப்புக்களின் ஈற்றில் அமையும் உம்மைக்கிளவியும் ஐயென்கிளவியும் இத்தகைய பிரதிபலிப்பு களாகும். இப்பிரதிபலிப்புகள் கரையில் துள்ளும் மீன்களைப் போன்றவையாகும். காலப்போக்கில் மொழியில் இத்தகைய பிரதிபலிப்பு களின் நிகழ்ச்சியே இல்லாமல் போய்விடுவதற்கு வாய்ப்புண்டு. எடுத்துக்காட்டாக, இக்காலத் தமிழில் உம்மீற்றுப் பயனிலைகள் வழக்கற்றுப் போய்விட்டதைக் காணலாம்.

### 8.0. மேலும் ஓர் உள்வினை

8.1. இக்கட்டுரையை முடிப்பதற்கு முன் எடுத்துக்காட்டு (14)-இல் பயனிலைத் தொடரில் உம்மீற்றுப் பயனிலைகளை யடுத்து நிகழும் *தாம்* என்னும் கிளவியைப் பற்றிச் சிறிது கூறியாக வேண்டும். இவ்வெடுத்துக்காட்டில் பயின்று வழங்கும் உம்மீற்று வினைப்பயனிலைகள் *ஆதிசேடன்* என்பதை எழுவாயாகக் கொண்டு உயர்வுப் பொருண்மையைக் குறிப்பனவாகின்றன. ஆய்வுக்காக வேண்டி (14)-இல் அமைந்த வாக்கியங்கள் சுருக்கமாகக் கீழே நினைவுகூரப்படுகின்றன.

33(அ) (ஆதிசேடன்) அணிந்தாரும் + தாம்(=ஆதிசேடன் அணிந்தார்)
(ஆ) (ஆதிசேடன்) பூண்டாரும் + தாம் (=ஆதிசேடன் பூண்டார்)
(இ) (ஆதிசேடன்) பொறுத்தாரும்+தாம் (=ஆதிசேடன் பொறுத்தார்)
(ஈ) (ஆதிசேடன்) தந்தாரும்+தாம் (=ஆதிசேடன் தந்தார்)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் தாமென் கிளவியானது தற்சுட்டுப்பெயராகக் கொள்ளத்தக்கதன்று. இக்கிளவியானது (33)-இல் உம்மீற்றுப் பயனிலைகளையடுத்து நிகழ்ந்தாலும் அந்த ஈறு இன்றியமையும் வினைப்பயனிலைகளையடுத்தும் அது நிகழ வல்லது என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(34) மையாரும் கண்ட மிடற்றார் தாமே
மயானத்தில் ஆடல் மகிழ்ந்தார் தாமே
ஐயாறும் ஆரூரும் ஆனைக் காவும்
அம்பலமும் கோயிலாக் கொண்டார் தாமே
பையா டரவம் அசைத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செய்யாள் வழிபட நின்றார் தாமே
திருவாலங் காடுறையும் செல்வர் தாமே
(அப்பர் தேவாரம் 6. 78.7)

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *தாமே* என்பதைத் தாம் என்பதன் விகாரமாகக் கொள்ளலாம்.[14] எடுத்துக்காட்டுக்கள் (33), (34)-இல் தாமென்கிளவி பயனிலையாகச் செயல்படும் உறுப்புக்களை அடுத்து நிகழ்கின்றது. இதன் மூலம் இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் இக்கிளவியானது *ஆவார்* என்னும் சிறப்பு உள்வினைக்கு நேரான பொது உள்வினையாகக் கொள்ளத்தக்க தாகின்றது. எடுத்துக்காட்டு (34)-இல் ஈற்றடியாகிய *திருவாலங் காடுறையும் செல்வர் தாமே* என்ற பெயர்த் தொடரில் நிகழும் தாமென்கிளவி *ஆனவர்* என்ற உள்வினைக்கு நிகரானதாகும்.

8.2. தாமென்கிளவி (33), (34)-இல் பன்மை குறித்த வடிவமாகும். இதன் ஒருமை வடிவமானது *தான்* என்பதாகும். எ-டு. *மல்லல் மழவிடை யூர்ந்தாற் குரியளிம், முல்லையம் பூங்குழல் தான்* (சிலம்பு. 17, கொளு. 3). இதன் பயனிலைத் தொடர் *உரியள்+தான் (=உரியள் ஆவாள்)* எனக்கொள்ளற்பாலது. உம்மைக்கிளவி மற்றும் ஐயென்கிளவியைப் போன்றே *தாம், தான்* ஆகிய கிளவி களும் வழக்கற்றுப் போன உள்வினைகளாகும்.[15] பயனிலையாகச் செயல்படாத பெயர்த்தொடர்களில் *தாம், தான்* இரண்டும் பகுதிப் பொருள் விகுதிகளாகின்றன. எழுவாயாகச் செயல்படும் பெயர்த் தொடர்களில் நிகழும்போது இவை தேற்றப் பொருண்மையை உணர்த்துவனவாய் இக்காலத்தமிழில் அமை கின்றன. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(35) மாணவர்கள்-தாம் அங்கே போக மறுத்தனர்

(36) மாதவி-தான் நடிப்பில் முதல் பரிசு பெற்றாள்

எழுவாய் அல்லாத வேற்றுமைத் தொடர்களில் *தாம், தான்* இரண்டும் நெடுமுதல் குறுகி, பகுதிப்பொருள் விகுதிகளாக அமையும் நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(37) தேவர்கள் அரக்கர் - தம்மைக் கண்டு அஞ்சினர்

(38) மான் புலி-தனைக் கண்டு ஓடியது

பெயர்களையடுத்துப் பகுதிப்பொருள் விகுதிகளாய் நிகழும் வடிவங்களைக் கருத்தில்கொண்டு சிலவகைப் பயனிலைத்

---

14. *தாமே* என்பதில் உள்ள ஏகாரம் யாப்பமைதிக்கு வந்தது. எனவே தான் இதனைத் தாம் என்பதன் யாப்பின் விகாரமாக இங்குக் கொள்ளப்படு கின்றது.

15. இந்த இரண்டு வடிவங்களிலும் நிகழும் தகர ஒற்று *ஆம், ஆன்* ஆகிய வற்றுடன் பிறழ்பிரிப்பின் விளைவாக வந்து சேர்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் இதை வலியுறுத்த இப்போதைக்குப் போதிய சான்று இல்லை.

தொடர்களை மீட்டுருவாக்கம் செய்யமுடியும். எடுத்துக்காட்டாக (37), (38)-இல் நிகழும் *அரக்கர்-தம், புலி-தன்* ஆகிய பெயர்த் தொடர்கள் பயனிலைச் செயற்பாட்டில் அமையும்போது பின்வரும் பயனிலைத் தொடர்கள் கிடைக்கும்.

(39) *அவர்கள் அரக்கர்-தாம்

(40) *அது புலி-தான்

கோட்பாட்டு அடிப்படையில் இவ்விரண்டு எடுத்துக்காட்டுக் களிலும் நிகழும் *தாம், தான்* ஆகியவை உள்வினைகளாகக் கருதற் பாலனவாகும். ஆனால் இக்காலத்தமிழில் பயனிலைத் தொடர்களில் நிகழும் இவை உள்வினைத் தன்மையை இழந்து தேற்றப் பொருண்மையை உணர்த்தும் இலக்கண உருபன்களாகச் செயல் படுகின்றன.[16] ஆயினும் *அவர்கள் அரக்கர்களே-தாம் (=அவர்கள் அரக்கர்களே யாவர்)*, அது *புலியேதான் (=அது புலியேயாகும்)* என்ற வாக்கியங்களில் நிகழும் பயனிலைத் தொடர்களில் *தாம், தான்* இரண்டும் உள்வினைகளாய் அமைவனவாகவே தோன்றுகின்றன.

## 9.0. வட்டத்தில் செருகிய சதுரம்

*91.* மொழியின் பழமைக் கூறுகள் பிந்திய நிலையில் நினைவு கூரப்படும்போது வழக்கில் உள்ள மொழியில் அத்தகைய கூறுகள் வட்டத்தில் செருகிய சதுரங்கள்போல் காட்சியளிக் கின்றன. இந்த நிலையில் வாக்கியங்களில் இவற்றின் செயற்பாட்டு மூலங்களைக் கண்டறிவது அடி, நுனி புலப்படாத நூல்திரளில் விழுந்துவிட்ட இறுகிய முடிச்சுக்களைப் பக்குவமாக அவிழ்ப்பது போலாகும். ஒரு முறை இந்த முயற்சியில் வெற்றிபெற்றுவிட்டால் மொழியின் பலபடியான வளர்ச்சிப் போக்கைப் புரிந்து கொள்வது எளிதாகி

---

16. பயனிலைத் தொடரில் நிகழும் *தான், தாம்* இரண்டும் இக்காலத் தமிழில் தேற்றப் பொருண்மையை உணர்த்துமாயினும் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் அவை இப்பொருண்மையை உணர்த்துவதாகத் தோன்றவில்லை.

 யௌவ்வன ராணி-தான்
 இசைபாடும் வாணி-தான்
 என்மேலே ஆசைகொள்ளும்
 இளைஞரும் கோடி-தான் (தமிழ்த் திரைப்பாடல்)

இவ்வெடுத்துக்காட்டில் பயனிலைத் தொடரில் நிகழும் தானென்கிளவி உள்வினைத் தன்மையதாகச் செயல்படுவதாகத் தோன்றுகிறது. இக்காலத் தமிழில் பயனிலைத் தொடரில் தாமென் கிளவியின் நிகழ்ச்சி மிகுதியாகப் போற்றப்படுவதில்லை. மேல் எடுத்துக்காட்டில் ஈற்றடியில் தாமென்கிளவிக்குப் பதில் தானென் கிளவி நிகழ்வது கருதற்பாலதாகும்.

விடுகின்றது. மேலே நிகழ்த்திய ஆய்வில் ஐயென்கிளவியில் விழுந்த முடிச்சை அவிழ்த்ததன் மூலம் உம்மைக் கிளவி அடிப்படையில் உள்வினைத்தன்மையது என்ற உண்மை பெறப்பட்டது. அதே சமயத்தில் உம்மைக்கிளவியும், ஐயென்கிளவியும் இலக்கணப் பொருண்மைகளை உணர்த்தும் நிலையையும் மொழியில் காண்கிறோம். *தாம், தான்* ஆகிய கிளவிகளும் உள்வினைகளாகவும், தேற்றப் பொருண்மையை உணர்த்தும் இலக்கண உருபன்களாகவும் நிகழும் போக்கினையும் மொழியில் காண்கிறோம். இதனின்றும் உள்வினையானது தன் பொருண்மையை இழந்து இலக்கண உருபனாகவும் அமையவல்லது என்பது பெறப்படுகின்றது. இத்தகைய நிலையானது பொதுவாக இலக்கண உருபன்களை அடிப்படையில் உள்வினைகளாகக் கருத வகை செய்கின்றது. ஆனால் எல்லா இலக்கண உருபன்களையும் உள்வினைக் குடும்பத்தைச் சேர்ந்தவையாக இந்தக் கருதுகோளின் மூலம் கொள்ள முடியுமா? அப்படித் தோன்றவில்லை. ஆனால் விகுதிகளையும், சாரியைகளையும், பகுதிப்பொருள் விகுதிகளையும் உள்வினைக் குடும்பத்துக்கு உரியனவாகக் கொள்ள மிகுந்த வாய்ப்பு உண்டு.



# 20. ஆறும் படியும் அதுவும்

## *1.0 மூவகை வினையீறுகள்*

தொடரனியற் சிந்தனைக்கு உரியனவாய் அமையும் பல்வேறு தமிழ் வினையமைப்புக்களின் தொகுதியில் ஆறீற்று வினைகளும், படியீற்று வினைகளும் அடங்கும். இவ்வீறுகளைக் கொண்ட வினைகள் முறையே *செய்தவாறு/செய்யுமாறு/செய்யாதவாறு, செய்தபடி/செய்யும்படி/செய்யாதபடி* ஆகிய வாய்பாடுகளில் அமைவனவாகும். இந்த இருவகை ஈறுகளைக் கொண்ட வினையமைப்புக்கள் இக்காலத் தமிழில் தனிவாக்கியங்களில் பயனிலைச் செயற்பாட்டினை மேற்கொள்ளாமல் எச்சவாக்கியங் களில் நிகழ்வனவாகவே அமைகின்றன. இப்போக்கினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(1) முருகன் {பாடியவாறு / பாடியபடி} நடந்தான்

(2) மாதவி {பாடியவாறு / பாடியப்படி} மேகலையும் பாடினாள்

(3) மேகலையைப் {பாடுமாறு / பாடும்படி} மாதவி பணித்தாள்

இந்த மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் எச்சவினைகளில் நிகழும் *ஆறு, படி* என்னும் இடைச்சொற்கள் வேறுபட்ட உண்மைகளை உணர்த்துவனவாய் அமைகின்றன. முதல் எடுத்துக்காட்டில் *பாடியவாறு/பாடியபடி* என்பது *பாடிக் கொண்டு* என்பதோடு பொருந்தித் தொடர்நிகழ்ச்சியையும், இரண்டாம் எடுத்துக் காட்டில் மேற்படி வினைகள் *பாடியதுபோல்* என்பதனோடு பொருந்தி ஒப்புமைப் பொருண்மையையும், மூன்றாம் எடுத்துக் காட்டில் அதே வினைகள் *பாடு(க) என்று'* என்பதனோடு

பொருந்தி ஏவல் தன்மையினையும் உணர்த்துகின்றன. மேலே மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் எச்சவாக்கியங்களில் நிகழும் வினையமைப்புக்களில் அமைந்த *ஆறு, படி* ஆகிய இடைச் சொற்களைப் பின்வருமாறு சமன்படுத்தலாம்.

(4) பாடியவாறு/பாடியபடி..... ஆறு/படி = கொண்டு

(5) பாடியவாறு/பாடியபடி..... ஆறு/படி = போல்போல

(6) பாடுமாறு/பாடும்படி......... ஆறு/படி = என்று

இச்சமன்பாட்டில் நிகழும் **கொண்டு, போல, என்று** ஆகிய மூன்றும் அடிப்படையில் வினையின் தன்மையினவாய் அமைவதை நோக்குகையில் *ஆறு, படி* ஆகிய இரண்டும் வினை மூலங்களுக்கு உரியனவாகக் கொள்ளத் தோன்றகின்றன. இது தொடர்பான ஆய்வினை மேற்கொள்வதற்கு முன் **செய்தவாறு, செய்யுமாறு** வாய்பாட்டு வினைகள் இடைக்காலத் தமிழில் அமையுமாற்றினைக் கருத்தில் கொள்வதும் இன்றியமையாத தாகும்.

## 2.0. துணைநிலை வழக்கில் அதுவும் ஆறும்

2.1. இடைக்காலத் தமிழில் **செய்தவாறு** வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சிக்குப் பின்வரும் எடுத்துக்காட்டினைக் கருத்தில் கொள்ளலாம்.

---

1. எடுத்துக்காட்டு (3)-இல் நிகழும் *பாடுமாறு, பாடும்படி* ஆகிய அமைப்புக்களில் உள்ள *ஆறு, படி* ஆகிய இடைச்சொற்கள் *என்று* என்பதனோடு பொருந்துமாற்றினை எதிர்மறை எடுத்துக்காட்டு மூலம் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக் காட்டு கருத்திற்கொள்ளற்பாலதாகும்.

   (அ) மேகலையைப் பாடவேண்டாம் என்று மாதவி சொன்னாள்

   இந்த எடுத்துக்காட்டானது பின்வரும் எடுத்துக்காட்டுக்கு நேரான எதிர்மறையாகும்.

   (ஆ) மேகலையைப் { பாடுமாறு / பாடும்படி } மாதவி சொன்னாள்

   அகரப்பிரிவில் *பாடவேண்டாம்* என்பதையடுத்து *ஆறு/படி* நிகழ்வதற்கு வாய்ப்பில்லை. இவ்வாறே (ஆ) பிரிவில் *பாடும்* என்பதனையடுத்து என்றென் கிளவியின் நிகழ்ச்சி தவிர்க்கப்படுகின்றது. இதன்மூலம் அகரப் பிரிவில் உள்ள என்றென் கிளவியும் (ஆ) பிரிவில் உள்ள *ஆறு/படி* என்னும் கிளவியும் சிதறிய வழக்கில் (Complementary Distribution) அமைந்திருப்பது தெளிவாகின்றது.

(7) இந்நகரப் புறங்காட்டில் இவன்பிறந்த வாறும்
தன்னிகரில் வாணிகன்இல் தான்வளர்ந்த வாறும்
கைந்நிகரில் வேந்தர்தொழப் போந்ததுவும் கண்டால்
என்னைதவம் செய்யா திகழ்ந்திருப்ப தென்பார்
*(சீவகசிந்தாமணி 2555)*

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *போந்தது* என்ற வினையை நோக்க *பிறந்தவாறு, வளர்ந்தவாறு* ஆகிய இரண்டும் *பிறந்தது, வளர்ந்தது* என்பவற்றுக்கு நிகரானவை என்பது புலனாகின்றது. இவ்வாறே *போந்தது* என்பது *போந்தவாறு* என்பதற்கு நேரானது என்பதும் தெளிவாகிறது. தொடர்ந்து, பின்வரும் எடுத்துக் காட்டினையும் கருத்தில் கொள்வது இன்றியமையாதது.

(8) பொருசரம் சலாகை வெய்ய புகன்றனர் துரக்கு மாறும்
வருகணை விலக்கு மாறும் வாளமர் நீந்து மாறும்
கருவியுட் சுரக்கு மாறும் கணைபுறம் காணு மாறும்
விரியமற் றவர்க்குக் காட்ட வீற்றிருந் தவரும் கற்றார்
*(சீவகசிந்தாமணி 1676)*

2.2. இந்த எடுத்துக்காட்டில் *செய்யுமாறு* வாய்பாட்டினவாக நிகழும் ஐந்து வினைகளும் *செய்வது* வாய்பாட்டு வினைகளுக்கு நேரானவையாகும். எடுத்துக்காட்டுக்கள் (7), (8)-இல் நிகழும் *செய்தவாறு* மற்றும் *செய்யுமாறு* வாய்பாட்டு வினைகளுக்கு உரை வரைகையில் நச்சினார்க்கினியர் *செய்தபடி, செய்யும்படி* ஆகிய வாய்பாட்டு வினையமைப்புக்களையே பயன்படுத்துகிறார். இதனின்றும் *செய்தவாறு/செய்தபடி/செய்யுமாறு/செய்யும்படி* ஆகிய வாய்பாட்டு வினையமைப்புக்களில் நிகழும் *ஆறு, படி* ஆகிய இரண்டு இடைச்சொற்களும் செம்மை வழக்கிலும்[2] (Free Variation) *செய்தது, செய்வது* வாய்பாட்டு வினைகளில் நிகழும் **அது** என்னும் இடைச்சொல் *ஆறு, படி* ஆகியவற்றுடன் துணைநிலை வழக்கிலும் (Complementary Distribution) நிகழ்வது தெளிவாகின்றது. *ஆறு, படி, அது* ஆகிய மூன்று இடைச் சொற்களின் வழக்கு நிலைகள் பின்வரும் வினையமைப்புக்களை நிலைக் களன்களாகக் கொண்டவையாகும்.

*(9) செய்த-வ்+ஆறு; செய்த+படி; செய்த்+அது (<செய்து+அது)*

*(10) செய்யும் + ஆறு/படி; செய்வ்+அது; (<*செய்ம்+அது)*

---

2. செய்தவாறு வாய்பாட்டு வினைகள் **செய்தவ்+ஆறு* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கொள்ளத்தக்கனவாகும். இதனைக் கருத்தில் கொண்டு செய்தவாறு, செய்தபடி வாய்பாட்டு வினைகளில் ஆறும், படியும் துணைநிலை வழக்கில் நிகழ்வனவாகக் கொள்ளலாம். **செய்தவ்* வாய்பாட்டு வினைகள் **செய்தம்* வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகும்.

### 3.0. குடும்ப உறுப்புக்கள்

இந்த நிலைக்களன்கள் *ஆறு, படி, அது* ஆகிய மூன்றும் ஒரு குடும்பத்தைச் சார்ந்த உறுப்புக்கள் (Constituents) என்பதை உணர்த்துவனவாய் அமைகின்றன. மேலே (4) முதல் (6) வரையுள்ள சமன்பாடுகள் *ஆறு, படி* இரண்டும் வினைமூலங்கள் என்று கருத வகை செய்கின்றன. அப்படியாயின் *ஆறு, படி, அது* ஆகிய மூன்றும் ஓர் குறிப்பிட்ட வினைக்குடும்பத்தைச் சார்ந்தவை என்று தோன்றுகிறது. இதனை உறுதிப்படுத்திக் கொள்ளும் வகையில் இனி இக்கட்டுரையின் போக்கு அமையும்.

### 4.0. என்றொடு சிவணும் ஆறும் படியும்

மேலே (6)-ஆம் சமன்பாட்டில் *ஆறு, படி* இரண்டும் **என்று** என்பதனோடு பொருந்துவதைக் கண்டோம். இது ஒரு குறிப்பிடத்தக்கச் சமன்பாடாகும். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணம், இச்சமன்பாட்டில் நிகழும் வாக்கியச் சாரியையாகிய (Sentential Complementizer) *என்று* என்னும் இடைச்சொற் கிளவி இலக்கணப் பொருண்மை எதனையும் குறிப்பிடாமல் ஒரு பொதுநிலைக்கிளவியாக அமைவதேயாகும். இதன்மூலம் *ஆறு, படி* இரண்டும் பொதுநிலைக்கிளவிகளாகக் கொள்ளத்தக்கவை என்பது பெறப்படுகின்றது. பொதுநிலைக்கிளவியானது இலக்கணப் பொருண்மையை ஏற்று நிகழ்வது மொழியில் காணப்படும் இயல்பான வளர்ச்சி நிலையாகும். எனவே பொதுநிலைக் கிளவியின் மீது அமையும் எந்தச் சான்றும் வலுவான சான்றாகக் கொள்ளத்தக்கதாகும். *ஆறு, படி* இவற்றோடு அதுவென் கிளவியும் பொருந்துமாற்றினை மேலே கண்டோம். *ஆறு, படி* ஆகியவை *என்று* என்னும் பொதுநிலைக்கிளவியுடன் பொருந்துவது போலவே அதுவென்கிளவியும் ஒரு பொதுநிலைக் கிளவியுடன் பொருந்தும் நிலையினைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

(11) அமைச்சர் நேற்று இங்கு *வந்தார்* என்பது உண்மை

(12) அமைச்சர் நேற்று இங்கு *வந்தது* உண்மை

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களும் ஒரே பொருண்மையினை உணர்த்துவனவாகும். இவற்றுள் முந்தியதில் நிகழும் *என்பது* என்னும் உறுப்பும் பிந்தியதில் *வந்தது* என்பதில் நிகழும் *அது* என்னும் உறுப்பும் துணைநிலை வழக்கில் அமைகின்றன. இவற்றுள் *என்பது* என்னும் வாக்கியச்சாரியையாகிய உறுப்பு பொதுநிலைக் கிளவியாகும். இதன்மூலம் இத்துடன் துணை நிலை வழக்கில் அமையும் அதுவென் கிளவியும் பொதுநிலைக்

கிளவியாகக் கொள்ளத்தக்கதாகின்றது. அதுமட்டுமல்ல; *என்பது, அது* ஆகிய இரண்டும் துணைநிலை வழக்கில் நிகழ்வதால் இவைகள் ஒரே குடும்பத்துக்குரிய உறுப்புக்கள் என்பதும் தெளிவாகின்றது.

## 5.0. துணைநிலை வழக்கில் அதுவும் என்பதுவும்

நடைமுறையில் (12)-இல் நிகழும் அதுவென்கிளவி இடைச் சொல்லாகக் கருதப்பட்டாலும், *என்பது* என்னும் உறுப்புடன் அது துணைநிலை வழக்கில் நிகழ்வதால் பிந்தியதன் தன்மைகள் அனைத்திற்கும் முந்தியதும் உரியதாகின்றது. மாற்றிலக்கண ஆய்வில் *என்பது, அது* ஆகிய இரண்டும் ஒரே கிளவியாக்க விதியின் (Lexicalization Rule) மூலம் வருவிக்கத்தக்கனவாகும். அதாவது இரண்டுக்கும் உட்கிடை (Input) ஒன்றே. சூழலைப் பொறுத்தவரை, *என்பது* என்னும் உறுப்பானது சிறப்பு வினை (Personal Verb) எதிர்மறை, பெயர் ஆகிய பயனிலைகளை யடுத்தும், அதுவென் கிளவி செய்து, **செய்பு, செய்வ், செய்யாது* ஆகிய வாய்பாட்டு வினைகள் மற்றும் *இல்லாது* என்னும் எதிர்மறைக் கிளவி ஆகியவற்றையடுத்தும் நிகழ்வனவாகும். எடுத்துக்காட்டு (11)-இல் நிகழும் *என்பது* என்னும் பொதுநிலைக் கிளவி வினையின் தன்மையதாகையால் அதனுடன் துணைநிலை வழக்கில் நிகழும் அதுவென்கிளவியும் வினையின் தன்மைய தாகவே கொள்ளத்தக்கதாகின்றது. இதன்மூலம், அதுவென் கிளவியுடன் துணைநிலை வழக்கில் அமையும் *ஆறு, படி* ஆகிய இடைச்சொற்களும் வினைமூலங்களை உடையவை என்பது உறுதிப்படுகின்றது.

## 6.0. வினை மூலங்கள்

6.1. இனி *ஆறு, படி, அது* ஆகிய இடைச்சொற்கள் எத்தகைய வினைமூலங்கள் என்பதை அறிந்துகொள்வது இன்றியமையாத தாகும். எடுத்துக்காட்டு (11)-இல் *உண்மை* என்னும் பயனிலை உறுப்புக்கு ஓர் வாக்கியமே எழுவாயாக அமைகின்றது. எழுவாயாக அமையும் வாக்கியத்தில் *என்பது* என்னும் உறுப்பு வந்தார் என்னும் சிறப்புவினைப் பயனிலையை அடுத்து நிகழ்கின்றது. தமிழில் பயனிலையை அடுத்து நிகழும் உறுப்பு இலக்கண உருபனாகவோ (Grammatical Morpheme) அல்லது உள்வினையாகவோதான் (Copula) இருக்கமுடியும். எடுத்துக் காட்டு (11)-இல் *வந்தார்* என்னும் பயனிலையை அடுத்து நிகழும் *என்பது* என்னும் உறுப்பை இலக்கண உருபனாகக் கொள்வதற் கில்லை. எனவே, இந்த உறுப்பானது உள்வினையாகக் கொள்ளத்

தக்கதாகின்றது. இதனை உறுதிப்படுத்தும் வகையில், இடைக் காலத் தமிழில் *என்பது* பயனிலை உறுப்பையடுத்து நிகழும் வாக்கிய அமைப்புக்கள் காணப்படுகின்றன. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

*(13)* பாங்கன் பார்ப்பான் ஆகலின் பன்மை வாசகத்தால் சொன்னார் என்பது (இறையனார் அகப்பொருள். நக்கீரர் உரை. பக்கம் *72*. பவானந்தர் வெளியீடு)

*(14)* தலைமகள் எவ்விடத்தும் தன்னைப் புகழப்பெறாள் என்பது (மேற்படி பக். *225)*

*(15)* சிற்றறிவினார் அன்றே ஒரு கருமம் எடுத்துக்கொண்டு முடிப்பான் புக்கு முடியாது தவிர்வர் என்பது.

(மேற்படி பக். *236)*

*(16)* தொகுக்கும் வழி தொகுத்தல் என்பதனான் ஆண்டு ஆக்கம் தொக்கு நின்றது என்பது.[3]

(தொல்.சொல்.சேனா. உரை. நூற்பா. *22)*

*(17)* ....இவ்வேறுபாடு ஆண்டுப் பெறப்படாமையின், ஈண்டுக்கூறினார் என்பது (மேற்படி நூ. *28)*

*(18)* அவை அறிந்து பொருள்வயின் ஐயந்தீர்தற்கல்லது யாண்டும் வாராமையின் ஈண்டு அமைக்கப்படா வென்பது (மேற்படி நூ. *32)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் பயனிலையையடுத்து நிகழும் *என்பது,* வாக்கியப் பொருண்மைக்கு எந்த வகையிலும் துணை புரியாத ஓர் உறுப்பாகும். இவ்வுறுப்பு இல்லாமலும் வாக்கியப் பொருண்மை சிறக்கும். ஆகவே மேற்படி எடுத்துக்காட்டுக்களில் *என்பது* இன்றியும் வாக்கியங்கள் செம்மையாக நிகழற்பாலன வாகும். ஆனால் (11)-இல் உள்ளது போன்ற வாக்கிய அமைப்புக் களில் இதன் நிகழ்ச்சி இன்றியமையாத ஒன்றாகும். மொழியியல் கண்ணோட்டத்தில் சொல்லவேண்டுமானால் (11)-இல் உள்ளது

---

3. சேனாவரையர் உரையில் பெரும்பாலும் முற்றெச்ச (**Complex**) வாக்கியங்களில் முற்றுவாக்கியப் பயனிலையைத் தொடர்ந்து *என்பது* நிகழ்கின்றது. இதனை இக்காலத் தமிழ் வாக்கியம் ஒன்றின் மூலம் தெளிவுபடுத்தலாம். கருதுக:

**முருகன் பாடச் சொன்னமையால் வள்ளி பாடினாள் என்பது*

சேனாவரையரின் தமிழில் *என்பது* நிகழும் பெரும்பான்மையான முற்றெச்ச வாக்கியங்களில் எச்சவாக்கியம் ஏதுத்தன்மையதாக அமைகின்றது. மேல் எடுத்துக்காட்டில் *முருகன் பாடச் சொன்னமையால்* என்பது ஏதுப்பொருண்மையைக் குறிக்கும் வாக்கிய அமைப்பாகும்.

போன்ற வாக்கிய அமைப்புக்களில் **என்பது** என்னும் உள்வினை கண்டிப்பாகக் குறிக்கப்பெற்றும், தனியாக நிகழும் முற்று வாக்கியங்களில் (Simple Sentences) பயனிலையையடுத்து மேற்படி உறுப்பு குறிக்கப்படாமலும் அமையும். மேலே (13) முதல் (18) வரை குறிக்கப்பெற்றுள்ளது போன்ற வாக்கிய அமைப்புக்கள் பெருவழக்கினவல்ல. இக்காலத் தமிழில் இத்தகைய வாக்கியங்கள் அறவே இல்லை. ஆயினும் இவை ஓர் பழமைக்கூறின் பிரதிபலிப்பு என்பதை மறுப்பதற்கில்லை.

6.2. இனி, எடுத்துக்காட்டு (12)-க்கு வருவோம். இந்த எடுத்துக் காட்டில் *வந்தது* என்பதில் நிகழும் அதுவென்கிளவி (11)-இல் உள்ள *என்பது* என்னும் உள்வினையுடன் துணைநிலை வழக்கில் நிகழ்வதால், பிந்தியதைப் போன்றே முந்தியதும் - அதாவது, அதுவென்கிளவியும் உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இதனின்றும் *செய்யும், செய்த* ஆகிய வாய்பாட்டு வினைகளை அடுத்து நிகழும் *ஆறு, படி* ஆகிய இடைச்சொற்களும் அடிப் படையில் உள்வினைகளாகக் கொள்ளத்தக்கவையாகின்றன. ஆறும் படியும் அதுவென்கிளவியுடன் பொருந்துமாற்றினை முன்னர் நாம் அறிந்துள்ளதால் இம்முடிபு தவிர்க்கமுடியாத ஒன்றாகும். *ஆறு, படி, அது* ஆகியமூன்றும் ஓர் குறிப்பிட்ட வினைக் குடும்பத்துக்குரியவை என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இவ்வினைக்குடும்பம் உள்வினைக் குடும்பம் என்று இப்போது தெளிவாகின்றது.

### 7.0. உள்வினையின் நிகழ்ச்சிக்களம்

உள்வினையானது வாக்கியத்தில் பயனிலை உறுப்பை யடுத்து நிகழ்வதாகும். *ஆறு, படி, அது* ஆகியவை மேலே நிகழ்த்திய ஆய்வின் மூலம் உள்வினைகளாகக் கொள்ளத்தகும் பெற்றியனவாய் அமைவதால் இவற்றின்முன் நிகழும் உறுப்புக்கள் பயனிலைச் செயற்பாட்டினவாய் அமைவது தவிர்க்க முடியாத தாகின்றது. இதன் விளைவாக *ஆறு, படி* இவற்றின் முன் நிகழும் *செய்த, செய்யும்* மற்றும் *செய்கின்று* வாய்பாட்டு வினைகளும் பயனிலைச் செயற்பாட்டினவாய்க் கொள்ளத்தக்கனவாகின்றன.[4] இது அடிப்படை நிலை. இதனைக் கருத்தில் கொண்டு பின்வரும் வாக்கிய அமைப்புக்களை மீட்டுருவாக்கம் செய்யலாம்.

(19) *அமைச்சர் நேற்று இங்கு வந்த-வ்+ஆறு/வந்த+படி/வந்த்+அது

4. இவற்றுடன் செய்யாத வாய்பாட்டு எதிர்மறை வினைகளும், இல்லாத என்னும் எதிர்மறை வினையும் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

(20)*அமைச்சர் நாளை இங்கு வரும்+ஆறு/வரும்+படி/வருவ்+அது/ வருகின்ற்+அது

இங்கே குறிக்கப் பெற்றுள்ள வாக்கிய அமைப்புக்கள் பின்வரும் வாக்கிய அமைப்புக்களின் பொருண்மையுடன் ஒன்றுபடுவனவாகும்.

(21) அமைச்சர் நேற்று இங்கு வந்தார் (=(19)

(22) அமைச்சர் நாளை இங்கு வருவார் (=(20)

*உண்மை* என்னும் பயனிலைக்கு எழுவாயாகச் செயல்படும்போது *என்பது* என்னும் உள்வினை குறிக்கப்பெற்றுப் பின் வருமாறு அமையும்.

(23) அமைச்சர் நேற்று இங்கு வந்தார் + என்பது

(24) அமைச்சர் நாளை இங்கு வருவார் + என்பது

இந்த ஆய்வினின்றும் உள்வினைகளும், வினைப்பயனிலைகளும் வடிவில் பலவகையின என்பது புலனாகிறது. ஆனால் இவற்றின் நிகழிடங்கள் ஒன்றுபோல் நடைமுறையில் அமைவதில்லை. எடுத்துக் காட்டுக்கள் (19), (20)-இல் உள்ள வாக்கிய அமைப்புக்கள் (21), (22)-இல் உள்ள வாக்கிய அமைப்புகளுக்குரிய சூழலிலும், இவ்வாறே பிந்தியவை முந்தியவற்றுக்குரிய சூழலிலும் நிகழ்வ தில்லை. இத்தகைய சூழல் கட்டுப்பாடு (Contextual Constraint) இல்லையெனில் மொழியில் பல்வேறு வகையான வாக்கிய அமைப்புக்கள் தோற்றம் கொள்வதற்கான வாய்ப்பு இல்லாமல் போய்விடும்.

## 8.0. வேறுபல் குறியனவாய உள்வினைகள்

உள்வினைகள் பல்வேறு வடிவினவாய் அமையவல்லன என்ற செய்தி மேலே பெறப்பட்டது. இவற்றுள் *ஆறு* என்னும் உள்வினை யமைந்த வாக்கிய அமைப்புக்கள் அப்பர் தேவாரத்தில் சார்பு வாக்கியங்களாக (Subordinate Clauses) அமையாமல் முற்று வாக்கியங் களாக (Main Clauses) அமையும் போக்கு பரவலாகக் காணப்படு கின்றது.[5] பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இதனைப் புலப்படுத்தும்.

---

5. உரையாசிரியர்களின் தமிழிலும் ஆறீற்று வினைகள் பயனிலையாக அமையும் போக்கு அங்குமிங்குமாகக் காணப்படு கின்றது. இவ்வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருதற் பாலனவாகும்.

(அ) எட்டு என்பது அவற்றது தொகை கொடுத்துச் சொன்னவாறு (இறையனார் அகப்பொருள். நக்கீரர் உரை. ப28, பவானந்தர் கழக வெளியீடு)

(ஆ) ...... ஒன்றென்று துணிந்தவழிப் பலவல்ல ஒன்றெனவும் பல வென்று துணிந்தவழி ஒன்றன்று பலவெனவும் மறுக்கப்படும் பொருண்மேல் அன்மைக் கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நின்றவாறு. (தொல்.சொல்.சேனா.உரை.நூற்பா.25. பொன்னையா பதிப்பு 1938)

(25) நெருநலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே (6.94)

(26) ஆதியாய் அந்தமாய் நின்றான் தன்னை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே (6.26.6)

(27) அருந்தவனை அறநெறியில் அப்பன்தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்தவாறே (6.33.1)

(28) திருவொற்றியூர் நம்மூர் என்று போனார்
செறிவளைகள் ஒன்றொன்றாச் சென்றவாறே (6.45.10)

(29) நீங்காத பேரொளிசேர் நீடூரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே (6.11.5)

## 9.0. ஆறீற்று வினைப்பயனிலைகள்

9.1. இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் **செய்தவாறு** வாய்பாட்டு வினைகளும், **செய்யாவாறு** வாய்பாட்டு வினையும் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்தனவாகும்.[6] நான்காம் திருமுறையில் ஐந்தாம் பதிகமாய் அமைந்த திருவாரூர்ப் பதிகத்தில் பல பாடல்கள் செய்தவாறு வாய்பாட்டு வினைப் பயனிலைகளையும், மிகச்சில செய்தேன் வாய்பாட்டு வினைப் பயனிலைகளையும் கொண்டனவாய் அமைகின்றன. பின்வரும் மூன்று எடுத்துக்காட்டுக்களும் மேற்படி பதிகத்தின்பாற்பட்டன வாகும்.

(30) அன்பிருத்தி அடியேனைக் கூழாட்கொண் டருள்செய்த
ஆரூரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப்பின்
போனவாறே (4.5.2)

(31) மதிதந்த ஆரூரில் வார்தேனை வாய்படுத்துப் பருகிஉய்யும்
விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க மின்மினித்தீக்
காய்ந்தவாறே (4.5.7)

---

6. இது தொடர்பாக ஓர் விளக்கம் தேவைப்படுகின்றது. *முருகன் வள்ளியை மணந்தான்* என்பது ஓர் நேர் வாக்கியம். *முருகன் மணந்தது வள்ளியை* என்பது கவை வாக்கியம். கவை வாக்கியங்கள் நேர் வாக்கியங் களினின்றும் தோன்றிய திரிபு வாக்கியங்களாகும். இவ்வாறு திரியும் போது நேர்வாக்கியத்தில் உள்ள சிறப்புப் பயனிலை கவை வாக்கியத்தில் பொதுப் பயனிலையாக மாறி அமையும். *மணந்தான்* என்பது கவை வாக்கியத்தில் *மணந்தது* என்று திரிந்தது இந்த அடிப்படையிலாகும். அப்பர் தேவாரத்தில் செய்தவாறு வாய்பாட்டுப் பயனிலைகள் அமைந்த வாக்கியங்கள் நேர்வாக்கியங்களாகவும், கவை வாக்கியங்களாகவும் காணப்படுகின்றன. இருவகை வாக்கிய அமைப்புக்களிலும் செய்தவாறு வாய்பாட்டுப் பயனிலைகள் பொது வினைகளாகவே அப்பர் தமிழில் அமைகிறது.

(32) தொண்டெலாம் இசைபாடத் தாமுறுவல் அருள்செய்யும் ஆரூரரைப்
பண்டலொம் அறியாதே பணிநீராற் பரவைசெயப் பாவித்தேனே (4.5.4)

9.2. எடுத்துக்காட்டு (32)-இல் பாவித்தேன் என்பது பயனிலையாகச் செயல்படுவதால் (30), (31)-இல் நிகழும் *போனவாறு, காய்ந்தவாறு* இரண்டும் நேர்வாக்கியத்தில் அமைந்த பொதுப் பயனிலைகளாகக் கொள்ளத்தக்கவாகின்றன. திருவாய்மூர்ப் பதிகத்தில் அமைந்த பாடல் ஒன்றில் இந்த நிலை மாறுபட்டுக் காணப்படுகின்றது. பாடல் முழுதும் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

(33) பாலின் மொழியாளோர் பாகம் கண்டேன்
பதினெண் கணமும் பயிலக் கண்டேன்
நீலநிற முண்ட கண்டங் கண்டேன்
நெற்றிநுதல் கண்டேன் பெற்றம் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேல் தோன்றக் கண்டேன்
மாலைச் சடையும் முடியுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே (6.77.2)

இப்பாடலில் **கண்டவாறு** என்னும் ஆறீற்றுப் பொதுவினை கவை வாக்கியத்தில் அமைந்து பயனிலைச் செயற்பாட்டில் நிகழ்கின்றது.

## 10.0. காலப்போக்கில்

10.1. ஆறீற்று வினைகள் இக்காலத்தமிழில் பயனிலையாகச் செயற்படும் நிலை காணப்படவில்லை. பழந்தமிழில்கூட இத்தகைய நிலையைக் காண முடியவில்லை. ஆறீற்று வினை யமைப்புக்கள் பயனிலையாய்ச் செயற்படும் போக்கு ஒரு கிளை மொழிக்கு உரியதாயிருந்து செந்தமிழில் இடம்பெற்றிருக்கக் கூடும் என்று கருதத்தோன்றுகிறது. செந்தமிழ் என்பது பல்வேறு கிளை மொழிகளில் அமைந்த மொழியியற் கூறுகளைத் தன்னகப்படுத்திக் கொண்டு இலக்கிய வழக்குக்கு உரியதாய் அமைந்த ஓர் மொழியாகும்.[7] இத்தகைய மொழியில் ஓர் கிளை மொழிக்குரிய அத்தனை மொழியியற் கூறுகளையும் எதிர்பார்க்க முடியாது.

7. தொல்காப்பியர் குறிப்பிடும் பல்வேறு வகையான முற்று வினைகளும், எச்ச வினைகளும் இதனைத் தெளிவுப்படுத்துவனவாய் உள்ளன. *செய்கு, செய்வல், செய்வேன்* ஆகியவற்றை ஒரே கிளைமொழிக் குரியனவென்று கருதமுடியாது. ஆனால் செந்தமிழில் இவையனைத்தும் பயின்று வழங்குகின்றன. இதனின்றும் செந்தமிழானது பல கிளைமொழிகளின் தாக்கத்திற்கு ஆட்பட்டது என்பது தெளிவாகிறது.

முடியாது. செந்தமிழில் கிளைமொழிக் கூறுகள் இடம்பெறுவது இலக்கியவாதிகளின் மொழிக்கண்ணோட்டத்தைப் பொருத்த தாகும்.[8] கம்பர் தமிழில் செய்தவாறு வாய்பாட்டு வினைகள் பயனிலைச் செயற்பாட்டில் நிகழும் அளவுக்குச் சம்பந்தர், சுந்தரர் தேவாரத்தில் இடம்பெறாமை கருத்தில் கொள்ளத்தக்கது. பழந் தமிழில் இந்நிலை காணப்படாமையும் அக்காலப் புலவர்களின் மொழிக் கண்ணோட்டத்தையே புலப்படுத்துவதாக உள்ளது.

### 11.0. விகுதிகளாய் உள்வினைகள்

*ஆறு, படி, அது* ஆகிய மூன்றும் உள்வினைக் குடும்பத்தைச் சார்ந்தவை என்றாலும் அவை விகுதி நிலையிலேயே அமைகின்றன. ஆனால் இவற்றோடு பொருந்தும் *என்று, என்பது* ஆகிய உறுப்புக்களை விகுதிகளாகக் கருத முடியாது. உள்வினைகள் இவ்வாறு இருவேறு தன்மையனவாய் அமைவதை இலக்கணத்தில் தெளிவுபடுத்தியாக வேண்டும் மாற்றிலக்கண நெறியில் உள்வினைகள் அனைத்தும் முதலில் ஒரே கிளவியாக்க விதியின் மூலம் சூழல்கள் குறிக்கப்பெற்று வருவிக்கப்படும். பின்னர் விகுதியாக்க விகாரம் (Cliticization Transformation) ஒன்றின் மூலம் *ஆறு, படி, அது* ஆகிய உள்வினைகள் விகுதி நிலைக்கு மாற்றப் பட்டுப் பொருத்தமான வினைப்பயனிலைகளைச் சார்கின்றன. சொல் நிலையில் அமையும் உறுப்புக்களைக் கட்டுருபன்களாக மாற்றுதல், விட்டிசையைத் தவிர்த்தல் ஆகிய இரண்டு பணிகளையும் விகுதியாக்க விகாரம் செய்து முடிக்கின்றது. ஒரு வகையில் சொல்லப்போனால் இதனை ஒரு வரலாற்று நிலையினைப் பிரதிபலிக்கும் விகாரம் என்றும் கொள்ளலாம். ஒரு சொல்லானது விகுதி நிலைக்குத் தள்ளப்படுதல் என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகும். எனவேதான் விகுதியாக்க விகாரம் வரலாற்று விகாரம் என்றும் கொள்ளத்தக்கதாகின்றது. இவ் விகாரமானது *என்பது, ஆகும்* முதலான உள்வினைகளின் மீது செயல்படுவதில்லை.

11.2. விகுதியாக்க விகாரத்துக்குள்ளான உள்வினைகள் சொல்லமைப்பில் தம் தனித்தன்மையை இழந்து போவதும் உண்டு. இத்தகைய நிலையில் பிறிதோர் வடிவினதாகிய உள்வினையின் நிகழ்ச்சிக்கு வாய்ப்பு ஏற்படுகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் விளக்கலாம்.

---

8. மொழிக்கண்ணோட்டம் என்று இங்கு நாம் குறிப்பிடுவது கிளை மொழி அல்லது பேச்சுமொழிக் கூறுகளைச் செந்தமிழில் கலப்பதுபற்றிய போக்கினையேயாகும்.

34(அ) அமைச்சர் நேற்று இங்கு வந்தாற்போல் கேள்விப்பட்டேன்
(ஆ) அமைச்சர் நேற்று இங்கு வந்ததாகக் கேள்விப்பட்டேன்
(இ) அமைச்சர் நேற்று இங்கு வந்தார் என்று கேள்விப்பட்டேன்

35(அ) அவரைக் கேட்டாற் போல் சொல்லுங்கள்
(ஆ) அவரைக் கேட்டதாகச் சொல்லுங்கள்
(இ) அவரைக் கேட்டேன் என்று சொல்லுங்கள்

மேலே (34), (35) ஒவ்வொன்றிலும் நிகழும் மூன்று வாக்கிய அமைப்புக்களும் ஒரே பொருண்மையினவாகும். இவற்றுள் முதலில் (ஆ) பிரிவில் நிகழும் வாக்கிய அமைப்புக்கள் சிந்தனைக் குரியனவாகும். இவ்வமைப்புகளில் நிகழும் *வந்ததாக, கேட்டதாக* ஆகியவை *வந்தது+ஆக, கேட்டது+ஆக* என்ற அமைப்பினவாகும். இவ்வமைப்புக்களில் காணப்படும் ஆக என்னும் உறுப்பு *என்று, போல்*[9] ஆகியவற்றுடன் துணைநிலை வழக்கில் அமைந்து உள்வினையாகக் கொள்ளத்தக்கதாகின்றது. முதலில் நிகழ்த்திய ஆய்வின்படி *வந்தது, கேட்டது* ஆகியவற்றில் நிகழும் அதுவென் கிளவி உள்வினையாகக் கருதத்தக்கதாகும். ஆனால் இங்கே *வந்தது, கேட்டது* ஆகியவற்றையடுத்து ஆக என்னும் உள்வினை நிகழ்வதால், மேற்படி வினைகளில் நிகழும் அதுவென்கிளவி உள்வினைத் தன்மையை இழந்துவிடுகின்றது. இந்த நிலையில் இக்கிளவியைக் கிளவியாக்க விதியின் மூலம் வருவிக்க முடியாது. இந்த உண்மை அகரப்பிரிவில் உள்ள *வந்தாற்போல், கேட்டாற் போல்* ஆகிய வினையமைப்புக்களில் நிகழும் *ஆல்* என்பதற்கும் பொருந்தும்.[10] இவ்வினையமைப்புக்களில் *போல்* என்பது உள்வினையாதலின் அதன் முன்னர் நிகழும் ஆலென்கிளவி உள்வினையாகும் தகுதியை இழந்து விடுகின்றது. இந்த நிலையில் *போல், ஆக* இவற்றின் முன் நிகழும் *வந்தால்/கேட்டால், வந்தது/ கேட்டது* ஆகியவற்றில் அமைந்த *ஆல், அது* இரண்டையும் வெற்றுறுப்புக்களாகக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

---

9. எடுத்துக்காட்டுக்கள் (34), (35)-இல் அகரப்பிரிவில் நிகழும் *போல்* என்பது ஒப்பில் போலியாகும். இந்த உறுப்பு அகரப்பிரிவில் பயனிலை உறுப்பையடுத்து நிகழும் *என்று* என்னும் உள்வினையுடன் துணைநிலை வழக்கில் நிகழ்வதால் உள்வினையாகும் தகுதியைப் பெறுகின்றது. இதுபற்றிய கூடுதல் செய்திகள் தலைமைக் கட்டுரையில் பேசப்படும்.

10. *ஆல்* என்பது உள்வினையாகக் கொள்ளத்தக்கதேனும் இதுபற்றிய ஆய்வை நாம் இக்கட்டுரையில் மேற்கொள்ளவில்லை. ஆயினும் (34), (35)-இல் (ஆ) பிரிவில் நிகழும் *வந்தது, கேட்டது* என்பவற்றில் அமைந்த அதுவென்கிளவியுடன் மேற்படி *ஆல்* துணைநிலை வழக்கில் நிகழ்வதால் அடிப்படையில் பிந்தியதும் உள்வினையாகக் கொள்ளத் தக்கது என்பதைக் கருத்தில் கொள்வது இப்போதைக்குப் போதுமானது.

இதனின்றும், குறிப்பிட்ட சூழலில் உள்வினைகள் தம் பொருண்மையை இழந்து வெற்றுறுப்புக்களாகவும் நிகழற்பாலன என்பது தெளிவாகின்றது. இத்தகைய வெற்றுறுப்புக்கள் தாம் சார்ந்து நிற்கும் சொல்லமைப்புக்களுடன் ஒருங்கிணைந்து மொழியில் மாற்று வடிவங்களைத் தோற்றுவிக்கின்றன. இதன் விளைவாக *வந்தால்/வந்தது, கேட்டால்/கேட்டது* ஆகிய வினையமைப்புக்கள் முறையே *வந்து, கேட்டு* ஆகியவற்றின் திரிபுகளாகக் கருதப்படும். இத் திரிபுகள் பின்வரும் விதியின் மூலம் வருவிக்கற்பாலனவாகும்.

*(36)* [வந்து / கேட்டு] > [[வந்தால் / கேட்டால்] [வந்தது / கேட்டது]] / —[போல் / ஆக]

இத்தகைய ஆய்வில் *ஆல், அது* இரண்டும் தனியுறுப்புக்களாய்ச் சுட்டப்படுவதற்கு வாய்ப்பில்லை.

## 12.0. ஒப்புடைப் போலியின் முன் ஆறீற்று வினைகள்

ஆறீற்று வினைகள் அதுவீற்று வினைகளைப் போல், *போல்* அல்லது *போல* என்னும் ஒப்புடைப் போலியின் முன்னரும் நிகழற்பாலனவாகும். இத்தகைய நிலை இடைக்காலத் தமிழில் காணப்படுகின்றது. பின்வரும் அமைப்புக்களைப் போல் பழந்தமிழிலும், இக்காலத் தமிழிலும் காணப்படவில்லை.

*(37)* நிழல்நிமிர் நெடுமதி நிகரில் தீங்கதிர்ப்
பழனவெண் டாமரை பனிக்கு மாறு போல்
குழல்நிமிர் கிளவியார் கோலம் அஞ்சினார்
தொழநிமிர்ந் தமரராய்த் துறக்கம் ஆள்வரே

*(சீவகசிந்தாமணி. 1555)*

*(38)* பருதிமுன்னர் இருள் கெடுமாறு போல...

*(சீவகசிந்தாமணி. நச். 773)*

*(39)* கண்ணாடியில் அழகும் அழகின்மையும் தோன்றுமாறு போலக் களத்திலும் ஆண்மையும், ஆண்மையின்மையும் தோன்றலின் அதனை உவமித்தார் *(மேற்படி. 2299)*

*(40)* வானம்பாடி மேகத்துப் பிறந்த துளியையே நச்சிப் பாடுமாறுபோல... *(மேற்படி. 2897)*

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *செய்யுமாறு+போல்/போல* வாய்பாட்டு அமைப்புக்கள் *செய்வது+போல்/போல* என்ற வாய்பாட்டு

அமைப்புக்களின் பொருண்மையுடன் பொருந்துவனவாகும். இத்தகைய அமைப்புக்களில் *ஆறு, அது* ஆகியவை உள்வினை களாகக் கொள்ளத்தக்கனவா அல்லவா என்ற வினா எழுவது இயல்பே. *போல்/போல* என்னும் கிளவி மேற்படி எடுத்துக் காட்டுக்களில் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்து மாயினும் அடிப்படையில் அதுவும் ஓர் உள்வினையேயாகும். எடுத்துக் காட்டுக்கள் *(34), (35)*-இல் இதற்கான சான்று காணப்படுவதுடன் பின்வரும் எடுத்துக்காட்டுக்களும் இதனை உறுதிப்படுத்துகின்றன.

*(41)* தொண்டர் பரவச் சுடர்சென் றணவ
அண்டத் தமரும் அடிகள் ஊர்+போல்
வண்டல் அலையுள் கெண்டை மிளிர
கொண்டல் அதிரும் கூட லூரே
(திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி, 5.2.5)

*(42)* ....தன்தாள் அடைந்தார் கட்கு
வானம் காட்டுவர்+போல் வன்னி யூரரே
(அப்பர் தேவாரம் 5.26.3)

*(43)* தவழு மதிசேர் சடையாற் கிடம்+போல்
உகளும் திரைவாய் ஒற்றி யூரே (சுந்தரர் தேவாரம் 91.3)

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் பயனிலை உறுப்பையடுத்து நிகழும் *போல்* என்பதானது ஒப்பில் போலியாய் நின்று உள்வினையாகச் செயல்படுவதை அறியலாம். இதனைக் கருத்தில் கொண்டு *செய்யுமாறு+போல்* என்ற வாய்பாட்டு அமைப்புக் களில் நிகழும் *ஆறு* என்பதைச் சாரியையாகக் கொள்வது ஏற்புடையதாகின்றது.[11] *செய்வது+போல்* என்பதில் *செய்வது* என்ற அமைப்பில் நிகழும் *-அது* என்பதற்கும் இது பொருந்தும்.

### 13.0. இருவகைச் சூழலில் ஆறீற்று வினைப் பயனிலைகள்

ஆறீற்று வினைகள் பயனிலைச் செயற்பாட்டில் அமையும் நிலையினை முன்னர் அப்பர் பாடல்களில் கண்டோம். இக்காலத் தமிழில் இவ்வினைகள் எச்சவாக்கியங்களில் மட்டுமே நிகழும் நிலை காணப்படுகின்றது. பயனிலையாகச் செயல்படும்போதும், எச்சமாகச் செயல்படும்போதும் இவ்வினைகள் ஒரே வடிவின வாய் அமைகின்றன. இதனின்றும் ஓர் உண்மை புலனாகின்றது. ஆறீற்று வினைகளின் இலக்கணச் செயற்பாடு சொல்லியல் நிலையில் அல்லாமல் தொடரனியல் (Syntax) சூழலைக்

---

11. *போல்* என்னும் உள்வினையானது ஒப்புடைப் போலியாக அமையும் போதும் பயனிலை உறுப்பை அடுத்தே அதன் நிகழ்ச்சி போற்றப்படு கின்றது.

கொண்டே திட்டமிடப்படுகிறது என்பதே அவ்வுண்மையாகும். வாக்கிய எல்லையின் முன் நிகழும்போது பயனிலைச் செயற் பாட்டிலும், வாக்கிய எல்லையை இழக்கும்போது வினையடைத் தொடரனாகிய எச்சநிலையிலும் ஆறீற்று வினைகள் தம் இலக்கணச் செயற்பாட்டினை வரையறை செய்து கொள்கின்றன. படியீற்று வினைகளுக்கும் இது பொருந்தும். இவ்வாறே போல் வினையமைந்த வாக்கியங்கள் முற்று வாக்கியங்களாயும், எச்ச வாக்கியங்களாயும் அமைவது தொடரனியற் சூழலைப் பொறுத்ததாகும்.

### *14.0. இலக்கண உருபன்களாய் உள்வினைகள்*

*14.1.* உள்வினைகள் தமக்குரிய இயல்பான பொருண்மையை இழந்து வெற்றுருப்புக்களாய் அமையும் நிலை பற்றி முன்னர்ப் பேசப்பட்டது. இவ்வினைகள் அவ்வாறின்றி இலக்கணப் பொருண்மை ஏற்று இலக்கண உருபன்களாகவும் செயல்பட வல்லவை என்பதை எடுத்துக்காட்டுக்கள் (1), (2) ஆகியவற்றில் காணலாம். இவ்வெடுத்துக்காட்டுக்கள் மீண்டும் கீழே நினைவு கூரப்படுகின்றன.

*(45) முருகன் {பாடியவாறு / பாடியபடி} நடந்தான் (=(1))*

*(46) மாதவி {பாடியவாறு / பாடியபடி} மேகலையும் பாடினாள் (=(2))*

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *ஆறு, படி* இரண்டும் முந்தியதில் தொடர் நிகழ்வுப் பொருண்மையையும், பிந்தியதில் ஒப்புமைப் பொருண்மையையும் உணர்த்தி நிற்பதை அறியலாம். உள்வினைகள் இலக்கண உருபனாக மாறியதைத் தொடர்ந்து (45)-இல் உள்ளது போன்ற வாக்கிய அமைப்புக்களில் அமைந்த *செய்தவாறு, செய்தபடி* வினைகளின் அமைப்பிலும் மாறுதல் ஏற்படுகின்றது. *ஆறு, படி* இரண்டும் தொடர்நிகழ்வுப் பொருண்மையை உணர்த்துகையில் அவற்றின் முன் நிகழும் செய்த வாய்பாட்டு வினையானது செய்து வாய்பாட்டு வினையின் மாற்றுருபாகக் கொள்ளத்தக்கதாகின்றது. இவ்வாறே (46)-இல் அமைந்த வாக்கிய அமைப்புக்களில் *ஆறு, படி* இவற்றின் முன் நிகழும் செய்த வாய்பாட்டு வினைகளும் செய்து வாய்பாட்டு வினைகளின் மாற்று வடிவங்களாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. *செய்யுமாறு போல், செய்வது போல்* வாய்பாட்டு அமைப்புக் களில் *ஆறு, அது* இரண்டும் போல் என்பதன் முன் உள்வினைத் தன்மையை இழந்து வெற்றுருப்புக்களாய் அமையுமென்று முன்னர்க் கண்டோம். எடுத்துக்காட்டு (46)-இல் *பாடிய*

என்பதைப் *பாடி* என்பதன் மாற்று வடிவமாகக் கொள்வதால், *பாடிய* என்பதில் நிகழும் அகரக்கிளவி வெற்றுறுப்பாகின்றது. இதனின்றும் இந்த அகரக் கிளவியும் உள்வினையாக இருந்து வெற்றுறுப்பாக மாறியது என்று உய்த்துணர முடிகின்றது. இம்மாற்றமானது, செய்த வாய்பாட்டு வினைகளின் பின் நிகழும் *ஆறு, படி* இரண்டும் உள்வினைகளாய் நின்றதைத் தொடர்ந்து ஏற்பட்டதாகும்.[12] *ஆறு, படி* இரண்டும் ஒப்புமைப் பொருண்மையை உணர்த்தும் இலக்கண உருபன்களாகத் திரிந்த நிலையிலும் இந்த மாற்றம் தொடர்வதாகின்றது.

## பின்குறிப்பு

உரையாசிரியர்களின் தமிழில் பயனிலையாகச் செயல்படும் உறுப்பையடுத்து *என்றவாறு, என்றபடி* ஆகிய உள்வினைகளின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் இந்த வகையில் கருதற்பாலனவாகும்.

**என்றவாறு**

(1) மரபு எனினும் இலக்கணம் எனினும் எல்லாம்
ஒருபொருட் பன்மொழி என்றவாறு.
(இறையனார் அகப்பொருள். பக். 73)

(2) கற்பென்று சிறப்பிக்கப்பட்ட ஒழுக்கம் களவு
என்னும் ஒழுக்கத்தின் வழித்து என்றவாறு.
(மேற்படி, பக். 124)

(3) இவள் சொல்லியது தெளியுமாறு செவிலித்தாய்
சொல்லியது தெளியார் என்றவாறு (மேற்படி. பக். 153)

என்றபடி

(4) யாக்கை வினையின் காரியமாயும் வினைக்குக் காரண
மாயும் உள்ளது என்றபடி.
(மணிமேகலை 4-ஆம் காதை. பக். 61)

---

12. *செய்தவாறு* வாய்பாட்டு வினைகளைச் *செய்தவ்+ஆறு* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கொள்வது வரலாற்று நிலையில் பொருத்தமாகத் தோன்றுகிறது. இந்த அமைப்பில் நிகழும் *செய்தவ்* என்ற வாய்பாட்டுப் பொதுவினைமுற்றினைச் **செய்தம்* வாய்பாட்டு வினையாக மீட்டுரு வாக்கம் செய்ய வாய்ப்புள்ளது. இதன் அடிப்படையில் செய்தவாறு வாய்பாட்டு வினைகளை *செய்த+ஆறு* என்று பகுப்பாய்வு செய்வதைவிட *செய்தவ்+ஆறு* என்று பகுப்பாய்வு செய்வதே ஏற்புடையதாக அமையும். *செய்தவ்* வாய்பாட்டு வினைகளைச் செய்து வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களின் மாற்றுவடிவங்கள் (Alternants) எனக் கொள்வது பொருந்தும்.

(5) அறத்திற்கு மூலமாகிய நீ உதயகுமாரனை விரும்பின் நின்னியல்பு கந்தசாலியின் வித்துக் களர்நிலத்து வீழ்ந்தது போன்று பயனற்றுப் போம் என்றபடி

(மேற்படி 10-ஆம் காதை. பக். 134)

(6) தேவர்களும் மயங்கிச் செய்தன பல என்றபடி

(மேற்படி 18-ஆம் காதை. பக். 235)

இவ்வெடுத்துக்காட்டுக்களில் நிகழும் *என்றவாறு, என்றபடி* ஆகிய உள்வினைகளைச் சொல்லியல் நிலையல் பகுப்பாய்வுக்கு உட்படுத்த முடியாது.[13] இந்த உள்வினைகள் *ஆறு, படி* இவற்றுடன் துணைநிலை வழக்கில் அமைந்தவையாகும். *ஆறு, படி, அது* ஆகியவற்றை வருவிக்கும் கிளவியாக்க விதியே *என்றவாறு, என்றபடி* ஆகியவற்றையும் வருவிக்கும். இவையிரண்டும் இக்காலத் தமிழில் வழக்கற்றுப் போயின. பழந்தமிழிலும் இவற்றின் நிகழ்ச்சி காணப்படவில்லை. இடைக்காலத் தமிழில் கூட உரையாசிரியர் களின் மொழியில் மட்டுமே என்றவாறும், என்றபடியும் பயனிலை உறுப்புக்களையடுத்து நின்று உள்வினையாக நிகழும் போக்கு காணப்படுகின்றது. இதில் குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில் மேற்படி வடிவங்கள் உள்வினைத்தன்மையன என்ற உணர்வின்றியே உரையாசிரியர்களால் பயன்படுத்தப் படுகின்றன. பிற்கால உரையாசிரியர் மொழியிலும் ஒரு மரபாக இவற்றின் நிகழ்ச்சி அமைகிறது.



13. **என்பது** என்ற உள்வினைக்கு நிகராகத் தெலுங்கில் பயனிலை உறுப்பையடுத்து நிகழும் **அனமாட்அ** (anama:Ta) என்ற உறுப்புக்கும் இக்கூற்று பொருந்துமா என்பது ஆய்வுக்குரியது.

# 21. சுந்தரர் தமிழ் - ஒரு மேல் நோக்கு*

### 1.0 சமய இலக்கியம் ஓர் மொழியாவணம்

1.1. இலக்கியங்கள் எந்த வகையாக இருந்தாலும் அவை மொழியின் பழமைக் கூறுகளைப் போற்றுவதுடன் மொழியில் புதுமையாக்கங்களுக்கும் ஊற்றுக் கண்களாய் விளங்குகின்றன. இந்த வகையில் தமிழ்மொழி வரலாற்றில் சமய இலக்கியங்களுக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. தமிழின் வரலாற்றுத் தொடர்ச்சியினைக் காத்தளித்த பெருமையும் சிறப்பும் சமய இலக்கியங்களுக்கு உண்டு. கி.பி. ஆறாம் நூற்றாண்டு தொடங்கி, கி.பி. பத்தாம் நூற்றாண்டு அளவில் தமிழில் தோன்றிய சைவ வைணவச் சமய இலக்கியங்களாகிய தேவாரமும், திருவாசகமும், நாலாயிரத்திவ்யப் பிரபந்தமும் தமிழுக்குக் கேடயங்களாகத் திகழ்ந்தன என்றால் அது மிகையாகாது. இந்த இலக்கியங்கள் மட்டும் இடைக் காலத்தில் தோன்றாமற் போயிருந்தால் இன்றைய செந்தமிழானது மணிப்பிரவாள மொழியாக மாறியிருக்கும். இந்த வகையில் தமிழின் தனித்தன்மையைப் போற்றிய ஆழ்வார்களும், நாயன்மார்களும் செந்தமிழின் காவலர்களாகக் கருதத்தக்கவர்கள் ஆகின்றனர்.

1.2. சமய இலக்கியங்களில் காணப்படும் தமிழின் அமைப்பியல்புகள் சிந்தனைக்குச் சிறந்த விருந்தாகும். ஏழாம் திருமுறையாக வகுக்கப்பெற்றுள்ள சுந்தரமூர்த்தி நாயனாரின் தேவாரத் திருப்பதிகங்களில் காணப்படும் தமிழின் அமைப் பியல்புகளைச் சுருக்கமாகத் தொகுத்தளிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### 2.0. வடமொழி ஒலியன் தமிழ் வயமாதல்

சமய இலக்கியங்களில் வடசொற்கள் நுழைவதற்கு மிகுந்த வாய்ப்பிருந்தும் சமயக் குரவர்கள் விழிப்பாக இருந்து தமிழைக் காத்துள்ளனர். சுந்தரரின் திருப்பதிகங்களில் வடசொற்கள் தமிழின் இயல்புக்கேற்பத் திரிந்தமைவதைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்.

---

* 1989-ஆம் ஆண்டு புதுவை ஸ்ரீவிஜய கணபதி ஆலயக் குடமுழுக்கு விழா மலரில் வெளியான ஆய்வுரையின் செம்மை வடிவம்.

1 (அ) சீ பர்ப்பத மலை (802) 'ஸ்ரீ பர்வத மலை'
(ஆ) சித்தீச்சரம் (943) 'சித்தீஸ்வரம்'
(இ) திருநாகேச்சரம் (1006) 'திருநாகேஸ்வரம்'

## 3.0. சுந்தரர் போற்றிய சொற்களஞ்சியம்

3.1. இக்காலத் தமிழில் வழக்கற்றுப்போன அரிய தமிழ்ச் சொற்களைச் சுந்தரர் பாடல்களில் காணலாம்.

2 (அ) பீழ் (588) 'ஒடி, பிள'
(ஆ) நுனை (943) 'நுனி'
(இ) பொக்கம் (877) 'பொலிவு'
(ஈ) பாத்து (899) 'பகுத்து'
(உ) பையாடு அரவம் (531) 'பரந்து/விரிந்து ஆடும் அரவு'
(ஊ) பேழ்வாய் (537) 'பிளந்த/பெரிய வாய்'
(எ) எத்துக்கு (498) 'எதற்கு'
(ஏ) எற்று உளேன் (619) 'எதற்கு உளேன்'
(ஐ) பறையும் (592) 'கெடும், பறக்கும்' (*பறை > பற)

3.2. சொல்லியல் நிலையில் சுந்தரர் தமிழில் பின்வரும் சொல்லமைப்புகள் சருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

3 (அ) சிலர்கள் (606) 'சிலர்'
(ஆ) தெங்கங்கள் (721) 'தென்னைகள்'
(இ) விரும்பன் (494) 'விருப்பத்துக்குரியவன்'
(ஈ) நம்பன் (899) 'நம்மவன்'
(உ) நமரங்காள் (495) 'நம்மவர்களே' (விளி)
(ஊ) கடலங்கரை (336) 'கடற்கரை' (கடல்-அம்+கரை)
(எ) இரவத்து (33) 'இரவில்' (இரவு-அத்து)
(ஏ) உமர் (221) 'உம்மவர்கள்'
(ஐ) உரவம் (768) 'உரம்'

## 4.0. தன்மையும் முன்னிலையும்

4.1. முன்னிலை ஒருமைப் பெயரின் வேற்றுமைப் பகுதியாக **நுன்** என்ற வடிவம் சுந்தரர் பாடல்களில் பரவலாகக் காணப்படு கின்றது.

4 (அ) நுன்மலரடி யடைந்தேன் (665)
(ஆ) நுனையே நினைந்திருந்தேன் (209)
(இ) நுன்னடைந்தேன் (212)
(ஈ) நுனக்கு (667)
(உ) நுற்கு (234) 'உனக்கு' (*நுன்க்கு < *நுனக்கு < *நுன்-அம்+கு)

உன் என்ற ஆட்சியும் சுந்தரர் தமிழில் இல்லாமல் இல்லை.

(5) நானேல் உன்னடியே நினைந்தேன் (214)

4.2. தமிழில் *நும்* என்ற முன்னிலைப் பன்மையாகிய வேற்றுமைப் பகுதியின் ஆட்சி இயல்பான ஒன்றாம். *நுன்* அப்படி இல்லை. *நும்* என்ற வேற்றுமைப் பகுதியின் அண்மைத் தாக்கத்தால் (Contamination) *நின்* என்பது *நுன்* எனத் திரிந்துள்ளது.

### 5.0. முற்றே எச்சமாக

குறிப்பு வினைமுற்றுக்கள் குறிப்புப் பெயரெச்சங்களாக நிகழ்வதைச் சுந்தரர் பாடல்களில் காணலாம்.

6 (அ) உம செய்கைகள் எல்லாம் (20)
(ஆ) உன நாமங்கள் பரவி (675)
(இ) கள்ளி நீ செய்த தீமை யுள்ளன பாவமும் (355)
(ஈ) கொடியார் பலர் வேடர்கள் வாழுங்கரை (328)

### 6.0. ஏல் – ஒரு பிரிநிலைக் கிளவி

ஏல் என்னும் இடைச்சொல் பிரிநிலைப் பொருண்மையை உணர்த்துவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

7 (அ) நானேல் உன்னடியே நினைந்தேன் நினைதலுமே
ஊனேர் இவ்வுடலம் புகுந்தாய் (214)
(ஆ) கங்கையாளேல் வாய்திறவ்வாள்
கணபதியேல் வயிறுாரர்தி (43)
(இ) காடேல் மிக வலிது (323)
(ஈ) காணியேற் பெரிதுடையன் (342)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஏல்* என்பது இக்காலத் தமிழில் ஓ என்னும் பிரிநிலை இடைச்சொல்லுக்கு நிகராகும்.

### 7.0. செய்கு வாய்பாட்டுக் காலப்பகுதிகள்

7.1. நிகழ்வு அல்லது எதிர்வுத் தன்மையதாகிய வினைப்பகுதிகள் செய்கு வாய்ப்பாட்டினவாய்ச் சுந்தரர் தமிழில் காணப்படுகிறது.

8 (அ) அன்னை உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே (239)
(ஆ) எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே (518)
(இ) தருகோம் (561)

7.2. தமிழில் நிகழ்கால வினைகளின் வளர்ச்சியானது பொதுவாகச் செய்கு வாய்பாட்டுக் காலப் பகுதிகளின்மீது அமைந்த நிலையினை *நினைக்கேன், தருகேன், செய்கேன்* முதலான

வினைமுற்றுக்களின் வாயிலாக அறியலாம். ஆனால் இத்தகைய வினைமுற்றுக்கள் இக்காலத் தமிழில் நெல்லை-குமரி மாவட்டக் கிளைமொழி வழக்காகவே காணப்படுகின்றன. செந்தமிழில் இத்தகைய வழக்கு காணப்படவில்லை. ஆயினும் *நினைக்கு, தருகு, செய்கு* முதலான இறவாக்காலப் பகுதிகள் (Non Past Bases) இக்காலச் செந்தமிழ் வழக்கில் வினைப்பகுதிகளாக நிகழ்கின்றன. பழந்தமிழில் *தருகுவன், நினைக்குவன், செய்குவன்* முதலான வினைமுற்றுக்களில் *தருகு, நினைக்கு, செய்கு* முதலானவை வினைப்பகுதிகளாக நிகழ்வது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இக்காலத் தமிழில் இவற்றில் நிகழும் உகரம் ஊர்ந்த ககரமெய் பிறழ்பிரிப்பின் காரணமாக *கின்று, கிறு* ஆகிய கால இடைநிலைகளில் நிகழ்கின்றது.

### 8.0. கேளாகிய கள்

கள் ஈற்றுப் பன்மைப் பெயர்கள் விளியேற்கையில் காள் எனத் திரிதல் மரபு. எ-டு: கிளிகாள். சுந்தரர் தமிழில் அரிதாக இத்திரிபு **கேள்** என அமைகிறது.

*(9)* அடிகேள் *(4)* 'அடிகாள்'

### 9.0. கில் – துணை வினையாக

*9.1.* ஆற்றல் பொருண்மையை உணர்த்தும் கில் என்னும் குறிப்புவினைப் பகுதி செய வாய்பாட்டு வினைகளையடுத்துச் சுந்தரர் தமிழில் பயின்று வழங்குகின்றது. (காண்க: கில் என்பதன் தோற்றம் பற்றிய பிற்சேர்க்கை).

*10(1)(அ)* சேரகில்லார் *(192)*
*(ஆ)* ஈயகில்லால் *(79)*
*(இ)* ஆட்செயகில்லார் *(652)*
*(ஈ)* விரும்பகில்லேன் *(81)*
*(உ)* கொடுக்ககிற்றிலேன் *(620)*
*(ஊ)* இடகிலோம் *(364)*
*(எ)* ஆளகில்லீர் *(17)*
*(ஏ)* நீங்ககில்லான் *(691)*
*(ஐ)* ஒன்றிடவும் கில்லீர் *(48)*
*(ஒ)* விடவும் கில்லீர் *(17)*
*(ஓ)* மறக்ககில்லாமை *(377)*

*9.2.* செய்யிய வாய்பாட்டு வினையை அடுத்தும் கில் அருகிய வழக்காகக் காணப்படுகிறது.

*10 (2)* ஆவியவே கிற்றீர் *(19)*

9.3. வினைப்பகுதியை அடுத்தும் இதன் நிகழ்ச்சி காணப் படுகிறது.

10(3)(அ) ஆர்செய்கிற்பார் (653)
(ஆ) பெறுகிற்பார் (596)

## 10.0. பொதுவினை போற்றும் கவைத் தொடரன்

கவை வாக்கியங்களில் (**Cleft Sentences**) பாடிற்று வாய்பாட்டு வினைமுற்றுகள் சுந்தரர் தமிழில் பாடியது என்ற வாய்பாட்டுப் பொது வினைகளுக்கு (**Impersonal Verbs**) நிகராக வழங்குகின்றன.

11 (அ) இரவத்து இடுகாட்டு எரியாடிற்று என்னே (37)
(ஆ) சடைமேற் கங்கையாளை நீ சூடிற்று என்னே (36)

இந்த எடுத்துக்காட்டுகளில் நிகழும் *எரியாடிற்று என்னே, சூடிற்று என்னே* ஆகிய தொடர்கள் முறையே *எரியாடியது ஏன், சூடியது ஏன்* என்ற தொடர்களின் பொருண்மையோடு பொருந்தியனவாகும்.

## 11.0. பெறு என்னும் துணைவினை

இக்காலத் தமிழில் செயப்பாட்டு வினைகளில் *படு, பெறு* ஆகியவை உறழ்ந்து நிகழும் போக்கு காணப்படுகின்றது. எ-டு: *அளிக்கப்பட்ட பரிசு/அளிக்கப்பெற்ற பரிசு.* ஆனால் பெறு என்பது செயப்பாட்டு வினைகள் அல்லாத வினைகளிலும் நிகழ்வதை *வரப் பெற்றேன், கிடைக்கப் பெற்றேன்* முதலான வினைகளில் காணலாம். சுந்தரர் தமிழிலும் இத்தகைய நிலை காணப்படுவதைப் பின்வரும் எடுத்துக்காட்டின் மூலம் அறியலாம்.

(12) பரஞ்சோதி நின்நாமம் பயிலப்பெற்றேன் (29)

செயப்பாட்டு வினைகளில் *பெறு* என்னும் துணைவினையின் நிகழ்ச்சி பிந்திய வளர்ச்சியாகக் கருதத்தக்கதாகும். தொல்காப்பியம் உள்ளிட்ட பழந்தமிழில் இதன் நிகழ்ச்சி செயப்பாட்டு வினை யல்லாத வினைகளிலும் காணப்படுகின்றது. எ-டு. *மயங்கவும் பெறும்* (தொல். பொருள். இளம். 15), *படைக்கவும் பெறும்* (தொல். பொருள். இளம். 233), *நிற்கவும் பெறும்* (தொல். பொருள். இளம். 318), *கடியவும் பெறாஅ* (தொல்.பொருள்.இளம். 332), *முடியவும் பெறும்* (தொல். பொருள். இளம். 424), *புணர்க்கவும் பெறும்* (தொல்.பொருள்.இளம். 645), எ-டு: *காணவும்/புல்லவும்/அறியவும் பெற்றாயோ* (கலி. 123.8, 11, 14).

### 12.0. உறுப்பு இடம்பெயர்கள்

எதிர்கால எதிர்மறை வினைகளில் நிகழும் *மாட்டு* என்னும் துணைவினை இடப்புறமாக அகப்பெயர்ச்சிக்கு (Flip Movement) இலக்காவதைச் சுந்தரர் தமிழில் அருகிய வழக்காகக் காண முடிகிறது.

(13) மாட்டேன் மறுமையை நினைய (153)

இந்த வாக்கிய அமைப்பானது *மறுமையை நினைய மாட்டேன்* என்பதன் திரிபாகும். பிறிதொரு வாக்கிய அமைப்பிலும் இத்தகைய அகப்பெயர்ச்சியைச் சுந்தரர் தமிழில் காணமுடிகிறது.

(14) நிகழும் மாலவன் ஆயிர மலரால்
ஏத்துவான் ஒருநீள் மலர் குறைய (674)

இந்த வாக்கிய அமைப்பில் நிகழும் *மாலவன் ஆயிர மலரால் ஏத்துவான்* என்ற பெயர்த்தொடர் *ஆயிரமலரால் ஏத்தும் மாலவன்* என்பதன் திரிபாகும்.

### 13.0. அறியப்படாத உள்வினை

13.1. சுந்தரர் தமிழில் *ஆம்* (=ஆகும்), *போல், அது* ஆகியவை உள்வினைகளாக (Copula Verbs) நிகழும் போக்கு பரவலாகக் காணப்படுகிறது.

15(அ) நீரும் மலரும் நிலவும் சடைமேல்
ஊரும் மரவும் உடையான் இடமாம்
வாரும் மருவி மணிப்பொன் கொழித்துச்
சேருந் நறையூர்ச் சித்தீச் சரமே (943)

(ஆ) பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் அடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்துந் திரைவாய் ஒற்றி யூரே (924)

(இ) ஆதியன் ஆதிரையன் னயன் மாலறி தற்கரிய
சோதியன் சொற்பொருளாய்ச் சுருங்கா மறைநான் கினையும்
ஓதியன் உம்பர்தங்கோன் உலகத்தினுள் எவ்வுயிர்க்கும்
நாதியன் நம்பெருமான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே(985)

இறுதி இரண்டு எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *இடம் போல், நனிபள்ளியது* ஆகிய அமைப்புகளில் உள்ள *போல், அது* ஆகியவை 15(அ)-வில் உள்ள *இடமாம்* என்ற அமைப்பில் நிகழும் *ஆம்* (=ஆகும்) என்னும் உள்வினையுடன் பொருந்துவனவாகும். எனவே இவற்றை அசைநிலைகளாகக் கொள்வதற்கில்லை.

13.2. உள்வினைப் பயனிலை வாக்கியம் கவை வாக்கியமாக அமைகையில் உள்வினையானது *ஆவது* என்னும் பொதுவினை யாகத் திரியும் நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(16) நாயனார்க்கு இடமாவது, நந்திரு நாவலூரே (167)

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் கவை வாக்கியமானது *நந்திரு நாவலூர் நாயனார்க்கு இடமாகும்* என்ற நேர் வாக்கியத்தின் (Normal Sentence) திரிபாகக் கொள்ளத்தக்கதாகும்.

## 14.0. ஆறீற்றுப் பொதுவினைகள்

*செய்தவாறு, செய்யுமாறு* வாய்பாட்டுப் பொது வினைகள் முறையே *செய்தது, செய்வது* ஆகியவற்றுடன் பொருந்தியனவாய் நிகழ்வதைச் சுந்தரர் தமிழில் காணலாம்.

17(அ) கால காலனைக் கம்பன் எம்மானைக்
காணக் கண்ணடியேன் பெற்றவாறே (624)

(ஆ) வண்டுகாள் கொண்டல்காள் வார்மணற் குருகுகாள்
அண்டவா ணர்த்தொழும் அடிகள்ஆ ரூரரைக்
கண்டவாறும் காமத் தீக்கனன் றெரிந்து மெய்
உண்டவாறும் மிவை உணர்த்த வல்லீர்களே (377)

(18) கூடும்அன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்
ஆடும்அம் பொற்கழ லடிகள்ஆ ரூரரைப்
பாடுமா றும்பணிந் தேத்துமா றுங்கூடி
ஊடுமா றும்மிவை உணர்த்த வல்லீர்களே (387)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பெற்றவாறு, கண்டவாறு, உண்டவாறு, பாடுமாறு, ஏத்துமாறு, ஊடுமாறு* ஆகியவை முறையே *பெற்றது கண்டது, உண்டது, பாடுவது, ஏத்துவது, ஊடுவது* ஆகியவற்றுடன் பொருந்தும் பொதுவினைகள் (Impersonal verbs) ஆகும். இவற்றில் நிகழும் *ஆறு* என்பது தன்மைப் பொருண்மைத்தன்று. *செய்தது, செய்வது* ஆகிய வாய்பாட்டுப் பொதுவினைகளில் காணப்படும் *அது* என்பதன் மாற்றுருபாக (Allomorph) மேற்படி *ஆறு* கருதத்தக்கதாகும்.

## 15.0. சமயம் காத்த தமிழ்

15.1 செய்யும் வாய்பாட்டு வினை செய்வது வாய்பாட்டு வினையுடன் பொருந்தும் நிலையைப் பின்வரும் எடுத்துக் காட்டில் காணலாம்.

(19) பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூற் கோமாற் கிடமாம் (957)

இந்த எடுத்துக்காட்டில் குளிக்கும் என்பது குளிப்பது என்பதோடு பொருந்துவதாகும்.

15.2. சமய இலக்கியங்கள் மொழியைப் புரிந்துகொள்வதற்கு எந்த அளவுக்குத் துணைபுரியும் என்பதை மேலே நிகழ்த்திய சிற்றாய்வின் மூலம் நன்கு தெளியலாம். மொழியியல் கண்ணோட்டத்தில் சமய இலக்கியங்களை அணுகினால் ஆய்வாளர்களுக்கு அங்கே ஓர் அரும்பெரும் புதையலே கிடைக்க வாய்ப்புள்ளது.

## பிற்சேர்க்கை

1. தமிழில் *கில்* என்பது பிறழாய்வின் விளைவால் தோன்றி அமைந்த ஓர் வினையாகும். இதனை ஓர் இயல்பான வினையடியாகக் கருதமுடியாது. இதன் தோற்றம் ஆய்வுக்குரிய ஒன்றாகும். இதுபற்றிச் சுருக்கமாக இங்குக் குறிப்பிட்டாக வேண்டும்.

2. *பாடிற்று, பாடின்று* ஆகிய வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களில் நிகழும் *-இற்று, -இன்று* ஆகிய உறுப்புக்கள் முறையே *-இட்டு, -இண்டு* எனத் திரிந்து *பாடிட்டு, பாடிண்டு* ஆகிய வாய்பாட்டு வினையமைப்புகள் தோற்றம் கொண்டன.[1] வினையமைப்புகளின் வளர்ச்சி நிலையில் இது ஒரு கட்டமாகும். இவற்றுள் *பாடிட்டு* வாய்பாட்டு வினைகள் குமரித் தமிழில் பாடிவிட்டு, பாடிக்கொண்டு ஆகிய வாய்பாட்டு *வினைகளின் பொருண்மையனவாய் நிகழ்கின்றன.[2] பாடிண்டு (< பாடின்று) வாய்பாட்டு வினைகள் பார்ப்பனத் தமிழில் தற்சுட்டு (Reflexive) வினைப் பொருண்மைய உணர்த்தும் வினைகளாய் நிகழ்கின்றன.

3. பழந்தமிழில் *வருகுவர், கொடுக்குவர்* முதலான எதிர்கால வினைமுற்றுக்களின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. இவை செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளின்மீது தோன்றி நிகழ்வனவாகும். பாடிற்று வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களில் நிகழும் *-இற்று* என்பது செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளையடுத்து விரிவுபடுத்தப்பட்டு, *செய்கிற்று வாய்பாட்டு வினையமைப்புக்கள் தோன்றி நிகழ்வது வளர்ச்சி நிலையின் இரண்டாவது கட்டமாகும்.

---

1. *பாடிட்டு* என்பது பின்னர், *பாடிடு* என்ற வினைப்பகுதியின்மீது தோன்றியதாகக் கொள்ளப்பட்டது. *தொட்டு, நட்டு* ஆகிய வினையமைப்புக்கள் முறையே *தொடு, நடு* ஆகிய வினையடிகளின்மீது தோன்றி நிகழ்பவையாகும். *பாடிற்று* என்பதன் திரிபாகிய *பாடிட்டு* என்பதில் நிகழும் *இட்டு* என்பதும் *இடு* என்ற வினையடியின்மீது தோன்றியதாகப் பிறழ உணரப்பட்டது.

2. பாடிற்று வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களும் குமரித் தமிழில் இந்தப் பொருண்மைகளைக் கொண்டுள்ளன.

*செய்கிற்று வாய்பாட்டு வினைகளை ஒட்டு வினைகள் எனக் குறிப்பிடலாம். இயல்பான வினையடிகள்மீது அமையும் வினைத்திரிபுகளைப்போல் ஒட்டு வினைத்திரிபுகள் அமைய வேண்டும் என்ற நியதியில்லை. எடுத்துக்காட்டாக, பாடிற்று வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் இறப்பு வினைகளாகும். ஆனால் இந்தக் காலப்பொருண்மையைச் *செய்கிற்று வாய்பாட்டு வினைகளில் எதிர்பார்க்க முடியாது. இதனால்தான் செய்கிற்று வாய்பாட்டு வினையமைப்புக்கள் *செய்கு+இற்று* என்று ஆய்வு செய்யப்படாமல் *செய்+கிற்று* என்று பிறழாய்வு செய்யப்பட்டது. இதன் விளைவாகச் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகள் செய் வாய்பாட்டு வினையடிகளாக மறு ஆய்வு செய்யப்படுவதுடன் பிறழாய்வு செய்யப்பட்ட *-கிற்று* என்பது *கற்று, விற்று* ஆகிய வினையமைப்புப் பிரிவிற்கு உரியதாகக் கருதப்பட்டது. *விற்று, கற்று* ஆகியவை முறையே *வில், கல்* ஆகிய வினையடிகளின்மீது தோன்றி நிகழ்வதைப்போலவே *-கிற்று* என்பதும் வழக்கில் இல்லாத *கில்* என்ற ஓர் வினையடியின்மீது தோன்றி நிகழ்வதாகக் கொள்ளப்பட்டது.

4. *கில்* என்பது ஒரு செயற்கை வினையாகலின் இதனடியாக இறந்தகால வினையமைப்புக்கள் தோன்றி நிகழும் நிலை காணப்படவில்லை. எடுத்துக்காட்டாக, *கிற்றான், கிற்ற* ஆகிய வாய்பாட்டு வினையமைப்புக்களின் நிகழ்ச்சியைத் தமிழில் காணமுடியவில்லை. *சொல்லகிற்றாம்* (குறு. 368.4) என்பதில் நிகழும் *கிற்றாம்* என்பது எதிர்மறை வினையாகும். இதனை இறந்தகால வினையாகக் கொள்ளமுடியாது. *கில்* என்பது வினைசெய்யும் ஆற்றலை உணர்த்தும் வினையாகும். *கிற்பன், கில்லேன்* (நாலா. 2320) என்பவை எடுத்துக்காட்டாக 'என்னால் இயலும்', 'என்னால் இயலாது' என்ற பொருண்மையை உணர்த்துவனவாகும். அதனால்தான், *அருமழை தரவேண்டில் தருகிற்கும் பெருமையள்* (கலி. 39.6), *துறந்தானை, நாடித் தருகிற்பாய் ஆயின்* (கலி. 144.49) ஆகிய எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *தருகிற்கும், தருகிற்பாய்* ஆகிய வினையமைப்புக்கள் *தருகு* என்னும் வினைப் பகுதியின்மீது தோன்றியதாகக் கருதப்படாமல், *தரு* என்னும் முதன்மை (Principal/Main) வினையடியாகத் தோன்றியதாகக் கொள்ளப்பட்டு அதனையடுத்து நிகழும் *கிற்கும், கிற்பாய்* என்பவை *கில்* என்னும் துணை வினையின்மீது அமைந்த வினையமைப்புக்களாக இனங் காணப்படுகின்றன. *தருகிற்கும், தருகிற்பாய்* ஆகிய வினைகள் இதன் விளைவாக முறையே *தரு+கிற்கும்* (<கில்-க்க்+உம்). *தரு+கிற்பாய்* (<கில்-ப்ப்+ஆய்) என்ற அமைப்பினவாய்க் கருதப்படுகின்றன.

5. பழந்தமிழில் செய்கிற்கும், செய்கிற்பாய் முதலான வாய்பாட்டு வினையமைப்புக்களில் முதன்மை வினையானது செயவென் வாய்பாட்டில் அமையாமல் செய் வாய்பாட்டினதாகவே காணப் படுகிறது. எ-டு. *பிரிகிற்பவர்* (குறு. 22.2, நற். 391.98), *ஆற்றுகிற்பார்* (கலி. 108.18), *கூர்கிற்பான்* (கலி. 10.13,17), *துணிகிற்றல்* (கலி. 47.13), *காண்கிற்பின்* (குறள். 436), *இருக்கிற்போர்* (அகம். 387.20), *கரக்கிற்பென்* (கலி. 39.40), *கடக்கிற்பார்* (கலி. 81. 28), *காக்கிற்பான்* (கலி. 78.5), *பயக்கிற்பது* (கலி. 57.17), *மேய்க்கிற்பது* (கலி. 108.33). இந்த நிலையானது பின்பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் தொடர்கிறது. எ-டு. *காண்கிற்பார்* (நாலா. 2054), *வெல்கிற்பன்* (நாலா. 2750), *அறிகிற்போம்* (நாலா. 3228), *நினைகிற்பன்* (நாலா. 2628), *அணைகில்லாது* (நாலா. 2891), *இசைக்கிற்றிர்* (நாலா. 2470), *விதிக்கிற்றி* (நாலா. 504), *கற்கிற்கில்* (நாலா. 2380). பிறழாய்வின் விளைவாகச் சில அமைப்பியல் சிக்கல்களையும் எதிர்கொள்ள நேரிட்டுள்ளது. மெல்வினைகள் *கில்* என்பதன்முன் முதன்மை வினையாக நிகழ்கையில் ககரம் மிகுவதில்லை. எ-டு. *காண்கிற்பார்* < காண்+கிற்பார் (< கில்-ப்ப்+ஆர்). முதன்மை வினையானது வல்வினையாயின் *கில்* என்பதன்முன் ககரவொற்று மிகுவது தவிர்க்க முடியாத தாகின்றது. எ-டு. *அளக்கிற்பார்* (நாலா. 3710) < [அள-க்]+கிற்பார் (<கில்+ப்ப்+ஆர்).[3]

6. *செய்கிற்கும், செய்கிற்பாய்* முதலான வினைகளைச் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளை முதன்மை வினைகளாகக் கொண்டும் ஆராய வாய்ப்புள்ளது. இத்தகைய ஆய்வில் *கில்* என்பதற்குப் பதில் *இல்* என்பது வினைசெய்யும் ஆற்றல் வினையாக இனங்காணப்படும். இதனைத் தொடர்ந்து, செய்கிற்கும் வாய்பாட்டு வினைகள் *செய்கு+இற்கும்* (<இல்-க்க்+உம்) எனவும், செய்கிற்பாய் வாய்பாட்டு வினைகள் *செய்கு+இற்பாய்* (<இல்-ப்ப்+ஆய்) எனவும் ஆராயப்படும். இத்தகைய ஆய்வில் *அளக்கிற்பார்* என்ற வல்வினையமைப்பு எடுத்துக் காட்டாக, *அளக்கு+இற்பார்* (<இல்-ப்ப்+ஆர்) என்று ஆராயப் படும். இவ்வாறே விதிக்க வல்லாய் என்ற பொருண்மைத்தாகிய *விதிக்கிற்று* என்பதும் *விதிக்கு+இற்றி* (<இல்-த்த்+இ) என்ற அமைப்பினதாகக் கொள்ளப்படும். இங்கே ஓர் அடிப்படைக் கேள்விக்கு விடை கண்டாக வேண்டும். *செய்கிற்பாய்* என்ற

---

3. *கில்* என்ற வினை பிறழாய்வின் வழியாக இனங்காணப்பட்டதைத் தொடர்ந்து முதன்மை வினையின்றியும் அது வினைத்திரிபுகளை மேற்கொள்கிறது. கருதுக: *கிற்பன், கில்லேன்* (நாலா. 2320), (ஏத்தவும்) *கிற்கின்றிலேன்* (நாலா. 1032).

வினையமைப்பை எடுத்துக்காட்டாக, செய்கு வாய்பாட்டு முதன்மை வினைப்பகுதியின் மீது அமைந்ததாகக் கொள்ளாமல் செய்வாய்பாட்டு வினையடியின்மீது அமைந்ததாகக் கொள்ளப் பட்டது ஏன்? ஏனெனில் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகள் முக்கால வினைத்திரிபுக்கும் உரியதாக அமையாமல் எதிர்கால வினைத் திரிபில் மட்டுமே நிகழ்கின்றன. *கொடுக்குவர்* என்பதன் பகுதியாகிய *கொடுக்கு* என்பதன் அடியாக **கொடுக்கினான்* என்ற இறந்தகால வினையமைப்புக்கு வாய்ப்பில்லை. *செய்* என்னும் வினையடி அப்படியில்லை. கருதுக: *கொடுத்தான், கொடுக்கிறான், கொடுப்பான்*. எனவேதான் *செய்கிற்பாய்* என்பது *செய்+கிற்பாய்* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்படுகிறது.

7. இடைக்காலத் தமிழில் *கில்* என்பது முதன்மை வினையாக வினையடியை ஏற்பதுடன் (எ-டு. *தருகிற்பாய், காண்கிற்பார்*), செயவென் வாய்பாட்டு வடிவங்களை ஏற்கும் நிலையும் காணப் படுகிறது. எ-டு. *தரக்கிற்றி* (நாலா. 510), *வாழகில்லேன்* (நாலா. 508). இதனையே சுந்தரர் தமிழிலும் காண்கிறோம். (காண்க. 9.0. தலைமைக் கட்டுரை). இந்த மாற்றத்துக்கு என்ன காரணம்? *செய்யவல்ல, செய்யமாட்டு + ஏன்/ஓம்/ஆய்/ஈர்(கள்)/ஆன்/ஆள்/ஆர்(கள்)/ஆ-து/ஆ* (<ஆ+அ) ஆகிய வாய்பாட்டு வினை யமைப்புகள் செயவென் வினைகளையடுத்தே நிகழ்கின்றன. இவற்றில் நிகழும் *வல், மாட்டு* ஆகியவை ஆற்றல் பொருண்மை யனவாகும். எ-டு. *நம்மை மறந்தாரை நாம் மறக்கமாட்டேம்* (சிலம்பு. 7.32.4) (=நம்மை மறந்தாரை நம்மால் மறக்க இயல வில்லை), *நான் உன்னை நினைக்கமாட்டேன்* (பெரியாழ்வார், திருமொழி. 4.10.1) (=என்னால் உன்னை நினைக்க இயலவில்லை).[4] ஆற்றல் பொருண்மையினதாக இனங்காணப்பட்ட *கில்* என்ற வினையும் மேற்படி வாய்பாட்டு வினையமைப்புக்களின் தாக்கத்தால் செயவென் வாய்பாட்டு வடிவங்களைத் தொடர்ந்து நிகழலாயின.



---

4. *செய்யமாட்டு+ஏன்/ஓம்/ஆய்/ஈர்(கள்)/ஆன்/ஆள்/ஆர்(கள்)/ஆ-து/ஆ* (<ஆ+அ) வாய்பாட்டு வினைகள் பின்பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் இயலாமைப் பொருண்மையை உணர்த்தும் வினைகளாக நிகழ்ந்தன. இந்த வினைகள் இக்காலத் தமிழில் எதிர்கால எதிர்மறை வினைகளாகவும், மறுப்பு வினைகளாகவும் நிகழ்கின்றன.

# 22. வாழிய செந்தமிழ்

### *1.0 வியங்கோள்*

*1.1.* தெரிநிலை, குறிப்பு, பயன்கோள் (Modal) என்ற மூவகை வினைகளுள் வியங்கோள் வினை பயன்கோள் வினைப்பிரிவின தாகும். பயன்கோள் வினைகள் பயனிலையாக மட்டுமே செயல் படும். இவை எச்சவினைகளாகச் செயல்படுவதில்லை. இங்கே மேற்கொள்ளப்பட்டுள்ள ஆய்வானது பயன்கோள் வினைப் பிரிவைச் சேர்ந்த வியங்கோள் வினையைப் பற்றியதாகும். *வியம்* என்பது *ஏவல்* என்னும் பொருளது, *வினைகடை கூட்ட வியங் கொண்டான்* (சிலம்பு. 9.78), *வியம்படு தானை* (சிலம்பு. 26.4) ஆகியவற்றில் இதன் நிகழ்ச்சியைக் காணலாம். *வியவர்* (சீ.சி. 601) என்பது *ஏவல் செய்வார்* என்னும் பொருண்மைத்தாகும். வியங்கோள் வினைகளைப் பற்றிய விரிவான ஒரு பன்முக நுண்ணாய்வினை வேங்கடராஜுலு ரெட்டியார் (1963: 49-85) நிகழ்த்தியுள்ளார். இந்த ஆய்வில் தமிழ் மரபிலக்கணிகளின் வியங்கோள் பற்றிய சிந்தனைகள் மட்டுமின்றித் தெலுங்கு, கன்னடம், மலயாளம் ஆகிய பிற திராவிட மொழிகளில் நிகழும் வியங்கோள் வினைகளைத் தமிழோடு ஒப்பிட்டும் பேசப்பட் டுள்ளது. மொழி தொடர்பான மரபிலக்கண ஆய்வுக்கும் மொழியியல் ஆய்வுக்கும் வேறுபாடு உண்டு. இதனை வேங்கட ராஜுலு ரெட்டியார் (1963: 90) இவ்வாறு குறிப்பிடுவார்: "இலக்கண நூலார் சொற்கள் வழங்குமாற்றை நோக்கிக் கூறும் இயல்பினரேயன்றி, சொற்களின் தொல்லுருவத்தையும், அவற்றின் உண்மைத் தன்மையையும் ஆராய்ந்து கூறுதலை மேற்கொள்வா ரல்லர், அப்பணியை மொழி நூலார் செய்தற்குரியர்." இந்த அடிப்படையில் அமைந்த வியங்கோள் வினை பற்றிய அவரது ஆய்வின் தொடர்ச்சியாகவே இந்த ஆய்வைக் கருதவேண்டும்.

*1.2.* வாழிய செந்தமிழ் என்பது *செந்தமிழ்* என்பதையும், வாழ்க நற்றமிழர் என்பது *நற்றமிழர்* என்பதையும் எழுவாயாகக் கொண்ட வியங்கோள் வாக்கியங்களாகும். பாரதியின் இந்த இரண்டு வாக்கியங்களிலும் *வாழிய* என்பதும் *வாழ்க* என்பதும் பயனிலையாக நிகழும் வியங்கோள் வினைகளாகும். இவற்றுள்

*வாழிய* என்பது *வாழ்* என்பதன் அடியாகவும் *வாழ்க* என்பது *வாழ்கு* என்பதன் அடியாகவும் தோன்றி நிகழ்பவையாகும். பதப் புணர்ச்சியில் கசதப ஆகிய வலி முதல் வருமொழிகளின்முன் அகரவீற்று நிலைமொழியாகிய "ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவி" (எழுத்து. இளம். 211) வல்லொற்று மிகாது இயல்பாக நிகழும் என்ற தொல்காப்பியக் குறிப்பானது செய்க வாய்பாட்டு வினைகளைப் பற்றியதாகும். ஆயினும் இந்த வாய்பாட்டு வினைகளின் அமைப்பைத் தொல்காப்பியர் *செய்கு+அ* எனக் கொள்கிறாரா அல்லது *செய்+க* எனக் கருதுகிறாரா என்பது தெளிவாகவில்லை. செய்கு வாய்பாட்டினதாகிய *வாழ்கு* என்பது வினைப்பகுதியா அல்லது இறவாக்காலப் பொது வினைமுற்றா என்பதும் ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

1.3. *வாழிய, வாழ்க* இரண்டனுள் *வாழிய* என்பது இயல்பாக அமைந்த வியங்கோள் வினையன்று. இதன் தோற்றம்பற்றி ஆராய்வதற்குமுன் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

> 1(1) **நீர்வார் கண்ணேம் தொழுதுநிற் பழிச்சிச்**
> **சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே** (புறம். 113.6,7)
>
> (2) **வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி**
> **வாழிய வாழியவே** (சுப்ரமணிய பாரதியார். 1987: 745)

முதல் எடுத்துக்காட்டில் நிகழும் *வாழியோ* என்பதன் அடிநிலை வடிவம் **வாழியவ்* என்பதாகும். இதில் ஈற்றில் நிகழும் *-அவ்* என்பது ஓவெனத் திரிந்து *வாழியோ* என்ற வடிவம் தோன்றி அமைகிறது. **வாழியவ்* என்பதன் நிகழ்ச்சியை இரண்டாம் எடுத்துக்காட்டில் நிகழும் *வாழியவே* (<வாழியவ்+ஏ) என்பதில் காணலாம். *வாழியவ், வாழிய* இரண்டும் எழுத்தியற் சூழல்களால் (Phonological Contexts) கட்டுண்டவையாகும். உயிர் முதலாகிய வருமொழியின்முன் *வாழியவ்* என்பதும் பிற வருமொழிகளின் முன்பும் தனித்து நிகழ்கையிலும் *வாழிய* என்பதும் நிகழ்கின்றன. இவற்றின் தொல் அடிநிலை வடிவம் **வாழவ்* என்பதாகும். **வாழம்* என்பதன் திரிபாகிய **வாழவ்* என்பது நேரடியாக *வாழியவ்* எனத் திரியவில்லை. வல்வினை சார்ந்த **செயவ்* (எ-டு. **குடிய்க்கவ்*, **துடைய்க்கவ்*, **மேய்க்கவ்*) வாய்பாட்டு வினைகள் செயியவ் (எ-டு. *மேய்க்கவ் > மேய்க்க்யவ் > மேய்க்கியவ்*) வாய்பாட்டினவாகத் திரிகின்றன. பின்னர் இந்தத் திரிபின் தாக்கம் மெல்வினை சார்ந்த வினைகளின் மீதும் படர்கிறது. இதன் விளைவாக **வாழவ்* என்னும் செயல் வாய்பாட்டு வினை *வாழியவ்* என அமைந்து பின்னர் *வாழிய* என்ற செய்யிய வாய்பாட்டினதாக நிகழ்கிறது.

மேலே இரண்டாம் எடுத்துக்காட்டில் *வாழியவ்* என்பது ஏயின் முன்பும் *வாழிய* என்பது மாறுபட்ட எழுத்தியற் சூழலிலும் நிகழ்வதைக் காணலாம்.

1.4. *வாழி* என்றொரு வியங்கோள் வினையின் நிகழ்ச்சியும் பழந்தமிழில் காணப்படுகிறது. இதனை *வாழிய* என்பதன் வழித் தோன்றலாகத் தொல்காப்பியர் (எழுத்து. இளம். 212) கருதுவார். பின்னர் வந்த தெ.பொ. மீனாட்சிசுந்தரனும் (T.P. Meenakshi sundaran. 1965:84) இதனை வழிமொழிவார். *வாழிய* என்பதன் இறுதி அகரம் கெட்டு *வாழி* என்பது தோற்றம் கொண்டது என்ற கருதுகோள் நமக்கு உடன்பாடில்லை. செயி வாய்பாட்டில் அமைந்து தமிழில் வழங்கும் ஒரே வினை *வாழி* என்பதுதான். இக்காலத் தமிழில் முன்னிலை ஒருமைக்குரிய வியங்கோள் வினையாக நிகழும் *வாழி* என்பது **வாழிம்* என்ற *செயிம் வாய்பாட்டுத் தொல்வினையின் எச்சமாகக் கருதத்தக்கதாகும். செயிம், செயிலிம் (<செய்-அல்+இம்) வாய்பாட்டு உடன்பாட்டு மற்றும் எதிர்மறை வினைகள் பழங்கன்னடத்தில் பன்மை ஏவலாக நிகழ்கின்றன (B. Ramachandra Rao, 1972:134.). எ-டு. *ஓடிம்* 'ஓடுங்கள்', *கேளிம்* 'கேளுங்கள்', *ஓடலிம்* 'ஓடாதீர்', *கேளலிம்* 'கேளாதீர்'. இந்த வினைகள் இக்காலக் கன்னடத்தில் ஈற்று மகரத்தையிழந்த பன்மை ஏவலாக நிகழ்கின்றன. எ-டு. *ஓடி, கேளி. வாழி* (<*வாழிம்) என்பது ஏவலாக நிகழாமல் தமிழில் வியங்கோள் வினையாக நிகழ்கிறது. ஆழ்வார்களைப் பற்றிய போற்றிப் பாடல்களில் *வாழியே* என்றொரு படர்க்கையிடத்து வியங்கோள் வினையின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. இதன் அடிநிலை வடிவம் ஆய்வுக்குரியது.

1.5 *வாழ்க* என்னும் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினை *வாழ்கவ்* என உயிர் முதலாகிய வருமொழியின்முன் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

(2) நெடுஞ்சேர லாதன் வாழ்கவவன் கண்ணி (பதி. 20:5)

இந்த எடுத்துக்காட்டில் *வாழ்கவ்* என்பது *அவன்* என்னும் வருமொழியின்முன் நிகழ்கிறது. எடுத்துக்காட்டு 1(2)-இல் நிகழும் *வாழ்க* என்பது மெய்ம்முதலாகிய வருமொழியின்முன் நிகழ்கின்றது. மரபிலக்கணிகள் *வாழ்கவ்* என்பதில் நிகழும் ஈற்று வகரத்தை உடம்படுமெய்யாகக் கருதுவர். உடம்படுமெய் என்பது வரலாற்று நிலையில் சொல்லின் ஈற்றில் நிகழ்ந்து எடுத் தொலிக்கப்படாத நிலையில் கெட்டு, பின்னர்ப் புணர்ச்சியின் வாயிலாக மீட்கப்படும் ஓர் மெய்யொலியனாகும்.

## 2.0. வியங்கோள் நிலைக்களன்கள்

2.1. எட்டுவகை விரவு வினைகளுள் வியங்கோள் வினையையும் ஒன்றாகக் கருதும் தொல்காப்பியர் அவ்வினையானது படர்க்கை யிடத்தில் மட்டும் நிகழும் என வரையறுக்கிறார். கருதுக:

(3) **அவற்றுள்**
**முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்**
**மன்னா தாகும் வியங்கோட் கிளவி**

(தொல். சொல். சேனா. 226)

வியங்கோட் கிளவியானது தன்மையிடத்தும் முன்னிலையிடத்தும் பயனிலையாக நிகழாது எனத் தொல்காப்பியர் குறிப்பிட்டாலும் நிலைமை வேறாகவே உள்ளது. சேனாவரையரின் கூற்று இந்த வகையில் கருதற்பாலதாகும். "ஆயீரிடத்தொடு கொள்ளாதென்னாது மன்னாதாகும் என்றதனான் அவ்விடத்தொடு சிறுபான்மை வருதல் கொள்க. மன்னுதல் பெரும்பான்மையும் நிகழ்தல். சிறுபான்மை வருவன, நீ வாழ்க என்னும் வாழ்த்துதற் பொருண்மைக் கண்ணும், யானு நின்னொடு உடன் உறைக என்னும் வேண்டிக் கோடற் பொருண்மைக்கண்ணும் வருவனயாம். கடாவுக பாக நின் கால்வல் நெடுந்தேர் என்பதும் வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் வந்ததாம்" (தொல்.சொல்.சேனா. 226. உரை).

2.2. கால இடைநிலைகளைச் சுட்டாததைப்போலவே தொல்காப்பியர் வியங்கோள் விகுதிகளைப் பற்றியும் ஏதும் குறிப்பிட வில்லை. சேனாவரையர் இதற்குப் பின்வருமாறு அமைதி கூறுவார். "அஃதேல் வியங்கோளீறு கூறாராயிற்றென்னையெனின் ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும் (எழுத்து. 210) என அகரவீற்றுள் எடுத்தலாற்பொருந்திய மெய்யூர்ந்து அகரவீறாய் வருதலும், *செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்* (சொல். 13) எனவும், *சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்* (சொல். 463) எனவும், *மறைக்குங் காலை மரீஇய தொராஅல்* (சொல். 443) எனவும் உடம்பொடு புணர்த்தலான் அல்லீறாய் வருதலும் ஆலீறாய் வருதலும் பெறுதலின் வியங்கோளீறுங் கூறினாரெனவே படும். பிறவும் உளவேற்கொள்க" (தொல். சொல். சேனா. 226. உரை). இந்தக் கூற்று தற்கால இலக்கண விளக்க மரபுக்கு இசைந்ததாக இல்லை. இலக்கண விளக்கத்தில் இலக்கணிகள் கூறாமல் விடுபட்டுப்போன செய்திகளை உடம்பொடு புணர்த்தல் என்னும் உத்தியைக்கொண்டு அமைதிகூற முற்படுவது மரபுவழிப் புலமைக்கு ஏற்புடையதாகத் தோன்றுகிறது. ஓர் இலக்கண

விளக்கக் கோட்பாட்டை மதிப்பீடு செய்வதற்கு இந்த உத்தி ஏற்புடையதாகத் தோன்றவில்லை.

2.3 பழந்தமிழில் வியங்கோள் வினைகள் செயல், செய்க, செய்யிய, செய்யியர், செயி (எ-டு. வாழி) எனப் பல வாய்பாட்டின வாக நிகழ்கின்றன. இவற்றுள் எந்த வாய்பாட்டு வியங்கோள் வினைகள் படர்க்கையில் மட்டுமே நிகழும் என்பதைத் தொல்காப்பியர் வெளிப்படையாகச் சுட்டவில்லை. பழந்தமிழில் படர்க்கை தவிர, தன்மை முன்னிலையிடத்தும் வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகிறது. கருதுக:

4(1) **குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக** (புறம். 72. 12)

(2) **விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற**
**உள்ளேன் வாழியர் யான்** (புறம். 365. 8, 9)

(3) **அல்லா கியர்யான் வாழு நாளே** (புறம். 232.2)

(4) **உரவோர் உரவோர் ஆக**
**மடவம் ஆக மடந்தை நாமே** (குறு. 20.4)

(5) பெற்றோற் பெட்கும்பிணையை யாகென (**அகம். 86.4**)

(6) **இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயா கியரென் கணவனை**
**யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே** (குறு. 49. 3-5)

(7) **பிள்ளை வெருகிற் கல்கிரை யாகிக்**
**கடுநவைப் படீஇயரோ நீயே** (குறு. 107. 4, 5)

(8) **சிறுவெள் ளருவிப் பெருங்க னாடனை**
**நீவா ழியர்நின் றந்தை**
**தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே (புறம். 137. 13-15)**

(9) **பொய்யா கியரோ பொய்யா கியரோ**
**வைகுறு விடியல் இயம்பிய குரலே (புறம். 233. 1, 8)**

ஈற்றில் நிகழும் எடுத்துக்காட்டில் *குரல்* என்பது எழுவாயாகவும் *ஆகியர்* என்பது பயனிலையாகவும் நிகழ்கின்றன. தன்மை யிடத்தும் முன்னிலையிடத்தும் பழந்தமிழில் வியங்கோள் வினையின் நிகழ்ச்சியைக் கருதுகையில் வியங்கோள் மீதான தொல்காப்பியத் தரவு ஒன்று, முழுமையற்றதாக இருக்கவேண்டும்; அல்லது வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சிக் கட்டுப்பாடு நெகிழ்வுற்று, தொல்காப்பியருக்குப்பின் படர்க்கை தவிர ஏனைய ஈரிடத்தும் நிகழும் நிலை ஏற்பட்டிருக்க வேண்டும். இந்த

வகையில் தன்மை, முன்னிலை ஈரிடத்தும் வியங்கோள் வினைகள் நிகழும் பழந்தமிழ்ப் பாடல்கள் தொல்காப்பியர் காலத்துக்குப் பிறகு தோன்றியிருக்க வேண்டும். தொல்காப்பியரின் வியங்கோள் மீதான தரவு முழுமையற்ற ஒன்றாகவே கருதத்தோன்றுகிறது. காரணம், செய்யிய, செய்யியர் வாய்பாட்டு வினைகளின் எதிர்வெச்சச் செயல்பாட்டினை இனங்கண்ட தொல்காப்பியர்க்கு அவற்றின் வியங்கோட் பயனிலைச் செயற்பாட்டின் நிலைக்களன் களைக் கண்டறிய முடியாமற்போனது போதிய தரவு இந்த வகையில் திரட்டப்படவில்லை என்பதையே காட்டுவதாக உள்ளது. இது தொடர்பான தெ.பொ.மீனாட்சிசுந்தரனின் (T.P. Meenakshi sundaran, 1965:30) கருதுகோள் கருதற்பாலதாகும். "Tolka:ppiyar states that implied command (i.e. optative, supplied) can occur only in the third person. But this is only a restriction because of the old form surviving only in such cases in the time of Tolka:ppiyar's literary language. There is reason to believe that in another dialect there was no such restriction and that therefore at a later stage when the usage from that dialect got into the literary stream. Tolka:ppiyar's restriction no longer held good."

2.4. வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சிக்களங்கள் நன்னூலார் காலத்தில் மறுவரையறை செய்யப்படுகின்றன.

> (5) தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
> உண்டீ ரெச்ச மிருதிணைப் பொதுவினை (நன். 330)

இருதிணைக்கும் உரிய பொது வினைகளுள் வியங்கோள் வினையும் இடம்பெறும் நிலையைக் குறிப்பிடும் நன்னூலார் வியங்கோள் விகுதிகளையும் குறிப்பிடத் தவறவில்லை.

> (6) கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
> இயலு மிடம்பா லெங்கு மென்ப (நன். 338)

இந்த நூற்பா வியங்கோள் விகுதிகளாகக் *க* (செய்க), *ய* (செய்யிய), *ரகரவொற்று* (செய்யியர்) ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது. இவற்றைத் தவிர உரையிற்கோடல் என்னும் உத்தியால் *அ, அல், தல்* ஆகியவற்றையும் வியங்கோள் விகுதிகளாக உரையாசிரியர் குறிப்பிடுகிறார். எ-டு. *நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க, மக்கட் பதடியெனல், மனத்துக்கண் மாசிலன் ஆதல்.*

2.5. ஏவல், வியங்கோள் இரண்டும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களாகும். ஏவல் முன்னிலைக்கு மட்டுமே உரியதாகும். வியங்கோள் மூவிடத்தும் நிகழவல்லது. ஆயினும் வியங்கோள் வினை வடிவங்கள் நிகழ்ச்சிக்களங்களை வரையறுப்பனவாகவும்

அமைகின்றன. இதுபற்றிப் பின்னர்ப் பேசப்படும். ஏவலுக்கும் வியங்கோளுக்கும் உள்ள ஒற்றுமை யாதெனில் இரண்டும் எதிர் காலக் குறிப்பினைக் கொண்டவையாகும். செய்கமா வாய்பாட்டு வினைகளில் மாவென் கிளவியை வியங்கோள் அசைச்சொல்லாகக் குறிப்பிடும் தொல்காப்பியர் (சொல். சேனா. 273), *மியா* (கேண்மியா), *இக* (சென்றிக), *மோ* (செய்மோ), *மதி* (செய்மதி), *இகும்* (செய்திகும்), *சின்* (செய்திசின்) ஆகியவற்றை முன்னிலை அசைச் சொற்களாக இனங்காண்பார். வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சிக் களங்களுள் முன்னிலையும் அடங்குமாகலின் முன்னிலை அசைச்சொற்களாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவனவற்றை ஏவல் குறித்த அசைச்சொற்களாக மட்டுமே கருதிவிட முடியாது. *இக, மோ, மதி* ஆகியவற்றை முன்னிலை சார்ந்த வியங்கோட் பண்பினவாகிய வினைகளில் நிகழ்வனவாகக் கொள்ளமுடியும் என்றே தோன்றுகிறது. இவற்றைத் தவிரப் பழந்தமிழில் நிகழும் செய்மே வாய்பாட்டு வினைகளையும் முன்னிலையில் நிகழும் வியங்கோள் வினைகளாகக் கருதமுடியும். இதேபோல் இக்காலத் தமிழில் முன்னிலையில் நிகழும் செய்யவும் வாய்பாட்டு வினைகளையும், படர்க்கையில் நிகழும் செய்யட்டும் வாய்பாட்டு வினைகளையும் வியங்கோள் வரம்புக்குள் கொணரமுடியும். தமிழில் காணப்படும் பல்வேறு வாய்பாட்டு வியங்கோள் வினைகள் ஒவ்வொன்றும் சுருக்கமாக இனி ஆராயப்படும்.

### 3.0. செயல் வாய்பாட்டு வியங்கோள்

3.1. செயல் (<செய்+அல்) வாய்பாட்டு இறவாக்கால வினை முற்றுக்கள் வேற்றுமையேற்கும் தொழிற்பெயராகவும் பெயரெச்ச மாக நிகழும் செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகராகவும் வியங்கோள் வினைகளாகவும் பழந்தமிழிலும் பின்பழந்தமிழிலும் நிகழ்கின்றன. *அஞ்சல் ஓம்பு* (அகம். 313.1), *பிறவாழி நீந்தல் அரிது* (குறள். 8) ஆகியவற்றில் நிகழும் *அஞ்சல், நீந்தல்* ஆகியவை இறவாக்காலத் தொழிற்பெயர்களாகும். *சார்ந்து வரல் மரபு* (தொல். எழுத்து. 01), *தெரிந்து செயல் வகை* (குறள். 47-ஆம் அதிகாரத் தலைப்பு), *விரைசெலல் இளையர்* (சீ.சி. 601) ஆகிய பெயரெச்சத் தொடர்களில் நிகழும் *வரல், செயல், செலல்* ஆகியவை செய்யும் வாய்பாட்டுப் பெயரெச்ச வினைகளுக்கு நிகரானவையாகும். செயல் வாய்பாட்டு வினைகளின் இலக்கணச் செயற்பாட்டினைத் தொடரனியற் சூழல் (Syntactic Context) கட்டுப் படுத்துகிறது. செயல் வாய்பாட்டு வினைகள் பயனிலையாக நிகழ்கையில் செய்யும் வாய்பாட்டுப் பொது முற்றுவினைகளுக்கு (Impersonal Finite Verbs) நிகராகவும் வியங்கோள் வினைகளாகவும் இனங்காணப்படும். செயல்வாய்பாட்டு வினைகள் செய்யும்

வாய்பாட்டு வினைகளுக்கு நிகரான பயனிலைச் செயற்பாட்டில் நிகழவில்லையெனில் அவை பெயரெச்சச் செயற்பாட்டினவாக நிகழ வாய்ப்பில்லை. *செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்* (தொல். சொல். சேனா. 13), *வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும், துணைவலியும் தூக்கிச் செயல்* (குறள். 471) ஆகிய எடுத்துக் காட்டுக்களில் நிகழும் *ஓம்பல், செயல்* இரண்டும் வியங்கோள் வினைகளாகும். வியங்கோள் வினைகளாக நிகழும் செயல் வாய்பாட்டு வினைகள் *செய்யவேண்டும்* என்ற வாய்பாட்டுத் தொடர்களின் பொருண்மையினவாகும். இந்தக் கூற்று செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளுக்கும் பொருந்தும்.

3.2. பின் பழந்தமிழிலும் பிந்திய தமிழிலும் செயேல் வாய்பாட்டில் அமைந்த முன்னிலை ஒருமை ஏவல் கண்ணிய உடன்பாட்டு வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. எ-டு. *சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை* (சிலம்பு. 29.16.5), *செப்பேல்* (5), *திறவேல்* (7), *அருளேல்* (8), *பாடேல்* (15) ஆகியவை ஆண்டாளின் திருப்பாவையில் நிகழ்வனவாகும். திருப்பாவையில் நிகழும் *நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்* (3), *நாங்களும், மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்* (4), *நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்* (9) ஆகியவற்றில் காணப்படும் *நிறைந்தேல், மகிழ்ந்தேல், நவின்றேல்* ஆகிய செய்தேல் வாய்பாட்டு வினைகளின் பொருண்மை விளக்கம் தெளிவின்றி உள்ளது. இவற்றில் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகளை இறந்தகால வினைகளாகக் கருத முடியவில்லை. மாறாக, செய்யுந்து வாய்பாட்டு இறவாக்கால வினைகளின் ஒடுக்கமாகிய செய்து வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினைகளாகக் கொண்டால் மேற்படி செய்தேல் வாய்பாட்டு வினைகளை முறையே *நிறைவதாக, மகிழ்வோமாக, நவில்வோமாக* என விளக்க முடியும். இது மேலும் ஆய்வுக்குரியது.

### 4.0. செய்தல் வியங்கோள்

4.1. செய்தல் வாய்பாட்டு வினைகள் பழந்தமிழில் வியங்கோட் பயனிலையாக நிகழும் நிலை காணப்படுகின்றது. கருதுக:

**7(1)** இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்
(தொல்.சொல். சேனா. 19)

(2) அறவை யாயின் நினதெனத் திறத்தல்
மறவை யாயின் போரொடு திறத்தல் (புறம். 44. 11, 12)

(3) அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்
(தொல்.சொல்.சேனா. 271)

***(4) பாங்குற உணர்தல் என்மனார் புலவர்***
*(தொல்.சொல்.சேனா. 396)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *கிளத்தல், திறத்தல், அறிதல், உணர்தல்* ஆகியவை வியங்கோள் வினைகளாகக் கருதப் பட்டாலும் தொல்காப்பியரின் படர்க்கை வரையறை 7(2)-இல் நிகழும் *திறத்தல்* என்பதன் நிகழ்ச்சியில் போற்றப்படவில்லை. இந்த எடுத்துக்காட்டில் *திறத்தல்* என்பது முன்னிலை எழுவாயைக் கொண்டுள்ளது.

***(8) அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்***
*(தொல். சொல். சேனா. 442)*

இந்த எடுத்துக்காட்டில் *மறைத்தனர்* என்ற பலர்பால் வினை முற்று முற்றெச்சமாக நிகழ்வதால் *கிளத்தல்* என்பதன் எழுவாய் பலர்பால் தன்மையதாகின்றது.

***(9) முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே***
*(தொல்.சொல்.சேனா. 39)*

இந்த எடுத்துக்காட்டில் *கிளத்தல்* என்பது *கிளப்பது* என்ற வினையின் பொருண்மையதாகும். இங்கே அது வியங்கோட் பண்பினை இழக்கிறது. இதனின்றும் வியங்கோள் வினையாக நிகழ்கையில் *கிளத்தல்* என்பது *கிளத்து+அல்* என்ற அமைப்பின தாகவும், தொழிற்பெயராக நிகழ்கையில் *கிள-த்த+அல்* என்ற அமைப்பினதாகவும் நிகழ்வது புலனாகின்றது. *கிளத்து+அல்* என்ற அமைப்பில் *கிளத்து* என்பது *கிள* என்னும் வினையடியின் மாற்றுருபாகக் கொள்ளத்தக்கதாகிறது. இங்கே வியங்கோள் வினையாக நிகழும் *கிளத்தல்* என்பதையும், தொழிற்பெயராக நிகழும் *கிளத்தல்* என்பதையும் அமைப்பியல் நிலையில் தொடர்புபடுத்த முடியாது. *கிளத்து+அல்* என்ற அமைப்பில் *-அல்* என்பது வியங்கோள் விகுதியாகும். *கிள-த்த+அல்* என்ற அமைப்பில் அல் என்ற விகுதி பொதுவினைமுற்றுக்குரிய முற்று விகுதியாகும். *கிளப்பது* என்பதில் நிகழும் *-அது* என்பதன் மாற்றுருபாக இந்த *-அல்* கருதத்தக்கதாகும்.

4.2. *கிளத்தல்* (<கிளத்து+அல்) என்பது வல்வினை சார்ந்த வினையமைப்பாகும். *கொய்தல், வருதல்* முதலானவை மெல் வினை சார்ந்த வினைகளாகும். *சிறக்க* என்ற வல்வினையமைப்பு *சிற+க்க* என்ற பிறழாய்வு செய்யப்பட்டு, ககரம் வியங்கோள் விகுதியாகக் கொள்ளப்படுகிறது. இந்த விகுதியானது *கொய், வா* முதலான மெல்வினைகளுக்கு விரிவுபடுத்தப்பட்டுக் கொய்+க, வரு+க முதலான வியங்கோள் வடிவங்கள் தோற்றம் கொள்கின்றன. இதைப் போலவே *கிளத்தல்* என்ற வியங்கோள்

வினையானது *கிள+த்தல்* என்று பிறழாய்வு செய்யப்பட்டு இந்த அமைப்பில் நிகழும் *-தல்* என்பது பின்னர், *கொய், வா* முதலான மெல்வினைப் பகுதிகளுக்கும் விரிவுபடுத்தப் பட்டுக் *கொய்தல்* (<கொய்+தல்), *வருதல்* (<வரு+தல்) முதலான மெல்வினை சார்ந்த செய்தல் வாய்பாட்டு வியங்கோள் வினைகள் தமிழில் தோற்றம் கொண்டன. வல்வினை சார்ந்ததாயினும், மெல்வினை சார்ந்ததாயினும் செய்தல் வாய்பாட்டுத் தொழிற் பெயர்கள் *கிள-த்த்+அல், கொய்-த்+அல்* என்ற அமைப்பினவாகும். ஏனெனில் இவை *கிளப்பது, கொய்வது* ஆகிய இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்களுக்கு இணையானவையாகும்.

### 5.0. செயவென் வியங்கோள்

5.1. செய வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி தமிழில் அழுத்தமாகப் பதிவாகவில்லை. இலக்கிய வழக்கில் மெல்வினை சார்ந்த செயவென் வியங்கோள் வினைகளின் இடத்தைச் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகள் பற்றிக் கொண்டன. இவற்றின் தோற்றம் பின்னர்ப் பேசப்படும். வல்வினை சார்ந்த செயவென் வியங்கோள் வினைகளும் (எ-டு. *கொடுக்க, படிக்க, கேட்க, கற்க* முதலியன) செயவென் வாய்பாட்டு எதிர்வெச்ச வினைகளும் (Infinitives) வடிவில் ஒன்றாக அமைவதால் இக்காலத் தமிழில் *கொடுக்க, கேட்க, கற்க* முதலான வியங்கோள் வினைகள் வழக்கற்றுப்போயின. உடன்பாட்டு வியங்கோள் வினைகள் இக்காலத் தமிழில் *செய்யவேண்டும்* வாய்பாட்டு வினைகளாகவும் எதிர்மறை வியங்கோள் வினைகள் *செய்யவேண்டாம்* வாய்பாட்டினவாகவும் நிகழும் நிலையே காணப்படுகிறது. பேச்சுத் தமிழில் இவை *செய்யணும்* வாய்பாட்டில் உடன்பாட்டு வினைகளாகவும் *செய்யவேணாம்* வாய்பாட்டில் எதிர்மறை வினைகளாகவும் நிகழ்கின்றன. *செய்யணும்* வாய்பாட்டு வினைகளின் அமைப்பு சற்றுச் சிக்கலானதாகும். வண்ணனை ஆய்வில் இந்த வினைகளின் அமைப்பைச் *செய்+அணும்* என்றோ *செய்ய+ணும்* என்றோ, *செய்ய+அணும்* என்றோ ஆராய முடியும்.[1] ஆனால் இதன் உண்மையான அமைப்பு **செய்யன்ற்(உ)+ உம்* எனக் கொள்ளப்படுவதற்கு வாய்ப்புள்ளது. இந்த அமைப்பில் காணப்படும் *செய்யன்ற்(உ)* என்பது *செய்யண்* எனத் திரிந்ததாகக் கொள்ளப்படும். கருதுக: நின்று>நிண்ணு. செய்யட்டும் வாய்பாட்டு வினைகளின் தோற்றமும் இந்த ஆய்வோடு தொடர்புடையதாகும். பார்க்க: 8.0

---

1. செய்ய+அணும் என்ற அமைப்பைக் கருத்தில் கொண்டால் *அணும்* என்பதன் அகரம் நிலைமொழி அகரத்தின்முன் கெட்டதாகக் கொள்ளப்படும். இது *அத்தின் அகரம் அகரமுனை இல்லை* (எழுத்து. இளம். 126) என்ற தொல்காப்பிய ஆய்வு மரபை ஒட்டியதாகும்.

5.2. செய வாய்பாட்டு வியங்கோள் வினைகள் மெல்வினை சார்ந்தும் வல்வினை சார்ந்தும் அமைந்தவையாகும். *காண, தொழ, பாட* முதலானவை மெல்வினை சார்ந்தவையாகும். *குடிக்க, துடைக்க, பார்க்க* முதலானவை வல்வினை சார்ந்தவை யாகும். மெல்வினை சார்ந்த செயவென் வினைகள் இலக்கிய வழக்கில் அருகியே காணப்படுகின்றன. *பூக்கஞ லூரன் சூளிவண், வாய்ப்பதாக* (ஐங். 8. 5, 6) என்ற இந்த எடுத்துக்காட்டில் *ஆக* என்னும் வியங்கோள் வினையானது மெல்வினை சார்ந்ததாகும். பேச்சுத் தமிழில் மெல்வினை சார்ந்த செயவென் வாய்பாட்டு வினைகள் வைதற் சூழலில் இயல்பாகக் காணப்படுகின்றன. கருதுக: *அவன் வயிறு எரிய, அவன பாம்பு புடுங்க*. தமிழில் தன்மையிடத்து வினா வாக்கியங்களில் செயவென் வினைகள் வியங்கோள் வினைகளாக நிகழும் பெற்றியனவாகும். எ-டு. *நான் என்ன செய்ய?, நான் எங்கே போக?, நான் யாரைப் பார்க்க?*[2]

5.3. பழங்கன்னடத்திலும் தெலுங்கிலும் தமிழிற்போலவே செயவென் வாய்பாட்டு வினைகள் முன்னிலை வியங்கோட் பயனிலையாக நிகழும் போக்கு (அருகிய வழக்காகக்) காணப் படுகிறது. எ-டு. கன்னடம்: *நீம் கேள* 'நீங்கள் கேட்க', *நீம் நோட* 'நீங்கள் பார்க்க', *நெனெய* 'நினைக்க', *காண* 'காண', *கேள* 'கேட்க', *அறிய* 'அறிய', *பேழ* 'சொல்ல' (R. Narasimhacharya. 1969: 135, B. Ramachandra Rao. 1972: 133)[3]. தெலுங்கு: *நீ கடுப்உ கால*

---

2. இந்த வாக்கியங்களுக்கு உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் விடையாக அமையும் வாக்கியங்கள் *நீ அதைத் துடைக்கவேண்டும்/நீ ஒன்றும் செய்யவேண்டாம், நீ கடைக்குப் போக வேண்டும்/நீ எங்கும் போக வேண்டாம், நீ அமைச்சரைப் பார்க்கவேண்டும்/நீ யாரையும் பார்க்க வேண்டாம்*. இதனின்றும் தன்மையில் வியங்கோளாக நிகழும் செயவென் வினைகள் செய்யவேண்டும் என்னும் பொருண்மையை உணர்த்துவது புலனாகின்றது. கன்னடக் கிளைமொழியொன்றில் (K.G. Shastri. 1971) செயொ/செயவ் வாய்பாட்டு வினைகள் வியங்கோள் பயனிலைகளாக நிகழ்வதைக் காணலாம். எ-டு. *இன்-ஏன் மாடொ நானு* (பக். 169) 'இனி நான் என்ன செய்ய?' *(நானு) யேன் ஹேளவ்* (பக். 78) '(நான்) என்ன சொல்ல', de:vi:g nar-bali: ko̤Dv (பக். 258) 'தேவிக்கு நரபலி கொடுக்க', இந்த எடுத்துக்காட்டுக்களில் முதல் எடுத்துக்காட்டில் நிகழும் *மாடொ* என்பது **மாடவ்* என்பதன் திரிபாகும். **மாடவ், ஹேளவ், கொடவ்* ஆகியவை **மாடம், *ஹேளம் (<*பேழம்). *கொடம்* என்பனவற்றின் திரிபுகளாகும். மலயாளத்தில் செயுக வினைகள் தன்மையிலும் வியங்கோட் பயனிலையாக நிகழும் (Michail S. Andronov. 1996: 154) எ-டு. *ஞான் எந்தாணு செய்யுக?* 'நான் என்ன செய்ய?'

3. கன்னடத்தில் இத்தகைய வினைகள் உயர்வேவல் (Polite Imperative) வினைகளாகக் கருதப்படுகின்றன. செய்கெ வாய்பாட்டு வினைகள் இந்த மொழியில் தெளிவான வியங்கோட் பயனிலைகளாகச் செயல்படுகின்றன.

'உன் வயிறு எரிய', *நீ இல்லு கூல* 'உன் வீடு குலைய' (Bh. Krishnamurti. 1972: 213).

## *6.0.* வல்வினை சார்ந்த செயவென் வியங்கோள்

செய வாய்பாட்டு வியங்கோள் வினைகளைப் பொறுத்த வரையில் வல்வினை சார்ந்தவையே பழந்தமிழில் பரவலாகக் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களை இந்த வகையில் கருத்தில் கொள்க.

***10(1)* தண்டுறை யூரன் கேண்மை**
**வழிவழி சிறக்க** *(ஐங். 2. 5, 6)*

***(2)* தண்டுறை யூரன் றேரெம்**
**முன்கடை நிற்க** *(ஐங். 5. 5, 6)*

***(3)* (தண்டுறை யூரன் வரைக)**
**எந்தையும் கொடுக்க** *(ஐங். 6. 5, 6)*

***(4)* மாரி வாய்க்க வளநனி சிறக்க** *(ஐங். 10.2)*

வல்வினை சார்ந்த *சிறக்க, நிற்க, கொடுக்க, வாய்க்க* முதலான செயவென் வாய்பாட்டு வியங்கோள் வினைகள் *சிறக்கு, நிற்கு, கொடுக்கு, வாய்க்கு* முதலான செய்கு வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியவையாகும். *கேட்குவன்* (புறம். *225.9*), *கொடுக்குவர்* (புறம். *182.5*), *தூர்க்குவன்* (பத்துப். *9.271*), *வீழ்க்குவன்* (பத்துப். *9. 272*) முதலான வினைமுற்றுக்களில் வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளைக் காணலாம். ஆனால் *கொடுக்க* என்ற வியங்கோள் வினையில் நிகழும் *கொடுக்கு* என்பதும் *கொடுக்குவர்* என்பதில் நிகழும் *கொடுக்கு* என்பதும் அமைப்பில் ஒரு நிகரனவா என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

## *7.0.* வல்வினை வழியது மெல்வினை வியங்கோள்

*7.1.* மெல்வினை சார்ந்த செய்க வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி செவ்வியல் தமிழ்தொட்டு இக்காலச் செந்தமிழ்வரை அழுத்தமாகப் பதிவாகியுள்ளது. செவ்வியல் தமிழில் நிகழும் பின்வரும் மெல்வினை சார்ந்த செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளைக் கருத்தில் கொள்க.

*11(1)* நெற்பல *பொலிக* (ஐங். *1.2*)

***(2)*** ஊரன் *வாழ்க* (ஐங். *1.5*)

*(3)* *விளைக* வயலே வருக விரவலர் (ஐங். *2.2*)

***(4)*** பால்பல *ஊறுக* (ஐங். *3.2*)

(5) பகைவர் புல்லார்க பார்ப்பார் *ஓதுக* (ஐங். 4.2)

(6) பசியில் லாகுக பிணிசே *ணீங்குக* (ஐங். 5.2)

(7) வேந்து பகை தணிக யாண்டுபல *நந்துக* (ஐங். 6.2)

(8) தண்டுரை யூரன் *வரைக* (ஐங். 6.5)

(9) அல்லது *கெடுக* (ஐங். 7.2)

(10) அரசுமுறை *செய்க* (ஐங். 8.2)

எடுத்துக்காட்டு (11)-இல் நிகழும் செய்க வாய்பாட்டு வினைகள் எத்தகைய அமைப்பின என்பது சிந்தனைக்குரியதாகும். பழந்தமிழில் *தருகுவை* (கலி. 142.39), *செல்குவன்* (பரி. 19.64), *செய்குவர்* (ஐங். 215.6) முதலான வினைமுற்றுக்கள் மெல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். இதனைக் கருத்தில்கொண்டு மேலே (11)-இல் நிகழும் *பொலிக, வாழ்க, விளைக* முதலானவற்றைச் செய்கு வாய்பாட்டு வினைப் பகுதிகளின்மீது தோன்றியவையாகக் கொள்ளமுடியும் என்று தோன்றவில்லை. *சிறக்க* என்னும் வல்வினை சார்ந்த வியங்கோள் வினை *சிறக்கு* என்ற பகுதியின் மீது தோன்றியதாயினும் பிறழாய்வின் காரணமாகக் ககரம் வியங்கோள் விகுதியாகக் கொள்ளப்பட்டு (நன்னூல். 338) இந்த விகுதியானது மெல்வினைகளுக்கும் பரவி மெல்வினை சார்ந்த செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளைத் தோற்றுவித்தது (P.S. Subrahmaniam. 1971: 497).

7.2 வல்வினை சார்ந்த எதிர்வெச்சமும், வியங்கோள் வினையும் வடிவத்தில் ஒன்றாகக் காணப்பட்டாலும் இரண்டும் தொடர்புடையவையல்ல. செய்யிய(ர்) வாய்பாட்டு வினைகள் வியங்கோட் பயனிலையாகவும் எதிர்வெச்சமாகவும் வடிவமைப்பில் ஒன்றாக இருப்பதைக் கருத்தில்கொண்டு வியங்கோளும் எதிர்வெச்சமும் தொடர்புடையவை என்று வாதிடமுடியாது. சிறப்பு வினை முற்றானது தமிழில் பயனிலையாகவும் (எ-டு. *அவன் உண்டனன்*) முற்றெச்சமாகவும் (எ-டு. *அவன் உண்டனன் சென்றான்*) செயல் பட்டாலும் இரண்டு செயல்பாடுகளிலும் சிறப்பு வினைமுற்று தனது உருபனியற் பண்புகளை (Morphological Properties) இழப்பதில்லை. ஆனால் வியங்கோள்வினை அப்படியல்ல. செய வாய்பாட்டு முற்று வினையானது எதிர்வெச்சமாக நிகழ்கையில் அது பொதுவினைமுற்றாகவே (Impersonal Finite Verb) கருதத் தக்கதாகிறது. பயனிலையாக நிகழும்போதும் செயவென் வினை யானது வியங்கோட் பொருண்மை குறியாத பொதுவினையாக நிகழ்வதாகக் கொண்டால்தான் அது எதிர்வெச்சமாகவும் நிகழ

முடியும். வியங்கோளாக நிகழும் செயவென் வினையைப் பொது வினைமுற்றாகக் கருதமுடியாது. எனவே வியங்கோள் வினையாக நிகழும் செயவென் வினையும் எதிர்வெச்சமாக நிகழும் செயவென் வினையும் தொடர்புடையவை ("Infinitive and optative are inter related") என்ற சுப்ரமணியத்தின் (Ibid) கூற்று மறுபரிசீலனைக் குரியது. பயனிலையாக நிகழ்கையில் செயவென் வினை 'செய்ய வேண்டும்' என்ற விழைவுப் பொருண்மையை உணர்த்தும் என்பது இந்த ஆய்வில் பிறிதோரிடத்தில் (பார்க்க: 14.0) அவியக்அ (Havyaka) அந்தணரின் கன்னடக் கிளைமொழி எடுத்துக்காட்டுக்கள் மூலம் நிறுவப்பட்டுள்ளது.

### 8.0 செய்யட்டும் வாய்பாட்டு வியங்கோள்

8.1. செய்யட்டும் வாய்பாட்டு வினைகள் தமிழில் மூவிடத்திலும் தொடரனியல் வரையறைகளுக்குட்பட்டு நிகழ்கின்றன. படர்க்கையில் ஐம்பாற்கும் பொதுவாகத் தனி வாக்கியங்களில் இந்த வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகிறது. எ-டு. *அவன்/அவள்/அவர்(கள்)/அது/அவை வரட்டும்.* தன்மையிலும் முன்னிலையிலும் என்றென் சார்பு வாக்கியம் (Adverbial Complement Clause) அமைந்த முற்றெச்ச வாக்கியங்களில் (Complex Sentences) மட்டும் செய்யட்டும் வினைகள் காணப்படுகின்றன. எ-டு. *நான்/நீ வரட்டும் என்று அவர் காத்திருந்தார்.* இந்த வினைகளின் நிகழ்ச்சி தற்காலத் தமிழில் மட்டுமே காணப்படுகின்றது. பேச்சுத் தமிழில் தன்மை ஒருமையிடத்து வினா வாக்கியங்களில் செய்யட்டு வாய்பாட்டு வினைகளும் செய்யட்டும் வினைகளும் கிளைமொழி வழக்குகளாக உறழ்ந்தும் நிகழ்கின்றன. எ-டு. *நான் வரட்டா/வரட்டுமா.* தென்மாவட்டக் கிளைமொழிகள் சிலவற்றில் *நான் வரட்டு, அவன் வரட்டு* என்பது போன்ற வாக்கிய நிகழ்ச்சிகளும் காணப்படுகின்றன. எ-டு. *தூங்கட்டு நா* (=தூங்கட்டும் நான்) (ஐசக் அருமைராஜன், 1975: 53), *பிலோமியும் உக்காரட்டு* (=பிலோமியும் உட்காரட்டும்) (வண்ணநிலவன், 1979: 41). செய்யட்டும் வினைகளுக்குரிய எதிர்மறை வினைகள் தமிழிலில்லை. செய்யக்கூடாது, செய்ய வேண்டாம் ஆகிய வாய்பாட்டு எதிர்மறை வினைகள் பயன்படுத்தப்பட்டாலும் இவற்றைச் செய்யட்டும் வினைகளுக்குரிய நேரான எதிர்மறையாகக் கருதமுடியாது. செய்யட்டும் வாய்பாட்டு வினைகள் மலயாளத்தில் செய்யட்டு, செய்யட்டெ வாய்பாட்டினவாக நிகழ்கின்றன. இவை அந்த மொழியில் ஏவலாகவும் வியங்கோளாகவும் நிகழும் என்று கருதப்படுகிறது. (K.M. George, 1971: 176). இந்த வினைகள் நிகழ்கால வினைமுற்றுக்

களுக்குரிய வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றி நிகழ்பவை எனக் குறிப்பிடுகிறார் கே.எம் ஜார்ஜ் (Ibid, 189). எ-டு. *அவனு குணம் வரட்டே* 'அவனுக்கு நலம் வரட்டும்' (=அவன் நலம் பெறட்டும்), *நினக்கு நன்ம உண்டாகட்டெ. அட்டெ* என்பதை விகுதியாகக் கொண்ட *செய்யட்டெ* வினைகள் மலயாளத்தில் முன்னிலையில் ஏவல் குறித்தும் தன்மையிலும் படர்க்கையிலும் ஏவல் கண்ணிய வியங்கோளாகவும் எண் வேறுபாடின்றி நிகழும் என்று கருதப்படுகிறது (K.M. George, 1971: 176). எ-டு. *'அவன்/ அவர்/ஞான்/ஞங்ஙள் நடக்கட்டெ* 'அவன்/அவர்/நான்/நாங்கள் நடக்கட்டும்'. செய்யட்டெ வினைகள் செய்யட்டு வாய்பாட்டிலும் வியங்கோளினவாகச் செவ்வியல் மலயாளத்திலும், கிளைமொழி களிலும் நிகழும் என்றும் அவை *அட்டு* என்னும் வினை கொண்டு நிகழ்பவை என்றும் ஆந்துரொனோவ் கருதுகிறார் (Michail S. Andronov, 1996: 128). செய்யட்டெ வினைகள் ஒட்டு என்னும் வினையைக் கொண்டவை என்று குறிப்பிடுவார் எல்.வி. ராமசாமி அய்யர் (L.V. Ramaswami Ayyar, 1936: 91). செய்யட்டெ வினைகள் *அட்டு* அல்லது *ஒட்டு* என்ற வினையைக் கொண்டவை என்ற கருதுகோள் நமக்கு உடன்பாடில்லை. செய்யட்டும் வாய்பாட்டு வினைகளின் அமைப்பானது செய்யட்டு, செய்யட்டெ வினைகளுக்கும் பொருந்தும்.

8.2. செய்யட்டும் (த), செய்யட்டெ (மல) வாய்பாட்டு வினை களுக்கு இணையாகத் தெலுங்கில் நிகழ்பவை சேயனி (=செய்யனி) வாய்பாட்டு வினைகளாகும். கருதுக: *வாண்டு/வாள்ளு/அதி/ (அவி) பாடனி* 'அவன்/அவர்கள்/அவள்/அது/(அவை) பாடட்டும்'. தமிழிற் போலவே இந்த ஆய்வாளரின் கிளை மொழியில் இந்த வினைகள் தன்மையிலும் முன்னிலையிலும் என்றென் சார்பு வாக்கியங்களைக் கொண்ட முற்றெச்ச வாக்கியங்களில் நிகழ்கின்றன. *நேனு/மேமு, நுவ்வு/மீரு பாடனி யனி ஆய்ன செப்பேரு* 'நான்/நாங்கள், நீ/நீங்கள் பாடட்டும் என்று அவர் சொல்கிறார்'. சேயனி வாய்பாட்டு வினைகள் *சேயன்+இ* (=செய்யன்+இ) என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் நிகழும் *சேயன்* என்பது எதிர்வெச்சமாகவும் நிகழ வல்லது. இது சேயு+அன் (=செய்+அன்) என்ற அமைப்பினதாகும். தெலுங்கில் *சேயன்* என்பதும் *சேய* என்பதும் வரையறைக்கப் பட்ட எழுத்தியல் சூழல்களில் (Phonological Contexts) நிகழ்வன வாகும். எ-டு. *நேனு சேய லேது, நேனு சேயனே லேது* 'நான் செய்யவில்லை, நான் செய்யவே இல்லை'. தமிழிலும் *செய, செயவ்* ஆகிய வினைகள் இத்தகைய எழுத்தியல் சூழல்களுக்குக் கட்டுப் பட்டவையாகும். எ-டு. *நான் அவரைப் பார்க்க விரும்பினேன்,*

*நான் அவரைப் பார்க்கவும் அவரிடம் பழகவும் விரும்பினேன்.* தமிழில் நிகழும் *செயவ்* என்பதும் தெலுங்கில் நிகழும் *சேயன்* என்பதும் **செயம்* என்பதன் திரிபாகும்.[4]

8.3. செய்யட்டும் வாய்பாட்டு வினைகளின் தோற்றத்தையும் அமைப்பையும் அறிந்து கொள்வதற்கு வாய்ப்பாகத் தெலுங்கில் நிகழும் முன்னிலை ஏவல் வினைகளின் அமைப்பைப் பற்றி அறிந்து கொள்வது அவசியமாகின்றது. *பாடு* என்னும் வினையைக் கொண்டு இந்த ஆய்வை மேற்கொள்ளலாம். தெலுங்கில் *பாடுமு* என்பது முன்னிலை ஒருமைக்கும் *பாடுண்டு* என்பது முன்னிலைப் பன்மைக்கும் உரிய ஏவல் வினைகளாகும். செய்யும் வாய்பாட்டு வினைகளின் ஈற்று மகரம் தெலுங்கில் னகரமாகத் திரிந்து கெட்டும் கெடாமலும் நிகழும். எ-டு. *அதி பாடு* (<* பாடுன்) *அதி பாடுனு* 'அவள் பாடுவாள்'. முன்னிலை ஏவல் ஒருமை வினைகளில் நிகழும் செய்யும் (=தெலுங்கு: சேயுமு) வாய்பாட்டு வினைகளில் இந்தத் திரிபு நிகழவில்லையாயினும் *சேயுண்டு* வாய்பாட்டு முன்னிலைப் பன்மை ஏவல் வினைகள் *சேயுன்* (<சேயும் (=தமிழ்: செய்யும்)) வாய்பாட்டு வினைகளின்மீது அமைந்ததாகும். இதனைக் கருத்தில் கொண்டு *பாடுண்டு* (=பாடுங்கள்) என்ற வினையின் ஈற்றயல் வடிவத்தைப் **பாடுன்று* எனத் துணியலாம். அதாவது, *பாடுண்டு* என்பது **பாடுன்று* என்பதன் திரிபாகும். **பாடுன்று* என்பது **பாடுன்+து* என்ற அமைப்பினதாகும். தெலுங்கைப் பொறுத்தவரையில் இந்த அமைப்பில் நிகழும் துகரக் கிளவியை முன்னிலைப் பன்மையாகக் கருதலாம். தெலுங்கில் *பாடண்டி, பாடண்ட* என்ற கிளைமொழி வழக்குகளும் காணப்படுகின்றன.[5] *பாடண்டி, பாடண்ட* ஆகிய வற்றின் ஈற்றில் நிகழும் இகர அகரங்களின் இலக்கணப் பொருண்மை ஆய்வுக்குரியது. இந்த உயிர் விகுதிகள் இரண்டும் **அய்* என்பதன் திரிபுகளாகும். இங்கே குறிக்கப்பெற்றுள்ள

---

4. *செயவ்* (த), *சேயன்* (தெ) ஆகியவற்றில் நிகழும் இறுதி வகரத்தையும், னகரத்தையும் உடம்படுமெய்யாகக் கருதமுடியாது. எழுத்தியல் கட்டுப்பாட்டுக்குள் இவை நிகழ்வதால் இவற்றைச் சொல்லின் ஒருங்கிணைந்தவையாகவே கருதவேண்டும். தமிழைப் பொறுத்தவரை மரபிலக்கணிகளும் (நன். 162) உடம்படுமெய்களின் நிகழ்ச்சியானது எழுத்தியல் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டது என்பதை ஏற்கின்றனர். ஆனால் அவை இடப்புறத்தில் நிகழும் சொல்லின் ஒருங்கிணைந்த உறுப்பு என்ற உண்மை இவர்கள் ஆய்வில் பெறப்படவில்லை. சில ஒலியன்கள் குறிப்பாக யகர வகர லகரங்கள் மொழியிறுதியில் அசை யழுத்தம் குன்றுகையில் கெடுவதும் புணர்ச்சியில் அவை மீட்கப் படுவதும் இயல்பான நிகழ்வுகளாகும்.

5. இந்த ஆய்வாளரின் தாய்மொழியில் *பாடண்டா* என்ற வழக்குக் காணப்படுகிறது.

கிளைமொழி வழக்குகள் *பாடண்டு+இ/அ* என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் நிகழும் *பாடண்டு* என்பது **பாடன்று* என்பதன் திரிபாகும். **பாடன்று* என்பது **பாடன்+து* என்ற வரலாற்று அமைப்பினதாகும்.[6] சேயன் வாய்பாட்டினதாகிய *பாடன்* என்பது தெலுங்கில் செயவென் வினையாகவும் நிகழும் பெற்றியதாகும். **பாடுன்று* என்பதில் நிகழும் **பாடுன்* என்பதும் **பாடன்று* என்பதில் நிகழும் **பாடன்* என்பதும் இருவகையான முற்றுவினைகளாகும். இவை இரண்டும் முறையே **பாடும், *பாடம்* ஆகியவற்றின் திரிபுகளாகும்.[7]

8.4. தெலுங்கில் **பாடன்று* என்பது **பாடண்டு* எனத் திரிந்து நிகழும் என்று மேலே குறிக்கப்பெற்றது. **பாடன்று* (*pa:Ta<u>nr</u>u) என்பது **பாடன்ற்உ* (*pa:Ta<u>nt</u>u) என்பதன் திரிபாகும். அதாவது ஒலிப்பியல் நிலையில் (Phonetic Level) **[*<u>nt</u>]** என்பது **[*<u>n</u>d > <u>nr</u>]** எனத் திரிகின்றது. **பாடன்ற்உ* என்பதில் றகர வல்லொற்றானது நிலையொலி (Voiceless Phone)யாகும். எனவே **பாடன்ற்உ* என்பது **பாடற்று* எனத் திரிந்து இறுதியில் *பாடட்டு* எனத் திரிந்ததாகக் கருத வாய்ப்புள்ளது. தமிழில் -ற்ற்->-ட்ட்- என்ற திரிபு ஒரோவழியும் (எ-டு. கழற்று > கழட்டு), தெலுங்கில் பரவலாகவும் காணப்படு கிறது. **பாடற்று* என்பதன் திரிபாகிய *பாடட்டு* என்பது தமிழில் உம்மென் விகுதியை ஏற்று, *பாடட்டும்* என்றும் மலயாளத்தில் எகரத்தை ஏற்று, *பாடட்டெ* என்றும் செய்யட்டும், செய்யட்டெ வாய்பாட்டு வினையமைப்புகள் தோன்றி நிகழ்கின்றன. விகுதி ஏற்காத செய்யட்டு வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் மலயாளத்தில் நிகழ்வது முன்பே குறிக்கப்பெற்றுள்ளது. (தமிழில் அடி என்னும் பெண்பாற் குறிப்புக் கிளவியின் நிகழ்ச்சி காணப்படுகிறது. எ-டு. *சொல்லடி, கேளடி, என்னடி, ஏனடி*. இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும்

---

6. **அவன்+து* என்ற அமைப்பானது *வான்று* என்று பழந்தெலுங்கிலும், *வான்று* என்பது *வாண்டு* எனத் திரிந்து இக்காலத் தெலுங்கிலும் நிகழ்வது **பாடண்டு* வினையமைப்பின் தோற்றத்தோடு ஒப்புநோக்கத் தக்கதாகும். *அவன்* என்பதாகிய *வாண்டு* என்பது இந்த ஆய்வாளரின் தாய்மொழியில் நிகழ்ந்தாலும் ஆந்திரத் தெலுங்கில் மெல்லொற்றை யிழந்து இது *வாடு* என வழங்குகிறது.

7. தமிழில் **பாடம்* என்ற முற்றுவினை *பாடவ்* எனத் திரிந்து வகரம் கெடாமல் ஓர் எழுத்தியற் சூழலிலும், பிறிதொரு எழுத்தியற் சூழலில் கெட்டும் நிகழ்கின்றது. **பாடம்* என்பதன் நிகழ்ச்சி *பாடப்போ, பாடத்தா, பாடக்கொடு, பாடச்செல்* ஆகிய அமைப்புக்களில் நிகழ்கின்றது. இந்த அமைப்புக்களில் நிகழும் வல்லொற்று மிகுதி மகரத்தின் திரிபாகும்.

*அடி* என்னும் கிளவி தென்மாவட்டக் கிளைமொழிகளில் *அட்டி* என வழ்ங்குகிறது. எ-டு. *என்னட்டி கள்ள அழுக* (=என்னடி கள்ள அழுகை) (வண்ணநிலவன். 1979: 14), *அம்மா எங்கட்டி* (=அம்மா எங்கடி) (ஐசக் அருமைராஜன். 1975: 49), *சும்மா கெடட்டி* (=சும்மா கிடடி) (மேற்படி: 53). இந்த எடுத்துக்காட்டுக்களில் *அடி, அட்டி* இரண்டும் *அடு/அட்டு+இ* என்ற அமைப்பின வாகும். இந்த அமைப்பில் நிகழும் *அடு, அட்டு* இரண்டும் பின்வருமாறு தோன்றியமையும். *செய்யன்று வாய்பாட்டு வினைகள் செய்யண்டு > செய்யடு எனத் திரிந்தும் குறுகியும் இகரம் பெற்று, செய்யடி வாய்பாட்டு வினைகள் தோன்றி நிகழ்கின்றன. *செய்யன்றஉ வாய்பாட்டு அடிநிலை வடிவங்களி னின்றும் *அட்டு* தோற்றம் கொள்கிறது. கருதுக: *செய்யன்றஉ> செய்யற்று>செய்யட்டு+இ). தெலுங்கில் *பாடனி* (=பாடட்டும்) என்னும் *சேயனி* (=செய்யட்டும்) வாய்பாட்டு வினையானது *பாடன்+இ* என்ற அமைப்பினதாகும். இந்த அமைப்பில் நிகழும் *பாடன்* (<பாடு+அன்) என்பது *பாடண்டி, பாடண்ட* ஆகிய வற்றின் அடிநிலையமைப்பில், அதாவது **பாடன்று* <*பாடன்+து, என்பதில் நிகழும் *பாடன்* என்பதாகும். *வா(ண்)டு பாடனி* (=அவன் பாடட்டும்) என்பது தெலுங்கில் நிகழும் இன்னொரு வாய்பாட்டினதாகிய *வா(ண்)டு பாடுத்உடு காக* (pa:DutuDu ga:ka) (=அவன் பாடுவான் ஆக) என்ற வியங்கோள் வாக்கியத்தோடு பொருந்தும். எனவே *பாடனி* என்பதன் ஈற்றில் நிகழும் இகரத்தை **அய்* என்பதன் திரிபாகக் கொண்டு அதனை வியங்கோள் விகுதியாகத் துணியலாம்.

8.5. பழந்தெலுங்கில் *பாடெடுனு, பாடுத்அனு* (pa:Dutanu) ஆகிய சேஸெடுனு, சேஸுத்அனு வாய்பாட்டு வினைகள் காணப்படுகின்றன. படர்க்கையில் பலர்பால் தவிர ஏனைய நான்கு எழுவாய்கள் இந்த வியங்கோள் வினைகளின் பயனிலையாக அமையும். எ-டு. *வாண்டு/அதி* (=அவள், அது)/ *அவி பாடெடுனு/ பாடுத்அனு* 'அவன்/அவள்/அது/அவை பாடுக'. இந்த வினைகளில் நிகழும் ஈற்றயல் னகரம் உயிர் முதலாகிய வருமொழியின் முன் மகரமாக நிகழும் (Paravastu Cinnaya Su:ri. 2002:210). எ-டு. *நேனு வா(ண்)டு பாடெடும்/பாடுத்அம் அனியெனு* 'நான் அவன் பாடவேண்டும் என்றேன்'. இந்த வியங்கோள் வினைகள் pa:D-eDu-nu, pa:Du-ta-nu என்ற அமைப்பினவாகக் கருதப்படுகின்றன (Bh. Krishnamurti. 1972:191). இந்த அமைப்பாய்வு ஏற்புடையதாகத் தோன்றவில்லை. *பாடெடுன்* (<*பாடெடும்) என்பது தமிழில் நிகழும் *பாடட்டும்* என்பதனோடு தொடர்புடையதாக இருக்கலாம். *பாடெடுன்* என்பது

*பாடு+எடுன்* என்ற அமைப்பினதாகும். பேச்சுத் தமிழில் *பாடென்/ பாடன், பாடுங்களென்/?பாடுங்களன்* என்ற ஏவல் வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது.[8] இவற்றில் நிகழும் *என்/அன்* என்பது அடிப்படையில் ஓர் இருப்பு (Be) வினையாகும். இதனைக் கருத்தில் கொண்டு *பாடெடுன்* என்பதில் நிகழும் *எடுன்* என்பதை **என்றும்* என்பதன் திரிபாகக் கருதலாம். **என்றும் > என்றுன் > எண்டுன் > எடுன்.* இந்த ஆய்வில் *என்று* என்பது காலக்குறிப்பற்ற *என்* என்பதன் மாற்றுருபாகக் கொள்ளப்படுகிறது. *என்று* (த), *அனி* (தெ) ஆகிய வாக்கியச் சாரியைகள் (Sentential Complementizers) இன், அன் ஆகிய இருப்பு வினைகளின் திரிபாயினும், இவை காலக்குறிப்பற்றவை என்பதே உண்மை.[9] இது *பாடெடுன்* என்பதன் அடிநிலை வடிவமாகிய *பாடென்று என்பதில் நிகழும் *என்று* என்பதற்கும் பொருந்தும். *பாடுத்அனு* என்ற வியங்கோள் வினை *பாடுத்உ* (pa:Dutu)+*அன்* என்ற அமைப்பினதாகும். இந்த அமைப்பில் நிகழும் *அன்* என்பது *என்* என்னும் இருப்பு வினையின் திரிபாகும். *பாடுத்உ* (<*பாடுந்த்உ) என்பது இறவாக்காலச் *செயுத்உ* வாய்பாட்டுப் பொதுவினையாகும்.[10]

### 9.0. செய்கென் வியங்கோள்

செய்கு வாய்பாட்டு வியங்கோள் வினைகளைப் பொறுத்த வரை செய்கு+அ என்ற அமைப்பினவாக அவற்றைக் கொள்வதே ஏற்புடையதாகும். இந்த அமைப்பில் நிகழும் அகரக் கிளவியைப் பற்றிப் பின்னர்ப் பேசப்படும். பகுதியாக நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகளை வினையடிகளின் மாற்றுருபுகளாகக்

---

8. இலங்கைப் பேச்சுத் தமிழில் இவை *பாடன், பாடுங்கோவன்* என நிகழ்கின்றன.

9. *என், அன்* ஆகிய இரண்டும் இருப்புப் பொருண்மையை உணர்த்தி னாலும் இதே வினைவடிவங்கள் *சொல், கருது, எண்ணு, நினை* ஆகிய பொருண்மைகளையும் உணர்த்துவனவாகும். *என்னும், அன்னும்* இருப்புப் பொருண்மையை உணர்த்துவன என்பதை ஆய்வாளர்கள் கருத்தில் கொள்வதே இல்லை. இருப்புப் பொருண்மையைக் குறிக்கும் *என்னும் அன்னும்* குறிப்பு வினைத்திரிபுகளைத் தோற்று விப்பனவாகும். இந்த வினைத் திரிபில் காலக்குறிப்பு இல்லை. அதனால்தான் இவை இலக்கண உருபன்களாகவும், வாக்கியச் சாரியைகளாகவும் (Complementizers) நிலை மாறுகின்றன. *சொல், நினை, கருது* முதலான பொருண்மைகளைக் குறிக்கும் *என், அன்* இரண்டும் தெரிநிலை வினையமைப்புக்களைத் தோற்றிவிப்பனவாகும். *ஆகு* (த), *அகு* (தெ) என்ற வினைகளுக்கும் மேலே குறிப்பிட்ட உண்மைகள் பொருந்தும்.

10. புறநானூற்றில் நிகழும் செயுந்து வாய்பாட்டு இறவாக்காலப் பொது வினைகளோடு *பாடுத்அனு* என்பதில் நிகழும் *பாடுத்உ* என்பது ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

கொள்வதா, அல்லது இறவாக்காலப் பொதுவினைமுற்றுக் களாகக் கொள்வதா என்பது ஒரு பிரச்சனையல்ல. வல்வினை சார்ந்த செய வாய்பாட்டு வினைகளினின்றும் செயிய வாய்பாட்டு வினைகள் தோன்றினாலும் வாக்கிய நிகழ்வுகளில் இவை வியங்கோள் பயனிலையாகவும் எதிர்வெச்சமாகவும் (Infinitive) செயல்படுவதைப்போல் செய்க வாய்பாட்டு வினைகள் இரு வகையாகச் செயல்படுவதில்லை. செய்க வினைகள் வியங்கோள் பயனிலையாக மட்டுமே செயல்படுகின்றன. இதனைக் கருத்தில் கொண்டு உயிர் முதலாகிய உருபன்களின்முன் நிகழும் வியங்கோள் வினைகளை ஆராயலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்திற் கொள்ளற்பாலனவாகும்.

**(12) வாழ்க வவன் கண்ணி** (புறம். 77. 6)

13(1) இனிய காண்கிவட் டணிகெனக் கூறி (புறம். 70. 4)
(2) நினைக்க வேண்டா வாழ்கவன் றாளே (புறம். 70. 19)
(3) பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை (புறம். 173. 2)
(4) இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே (புறம். 194. 7)
(5) எழுகென வெழுந்தாய் (சிலம்பு. 16.70)

மேலே (12)-இல் *வாழ்கவ்* என்ற வியங்கோள் வினையின் நிகழ்ச்சி காணப்படுகிறது. எழுத்தியலால் கட்டுண்ட *வாழ்க* என்பதன் மாற்றுருபாகும் இது. *வாழ்கவ்* என்பதில் நிகழும் ஈற்று வகரம் உடம்படு மெய்யல்ல. எடுத்துக்காட்டு 13(3)இல் நிகழும் *காண்கிவன்* என்ற தொடர் உ.வே.சா. பதிப்பில் பின்வருமாறு விளக்கப்படுகிறது. "காண்க இவன் என்பது காண்கிவன் எனக் கடை குறைந்து நின்றது" எடுத்துக்காட்டு 13(4)-இல் நிகழும் *காண்கிதன்* என்ற தொடரும் இவ்வாறே "காண்கவென்பது காண்கெனக் குறைக்கப்பட்டது" (உ.வே.சா. பதிப்பு) என்று விளக்கப்படுகிறது. இதனின்றும் செய்க வாய்பாட்டு வினைகள் உயிர் முதலாகிய வருமொழியின் முன் ககர மெய் கெட்டுச் செய்கு வாய்பாட்டினவாக அமையும் என்ற கருத்து மரபு வழிப் புலமையில் அழுத்தமாகப் பதிந்துள்ளது புலனாகின்றது. இத்தகைய கருது கோள் தமிழ்ப் புணரியல் மரபுக்கு இசைவானதாகத் தோன்ற வில்லை.[11] இந்தப் புணரியல் மரபுப்படி *காண்கிவன், தணிகென,*

---

11. பேச்சு வழக்கில் பெரியப்பா, பெரியம்மா, பெரியண்ணா, பெரியக்கா முதலான தொடர்கள் காணப்படுகின்றன. இவற்றில் *பெரிய* என்பது *பெரி* எனக் கடை குறைந்தது எனக் கொள்ள முடியுமா? அதே சமயத்தில் *பெரியவப்பா, பெரியவம்மா* என்ற தொடர்களின் நிகழ்ச்சிக்கும் தமிழில் வாய்ப்பில்லை. எனவே *பெரிய, பெரி* இரண்டையும் மாற்றுருபுகளாகக் கொள்வது பொருந்தும்.

*எழுகென* ஆகியவை *காண்கவிவன், தணிகவென, எழுகவென* என்றே அமையவேண்டும். ஆனால் அவ்வாறு அமையவில்லை. எனவே இத்தகைய தொடர்களில் நிகழும் வியங்கோள் வினைகளைச் செய்கு வாய்பாட்டினவாகக் கொண்டு அவற்றைச் செய்க வாய்பாட்டு வினைகளின் மாற்றுருபுகளாகக் கொள்வது அமைப்பியல் ஆய்வுக்குப் பொருந்தியதாக அமையும். செய்கு வாய்பாட்டு வினைகளில் வியங்கோள் விகுதி புணர்ந்து கெட்டதாக அதாவது; உருவிலி விகுதியாகக் கொள்ளப்படும். உருவிலி விகுதியைக் கொண்ட இத்தகைய வியங்கோள் மாற்றுருபுகள் ஒரு குறிப்பிட்ட கிளைமொழியில் நிகழ்ந்து அந்தக் கிளைமொழிக் குரிய புலவர்களால் செவ்வியல் வழக்கில் இடம்பெற்றிருக்க வேண்டும். எடுத்துக்காட்டு (12)-இல் நிகழும் *வாழ்கவவன்* என்ற தொடர் *வாழ்கவன்* என்று அமைந்தாலும் யாப்பமைதி கெடாது. ஆகவே இந்தத் தொடரில் *வாழ்கவ்* என்பதன் நிகழ்ச்சியானது செவ்வியல் வழக்குக்கு அல்லது இன்னொரு கிளைமொழிக்கு உரியதாகத் துணியலாம்.

### 10.0. செய்கென் பகுதியும் வியங்கோள் வினையும்

*10.1.* செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகள் மூன்று காலத்திலும் நிகழ்வதில்லை. எதிர்கால வினைமுற்றுக்களில் மட்டுமே இவற்றின் நிகழ்ச்சி காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக, *கொடுக்குவர்* (புறம். 182.5) என்ற எதிர்கால வினைமுற்றில் நிகழும் *கொடுக்கு* என்னும் வினைப்பகுதி இறந்தகால விகுதியை ஏற்பதில்லை. இதனால் *சிறக்க* என்னும் வியங்கோள் வினையின் வினையடியைச் *சிற* எனக் கருதப்பட்டு, *ககரம்* வியங்கோள் விகுதியாகப் பிறழாய்வு செய்யப்பட்டது. இத்தகைய ஆய்வு *பொலிக* என்பதை எடுத்துக்காட்டாக, *பொலிகு+அ* என்ற அமைப்பினதாகக் கொள்ளாமல் *பொலி+க* என்ற அமைப்பினதாகக் கொள்வதற்கு வகை செய்துவிடுகிறது. வரலாற்று நோக்கில் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளை செய்கு+அ என்ற அமைப்பினவாகவும் வண்ணனை நிலையில் செய்+க என்ற அமைப்பினவாகவும் கொள்வது தவிர்க்க முடியாததாகின்றது. இந்த ஆய்வானது நாம் முன்னதாக நிகழ்த்திய *செய்கு+அ* என்ற வண்ணனை ஆய்வுக்கு எதிரானதாகும். ஆயினும் வண்ணனை ஆய்வில் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளைச் *செய்கு+அ* என்ற அமைப்பினவாகக் கொள்வதற்குக் கோட்பாட்டுத் தடையேதும் இல்லை. *செய்கு+அ* என்ற அமைப்பில் நிகழும் செய்கு என்பதை இறவாக்காலப் பொது வினைமுற்றாகக் கொண்ட நமது இத்தகைய ஆய்வினைப் புறக்கணிப்பதற்கு வலுவான சான்று ஏதும் இருப்பதாகத் தோன்றவில்லை. இந்த வகையில் செய்கமா வாய்பாட்டு வியங்கோள் வினைகள் தொடர்பாக இந்த ஆய்வின் பிற்பகுதியில் குறிக்கப்பெற்றுள்ள செய்திகளைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

10.2 மெல்வினை சார்ந்த செய்க வாய்பாட்டு வினைகள் செயுக வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கமாகும். எ-டு. *தின்னுக/தின்க, காணுக/காண்க*. மலயாளத்தில் செயுக, செய்க ஆகிய இரண்டு வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது (Michail S. Andronov. 1996: 153). எ-டு. *அறியுக/அறிக, வாழுக/வாழ்க, செய்யுக/செய்க* வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைப் பகுதிகளையடுத்து, ககர விகுதி நிகழும் நிலை மலயாளத்தில் காணப்படுகிறது. எ-டு. *கொடுக்குக* (<கொடுக்கு+க), *குடிக்குக* (<குடிக்கு+க), *நில்க்குக* (< நில்க்கு+க), *கேள்க்குக* (< கேள்க்கு+க). தமிழில் வல்வினை சார்ந்த செய்குக வாய்பாட்டு வினைகளுக்கு வாய்ப்பில்லை. இங்கே *கொடுக்க, குடிக்க, நிற்க* முதலான வல்வினை சார்ந்த செய வாய்பாட்டு வினைகளே வியங்கோள் வினைகளாக நிகழ்கின்றன. இங்கே இன்னொரு செய்தியையும் குறிப்பிட்டாக வேண்டும். மலயாளத்தில் செயுக/செய்க, செய்குக வாய்பாட்டு வினைகள் வியங்கோள் வினைகளாக நிகழ்வதில்லை. அங்கே அவை தொழிற்பெயர்களாகக் கருதப்படுகின்றன. இந்த முரண்பட்ட நிலைக்குக் காரணம் என்ன? செய்க வாய்பாட்டு வினைகள் *செய்கய் (=செய்கை), *செய்கவ் (<*செய்கம்) ஆகிய இரண்டு தொல் வாய்பாட்டு வடிவங்களின் திரிபாகும். *செயுகய்* (=செயுகை) வாய்பாட்டு வடிவங்களின் ஒடுக்கமாகிய *செய்கய்* (=செய்கை) வாய்பாட்டு வடிவங்கள் தமிழில் தொழிற்பெயர் களாகவும் நிகழற்பாலனவாகும்.[12] மலயாளத்தில் நிகழும் செயுக/ செய்க வாய்பாட்டு வினைகள் தொழிற் பெயர்களாகக் கருதப் படுவதற்குக் காரணம் அவை *செயுகய் வாய்பாட்டு வினைகளின் தொடர்ச்சியாகும்.[13] அதனால்தான் அவை அந்த மொழியில்

---

12. பழந்தமிழில் செய்கை வாய்பாட்டு வினைகள் அரிதாகச் செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு நிகராகவும் நிகழ்கின்றன. எ-டு. *பாகல் ஆர்கைப் பறைக்கட் பீலி* (அகம். 15.4)

13. செய்கவ் வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியானது பழந்தமிழில் உயிர் முதலாகிய வருமொழியின்முன் பதிவு செய்யப்பட்டுள்ளது. கருதுக:

(1) யாணர் ஊரன் வாழ்க
பாணனும் *வாழ்கவென* வேட்டேமே (ஐங். 1. 5, 6)

(2) வாழ்க்கை *பொலிக வென*வேட் டேமே (ஐங். 3. 6)

(3) தண்டுறை யூரன் தேரெம்
முன்கடை *நிற்க வென*வேட் டேமே (ஐங். 5. 5, 6)

(4) தண்டுறை யூரன் வரைக
எந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே (ஐங். 6. 5, 6)

இந்த எடுத்துக்காட்டுக்களில் *வாழ்கவென, பொலிகவென, நிற்கவென, கொடுக்கவென* ஆகியவற்றில் எனவென் கிளவி முன் நிகழும் வகரம் மரபிலக்கணிகளால் உடம்படுமெய்யாகக் கருதப்பட்டதால் ஒரு வரலாற்று

வியங்கோள் வினைகளாக நிகழ்வதில்லை. தமிழில் வியங்கோள் வினைகளாக நிகழும் செய்க வாய்பாட்டு வினைகள் செய்கவ் வாய்பாட்டு வினைகளின் தொடர்ச்சியாகும். அதனால்தான் தமிழில் தொழிற்பெயர்களாக இனங்காணப்படுவதில்லை. மலயாளத்தில் செயுக/செய்க வாய்பாட்டு வினைகள் செயாய்க வாய்பாட்டு எதிர்மறை வினைகளைக் கொண்டுள்ளன (Michail S. Andronov 1996: 154). எ-டு: *அறியாய்க, சொல்லாய்க, வராய்க, மறக்காய்க/மறவாய்க*. இவற்றின் உடன்பாட்டு வடிவங்கள் *அறியுக, சொல்லுக, வருக, மறக்குக/(மறவுக)* ஆகியன வாகும். தமிழில் நிகழும் செய்க வாய்பாட்டு வினைகள் இத்தகைய எதிர்மறை வினைகளைக் கொண்டவையல்ல. மலயாளத்தில் நிகழும் செயுக/செய்க வினைகளும் தமிழில் நிகழும் செய்க வினைகளும் மாறுபட்ட மூலங்களைக் கொண்டவை என்பதை மேலே குறிப்பிட்ட உண்மைகள் தெளிவுபடுத்துகின்றன. ஆயினும் ஓர் உண்மையை இங்கே நாம் கருத்தில் கொள்ள வேண்டும். மலயாளச் செயுக/செய்க வினைகளும் தமிழில் நிகழும் செய்க வினைகளும் வரலாற்று நிலையில் செய்கு வாய்பாட்டு வினைகளின் மீது தோன்றியவை என்பதே அந்த உண்மை.

---

<u>*13-ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி*</u>

உண்மை புதையுண்டு போயிற்று. வகரமானது நிலைமொழியின் ஈற்றில் நிகழ்வதாகும். செய்கவ் வாய்பாட்டு வினைகளின் ஈற்றசை எடுத்தொலிக்கப் படாத நிலையில் ஈற்று வகரம் கெடுகிறது. உயிர் முதலாகிய வருமொழியின் முன் அது மீண்டும் மீட்கப்படுகிறது. வண்ணனை நிலையில் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளைச் *செய்கவ் வாய்பாட்டினவாக மீட்டுருவாக்கம் செய்வதற்குக் கண்மணி குணசேகரனில் *(2004:123)* நிகழும் பின்வரும் வியங்கோள் வாக்கியங்களைக் கருத்தில் கொள்ளலாம்.

(5) **அது வவுத்தில புழுவு வைக்கோ**
**'அதன் வயிற்றில் புழு வைக்க'**

(6) **அவங் கட்டுத்தெருவுல கழுத கெடந்து பெரளோ**
**'அவன் கட்டுத் தெருவில் கழுதை கிடந்து புரள'**

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *வைக்கோ, பெரளோ* என்பவற்றில் காணப்படும் ஓகார வியங்கோள் விகுதியானது **அவ்* என்பதன் திரிபாகும். அதாவது வைக்கோ, பெரளோ என்பவை *வைக்கவ், *பெரளவ் என்பவற்றின் திரிபுகளாகும். அகரமானது நேரடியாக ஓ எனத் திரிவதற்கு வாய்ப்பில்லை. **அவ்* என்பது மொழி இறுதியில் ஒரு கிளைமொழியில் அகரமாகவும் இன்னொன்றில் ஓகாரமாகவும் நிகழ்வது இயல்பான நிகழ்ச்சியாகும். ஒகரம் மொழி இறுதியில் நிகழாதாகையால் அது ஓகாரம் என மேல் எடுத்துக்காட்டுக்களில் நிகழ்கிறது. எனவே *வைக்கோ, பெரளோ* ஆகியவற்றை ஒகர ஈற்றினவாகக் கொள்வதே பொருத்தமாகும். இதனைக் கருத்தில் கொண்டு *செய, செய்த* ஆகிய வினைகளும் *செயவ், செய்தவ்* வினைகளை மாற்றுருபுகளைக் கொண்டவை எனத் துணியலாம். பலவின்பால் விகுதியாகிய அகரமும் *அவ்* என்னும் மாற்றுருபைக் கொண்டதாகும்.

10.3. செய்கய் வாய்பாட்டு வினைகள் செய்க வாய்பாட்டின வாகத் தமிழில் அமைவதில்லை என்பதை ஒரு பொது விதியாகக் கொள்ளமுடியாது. இந்த வாய்பாட்டு வினைகள் பழங்கன்னடத்தில் செய்கெ வாய்பாட்டு வியங்கோள் வினைகளாகத் திரிந்தமையும் நிலைமையும் காணப்படுகிறது. (B. Ramachandra Rao. 1972: 138). கருதுக: ஆகு (a:gu) - *அக்கெ* 'ஆக', *போகு* (po:gu) 'போ' - *போக்எ* (po:ke), 'போக', *இர்* 'இரு' - இர்க்எ (irke) 'இருக்க', bar 'வா' - barke 'வருக', ஈ - ஈகெ (i:ge) 'ஈக', ஆறு - ஆறுகெ (a:ruge) 'ஆறுக', *தின்* - *தின்கெ* (tinge) 'தின்க'. இந்த எடுத்துக் காட்டுக்களில் நிகழும் வினைகளின் வியங்கோள் விகுதி பிறழாய்வின் காரணமாக -கெ, -ge எனக் கொள்ளப்படுகின்றது. உண்மையில் *அய் (=ஐ) என்பதன் திரிபாகிய எகரமே இந்த வினைகளில் வியங்கோள் விகுதியாகக் கொள்ளத்தக்கதாகும்.

10.4. செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகள் தமிழில் இரு திறத்தனவாகும். *நல்கு, பருகு, குறுகு, மயங்கு, விலக்கு* முதலானவை ஒரு வகையின. இவை முக்கால வினைகளின் வினையடிகளாக நிகழவல்லவை. *கொடுக்கு, கேட்கு, நிற்கு,* வருகு முதலானவை இரண்டாம் வகையின. இவை எதிர்கால வினைகள், எதிர்வெச்சவினைகள் - அதாவது செயவென் எச்ச வினைகள் - செய்யலாம் வாய்பாட்டு வினைகள், செய்கின்ற வினைகள் ஆகிய வற்றில் மட்டுமே வினைப்பகுதியாக நிகழவல்லவை. காரணம், இவை தொடக்கத்தில் செய்கு வாய்பாட்டு இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களாக நிகழ்ந்து பின்னர் வினைப்பகுதிகளாக நிலை மாறியவையாகும். செய்கிலன், செய்கிலள், செய்கிலர் முதலான வாய்பாட்டு எதிர்மறை வினைகளில் செய்கு வாய்பாட்டு வினைகள் இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களாக நிகழ்வதைக் காணலாம். செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் செய்கு வாய்பாட்டுப் பகுதிகளை இறவாக் காலப் பொதுவினை முற்றுக்களாகக் கொள்வதா, வினைப்பகுதிகளாகக் கொள்வதா என்பது கோட்பாட்டு நிலையில் சிந்திக்கத்தக்கதொன்றாகும். சற்றுமுன் நாம் மலயாளச் செயுக/செய்க வினைகளும் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளாகத் தமிழில் நிகழ்பவையும் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளின் மீது தோன்றி நிகழ்பவை என்று குறிப்பிட்டிருந்தோம். இந்த முடிபை ஒரு கருதுகோளாகத் தான் கொள்ளமுடியும். ஏனெனில் மேலே குறிப்பிட்ட வினை யமைப்புகள் இறப்புப் பொருண்மையை உணர்த்த வாய்ப்பில்லை. இவை அடிப்படையில் இறவாக்காலத்தைப் பின்புலமாகக் கொண்டவையாகும். மலயாளத்தில் நிகழும் செயுக/செய்க வாய்பாட்டு வினைகள் செய்வது வினைகளோடு பொருந்துமே தவிர செய்தது வாய்பாட்டு வினைகளோடு பொருந்துவனவல்ல.

இதேபோல் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகள் எதிர்காலத்தோடுதான் பொருந்தும். கருதுக: *கலைஞர் நீடூழி வாழ்க* என்ற வாக்கியத்தில் நிகழும் வியங்கோட் பயனிலையானது *வாழ்வார் ஆக* என்ற பயனிலைத் தொடரோடுதான் பொருந்துமே தவிர **வாழ்ந்தார் ஆக* என்ற பயனிலைத் தொடரோடு பொருந்தாது. இதனைக் கருத்தில் கொண்டு தமிழில் நிகழும் செய்க வாய்பாட்டு வினைகள், மலயாளச் செயுக/செய்க வாய்பாட்டு வினைகள் ஆகியவற்றைச் செய்கு வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்களின் மீது தோன்றியவையாகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது. முன்பே குறிப்பிட்டது போல் மேலே குறிப்பிட்ட வினையமைப்புக்களின் பகுதியாகிய செய்கு வாய்பாட்டு வினைகள் நடப்பில் உள்ள வழக்கு மொழியில் வினைப் பகுதிகளாக நிகழாமையால் வழக்கில் உள்ள வினையடிகளின்மீது நிகழ்பவையாக மேற்படி வினையமைப்புகள் வண்ணனை ஆய்வில் கருதப்படுகின்றன. இந்தக் கருதுகோள் வரலாற்று நிகழ்வுகளுக்கும் உண்மைகளுக்கும் எதிரானதாகும். ஆயினும் மொழியின் வளர்ச்சிப் போக்கில் வரலாற்று உண்மைகள் புதையுண்டு போவதும் மனம் இலக்கண விளக்கத்தை வண்ணனை ஆய்வில் தன் போக்கில் கட்டுப்படுத்துவதும் தவிர்க்க முடியாத அல்லது இயல்பான நிகழ்ச்சிகள் என்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

## *11.0 செய்யியர் – செய்யிய வியங்கோள்*

பழந்தமிழிலும் பின்பழந்தமிழிலும் நிகழும் செயியர் வினைகளும் செயிய வினைகளும் முறையே செயர், செய வாய்பாட்டு வல்வினைகளின் திரிபாகும். *விதையர்* (நற். 121.1), *தேயர்* (நற். 197.4), *பொலியர்* (புறம். 387.14), *முடியர்* (புறம். 171.7), *எறியர்* (பதி. 52.22) ஆகியவை செயர் வாய்பாட்டு வினைகளாகும்.[14]

---

14. செயர் வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியைப் பின்வரும் பழந்தமிழ்த் தொடரமைப்புக்களில் காணலாம்.

(1) *தேயர்* என்னுயிர் (நற். 197.4)

(2) நகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப் *பொலியர்* தன்சேவடி (புறம். 387. 13, 14)

(3) அருந்தொழின் *முடியரோ* திருந்துவேற் கொற்றன் (புறம். 171.7)

(4) *எறியர்* ஓக்கிய சிறுசெங் குவளை (பதி. 52.22)

(5) *விதையர்* கொன்ற முதையற் பூழி (நற். 121.1)

இந்த எடுத்துக்காட்டுக்களில் முதல் மூன்றில் நிகழும் தேயர் (=தேய்க), பொலியர் (=பொலிக), முடியர் (=முடிக்க) ஆகியவை வியங்கோள் வினைகளாகவும் இறுதி இரண்டில் நிகழும் எறியர் (=எறிய), விதையர் (=விதைக்க) ஆகியவை எதிர்வெச்சவினைகளாகவும் (Infinitives) இனங் காணத்தக்கவையாகும்.

செய வாய்பாட்டு வினைகளைப் போலவே செயர் வாய்பாட்டு வினைகளும் வியங்கோள் வினைகளாகவும் எச்சவினைகளாகவும் நிகழற்பாலனவாகும். தொடரனியற் சூழலின் (Syntactic Context) அடிப்படையில் இந்த இரு வாய்பாட்டு வினைகளும் வியங்கோளினவா, வினையடையினவா என்பது தெளிவாகும். வல்வினையடியாகத் தோன்றிய செயர், செய வாய்பாட்டு வடிவங்கள் எவ்வாறு செயியர், செயிய வடிவினவாகத் திரிந்தமைகின்றன என்பது இரா. கோதண்டராமனில் (2004: 120-122) விளக்கப்பட்டுள்ளது. இந்தத் திரிபு இங்கே சுருக்கமாக விளக்கப்படுகிறது.

**(14) *குடிய்க்கர் > குடிக்க்யர் > குடிக்கியர்**

**(15) *குடிய்க்க > குடிக்க்ய > குடிக்கிய** (குறுந்.356.4)

இத்தகைய திரிபுகள் குமரி மாவட்டத் தமிழ்க் கிளைமொழிகளில் காணப்படுகின்றன.[15] வல்வினைகளை நிலைக்களனாகக் கொண்டு தோன்றியமைந்த செயியர், செயிய வாய்பாட்டு வினைகளின் தாக்கத்தால் மெல்வினை சார்ந்த பிரிவிலும் இந்த வாய்பாட்டு வினைகள் தோன்றி நிகழலாயின. எ-டு. *காணிய* (நற். 222.10), *வாழிய* (நற். 20.7), *ஆளிய* (கலி. 118.7), *காணியர்* (பதி. 42.17), *வாழியர்* (பதி. 15.24).

## 12.0 செய்மே வாய்பாட்டு வினைகள்

12.1 செய்மே வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி பற்றிய குறிப்பானது *முன்னிலை முன்னர் ஈயும் ஏயும், அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே* (தொல். சேனா. 451) என்ற தொல்காப்பிய

---

15. யகரவீற்று வல்வினையடியாகத் தோன்றிய செய, செயர் வாய்பாட்டு வினைகளின் திரிபாக அமைபவையே செயிய, செயியர் வாய்பாட்டு வினைகள். வினையடிகளில் நிகழும் யகர ஈறானது இடம்பெயர்ந்தும், பிரதி செய்யப்பட்டும் செயிய, செயியர் வினைகள் தோற்றம் கொள் கின்றன. இந்த வகையில் இகர அகரவீற்று வினையடிகள் - *இய், அய்* ஈற்றனவாகவும், ஐகாரவீற்று வினையடிகள் - *அய்* ஈற்றனவாகவும் கொள்ளப்படும். *குடி, நட* என்பன *குடிய், *நடய்* எனக் குறிக்கப்பெற்று, **குடிய்க்க* என்பது குடிக்க என்றும், **நடய்க்க* என்பது நடக்க என்றும் யகரம் கெட்டு அமைகின்றன. யகரம் இடம்பெயர்ந்து **குடிக்க்ய, *நடக்க்ய* என வடிவு திரிந்து அதனின்றும் *குடிக்கிய, நடக்கிய* என்ற வடிவங்கள் தோன்றுகின்றன. *மேய்க்க* என்பதில் நிகழும் யகரம் பிரதி செய்யப்பட்டு **மேய்க்க்ய* என்ற வடிவம் பெறப்பட்டு அதனின்றும் *மேய்க்கிய* என்ற வினை தோன்றுகிறது. *குடிக்கிய, நடக்கிய, மேய்க்கிய* என்பவற்றில் யகரத்தின்முன் நிகழும் இகரம் இயல்பற்ற மெய்ம் மயக்கமாகிய *-க்ய* என்பதைத் தவிர்ப்பதற்காகச் செருகப்பட்ட இலக்கணத் தன்மையற்ற ஒலித்துணை உயிராகும். இந்த இகரம் யகரத்தின் இனவுயிராகும்.

நூற்பாவின் மூலம் தெரியவருகிறது. இந்த நூற்பாவில் நிகழும் *முன்னிலை* என்பதை "செய்யென் கிளவியாகிய முன்னிலை" எனவும் *அந்நிலை மரபின் மெய்* என்பதை "வினையீற்று வேறுபாட்டிற்கு" ஏற்ற மெய் எனவும் விளக்கும் சேனாவரையர் "ஏகாரம் மகரம் ஊர்ந்தல்லது வாராது" என்று குறிப்பிடுவார். செய்மே வாய்பாட்டு வடிவமைப்பைப் பற்றிக் குறிப்பிடுகையில் "இவை நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையின், புணர்ச்சி விகாரமின்றி முன்னிலைச் சொல் விகாரமாயிற்று" என்று விளக்குவார் நச்சினார்க்கினியர் (தொல்.சொல்.451. உரை). செய்தீ, செய்மே வாய்பாட்டு வினைகளில் நிகழும் "ஈகாரமும் ஏகாரமும் விகுதியுருபல்ல; இவை ஏவற்கண் வரும் எழுத்துப் பேறுகள். விகுதியுருபின் பொருளின்மையால் இவையிரண்டும் முன்னிலையசைகளாம்" என்று சங்கர நமச்சிவாயர் (நன்னூல் 336) கருதுவதாகக் கோபாலையர் (2005: 92) குறிப்பிடுவார். இந்தக் குறிப்புகள் எல்லாம் மரபிலக்கணப் புலமை சார்ந்தவையாகும். ஆனால் உண்மை என்பது இதனின்றும் மாறுபட்டது.

12.2 பழந்தமிழில் செய்மே வாய்பாட்டு வினைகள் முன்னிலை ஒருமை குறித்த வியங்கோள் வினைகளாக நிகழ்கின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

16(1) **நாமுளேம் ஆகப் பிரியலன் தெளிமே** (குறு. 273. 8)

(2) **அட்டில் ஓலை தொட்டனை நின்மே** (நற். 300.12)

(3) **மரந்தை யன்னவென் நலந்தந்து சென்மே** (அகம். 376.18)

(4) **நின்னாங்கு வரூஉமென் நெஞ்சினை**
**என்னாங்கு வாராது ஓம்பினை கொண்மே** (கலி. 23.18, 19)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *தெளிமே, நின்மே, சென்மே, கொண்மே* ஆகியவை *தெளிம்* (<தெளியும்)+ஏ, *நின்ம்*(<நிலும்)+ஏ, *சென்ம்* (<செலும்)+ஏ, *கொண்ம்* (<கொளும்)+ஏ என்ற அமைப்பினவாகும். தெலுங்கில் பாடும/பாடுமா, பாடுமி/பாடுமீ வாய்பாட்டில் அமைந்த ஏவல் கண்ணிய முன்னிலை ஒருமை வினைகள் காணப்படுகின்றன (Paravastu Cinnaya Su:ri. 2002:213). இந்த வினைகள் *பாடும்+அ/ஆ/இ/ஈ* என்ற அமைப்பினவாகும். பழந்தமிழில் நிகழும் *ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே* (புறம். 193.4) என்ற வாக்கியத்தில் காணப்படும் *தட்குமா* என்ற வினையமைப்பையும் இந்த ஆய்வில் கருத்தில் கொள்ளவேண்டும். வைத்தியநாத தேசிகர் (இ.வி. சொல். 275) *தட்குமா* என்னும் வினையின் அமைப்பைத் *தட்கு+மா* எனக்கொண்டு அதில் நிகழும் மாவென் கிளவியை

அசைச்சொல்லாகக் கருதுவார். பிறழாய்வின் காரணமாக அமைந்த இந்த ஆய்வு ஏற்புடையதன்று. *தட்குமா* என்ற வினையானது *தட்கும்+ஆ* என்ற அமைப்பினதாகும். *தட்குமா* என்ற வினையமைப்பில் *தளைக்கும்* என்ற பொருண்மையதாக நிகழும் *தட்கும்* என்பது *செய்கும்* வாய்பாட்டினதாகக் கொள்ளத் தக்கதாகும். இதனால்தான் *தட்குமா* என்பது படர்க்கை இடத்ததாக நிகழ்கிறது. *தட்கும்* என்பதன் வினைப்பகுதியாகிய *தட்கு* என்பது *செய்கு* வாய்பாட்டினதாகும்.[16]

12.3. தமிழில் நிகழும் செய்மே வாய்பாட்டு வினைகளும் தெலுங்கில் நிகழும் *சேயும/சேயுமா, சேயுமி/சேயுமீ* வாய்பாட்டு வினைகளும் **செய்மய்* (=செய்மை) வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகும்.[17] நெல்லைத் தமிழில் முன்னிலை ஒருமையில் வழங்கும் *செய்யுமே, செய்வே* (<செயுமே) வாய்பாட்டு வினைகளும் தெலுங்கில் முன்னிலை ஒருமைக்குரிய *சேயவெ/சேயவே* (<சேயுவெ/சேயுவே) வாய்பாட்டு வினைகளும் **செய்மய்* வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகும்.[18] செய்மே வினைகளுக்கு நேரான எதிர்மறை வினைகளின் நிகழ்ச்சி தமிழில் காணப்படவில்லை.

### 13.0 செய்மோ வாய்பாட்டு வினைகள்

13.1 தமக்கென உரிய எதிர்மறையற்ற செய்மோ வாய்பாட்டு வினைகளைத் தொல்காப்பியர் (தொல்.சேனா. 273) *செய்+மோ*

---

16. *தட்கு* என்னும் வினைப்பகுதி *தள்* என்னும் வினையடியின்மீது தோன்றியதாகும். கருதுக: *தட்டோ ரம்ம விவட் டட்டோரே, தள்ளா தோரிவட் டள்ளா தோரே* (புறம். 18. 29, 30). இந்த எடுத்துக்காட்டில் *தட்டோர்* (=தளைத்தோர்) என்பது *தள்* என்னும் வினையடியினதாகும். இதன் நிகழ்ச்சியைத் *தள்ளாதோர்* (=தளையாதோர்) என்ற எதிர்மறை வினையமைப்பில் காணலாம்.

17. தெலுங்கில் நிகழும் *தினும* (<தினும்+அ), *பாடும* (<பாடும்+அ) முதலான செயும வாய்பாட்டு வினைகள் முன்னிலை ஒருமை ஏவல்வினைகளாகக் கருதப்படுகின்றன. (R. Narasimhacharya. 1969: 135, Bh. Krishnamurti.2003: 359) *ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே* (புறம். 193.4) என்ற வாக்கியத்தில் நிகழும் *தட்குமா* (<தட்கும்+ஆ) என்ற வினையமைப்பும் *செயும* (செயும்+அ) வாய்பாட்டு தெலுங்கு வினையமைப்புகளும் ஒரு நிகரனவாகும். தெலுங்கிலும் தமிழிலும் நிகழும் இத்தகைய வினைகளை வியங்கோள் வினைகளாகக் கொள்ள முடியுமா என்பது கேள்விக்குரியதாகும்.

18. செய்யாமை வாய்பாட்டு எதிர்மறைக் குறிப்பு வினைகளுக்கு எதிரான உடன்பாட்டு வினைகள் தமிழில் காணப்படவில்லை. செய்மே வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவமாகிய **செய்மய்* வாய்பாட்டு வினைகளைச் செய்யாமை வாய்பாட்டு வினைகளுக்குரிய உடன்பாட்டு வினைகளாகக் கருதலாம் என்று தோன்றுகிறது.

என்ற அமைப்பினவாகக் கொண்டு *மோ* என்பதை முன்னிலை அசைச் சொல்லாகக் குறிப்பிடுவார். இந்த வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியானது. பழந்தமிழிலும் பின்பழந்தமிழிலும் பரவலாகக் காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

**17(1) நீடினை விளைமோ வாழிய தினையே** (நற். 251.11)
**(2) நீயும் வம்மோ முதுவாய் இரவல!** (புறம். 180.9)
**(3) சென்மோ விரவல சிறக்க நின் உள்ளம்** (பத்துப். 4. 45)
**(4) புலக்குவேம் அல்லேம் பொய்யா துரைமோ** (ஐங். 80.1)
**(5) மாமறை மாக்கள் வருகுலம் கேண்மோ** (மணி. 13.93)
**(6) எழிற்றகை மார்பற்கு இன்யாழ் இதுவுய்த்துக் கொடுமோ**
(சீ.சி. 715.4)

இந்த எடுத்துக்காட்டுக்களில் செய்வாயாக என்ற வாய்பாட்டுப் பொருண்மையதாக நிகழும் *விளைமோ, வம்மோ, சென்மோ, உரைமோ, கேண்மோ, கொடுமோ* ஆகியவை *செய்ம்+ஓ என்ற வாய்பாட்டு அமைப்பினவாகும். தொதுவ (Toda) மொழியில் செய்மொ வாய்பாட்டு வினைகள் வியங்கோட் பண்பினவாகும் (Bh. Krishnamurti. 2003:361). எ-டு. *நட்மொ* (naDmo) **நடக்க/ நடமோ*. இவை செய்ம்+ஒ என்ற அமைப்பினவாகும். செய்மோ, செய்மொ ஆகிய வாய்பாட்டு வினைகளில் ஓவென் கிளவியும் ஒகரக் கிளவியும் **அவ்* என்பதன் திரிபாகும். இதனின்றும் செய்மோ (த), செய்மொ (தொ) வாய்பாட்டு வியங்கோள் வினைகள் *செய்மவ் வாய்பாட்டு வடிவங்களின் திரிபெனக் கொள்ளத்தக்கனவாகின்றன. *செய்மவ் வாய்பாட்டு வினைகள் *செய்மம் (<செய்ம்+அம்) வாய்பாட்டு வினைகளினின்றும் தோன்றியவையாகும். இந்த அமைப்பில் நிகழும் *-அம்* என்பது *ஆம்* என்பதன் குறில் வடிவமாகும். இது இருப்பு/ஆக்கம் என்ற பொருண்மைத்தாகிய *அய்* (=ஐ) என்னும் வினையடியாகத் தோன்றியதாகும்.[19] தமிழில் செய்மோ வாய்பாட்டு வினைகள் முன்னிலையிடத்தனவாகும். தொதுவ மொழியில் செய்மொ வினை களின் நிகழ்ச்சிக்களங்கள் தெளிவுபடுத்தப்பட வேண்டியதாகும்

19. *ஆம்* என்பது *ஆய்* என்ற வினையடியைக் கொண்டதாகும். தெலுங்கில் நிகழும் *அகு* என்னும் குறில் வடிவமும் தமிழில் நிகழும் *ஆகு* என்னும் நெடில் வடிவமும் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளாகும். இவை முறையே **அய், *ஆய்* என்ற வினையடிகளின் மீது தோன்றியவையாகும்.

13.2. செய்மே, செய்மோ, செய்மதி, செய்மின் ஆகிய வாய்பாட்டு வினைகள் வல்வினை-மெல்வினைப் பிரிவு தமிழில் தோன்றுவதற்கு முன்பே வழங்கியவையாகும். அதனால்தான் நின்மே, கேண்மே, கொடுமோ, கொடுமதி, கொடுமின் முதலான வினைகள் வல்வினைக்குரியனவாக அமையாமல் மெல்வினைக்கு இணையானவையாகப் பழந்தமிழில் நிகழ்கின்றன. வல்வினைக் குரியவையாயின் இவை முறையே *நிற்குமே, *கேட்குமோ, *கொடுக்குமோ, *கொடுக்குமதி, *கொடுக்குமின் என நிகழ வேண்டும். ஆனால் அவ்வாறு நிகழவில்லை. எனவேதான் நின்மே, கேண்மோ, கொடுமோ முதலானவை வல்வினை-மெல்வினைப் பிரிவு தோன்றுவதற்கு முன்பே வழக்கில் நிகழ்ந்தவை என்று கருதப்படுகிறது.

### 14.0 செய்யவும் வாய்பாட்டு வினைகள்

இக்காலத் தமிழில் செய்யவும் வாய்பாட்டு வினைகள் முன்னிலையில் வியங்கோள் வினைகளாக நிகழ்கின்றன. எ-டு. *நீ/நீர், நீங்கள் உடனே இங்கே வரவும்; அவரைப் பார்க்கவும்.* இந்த வினைகள் செய்யவ்+உம் என்ற வாய்பாட்டு அமைப்பின வாகும். செய்யவ் என்பது ஈற்று வகரத்தை இழந்து செய வாய்பாட்டு வினைகளாகவும் நிகழும். *நான் அவரைப் பார்க்கவா?* என்பதில் நிகழும் *பார்க்கவ்* என்பது செய்யவ் வாய்பாட்டினதாகும். செய்யவும் வாய்பாட்டு வினைகளில் நிகழும் உம்மைக் கிளவி செயும் வாய்பாட்டு ஒருமை ஏவல் வினைகளில் நிகழும் உம்மைக் கிளவியோடு ஒப்புநோக்கத்தக்கதாகும். அவியக்அ (Havyaka) அந்தணரின் கன்னடக் கிளைமொழியில் செயவ் (=செய்யவ்) வாய்பாட்டு வினைகள் செயொ வாய்பாட்டினவாகத் திரிந்தும் திரியாமலும் செய்யவேண்டும் என்ற வாய்பாட்டுப் பொருண்மையை உணர்த்துகின்றன (K.G.Shastri. 1971: 258). எ-டு. *நர்பலி கொடவ் ஹேளி* 'நரபலி கொடுக்கவேண்டும் என்று', *மாவ்ன்-ஹண்ண் தின்னவ் ஹேள் பந்த்உ* (bantu) *அவ்ன் மனுஸ்னல்லி* (பக். 252) 'மாம்பழம் தின்னவேண்டும் என்று அவன் மனதில் வந்தது (=தோன்றியது)', *சுடவ் ஹேளி மகுன்ஹத்ர ஹேள்ச்-அட* (பக். 303) 'சுட வேண்டும் என்று மகனிடம் சொன்னாளாம்', *யேன் மாடவு நிங்கெ* (பக். 289) 'என்ன செய்யவேண்டும் உங்களுக்கு', *மத்தத்* (maddatt) *மாடொ ஹேளி... ஹேள்த* (பக். 267) 'உதவி செய்யவேண்டும் என்று கேட்டான்'. இந்த எடுத்துக்காட்டில் *மாடொ* என்பது **மாடொவ்* என்பதன் திரிபாகும்.

## 15.0 எதிர்மறை வியங்கோள்

மூன்று வகையான எதிர்மறை வியங்கோள்வினைகள் பழந்தமிழில் காணப்படுகின்றன. ஒன்று, செயல் வாய்பாட்டினதாகும். இரண்டாம் வகை *இல்* என்னும் எதிர்மறைக் கிளவியின் அடியாகத் தோன்றி நிகழ்வதாகும். செய்யற்க வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகள் மூன்றாம் வகையினவாகும்.

## 16.0. செயல் வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள்

16.1 அல் என்னும் எதிர்மறைக் கிளவியைக்கொண்ட செயல் வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி பழந்தமிழிலும் பின் பழந்தமிழுலும் காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

18(1) **வாரல் வாழியர் ஐய** (அகம். 92.5)

(2) **அழியல் வாழி தோழி** (குறுந். 73.2)

(3) **வாரலெஞ் சேரி தாரனின் றாரே** (குறுந். 258.1)

(4) மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி (குறள். 1119)

(5) **சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்** (சிலம்பு. 7.23.1)

(6) **ஆழல் வாழி தோழி** (அகம். 85.5)

(7) **ஆழல் ஆன்றிசின் நீயே** (அகம். 69.4)

(8) **வருந்தல்நீ யெம்மனை வருக வென்னவே** (சீ. சி. 327)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *வாரல், அழியல், தாரல், தோன்றல், சேரல், ஆழல்* (=அழாதே), *ஆழல்* (=ஆழ்ந்துபடாதே), *வருந்தல்* ஆகியவை முன்னிலையிடத்து எதிர்மறை ஒருமை ஏவல் வியங்கோளாகச் செயல்படுகின்றன. செயால், செயேல் வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சியும் பழந்தமிழிலும் பிந்திய தமிழிலும் பதிவாகியுள்ளது.

19(1) *மறைக்குங் காலை மரீஇயது ஒராஅல்*
(தொல்.சொல்.சேனா. 443)

(2) *அழாஅல் என்றுநம் அழுதகண் துடைப்பார்* (குறுந். 82.2)

(3) *எழாஅல் வல்லை யாயினும் தொழாஅல்* (நற். 380.8)

(4) *உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்* (திருப்பாவை. 17)

(5) *இயல்வது கரவேல்* (ஆத்திசூடி. 3)

இவற்றில் *அழாஅல், தொழாஅல், உறங்கேல், கரவேல்* ஆகிய நான்கும் முன்னிலையிடத்து நிகழ்கின்றன. *ஒராஅல்* என்பது

படர்க்கை, முன்னிலை ஈரிடத்தும் கொள்ளத்தக்கதாகத் தோன்று கிறது. *செயாஅல்* வினைகள் *செய்யாது* என்னும் பொருண்மைக் குரிய எதிர்மறை வினைப்பயனிலையாகவும் நிகழவல்லவை. *செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்* (தொல்.சொல்.சேனா. 13) என்பதில் *வழாஅல்* என்பது *வழுவாது* என்ற பொருண்மைக்குரிய முற்றெச்சமாக நிகழ்வது இதனை உறுதிப்படுத்துகிறது.

16.2 செயல், செயால், செயேல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் *அல், ஆல், ஏல்* ஆகிய மூன்றும் எதிர்மறைக் கிளவிகளாகும். இவையே வியங்கோட் பொருண்மையையும் உணர்த்துவன வாகின்றன. செயல் வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினை களையும் செய்யற்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளையும் அமைப்பியல் நோக்கில் ஒரு திறத்தனவாகக் கொள்வதற்கில்லை.

### 17.0. இல்+வியங்கோள்

17.1 இரண்டாம் வகைக்குரிய இல்+வியங்கோள் வாய்பாட்டு எதிர்மறை வினைகளைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

**20(1) பசியில் லாகுக** (ஐங். 5.2)

**(2) களவில் லாகுக** (ஐங். 8.2)

**(3) தீதில் லாகுக** (ஐங். 9.2)

**(4) கேண்மை யில்லாகியர்** (புறம். 190.5) 'நட்பு இல்லையாக' (உரை)

**(5) வயிறுமா சிலீயர் அவனீன்ற தாயே** (பதி. 20. 27)

இவற்றுள் *இல்லாகுக* என்பது *இல்லையாக* என்று பொருள்படும். *இல்* என்பதையடுத்து *ஆகுக, ஆகியர், ஈயர்* ஆகியவற்றின் நிகழ்ச்சியை மேல் எடுத்துக்காட்டுக்களில் காணலாம். *இல்லாகியர்* என்பதற்கு *உளவாகியர்* (புறம். 190.12) என்ற உடன்பாட்டுக் குறிப்பு வியங்கோள் வினையும் பழந்தமிழில் காணப்படுகிறது. *ஆகிலியர்* (புறம். 29.12) 'ஆகாதாக', *காணிலியர்* (பதி. 44.8) 'காணாதாக' ஆகிய எதிர்மறை வியங்கோள் வினைகள் ஆகு/ காண்+இலியர் என்ற அமைப்பினவாகும். இவற்றில் நிகழும் *இலியர்* என்பது *இல்+இயர்* என்ற அமைப்பினதாகும். *ஆகிலியர், காணிலியர்* ஆகியவற்றின் உடன்பாட்டு வியங்கோள் வடிவங்கள் *ஆகியர், காணியர்* என்பனவாகும்.

17.2 செயால்+இயர் என்ற வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சியும் பழந்தமிழில் அருகிய வழக்காகக் காணப்படுகின்றது. எ-டு. *இறாஅலியர்* (பதி. 40.2) 'தங்காதாக', *தவாலியர்* (அகம். 338.15, பதி. 14.22) 'கெடாதாக'. செய்யியர்

வாய்பாட்டு உடன்பாட்டு வியங்கோள் வினைகளில் நிகழும் *இயர்* என்னும் வியங்கோள் விகுதியின் நிகழ்ச்சியே *இலியர், தவாலியர்* ஆகியவற்றிலும் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. *இலீயர்* என்பதில் நிகழும் *ஈயர்* என்பது *கொடீஇயர்* (குறு. 51.5), *உணீஇயர்* (குறு. 27.4) ஆகியவற்றில் காணப்படும் *ஈயர்* என்பதன் விரிவாகும். இந்த விரிவாக்கம் ஒப்புமையாக்கத்தின் தாக்கமாகக் கருதத்தக்கதாகும். எதிர்மறை வியங்கோள் வினைகளில் நிகழும் *இயர், ஈயர்* ஆகியவை 'ஆக' என்ற வியங்கோட் கிளவியின் பொருண்மையன வாகும். செய்யியர், செய்யிய வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-இயர், - இய* என்பவற்றுக்கும் இது பொருந்தும். செய்யியர், செய்யிய வாய்பாட்டு வினைகள் வல்வினை சார்ந்த செயர், செய வாய்பாட்டு வினைகளின் திரிபு என்பது முன்பே குறிக்கப் பெற்றுள்ளதால் (பார்க்க. 11.0) இந்த வினைகளில் நிகழும் *-அர், -அ* என்ற விகுதிகளும் *ஆக* என்னும் வியங்கோள் வினையின் பொருண்மைக்குரியன வாகின்றன.

### 18.0. செய்யற்க வியங்கோள்

18.1 பழந்தமிழிலும் பின்பழந்தமிழிலும் பரவலாகக் காணப் படும் செய்யற்க வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகள் இக்காலத் தமிழில் காணப்படவில்லை.[20] பின்பழந்தமிழில் *அழேற்க* (சீ.சி. 1051) (=அழாதே) என்ற செயேற்க வாய்பாட்டில் அமைந்த முன்னிலை ஒருமை எதிர்மறை வியங்கோள் வினையின் நிகழ்ச்சியும்காணப்படுகின்றது. செய்யற்க, செயேற்க வாய்பாட்டு வினைகள் செய்க வாய்பாட்டு உடன்பாட்டு வினைகளின் எதிர் மறை வடிவங்களாகும். இந்த வினைகளின் நிகழ்ச்சி மெல்வினை சார்ந்த வினையடிகளின் மீதே நிகழ்கின்றன. எ-டு. *செல்லற்க* (கலி. 56.33), *வாரற்க* (குறுந். 198.8), *மறவற்க* (குறள். 106). வல்வினை சார்ந்த வினையடிகளின் அடியாகத் தோன்றி நிகழும் செய்யற்க வாய்பாட்டு வினைகள் தமிழில் காணப்படவில்லை. **கொடற்க, *குடியற்க, *கல்லற்க, *கேளற்க* முதலானவற்றின் நிகழ்ச்சி தமிழில் காணப்படவில்லை. ஆனால் கோட்பாட்டு நிலையில் இவை ஏற்புடையனவேயாகும். **கொடுக்கற்க, *குடிக்கற்க, *கற்கற்க, *கேட்கற்க* முதலான வினைகளுக்குத் தமிழில் வாய்ப்பே இல்லை. ஏனெனில் *கொடுக்குக, குடிக்குக* முதலான வினைகளின் நிகழ்ச்சி மலயாளத்தில் காணப்பட்டாலும் தமிழில் அத்தகைய வினை களுக்கு வாய்ப்பில்லை. வல்வினை-மெல்வினைப் பிரிவு தமிழில்

---

20. ஒரோவழிப் பழந்தமிழில் செயாற்க வாய்பாட்டு எதிர்மறை வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படுகிறது. கருதுக: *எந்தையுள்ளடி, முள்ளுநோவ வுறாற்க* (புறம். 171. 12, 13)

தோன்றுவதற்குமுன் செய்யற்க வாய்பாட்டு வினைகள் வழக்கில் இருந்திருக்க வேண்டும். அதன் தொடர்ச்சியாகப் பழந்தமிழில் இவற்றின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. *நில்லற்க, *துடையற்க* ஆகியவை தமிழில் ஏற்புடையவையாயின் அவை வல்வினை-மெல்வினைப் பிரிவு தோற்றம் கொள்வதற்குமுன் முந்து தமிழ் (Pre-Tamil) வழக்கினவாக இருந்து தமிழில் பின்னர் அவை முந்து தமிழ் வழக்கின் எச்சமாக நிலை கொண்டிருக்கவேண்டும்.

18.2 வல்வினை-மெல்வினைப் பிரிவு தமிழில் தோன்றுவதற்கு முன்பே *சிறக்க, படைக்க, குடிக்க* முதலான வினைவடிவங்கள் வழக்கில் இருந்தன. இந்தப் பிரிவு தோன்றிய பிறகு மேற்படி வினைகள் வினைப்பகுதி+க்க என்று பிறழாய்வு செய்யப்பட்டன.[21] இந்தப் பிறழாய்வு மெல்வினைப் பிரிவுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. செய்யற்க வாய்பாட்டு எதிர்மறை வினைகள் *செய்-அல்+க்க* என்ற வண்ணனை அமைப்பினதாகும். இந்த அமைப்பாய்வு எடுத்துக் காட்டாக வல்வினை சார்ந்த *கேட்க* என்பது *கேள்+க்க* எனப் பிறழாய்வு செய்யப்பட்டதன் தாக்கமாகும். இந்த அமைப்பாய்வும் தொன்மொழியிலேயே நிகழ்ந்திருக்க வேண்டும். இந்த அமைப் பாய்வின் நிகழ்ச்சி வல்வினை-மெல்வினைப் பிரிவு தமிழில் தோன்றிய பிறகு மெல்வினைப் பிரிவில் மட்டும் நிகழலாயின. அதனால்தான் *வாரற்க, உண்ணற்க, சேரற்க, களையற்க* என மெல்வினைக்குரியனவாகச் செய்யற்க வாய்பாட்டு வினைகள் அமைகின்றன.

### 19.0. செயன்மார் வினைகள் வியங்கோள் வினைகளா?

19.1 பழந்தமிழில் செயன்மார் வாய்பாட்டு எதிர்மறை வினைகளின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகிறது. கருதுக:

21(1) **காமம் படரட வருந்திய**
**நோய்மலி வருத்தங் காணன்மார் எமரே** (நற். 64. 12, 13)

(2) **பீடின்று பெருகிய திருவிற்**
**பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே** (புறம். 375. 20, 21)

(3) **நின்னின்று வறுவி தாகிய வுலகத்து**
நிலவன் மாரோ புலவர் (புறம். 375. 17, 18)

(4) **ஐதகல் அல்குன் மகளிர்**
**நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே** (புறம். 389. 16, 17)

---

21. *சிறக்க, படைக்க* ஆகியவற்றின் பிறழாய்வு தொன்மொழியிலேயே நிகழ்ந்திருக்க வேண்டும்.

இந்த எடுத்துக்காட்டுக்களில் காணப்படும் செயன்மார் வாய் பாட்டு வினைகளைச் செய்க வாய்பாட்டு வினைகளின் எதிர்மறை யாகக் கருதுவார் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச். 209. உரை). செயன்மார் வாய்பாட்டு வினைகள், 'ஒரு *மொழிப் புணர்ச்சியான் மகரம்*" பெற்ற ஆரீற்று முற்றுச் சொற்களாகிய செய்வார் வாய்பாட்டு உடன்பாட்டு வினைகளின் எதிர்மறை எனக் குறிப்பிடும் சேனாவரையர் அவை மாறீற்றனவாகக் கொள்ளப் பட்டால் *செய்யாதொழிவார்* என ஏவற்பொருண்மையை உணர்த்தாது என்று கருதுகிறார் (தொல். சொல். சேனா. 207. உரை). செயன்மார் வினைகளை எதிர்மறை வியங்கோளாகக் கருதும் போக்கு இலக்கணவிளக்க ஆசிரியத்திலும் (இலக்கண விளக்கம். சொல். 232. உரை) எதிரொலிக்கிறது. பின்னர் வந்த வேங்கடராஜுலு ரெட்டியாரும் (1963: 78, 79) இந்தக் கருதுகோளை வழிமொழிகிறார்.

19.2. செயன்மார் வாய்பாட்டு வினைகளின் உடன்பாட்டு வினைகள் செய்வார் வாய்பாட்டின எனக் கருதும் போக்கு மரபு வழிப்புலமையில் அழுத்தமாகப் பதிந்துள்ளது. செயன்மார் வினைகளில் காணப்படும் மகரத்தின் நிகழ்ச்சியினை விளக்க மரபுவழிப் புலமை முற்படவில்லை. காரணம், தொல்காப்பியர் *செய்மார்* வினைகளில் *மார்* விகுதியைப் பலர்பால் விகுதியாகக் கொண்டதேயாகும். தொல்காப்பியரின் இந்த ஆய்வு நமக்கு உடன்பாடில்லை. இது தொடர்பான விரிவான ஆய்வினை இரா. கோதண்டராமனில் (2004: 58-60) காண்க. செய்மார் வினைகள் செய்-ம்+ஆர் என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் நிகழும் மகர விகுதியானது இறவாக்காலப் பொருண்மையதாகும். செயன்மார் வினைகள் தொடர்பான ஆய்வில் இந்த உண்மை கருத்தில் கொள்ளப்படவேண்டும். இல்லையெனில் *உண்மர்* (பதி. 24.18), *கொய்யுமோன்* (புறம். 252.3) ஆகிய வினைகளின் ஈறும் *-மர், -மோன்* எனக் கொள்ளப்படும் நிலை ஏற்பட்டுவிடும். உண்மை என்னவெனில் செயன்மார் வாய்பாட்டு வினைகளின் உடன்பாட்டு வினைகள் செய்மார் வாய்பாட்டின என்பதேயாகும். அவற்றைச் செய்வார் வாய்பாட்டினவாகக் கொள்வதற்கு வாய்ப்பேயில்லை.

19.3 செய்வார் வாய்பாட்டு வினைகளின் எதிர்மறை வினைகள் செய்யார் வாய்பாட்டினவாக அமையுமேயன்றிச் செயன்மார் வாய்பாட்டினவாக அமையமுடியாது. *செய்யாதி* (=செய்யாதே), *செய்யாது, செய்யாத, செய்யாதமை* ஆகியவற்றின் உடன்பாட்டு வினைகள் *செய்தி, செய்து, செய்யுத* (குமரிமாவட்ட வழக்கு)/ *செய்த,*

*செய்தமை* என்ற வாய்பாட்டினவாகும். இவற்றில் எதிர்மறையில் நிகழும் தகரம் உடன்பாட்டு வினைகளினின்றும் கொண்டு சேர்த்தல் மரபின்படி (Carry Over Principle) கொண்டு சேர்க்கப்பட்டதாகும். கொண்டு சேர்க்கப்படும் விகுதிகள் இலக்கணப்பொருண்மையை இழந்து வெற்றுறுப்பாகிவிடுகின்றன. இந்த நிலையில் செய்யாத என்ற எதிர்மறைப் பெயரெச்சத்தை எடுத்துக்காட்டாக, *செய்-ஆ-த்+அ* என்று ஆராயமுடியாது. அதனைச் *செய்-ஆத்+அ* என்றோ *செய்-ஆ+த* என்றோதான் ஆராயமுடியும். இதனைக் கருத்தில்கொண்டு செயன்மார் வினைகளில் நிகழும் மகரமானது செய்மார் வாய்பாட்டு உடன்பாட்டு வினைகளினின்றும் கொண்டு சேர்க்கப்பட்டதாகத் துணியப்படும். கொண்டு சேர்க்கப்படும் விகுதியானது எதிர்மறையில் இலக்கணப் பொருண்மையை இழந்தும் உடன்பாட்டு வினையில் இலக்கணத் தன்மையை உடையதாகவும் நிகழும் பெற்றியதாகும். எனவே செய்மார் வினையின் வரலாற்றமைப்பு *செய்-ம்+ஆர்* என்று கொள்ளப் படுமேயன்றிச் *செய்+மார்* என்ற அமைப்பினதாகக் கொள்ளத் தக்கதன்று. இந்த அடிப்படையில் இரண்டு உண்மைகள் கருத்தில் கொள்ளத் தக்கனவாகின்றன. ஒன்று, செயன்மார் வாய்பாட்டு எதிர்மறை வினைகளின் உடன்பாட்டு வினைகள் செய்மார் வாய்பாட்டினவாகும்; பிறிதொன்று, செய்மார் வாய்பாட்டு வினைகள் வியங்கோள் வினைகளாகக் கொள்ளத்தக்கனவல்ல என்பதால் செயன்மார் வினைகளையும் அவ்வாறு கொள்ள முடியாது. செயன்மார் வினைகள் *செய்யார்* அல்லது *செய்ய மாட்டார்* என்ற பொருண்மை விளக்கத்துக்கு உரியதேயன்றிச் *செய்யாதொழிக/செய்யாதொழிவார்* என்ற பொருண்மை விளக்கத்துக்கு உரியதன்று. இந்த நிலையில் செயன்மார் எதிர் மறை வினைகளைப் பலர்பால் குறித்த செய்வார் வாய்பாட்டு எதிர்மறை வினைகளாகக் கருத முடியாது.

## *20.0. கழிநெடில் வியங்கோள்*

தமிழில் கழிநெடில் வியங்கோள் வினைகள் செய்மதி, செய்கமா, செய்தைக்க, வினைமுற்று+ஆக எனப் பலவகையின வாகும். இவை இரண்டு உறுப்புகளைக் கொண்டவையாகும். முதல் உறுப்பு பொது அல்லது சிறப்பு வினைமுற்றையும் இரண்டாம் உறுப்பு ஆக என்னும் வியங்கோட் பொருண்மைக் குரிய உறுப்பையும் கழிநெடில் வியங்கோள் வினைகள் கொண்டுள்ளன. இதனைப் பின்வரும் அமைப்பு விளக்கத்தின் மூலம் தெளியலாம்.

| வினைமுற்று (பொது/சிறப்பு) | | | வியங்கோள் வினை |
|---|---|---|---|
| 1 | *செய்ம் (பொது) | + | அதி |
| 2 | *செய்கம் (பொது) | + | ஆ |
| 3 | *செய்து (பொது) | + | ஐக்க |
| 4 | வினைமுற்று(சிறப்பு) | + | ஆக |

இந்த அடிப்படையில் இனி, கழிநெடில் வியங்கோள் வினை வகைகள் ஒவ்வொன்றையும் ஆராயலாம்.

### 21.0. செய்மதி வாய்பாட்டு வியங்கோள்

செய்மதி வாய்பாட்டு வினைகளைத் தொல்காப்பியர் (சொல். சேனா. 274) *மதி* என்னும் முன்னிலை அசைச்சொல்லைக் கொண்டவையாகக் கருதுவார். முன்னிலையில் மட்டுமே நிகழும் செய்மதி வாய்பாட்டு வினைகள் செய்வாயாக அல்லது செய்வாய் ஆவாய் என்ற பொருண்மை விளக்கத்திற்கு உரியனவாகும்.[22] இந்த வாய்பாட்டு வினைகள் **செய்ம்+அதி* என்ற அமைப்பின வாகும். இந்த அமைப்பில் நிகழும் **அதி* என்பது முன்னிலை குறித்த இறவாக்காலச் செய்தி வாய்பாட்டினதாக அமைந்த தாகும். வழக்கற்றுப்போன இந்த வினை *ஐ* (=அய்) என்னும் வினை யடியின்மீது தோன்றியதாகும். *அதி* என்பது செய்மதி வாய்பாட்டு வினைகளில் ஆக என்னும் வியங்கோட் பொருண்மைத்தாகும்.

### 22.0. செய்கமா வினைகள்

22.1. *மாவென்கிளவி வியங்கோ ளசைச்சொல்* (சொல்.சேனா. 273) என்ற நூற்பாவின் மூலம் செய்கமா வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். பழந்தமிழில் இந்த வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி மிக அருகிய வழக்காகவே காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

22(1) **நோகோ யானே தேய்கமா காலை** (புறம். 116. 9, 234.1)

(2) **பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே** (கலி. 39.51)

(3) **புற்கை யுண்கமா கொற்கை யோனே**

(தொல்.சொல்.சேனா. 273.உரை)

---

22. செய்மதி வாய்பாட்டு வினைகள் முன்னிலை ஒருமைக்கு உரியவை யாயினும் பழந்தமிழில் *பெறலரும் பரிசில் நல்குமதி* (பத்துப். 1. 295) என்ற வாக்கியத்தில் நிகழும் *நல்குமதி* என்பது *தருகுவன்* என்ற பொருண்மைக் குரியதாகக் கருதப்படுகிறது (உரைக்குறிப்பு, உ.வே.சா. பதிப்பு). இது நுண்ணாய்வுக்குரிய ஒன்றாகும்.

(4) மாயக் கடவுட் குயர்கமா வலனே

(தொல்.சொல்.இளம். 268. உரை)

(5) ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே

(இ.வி.சொல். 275. எடுத்துக்காட்டு)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *தேய்கமா, பொலிகமா, உண்கமா, உயர்கமா, ஓர்கமா* ஆகியவையே இலக்கிய மொழியினின்றும் இலக்கண உரையினின்றும் நமக்குக் கிடைக்கும் *செய்கமா* வாய்பாட்டு வியங்கோள் வினைகளாகும். இவற்றுள் *பொலிகமா* என்பதற்கு நச்சினார்க்கினியர் *பொலிவதாக* என்று உரை வகுப்பார். இந்த வினைகளில் காணப்படும் மாவென்கிளவியானது *செய்க* வாய்பாட்டு வியங்கோள் வினைகளையடுத்து நிகழ்வதால் தொல்காப்பியர் இதனை வியங்கோளசைச்சொல் என்று கருதினார் போலும். பழங்கன்னடத்தில் *செய்கமா* வாய்பாட்டு வினைகளோடு தொடர்புள்ள *செய்கெம* வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது (B. Rama chandra Rao. 1972: 138). எ-டு. *குடுகெம* (KuDugema) 'கொடுக்கமா/கொடுக்க', *வேழ்கெம* (ve:ḻgema) 'சொல்கமா/சொல்க', *பிசுழ்கெம* (bisuḻkema) 'வீசுகமா/வீசுக'. இவற்றின் அமைப்பை மரபுவழிக் கன்னடப்புலமை *செய்கெ+எம* எனக் கொண்டாலும் கன்னட மொழியியலார் *செய்கெ-ம* என்றே கொள்கின்றனர். *செய்கமா* வாய்பாட்டு வினைகளைச் *செய்க+மா* என்ற அமைப்பினதாகத் தமிழ் இலக்கணப் புலவர்கள் கொள்வதும் இங்குக் கருத்தில் கொள்ளத்தக்கதாகும். *செய்கமா, செய்கெம* ஆகிய வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் அமைப்பாய்வு மறுபரிசீலனைக்குரியதாகும்.

22.2. தமிழில் மாவென் கிளவியும் பழங்கன்னடத்தில் மகரக் குறிலும் நிகழ்வதைச் *செய்கமா, செய்கெம* வாய்பாட்டு வினைகளில் காணலாம். இதனைக் கருத்தில்கொண்டு *மா, ம* இரண்டையும் **மய்* என்பதன் திரிபாகத் துணியலாம். இந்த ஆய்வானது *செய்கமா, செய்கெம* வாய்பாட்டு வினைகளைச் **செய்கமய், *செய்கமெய்* என மீட்டுருவாக்கம் செய்ய வகை செய்கிறது. ஆயினும் இவற்றின் அமைப்பை இந்த மீட்டுருவாக்கம் தெளிவுபடுத்தவில்லை. *ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே* (புறம். 193.4) என்ற எடுத்துக்காட்டில் நிகழும் *தட்குமா* என்பதன் உண்மையான அமைப்பு *தட்கும்+ஆ* என்பதாகும். இதேபோல் *செய்கமா, செய்கெம* ஆகியவற்றின் மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட **செய்கமய், *செய்கெமய்* ஆகியவற்றின் அமைப்பும் **செய்கம்+அய்* என்றும் **செய்கெம்+அய்* எனவும் கொள்ளப்படும்.

இவற்றில் நிகழும் **அய்* என்பது *செய்தைக்க* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *ஐக்க* என்ற வினையின் பகுதியாகிய *ஐக்கு* என்பதோடு தொடர்புடையதாகும். *ஐக்கு* என்னும் வினைப்பகுதி ஐயென்னும் வினையடியாகத் தோன்றியதாகும். செய்தைக்க வாய்பாட்டு வினைகளின் அமைப்பாய்வு அடுத்த பகுதியில் மேற்கொள்ளப்படுகிறது. **செய்கம்+அய்* என்பதில் நிகழும் **செய்கம்* என்பது **செய்கவ்* எனத் திரிந்து தமிழில் செய்க வாய்பாட்டு வினைகள் தோற்றம் கொண்டன. இதே போல் **செய்கெம்+அய்* என்ற அமைப்பில் **செய்கெம்* என்பது மகரத்தை இழந்து கன்னடத்தில் செய்கெ வாய்பாட்டு வியங்கோள் வினைகள் தோற்றம் கொண்டன. இந்த அமைப்புகளில் **செய்கம்/ *செய்கெம்* வினைகளை அடுத்து நிகழும் **அய்* (=ஐ) என்பது *ஆக* என்ற வினையோடு பொருந்தும். இந்த ஆய்வானது **செய்கம்/*செய்கெம்* வாய்பாட்டு வினைகளை இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களாகக் கொள்ள வகை செய்கிறது.[23] செய்க (<செய்கவ் <*செய்கம்) வாய்பாட்டு வினைகளை முன்னதாக நாம் செய்கு+அ என்ற அமைப்பினவாகக் கொண்டது இங்கே உறுதிப் படுத்தப்படுகிறது. இந்த அமைப்பில் நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகளை இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களாகக் கொள்ளவும் இந்த ஆய்வு வகைசெய்கிறது.

## 23.0. செய்தைக்க வியங்கோள்

*23.1* செய்தைக்க (=செய்க/எதிர்காலச் சிறப்பு வினைமுற்று+ ஆக) வாய்பாட்டு வியங்கோள் வினைகள் பழந்தமிழிலும் பின் பழந்தமிழிலும் அருகிய வழக்கினவாகவே காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

**(23) இன்றை யளவை சென்றைக் கென்றி** *(குறுந். 383.3)*

24(1) **தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க** *(கலி. 27.4)*
 **(2) ஆய மடமகளிர் எல்லீருங் கேட்டைக்க** *(சிலம்பு. 18.49)*
 **(3) எழுதெழின் மலருண்கண் இருந்தைக்க** *(சிலம்பு. 19.67)*
 **(4) இன்பத்தின் பக்கம் இருந்தைக்க** *(நாலடி. 79)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் (23)-இல் நிகழும் *சென்றைக்கென்றி* என்ற தொடர் *சென்றைக்கு+என்றி* என்ற அமைப்பினதாகும். இந்த அமைப்பில் காணப்படும் சென்றைக்கு என்பது

23. **தட்கும்+ஆ*(<*அய்) என்ற அமைப்பினதாகிய *தட்குமா* என்பது *தட்கும் ஆகும்* என்ற பொருண்மை விளக்கம் பெறும்.

*சென்றைக்க* என்பதன் மாற்றுருபாகும். வரிசையெண் (24)-இல் நான்கு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழ்பவை செய்தைக்க வாய்பாட்டினவாகும். *சென்றைக்கு* என்பது உ.வே.சா. பதிப்பில் *கழிக* என்று விளக்கப்படுகிறது. *மறந்தைக்க* என்பதை நச்சினார்க்கினியர் *மறப்பாராக* என விளக்குவார். சிலப்பதிகாரத்தில் நிகழும் *கேட்டைக்க* என்பதைக் *கேட்டை* என்னும் வினையசைச் சொல் என்றும், "ஈற்று வியங்கோட் பொருண்மையால் கேட்கவென்னும் பொருட்டாயிற்று" என்றும் *இருந்தைக்க* என்பது "(நீ) இருக்க" என்றும் உ.வே.சா பதிப்பில் விளக்கப்பெறுகின்றன. இந்தக் குறிப்புக்களைக் கருத்தில்கொண்டு நோக்கும்போது (23), (24)-இல் செய்தைக்கு/செய்தைக்க வாய்பாட்டு வினைகள் செய்க வாய்பாட்டு வியங்கோள் வினைகளின் பொருண்மையுடன் பொருந்துவது தெளிவாகின்றது. இந்த வினைகள் முன்னிலை, படர்க்கை ஈரிடத்துக்கும் உரிய பொது வியங்கோட் பயனிலையாக நிகழ்வதும் இங்கே கருத்தில் கொள்ளற்பாலதாகும். *நீ செல்வாயாக, கலைஞர் வாழ்வாராக, செல்வம் செழிப்பதாக* ஆகிய வியங்கோள் வாக்கியங்களைக் கருத்தில்கொண்டு (23), (24)-இல் நிகழும் செய்தைக்கு/செய்தைக்க வினைகளை எழுவாய்க்கேற்பச் செய்வாயாக, செய்வாராக, செய்வதாக என்ற வாய்பாட்டு வியங்கோட் பயனிலைத் தொடர்களின் பொருண்மையமைப்போடு பொருத்தலாம். செய்தைக்க வாய்பாட்டு வினைகள் செய்தை என்னும் வினையசைச் சொல்லோடு பொருந்தும்.[24] செய்தைக்க

---

24. தொல்காப்பியர் (சொல். சேனா. 426) *கேட்டை, நின்றை, காத்தை, கண்டை* நான்கும் முன்னிலையல்லாக்கால் அசைநிலையாகக் கொள்ளத்தக்கவை என்று குறிப்பிடுகிறார். செய்து+ஐ என்ற அமைப் பினவாகிய இந்த நான்கும் அசைநிலையாக நிகழுங்கால், இந்த அமைப்பில் நிகழும் *செய்து, ஐ* ஆகிய இரண்டு உறுப்புக்களில் பொருண்மை விளக்கம் என்னவாக இருக்கும்? செய்தல் வாய்பாட்டு வினைகளில் நிகழும் இறவாக்காலச் செய்து வாய்பாட்டு வினைகளோடு செய்தை வாய்பாட்டு அசைநிலை வினைகளில் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகளைச் சமன்படுத்தலாம். இந்தச் செய்து வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினைகளை எழுவாய்க்கேற்பச் *செய்வேன்/செய்வோம், செய்வாய்/செய்வீர், செய்வான், செய்வாள், செய்வார், செய்வது, செய்வன* ஆகிய வினைகளோடு சமன்படுத்த முடியும். இந்த முடிபானது செய்தை வாய்பாட்டு வினைகளில் நிகழும் ஐயென் கிளவியை ஒரு வினையாகக் கொள்ள வகை செய்கிறது. இந்த வினையின் நிகழ்ச்சியைக் கலித்தொகையில் வழங்கும் செய்தைப்பாய் (< செய்து+ஐப்பாய்) வாய்பாட்டு வினைகளில் காணலாம். இதில் நிகழும் ஐயென் கிளவி ஈயெனத் திரிந்து செய்தீ வாய்பாட்டு வினைகளில் நிகழ்கிறது. கருதுக: *வந்தீ* (கலி. 85.20), *வந்தீக* (நற். 221.12), *வந்தீத்தனர்* (கலி. 86. 28), *வந்தீம்* (அகம். 80.13, நற். 156.6), *வந்தீய* (கலி. 93.3), *வந்தீயாய்* (கலி. 114.5), *வந்தீயான்* (கலி. 71.10).

வாய்பாட்டு வினைகளில் நிகழும் ஐயென் கிளவியை முன்னிலை விகுதியாகக் கொண்டு அவற்றின் அமைப்பினைச் செய்து-ஐ+க என ஆராய்வார் தெ.பொ. மீனாட்சிசுந்தரன் (T.P. Meenakshisundaran 1964: 29). இந்த அமைப்பில் நிகழும் ககரத்தை வியங்கோள் விகுதியாகக் கொள்ளும் மீனாட்சிசுந்தரன் அதில் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகளைக் காலப்பொருண்மையற்ற தொல் முற்றுவினைகளாகக் கருதுவார்.[25] மீனாட்சிசுந்தரனின் செய்தைக்க வாய்பாட்டு வினைகள் தொடர்பான ஆய்வில் ஐயென் கிளவி முன்னிலையொருமை விகுதியாகக் கொள்ளப்படுகிறது. இந்த வினைகள் முன்னிலைப் பன்மையிலும், படர்க்கையிலும் நிகழ்வதை (23), (24)-இல் உள்ள எடுத்துக்காட்டுக்களில் காணலாம். எனவே மீனாட்சிசுந்தரனின் செய்தைக்க வாய்பாட்டு வினைக்ளின் அமைப்பியல் ஆய்வை ஏற்பதற்கில்லை.

23.2 செய்தைக்க வாய்பாட்டு வினைகளில் நிகழும் செய்து வாய்பாட்டு வினைகள் இறவாக்காலப் பொது வினைமுற்றுக்கள் (Non Past Impersonal Finite Verbs) ஆகும். எடுத்துக்காட்டாக *நீ மறந்தைக்க* என்ற வியங்கோள் வாக்கியம் *நீ மறப்பாய் ஆக* என்பதனோடு பொருந்தும். எழுவாய்க்கேற்ப இந்தப் பொது வினைமுற்று இறவாக்காலச் சிறப்பு வினைமுற்றோடு துணை நிலை வழக்கில் (Complementary Distribution) நிகழும். எனவே செய்தைக்க வாய்பாட்டு வினைகளை வியங்கோள் தன்மையன வாகக் கொள்வதில் சிக்கல் ஏதும் இல்லை. கிடைத்துள்ள

---

25. As for ceytu type of verbs figuring in ceytu-ai+ku type constructions, T.P. Meenakshisundaran maintains that "The importance of this is, that these forms, which we identify as *original finite tenseless predicates* (emphasis added) are being used from earlier times as conjunctive past participles in Tamil" (1964: 29). இந்தக் கருதுகோள் நமக்கு உடன்பாடில்லை. செய்து வாய்பாட்டு வினைகள் எச்ச வாக்கியத்தில் நிகழ்கையில் அதன் காலப்பொருண்மை யானது முற்று வாக்கியத்தில் வினைப்பயனிலையின் காலத்துக்கேற்ப அமையும் என்பது உண்மை. இதை மீனாட்சிசுந்தரனும் உணர்ந்திருக்கிறார். அவன் *உண்டு உறங்கினான்/உறங்குவான்* என்பதில் நிகழும் *உண்டு* என்பது *உண்டான், உண்பான்* என்ற முற்று வாக்கிய வினைப்பயனிலைக்கேற்பக் காலவிளக்கம் பெறும். ஆனால் செய்து வினைகள் முற்று வாக்கியத்தில் பயனிலையாக நிகழ்கையில் அவை சொல்லியல் நிலையில் ஒரு குறிப்பிட்ட காலத்தை உணர்த்தியாக வேண்டும். பயனிலையாக நிகழும் தெரிநிலைப் பொதுவினை முற்றுக்கள்தான் இறப்பெச்சங்களாகவும் எதிர்வெச்சங் களாகவும் எச்ச வாக்கியங்களிலும் நிகழ்கின்றன. எனவே செய்து வாய்பாட்டு வினைகள் தொடக்கத்தில் காலம் உணர்த்தாத பயனிலைகளாகத் தமிழில் நிகழ்ந்தன என்ற மீனாட்சிசுந்தரனின் கருதுகோளை ஏற்பதற்கில்லை.

தரவுகளில் அவை முன்னிலை, படர்க்கை ஆகிய ஈரிடங்களில் நிகழும் நிலை காணப்படுகிறது. ஆகவே செய்து வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்களின் அடியாகத் தோன்றிய வியங்கோட் பொது வினைகளாக (Impersonal Optatives) செய்தைக்க வாய்பாட்டு வினையமைப்புக்களை ஏற்றுக் கொள்வதிலும் தடையில்லை. அமைப்பைப் பொறுத்தவரையில் செய்தைக்க வினைகள் *செய்து+ஐக்க* என ஆராயத்தக்கவையாகும். *ஐக்க* என்பது வியங்கோள் வினையாகும். இது *ஆக* என்பதன் பொருண்மையதாகும். இந்த வினை *ஐக்கு+அ* என்ற அமைப்பினதாகும். *கொடுக்கு, கேட்கு, நிற்கு* என்பவற்றைப் போல *ஐக்கு* என்பதும் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதியாகும். *கொடுக்கு* என்பது *கொடு* என்னும் வினையடியாகத் தோன்றியதாகும். அதேபோல் *ஐக்கு* என்பதும் *ஐ* என்னும் வினையடியாகத் தோன்றியதாகும். வினையடிகள் மீது செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகள் தோன்றியமைந்தது ஒரு வரலாற்று நிகழ்வாகும்.[26]

23.3 ஐக்கு என்பதன் வினையடியாகிய *ஐ* என்பது *அய்* என்பதன் வரிவடிவக் குறியீடாகும். தெலுங்கில் நிகழும் *அகு* என்னும் இருப்பு/ஆக்க வினையானது *அய்* என்னும் வினையடியின்மீது தோன்றிய செய்கு வாய்பாட்டு வினைப்பகுதியாகும். *அயின* (=ஆகிய), *அயிந்தி* (<அயினதி) (=ஆயிற்று/ஆயினாள்), *அயித்ஏ* (=ஆனால்) ஆகிய தெலுங்கு வினையமைப்புக்களில் *அய்* என்ற வினையடியின் நிகழ்ச்சியைக் காணலாம்.[27] எனவே *ஐக்கு* என்ற வினைப்பகுதியில் நிகழும் ஐயென்பது இருப்பு அல்லது ஆக்கப் பொருண்மையை உணர்த்தும் வழக்கற்றுப்போன ஒரு தொல்வினையாகும். இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் உறுதிப்படுத்திக்கொள்ளலாம். *மள்ளர் கையதை, கூர்வாள்* (அகம். 144. 14, 15) (=மள்ளர் கையில் உள்ளதாகிய கூர்வாள்) என்ற தொடரில் நிகழும் ஐயென்வினையானது ஆகிய என்பதற்கு இணையான பெயரெச்சமாகவும், அதே வினையானது **கூர்வாள் மள்ளர் கையதை* (=கூர்வாள் மள்ளர் கையில் உள்ளதாகும்) என்ற மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட வாக்கியத்தில் *ஆகும்* என்னும் முற்றுவினைக்கு இணையாகவும் நிகழ்வதைக் காணலாம்.[28]

---

26. கொடுக்கு, நிற்கு, கேட்கு, *ஐக்கு, தருகு முதலான செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகள் தொடக்கத்தில் இறவாக்காலப் பொதுவினைமுற்றுக் களாக நிகழ்ந்தவையாகும். இது தொடர்பான விரிவான ஆய்வை இரா. கோதண்டராமனில் (2004: 23-39) காண்க.

27. *அய்* என்பதன் நெடில் வடிவம் *ஆய்* என்பதாகும். இருப்பு மற்றும் ஆக்கப் பொருண்மையை உணர்த்தும் *ஆகு* என்னும் செய்கு வாய் பாட்டு வினைப்பகுதி *ஆய்* என்ற வினையடியின்மீது தோன்றியதாகும்.

28. இது செய்யும் வாய்பாட்டு வினைகள் பயனிலையாகவும் பெயரெச்சமாகவும் நிகழ்வதைப் போன்றதாகும்.

(முருகன்) *அமர்ந்ததை... தண் பரங்குன்றம்* (பரி. 21. 12, 15) என்ற வாக்கியத்தில் நிகழும் *அமர்ந்ததை* (=அமர்ந்ததானது) என்பதில் காணப்படும் ஐயென்பது *ஆனது* என்ற கவைப் பயனிலைக்கு (Cleft Predicate) இணையானதாகும். இந்தச் சான்றுகள் எல்லாம் ஐயென்பது வழக்கற்றுப்போன ஒரு தொல்வினை என்பதையும் அது இருப்பு அல்லது ஆக்கம் என்ற பொருண்மை கருதியது என்பதையும் உணர்த்துவனவாகும். இரண்டு பொருண்மைகளுள் இருப்புப் பொருண்மையை உணர்த்தும் ஐயென் வினையை உள்வினை என்று இங்கே குறிப்பிடலாம்.[29]

*23.4.* ஐயென் வினை இகர ஈகாரங்களாகத் திரிந்து *பாடித்தை* (கலி. 40. 10), *உண்டீத்தை* (கலி. 85.32), *பருகீத்தை* (கலி. 85.35) ஆகிய வினையமைப்புக்களில் நிகழும் *-இத்தை, -ஈத்தை* ஆகிய முன்னிலை வினைகளில் வினை யடிகளாக நிகழ்கின்றன. ஐயென் வினையின் திரிபாகிய ஈகாரத்தை *சென்றீ* (அகம். 40. 16), *வந்தீ* (கலி. 85.20), *வந்தீக* (நற். 22.12), *வென்றீக* (குறள். 1268), *வந்தீம்* (அகம். 80. 13), *வந்தீய* (கலி. 93.3), *வந்தீயாய்* (கலி. 114.5), *வந்தீத்தனர்* (கலி. 86.28) முதலான வினை யமைப்புக்களில் காணலாம்.[30] ஐயென் திரிபாகிய ஈகாரத்தை ஈதல்/கொடுத்தல் என்ற பொருண்மையதாகக் கொள்ளமுடியாது.

*23.5* செய்தைக்க வாய்பாட்டு வினைகளில் நிகழும் *ஐக்க* என்பது *ஐக்கு* என்னும் வினைப்பகுதியின்மீது தோன்றியது என்பதும், *ஐக்கு* என்பது *ஐ* என்னும் வழக்கிழந்த தொல்வினையடியின்மீது தோன்றியது என்பதும் ஐயென் வினை பலவாகத் திரியவல்லது என்பதும் மேலே தெளிவுபடுத்தப்பட்டன. ஐயென்பதும், ஐக்கு என்பதும் கட்டுண்ட வினைத்திரிபுகளில் மட்டுமே பழந்தமிழில்

---

29. *உளன், உளர், உளது, உள்ள* ஆகிய குறிப்பு வினையமைப்புகளில் *உள்* என்னும் பகுதி இருப்புப்பொருண்மையை உணர்த்துவதால் ஐயென் வினை உள்வினை என்ற கலைச்சொல்லால் குறிப்பிடப்படுகிறது.

30. திரியாத நிலையில் ஐயென் வினையின் நிகழ்ச்சியைக் *காண்டைப்பாய்* (கலி. 87.15) என்ற வினையமைப்பில் காணலாம். தொல்காப்பியர் (சொல். சேனா. 274) முன்னிலையசைச் சொற்களாகக் குறிப்பிடும் இக, இகும் ஆகியவை *இகு* என்னும் வினையடியாகத் தோன்றியவையாகும். இலங்கைத் தமிழில் *இக* என்னும் முன்னிலை அசைச்சொல் *சொல்லிக* என்னும் வினையமைப்பில் இன்றும் காணப்படுவதாகத் தெ.பொ. மீனாட்சிசுந்தரன் (T.P. Meenakshisundaran 1965:90) குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் குறிப்பிடும் *இக* என்பதினின்றும் இலங்கைத் தமிழில் மேற்படி சொல்லமைப்பில் நிகழும் *இக* வேறானதன்று. இந்த வினையடியும் ஐயென் வினையின் திரிபாகிய இகரக்கிளவியின் அடியாகத் தோன்றியதாகும்.

நிகழ்கின்றன. ஐயென் வினை இகர ஈகார வினைகளாகத் திரிவதைப்போல் *ஐக்கு* என்னும் வினைப்பகுதி திரிந்தமையும் போக்கு பழந்தமிழிலோ இடைக்காலத் தமிழிலோ இலக்கியத்தில் எங்கும் பதிவாகவில்லை.[31] செய்தைக்க வினைகளைப்போலவே செய்தைகா (<செய்து+ஐகா) வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியும் பழந்தமிழில் அரிதாகக் காணப்படுகிறது. எ-டு. *கண்டைகா* (கலி. 105.44) 'காண்பாயாக'. இந்த வினையமைப்பில் நிகழும் *ஐகா* என்பது *ஐகு+ஆ* என்ற அமைப்பினதாகும். *ஐகு (=ஆகு) என்பது *ஐக்கு என்ற செய்கு வாய்பாட்டு வினையோடு பொருந்துவ தாகும். இந்த வினைப்பகுதியும் ஐயென் வினையடியின்மீது தோன் றியதாகும். *நினை* என்னும் வினையடியானது பொருண்மைத் திரிபு ஏதுமின்றி *நினைந்து, நினைத்து* ஆகிய வினைத்திரிபுகளில் வல்வினையாகவும் மெல்வினையாகவும் நிகழ்வதைப்போலவே *ஐக்கு, *ஐகு ஆகிய செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளில் நிகழும் ஐயென்னும் வினையடியானது வல்வினையாகவும் மெல்வினை யாகவும் நிகழ்கிறது.

23.6. செய்தீக வாய்பாட்டில் அமைந்த வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சியும் பழந்தமிழில் காணப்படுகின்றது. எ-டு. *சென்றீக* (அகம். 124.3), *வந்தீக* (கலி. 86.10, நற். 221.12). இந்த வினை யமைப்புக்களில் நிகழும் *ஈக* என்னும் வியங்கோள் வினை *ஈகு* என்னும் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதியின் அடியாகத் தோன்றியதாகும்.[32] செய்தீக வாய்பாட்டு வியங்கோள் வினைகள்

---

31. இக்காலப் பேச்சுத் தமிழில் நிகழும் *செய்துக்கு* (<செய்திக்கு) (=செய்து கொள்), *பாடிக்கு* (=பாடிக்கொள்) வாய்பாட்டு வினைகள் தற்சுட்டுப் (Reflexive) பொருண்மையை உணர்த்தும். இவற்றில் நிகழும் *இக்கு* என்பது *ஐக்கு* என்பதன் திரிபாகும். கருதுக: செய்துக்குனான் (=செய்து கொண்டான்), *செய்துக்குறான்* (=செய்துகொள்கிறான்), *செய்துக்கு வான்* (=செய்துகொள்வான்); *பாடிக்கினான்* (< பாடிக்கு-இன்+ஆன்) (=பாடிக்கொண்டான்), *பாடிக்கிறான்* (<பாடிக்குறான்) (=பாடிக் கொள்கிறான்), *பாடிக்குவான்* (=பாடிக்கொள்வான்). *செய்துக்கு/பாடிக்கு* ஆகிய தற்சுட்டு வினைப்பகுதிகளுக்கும் *செய்துகொள்/பாடிக் கொள்* ஆகிய தற்சுட்டு வினைப்பகுதிகளுக்கும் பொருண்மைத் தொடர்பைத் தவிர அமைப்பியல் தொடர்பேதும் இல்லை. *செய்துக்குனு* (<*செய்திக்கினு) (=செய்துகொண்டு), *பாடிக்கினு* (=பாடிக் கொண்டு) ஆகியவையும் *செய்துக்கு* (<*செய்திக்கு), *பாடிக்கு* ஆகிய தற்சுட்டு வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும்.

32. இதனை ஈ+க என்ற அமைப்பினதாகக் கொள்வது வண்ணனை ஆய்வின் பாற்படும். ஆயினும் வண்ணனை ஆய்வில் *ஈக* என்பதை *ஈகு+ அ* என்ற அமைப்பினதாகக் கொள்ளக்கூடாது அல்லது கொள்ள முடியாது என்று கோட்பாட்டுத் தடையேதும் இல்லை.

பரவலாகவும் *செய்திக* வாய்பாட்டு வியங்கோள் வினைகள் அருகியும் பழந்தமிழில் காணப்படுகின்றன. இக்கால இந்தியத் தமிழில் செய்தீக, செய்திக வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படவில்லை.[33] இதன் நிகழ்ச்சி பழந்தமிழில் அருகிய வழக்காகும். எ-டு. *சென்றிக* (நற். 321. 8), *ஆன்றிக* (தொல்.சொல். சேனா. 274. உரை). *சென்றிக* என்பதற்கு, செல்கவென்னும் வியங்கோள் வினைத் திரிசொல் என்ற உரைக்குறிப்பு பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் பதிப்பில் காணப்படுகிறது. *செய்தீக* வினைகளில் *ஈக* என்பது *ஈகு* என்ற வினைப்பகுதியின்மீது தோன்றி யமைவதைப் போலவே *செய்திக* வினைகளில் நிகழும் *இக* என்பதும் *இகு* என்னும் செய்கு வாய்பாட்டு வினைப்பகுதியின்மீது தோன்றியதாகும். *இகு* என்பதன் அடியாகத் தோன்றிய *இகா* என்னும் வியங்கோள் வினையின் நிகழ்ச்சி வினையடியை அடுத்தும் *காண்டு* (<*காணுது <*காணுந்து) என்ற இறவாக்காலச் செய்து வாய்பாட்டுப் பொது வினைமுற்றையடுத்தும் பழந்தமிழில் நிகழ்கிறது. எ-டு. *நில்லிகா* (பரி. 11.104), *காணிகா* (கலி. 105.40, சிலம்பு. 18.46)/*காண்டிகா* (கலி. 99. 9, 12, 15). இவை *நிற்பாயாக*, *காண்பாயாக* என்ற வியங்கோள் தொடர்களின் பொருண்மை யோடு பொருந்தும். இலங்கைத் தமிழில் *இக* என்னும் வினை யானது வினையடியையடுத்து நிகழ்வது கருத்தில் கொள்ளத் தக்கதாகும். எ-டு. *சொல்லிக* (T.P. Meenakshisundaran. 1964: 90) *செய்தைக்க, செய்தைக, செய்தைப்பாய், செய்தீக, செய்திக, செய்தீத்தை* முதலான வினையமைப்புக்களில் நிகழும் செய்து (<செயுது<*செயுந்து) வாய்பாட்டு வினைகள் இறவாக் காலப் பொது வினைமுற்றுக்களாகும்.

---

33. மதுரையையடுத்துள்ள செக்கானூரணி பகுதியில் வழங்கும் பேச்சுத் தமிழில் *செய்துக்கிருந்தான்/பாடிக்கிருந்தான்* (=செய்துகொண்டிருந்தான்/ பாடிக்கொண்டிருந்தான்), *செய்துக்கிருக்கான்/பாடிக்கிருக்கான்* (=செய்து கொண்டிருக்கிறான்/பாடிக்கொண்டிருக்கிறான்), *செய்துக் கிருப்பான்/ பாடிக்கிருப்பான்* (=செய்துகொண்டிருப்பான்/பாடிக் கொண்டிருப்பான்) ஆகிய வாய்பாட்டுத் தொடர் நிகழ்வு (Progressive/ Durative/ Continuative) வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. காண்க: வடிவேலு (2005). இந்த வினைகளில் காணப்படும் செய்துக்கு (=செய்து கொண்டு), பாடிக்கு (=பாடிக்கொண்டு) ஆகிய வாய்பாட்டு வடிவங்கள் முறையே செய்துகு (<*செய்திகு), பாடிகு வாய்பாட்டு வினைப்பகுதி களின்மீது தோன்றியவை யாகும். *புகு, நகு* ஆகியவற்றின் இறந்தகால வடிவங்கள் *புக்கு, நக்கு* என அமைவதைப்போல் செய்திகு, பாடிகு ஆகிய வாய்பாட்டு வினைகளில் நிகழும் *இகு* என்னும் கட்டுண்ட வினையும் (Bound Verb) *இக்கு* என்ற இறந்தகால வினையைக் கொண்டுள்ளது. இதனைத்தான் செய்துக்கு (<*செய்திக்கு), பாடிக்கு வாய்பாட்டு வினைகளில் காண்கிறோம்.

## 24.0 ஓர் இடைப்பிறவரல்

*241.* செய்தைக்க வாய்பாட்டு வினைகளில் நிகழும் *ஐக்கு* என்பது பிற திராவிட மொழிகளில் எவ்வாறு திரிந்து எப்பொருண்மையை உணர்த்துகிறது என்பதை இங்கே குறிப்பிட்டாக வேண்டும். *செய்தைக்கு* (=செய்தய்க்கு) என்பது மலயாளத்தில் *செய்தே(ய்)க்கு* எனத்திரிந்து *செய்தே(ய்)க்காம்/செய்தே(ய்)க்கும், பாடே(ய்)க்காம்/ பாடே(ய்)க்கும்* ஆகிய வாய்பாட்டு வினைகளில் நிகழ்கின்றது. *செய்தே(ய்)க்காம்/பாடே(ய்)க்காம்* வினைகள் *செய்யலாம்/ பாடலாம்* என்ற பொருண்மையையும், *செய்தே(ய்)க்கும்/பாடே(ய்)க்கும்* வினைகள் *செய்துவிடும்/பாடிவிடும்* என்ற பொருண்மையையும் உணர்த்துவனவாகக் கருதலாம். *செய்தே(ய்)க்கு/பாடே(ய்)க்கு* வினைகள் இந்த மொழியில் *செய்தேச்சு/பாடேச்சு* 'செய்து/பாடி' எனவும் திரியற்பாலனவாகும் (Michail S. Andronov 1996: 138).[34]

*24.2* கன்னடக்கிளைமொழிகளுள் ஒன்றாகிய அவியக்அ (Havyaka) அந்தணர் கிளைமொழியில் செய்தைக்கு வாய்பாட்டு வினைப் பகுதிகள் செய்திக்கு வாய்பாட்டினவாகத் திரிந்து செய்துவிடு என்ற வாய்பாட்டு வினைகளின் பொருண்மையை உணர்த்தும் முடிப்பு வினைகளாக (Completive Verbs) நிகழ்கின்றன (D.N. Shankara Bhat 1971:27). எ-டு. *எளெ* 'இழு' - *எளதிக்கு* 'இழுத்துவிடு', *உண்ணு* 'உண்' - *உண்டிக்கு* 'உண்டுவிடு', *biDu* 'விடு' - *biTTikku* 'விட்டுவிடு', *uDugu* 'பெருக்கித்தள்ளு' - *uDugikku* 'பெருக்கிவிடு'. இந்த எடுத்துக்காட்டுக்களில் *இக்கு* (<*அய்க்கு = ஐக்கு) என்பது செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழ்கிறது.[35] *அய்க்கு* (=ஐக்கு) என்பது *எக்கு* எனவும் திரிந்து இதே கிளைமொழியில் வினையடிகளையடுத்து நிகழ்ந்து அந்த வினையமைப்புகள் *செய்யவேண்டும்* என்ற வாய்பாட்டு வினை களின் பொருண்மையை உணர்த்துகின்றன (D.N. Shankara Bhat

---

34. செய்தே(ய்)க்காம்/பாடே(ய்)க்காம் வினைகளைச் *செய்து+வைக்கும்/ பாடி+வைக்கும்* என்ற அடிநிலை அமைப்புகளினின்றும், *செய்தேச்சு/ பாடேச்சு* வாய்பாட்டு வினைகளைச் *செய்து+வச்சு/பாடி+வைச்சு* என்ற அமைப்புகளினின்றும் தோன்றியவையாகக் கருதுவாருளர். (K.M. George 1971: 245, Michail S. Andronov 1996: 138). இந்தக் கருதுகோள் எழுத்தியல் அடிப்படையில் ஏற்புடையதல்ல.

35. இகரத்தை இறந்தகால இடைநிலையாக ஏற்கும் வினையடிகளோடு *இக்கு* நேரடியாகப் பொருந்துகிறது. பிற வினையடிகளைப் பொறுத்த வரை *இக்கு* என்பது செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்தே இணைகிறது. *uDugikku* என்பதன் உண்மையான அமைப்பு *uDugu+ikku* என்பதாகும். ஆனால் இது *uDugi+kku* என்று பிறழாய்வு செய்யப்பட்ட தால் *இக்கு* என்பது ஏனைய வினைகளில் செய்து வாய்பாட்டு வடிவங்களையடுத்து நிகழும் நிலை ஏற்பட்டுவிட்டது.

**1971: 30. 45**). எ-டு. *மாடு* 'செய்' - *மாடெக்கு* 'செய்யவேண்டும்', *சொலி* 'உரி' - *சொலியெக்கு* 'உரிக்கவேண்டும்', *ba:* 'வா' - **barekku** 'வரவேண்டும்'. *ஓடு* - *ஓடெக்கு* 'ஓடவேண்டும்', *ஹோகு* 'போ', *ஹோயெக்கு* 'போகவேண்டும்'. *இக்கு, எக்கு* இரண்டனுள் முந்தையது வினையின் தன்மையை அவியக்அ கன்னடத்தில் இழந்துவிட்டதாகக் கருதப்படுகிறது (D.N. Shankara Bhat 1971:27) *அய்க்கு* என்பது *அக்கு* எனத் திரிந்து வினையடியையடுத்தும், செயல் வாய்பாட்டு வினைகளையடுத்தும் நிகழ்ந்து மாறுபட்ட பொருண்மைகளை உணர்த்துகின்றது (Helen Elizabeth Ullrich 1980:152). எ-டு. *நோடக்கு (<நோடு+அக்கு) (பக். 100)* 'பார்க்க வேண்டும்', *மாடக்கு (<மாடு+அக்கு)* 'செய்யவேண்டும்', **ma:Dlakku (<*ma:D(a)l*+akku)**'செய்யலாம்'. தமிழில் செய்யலாம் என்ற வாய்பாட்டு வினைகள் *செயல்+ஆம்* என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் *ஆம்* உணர்த்தும் பொருண்மையைத்தான் ***ma:Dl-akku*** என்ற கன்னட வினையமைப்பில் *அக்கு* என்பது உணர்த்துகிறது. *அக்கெ* (அக்கு (<அய்க்கு)+எ) என்பது செயவென் வினையாகவும் நிகழ்கிறது. (Ibid: 143) *எ-டு. மாடக்கெ* 'செய்ய'.

*243* வட கர்நாடக மாவட்டத்தின் இன்னொரு பகுதியில் அவியக்அ அந்தணர் பேசும் கன்னடக் கிளைமொழியில் செய்தைக்கு வாய்பாட்டு வினைகள் செய்திக்கு வாய்பாட்டினவாகத் திரிந்து, செய்திக்கி வாய்பாட்டினவாக அமைந்து *செய்து விட்டு* வாய்பாட்டு வினைகளின் பொருண்மையை உணர்த்துகின்றன (K.G. Shastri 1971). வாக்கியச் சந்தியில் செய்திக்கி வாய்பாட்டு வினைகளில் நிகழும் ஈற்று இகரம் மெய்யுடன் கெடுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

***25(1)* சவ்தீ சுட்டிக் பந்திரி** (bandiri) *(பக். 183)*
**'விறகை மட்டும் சுட்டுவிட்டு வந்தார்கள்'**
***(2)*தோர்சிக் பரவ்** (barav) *(பக். 184)*
**'காட்டிவிட்டு வரவேண்டும்'**
***(3)*ஹேளிக்கி ஹோத** *(பக். 195)*
**'சொல்லிவிட்டுப் போனான்'**
*(4)*a:ga biTTikki....*(பக். 184)*
'பிறகு விட்டுவிட்டு'

இக்கி, இக்கெ ஆகிய வினைவடிவங்கள் இந்தக் கிளைமொழியில் காணப்படுகின்றன (K.G. Shastri 1971: 92). எ-டு. *இட்டிக்கி* (=வைத்துவிட்டு/இட்டுவிட்டு), *ஹேளிக்கெ* (=சொல்லிவிட்டு), *சுட்டிக்கி* (Ibid: 140) (=சுட்டுவிட்டு), பின்வரும் எடுத்துக்காட்டுக் களையும் கருதுக: (Helen Elizabeth Ullrich, 1980).

*26(1)* avã kelsa ma:Dikki maneg banda *(பக். 167)*
'அவன் வேலை செய்துவிட்டு வீட்டுக்கு வந்தான்'

*(2)* **a:nu a:Lige kelsa koTTikki manege bandi** *(பக். 197)*
'நான் வேலையாளுக்கு வேலை கொடுத்துவிட்டு வந்தேன்'

*(3)* **a:nu kelsa ma:Dad-ille ant he:Likki manege bandi** *(பக். 197)*
'வேலை செய்யமாட்டேன் என்று சொல்லிவிட்டு நான் வீட்டுக்கு வந்தேன்.'

*(4)* **a:nu kelsa ma:Dikki manege bandi** *(பக். 196)*
'நான் வேலை செய்துவிட்டு வீட்டுக்கு வந்தேன்'

இந்த எடுத்துக்காட்டுக்களில் *-இக்கி* *(<*அய்க்கு+)* என்பது *மாடு* *(=செய்)*, *ஹேளு* *(=சொல்)* ஆகிய வினையடிகளையடுத்தும், *கொட்டு* *(=கொடுத்து)* என்ற செய்து வாய்பாட்டு வடிவத்தை யடுத்தும் நிகழ்கிறது.

24.4 பழங்கன்னடத்தில் *இக்கு* *(<*அய்க்கு)* கூட்டு வினைகளில் நிகழும் நிலை காணப்படுகிறது (B. Ramachandra Rao, 1972).

*27(1)* **okkal-ikku 'to beat down, to destroy. to kill'** (p. 155)
*(2)* **posat-ikku 'to give a feast'** (p. 155)
*(3)* **meyy-ikku 'to salute'** (p. 155)
*(4)* **eḻal-ikku 'to hang down'** (p. 155)
*(5)* **manam-ikku 'to become discouraged'** (p. 159)
*(6)* **eredey-ikku 'to be dejected'** (p. 159)

தமிழில் நிகழும் நம்பிக்கை என்ற பெயர்நிலைக்கிளவி பிற திராவிட மொழிகளில் பின்வருமாறு வடிவு திரிந்து நிகழ்கின்றது (DED. 2975).

| | | |
|---|---|---|
| *28(1)* | **மலயாளம்** | **நம்பிக்க** |
| | **கோத்தம்** | **nambyk** |
| | **தொதுவம்** | **nobky** |
| | **கன்னடம்** | **நம்பிக்எ (nambike)** |
| | **தெலுங்கு** | **நம்மிக்அ (nammika)** |

**(வினையடி: நம்மு)**

*அய்க்கு* (=ஐக்கு) என்பது *இக்கு* எனத்திரிந்து வினையடியோடு புணர்ந்து *நம்பிக்கு என அமைந்து ஐயென் கிளவியை ஏற்று *நம்பிக்கை* என்ற வடிவம் தமிழில் நிலைகொள்கிறது. ஈற்று ஐகாரம் கன்னடத்தில் எகரமாகவும், தெலுங்கில் அகரமாகவும் திரிந்து முறையே *நம்பிக்எ, நம்மிக்அ* ஆகிய வடிவங்கள் தோன்றி நிகழ்கின்றன. **நம்பிக்கு* என்ற வடிவம் கோத்த மொழியில் nambyk *(<*நம்பிய்க்)* எனவும் தொதுவமொழியில் nobky எனவும்

நிகழ்கின்றன. நம்பிக்கை வாய்பாட்டு அமைப்பில் அமைந்த பெயர் நிலைக் கிளவிகள் தமிழில் அருகிய வழக்காகும். தெலுங்கிலும் கன்னடத்திலும் இத்தகைய பெயர்நிலைக் கிளவிகளின் நிகழ்ச்சி மிகுதியாகக் காணப்படுகின்றது. காண்க: பிற்சேர்க்கை.

## 25.0. சிறப்பு வினைமுற்று+ஆக

25.1 '*சிறப்பு வினைமுற்று+ஆக* என்ற அமைப்பினதாகிய கழிநெடில் வியங்கோள் வினைகளின் அமைப்பில் நிகழும் வினை முற்றானது எதிர்காலச் சிறப்பு வினையாகவோ, பொதுவினை முற்றாகவோ, குறிப்பு முற்றாகவோ அமையும். பழந்தமிழில் எதிர் காலச் சிறப்பு வினைமுற்றுடன் கூடிய கழிநெடில் வியங்கோள் வினைகள் காணப்படவில்லை. இக்காலத் தமிழில் முன்னிலை, படர்க்கை ஈரிடத்தும் ஏதிர்காலச் சிறப்பு வினைமுற்றுக்கள் அமைந்த கழிநெடில் வியங்கோள் வினைகள் இலக்கிய வழக்கில் ஏற்புடையனவாகும். எ-டு. *நீ வருவாய் ஆக, நீர் வருவீர் ஆக, அவன் வருவான் ஆக, அவள் வருவாள் ஆக, அவர் வருவார் ஆக, அது வருவதாக, அவை வருவனவாக.* பழந்தமிழில் ஒன்றன் பாற் கழிநெடில் வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி அங்குமிங்கு மாகக் காணப்படுகின்றது. எ-டு. *ஆவதாக* (அகம். 276.6), ***இன்னும் வருவதாக நமக்கு* (பத்துப். 10.354), *சூள் இவண், வாய்ப்பதாக* (ஐங். 8.5, 6),** *அல்குவதாக நீயமர்ந்த தேரே* (நற். 159. 12), முன்னிலை ஒருமையில் அமைந்த கழிநெடில் வியங்கோள் வினையின் நிகழ்ச்சியைச் *சின்னாள் ஆன்றனை யாகென* (அகம். 325.14) என்ற வாக்கிய அமைப்பில் காணலாம். இதில் நிகழும் *ஆன்றனை* (=இருப்பாய்) என்பது *ஆன்று* என்ற வினைப்பகுதியைக் கொண்ட முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்றாகும்.[36] ஒன்றன்பால் எதிர்மறையைக் கொண்ட வியங்கோள் வினையின் நிகழ்ச்சி *வெம்பாதாக வியனில வரைப்பு* (பரி. 11.80) என்பதில் காணப்படு கிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் குறிப்பு வினைமுற்றுக்களைக் கொண்ட கழிநெடில் வியங்கோள் வினைகளைக் காணலாம்.

---

36. *ஆனவன். ஆனவள், ஆனவர், ஆனது, ஆனவை, ஆன* முதலான குறிப்பு வினைகள் *ஆன்* என்னும் குறிப்பு வினையடியின் மீது தோன்றியவையாகும். *ஆன்றனை* என்பதில் நிகழும் *ஆன்று* என்பது *ஆன்* என்பதன் மாற்றுருபாகும். சாரியையாக நிகழும் இதன் குறில் வடிவம் *அன்* என்பதாகும். *அன்* என்பது தெலுங்கில் *அனெ* என்ற குறிப்புப் பெயரெச்சமாக நிகழ்கிறது. எ-டு. *ராமுடு அனெ னேனு* 'ராமன் என்னும் நான்'.

*29(1)* பெற்றோற் பெட்கும் பிணையை யாகென *(அகம்8614)*

*(2)* வள்ளியை யாகென *(கலி. 142.30)*

*(3)* வல்வதாக நுஞ் செய்வினை *(அகம். 271.11)*

*(4)* செறிதொடி கழிந்துகு நிலையவாக *(ஐங். 329.4)*

*(5)* நோயில ராகநின் புதல்வர் *(புறம். 196.10)*

*(6)* ஆங்கது நோயின் றாக *(புறம். 237.5)*

*(7)* கேடில வாக பெருமநின் புகழே *(பதி. 79.19)*

*25.2* இடைக்காலத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுக்களில் *செய்யக்கடவ்-+ஆகவும்* என்ற வாய்பாட்டில் அமைந்த கழிநெடில் வியங்கோள் வினைகளின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. இந்த அமைப்பில் *ஆகவும்* என்பதன்முன் எதிர்காலச் சிறப்பு வினைமுற்றுக்களின் நிகழ்ச்சி காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.[37]

**30(1) இத்திரு நந்தவனத்திலெ நித்தத் திருப்பள்ளித் தாம[ம்*] பறித்துப் பணிமாறக் கடவொ மாகவும் (எண். *152*. A.R. No. 128 of 1938-39. 1982:185)**

**(2) இவற்கு நன்றாக நித்தமொரு திருமாலை சாத்தக் கடவனாகவும் (எண்.*154*. A.R. No. 52 of 1948-49. 1982:186)**

**(3) தனக்கும் தன்மக்கள் மக்களுக்கும் காணியாகப் பெறக் கடவளாகவும் (எண். *163*. A.R. No. 30 of 1948-49. 1982:193)**

**(4) மரக்காலால் அளக்கக் கடவதாகவும் (எண். *44* . A.R. No. 42 of 1948-49. 1982:44)**

**(5) நடத்தக் கடவதாகவும் (எண். *467*. A.R. No. 208 of 1951-52. 1982:446)**

மேலே குறிக்கப்பெற்றுள்ள கழிநெடில் வியங்கோள் தொடர் களில் நிகழும் *கடவொம், கடவன், கடவள், கடவது* ஆகியவை குறிப்பு வினைமுற்றுக்களாகக் கருதத்தக்கனவா என்பது தெளிவாகவில்லை. இவற்றின் வினைப்பகுதி *கடவ்* எனக் கொள்ளத்தக்கதாகத் தோன்றுகின்றது. இதனைத் தெரிநிலை வினைப் பகுதியாகக் கொள்ளமுடியும் என்றும் தோன்றவில்லை.

---

37. இந்த எடுத்துக்காட்டுக்கள் இந்திய அரசின் தொல்லியல் துறை 24-ஆம் தொகுதியாக 1982-இல் வெளியிட்ட தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் என்ற தொகுப்பில் காணப்படுபவையாகும் (K.V. Ramesh. 1982. *South Indian Inscriptions.* Vol. XXIV. New Delhi, Department of Archaelogical Survey of India.)

**26.0. செய்கதில் வியங்கோள்**

*26.1* செய்கதில் வாய்பாட்டு வியங்கோள் வினைகளைத் தொல்காப்பியர் (சொல். சேனா. 253) செய்க+தில் என்ற அமைப் பினவாகக் கொண்டு அவற்றில் நிகழும் *தில்* என்பது விழைவு, காலம், ஒழியிசை ஆகியவற்றை உணர்த்துவதாகக் கருதுவார். தொல்காப்பியர் குறிப்பிடும் இந்தப் பொருண்மைகளை அமைப்பியல் சார்ந்தவையாகக் கருத வாய்ப்பில்லை. தொல்காப்பியர் தில் என்பதைத் தில்லைச் சொல் என்று குறிப்பிடுவார். இது உம்மென் கிளவியை உம்மைக் கிளவி என்று குறிப்பிடுவதுபோலாகும். ஆயினும் தில்/தில்லை, உம்/உம்மை ஆகியவை உறழன்கள் (Free Variants) எனக் கொள்ளத்தக்கனவா என்பது ஐயத்திற்குரியதாகவே தோன்றுகிறது.

*26.2* செய்கதில் வாய்பாட்டு வினைகள் பழந்தமிழில் பரவலாகக் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

*31(1)* **அரிவையைப்**
**பெறுகதில் அம்ம யானே பெற்றாங்கு**
**அறிகதில் லம்மவிவ் வூரே** (குறு. 14. 2-4)

*(2)* **ஈமம், நுமக்கரி தாகுக தில்ல** (புறம். 246. 11, 12)

*(3)* **(ஊரன்) வருகதில் அம்மவெஞ் சேரிசேர**
**வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே**
(அகம். 276. 7, 15)

*(4)* **பெறுகதில் லம்ம விவ்வூரும் ஓர்பெற்றி**
(சிலம்பு. 24. 25. 2)

இந்த எடுத்துக்காட்டுக்களில் செய்க வாய்பாட்டு வினைகளை யடுத்து *தில், தில்ல* ஆகிய இரண்டு வடிவங்கள் காணப்படு கின்றன. தொல்காப்பியர் *தில்* என்பதைத் *தில்லை* என்றும் குறிப்பிடுவது முன்பே பெறப்பட்டது. இதனின்றும் *தில்லை, தில்ல* இரண்டும் *தில்+ஐ/அ* என்ற அமைப்பினவென்பது தெளிவா கின்றது. ஆயினும் இந்த அமைப்பில் *தில்* என்பதன் இலக்கணச் செயற்பாடும் பொருண்மையும் தெளிவாக அறியக்கூடவில்லை.

*26.3* செய்கதில் வாய்பாட்டு வினைகள் பிறழாய்வின் விளைவாகச் *செய்க+தில்* என்ற அமைப்பினதாகக் கொள்ளப் பட்டிருக்க வேண்டும். செய்கதில் வினைகளின் அடிநிலை வடிவங்களைச் **செய்கந்தில்* வாய்பாட்டினவாகக் கருதத் தோன்றுகிறது. இவை **செய்கந்து+இல்* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படுமானால் **செய்கந்து* என்பதன் அடிநிலை அமைப்பு

**செய்கம்+து* எனக் கொள்ளப்படும். இந்த அமைப்பில் நிகழும் **செய்கம்* வினைகளும் செய்கமாவினைகளில் நிகழும் *செய்கம்* வினைகளும் வேறானவையல்ல. செய்கதில் வினைகளில் நிகழும் துகரக் கிளவி இல்லென் கிளவி ஆகியவற்றின் பொருண்மையும் இலக்கணச் செயற்பாடும் ஆய்வுக்குரியனவாகும். மேலும், செய்கதில் வினைகளின் அடிநிலை வடிவத்தை மறுஆய்வு செய்வதற்கான வாய்ப்பையும் நாம் புறக்கணிக்கவில்லை.

## *27.0* இகரவீற்று ஈரேவல் வினைகள்

*27.1.* ஐயென் தொல்வினையின் திரிபாகிய இகரத்தை ஈற்றில் கொண்ட செய்வி வாய்பாட்டு வினைகள் ஈரேவல் வினைகளாகும். *உழுவி, உண்பி, படிப்பி, தேடுவி* முதலான வினைகள் ஈரேவல் தன்மையினவாகும். இந்த வினைகளைச் *செய்+வி* என்ற அமைப்பினவாக மரபிலக்கணிகள் கருதுகின்றனர் (நன். 138). இதன்படி *உழுவி, உண்பி, படிப்பி, தேடுவி* முதலானவை *உழு+வி, உண்+பி, படி+ப்பி, தேடு+வி* என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் வினையடியானது இயற்றுதல் எழுவாயையும் (Caused Subject) அதனையடுத்து நிகழும் *வி, பி* ஆகியவை ஏவுதல் எழுவாயையும் (Causing Subject) கொண்டவையாகும். ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம். *இராமன் அனுமனைக் கொண்டு சீதையைத் தேடச் செய்தான்* என்ற இந்த வாக்கியத்தில *செய்தான்* என்பதன் எழுவாயாக இராமனும், *தேடு* என்பதன் எழுவாயாக அனுமனும் நிகழ்வதைக் காணலாம். இக்காலத் தமிழில் செய்வி வாய்பாட்டு ஈரேவல் வினைகள் மிக அருகிய வழக்கினவாகும். எடுத்துக்காட்டாக, *உழுவி* என்பது இக்காலத் தமிழில் *உழச்செய்* என்ற அமைப்பினதாய் வழங்குகிறது. செய்வி வாய்பாட்டு வினைகளை வே. வேங்கடராஜுலு ரெட்டியார் (1960:90) *செய்வு+இ* என்ற அமைப்பினதாகக் கொள்வார். இந்த அமைப்பில் செய்வு என்பது இயற்றுதல் வினையும் (Caused Verb) இகரமானது ஏவுதல் வினையும் (Causing Verb) ஆகும். இந்த ஆய்வு நமக்கு உடன்பாடேயாகும். ஆயினும் இந்த அமைப்பில் நிகழும் இகரக் கிளவியை ஈயென் வினையின் குறில் வினையாக வேங்கடராஜுலு ரெட்டியார் கருதுவது நமக்கு உடன்பாடில்லை. காரணம், இகர, ஈகார வினையிரண்டும் *ஐ* என்னும் தொல் வினையின் திரிபுகளாகும். எனவே ஐயென் கிளவியின் திரிபுகள் தமக்குள் நேரடித் தொடர்பு கொண்டவையாகக் கருதமுடியாது; கருதவும்கூடாது. மாறாகத் திரிபு வடிவங்களை அவற்றின் தாய் வடிவத்தோடுதான் தொடர்புபடுத்த முடியும். வேங்கடராஜுலு ரெட்டியாரின் ஆய்வைக் கருத்தில்கொண்டு செய்வி வாய்பாட்டு

ஈரேவல் வினைகளில்நிகழும் இகரத்தை ஐயென் திரிபாகக் கொள் வதுடன் அதனை, *செய்* என்னும் ஏவுதல் எழுவாய்க்குரிய வினையாகவும் கொள்ளவேண்டும்.

*27.2.* ஐயென்னும் தொல் வினையானது இருப்பு, ஆக்கம் ஆகிய பொருண்மைகளை உணர்த்தும். *கலை, அழி* ஆகிய வினைகள் எடுத்துக்காட்டாகச் செயப்படுபொருள் ஏற்றும் ஏற்காமலும் நிகழவல்லவை. கருதுக: *கலைத்து, கலைந்து; அழித்து, அழிந்து*. அதேபோல் ஐயென்னும் தொல் வினையும் *ஆகு, ஆக்கு* ஆகிய இரு வினைகளின் பொருண்மைகளை உணர்த்தவல்லதாகும். இதனைக் கருத்தில்கொண்டு *சேர்ப்பி* என்னும் ஈரேவல் வினையில் நிகழும் இகரக் கிளவியை *ஆக்கு/செய்* என்னும் பொருண்மையை உணர்த்தும் ஐயென் கிளவியின் திரிபாகத் துணியலாம். *சேர்ப்பி* என்பது *சேர்க்கச்செய்* என்ற அமைப்போடு பொருந்தும். *சேர்ப்பி, சேர்க்கச்செய்* இரண்டையும் பின்வருமாறு சமன்படுத்தலாம்.

| இயற்றுதல் | ஏவுதல் | |
|---|---|---|
| *1.* சேர்ப்பு | + இ | (> சேர்ப்பி) |
| *2.* சேர்க்கச் | + செய் | (> சேர்க்கச்செய்) |

இந்தச் சமன்பாட்டில் *சேர்க்கச்* என்பதில் நிகழும் ஈற்று வல்லொற்று மகரத்தின் திரிபாகலின் அதன் அடிநிலை வடிவம் **சேர்க்கம்* என்று கொள்ளப்படும். இந்த ஆய்வில் *சேர்ப்பு, *சேர்க்கம்* இரண்டும் துணைநிலை வழக்கில் நிகழும் வடிவங் களாகும். இவற்றைச் *சேர்* என்ற வினையின் மாற்றுருபுகளாகக் கொள்ளலாம்.

*27.3* மலயாளத்தில் செய்வி வாய்பாட்டு ஈரேவல் வினைகளின் நிகழ்ச்சி இயல்பாகவும் பரவலாகவும் காணப்படுகின்றது. ஏவுதல் வினையாகிய இகரக் கிளவி இந்த மொழியில் இறந்தகால வினைகளிலும் இதன் மாற்றுருபாகிய இக்கு என்பது இறவாக் கால வினைமுற்றுக்களிலும் நிகழ்கிறது. இக்கு என்று மாற்றுருபு ஐக்கு என்பதன் திரிபாகும். எ-டு. *தருவி* - *தருவிச்சு* (இறப்பு) (தருவு+இ-ச்சு) 'தருவித்து', *தருவிச்ச* (தருவு+இ-ச்ச்+அ) 'தருவித்த', *தருவிக்குந்நு* (நிகழ்வு) (தருவு+இக்கு-உந்நு), *தருவிக்குந்ந* (தருவு+இக்கு- உந்நு+அ) 'தருவிக்கிற', *தருவிக்கும்* (எதிர்வு) (தருவு+இக்கு-உம்); *படிப்பி* - *படிப்பிச்சு* (இறப்பு) (படிப்பு+இ-ச்சு) 'படிப்பித்து', *படிப்பிச்ச* (படிப்பு+இ-ச்ச்+அ) 'படிப்பித்த', *படிப்பிக்குந்நு* (நிகழ்வு) (படிப்பு+இக்கு-உந்நு), *படிப்பிக்குந்ந* (படிப்பு+இக்கு-உந்நு+அ) 'படிப்பிக்கிற', *படிப்பிக்கும்* (எதிர்வு)

(படிப்பு+இக்கு-உம்). இந்த ஆய்வினின்றும் ஐயென்னும் தொல் வினையானது எப்படி யெல்லாம் திராவிட வினையாக்கத்திற்குத் தனது பங்களிப்பைத் தந்துள்ளது என்பதை அறியலாம்.

## பிற்சேர்க்கை

தெலுங்கில் நிகழும் *நம்மிக்அ* போன்ற பெயர்நிலைக் கிளவிகள் வினையடி+இக்அ என்ற அமைப்பினவாகும் (Paravastu Cinnaya Su:ri. 2002:267, 274). *இக்அ* என்பது **இக்கய்* (<*இக்கு+அய்). என்பதன் ஒடுங்கிய வடிவமாகும். *நம்மிக்அ* என்பதைப்போன்று தெலுங்கில் நிகழும் சில பெயர்நிலைக்கிளவிகளைக் கீழே காண்க. இந்த எடுத்துக்காட்டுகள் சின்னய சூரியின் பால வியாகரணத்தில் காட்டப்பட்டவையாகும்.

*1(1) ஏலு 'ஆளுதல்' ஏலிக்அ(<*ஏலிக்க <*ஏலிக்கய்) (பக். 267)*<br>
*(2) கோரு 'கோருதல் கோரிக்அ (<*கோரிக்கய்) (பக். 267)*<br>
*(3) ஆடு 'பழித்தல்' ஆடிக்அ (<*ஆடிக்கய்) (பக். 267)*<br>
*(4) ஓடு 'ஓடுதல்' ஓடிக்அ (<*ஓடிக்கய்) (பக். 267)*<br>
*(5) அஞ்சு 'அஞ்சுதல்' அஞ்சிக்அ (<*அஞ்சிக்கய்) பக். 274)*<br>
*(6) அமரு 'அமர்தல்' அமரிக்அ (<*அமரிக்கய்) (பக். 274)*<br>
*(7) அரயு 'அறிதல்' அரயிக்அ (<*அரயிக்கய்) (பக். 274)*<br>
*(8) அலயு 'சோர்தல்' அலயிக்க (<*அலயிக்கய்) (பக். 274)*<br>
*(9) ஓப்உ 'பொறுத்தல்' ஓப்இக்அ (<*ஓப்இக்கய்) (பக். 274)*<br>
*(10) கனு 'காணுதல்' கானிக்அ (<*காணிக்கய்) (பக். 274)*<br>
*(11) கூடு 'கூடுதல்' கூடிக்அ (<*கூடிக்கய்) (பக். 274)*<br>
*(12) பொந்து 'பொருந்து' பொந்திக்அ (<*பொந்திக்கய்) (பக். 274)*<br>
*(13) தூனு 'எடையிடு' தூனிக்அ (<*தூனிக்கய்) (பக். 274) 'தூக்கு'*

*-இக்அ* (ika) என்பதன் மாற்றுருபாக *-இக்இ* (iki) (<*இக்கய்) என்பதும் தெலுங்கில் வினையடிகளை அடுத்து நிகழ்ந்து பெயர் நிலைக் கிளவிகளைத் தோற்றுவிக்கின்றன. (மேற்படி, பக். 276). எ-டு. *வினு* 'கேள்' - *வினிக்இ* (<வின்+இக்கய்) 'கீர்த்தி', *கோரு* - *கோரிக்இ* (<கோர்+இக்கய்) 'கோரிக்கை', *பூனு* 'மேற்கொள்' -*பூனிக்இ* (<*பூன்+இக்கய்), *போலு* 'போலுதல்' - *போலிக்இ* (<*போல்+ இக்கய்) 'போல்கை', *சூடு* 'பார்த்தல்' - *சூடிக்கி* (<*சூடு+இக்கய்) 'பார்வை'.

2. தமிழில் நிகழும் *கேளிக்கை, கோரிக்கை, வாடிக்கை, காணிக்கை* முதலான பெயர் நிலைக்கிளவிகள் வினையடி+ இக்கு-ஐ என்ற அமைப்பினவாகும். இவைபோன்ற கன்னடப் பெயர்நிலைக் கிளவிகள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

2 (1) ஆடு 'ஆடுதல்' , ஆடிக்ள/ஆடிகெ(<*ஆடிக்கய்/ஆடிகய்) (DED. 347) 'ஆட்டம்'

(2) *ஆடுவு 'ஆடுதல்' ஆடுவிக்ள (<*ஆடுவிக்கய்) (DED. 347) 'ஆடுகை'

(3) ஓது 'படித்தல்' ஓதிக்ள (<*ஓதிக்கய்) (DED. 1052) 'ஓதுகை'

(4) *ஓதுவு 'படித்தல்' ஓதுவிக்ள (<*ஓதுவிக்கய்) (DED. 1052) 'ஓதுகை'

(5) கலி 'கற்றல்' கலிக்ள (<*கலிக்கய்) (DED. 1297) 'கற்கை'

(6) *கலியுவு 'கற்றல்' கலியுவிக்ள (<*கலியுவிக்கய்) (DED. 1297) 'கற்கை'

(7) காண் 'காணுதல்' காணிக்ள/காண்க்ள (<*காணிக்கய்) (DED. 1443) 'காட்சி'

(8) காணுவு 'காணுதல்' காணுவிக்ள (<*காணுவிக்கய்) (DED. 1443) 'காண்கை'

(9) *குடியுவு 'குடித்தல்' குடியுவிக்ள (<*குடியுவிக்கய்) (DED. 1654) 'குடிக்கை'

(10) கூடு 'கூடுதல்' கூடிக்ள (<*கூடிக்கய்) (DED. 1882) 'கூடுகை'

(11) *கூடுவு 'கூடுதல்' கூடுவிக்ள (<*கூடுவிக்கய்) (DED. 1882) 'கூடுகை'

(12) *கெடுவு 'கெடுதல்' கெடுவிக்ள (<*கெடுவிக்கய்) (DED. 1942) 'கெடுகை'

(13) *கொடுவு 'கொடுத்தல்' கொடுவிக்ள (<*கொடுவிக்கய்) (DED. 2053) 'கொடுக்கை'

(14) *கொடை 'கொடுத்தல்' கொடகெ/கொடிகெ (<*கொடுவிகய்/ *கொடிகய்) (DED. 2053) 'கொடுக்கை'

(15) *கேளுவு 'கேட்டல்' கேளுவிக்ள/கேள்விக்ள(<*கேளுவிக்கய்) (DED. 2017) 'கேட்கை'

(16) *தருவு 'கொணர்தல்' தருவிக்ள (<*தருவிக்கய்) (DED. 3098) 'கொணர்கை'

(17) *தீர் 'தீர்தல்' தீரிக்ள (<*தீரிக்கய்) (DED. 3278) 'தீர்கை'

(18) *தீருவு 'தீர்தல்' தீருவிக்ள (<*தீருவிக்கய்) (DED. 3278) 'தீர்கை'

(19) *சேர் 'சேர்தல்' சேரிக்ள (<*சேரிக்கய்) (DED. 2814) 'சேர்க்கை'

*(20)* ***சேருவு 'சேர்தல்' சேருவிக்ள (<*சேருவிக்கய்) (DED. 2814) 'சேர்கை'**

*(21)* ***சோருவு 'சோர்தல்'[38] சோருவிக்ள (<*சோருவிக்கய்) (DED. 2883) 'சோர்கை'**

கன்னடத்தில் நிகழும் பின்வரும் எடுத்துக்காட்டுக்களும் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும் (D.N. Shankara Bhat. 1971:9)

*(22)* **ஹெதரு[39] 'அஞ்சுதல்' ஹெதரிக்ள (<*பெதரிக்கய்) 'அஞ்சுகை'**

*(23)* **ஹொகளு 'புகழ்தல்' ஹொகளிக்ள (<*பொகழிக்கய்) 'புகழ்கை'**

*(24)* **ஹேளு 'சொல்லுதல்' ஹேளிக்ள (<*பேழிக்கய்) 'சொல்கை'**

*(25)* **மட்ஸு (maDsu) 'மடித்தல்' மடிக்கெ (<*மடிக்கய்) 'மடிப்பு'**

*(26)* **தொர்ஸு 'சொரிதல்' தொரிக்ள (<*தொரிக்கய்) 'சொரிகை'**

*(27)* **ஒப்பு 'ஒப்புதல்' ஒப்பிகெ (oppige) (<*ஒப்பிகய்) 'ஒப்புகை'**

*(28)* **முச்சு 'மொய்த்தல்' முச்சிகெ (muccige) (<*முச்சிகய்) 'மொய்க்கை'**

*(29)* **ஏளு 'எழுதல்' ஏளிகெ (e:Lige) (<*ஏளிகய்) 'எழுகை'**

*(30)* **ஹெரு 'பெறுதல்' ஹெரிகெ (herige) (<*பெறிகய்) 'பெறுகை'**

இறுதி ஒன்பது எடுத்துக்காட்டுக்களும் அவியக்அ கன்னடக் கிளை மொழியில் நிகழ்வனவாகும்.



---

38. கன்னடத்தில் நிகழும் *ஆடுவிக்ள, ஓதுவிக்ள, காணுவுக்ள, கூடுவிக்ள, தீருவிக்ள, சேருவிக்ள, சோருவிக்ள, கேளுவிக்ள* முதலானவற்றில் வினைப் பகுதிகளாகக் காணப்படும் *ஆடுவு, ஓதுவு, காணுவு, கூடுவு, தீருவு, சேருவு, சோருவு, கேளுவு* முதலானவை செய்யும் வாய்பாட்டு வினைகளின் திரிபாகும்.

39. ஹெதரு என்பது பழந்தமிழில் நிகழும் பேதுறு என்ற வினை வடிவத்தோடு தொடர்புடையதாகும்.

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இளம். | - | இளம்பூரணம் |
| எழுத்து. | - | எழுத்ததிகாரம் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| கி.ரா. | - | கி. ராஜநாராயணன் |
| குறள். | - | திருக்குறள் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சீ.சி. | - | சீவகசிந்தாமணி |
| சேனா. | - | சேனாவரையம் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| திருச். | - | திருச்சதகம் |
| திருவா. | - | திருவாசகம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச். | - | நச்சினார்க்கினியம் |
| நற். | - | நற்றிணை |
| நாலாயிரம். | - | நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் |
| நீத். விண். | - | நீத்தல் விண்ணப்பம் |
| பத்துப். | - | பத்துப்பாட்டு |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| D.E.D. | - | Dravidian Etymological Dictionary (Revised Edition - 1984). |

# கருவி நூல்களும் கட்டுரைகளும் தரவு மூலங்களும்

(*இக்குறியிட்ட நூல்கள்/இலக்கியப்படைப்புகள் தரவு மூலங்களாகும்)

* அழகு கிருஷ்ணன், பொ. 1985. *மழைக்கஞ்சி* (சிறுகதைத் தொகுப்பு), கும்பகோணம், குரு பதிப்பகம்.

* இமையம். 1994. *கோவேறு கழுதைகள்,* சென்னை, க்ரியா.

இராகவையங்கார், மு. 1964. *அருகி வழங்கிய சில வினை விகற்பங்கள், ஆராய்ச்சித் தொகுதி* என்னும் நூலில், சென்னை, பாரி நிலையம்.

* ஐசக் அருமைராஜன், 1975. *கீறல்கள்,* சென்னை, கிறித்துவ இலக்கியச் சங்கம்.

* கண்மணி குணசேகரன். 2004, *வெள்ளெருக்கு* (சிறுகதைத் தொகுப்பு), சென்னை, தமிழினி பதிப்பகம்.

கேசிராஜா, 1973. *சப்தமணி தர்ப்பண,* சென்னை, சென்னைப் பல்கலைக் கழகம்.

* கோதண்டம், கொ. மா. 1991. *காட்டுக்குயில்கள்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

கோதண்டராமன், இரா. 1978. *வினைப்பகுதிகளும் கால இடைநிலைகளும்,* வையை, மலர்-3, மதுரை, மதுரைப் பல்கலைக் கழகம்.

------- 1979. *மள்ளர் கையதை கூர்வாள்* (இக்கட்டுரையின் திருத்திச் செம்மைப்படுத்தப்பட்ட வடிவம் இந்தத் தொகுப்பில் சேர்க்கப் பட்டுள்ளது), மொழியியல் 2:4, அண்ணாமலை நகர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

------ 1979-80. *அறிந்த முகங்களில் அறியாத முகங்கள்.* (இக்கட்டுரை திருத்திச் சுருக்கப்பெற்று வினைசெயல் என்ற தலைப்பில் இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளது). மொழியியல் 3:2 & 3, அண்ணாமலை நகர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

------- 2004. *தமிழெனப்படுவது,* சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

கோபாலையர், தி.வே. 2005. *தமிழ் இலக்கணப் பேரகராதி,* சொல் - 4, சென்னை, தமிழ்மண் பதிப்பகம்.

* சக்கரவர்த்தி. 2000. *யுத்தத்தின் இரண்டாம் பாகம்,* பிரான்சு, எக்சில் (விற்பனை உரிமை. திருநெல்வேலி, யாதுமாகி).

* சுப்ரமணிய பாரதி, 1987. *பாரதி பாடல்கள்*, ஆய்வுப் பதிப்பு (பதிப்பாசிரியர். மா.ரா.போ. குருசாமி), தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகம்.

* தாமரைமணாளன், 2003. *சில்லுக் கருப்பட்டி*. சென்னை, கல்கி (இணைப்பிதழ்), 13-04-2003.

* தோப்பில் முகமது மீரான், 1993. *கூனன் தோப்பு*, திருநெல்வேலி, ஜலீலா பப்ளிஷிங் ஹவுஸ்.

* பத்மநாபன், நீல. 1968. *தலைமுறைகள்*. சென்னை, பாரி நிலையம்.

* பூமணி, 1979. *பிறகு*, சிவகங்கை, அன்னம் வெளியீடு.

* ------- 1982. *வெக்கை*, சென்னை, படைப்பகம்.

* பொன்னீலன், 1979. *கொள்ளைக்காரர்கள்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

* ------ 1995 (முதல் பதிப்பு 1992). *புதிய தரிசனங்கள்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

* மலர்விழி. 1995. *கண்ணை நம்பாதே*, சென்னை, தினமணி கதிர், 17-12-1995.

* மாதவன், ஆ., 1980. *கிருஷ்ணப் பருந்து*, சென்னை, கலைஞன் பதிப்பகம்.

* வடிவேலு, 2005. *வெடிவெடிவேலு வடிவேலு*. சென்னை, ஆனந்த விகடன் வெளியீடு.

* வண்ணநிலவன், 1979 (இரண்டாம் பதிப்பு). *கடல்புரத்தில்*, சென்னை, நர்மதா பதிப்பகம்.

* வரதராசன், மு., 1978. *வாடாமலர்*, சென்னை, தாயக வெளியீடு, விற்பனை உரிமை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

* விஷ்வக்சேனன், 1994, *பாண்டியன் மகள்*, சென்னை, வானதி பதிப்பகம்.

* விட்டல் ராவ், 1977, *போக்கிடம்*, சென்னை, வானதி பதிப்பகம்.

* வேங்கடராஜுலு ரெட்டியார், வே., 1963. *நுண்பொருள் விளக்கம் (சொல்லிலக்கணம்)*, சென்னை, புதுவை பி.என். இராஜமாணிக்கம் பிள்ளையவர்களின் பொருளுதவியால் ஆசிரியர் வெளியிட்டது.

* ஜெயமோகன், 1990. *ரப்பர்*, சென்னை, தாகம் பதிப்பகம்.

* ஹெப்சிபா ஜேசுதாசன், 1964. *புத்தம் வீடு*, சென்னை, தமிழ்ப் புத்தகாலயம்.

## REFERENCES


* Acharya, A.S., 1967. *Halakki Kannada,* Poona, Deccan College, Post Graduate and Research Institute.

* Agesthialingom, S., 1976. *Ka:Nikka:ra Dialect,* Annamalai University, Annamalai Nagar.

Agesthialingom, S. and Rajasekharan Nair, N. (Eds.), 1981. *Dravidian Syntax,* Annamalai University, Annamalai Nagar.

* Andronov, Michail, S. 1996. *A Grammar of the Malayalam Language in Historical Treatment,* Weisbaden, Harrassowitz Verlag.

Caldwell, Robert. 1961 (Reprint). *A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages,* Chennai, University of Madras.

Chomsky, Noam. 1977. *Conditions of Transformations.* In *Essays on Form and Interpretation,* North Holland.

* Cinnaya Su:ri, Paravastu. 2002. *Ba:lavya:karaNamu* (Translated by P.S. Subrahmanyam)

George, K.M., 1971. *Malayalam Grammar and Reader,* Kottayam, National Book Stall.

* Helen Elizabeth Ullrich, 1980. *Clause Structure of North Havyaka Kannada* (Dravidian): *A Tagmemic Analysis,* Thiruvananthapuram, Dravidian Linguistics Association.

* Kittel, 1969. *Kannada - English Dictionary,* Vol.-2, Madras, Madras University.

Kothandaraman, R., 1978. *Verbal Bases in Tamil - A New Look.* Madurai, Journal of Madurai-Kamaraj University, Vol. 10-11. No.2.

* ----- 1990a. *Agreement Markers in T. Verbals,* Thiruvananthapuram, IJDL IX:I.

* ------ 1990b. *Relative Clause and Participle Noun in Tamil - A New Perspective.* In, *Tamil Syntax - New Perspectives,* Pondicherry. Pondicherry Institute of Linguistics and Culture.

* Krishnamurti, Bh. 1972 (Reprint). *Telugu Verbal Bases - A Comparative and Descriptive Study,* Delhi, Motilal Banarsidass.

——— 2003. *The Dravidian Languages,* Cambridge (U.K.), Cambridge University Press.

Kuno, Susumu. 1976. *Subject Raising,* In, Shibatani (Ed.).

Mahadeva Sastri, Korada, 1969. *Historical Grammar of Telugu with Special Reference to Old Telugu C 200 B.C. - 1000 A.D.*, Anantapur, Sri Venkateswara University, Post Graduate Centre.

Meenakshisundaran, T.P. 1965. *A History of Tamil Language,* Poone, Deccan College Post Graduate and Research Institute.

Nadkarni, Mangesh, V. 1972. *Sentential Complements on Nouns in Kannada,* Poone, Indian Linguistics, Vol. 33. No. 1.

* Narasimhacharya, R. 1969. *History of Kannada Language* (Readership Lectures), Mysore, Mysore University.

Postal, Paul. 1974. *On Raising. One Rule of English Grammar and its Theoretical Implications,* Cambridge, The MIT Press.

Radford, A. 1977. *Italian Syntax-Transformational and Relational Grammar,* U.K. Cambridge University Press.

* Ramachandra Rao, B., 1972. *A Descriptive Grammar of Pampa Bharata,* Mysore, University of Mysore.

Ramaswamy Ayyar, L.V., 1936. *The Evolution of Malayalam Morphology,* Ernakulam. The Ramavarma Research Institute, (Trichur).

* Ramesh, K.V. 1982. *South Indian Inscriptions.* Vol. XXIV. New Delhi, Department of Archaeological Survey of India.

* Shastri, K.G. 1971. *The Havyaka Dialect of North Kanara,* Dharwar, Karnataka University.

* Shankara Bhat, D.N. 1971. *An Outline Grammar of Havyaka,* Poone, Deccan College Post Graduate and Research Institute.

Shibatani, Masayoshi (Ed.). 1976. *Syntax and Semantics, Japanese Generative Grammar-5,* New York, Academic Press.

Sivakumar, S. 1981. *Noun Phrase Complementation in Tamil,* in Agesthialingom S., and Rajasekharan Nair (Eds.).

Subba Rao, K.V. 1974. *Noun Phrase Complementation in Hindi.* Ph.D. Dissertation Submitted to the University of Illinois at Urbana - Champaign (USA).

Subrahmanyam, P.S., 1971. *Dravidian Verb Morphology (A Comparative Study),* Annamalai Nagar, Annamalai University.

——— 2002. *Ba:lavya:karaNamu of Paravastu Cinnaya Su:ri,* Old Telugu Grammar with English Translation and Notes, Thiruvananthapuram, Dravidian Linguistics Association.

# கலைச்சொற்கள்

இந்த நூலில் இடம்பெற்றுள்ள கட்டுரைகள் பல்வேறு காலக் கட்டங்களில் எழுதிச் செம்மைப்படுத்தப்பட்டவை. ஆயினும் கலைச்சொற்களைப் பொறுத்தவரையில் இன்னும் தரப்படுத்த வேண்டியுள்ளது. எடுத்துக்காட்டாக இருப்பு வினை என்பது Copula Verb எனவும் கோப்புத் தொடரன் என்பது Complement Clause எனவும் Complementizer என்பது கோப்புக்கிளவி, வாக்கியச் சாரியை எனவும் Complementary Distribution என்பது சிதறிய வழக்கு துணைநிலை வழக்கு எனவும் இந்த நூலில் குறிக்கப் பெற்றுள்ளன. இருப்பு வினை என்பது இந்த நூலில் உள்வினை எனவும் குறிக்கப் பெற்றுள்ளது. இவையும் இவைபோன்ற பிறவும் தரப்படுத்தப்பட வேண்டியவையாகும்.

**571 வாழிய செந்தமிழ்** 140.00